1

பி.டி.சீனிவாச அய்யங்காரின்

# தமிழர் வரலாறு

அரசு.....

புலவர் கா. கோவிந்தன்

கழக
வெளியீடு

பி. டி. சீனிவாச அய்யங்காரின்

# தமிழர் வரலாறு

## முதல் பகுதி



தமிழாக்கமும் திறனாய்வும் :

**புலவர் கா. கோவிந்தன், எம்.ஏ.**



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
154, டி. டி. கே. சாலை, சென்னை-18.

1989

1080 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY LIMITED.

கிளைகள் .

சென்னை-108 திருநெல்வேலி-6 மதுரை-1
கோயமுத்தூர்-1 கும்பகோணம்-1
திருச்சிராப்பள்ளி-2 சேலம்-1

கழக வெளியீடு : 1865

Ed. 1 August 1989



# THAMILAR VARALARU

(Tamil Version of Pr. T. Sreenivasa Ayyangar's History of the Tamils)

அப்பர் அச்சகம், சென்னை-600108.

# பதிப்புரை

இந்தியநாட்டு வரலாறு பெரும்பாலும் வட இந்திய வரலாறாகவே அனைத்து வரலாற்றாசிரியர்களாலும் எழுதப் பட்டுள்ளது. சமய தத்துவ, பண்பாட்டு வரலாறுகள் என்று எடுத்துக்கொண்டால் கூட பெரும்பாலும் தென்னிந்தியர், குறிப்பாகத் தமிழ்நாடு எல்லோராலும் புறக்கணிக்கப்பட்டே வருகிறது. ஐயாயிரம் ஆண்டுகட்கு மேலாகத் தொடர்ச்சியான வரலாறுடைய தமிழ் மக்களின் உண்மை வரலாறு உலகுக்கு எடுத்துக் கூறப் பெறவேயில்லை.

சென்ற நூற்றாண்டுகளில் இந்தியாவிற்கு வருகை தந்த மேனாட்டுப் பாதிரிமார்களான இராபர்ட் கால்டுவெல், டாக்டர் ஜி. யு. போப், எப். டபிள்யூ எல்லிசு, இராபின்சன், பெப்ரீசியசு, இராடலா, வின்சுலோ போன்ற அறிஞர்கள் தமிழின் பெருமையை ஆங்கிலத்தின் வாயிலாக வெளிப்படுத்தினர். அதன் பின்னரே தமிழ் மக்களுக்கே தங்களைப் பற்றியும் தங்கள் மொழியின் பெருமையைப் பற்றியும் தெரிய வரலாயிற்று.

இவர்களைத் தொடர்ந்து வி. கனகசபை, சைமன் காசி செட்டி, மறைமலையடிகள், மு. சீ. பூரணலிங்கம் பிள்ளை, பி. டி. சீனிவாச அய்யங்கார், வி. ஆர். இராமச்சந்திர தீட்சதர், கே. ஜி. சேஷய்யர், கா. சுப்பிரமணிய பிள்ளை, ந. சி. கந்தையா, சதாசிவ பண்டாரத்தார், ஞா. தேவநேயப் பாவாணர், க. அ. நீலகண்ட சாஸ்திரி, அவ்வை துரைசாமிப் பிள்ளை, டாக்டர். கே. கே. பிள்ளை, மா. இராச மாணிக்கனார், கா. அப்பாத்துரையார் போன்ற பேரறிஞர்கள் பலர் தமிழர் வரலாற்றை விரிவாக ஆயத் தொடங்கினர்.

இத்தகைய பேரறிஞர்கள் பலர் உழைத்தும் இன்னும் விரிவான, உண்மையான தமிழர் வரலாறு சரியான முறையில்

வெளிவரவில்லை. இப்பணியை நிறைவு செய்யவே இருபது ஆண்டுக்கு முன்பு தமிழக அரசு 'தமிழ்நாடு வரலாற்றுக் குழு' ஒன்றை அமைத்தது. பல்வேறு காரணங்களால் குழு சீராக இயங்காது போயினமையின் சங்க கால வரலாறு வரை மூன்று தொகுதிகள் வெளிவந்துள்ளன. குழுவின் பணி அண்மையில் மீண்டும் தொடங்கப் பெற்றுள்ளது.

தமிழக வரலாற்று நூல்கள் பல வெளிவந்திருப்பினும் பி. டி. சீனிவாச அய்யங்காரின் 'தமிழர் வரலாறு' ஆங்கில நூலுக்குப் புகழ் தொடர்ந்து இருந்து வந்துள்ளது. நீண்ட காலமாக அச்சில் இல்லாதிருந்த காரணத்தால் அதனைத் தேடிப்பிடித்துப் படித்து வந்தனர். இந்நிலையில் அண்மையில் அதன் மறுபதிப்பு வெளிவந்தபோது தமிழ்மக்கள் மட்டு மல்லாது தமிழர் வரலாற்றில் நாட்டமுடைய மேலை நாட்டறிஞர்களும் விரும்பி வாங்கிப் படிக்கலாயினர்.

இதனைப் பார்த்தபோது ஏன் இதன் தமிழாக்கத்தை வெளியிடக்கூடாது என்ற தூண்டல் எழுந்தது. இதுபற்றித் தமிழகச் சட்டப்பேரவை மேனாள் தலைவரும் கழக நூலாசிரியருமான புலவர் கா. கோவிந்தன் எம். ஏ. அவர்களுடன் உரையாடிக்கொண்டிருந்தபோது தாம் முன்னரே முழுதும் மொழியாக்கம் செய்து வைத்துள்ளதாகத் தெரிவித்துக் கழகம் அதனை வெளியிடலாமென்றும் கூறினார்கள்.

அவருடைய தமிழாக்கத்தைப் பார்த்தபோது ஓருண்மை புலப்பட்டது. சீனிவாச அய்யங்கார் நூலைப்படைக்கும் போது அப்போது தமக்குக் கிடைத்த சான்றுகளைக்கொண்டு வரலாற்றை எழுதினார். அதில் சில செய்திகள் பிற்கால ஆய்வுகளால் மாற்றப்பட வேண்டியதிருந்தது. புலவர் கோவிந்தன் அவர்கள் அப்பணியைத் துணிந்து ஏற்றுக் கொண்டு மூலநூலை முழுவதும் குறைக்காது திரிக்காது மொழிபெயர்த்தபின், எந்தெந்தச் செய்திகள் மறுக்கப்பட வேண்டுமோ அனைத்துக்கும் தக்க சான்றுகளைக் காட்டி மொழியாக்கம் செய்துள்ளார். எனவே புதிய செய்திகள்

முழுவதையும் கொண்ட புதிய வரலாறு என்று இந்நூலைக் கொள்ளலாம்.

கடும் உழைப்பினை மேற்கொண்ட புலவர் அவர்கட்கும், அவர்தம் மொழியாக்கத்தைக் கழக வழி வெளிக்கொணர ஒப்புதலளித்த அவர்தம் பேருள்ளத்திற்கும் கழகம் நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

மூலநூலை விடப் பிறமொழியாக்க நூல்கள் விரிந்தே இருக்கும். குறிப்பாக இந்நூலில் மொழிபெயர்ப்பாசிரியர் பல புதிய செய்திகளையும் சான்றுகளையும் ஆங்காங்கே சேர்க்க நேரிட்ட காரணத்தால் தமிழாக்க நூல் இருமடங்காகி விட்டது. எனவே நூல் இரு பகுதிகளாக வெளியிட வேண்டிய சூழல். இரண்டாம் பகுதி தொடர்ந்து நூலாகிறது.

தமிழக வரலாற்றில் தோய்வுடைய அறிஞர்கள், ஆய்வாளர்கள் வரலாற்று மாணவர்கள் தமிழ் அன்பர்கள் அனைவரும் இந்நூலை விரும்பி வரவேற்பாரென்று துணிவுடன் எதிர்பார்க்கிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முகவுரை

சென்னைப் பல்கலைக்கழக இந்திய வரலாற்றுத் துறையில் துணைப் பேராசிரியராக 1928-29 கல்வி ஆண்டில் பணியாற்றிக்கொண்டிருந்தபோது செய்த ஆய்வுப்பணியின் விளைவே இந்த நூல். இந்த ஆண்டில் சூலைத் திங்களில் இப்பொருள் பற்றிய ஒரு பகுதி பல்கலைக்கழகச் சொற் பொழிவுகளாகவும் நிகழ்த்தப்பெற்றது. சொற்குறிப்பு அட்டவணையை உருவாக்குவதில் உதவிய திரு. ஏ. அப்பாதுரை ஐயர் அவர்கட்கு நன்றி.

பி. டி. சீனிவாச அய்யங்கார்.

# மொழி பெயர்ப்பாளர் முன்னுரை

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றுத் துறையில் பணியாற்றிய திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் ஐம்பத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் எழுதிய தமிழர் வரலாறு (History of Tamils) என்ற நூல், கி.பி. 600 வரையான தமிழ், தமிழர், தமிழ்நாடு பற்றிய வரலாற்றினை விளக்கும் அரிய நூலாகும்.

இந்தியாவின் வடகோடி ஒரு மூலையில் பேசப்படும் பிராஹூயி (Brahui) என்ற மொழியில், தமிழ்ச் சொற்களோடு ஒரு சார் உறவுடையதான சில சொற்கள் இடம் பெற்றிருக்கும் உண்மையிலிருந்து தமிழ், அல்லது அதனோடு உறவுடைய ஒரு மொழி, ஒரு காலத்தில் அவ் வடகிழக்கு இந்தியா வரையும் பேசப்பட்டது என்ற முடிவே முறையாகக் கொள்ளப்பட வேண்டியதாகும். அந்த உண்மையை அடிப்படையாகக் கொண்டு, திராவிட முன்னோர்களை இந்தியாவின் வடமேற்கு அல்லது வடகிழக்குக் கணவாய் வழியாக வழி நடத்திக் கொண்டு வந்து, எடுத்த எடுப்பிலேயே திடுமென, முழுமை பெற்றுவிட்ட நாகரிகத்தினராகக், காவிரி அல்லது வைகைக் கரையில் குடியமர்த்தும் ஒரு சில வரலாற்று ஆசிரியர்களின் செயலை உண்மையாகக் கண்டிப்பதோடு எள்ளி நகையாடியிருப்பதன் மூலம் (பக்கம் 2) தமிழ் மொழியின் பெருமைக்கு வைர முடிசூட்டி விழாக் கொண்டாடியுள்ளார் அந்நூலில்.

Some writers conduct the ancient "Dravidian" with self confidence cook's guide, through the North Western or North-Eastern mountain passes of India,"—and drop them with a ready-made foreign culture on the banks of the Kaviri or the Vaigai. The Slender evidence on which they rely for this elaborate theorizing is the fact that Brahui, a dilect

spoken in the Northern corner of India, possesses a few words allied to Tamil words. The only legitimate inference from this is that the Tamil language or a language allied to it prevailed upto the North West province in ancient times... These facts can only prove that people speaking dialects allied to Tamil once inhabited the whole of India and not that these people must necessarily have come into India from outside the Country" Page 2.

தமிழகத்தில் இதுவரை அகழ்ந்து எடுக்கப்பட்ட பழம் பெரும் கலைப் பொருட்களும், வரலாற்று நினைவுச் சின்னங் களும், வரலாற்றுத் தொடக்க நிலையாகிய பழங்கற்காலம் முதல், இன்றைய புத்தம்புது நிலையாகிய உலோகக் காலம் வரை, எத்தகைய கொடிய இயற்கை நிலைபிறழ்வு காரண மாகவும் இடையற்றுப் போவதற்கு உள்ளாக்கப்படாத, நாகரீகத்தில் முறையான வளர்ச்சி, இந்நாட்டில் இருந்து வந்தது என்பதை நிலைநாட்டும் அழியாக் கருவூலத் தொகுப்பாய் அமைந்துள்ளன. இந்நாகரீக வளர்ச்சிப் பருவ நிலை முழுவதும், தமிழ்மொழி தென்னிந்தியாவில் வழக் காற்றில் இருந்துவந்துளது. இந்நாகரீக வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையையும் மொழி வடிவில் உணர்த்தத் தேவைப்படும் சொற்கள், தமிழ் மொழியில் தொடக்க நிலை மொழியமைப்பிலேயே இடம் பெற்றுள்ளன. அப்பண்டைக் காலப் பழக்கவழக்கங்கள், தமிழ் மொழியின் நனிமிகப் பழைய ஏடுகளில் போற்றிக் காக்கப்படுவது, நீண்டகால மாகவே தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆகவே, தமிழர், தென்னிந்தியாவின் பழம்பெரும் குடிகளாவர். கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து மூத்தக் குடியினராவர் எனக் கூறியிருப்பதன் மூலம் (பக்கம் 3) இம்மண்ணுக்கு உரிய மாந்தராவர் தமிழர் என்பதை நிலைநாட்டியுள்ளது இந்நூல்.

"Moreover the artefacts and other relics of ancient times discovered so far, in Southern India form an unbroken series, showing that there has been in this Country a regular evolu-

tion of culture, which was never rendered discontinuous by any catastrosphe, from the lowest palaeilithic stage to the latest age of metals. The Tamil Language existed in south India during the Course of this evolution. The words necessary for the linguistic expression of every stage of this culture are found in the earliest strata of Tamil, and the customs of these early ages continued sufficiently long to be enshrined in the earliest extent specimens of Tamil literature". Page 3.

விந்தியத்திற்கு அப்பாற்பட்ட, வேதகாலத்து ஆடவர் பெண்டிர்களை மட்டுமல்லாமல், அவர்தம் தேர்கள், குதிரைகள், அம்பறாத் தூணிகள் போலும் பிற பொருட்களையும், அணி செய்வதற்குத் தேவைப்பட்ட, தமிழகத்துத் தென்கோடி முத்துக்களைக் குவியல் குவியல்களாகக் கொண்டு செல்வதற்குத் துணை நின்ற மிகப் பெரிய வணிகப் போக்குவரத்து, வட இந்தியாவுக்கும், தென் இந்தியாவுக்கும் இடையில், அவ்வேத காலத்திலேயே இருந்து வந்தது'' எனக் கூறுவதன் மூலம், விந்திய மலையாலும், தண்டகப் பெருங்காடுகளாலும், தமிழகம் வட இந்தியாவோடு, தொடர்பற்றே இருந்து வந்தது எனக் கூறும் வி. ஏ. சிமித் போலும் மேலை நாட்டு வரலாற்றுப் பேராசிரியர்களின் கூற்றினை வன்மையாக மறுத்து தமிழகம், வடஇந்தியாவோடு கொண்டிருந்த வாணிகத் தொடர்பு, வேத காலத்துக்கும் முந்தியதான பழமை வாய்ந்தது என தமிழக வாணிகப் பெருமையை வாயாரப் பாராட்டியுள்ளனர்:

We can easily understand that there must have been considerable intercourse between North India and South India to enable pearls to have been carried in the large quantities needed for decorating not only the persons of men and women, but their cars, horses, quivers and other articles and for folk-lore to accompany that article to the land of Rishas" (Page 23)

வேதகாலத்து ஆரியர்களாம் ரிஷிகளால், தஸ்யூக்கள் என அழைக்கப்பட்ட திராவிடர்களைப் பற்றி, அந்த ரிஷிகள் பேசும்போது, அவர்கள் அவர்களின் பகைவர் குறித்துப் பேசுகின்றனர் என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும். கடும் வெறுப்பு காரணமாக, திராவிடர்களைப் பற்றி மிகைப்படப் பழித்துக் கூறும் அவர்களின் கூற்றுக்களுக்கிடையேதான் திராவிடர்களின் உண்மையான சிறப்பினை உய்த்துணர வேண்டும். வேதங்களிலும், இராமாயணம் போலும் வீர காவியங்களிலும், புராணக் கட்டுக் கதைகளிலும், தஸ்யூக்கள், அரசர்களின் காட்டுமிராண்டித்தனம் பற்றிய பழிப்புரைகளுக்கு இடையிடையே, அவர்களுடைய உயர்ந்த நாகரீக வாழ்க்கை, கோட்டை நிகர் மாளிகைகள், பொன் அணிகள், செல்வ வளங்கள், மற்றும் பிற நலங்கள் பற்றிய எண்ணற்ற குறிப்புகளும் உள்ளன என்பதையும் மறத்தல் கூடாது. ஆக, அத் தஸ்யூக்கள், நாடு கடத்தப்பட்டும், வாழிடம் தேடியும், வந்த ஆரிய வந்தேறிகளால் நாகரீகம் பெறக் காத்திருந்த நாகரீகம் கல்லாக், காட்டுமிராண்டிப் பழங்குடியினர் அல்லர்'' என கூறுவதன் மூலம் (பக்கம் 32) ஆரியர் வருகைக்குமுன்னரே, நாகரீகம் பெற்ற பெருமைக்கு உரியவர் தமிழர் என்பதைப் பறைசாற்றியுள்ளார்.

In the Vedic mantras and in the Epic and Puranic legends, side by side with denunciations of the savagery of the Dasyus and Rakshasas, there are innumerable passages referring to their higher civilization their castles, their gold ornaments, their wealth etc. Hence they were not barbarous aborigines, waiting to be civilized by Aryans exiles or stray Aryan immigrants'' Page 32.

இவ்விலக்கிய மரபுகளிலிருந்து, மக்கள் மேற்கொண்டிருந்த, உண்மை வாழ்க்கை நிலையை, பாவாணர்கள் பாடிய பாக்கள், உள்ளது உள்ளவாறே எடுத்துக் காட்டிய அக் காலங்களுக்குக் கற்பனையில் பின் நோக்கிச் செல்லலாம். அந்தக் காலக் கட்டத்திலிருந்து, பாக்கள் எழுதுவதற்கு

முற்பட்டதான ஒரு காலத்திற்குள் பின் நோக்கிச் சென்று, இந்தியர்கள், அந்நனிமிகப் பழங்காலத்தில் நடத்திய வாழ்க்கைக் காட்சியை—மின்னலின் ஒளிக்கீற்றுகள்போல், அங்குமிங்குமாகக் காணக்கிடைக்கும் காட்சியைப் பெறலாம். நனிமிகப் பழங்காலத்தை, இவ்வாறு நுழைந்து பார்ப்பதன், மூலம், தென்னிந்தியர்களின் கி. மு. 2000 அல்லது அதற்கும் முற்பட்ட காலத்து வாழ்க்கை நிலையினைக் கண்ணெதிர் காணலாம் போல் காணலாம். அவ்வாறு செய்வதற்கு முன்னர், அந்நனி மிகச் சேய்மைக் கண்ணதாய பழங் காலத்தில், வளர்ச்சி வேகம், வானூர்தி, கம்பியில்லாத் தந்தி களின் காலமாம் இன்றைய வளர்ச்சி வேகத்தினும், மிக மிகக் குறைவு என்பதை நினைவு கொள்ளுதல் வேண்டும். இன்றைய வாழ்க்கையின், மூச்சு விடுவதற்கும் இடைவெளி யில்லா விரைவான மாற்றமும், வழுக்கும்பனிப்பாறைகளின் ஆறுபோலப் புலனாலும் உணர்ந்து கொள்ள இயலாப் பண்டைய நாட்களின் மெதுவான சிந்தனை செயல்பாடு களும், இருகோடித் துருவங்கள் போலும் வேறுபாடுடைய. ஆகவே, கி. மு. 2000ல் எது உண்மையோ அதுவே அதனினும் நனிமிகப் பிற்பட்ட பழங்காலத்திலும் உண்மையாம்''

From these conventions we can go back in imagination to the ages when the Poems sung by bards, faithfully reflected the life, which people actually led. From this age we can go back to the age before the rise of poetry and get a glimpse of the life which Indians led in the very remote past. Peeping thus into the Far past, we can Viswalise the life of the South Indians about 2000 B. C. or earlier. Before doing so, we ought to remember that progress in remote antiquity was much slower than in present days of wireless telegraphy and the aeroplane. The breathlessly hasty changes of our present day life and the slow movement, imperceptible as that of glacier, of life and thought in ancient days are poles apart. Hence what was true of 2000 B.C. was equally true of much earlier times'' Page 64.

தம்முடைய இலக்கண நூலுக்கு ஆதாரமாகக் கொண்ட மரபு வழிப் பாடல்களுக்கு முற்பட்டதான இயற்கைப் பாடல்கள் என அழைக்கப்படும் பாடல்களின் வளர்ச்சிப் பருவத்திற்கு, ஐந்நூறு ஆண்டுகளை வகுப்பது, மிகைப்படுத்தப்பட்ட மதிப்பீடு ஆகாது. இவ்வகையில், தமிழ் இலக்கியத் தோற்றத்தின் பிற்பட்ட கால எல்லையாக ஏறத்தாழ கி. மு. 1000ஐ அடைகிறோம். இவ்வகை பாக்களின் வளர்ச்சிக்கு வழிசெய்து, அப்பாக்களில் எதிர் ஒளி காட்டும் நாகரீகம் வளர்ச்சி பெற, பல நூறு ஆண்டுகளை எடுத்துக்கொண்டிருக்க வேண்டும். ஆகவே தமிழர்களின் பழம்பெரும் நாகரீகத்தை, அவர்கள் கிறித்துவுக்குச் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அடைந்திருக்கவேண்டும் என முடிவு கொள்ளலாம்.

It will not be an exaggerated estimate to ascribe a period of five centuries to the development of, what one might call, the natural poetry, which preceded the conventional poetry, on which Tholkappiyanar based his grammar. We thus reach about 1000 B. C. as the later limit of the birth of Tamil poetry. The culture that led to the evolution of this poetry and was reflected in it, must have taken ages to grow, and we can hence conclude, that the early culture of the Tamils must have been reched by them a few millennewms before Christ'' Page. 71.

இவ்வாறு தமிழர் தம்மொழி, நாகரீகம், வாணிகம் ஆகியவற்றின் பழம் பெருமைகளைப் பாராட்டும் கருவூலமாகத் திகழும் அந்நூலில், தமிழர் வரலாற்று உண்மை நிலையை உணர்த்தக்கூடிய போதிய அகச்சான்றுகள், ஆசிரியர் அவர்களுக்குக் கிடைக்காமையால், அந்நூலின் இடையிடையே,

1. சேர, சோழ, பாண்டியப் பேரரச இனங்கள், இராமாயண காலத்திற்குப் பின்னர், இராவணன் அழிவிற்குப் பின்னரே தோன்றியிருக்க வேண்டும்,

The Three ancient powers of Sola, Cera and Pandya rose probably as a result of the extinction of Ravana's rule after the age of Ramayana. Page 54.

2. இராமன், சீதையைத் தேடி அலைந்த காலம் முழுவதும், அகஸ்தியர் கோதாவரிக்கரைப் பஞ்சவடியிலிருந்து இரண்டு யோஜனை தொலைவில் உள்ள ஆஸ்ரமத்திலேயே வாழ்ந்து வந்தார். ஆனால், சீதையைத் தேடுமாறு, சுக்கிரீவன் வானரங்களைத் தென்னாடு நோக்கி அனுப்பிய போது, அங்கே, காவிரி ஆற்றையும். அதை அடுத்துள்ள மலையமலை உச்சியில் வீற்றிருக்கும் அகஸ்தியரையும் காண்பீர்கள் என்று கூறியுள்ளான். ஈண்டு இராவணன், சீதையைத் தூக்கி சென்றதுபோல, அகஸ்தியர் பஞ்சவடியிலிருந்து, மலையமலைக்குத் தூக்கிச் செல்லப்பட்டுள்ளார்.

Agastya's asrama during the whole period of wandering of Rama, was two yojanas from pancavati. yet when sugriva sent his vanaras to the south to search for sita, we told them they would see kaveri., near by they would see seated on the top of Malaya hill, Agastya... Hence we see Agastya spirited away, by the poet, as sita was by Ravana, from panchavadi, and dropped on the top of the malaya hill. Page 55.

3. தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியம், கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின்னர் எழுதப்பட்டிருக்க முடியாது.

Tolkappiyam by Tolkappiyanar was probably composed not latter then the I or II century A. D. Page 70.

4. ஆரியர்கள், தென்னாட்டின் நிலைத்த குடியினர் ஆனது மட்டும் அல்லாமல், தமிழ் மொழியைக் கற்று, அதன் இலக்கியங்களைப் படித்து, அவற்றின் இலக்கண நெறியை ஆராயத் தொடங்கிய பின்னரே, தமிழ் இலக்கியம் எழுத்துருவம் பெற்றிருக்கவேண்டும்.

It was only after the Aryas, not only setteled in the south, but began to study Tamil language and literature and to investigate the grammer of that language, as well as of the poetry composed in it, that Tamil literature came to be committed to writing. Page : 152.

5. தத்பவ எனப்படும் சமஸ்கிருத சொற்கள், அகஸ்தியர், தொல்காப்பியர் காலங்களிலேயே, தமிழில் நுழைக்கப்பட்டன.

Agastiyanar and Tolkappiyanar introduced in to Tamil a few thadbhavas, (ie) Sanskrit words. Page : 213.

6. தமிழ் இலக்கணத்தின் தந்தையாம் தொல்காப்பியர், கி. பி. முதலாம் நூற்றாண்டிற்கு முன்னர் வாழ்ந்திருக்க இயலாது.

Agastiyanar could not have lived before the I Century B.C. A Study of Tolkkappiyam compels us to believe that master and pupil must have lived, a century or more later. Page : 216.

7. தலை, இடை, கடைத்தமிழ்ச் சங்கங்கள் என்பன வெறும் கற்பனை அல்லது உண்மை நிகழ்ச்சிகள் ஆகா.

Chapter XVI : The Three Tamil Sangams : Page : 225-252.

8. காஞ்சிமாநகர், தமிழ்நாட்டின் எல்லைக்குள் இடம் பெற்றிருந்தாலும், பண்டைக் காலத்தில், அது, தமிழர் நாகரீகத்தைக் கொண்டிருக்கவில்லை. மாறாகச் சமஸ்கிருத நாகரீகத்தின் நடுநாயகமாகவே இருந்தது; அது, தமிழ் அரசர்களால் ஆளப்படவில்லை; ஆரிய ராஜாக்களாலேயே ஆளப்பட்டது.

The Kanchi, though technically within the borders of the Tamil country, was in early times, a home of sanskrit and not Tamil culture and was ruled over, not by Tamil kings but by Arya Rajas" Page 333-334.

9. நாடகம் என்பது சமஸ்கிருதச் சொல்; சமஸ்கிருத டிராமா தென்னாட்டில் அறிமுகம் ஆவதற்கு முன்னர்ப் பாட்டும் உரையும் இடம் பெறா வெறும் மெய்ப்பாட்டுக் காட்சியாகவே அது இருந்தது.

"The word used is the sanskrit Nataka, the first we of the word in Tamil poetry; It probably meant dumb-show, which was the form of drama prevalent in south India before it came in contect with sanskrit drama." Page : 349.

10. காவிரிப்பூம்பட்டினத்தைக் கரிகாலன் நிறுவினான் என வி. ஏ. சிமித் அவர்களின் கூற்று, பொய்க்கூற்றின் ஒரு பகுதியாம்.

V. A. Smith has said that Karikal - founded kaverip-pattinam. This is a tissue of mistatements. Page 362.

11. வெண்ணியில், ஏழு குறுநிலத்தலைவர்களோடு, இரு பெரு வேந்தர்களும் தோல்வியுற்றது, ஓரளவு உண்மையொடு பட்ட காதுவழிச் செய்தி ஆதல்கூடும். ஆனால் கரிகாலன் சமகாலப்புலவர் எவரும், அப்போர் குறித்துக் குறிப்பிட்டார் அல்லர்.

The presence and defeat of eleven petty chief in the battle of Venni, besides the two kings, is perhaps a genuine bit of tradition, though not mentioned by the previous poets who were the contemporaries of Karikal Solan." page :365, 66)

12. கொற்றப்பந்தர், பட்டி மண்டபம், தோரண வாயில் ஆகியவற்றைக் கரிகாலன் சிலரிடமிருந்து பரிசுப் பொருட்களாகப் பெற்றிருக்க இயலும். ஆனால், அவன் இமயம்வரை படையெடுத்துச் சென்றான் என்பது பிற்காலக் கட்டுக்கதையே.

"It is not impossible that Karikal got the three articles as presents from somebody or other. But that he marched up to the Himalayas is clearly a late legend." page : 369

13. கண்ணகிக்குச் செங்குட்டுவன் எடுத்த விழாவிற்குக் கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் வந்திருந்தான் எனச் சிலப்பதிகாரம் கூறுவதுகொண்டு, கயவாகு வேந்தனை வைத்துச் செங்குட்டுவன் காலத்தை உறுதி செய்வது பொருந்தாது.

Nor can Senguttuvan's date be fixed by the so called Gajabahu synchronism. page : 379

14. கரிகாலன் பெயர் குறிப்பிடும் அவனைத் தொடர்பு படுத்தும் சிலப்பதிகாரப் பகுதிகள் அனைத்தும், அவன் காலம் சிலப்பதிகார நிகழ்ச்சிக் காலத்துக்கு முந்தியனவாகவே காட்டுகின்றன. ஆகவே, கரிகாலன் காலம், செங்குட்டுவன் காலத்தைக் கொண்டு உறுதி செய்வது இயலாது.

All the passages of Silappadikaram, which name or allude to Karikal prove that his age proceeded the time when the events of the story began, aud hence Karikal's date can not be deduced from Senguttuvan's. page : 379

15. பதிப்பாசிரியரால், புறநானூற்றுப் பாக்களின் அடியில் இணைக்கப்பட்டிருக்கும் கொளுக்கள், மரபுவழி உண்மைச் செய்திகளைக் கொண்டிருப்பன அல்ல; கட்டுக் கடங்கா வெறும் கற்பனைகளே என்பது உண்மை.

It is evident that some of the colophons appended to the poems by the editor, do not embody tradition but contain guesses, sometimes wild." page : 410

16. நெடுஞ்சேரலாதன், சேரநாட்டின் வடஎல்லைக்கு அப்பால் சில கல் தொலைவிலேயே உள்ள கதம்ப நாடு அல்லது கொண்கானம் வரையே சென்று, சில திறைப் பொருள்களோடு திரும்பிய செயலைப், புலவர்கள், பரிசில் பெறும் ஆசையால், இமயம் வரை சென்று வெற்றி கொண்டதாகப் பாடிப் புகழ்ந்ததோடு, அவனுக்கு இமய வரம்பன் என்ற பட்டத்தையும் சூட்டிவிட்டனர்.

"Possibly Nedunjeralathan marched a few miles north of the sera country (in to the Kadamba territory or Konkan) and brought back some presents, and poets eager for reward spoke of it as the expansion of his Empire thiough out the whole of India, and they thrence gave him the title of Imayavaramban." page : 502, 503)

17. மாமூலனார், தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள புலவர்கள் வரிசையில் கடைசியில் வைத்து எண்ணத்தக்கவர்; கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் இறுதியில் வாழ்ந்தவன்.

"As a matter of fact Mamulanar speaks in many odes as the contemporary...of the number of chieftains that rose to power after the decline of the Three dynasties at the end of the V century A. D. and Is hence the latest of galaxy of poets, whose poems are included in the early anthologies. page; 524, 525

18. ஆரியக் கருத்துக்களும், சமஸ்கிருதச் சொற்களும் பெருமளவில் இடம் கொண்டிருப்பதிலிருந்து, திருவள்ளுவர் காலத்தை கி. பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்னர்க் கொண்டு வைக்க இயலாது.

From the predominance of Aryan ideas and the free use of Sanskrit words, Thiruvalluvar cannot be assigned to any century earlier than the VI. page : 588.

19. கோவலனைக் கொன்ற பாண்டியன், ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் என்று சிலப்பதிகாரத்தில் கூறப்படவில்லை.

The poem itself does not name the Pandiyan, whose foolish behaviour brought about the destruction of Madura. page : 596

20. சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டத்துச் செங்குட்டுவன் வேறு; பரணர் பாடிய, பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்தின் செங்குட்டுவன் வேறு; (பக்கம் : 599-600)

21. கங்கைக்கு அப்பால் உள்ள எண்ணற்ற அரசர்களோடு போரிடுவதற்குத் தேவைப்படும் அத்தனைப் பெரிய படையை வழிநடத்திச் செல்வது என்பது, இந்திய நாட்டின் நில இயல் கூறுபாடு பற்றி ஏதும் அறியா ஒரு தமிழ்ப் புலவரால் மட்டுமே கற்பனை செய்து பார்க்கக்கூடிய ஒரு நிகழ்ச்சியாம். இவை அனைத்தும் வெறும் பாட்டிக் கதைகளே ஆதல் வேண்டும்.

All these must be fables, because the transport of an army of the size neccssary for the purpose of fighting with the Trans-Gangetic monarchs is a thing that can be imagined only by a Tamil Poet ignorant of the geography of India. page:601

22. பரணரோ, அவர் காலப் புலவர்களோ, வேங்கட மலை மீது கோயில்கொண்டிருக்கும் திருமாலின் நின்ற கோலம் புகழ் பெற்றுவிட்ட நிலையில் அதைக் குறிப்பிடாமல் விடமாட்டார்கள். ஆகவே, சிலப்பதிகார ஆசிரியர், பரணருக்கு மிகமிகப் பிற்பட்ட காலத்தவராவர்;

Neither paranar, nor others of his real contemporaries describe Vengadam as having the famous temple on its top, a fact which no one singing of Vengadam after the temple had become famous could omit to mention. Hence the author of Silappadigaram must have been a much later person than poranar. page : 605

23. இரண்டாம் காண்ட இறுதியில் கணவனும், மனைவியும், மண்ணுலகைவிட்டே போய்விடுகின்றனர். சிலம்பின் கதையும் முடிந்துவிடுகிறது.

"At the end of the II canto the hero and heroine depart from the earth and the story of the anklet ends" page : 597

மூன்றாம் காண்டமாகிய வஞ்சிக்காண்டம், சேரன் செங்குட்டுவன் என்ற அரசனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, அவன் பெருமை, அவன் வடநாட்டுப் படையெடுப்பு ஆகியன பற்றிக் கூறுகிறது.

"The third canto has a Sera king, Senguttuvan as its hero and it deals with the greatness of this monarch and victorious expedition to Northern India" page : 598

முதல் இரு காண்டங்களாம் ஒரு முழு நூலை இயற்றிய ஆசிரியர், காற்சிலம்பைத் தம் கருத்துக்கு அப்பாலும் துரத்திவிட்ட பின்னர், தம்முடைய பாட்டுடைத் தலைவன் தலைவியரை வானுலகிற்கு வழி அனுப்பி வைத்துவிட்ட பின்னர், செங்குட்டுவன் புகழ்பாடுவதே தம் தலையாய குறிக்கோளாகக் கொண்ட மூன்றாம் காண்டத்தை இணைப்பதன் மூலம், தம் காவியக் கட்டுக்கோப்பினை, வேண்டுமென்றே சிதைத்து விடுவாரா என்ற கேள்வி ஆய்வுக்கு உரியதாகும். அத்துணைப் பெரும்புலவர், தம்முடைய நூலை அவ்வாறு கெடுத்துவிடுவார் என நான் எண்ணவில்லை.

"whether the author of the complete poem i. e., the first and second canto's, after dismissing the anklet from his purview and despatching his hero and heroine to heaven, deliberately rwined the unity of his Epic, by add;ng a third canto, whose chief object was to glorify a Senguttuvan. I do not think such a great artist would have thus spoilt his own poem''. page : 598, 599

இவை போலும் தமிழ், தமிழர்களின் பழம்பெருமைகளைச் சீர்குலைக்கும் கருத்துக்களும், சங்க இலக்கியங்களின் சிறப்பினைச் சீர்குலைக்கும் கருத்துக்களும், மூவேந்தர் ஆட்சிக்காலத்து முதுமையைச் சீர்குலைக்கும் கருத்துக்களும் இலைமறைகாயாக, ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

பல்கலைக்கழக நிலையில், தமிழ்த்துறையில் எம். ஏ. பட்டப்படிப்பிற்குப் பயிலும் மாணவர்கள், தென்னிந்திய

வரலாறு பற்றிய ஒரு வினாத்தாளுக்கு விடையளிக்க வேண்டி யிருப்பினும், அம்மாணவர்களில் பலர் "தமிழர் வரலாறு" என்ற திருவாளர் பி. டி. சீனிவாச அயங்காரின் இந்நூலை முழுமையாகப் படிப்பது இல்லை. படித்திருந்தால், தமிழர் வரலாறு பற்றிய உண்மை நிலையை உணர்த்தக்கூடிய வரலாற்றுச் சான்றுகளும் இலக்கிய விளக்கங்களும், இந் நூலாசிரியர்க்கு, முழுமையாகக் கிடைக்காமையால் இடம் பெற்றுவிட்ட இவைபோலும், சில தவறான கருத்துக்களைக் களைந்திருக்க இடனும். ஆனால், அது செய்யாமைக்கு அம் மாணவர்கள் மீது குற்றம் சாட்டுவதும் பொருந்தாது. தமிழர் வரலாறு அறிய மிகப்பெருமளவில் துணைநிற்பதான அந்நூல், தமிழில் இல்லாது, ஆங்கிலத்தில் அமைந்திருப்பது, தமிழ்த்துறை மாணவர்கள், அந்நூலை படிப்பதற்குத் தடையாக இருந்துவிட்டது. அத்தகு இடர்ப்பாட்டிற்கு உள்ளானவர்களுள், நானும் ஒருவன். அதனால், அந்நூல், தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவரின், தமிழ், தமிழர், தமிழ்நாடு, பற்றிய வெளியிடப்பட்டுள்ள மேலே கூறியன போலும், தவறான கருத்துக்கள் அறவே நீக்கப்பட்டு, தமிழர் வரலாற்றை உள்ளது உள்ளவாறு உணர்த்தும் சிறந்த வரலாற்று நூலாம் விழுமிய பெருமையினை இந்நூல் பெற்று விடும் என உணர்ந்தேன்.

அதையொட்டி, நூலை மொழிபெயர்த்ததோடு நில்லாமல் ஆசிரியரின் தவறான முடிவுகள் சிலவற்றினை ஏற்ற சான்றுகள் காட்டி மறுத்து, அந்தந்த அதிகாரங்களின் பின் இணைப்பாகச் சேர்த்துள்ளேன். நான் விட்டுச்செல்லும் பணியினை, இந்நூலைப் படிக்கும் வரலாற்று மாணவர்கள், தொடர்ந்து முடிப்பார்கள்; முடிக்க வேண்டும் என்பதால் அத்தவறான முடிவுகளைச் சுட்டிக் காட்டுவதோடு விட்டுச் செல்கின்றேன்.

"தமிழர் வரலாறு" என்ற இந்நூலின் ஆசிரியர் கடைப் பிடித்திருக்கும் ஆங்கில மொழிநடை, மிகச் சிறந்த இலக்கிய நலம் வாய்ந்த ஒன்று; அதைத் தமிழில் மொழி பெயர்ப்பது

அத்துணை எளிய செயலன்று என்பதால் அம் முயற்சியை மேற்கொள்ளச் சிறிது அஞ்சினேன். ஆயினும், இதுகாறும் அது செய்ய யாரும் முன் வராமையாலும், கால்டுவெல் அவர்களின் திராவிடமொழி ஒப்பிலக்கண நூலின் என் மொழிபெயர்ப்பு நூலை அறிந்த பலரும், இதையும் மொழிபெயர்க்குமாறு ஊக்குவித்தமையாலும், மொழிபெயர்ப்புப் பணியினை மேற்கொண்டேன். 1983இல் மேற்கொள்ளப்பட்டது 1987ல் முடிவுற்றது. ஆனால் 1989இல்தான் அச்சேற முடிந்தது. வெளியிட முன்வந்த, தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தவர்க்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

திருமாவளவன் என்ற தலைப்பிட்ட என் முதல் நூலை, 1951இல் வெளியிட்ட கழகப் புரவலர் திரு. சுப்பையாப் பிள்ளை அவர்களின் மருகர், திரு. முத்துக்குமாரசுவாமி அவர்கள், இந்நூலை வெளியிட முன்வந்தது, சாலவும் பொருந்தும்.

கா. கோவிந்தன்

# உள்ளுறை


| அதிகாரம் | | பக்கம் |
|---|---|---|
| 1. | தமிழர் பண்டை நாகரீகத்தின் நிலஇயல் அடிப்படை | 11-31 |
| 2. | பண்டைக் காலத்தில் (ஏறத்தாழ கி.மு. 3000-2000) வட இந்தியத் தொடர்பு | 32-54 |
| 3. | தொடக்க காலத்தில் வெளிநாட்டு வாணிகம் | 55-66 |
| 4. | இராமனும் தென் இந்தியாவும் (கி. மு. 2000) | 67-102 |
| 5. | கி. மு. இரண்டாவது ஆயிரத்தாண்டில் தமிழர் நாகரீகம் | 103-130 |
| | தொல்காப்பியர் காலம் | 131-151 |
| 6. | பாரதப் போர் | 152-164 |
| 7. | கி. மு. இரண்டாம் ஆயிரத்தாண்டில் வெளிநாட்டு நாகரீகம் | 165-174 |
| 8. | ஆகமங்களின் தோற்றம் | 175-190 |
| 9. | வட இந்தியாவும் தென் இந்தியாவும் (கி.மு. 1000 முதல் கி.மு. 500 வரை) | 191-207 |
| 10. | வெளிநாட்டு வாணிகம் (கி. மு. 1000-500) | 208-215 |
| 11. | வடக்கும் தெற்கும் (கி. மு. 500 முதல் கி. மு. 1 வரை) | 216-232 |

12. வழக்கில் உள்ள பழந்தமிழ்ப் பாக்கள் 233-249

13. தமிழர் வாழ்க்கை (கி. மு. 500 முதல் கி. பி. 1 வரை) 250-288

14. வெளிநாட்டு வாணிகம் (கி. மு. 600 முதல் கி. பி. 14 வரை) 289-307

15. தமிழ் இலக்கியத்துள் சமஸ்கிருத நாகரீகத்தின் முதல் நுழைவு 308-332

16. மூன்று தமிழ்ச் சங்கங்கள் 333-407

17. மக்கள் வாழ்க்கை (கி. பி. முதல் ஐந்நூறு ஆண்டுகள்) 408-466

18. கி. பி. முதல் ஐந்நூறு ஆண்டுகளில் வெளிநாட்டு வாணிகம் 467-494

19. காஞ்சிபுர மாவட்டம் 495-514




# தமிழர் வரலாறு

## (தொடக்ககாலம் முதல் கி. பி. 600 வரை)

---

## முன்னுரை

### வரலாற்றின் குறிக்கோள்

*வீரத்தின் பெயரால் எண்ணற்ற மக்களைப் போர்க்களத்தில் கொன்று குவிப்பதன் விளைவாக, அரச இனங்களின் எழுச்சி வீழ்ச்சிகள் பற்றிய கதைகள், அமைதி வாழ்வு நடாத்தும் மக்கள், தங்கள் தளரா உழைப்பின் பயனாக ஈட்டிக் குவித்து வைத்திருக்கும் செல்வத்தைக் கொள்ளையடித்துக்கொள்ளும் வெறியோடு மிகப்பெரிய மக்கள் கூட்டம் உலக அரங்கில் இடம் பெயர்ந்துகொண்டேயிருக்கும் பழங்கதை, அரச குல மகளிரின் கற்பழிப்பு, ஒரு சிலரின் வெறியாட்டத்தைப் பழிவாங்குவது காரணமாக ஏதுமறியா உயிர்களின் இரத்தப்பெருக்கெடுப்புகளின் விளக்கம் ஆகிய இவைதாம் வரலாறு என்றால், கி. பி. 600 வரை குறிப்பிடத்தக்க வரலாற்று நிகழ்ச்சிகளே இல்லாத ஓர் இனிய நாடு தமிழ்நாடு எனலாம். இதற்கு மாறாகத் தங்கள் வாழிடங்களைச் சூழ உள்ள நிலக்கூறுபாடுகளின் தூண்டுதலாலும், வேறுவேறுபட்ட பண்பாடு, நாகரிகங்களை வளர்த்துக்கொண்டிருக்கும் பல்வேறு இனமக்களோடு கொண்ட தொடர்பு தந்த செல்வாக்குகளின் தூண்டுதலாலும், ஓரின மக்களின், சமூக, சமய வாழ்க்கையில், சிறுகச் சிறுக ஏற்பட்டுவிட்ட வளர்ச்சி நிலைகளின் மதிப்பீடு அம்மக்களின் உண்ணல்பருகல், விளையாட்டு, காதல், பாடல், ஆடல், அரசர்க்கும் கடவுளர்க்கும்*

ஆற்றும் வழிபாடு, ஆகிய இவைகளில் மெல்ல மெல்ல ஏற்பட்டுவிட்ட முன்னேற்றங்களின் விரிவான விளக்கம், அம்மக்களின் உள்நாட்டு வாணிகம், சேய்மை அண்மைக்கண் உளவான நாடுகளோடு கொண்டிருந்த பண்டமாற்று வாணிகங்களின் வளர்ச்சி குறித்த உறவுநிலை, குறியீட்டு நிலையாம் எளிய தொடக்க நிலையிலிருந்து, அரிதின் முயன்று பயின்றாலல்லது, எளிதில் விளக்கம் பெறமாட்டா இலக்கிய, இலக்கண மரபுகள், முடிந்த முடிபாக முழுமை யாக்கப்படும் வரையான, அவர்தம் இலக்கிய வளர்ச்சியின் விரிவுரை விளக்கம் ஆகிய இவைதாம் வரலாறு என்பதின் பொருள் என்றால், தொல்ஊழிக்காலத்திலிருந்து, கி. பி. 600 வரையான காலத்திற்கான தமிழர்களின் வரலாற்றினைத் திரும்ப வரைதற்குத் தேவைப்படும் வரலாற்றுச் சான்றுகள் அனைத்தும் உள்ளன. அவ்வரலாற்றுக்கதை, மறுபடியும், வரையப்படுவது முயலப்பட்டுளது இந்நூலில்.

மக்கள் நாகரீகத்தின் பழங்கற் காலம், புதுக் கற்காலம் என்ற வேறுபட்ட காலகட்டங்களைச் சேர்ந்தனவாகிய கற்களால்ஆன படைக்கலங்களும், தொழிற்கருவிகளும், முறையாகத் திரட்டப்படவில்லை என்றாலும், பல்வேறு மக்களால் கண்டெடுக்கப்பட்டு, இந்தியநாட்டு அரும்பொருட்காட்சியகங்களில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன. அக்கருவிகள் கூறாமல் கூறும் சான்றுகளை அடிப்படையாகக்கொண்டு, அப் பழம்பெரும் நாட்களில், தமிழர்கள் நடாத்திய வாழ்க்கை நிலை பற்றிய ஒரு மதிப்பீடு சென்னைப்பல்கலைக்கழகம், 1926ல் வெளியிட்ட ''இந்தியாவில் கற்காலம்'' என்ற என் நூலில் என்னால் கொடுக்கப்பட்டுள்ளது. பழைய இரும்புக் காலத்தைச் சேர்ந்தனவாய படைக்கலங்களாலும், தொழிற் கருவிகளாலும் சிறிய அளவிலும், வடநாட்டு ஆரிய நாகரீகத்தோடு தொடர்புகொள்வதற்கு முன்னர், அவர்கள் வழங்கிய சொற்கள் பற்றிய ஆராய்ச்சி முடிவால் மிகப் பெரிய அளவிலும் தெரியவரும், அவர்களின் சமூக, சமய, அரசியல் தொழிலியல் வாழ்வு நிலைகள், சென்னைப்பல்கலைக்கழகம் 1929ல் வெளியிட்ட ''ஆரியத்திற்கு முந்திய தமிழர் நாகரீகம்'' என்ற

என் நூலில் விளக்கப்பட்டுள்ளன. [அவர்களின் பழம் இலக்கியச் சார்புடையவும், வேறு வகைச் சார்புடையவும் ஆய கால வெள்ளத்தின் அழிவுக்கு ஆட்பட்டுப்போகாமல், என்னென்ன பேணிக்காக்கப்பட்டுள்ளனவோ அவற்றிலிருந்தும் சமஸ்கிருதம், பாலி, கிரேக்கம் ஆகிய மொழிகளிலும் இலத்தீன் தொன்மைவாய்ந்த] ஆவணக்குறிப்புகளிலிலும் இவர் பற்றிக் கூறியிருக்கும் குறிப்புகளிலிருந்தும், பெறக்கூடிய தமிழர் வரலாற்றின் மறுதொகுப்பிற்கான ஒரு முயற்சியே இந்நூல்.

வரலாற்று மூலங்கள் :

தனி ஒருவர், மற்றும் சமூக வாழ்வின் குறிக்கோள் ஒழுக்கம் பற்றிய ஆரியரின் பழங்கருத்துக்களைக் கொண்டிருப்பதான, மந்திரங்கள், பிராமணம் என்ற பொருளில் நான் கொள்வதான வேத இலக்கியம் [இரண்டுமே ஒருசேர இருந்து வேதங்கள் எனப்படுவனவாகி] மற்றும் சூத்திரம், அதுபோலவே இராமாயண, மகாபாரத இதிகாசங்கள், புராணங்கள், பௌத்த, அர்த்தமாகத் ஜெயின் பழம்பெரும் பாலி மொழியிலான இலக்கியங்கள், அதாவது, ஆரிய வரலாற்று மூலங்கள் அனைத்தும், வரலாற்றுச் செய்திகளுக்காக முழுமையாகத் துருவித்துருவி ஆராயப்பட்டுவிட்டன. இவை போலும் வரலாற்று மூலங்களிலிருந்து பெறப்படும் செய்திகள் ஆரியர்கள், தமிழர்களோடு கொண்ட தொடர்பினை மட்டுமே விளக்கும் என்பது சொல்லாமலே விளங்கும். வடஇந்தியப் பழங்கதைகளைக் குறிப்பாகப் புராணங்களில் கூறப்பட்டிருக்கும் பழங்கதைகளை எடுத்தாளும் நிலையில், நான், திருவாளர் பர்கிதர் அவர்களின் நுணுகிய ஆய்வு முறையினையும் முடிவுகளையும், பெரும்பாலும் முழுமையாகப் பின்பற்றியுள்ளேன். இக்குவாகு காலத்திற்கும் ஸ்ரீகிருஷ்ணன் காலத்திற்கும் இடையில் ஒவ்வொரு நூற்றாண்டிலும் வந்துவந்து காட்சி அளித்துப் படிப்பவரைக் குழப்பத்திற்குள்ளாக்குவோர்களாய அகஸ்தியர் ஒரே அகஸ்தியர் அல்லர், வசிஷ்டர், ஒரே வசிஷ்டர் அல்லர், விசுவாமித்திரர், ஒரே விசுவாமித்திரர்

அல்லர், அந்தந்த நூற்றாண்டுகளில் ஒவ்வொரு பெயர் கொண்டு வாழ்ந்த பலராவர். அப்பெயர்கள் தனித்தனி மனிதர்களைக் குறிப்பன அல்ல. அவை, ஒவ்வொன்றும், ஒவ்வொரு குடிப்பெயரைக் குறிப்பனவாம் என்பது, திருவாளர் பர்கிதர் அவர்களின் பல்வேறு கருத்துக்களில் நனிமிகக் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இம்முடிவு, குழப்ப நிலையைக் குறைத்துத் தெளிவு நிலையினைத் தோற்றுவித்த தோடு, வடஇந்திய நாடுகளில் பழங்காலத்தே அடுத்தடுத்து அரசு கட்டில் ஏறிய அரசர்கள் பற்றிப் பெரும்பாலும் சரியான தொரு பட்டியலை, பொதுவாகப் பின்பற்றும் இப் பட்டியலைத் திருவாளர் பர்கிதர் அவர்கள் தயாரிக்கத் துணையும் புரிந்தது. (இப்பட்டியல்) வேதகாலத்தில் தென்னாட்டில் ஆரிய நாகரீகம் மெல்ல மெல்லப் பரவிய நிலையினைக் கண்டுகொள்ள எனக்கும் துணைநின்றது.

மெஸபடோமிய, எகிப்தியக் கல்வெட்டுக்கள், கிரேக்க, இலத்தீன்மொழி இலக்கியங்கள்போலும் இந்திய நாட்டைச் சேராதனவாகிய வரலாற்றுச்சான்றுகள், தனக்கு மேற்கே உள்ள நாடுகளோடு இந்தியா கொண்டிருந்த வாணிபத் தொடர்பினை மட்டுமே குறிப்பிடுகின்றன. செங்கடற்செலவு என்ற பெரிபுலுஸ் நூலின் தம்முடைய பதிப்பில், திருவாளர் ஸ்காப் அவர்களாலும், “உரோமப்பேரரசுக்கும் இந்தியாவுக்கும் இடையிலான வாணிகம்” என்ற தம் நூலில், திருவாளர் வார்மிங்டன் அவர்களாலும், இந்த வரலாற்றுச் சான்றுகள் முற்றவும் ஆராயப்பட்டு, முழுமையாகப் பயன்படுத்தப்பட்டு விட்டன. அந்நூல்களில் கூறப்பட்டிருக்கும் எழுத்து வடிவிலான நல்ல ஆவண அடிப்படையிலான செய்திகளை, இந்தியாவின் சார்பில் கிடைக்கக்கூடிய சிறுசெய்திகளோடும் ஒப்புக்காட்டி நூற்றாண்டு நூற்றாண்டு வாரியாக வரிசைப் படுத்தியுள்ளேன்.

ஆனால், இந்நூலுக்கு, உறுதிவாய்ந்த சான்றுக்களஞ்சியமாக நான் மேற்கொண்டது, கி. பி. 600க்கு முந்திய காலத்துத் தமிழ் இலக்கியமே ஆகும். பெரும்பாலான என் ஆராய்ச்சி

முடிவிற்கு அடிப்படை ஆதாரமாக, உண்மையில், நான் மேற்கொண்ட நனிமிகப்பழைய நூல், தொல்காப்பியப் பொருளதிகாரம் ஆகும். அந்நூல், அது எழுதப்படுவதற்கு முந்தித் தோன்றிய இலக்கியங்களுக்கான இலக்கண மரபுகளை நேரிதாக எடுத்து விளக்கவே எண்ணியுளது. அவ்விலக்கண மரபுகளை அந்நூல் எழுந்த காலத்திற்கு ஆயிரம் அல்லது இரண்டாயிரம் ஆண்டுகட்கு முந்திய காலத்தில் வாழ்ந்த மக்களின் உண்மையான பழக்க வழக்கங்களாகவே நான் மதிக்கின்றேன். பண்டைத் தமிழரின் எண்ணித் தொலையா இலக்கியப்படைப்புகளின் ஒருசிறு பகுதியாய் எட்டுத்தொகை பத்துப்பாட்டு என்ற தலைப்புகளில் தொகை நூற்களில் தொகுக்கப்பெற்றிருக்கும், வேறுவேறுபட்ட நூற்றாண்டுகளில் எழுதப்பட்டனவாய அப் பாக்கள் பலவும் தரும், வரலாற்றுச்சான்றுகளே தெளிவான, உறுதிவாய்ந்த நேரிடைக்கூற்றுகளாகும். இச்செய்யுள்கள், இருபெரும் அறிஞர்பெருமக்களால் இதற்கு முன்பே வரலாற்று ஆய்வுக்கும் ஓர் அளவு பயன்படுத்தப்பட்டுள்ளன. சொல்லேருழவு செய்யப்படாமல் வெற்றுக்கரம்பாகவே இருந்துவந்த, தமிழிலக்கியத்திறன் ஆய்வு, என்ற மண்ணில், திருவாளர் வி. கனகசபை அவர்கள் முதல் உழவு செய்து, பண்டைய தமிழரசர்களின் வரலாறு பற்றிய ஆய்வினை முதன்மையாகவும், அக்கால மக்கள் வாழ்வியல் பற்றிய ஆய்வினை இடைப்பிறவரலாகவும் மேற்கொள்ளும், "1800 ஆண்டுகளுக்கு முந்திய தமிழர்" என்ற தம்முடைய நூலைக் கொணர்ந்துள்ளார். முதுபெரும் தமிழ் அறிஞராக அவர் இருந்தும், பழந்தமிழ் இலக்கியங்களில் பெரும்பகுதி அவர் காலத்தில் அச்சிடப்படாமையால் அத்துறையில், முழுமையாக வெற்றிகாணமாட்டா இயலாமையால் அவர் வருந்தினார். அதனால், நம்புதற்கியலா வரலாற்றுக் கட்டுக்கதைகள் சில இடம் பெற்றுவிடத்தக்க, பல தவறுகளுக்கு அவர் பொறுப்பேற்க நேர்ந்துவிட்டது. சென்னைப்பல்கலைக்கழகத்தின், இந்திய வரலாறு மற்றும் தொல்பொருள் ஆய்வுத்துறைகளின் பேராசிரியராகிய முதுபெரும் அறிஞர் திருவாளர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்

அவர்கள், பழந்தமிழ் இலக்கியங்களில் பொதிந்துகிடந்த பண்டைத்தமிழ் அரசர்கள், குறுநிலத்தலைவர்கள் பற்றிய செய்திகள் அவ்வளவையும் துருவித்துருவி ஆய்ந்து வெளிப் படுத்தித், தம்முடைய பல்வேறு நூல்களில் திறன் ஆய்வு செய்துள்ளார். ஆனால், பழந்தமிழ் இலக்கியங்கள் பண்டைக்காலத்து மக்களின் வாழ்க்கை முறை பற்றிய செய்திகளை நூற்றாண்டுவாரியாகப் பெருமளவில் கொண் டிருப்பனவாகவும் (அப்பழங்காலச்சமுதாய வாழ்வியல் முறை பற்றிய) வரலாற்றுச் செய்திகளையோ அதன் வளர்ச்சி நிலை பற்றிய ஆய்வினையோ அவர் மேற்கொண்டாரில்லை. உண்மையில் அவ்விலக்கியங்களில் இரண்டறக் கலந்துகிடக் கும் இத்துணைச் செல்வங்களை வைத்துக்கொண்டு என்ன செய்வது என எண்ணிக் கலக்கப்படுமளவான வரலாற்றுச் செல்வங்கள் மிகப்பலவாம். பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து மட்டும் கல்வி எடுக்கலாம் வரலாற்றுச் செய்திகளில், ஒரு கால் கூறினைக்கூட நான் பயன்படுத்தவில்லை என்றே நான் அஞ்சு கின்றேன். வரலாற்றுச் செய்திகளாக, ஆய்ந்து கண்டு நான் கூறியிருப்பன பெரும்பாலும் முழுக்க முழுக்கப் புதிய செய்தி களாகவே, என்னுடைய ஒவ்வொரு முடிவையும் அரண் செய் யும் சான்றாகத் தமிழ் இலக்கியத்தில் காணலாம் செய்தி களை அவற்றின் மூலவடிவிலேயே தருவதை, ஒவ்வொரு அதிகாரத்திலும் மூன்றில் ஒரு பங்கு இடங்கொண்டுவிடும் வகையில் அளித்திருப்பதன் மூலம், என் நூலைப், படிக்கும் தமிழ் அறியாதவர்களை அலைக்கழிக்க அல்லற்படச்செய்து முந்திய எழுத்தாளர்கள் செய்யாதுவிட்ட ஒன்றை நான் செய்துள்ளேன்.

இந்நூலுக்காக நான் மொழி பெயர்த்திருக்கும் தமிழ் இலக்கிய மேற்கோள்பாக்கள் பழஞ்சொற்களையும், வழக் கிறந்துபோன இலக்கண மரபுகளையும் பெருமளவில் கொண் டுள்ளன என்பதைக் கூறவேண்டியது பெரும்பாலும் தேவை யற்றது. மூலங்களுக்கு உரை வகுக்கும் நிலையில் உரையாசி ரியர்களும் சிற்சில இடங்களில் மிகமிக அரிதாக என்றாலும் வழிதவறிச் சென்றிருப்பதால், அவர்கள் உரை, தவறான

உரையாக இருக்கக்கூடும் என நான் எண்ணிவிடும் இடங் களில், அவர்கள் கூறுவதிலிருந்து வேறுபட, நான் தயங்கிய தில்லை. தமிழும் ஆங்கிலமும் மொழி அமைப்பில், ஒன்றி லிருந்து ஒன்று மிகப் பெரிய அளவில் வேறுபட்டு இருப்பதால், எடுத்தாளும் செய்யுள்கள் எளிமையில் பொருள் விளங்கக் கூடியனவாக இருப்பினும், அவற்றை மொழி பெயர்ப்பது கடினமாகவே உளது. மேலும் தமிழ்ப்புலவர்கள், குறிப்பாக கி. பி. ஐந்து, ஆறாம் நூற்றாண்டினரான பிற்காலப் புலவர் கள், தம்முடைய செய்யுட்களில், சொற்றொடர்க்குமேல் சொற்றொடர்களையும், அடைமொழிக்கு மேல் அடை மொழியினையும் அடுக்கிக் குவிப்பதில் அளவின்றி ஆர்வம் காட்டியிருப்பது நேரிடை மொழி பெயர்ப்பைப் பெரும் பாலும் இயலாததாக ஆக்கியுளது. ஆனால் இம்மொழி பெயர்ப்புகள், ஒரு வரலாற்றுப்பயன் குறித்து ஆதலின், ஒவ்வொரு நிலையிலும், ஆங்கில மொழியியல் மரபுகளையும் அவ்வப்போது மீறி, பொருள் விளக்க நிலை மொழிபெயர்ப்பு முறையினையே மேற்கொண்டுள்ளேன். ஆயினும், அம்மொழி பெயர்ப்பு, படித்துப் பொருள் உணர்ந்துகொள்ளக்கூடிய ஒன்றே என்பதை உணர்த்தும் என நம்புகின்றேன். என்னுடைய மொழி பெயர்ப்பு எங்கெல்லாம் பிழைபட் டிருப்பதாக உணர்கின்றனரோ, அவை அனைத்தையும் என் நோக்கிற்குக் கொண்டுவருமாறு தமிழறிஞர்களை வேண்டிக் கொள்கிறேன். எங்ஙனமாயினும், செய்யுள் மூலத்தை எந்த இடத்திலும பொருட்பிழைபட உணர்த்தியிருப்பதாக நான் நினைக்கவில்லை.

**ஆண்டுகள் வழி நிகழ்ச்சி நிரல் :**

ஆண்டுகள் வழி நிகழ்ச்சிநிரல், வரலாற்றின் கண்ணாயின் பண்டைய இந்திய வரலாறு எப்போதும் குருடாகவே இருக்கும். உண்மைகள் அதாவது கணக்குப் பிறழாத, சரியான தேதிகள், மிகமிக அருகேயே தேவைப் படும் என்பதால் மக்கள் வாழ்வியல் வளர்ச்சி பற்றிய ஆய்வு மேற்கொள்ளும் மாணவர்கள் அவ்வாய்வுக்கு அடுத்தடுத்து இடம்பெற்றுவிட்ட நிகழ்ச்சிகள் அளவிலேயே

மனநிறைவு கொள்வர். பழைய இந்தியாவின் ஆண்டுவழி நிகழ்ச்சிநிரல் அறுதியிட்டு முடிவுசெய்ய இயலாத ஒன்றாகவே இருக்கிறது. அவ்வாறே தொடர்ந்து இருக்கும். அதனால் நாட்டுப்பற்று மிகுந்த தற்புகழ்ச்சியாளர்க்கும், ஒன்றைப் பலபடப் பெரிதாக்கிக் காட்டும் பொய்க்கூற்றினர்க்கும் போதிய வாய்ப்பினை அளித்து வந்துளது. அளித்து வருகிறது. கிருத்துவத்தலைமைக்குரு திருவாளர் அஷர்அவர்களின் ஆண்டு வழி நிகழ்ச்சிநிரல் பட்டியல் செலுத்திய மேலாதிக்க விளைவால் உலகம் கி. மு. 4004ல் தோற்றுவிக்கப்பட்டது என நம்பியிருந்த காலத்தில், வேதகாலத்தொடக்கம் கி. மு 1200 ஆக முடிவு செய்யப்பட்டது. அந்நாளிலிருந்து மண்ணியல் ஆய்வாளர்கள் மனிதனின் கடந்தகால வரலாற்றிற்குக் குறைந்தது நூறாயிரம் ஆண்டுகளாவது ஒதுக்கப்படவேண்டும் என வாதிட்டு வந்துள்ளனர் என்றாலும், ஆரிய நாகரீகத்தின் செல்வாக்கு, சிறிதளவுதானும் காணக்கூடாத கி. மு. 3000க்கும் முந்தியதான சயிந்தவன் நாகரீகத்தின் அடிச்சுவடுகள், அரப்பா மொகஞ்சதரோ ஆகிய இடங்களில் அகழ்ந்து காணப்பட்டன என்றாலும், கடந்த நூறு ஆண்டுகால அளவில் சிறிதும் நம்புதற்கு இயலாத நனிமிகப் பிற்பட்ட காலத்தை வேதகாலத்தொடக்கத்திற்கு ஒதுக்கி விட்ட தேக்கநிலை, ஐரோப்பிய வரலாற்றுப் பேராசிரியர்களை மறுசிந்தனை செய்யத் தடுத்துவிட்டது. திருவாளர் பர்கிதர் அவர்களின் பட்டியலிலிருந்து, பாரதப்போருக்கு முன்னர், 90 தலைமுறைகளைச் சேர்ந்த அரசர்கள் ஆட்சி புரிந்தனர் என அறிகிறோம். பல்வேறு ஆய்வுகள், நிலைநாட்ட முனைவதுபோல், அப்போர் கி. மு. 15 ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்ததாயின், வேதகாலம் கி. மு. 3000 ஆண்டுகளுக்கு மிகமுற்பட்ட காலத்தில் தொடங்கியதாதல் வேண்டும். ஆரியரின் ஒற்றைத்தீ வழிபாட்டுமுறை, வேதகாலத்து முத்தீவழிபாட்டு முறைக்கு முன்னே, மிக நீண்ட காலத்திற்குச் சிறந்து விளங்கியிருத்தல் வேண்டும். இவ்வகையால், ஆரியரின் தீ வழிபாட்டு நெறியின் தொடக்கத்திற்கு கி. மு. 3000ஐ நாம் அடைகிறோம். அந்தப் புதிர்

ஈண்டு ஆராயத் தேவையில்லை. ஆனால் அவ்வேதகாலமு ஒவ்வொன்றும் 500 ஆண்டுகளைக்கொண்டதான் மூன்று யுகங்களை உள்ளடக்கியதாகவும் ஏறத்தாழ கி. மு. 3000ல் தொடங்கியதாகவும், நான் கருதுகிறேன் எனக் கூறுகின்ற அளவோடு நிறைவு கொள்கிறேன். ஸ்ரீஇராமச்சந்திரன், வேதகாலத்தின் மூன்று பகுதிகளில், இரண்டாவது பகுதியின் இறுதியில் இருந்தார். ஆகவே அவருடைய காலம் கி. மு. 2000 எனக் கருதுகின்றேன். இராமச்சந்திரன் பிறக்கும்போது ஐந்து விண்மீன்கள், மேலாட்சி நிலையில் இருந்தன என்ற செவிவழிச் செய்தியால் உறுதி செய்யப்படு கிறது என்ற சிறப்பும், இந்த நாளுக்கு உண்டு. ஸ்ரீஇராமருக்கும் ஸ்ரீகிருஷ்ணருக்கும் இடையே கடந்துபோன காலம் 500 ஆண்டுகள் என்பது ஒரு நல்ல மதிப்பீடு. இம் மதிப்பீடு ஸ்ரீகிருஷ்ணனின் இறப்போடும், வேதமந்திரங் களை இயற்றிவந்த நீண்டவழிமுறையினரின் மறைவு களோடும் ஒன்றுபட்ட, கலியுகத்தின் மரபு வழித் தொடக்கமாம், வேதகால முடிவுக்கு, நம்மைக் கொண்டுவந்து நிறுத்துகிறது. பாரதப்போருக்குப் பின்னர், இந்தியாவின் ஆண்டுவழி நிகழ்ச்சிநிரல் பட்டியல், இன்றியமையாநிலையில் சரியானதல்லவாகலாம் என்றாலும், எளிமையானது. ஆனால், நாம் பெரிதும் கருத்தில் கொள்ளவேண்டுவது நிகழ்ச் சிகளின் வரிசைமுறையை ஆராய்ந்து காணமுயல்வதே நம்பிக்கை யற்றதாகிவிட்டதான நிகழ்ச்சிகளின் சரியான நாட்களை அன்று.

தென்னிந்திய வரலாற்றுத் தேதிகளைப் பொறுத்த வரை இவைபோலும், தெளிவிலாக் கற்பனை முடிவுகளும், எட்டுவதற்கு அப்பாற்பட்டே உள்ளன. திருவாளர் கனக சபை அவர்கள் வரலாற்று மனிதர் சிலரின், ஏற்றுக்கொள்ளத் தக்க தேதிகளைக் கண்டுகொள்ளலாம் எனக் கற்பனை செய்துள்ளார். அது, வெறும் மாயை என்பது உறுதிசெய்யப் பட்டுவிட்டது. எந்தக்காலத்திற்குப் பின்னர் நம்பத்தகுந்த, ஒருசில வரலாற்றுத் தேதிகளைப்பெற, சில கல்வெட்டுக்கள் நமக்குத் துணைபுரிந்தனவோ, அந்தக் காலமாம் கி.பி. 600ஐ

அடையும்வரை, அதிகபட்சம், நாம்பெறக்கூடியது தெளி வில்லாத சில நிகழ்ச்சிகளின் வரிசைப்பட்டியல்தான்.

**படி எடுத்தல் :**

சமஸ்கிருதச் சொற்களை, உரோமன் எழுத்து வடிவில் எழுதியது, பெரும்பாலான சமஸ்கிருத அறிஞர்கள் கடைப் பிடித்த அதே முறைதான். தமிழ்ச்சொற்களுக்காக மேலும் சில எழுத்துக்களை மேற்கொண்டுள்ளேன். அவையாவன ; ஃற்கு H; ஏவுக்கு Ē; ஓவுக்கு Ō; றகர மெய்க்கு r; ழகர இன்றைய ஒலிப்பு நகரத்திற்கு முறையில் னகரத்தை வேறு பிரித்துக்காண முடியவில்லையாகவே னகரத்திற்குத் தனிக்குறியீடு எதையும் பயன்படுத்தவில்லை. தமிழை உரோமன் எழுத்தில் எழுதுவது, தனிச்சிக்கலைத் தோற்று விக்கிறது. தமிழ்நெடுங்கணக்கில் பல மெய்யெழுத்துக்களைக் குறிக்கவரும் குறியீடுகள் இரண்டு ஒலிகளைக் குறிக்கும் பணியினைப் புரிகின்றன. உரோமன் எழுத்தில் எழுதுவது ஒலிப்புமுறையோடு வேறுபட்டதாகிவிடின் அச்சொல் தன் பொருளையே இழந்துவிடுகிறது. ஆகவே தமிழ்ச்சொற்களின் ஒலிப்பு முறையினை உரோமன் எழுத்தில் அளித்துள்ளேன். நான் மேற்கொண்ட ஒலிப்புமுறை பெரிதும் சரியான ஒன்று, ஒவ்வொரு தமிழனும் அதைப் பின்பற்றலாம் அல்லது உணர்ந்துகொள்ளலாம் என்றே எண்ணுகின்றேன். நான் சந்திக்கநேர்ந்த மற்றொரு சிக்கல், ஒரே சொல் சமஸ்கிருத வடிவிலும், தமிழ்வடிவிலும் காணப்படும்போது அதை எழுத்துவடிவில் தரும் நிலையில் ஒரு முரண்பாடு ஏற்பட்டு விடுகிறது என்ற உண்மை நிலையாகும். சூழ்நிலை, ஒருவரை சமஸ்கிருதத்தில் சிந்திக்கவைக்கும்போது, இவைபோலும் சொற்களைச் சமஸ்கிருத எழுத்துக்களிலும், தமிழில் சிந்திக்க வைக்கும்போது, தமிழ் எழுத்துக்களிலும் தந்துள்ளேன். இம்முறை, அவ்விருமொழிகளில், ஒருமொழியைத் தெரியாத வாசகர்களைத் தடுமாறச் செய்யக்கூடும் என்றாலும் இம் முரண்பாட்டு நிலையைத் தவிர்த்துவிடல்கூடும் என நான் நினைக்கவில்லை.

# தமிழர் வரலாறு

## அதிகாரம் : 1

## தமிழர் பண்டை நாகரீகத்தின் நில இயல் அடிப்படை

### தமிழர், தென்னிந்திய மண்ணுக்குரியவர் :

ஓரின மக்களின் நாகரீகம், அவர் வாழும் மண்ணுக்கு உரியதாயின், அந்நாகரீகம், அம்மக்கள், பிற இனமக்களோடு தொடர்பு கொள்வதற்கு முன்பே வளர்ந்து முழுமை பெற்ற ஒன்றாகக் காணப்படுமாயின், அந்நிலைக்கு, அம்மக்கள் வாழும் இயற்கைச் சூழ்நிலை, அம்மக்கள் மீது செலுத்திய ஆட்சியின் விளைவே முழுமுதல் காரணமாம். ஓரின மக்கள் தங்கள் வாழ்க்கைச் சூழ்நிலையோடு தொடர்ந்து எதிர்நீச்சல் போட்டுவந்ததன் விளைவாகத் தோன்றிய ஒரு நாகரீகம், அம்மக்கள் வாழும் நிலஇயல் கூறுபாட்டுக் காரண அடிப் படையில் எழுந்ததேயல்லது, வென்று அடிமைகோடல், வாணிகம், மற்றும் பிற அறவழி மூலம் அம்மக்களோடு தொடர்பு கொண்டுவிட்ட வெளிநாட்டவரின் ஆதிக்க விளைவு போலும் வரலாற்றுக்கான அடிப்படையில் எழுந்ததாகாது. தொல்லூழிக் காலத்தில், மனிதவாழ்க்கையில், இயற்கைச் சூழ் நிலை செலுத்திய ஆட்சியின் விளைவாக மனிதநாகரீகம், தமிழகத்தில் படிப்படியாக ஒவ்வொரு காலகட்டத்திலும் பெற்ற வளர்ச்சி நிலையினைக் கண்டுகொள்ளக்கூடிய நிலை யில் நாம் உள்ளோம். நிலத்துக்கடியில் வியத்தகு கனிவளச் செல்வங்களையும் நிலப்பரப்பின்மேல், எண்ணிக் காணமாட் டாது வேறுவேறுபட்ட மாவடை, மரவடைகளையும், ஒரு பால், பெருநீர்ப்பரப்பையும், பிறிதொருபால் பெருநிலப் பரப்பையும் கொண்டதாய தட்பவெப்ப நிலையினையும்

கொண்டு, மனித இனத்தின் வளர்ச்சியில், அதிலும், அவனுடைய தொடக்கநிலை வளர்ச்சிப்பருவத்தில், ஒப்புயர்வற்ற நிலையில் துணைநிற்பதாக இருந்தும், வளங்கொழிக்கும் இந்தியநாடு, தன் மைந்தர்களின் வாழ்க்கை நிலைக்கும், தன் வரலாற்று ஏடுகளுக்குப் பெருமை சேர்க்கும் பல்வேறு நாகரீக நலத்திற்கும், தன் எல்லைக்கு அப்பாற்பட்ட வறண்ட பிறநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டனவற்றையே சார்ந்திருக்கவேண்டியுளது என்பது வெள்ளிடை மலையாகும் என்றே இந்திய வரலாற்று ஆசிரியர் பலரும் கருதுவதாகத் தெரிகிறது. சில வரலாற்று ஆசிரியர்கள், திராவிடர்களின் மூதாதையர்களை, இந்தியாவின் வடமேற்கு அல்லது வடகிழக்குக் கணவாய்கள் வழியாக நம்பிக்கைமிக்க நல்ல வழிகாட்டிகளின் துணையோடு கொண்டுவந்து, எடுத்த எடுப்பிலேயே முழுமைபெற்ற வெளிநாட்டு நாகரீகத்தோடு காவிரி அல்லது வைகைக்கரைகளில் குடியமர்த்துகின்றனர். தமிழ்ச்சொற்களோடு ஒருசார் உறவுடைய சொற்கள் சிலவற்றை, வட இந்தியாவின் ஒரு மூலையில் வழங்கும் பிராஹுமொழி கொண்டிருப்பது ஒன்றே அவர்தம், மிகப்பெரிய இக்கற்பனைக்கு, அவர்கள் நம்பும் மிகச்சிறிய அகச்சான்று. தமிழ்மொழி அல்லது அதனோடு உறவுடைய ஒருமொழி, பண்டைக்காலத்தில், அவ் வடமேற்கு மாநிலங்கள்வரை வழக்கில் இருந்துள்ளது என்பதே இதிலிருந்து பெறக்கூடிய முறையான முடிவு ஆகும். ஒரு மொழிக் குடும்பத்தின் ஒரு மொழியின் ஒரு வாக்கியத்தொடரை, மொழியியல் மரபைச் சிறிதும் மீறாமல், அத்தொடரில் உள்ள சொல்லுக்குச் சொல் மாற்றி வழங்குவதன் மூலமே, வேற்றுமொழிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மொழியின் வாக்கியத்தொடராக மொழி பெயர்த்துக் கொள்ளுவதற்கு ஏற்புடையதாகும் வகையில், வடஇந்தியாவில், இன்று வழக்கில் இருக்கும், சமஸ்கிருதம் அல்லது கௌடியன் இனத்தைச் சேர்ந்த மொழிகள் பலவும், திராவிட இன மொழிகளில் உள்ளது போன்ற இலக்கண அமைப்பு முறைகளையும், சொற்றொடர் அமைப்பு முறைகளையும் கொண்

டுள்ளன என்ற உண்மைநிலையாலும், மேற்கூறிய முடிவு அரண் செய்யப்படுகிறது. கூறிய இவ்வுண்மைகள் தமிழ் மொழியோடு உறவுடைய மொழிகளை வழங்கிவந்த மக்கள் ஒரு காலத்தில் இந்தியப் பெருநிலப்பரப்பு முழுதும் வாழ்ந்து வந்தனர் என்பதை உறுதி செய்யுமேயல்லது, அம்மக்கள், இந்தியாவுக்கு அப்பாற்பட்ட நாட்டிலிருந்து தவிர்க்க இயலாத நிலையில், இந்தியாவுக்கு வந்தனர் என்பதை உறுதி செய்யா இந்தியப்பழங்குடிகள், இம்மண்ணின் மாந்தர் அல்லர் என்பதை நம்மை நம்பவைக்கத்தக்க அகச்சான்று ஒன்றுகூட இன்றுவரை தரப்படவில்லை.

மேலும், தென்னிந்தியாவில், இதுவரை, அகழ்ந்து எடுக்கப்பட்ட பண்டைக் காலத்தைச் சார்ந்த கலைப் பொருட்களும், வரலாற்று நினைவுச்சின்னங்களும், தொடக்க நிலையாகிய பழங்கற்காலம் முதல் புத்தம்புது நிலையாகிய உலோக காலம்வரை எவ்வித இயற்கை நிலை பிறழ்வு காரண மாகவும், இடையற்றுப் போவதற்கு உள்ளாக்கப்படாத நாகரீகத்தின் முறையான வளர்ச்சி, இந்நாட்டில் இருந்து வந்தது என்பதை நிலைநாட்டும் அழியாக் களஞ்சியத் தொகுப்பாய் அமைந்துள்ளன. (இக்கூற்றிற்கான அகச் சான்றுகளைச், சென்னைப்பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள ''இந்தியாவின் கற்காலம்''-என்ற என் நூலில் காண்க.) இந் நாகரீகத்தின் வளர்ச்சிப் பருவ நிலை முழுவதும், தமிழ் மொழி, தென்னிந்தியாவில் வழக்காற்றில் இருந்துவந் துளது. இந்நாகரீக வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையையும் மொழி வடிவில் உணர்த்தத்தேவைப்படும் சொற்கள், தமிழ் மொழியின் தொடக்கநிலை மொழியமைப்பிலேயே இடம் பெற்றுள்ளன. அப் பண்டைக்கால பழக்க வழக்கங்கள், தமிழ் இலக்கியத்தின் மிகப் பழைய இலக்கிய ஏடுகளில், போற்றிக்காக்கப்படுவது நீண்டகாலமாகவே தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டுளது. (இதற்கான எண்ணற்ற அகச் சான்றுகளுக்கு ''ஆரியத்துக்கு முந்திய தமிழ் நாகரீகம்'' என்ற என் நூலைக் காண்க) ஆகவே, தமிழர், தென்னிந்தியாவின்

பழம் பெருங்குடிகளாவர் என்பது முழுதும் உண்மையாம் எனக்கொள்ளலாம்.

ஐந்நிலங்கள் :

நிலப்பரப்பின் வாழத் தகுதி வாய்ந்த பகுதிகள், ஐந்து இயற்கைக்கூறுகளாகப் பிரிக்கப்படலாம் என்பதைப் பண்டைத் தமிழர்கள் உணர்ந்திருந்தனர். ஒவ்வொரு நிலப்பகுதிக்கும், அவர்கள், திணை என்னும் பெயரிட்டனர். திணை எனும் அச்சொல், ஒரு நிலப்பரப்பு எனும் பொருள் தருவதாய் "திண்" அல்லது "திட்" என்ற வேர்ச்சொல்லிலிருந்து பெறப்பட்டதாகத் தோன்றுகிறது. திணை என்ற அச்சொல், பொதுவாக நிலம் என்ற பொருளிலும் ஆளப்படுகிறது. பண்டைத்தமிழர்கள், நிலப்பரப்பு, ஐந்து இயற்கைக் கூறுகளைக் கொண்டுள்ளது என்பதை மட்டும் அறிந்திருந் தாரல்லர். மனித வாழ்வின் செயல்பாட்டு முறைகள், ஒவ்வொரு மனித இனமும் எந்த இயற்கைச் சூழலில் வளர்ச்சி பெற்றனவோ அந்த இயற்கைச் சூழலின் இயல்புகளோடு ஒத்திருந்தன என்பதையும் அறிந்திருந்தனர். அந்த ஐந்து நிலப்பகுதிகளாவன : மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி, நீரற்று வறண்ட நிலப்பகுதியாகிய பாலை. மலைக்கும் மடுவிற்கும் இடைப்பட்ட, காடும் காடு சார்ந்த நிலப்பகுதியாகிய முல்லை, ஆற்றுப்படுகை நிலமாம் மருதம், கடலும் கடல் சார்ந்த பகுதியுமாகிய நெய்தல். நிலப் பரப்பின் இந்த ஐந்து இயற்கைப் பிரிவுகளும் தமிழ்நாட்டில் சிறுசிறு அளவிலேனும் காணப்படுகின்றன. தென்னிந்தியர் ஒரு நிலப்பிரிவிலிருந்து பிறிதொரு நிலப்பிரிவிற்குப் பரவி வாழ்ந்தமையால், அந்நிலப்பரப்பு ஒவ்வொன்றும் உருவாக்கி அளித்த நாகரீகத்தை, அவர் படிப்படியாக வளர்த்துள் ளனர்.

மனித இனநூல் வல்லுநர், வேறுவேறுபட்ட மூவகை மனித நாகரீகத்தின் இயல்பினைக் காட்டவல்ல முப்பெரும் இடங்களான முப்பெரும் நிலப்பிரிவுகளைக் குறிப்பிட்டுள் ளனர். அவ்வகை நாகரீகம், மத்திய தரைக்கடல் நாகரீகம்,

ஆல்ப்ஸ் மலைநாட்டு நாகரீகம், நார்டிக் எனப்படும் வட மேற்கு ஐரோப்பிய நாகரீகம் என அழைக்கப்பட்டன. மத்திய தரைக் கடலைச் சார்ந்து நிலவிய நாகரீகத்தையும், ஆல்ப்ஸ் மலையின் இருபக்கத்தும் நிலவிய நாகரீகத்தையும் ஆராயத் தொடங்கியபோதுதான், மனித நாகரீகத்தின் வளர்ச்சியில், அம்மக்கள் வாழும் சுற்றுச் சூழல் செலுத்தும் ஆட்சியின் இயல்பு உணரப்பட்டது. ஆகவே, முதல் இரு நாகரீகங்களும் அவ்வாறு பெயரிடப்பட்டன. மூன்றாவது இயல்பினைக் காட்டவல்ல இடப்பகுதி, யுரேஷியா எனப்படும், பிரிவுறாத ஆசிய ஐரோப்பியப் பெருநிலப்பரப்பின் வடபகுதியைச் சார்ந்தது ஆகவே மூன்றாவது நாகரீகம் அவ்வாறு பெயரிடப்பட்டது. தமிழ்ப்பெயர் சூட்டுவதாயின் மத்திய தரைக்கடல் நாகரீகம், நெய்தலாம். ஆல்ப்ஸ் மலைநாட்டு நாகரீகம் குறிஞ்சியாம். நார்டிக் நாகரீகம் முல்லையாம். மேற்கு ஐரோப்பிய நாடுகள் 19ஆம் நூற்றாண்டில் முற்றிலுமாகத் தொழில்மயமாக்கப்பட்டு, பண்டைக்காலத்து ஐரோப்பிய மக்களுக்கு ஆறும், அது ஓடும் பள்ளத்தாக்காம் நிலப்பரப்பும் செலுத்திய ஆட்சித்திறன் அறவே மூடி மறைக்கப்பட்டுவிட்டமையால், மிகமிக முக்கிய நாகரீகமாகிய மருதம் என அழைக்கப்படும் ஆற்றுவெளி நாகரீகம் அறவே புறக்கணிக்கப்பட்டுவிட்டது. ஆப்பிரிக்க, ஆசிய நாடுகளில் பரந்து கிடப்பதுபோன்று ஐரோப்பாவில் பாலைவனம் ஏதுவும் இல்லை. அராபிய நாடோடி இனத்தவரின் நாகரீக இயல்பினைக் காட்டவல்லது பாலைவனம். மக்கள் இனப் பண்பாட்டு நிலைபற்றிய ஆய்வு மேற்கொள்ளும் மாணவர்களின் கடைக்கண் பார்வையை, இது, ஒரு சிறிதே பெற்றுள்ளது. மனிதன் பண்டு கடந்துவந்த நாகரீகத்தின் படிக்கட்டுகள் ஐந்து; அவையாவன: வேட்டையாடல், நாடோடிவாழ்க்கை, கால்நடை மேய்த்தல், கடல்மேற் சேறல், தொழில் மயமும் கலந்த உழவுத்தொழில் மேற்கோடல்: இவை, முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதத்திணைகளுக்கு நிகராகும். ஒவ்வொரு நிலப்பிரிவையும் சார்ந்த, இயற்கை வளங்களின் இயல்புகள்

அவ்வந்நிலத்துக்குரிய நாகரீக வளர்ச்சிக்குத் தூண்டுதலாய் அமைந்தன.

**வேடன் :**

எப்போதும் பொய்த்துப்போகாமல், ஆண்டுதோறும் பெய்யும் பருவமழையால் தென்னக மேட்டு நிலப்பகுதி, ஆண்டாண்டு காலமாக அரிப்புற்று அரிப்புற்று வந்ததன் விளைவால் சிறுசிறு குன்றுகள் நிற்கும் பரந்து கிடக்கும் நிலப் பரப்பாகும் குறிஞ்சியே, தென்னிந்திய மனிதன் வாழத் தொடங்கிய நனிமிகத்தொன்மை வாய்ந்த நிலப்பகுதியாம். அம் மலைநாட்டின் அடிவாரத்தில், தண்டகன் என்ற அரசன் பெயரிடப்பட்ட, தன் நிலைபேற்றிற்காக, ஆதி மனிதன் மேற்கொண்ட வாழ்க்கைப் போராட்டத்தில், அவனோடு போட்டியிட்டு வந்த, பருத்த உருவ அமைப்பு உடையவாய, அவன் பகை விலங்குகளாம் சிங்கம், புலி, யானை, காட் டெருமை, மலைப்பாம்புகளையும், அவைபோன்றே மனித உயிர்களை மாய்ப்பதில், அப்பெரு விலங்குகளிலும் கொடுமை வாய்ந்த, ஆனால், மிக நுண்ணிய உயிரினங்களாகிய பூச்சிப் பூஞ்சான்களையும் பெருமளவில் கொண்டிருந்த வெப்ப மண்டலப்பருமரக்காடுகள் இடம் பெற்றிருந்தன. குறிஞ்சியில், ஞாயிற்றின் வெய்யிலிலிருந்தும், மழையிலிருந்தும் தன் பகை விலங்குகளிலிருந்தும், ஆதி மனிதன், தன்னை எளிதில் காத்துக் கொள்ளும், புகலிடங்களைப், பெரும் பாறைகளின் இடுக்குகளிடையேயும், இயற்கையாகவே அமைந்துவிட்ட மலைக் குகைகளுக்கிடையேயும் எளிதில் கண்டுகொண்டான். தண்ணீரைச் சேமித்து வைப்பதற்குப் பானையை, இன்னமும் அவன் கண்டுகொண்டானல்லன். இயற்கை நீரூற்றுகள், அவனுக்கு நீர் வழங்கத் தவறிவிடும்போது, மலை நாட்டில் கணக்கின்றிக் காணப்படும் பள்ளங்களில் நீர்த்தேக்கங்களைக் கண்டு பயன் கொண்டான். காலின்கீழிருந்து எளிதில் எடுத்துக்கொண்ட கூழாங்கல், அவனுக்குத் தொடக்கநிலைத் தொழிற்கருவியாகப் பயன்பட்டது. பல்வேறு வடிவங்களில் ஏராளமாகக் கிடைத்த கல்வகைகள், புதியன காணும் அவன் அறிவிற்கு ஊக்கம் ஊட்டின. அவனும் அவனுக்குத் தேவைப்

பட்ட கோடரி, குத்தீட்டி, வெட்டுவாள், மண்வெட்டி முதலானவற்றை வடித்துக்கொள்ளத் தெரிந்துகொண்டான். பழங்கற்காலம் என அழைக்கப்படும் மனித நாகரீகத்தின் தொடக்கநிலை, இந்த மண்ணில், இவ்வகையில் உருப் பெற்றது. இக்காலத்தைச் சேர்ந்தனவாகிய பழங்காலக் கலைப்பொருட்கள், கடப்பை, நெல்லூர், வடார்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களில் பெருமளவில் பரவிக்கிடக்கும் குறிஞ்சி நிலத்தில் சிறப்பாகக் காணப்படுகின்றன.

குறிஞ்சியில், பண்டைமனிதன், தொடக்கத்தில், கனி, கொட்டைக்குள் இருக்கும் பருப்பு, கிழங்கு வகைகளை உண்டே உயிர் வாழ்ந்திருந்தான். பருவநிலை மாறுதல் காரணமாக, இவ்வுணவுப்பொருள் கிடைப்பதில் ஏற்பட்டு விட்ட முரண்பாட்டு நிலை, அவன் உணவு வகையில், விலங்கு களின் இறைச்சியையும் சேர்த்துக்கொள்ளத் தூண்டிற்று. விலங்குப் பகைவரிடமிருந்து தன்னைக்காத்துக்கொள்வதற்கு மேலாக இவ்வுணவுத் தேவையே, அவனை வேட்டையில் வல்லுநனாக ஆக்கிற்று. ஆகவே, மனிதனின் முதல் தொழில், வேட்டையாடுதலாய் அமைந்தது. பழங்கற்காலக் கருவி களெல்லாம் உலகெங்கிலும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. இவ்வுண்மை, தொடக்க காலத்து வேடுவன், உலகின் பல பாகங் களிலும் அலைந்து திரிந்த பெரிய நாடோடியாம் என்பதை உறுதி செய்கிறது.

குறிஞ்சி நிலத்தின் சுற்றுச்சூழ்நிலை, மனித நாகரீகத்தின் வேட்டுவர் வாழ்வில் வில், அம்பு, தீமூட்டுதல் என்ற மேலும் இரு அரிய பெரிய புதிய கண்டுபிடிப்புகளைக் காணவும் வழிவகுத்தது. தென்னிந்தியாவைச் சேர்ந்த குறிஞ்சி நிலங்களில் மூங்கில் ஏராளமாக விளைகிறது. குறவர் என அழைக்கப்படும் அந்நிலத்து வாழ் மக்கள், மூங்கிலின் - பிளவு பட்ட கழிகளின் வளைந்துகொடுக்கும் இயல்பை நுண்ணிய தாக அறிந்து, அவற்றை வளைத்து, அவற்றின் இரு முனை களையும், உலர்ந்து நீண்ட கொடிகள் கொண்டு இறுக்கிப் பிணித்து, அவற்றினின்றும் நீண்ட முட்களை, இருந்த இடத் திலிருந்தே தொலைவிடங்களுக்கு விரைந்து செலுத்த அறிந்து

கொண்டனர். தாரியஸ், ஸெர்ஸஸ் என்ற மாவீரர்களின் படைவரிசையில் பெரிதும் பாராட்டப்பெற்ற பிரிவு, இந்திய விற்படையினர்தாம். இந்திய நாட்டு வேடுவன், புலியைத் தன் வில்லிலிருந்து செலுத்தும் ஒரே அம்பினால் இன்றும் கொன்று விடுவான் என்ற செய்திகள் மூலம், தம்தொழிலில் எக்காலத்தும் சிறந்தவர் என்ற பாராட்டினைப்பெற்றுவிட்ட இந்தியாவின் மலைநாட்டு மக்கள், மேற்கொண்ட, விற்படையின் தோற்றம் இதுதான்.

பண்டைக்காலத்துக் குறவர்களின் மற்றொரு கண்டு பிடிப்பு, மனித இனத்தின் கண்டுபிடிப்புகளில் மிகப்பெரிய கண்டுபிடிப்பாம் தீமூட்டுதல். பழையகற்காலத்துத் தொடக்க நிலையில், குறிஞ்சிவாழ் மக்கள், கடுமையான புயற்காற்று வீசுங்கால் மூங்கிற்கழிகள் ஒன்றோடொன்று கடுமையாக உராய்த்துக்கொள்ளும்போது, தீப்பொறிகள் எழக்கண்டு, இரண்டு மரத்துண்டுகளை ஒன்றோடொன்று தேய்ப்பதன் மூலம் நெருப்பை உண்டாக்கலாம் என்பதைக் கண்டு கொண்டனர். நெருப்பை, அவன் முதன்முதலாகப் பயன் படுத்தியது, தான் வேட்டையாடிய விலங்கின் இறைச்சியை வதக்குவதற்கே.

**வேட்டுவ மகளிர் :**

அக் குடியிருப்பில், ஆடவர், வேட்டை குறித்து வெளியே சென்றிருக்கும்போது மகளிர், கனிபறித்தல், கிழங்ககழ்தல், தங்கள் வாழிடங்களைச் சூழ, நிறைய விளைந்திருக்கும் புல்லரிசி, மூங்கிலரிசி, தினை அரிசிகளைத் திரட்டிக் கொணர்ந்து களஞ்சியங்களை நிரப்பிக்கோடல் போன்ற வற்றில் ஈடுபட்டிருப்பர்.

தங்கள் குழந்தைகளை வளர்ப்பது, மகளிரின் மற்றொரு பணியாம். அந்த நாகரீகப்பருவத்தில், மனிதன் வீடுகட்டத் தெரிந்துகொள்ளவில்லை. வெய்யில் மழைகளிலிருந்து காத்துக் கொள்ள, பருமரங்கள், பெரும்பாறைகள், இயற்கைக்குகைகள் அளிக்கும் புகலிடம் தவிர்த்து வேறு புகலிடம் தேடவேண்டிய தேவைஇல்லாத அளவு, தென்னிந்திய தட்பவெப்பநிலை

துணைபுரிந்தமையால் வீடுகள் அருகியே தேவைப்பட்டன. தங்குவதற்கான இடத்திற்காக அல்லாமல், உணவுப் பொருட்கள் வடிவிலான பழங்காலச்செல்வத்தை ஈட்டிவைப் பதற்காகவே வீடுகள்முதன்முதலாகக் கட்டப்பட்டன. உணவுப் பொருட்கள் சேமித்துவைக்கும் தேவையைப் பழங்கால மனிதன் இன்னமும் உணரவில்லை. ஓரிடத்தில் நிலைத்து இராமல் இடம் பெயர்ந்துகொண்டே இருக்கும் நாடோடி வாழ்க்கை முறையின் தேவை, நிலையான குடியிருப்பு இல்லாக்குறைபாடு ஆகிய இவை ஆண்மகன் வாழ்வில், குடும்ப வாழ்வு பற்றிய இயல்பான உணர்ச்சியைத் தூண்டுவதாக இல்லை. ஆகவேதான் குடும்பத்தில் பெண்ணே தலைவியாம் வாழ்க்கைமுறை, பழங்குடிமக்களிடையே முதலில் இடம் பெற்று வளர்ந்தது.

இவ்வகை வாழ்க்கைமுறை அமைப்பிற்கு, மற்றுமொரு சூழ்நிலையும் ஊக்கம் அளித்தது. ஆதிமனிதன் விரிவான மணச்சடங்குகளால் சிக்கவைக்கப்படவில்லை. கண்டதும் காதல், உடனடியாக ஏற்றுக்கோடல், இவற்றைத் தொடர்ந்து பையப்பைய இடம்பெற்றுவிட்ட பண்டைமுறையிலாம் விருந்தே திருமணச் சடங்காக உருப்பெற்றது. திருமணஉறவு நிலையான ஒழுக்கமாக எல்லாக்காலத்தும் இருந்ததில்லை என்றே சொல்லலாம். கூறிய இக்காரணமும், தனக்கெனச் சொத்துரிமை கொள்ளும்முறை வளர்ச்சி பெறாத நிலையும், நிலையான குடியிருப்பு முறையில் பற்று இன்மையும், பெண்ணே குடும்பத்தலைவியாம்முறை, மிக நீண்டகாலம் நிலைத்திருந்தமைக்கு ஊக்கம் ஊட்டுவவாயின.

தங்களை அழகுபடுத்திக்கொள்ளும் ஆசை எப்போதும் மனிதனுக்குச் சிறப்பளிப்பதாம். அதிலும் குறிப்பாக மகளிரின் பெருவழக்கமாம். குறவர் மகளிர், இன்றுபோலவே, அன்றும் கிளிஞ்சல்களைப் பொறுக்கி எடுத்து, தங்கள் மாந்தர்களை ஒப்பனை செய்ய, அணிந்துகொள்ளும் மாலையாக, அவற்றைக் கோப்பதிலேயே தங்கள் ஓய்வுநேரங்களைக் கழித்தனர். அவர்களின் காதலர் வேட்டையில் தாம்

கொன்று வீழ்த்திய புலியின் பல்போலும் வெற்றிச் சின்னங்களை அவர்களுக்கு அளிப்பர். அவர்களின் கழுத்தில் அணிந்து கொள்ளும் அதுவே, பிற்காலத்தில், ஒரு கயிற்றில் அல்லது கழுத்து அணியில் தொங்கவிடப்பட்டு, கணவன்மார் உயிரோடிருக்கப்பெற்ற மணமான மகளிரின் அடையாளச் சின்னமாகத் தென்னிந்தியாவில், பெரிதும் சிறப்பிக்கப்படும் தாலி ஆயிற்று. மற்றுமொரு வகை உடல்அணி, தென்னிந்திய மலைவாழ் மக்களாகிய பழங்குடியினரிடையே இன்றும் அழியாதிருக்கும் வழக்கமான பல இலைகளை, உலர்ந்த கொடிகொண்டு ஆடைபோல் தைத்து இடையைச் சுற்றி அணிந்துகொள்ளும் தழையாடையாம்.

**பாலைநிலத்து வாழ்வார் :**

வறண்ட மணல்பரந்த நிலமாகிய பாலை, உலக நிலப் பரப்பில் வாழ்வதற்குரிய பகுதிகளில் ஒன்றாக, மிகமிக அருகியே மதிக்கப்படும். கொடுவிலங்குகளை வேட்டையாடுதலில், ஈர்ப்புற்று அவற்றைப் பின்தொடர்ந்து செல்லும் பொழுது, முரட்டுவேடுவன் பாலைநிலத்தில் தற்காலிக வாழிடத்தை வகுத்துக்கொள்ள வற்புறுத்தப்படுவான். வீரச்செயல்புரியும் ஆர்வத்துடன் பிறந்துவிட்டவர் உள்ளத்தில், பாலையின் அழைப்பு, ஓர் எதிரொலியை ஏற்படுத்திற்று. நாடுவிட்டு நாடு செல்லும் ஓர் நாடோடி வாழ்க்கையில் காட்டும் அளவிறந்த ஆர்வமும், முறுக்கேறிய உடலும், உரம்வாய்ந்த உள்ளமும் வாய்க்கப்பெற்ற பலருடைய வாழ்க்கையில் உணர்ச்சி ஊட்டிய தலையாய உந்து ஆற்றலாம். ஒருசிறு காலமோ, அல்லது வாழ்நாள் முழுவதுமோ பாலையில் வாழ்ந்த மனிதர், மறம்வாய்ந்த, வீரம் வாய்ந்த மறவர், வலிமை வாய்ந்த கள்வர் என்போராவார். (கள்வர், கள் வலிமை அதிலிருந்து விலங்குகளிலெல்லாம் வலிமை வாய்ந்த யானையைக் குறிக்கும் களிறு என்ற சொல்லும், வலிமைதரும் குடிவகைகளாகிய மதுவைக்குறிக்கும் கள் என்ற சொல்லும், போர் நிகழ் இடத்தைக் குறிக்கும் களம் என்ற சொல்லும் பிறக்கும்) பாலை வளமிலா நிலமாத

லாலும், ஆண்டு வாழ்மக்கள் படைக்கலம்-ஏந்துவதில் சிறந்து விளங்கினமையாலும், மறவர்களும் கள்வர்களும், பிற்காலத்தில் படை வீரர் தொழிலையும், அண்டை நிலங்களில் வாழும் உடலுரம் இல்லாத, ஆனால் செல்வத்தில் சிறந்திருந்தவர்களைக் கொள்ளையடித்து உண்ணும் கொடுந்தொழிலையும் மேற்கொண்டுவிடவே மறம் என்ற சொல், கொடுமை எனும் பொருள் குறிப்பதாகவும், கள்வர் என்ற சொல், திருடர் எனும் பொருள் குறிப்பதாகவும் மாறிவிட்டன. ஆனால் தொடக்கநிலையில் மனிதர், வீரச் செயல் புரிவதில் தமக்குள்ள ஆர்வம் காரணமாகவே பாலை நில வாழ்வை மேற்கொண்டனர். ஆடவர் பாலைவனத்தில் அலைந்து திரிந்து கொண்டிருக்கும்போது, மகளிரும், குழந்தைகளும், குடும்ப வாழ்வில் என்னென்ன வசதி வாய்ப்புகள் கிடைத்தனவோ அவற்றை அனுபவித்து மகிழக் கலந்து வாழ்ந்து வந்தனராகவே, இந்நிலத்து வாழ்க்கை, பழங்குடி மக்கள் வாழ்வில், குடும்பத்தலைமை, மகளிரிடத்தில் அமையும் தாய்வழி ஆட்சி முறையை வற்புறுத்துவதாய் அமைந்துவிட்டது.

**ஆயர் :**

குறிஞ்சியில் ஒருபால் மக்கள் தொகை பெருகிவிட, மற்றொருபால் கிடைக்கக் கூடிய உணவுப்பொருள் வழங்கல், குறையத்தொடங்கியபோது, அம்மக்கள், அடுத்த நிலப் பகுதியாகிய காட்டுநிலமாம் முல்லைக்குக் குடிபெயர்ந்தனர். அக்கால கட்டத்தில் எருமை, பசு, செம்மறியாடு, வெள்ளாடு ஆகிய விலங்கினங்களையும், குறவர் வாழ்வில் பண்டே பழக்கப்பட்டு, வேட்டை ஆடுவார்க்குப் பெரிதும் பயன்பட்ட நாயையும் வளர்த்துப் பயன்கொள்வதாய, மனித நாகரீக முன்னேற்றத்தின் அடுத்த பெருநிலையை எட்டிப்பிடித்தனர். இது, மனிதவாழ்க்கை முன்னேற்றமாம், ஏணியில் இரண்டாம் படிக்கு, அதாவது மேய்ச்சல் நாகரீகத்திற்குக் கொண்டு சென்றது. முல்லையில், கால்நடைகள், விரைவாகப் பெருகின. பழங்குடி வாழ்விலிருந்து, குடும்ப வாழ்வுமுறை

முகிழ்த்தற்கு, எந்தத் தனியுடைமை தத்துவமுறை துணை செய்ததோ, அத் தத்துவமுறை, கால்நடைச் செல்வப்பெருக் கால் உருப்பெறலாயிற்று.

முதல் காட்சியிலேயே காதலர் ஒன்றுபடுதல், திருமணச் சடங்குகளால் கட்டுப்படுத்தப்படாமை, புலிப்பல் தாலியை யையும், இடையில் அணிந்துகொள்ளத் தைத்த தழை ஆடை யையும் அளிப்பது ஒன்றினாலேயே, திருமணம் முறைப் படுத்தப்படுதலாய், இயற்கை வழித்திருமணம் என அழைக் கப்பட்ட பழங்கால மணமுறை, பழந்தமிழ் இலக்கியங்களில் களவு என அழைக்கப்பட்டது. அது மேய்ச்சல் நிலப்பகுதி யாம் முல்லையில், காதலர் ஒன்றுபடுவதற்கு முன்னர், திருமணச்சடங்குகள் இடம்பெற வேண்டுவதான கற்பு எனும் வடிவில் மெல்லமெல்ல மாற்றி அமைக்கப்பட்டது. காதலர் இருவரையும் ஒன்றுபடுத்துவது, நிகழ்வதற்கு முன்னர், மலர் களாலும், இலைகளாலும் அழகு செய்யப்பட்டதும் ஆயர் களின் இயல்பான குடியிருப்பாவதுமாகிய பந்தலின்கீழ், அப் பழங்குடி ஆயர் மகளிர் ஆகிய அனைவர்க்கும் விருந்தளிக் கும் நிகழ்ச்சியே திருமணச் சடங்கு முறையில் சிறப்பான பகுதியாம். குடும்பத்தந்தை, கணக்கின்றிப் பெருகும் கால் நடைகளை உடையவராகி, அக் கால்நடைச் செல்வம் வழங் கும் பெருஞ்செல்வாக்கினைப் பெற்றுவிடுவதால், கற்பு என்ற அத்திருமணமுறையும், தனியுடைமை முறை வளர்ச்சி யும், குடும்பத்தலைமை ஆடவர்க்காம் சமுதாய மறுமலர்ச்சி முறைக்கு வழிவகுத்துவிட்டன. சிறுசிறு துண்டுகளாகப் பிரிக் கப்பட்ட மேய்நிலங்கள், கால்நடை மந்தை ஒன்றைப் பேணு வதற்குப் போதுமானதாக ஆகாதுபோமளவு சிறுத்துவிடும் ஆதலாலும், பழங்குடியினர் பல்வேறு உட்பிரிவினராகப் பிரிவுண்டதன்றலான குடும்பம், அக்குடும்பத்தவர் அனை வரும் ஒன்றுபட்டு ஒரே குழுவாக ஆக்கப்பட்டால்தான், போட்டிகளைக்கடந்து நிலைபெற்று நிற்கும் ஆதலாலும், கூட்டுக்குடும்ப முறை தோன்றலாயிற்று. பெரிய குடும்பத் தின் தலைவனாக இருந்தவன், அரசனாக நிலைஉயர்வு பெற் றான். தமிழ்மொழியில் அரசனைக்குறிக்க வழங்கும்

"கோன்' என்ற சொல், ஆயர் மகன் எனும் பொருள்படும். அதுபோலவே அரசியைக்குறிக்கும் "ஆய்ச்சி" என்ற சொல் ஆயர் மகள் எனும் பொருள்படும் என்ற உண்மை நிலையால், தமிழ்நாட்டில் முதன்முதலில், முல்லையில், கால்நடை மேய்ப்பாளராகிய ஆயரிடையேதான், அரசு முறை தோன் றிற்று என்பது, தமிழ் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டு விட்டது. "கோன்" என்ற சொல், ஆயர்களின் அடையாளச் சின்னமாம் கைத்தடியைக்குறிக்கும் "கோல்" என்ற சொல்லி லிருந்து பிறந்ததாகத் தெரிகிறது. அரச ஆணையின் சின்ன மாகிவிட்ட அரசர்கைச் செங்கோல் ஆடுமாடுகளை மேய்க்க உதவும் வெறும் கோலே ஆகும்.

மத்திய ஆசிய அடுக்குகளில் உள்ளதுபோன்ற, இந்தியா வுக்கு அப்பாற்பட்ட நாடுகளின் கால்நடை மேய்ப்பு வாழ்க்கை, தென்னிந்திய மேய்ப்பாளரிடம் முல்லை நிலத்து ஆயர் வாழ்க்கையிலிருந்து, கூடாரங்களைப் பயன் கொள்ளு தல், ஒரு மேய் நிலப்பகுதியிலிருந்து பிறிதொரு மேய்நிலப் பகுதிக்கு எனக் கால்நடை மேய்க்கும் பழங்குடியினர் தொடர்ந்து இடம் பெயர்ந்துகொண்டே இருத்தல் ஆகிய இருநிலைகளின் வேறுபடுகிறது. ஆண்டு முழுதும், தட்ப வெப்ப நிலை ஒரே சீராக இருப்பதால் தென்னிந்தியாவில், கூடாரங்களின் கண்டுபிடிப்பு தேவையற்றதாகிறது. உடைந்த பானை ஓடு மூடப்பட்ட மூங்கில் கற்களால் முட்டு கொடுக் கப்பட்ட, உலர்ந்த கொம்புகளாலான பந்தல்மீது, வேயப் பட்ட விசிறி வடிவிலான ஒருசில பனை ஓலைகள், ஒருமனித னுக்கும் அவன் கால்நடைக்கும் காப்பளிக்கப் போதுமான தாக நிரூபிக்கப்பட்டுவிட்டன. நிலத்தின் வளமும், காலந் தோறும் பெய்யும் பருவ மழையும், ஆண்டுக்கு ஒரே நிலத் தில் புல்பூண்டு விளைவை உறுதி செய்தன. ஆகவே, வடக் கத்திய அடுக்குகளில் உள்ளதுபோல், ஒரு குடியிருப்பைச் சூழ இருந்த புல், கால்நடைகளால் மேயப்பட்டுவிட்டபோதோ, கோடை ஞாயிற்றால் எரிக்கப்பட்டுவிட்டபோதோ, கூடாரத் தைப் பிரித்துக்கொண்டு, புதிய மேய்ச்சலிடம் தேடிச்செல்ல வேண்டியது தேவையற்றதாகி விட்டது. ஆகவே தென்

னித்திய கால்நடை வளர்ப்பு வாழ்க்கை அரைகுறையான நாடோடிவாழ்க்கையன்று. அது நாகரீக வசதிகளை வளர்த்துக் கொள்ள வல்லதான நிரந்தர வாழ்க்கையாம்.

காட்டில் கால்நடைகளின் ஒய்வுநிலை அளித்த அமைதி வாழ்க்கை, குழல் எனும் இசைக்கருவியைக் காண வழிவகுத்தது. நீளவாட்டில் ஒருசில துளைகள் இடப்பட்ட சிறுமூங்கில் துண்டே குழல். கால்நடைகள் மேய்ந்துகொண்டிருக்க, நீண்ட நெடுநேரம் காத்திருப்பதால் ஏற்படும் ஆயரின் மனச்சோர்வைப் போக்க வல்ல இனிய இசை அதினின்றும் எழும்.

ஆயர்களின் ஒரு பிரிவினராகிய குறும்பர் என்பார், ஆடுகளில் குறுகிய கால்களும் உடல் முழுவதும் அடர்ந்து நீண்ட மயிரும் உடைய இனமாம் குறும்பாடுகளை வளர்த்து வந்தனர். முல்லை நிலத்தில், இன்று நீராவி இயந்திரங்கள் கட்டுப்பாடின்றி நிறுவப்பட்டு, விசைத்தறிகள் மூலம் கம்பளி நெய்யப்படுதல், ஏனைய கைவினைஞர்களைப்போலவே, குறும்பர்களின் அன்றாட வாழ்க்கைக்காம் உணவினைப் பெறும் ஆண்டாண்டு கால வழிமுறையினை இழக்கச்செய்து விட்டது. என்றாலும், குறும்பர், தங்கள் ஆடுகள் அளிக்கும் மயிரிலிருந்து கம்பளி நெய்யக் கற்றிருந்தனர். சென்னை மாநிலத்தின் முல்லைப்பகுதிகளில் இன்றும் குடிவாழ்ந்து கொண்டு தங்கள் இனம் வழிவழி மேற்கொண்டு வந்த குலத் தொழிலாம் கம்பளி நெசவை மேற்கொண்டுள்ளனர்.

**மீனவர் இனம் :**

மக்கள், அடுத்துக் குடியேறிய இடம், கடலும் கடல் சேர்ந்த இடமுமாகிய நெய்தல். உயிர்பெற்று விட்டதுபோல் ஓங்கி எழுந்து ஓய்ந்து அடங்கும் அலை ஓயாக்கடலின் பெரு நீர்ப்பரப்பு, தாம் அளிக்கவல்ல பேரிடர்ப்பாடுகள்பால் காதல் கொண்டு, உண்டற்கினிய மீனாம், என்றும் குறையற்றுப் போகாத தன் பெரும் செல்வத்தை வாரிக்கொண்டுவரத் துணிந்து தொழில்படுமாறு, பரந்த அகன்ற மார்பும் அழகுறச் செதுக்கி வைத்தாற்போலும் சதைப்பிடிப்பும் கொண்டு, வீரச்செயல் விரும்பும் மீனவர்களுக்கு அழைப்பு

விடுத்தது. கடலோரத்தில் மீன் பிடிப்பதிலிருந்து மீன் பிடிக்க ஆழ்கடலுக்குச் சென்றனர். கடற்கரைச் சூழல், அங்கு வாழ்பவராகிய பரதவர்களைப், படகு கட்டுவோராகவும், மீனவர்களாகவும் ஆக்கிவிட்டது. மிதப்பதற்கு ஏற்ப, ஒன்றாக இணைக்கப்பட்ட பருத்து நீண்ட இரு மரத்துண்டுகளால் ஆன, பழங்காலத்தெப்பங்களே, முதன்முதலாகக்கண்ட படகுகளாம். பிரம்பினால் பின்னப்பட்டு கடல், விலங்கின் தோலால் மூடப்பட்ட கூடையாம் தோணி, அல்லது பரிசில் அடுத்து இடம் பெற்றது. இந்நிலத்து முக்கிய விளை பொருள்கள் மீனும், உப்பும்ஆம். பரதவர் அவற்றை அகநாடுகளுக்குக் கொண்டுசென்று, பிற உணவுப்பொருள்களுக்காகப் பண்டமாற்று முறையில் தரவேண்டியதாயிற்று, அவர்களின் இச் சுற்றுச்சூழல், பரதவர்களை வணிகர்களாக ஆக்கிற்று. அப் பரதவர் அவர்களின் வழிவந்தவராய, இன்றைய பலிஜீகளைப் போலவே தங்கள் விற்பனைப் பொருள்களை, இரட்டை மூட்டைகளாகக் கட்டிப் பொதி எருதுகளின் முதுகுகளில் ஏற்றிக்கொண்டு சதுப்புநிலப்பாதைகளை வருந்திக் கடந்து, ஆற்றுப்பாய்ச்சலால் வளம்பெற்ற நாட்டு விளை பொருட்களுக்காக மாற்றுப்பண்டமாகக்கொடுப்பர். இப் பரதவர் குடியிலிருந்தே மேற்கே ஆப்பிரிக்க, அராபிய நாடுகளுக்கும், கிழக்கே மலாய், சீன நாடுகளுக்கும், இந்திய வணிகப்பொருள்களைப் படகுகளில் கொண்டுசென்ற பண்டைய இந்திய மாலுமிகள் தோன்றினர்.

உழவர் :

முல்லைக்கும் நெய்தலுக்கும் இடைப்பட்ட, தாழ்வான சமவெளியாம் மருதமே, மக்கள், இறுதியாகக் குடிவாழத் தொடங்கிய நிலப்பகுதியாம். அது நிகழ்ந்தது பழங்கற்கால இறுதியில். புதிய கற்கால நாகரீக காலத்தோடு இன்றைய புதிய நாகரீக வாழ்க்கை தொடங்கிவிட்டது. கால்நடை வளர்க்கும் முல்லை நாகரீகப்பருவத்தில் தொடங்கிவிட்ட, மரம், செடி, கொடிகளைக் குறிப்பாக நெல், வாழை, கரும்பு, மா ஆகியவற்றை, மனித வாழ்விற்குப் பயன்கொள்ளும்நிலை, இம் மருத நாகரீகநிலையில் முழுமை அடைந்துவிட்டது.

மருதத்தில், மண்ணின் விளைவாற்றல், அம் மண்ணுக்குரியவனாம் உழவனுக்கு நிலத்தை உழுதபின்னர், நெல், முதலாம் உணவுப்பொருட்களை விளைவிக்கும் முறையினைக் கற்றுத்தந்தது. ஆறுகளின் இரு பக்கங்களிலும், படிப்படியாகத்தாழ்ந்து செல்லும் நில அமைப்பு, தங்கள் விளை நிலங்களுக்கு உயிர் ஊட்டும் நீரைக் கொண்டு செல்லும் முறையினை, வெள்ளத்தை, அது விரும்புமாறு ஓடவிடாது, தாம் விரும்புமாறு கொண்டுசென்று, வெள்ளநீரை ஆட்சி கொள்ளவல்லராகிய வெள்ளாளர்க்குக் கற்றுத் தந்தது. மழைநீரை ஏரி, குளங்களில் தேக்கி வைத்துப், பாசனக் கால்வாய்கள்மூலம் தங்கள் விளை நிலங்களுக்குச்செலுத்தவும், கிணறுகளிலிருந்தும், நீர் ஊறும் கசங்களிலிருந்தும் நீரேற்றுவான் மூலம் நீரை மேலே கொணர்ந்து, தாங்கள் பயிரிடும் நிலத்துண்டுகளுக்குப் பாசனம் அளிக்கவும் வல்லவரும், பெய் எனக் கூறும்போது பெய்யுமாறு கார்மேகங்கள் மீது ஆட்சி செலுத்தவல்லவருமாகிய காராளர் ஆற்றுப்படுகைக்கு அப்பாற்பட்ட மேட்டுப்பகுதிகளில் வாழ்ந்திருந்தனர். தென்னிந்திய உழவர் பெருமக்களின் உழவு பற்றிய மதி நலத்திற்கு, இன்றைய விஞ்ஞானம், ஒரு சிறிதே துணைபுரிய வல்லதாம் என்பதற்கேற்ப, உழவுத்தொழில் பற்றிய கலைகள், நனிமிகப் பழங்காலத்திலேயே முழுமை பெற்றுவிட்டன. ஆற்றுப்படுகைக்கு அப்பால் வெள்ளத்தால் அரிப்புண்டு அடித்துக்கொண்டுவரப்பட்ட மேற்குத் தொடர்ச்சி மலை மண்ணும், தண்டகன் பெயர்பெறும் காட்டின் அழிந்த புல்பூண்டுகளின் கூளமும் கலந்த கலவையாம் நிலப்பகுதி, ஆற்றுப்படுகைக்கு அப்பால் கிடந்தது. இந்நிலப்பகுதிதான், பருத்திச்செடியின் பிறப்பிடம். புதிய கற்காலத்து மனிதன், பருத்தியை நூலாக நூற்கவும், அந்நூலை ஆடையாக நெய்யவும் கற்றுக்கொண்டான்.

தம்முடைய தேவைக்குமேல் குவிந்துவிட்ட உணவுப் பொருட்களையும், பருத்தி ஆடைகளையும் சேர்த்து வைக்க, மாந்தர், மரத்தாலான வீடுகளை, இப்போது கட்டத் தொடங்கினர். தேவைக்குமேல் குவிந்துவிட்ட பொருட்களை

மருதநிலத்தில் எளிதில் கிடைக்காத பொருட்களுக்காக பரதவரிடமிருந்து உப்பு மீன் போன்றவற்றிற்கும் இடையரிடமிருந்து, பால், பால்படுபொருள் சிறப்பாக நெய் போன்றவற்றிற்கும், குரவரிடமிருந்தும், கற்கள், கற்களாலான தொழிற் கருவிகள் (இரும்பு கண்டுபிடிக்கப்பட்ட பின்னர், இரும்பு, இரும்பாலான தொழிற் கருவிகள்) போன்றவற்றிற்கும் விலையாகக்கொடுக்கும் பண்டமாற்று வாணிகம், பொருட்களை ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்கு நிலவழியாகக் கொண்டுசெல்லும் வண்டிகளின் வளர்ச்சிக்கு வழி வகுத்தது. நாகரீக வளர்ச்சிச் சக்கரம் முழுமை பெற்று விட்டது. புதுக் கற்கால நாகரீகக் காலத்திற்குப் பின்னர் உணவுகளும், புதிய மரம், செடி கொடி எதுவும் வழக்கத்தில் கொண்டுவரப்படவில்லை. மேனியை மறைத்துக்கொள்ளும் ஆடையை உருவாக்க, புதிய தொழில்முறை எதுவும் கண்டு பிடிக்கப்படவில்லை. ஆகவே மருத நிலத்தைச் சார்ந்த புதுக் கற்கால நாகரீகத்தின் முற்ற வளர்ந்த நிலையும் அந் நிலத்துக் கலையும், தொழில்களும், நாகரீகத்தின் கடைசி உண்மையில் மிகப்பெரிய படிக்கட்டைக் காட்டுவ ஆயின; பழங்காலத்தில் இரும்பு முதல், நம் காலத்தில் அலுமினியம் வரையிலான கனிவளக் கண்டுபிடிப்பும், நீராவி, எண்ணெய் ஆவி ஆகியவற்றால் இயங்கும் இயந்திரங்களும், மின்சாரத்தால் இயங்கும் விசைப்பொறிகளும் பழைய முறையிலான உழவுத்தொழில் உற்பத்திகளை விரைவும் எளிமையும் படுத்திப் போக்குவரத்தை விரைவுபடுத்த உதவி புரிந்தனவே அல்லது, புதிய உணவுப்பொருள் எதையும் உற்பத்தி செய்யவோ, வெய்யில், மழை, பருவந்தோறும் மாறும் வெப்ப தட்ப நிலைகளிலிருந்து உடலை மூடி மறைக்கும், புதிய வழிமுறைகளைக் கண்டுபிடிக்கவோ இல்லை.

**இந்த வளர்ச்சி முதன் முதலில் எங்கே இடம் பெற்றது ?**

மனித வாழ்க்கைக்குத் தகுதியுடைய நிலப்பகுதியின் இந்த ஐந்து உட்பிரிவுகளும் நிலப்பரப்பில் சிறுசிறு அளவில் ஒன்றையொன்று தொடர்ந்தாற்போல், இந்தியாவில், விந்திய மலைக்குத்தெற்கில் இடம் பெற்றுள்ளன; அதனால்

மக்கள்தொகைப் பெருக்கமும், உணவுப்பொருட்கள் இயல்பாகக் கிடைத்து வருவதில் நிகழும் மாற்றமும், பல்வேறு கால கட்டத்தில் மக்கள் ஒரு நிலப்பகுதியிலிருந்து மற்றொரு நிலப் பகுதிக்குக் குடிபெயர்ந்தமையும், அதைத்தொடர்ந்து, மாறிய வாழ்க்கைச்சூழ்நிலை வழங்கிய தூண்டுதல் உணர்ச்சிக்கு ஏற்ப, வேடர், நாடோடி, மேய்ப்பாளர், கடலோடி, உழவர் என்ற வேறுவேறுபட்ட மனித நாகரீக வளர்ச்சியையும், இப் பகுதியில் எவ்வாறு உருவாக்கிவிட்டன என்பதைப் புரிந்து கொள்வது எளிது. வேறு வகையில் கூறுவதாயின் உலகப் பெருநிலப்பரப்பில் வரையறுக்கப்பட்ட இச்சிறு பகுதியில் மனித வளர்ச்சி பற்றிய ஆய்வு, மனித நாகரீக வளர்ச்சியில், நிலஇயல் கூறுபாடு செலுத்தும் ஆட்சியின் அளவைக் கணக்கிட்டு, வரைபடத்தில் காட்டுவதுபோல் தெளிவாக வரையறுத்துக் காட்டிவிடலாம். இந்த ஐந்து இயற்கைப் பிரிவுகள் மிகப்பரந்தஅளவில் இடம்பெற்றுள்ளன. உதாரணத் திற்கு, கார்ப்பேத்தியன் முதல், அல்டாய்ஸ் அடிவரையான பரந்துகிடக்கும் பெருநிலப்பரப்பில் முல்லைத்திணையும், பயரினீஸ் முதல் இமயமும் அதற்கு அப்பாலும் வரையான பெருமலைப்பகுதியில் உலக மாதாவின் இடையைச்சுற்றி அணியப்பட்டிருக்கும் ஒட்டியாணம் என்ற அணிபோல் குறிஞ்சித்திணையும், மத்திய தரைக்கடல், இந்தியப் பெருங் கடல், அட்லாண்டிக் பெருங்கடல்களைச் சார்ந்த கடற்கரைப் பகுதிகளில் நெய்தல் திணையும், மிகப்பெரிய பாலைவனமாம் சகாராவும், அரேபியா, பர்ஷியா, மங்கோலியா நாடுகளில் அதன் தொடர்ச்சியுமாகிய பகுதியில் பாலைத்திணையும் இடம் பெற்றுள்ளன. படிப்படியாகக் கடந்துவந்த நாகரீக வளர்ச்சி, முதன்முதலில் தென்இந்தியாவில் குறிப்பிட்ட ஒரு பகுதியில் தொடங்கி, அங்கிருந்து வெகுதொலைவிற்கு அப்பால் உள்ள பெரிய நிலப்பரப்பிற்கும் பரவிற்றா? அல்லது நிலையெதிர் மாறாக நிகழ்ந்ததா? இப்புதிர், இன்றைய நிலையில் விடுவிக்க மாட்டா ஒன்று, என்றாலும் மக்கள் கூட்டம், ஒரு நிலப்பிரிவிலிருந்து பிறிதொரு நிலப்பிரிவிற்குக் குடிபெயர்வதும் அதன் பயனாய், மேலும் மேலும் உயர்ந்த

ரீக வளர்ச்சியும், எல்லை காண இயலாப் பரந்த நிலப்

பரப்பில் காட்டிலும், மக்கள் குடிபெயர்ச்சி எளிதில் இடம் பெறத்தக்கதான, குறிப்பிட்ட சிறு நிலப் பகுதிகளில் நிகழ்வதே இயல்பாம் என்பது குறிப்பிடப்படலாம், இயற்கையின் ஆய்வுக்கூடமும், தமக்குக் கிடைக்கக்கூடிய நில இயல் ஆற்றல் துணையோடு, மனித நாகரீகம் குறித்து, அவ்வியற்கை நடத்திய முதல் சோதனையும், ஐரோப்பிய, ஆசிய, ஆப்பிரிக்கப் பெருநிலப்பரப்புகளின், இயற்கை அமைப்பையொட்டி எழுந்த, மிகப்பெரிய நிலப்பிரிவுகளில் அல்லாமல் தக்ஷிண பாதா என வழங்கும், விந்திய மலைக்குத்தெற்கில் உள்ள இந்தியப்பகுதியில்தான் நடைபெற்றன என்று கருத்தில் கொண்டால், மனிதனின் பழைய வரலாற்றினை அறிய அது நமக்குப் பெரிதும் துணைநிற்கும். இந்த நாகரீகங்களை இயற்கை அன்னை மிகப்பெரிய அளவில், இந்திய எல்லைக்கு அப்பால் உருவாக்கிப் பின்னர், தென்னிந்தியாவை மனித இன ஆராய்ச்சிப் பொருள்களின் அரும்பொருட்காட்சி சாலையாக நிறைவு செய்வதற்காக, அந்நாகரீகம் ஒவ்வொன்றினுடைய சிறிய அளவிலான வடிவங்களைத் தென்னாட்டில் அரும்பாடுபட்டுப் புகுத்திற்று என்பதினும், பண்டைக்காலத்தைச் சேர்ந்த இப்பல்வேறு நாகரீகங்களும், தம்மில் தோன்றிய தம் இளந்தோன்றல்களை, இந்திய மண்ணில் சிறிய அளவில் பெற, இயற்கை எதில் வெற்றி கண்டதோ, அதை, அவ்வியற்கை பெரிய அளவில் மறுவலும் உருவாக்குவதற்கு வழிவகுக்கும் வகையில், இந்திய நாட்டுக்கு வெளியே, உரிய தகுதி வாய்ந்த இடங்களுக்கு அனுப்பி வைத்தது என்பதே, பெரும்பாலும் ஏற்கக்கூடியதாம். இக்கருத்தும், ஒருவகையில் யூகம்தான். ஒரே இயல்பான நிலை இயல் ஆட்சிபுரியும், உலகின் பல்வேறு நிலப்பரப்புகளில், இயற்கை, ஒரே மாதிரியான நாகரீகங்களை, ஒன்றிற்கொன்று தொடர்பில்லா நிலையில் உருவாக்கிற்று என்பதாகும் நிலைமை மாறக்கூடும்.

### பழந்தமிழ்ப்பாக்கள்

உணவு ஆக்கலும், ஆடைநெய்தலும்இல்லாமல் மனிதனின் பிறிதொரு பெரிய கண்டுபிடிப்பு சொல்லாடல்,உரையாடல்,

ஓசை ஒழுங்குடையதாகவும் இருக்கலாம். ஓசை ஒழுங்கற்ற தாகவும் இருக்கலாம். பெரும்பாலோர் கருதுவதுபோல், உரைநடை செய்யுள் நடையை முந்தியதா அல்லது பெரும் பாலும் அதுவே உண்மை நிலையாதல் பாதி ஓசையொழுங் குடையதாகவும், பாதி ஓசையொழுங்கற்றதாகவும் கலந்து இருந்த மூலமுதல் உரையாடலின், பிற்பட்ட காலத்து இரு வேறுபட்ட நிலைகள்தாமா, உரைநடையும், செய்யுளும் என்பதைத் துணிந்து முடிவு கூறுவது, அத்துணை எளிதன்று; ஆனால் இலக்கிய வளர்ச்சியில், செய்யுள் நடை உரை நடையை மிகப்பழங்காலத்திலிருந்தே முந்தியுளது என்பது முற்றிலும் உண்மையாம். "பண்", "பாண்" என்ற இரு சொற்களும் (அவற்றிலிருந்து "பாடு"—வினைச்சொல்; "பாட்டு"—பெயர்ச்சொல்) தமிழின் மிகப் பழைய மொழி நிலைக்கு உரியவாகித், தமிழர்களின் தொடக்க காலத்து இன்பப் பொழுதுபோக்குகளில், இசை வழங்கலும் ஒன்று என்பதை உறுதி செய்கின்றன. தொடக்கத்தில், இசை வாணர்களாகவும், பின்னர்க் கால்நடை வளர்ப்பு, நாகரீகப் பருவத்தில், அரசுநிலை இடங்கொண்டபோது, அரசவைக் கலைஞர்களாகவும், அரசன் புகழ் பாடுபவராகவும், வாழ்ந்த பாணர், தமிழர்களில், மிகப் பழைய, நன்கு பாராட்டப் பெற்ற, ஆனால் சிறிய அளவிலேயே பரிசு அளிக்கப்பட்ட வாழ்க்கையை நடத்தி வந்தனர். தூய தனித்தமிழ் நாகரீகம் சிறந்து விளங்கியபோது, அப்பழங்காலப் பாணர், அரசர் களின் நண்பர்களாகவும், அவர்களுக்கு அறிவுரை வழங்கு வோர்களாகவும் விளங்கினர். ஆனால், வடஇந்தியாவி லிருந்து வந்த ஆரிய நாகரீகம், தென்னிந்திய நாகரீகத் தோடு கலந்துவிட்ட வரலாற்றுக்காலத்தில், இறைச்சியை அதிலும் மாட்டிறைச்சியை அளவுக்கு மீறி உண்பதிலும், வெறியூட்டு மதுவகைகளைக் குடிப்பதிலும், அப்பாணர்கள் கொண்டுவிட்ட இடையறவுபடாத் தீயொழுக்கம், தென் இந்தியாவில் மிகவும் தீண்டத்தகாத, இழிந்த இனத்தவருள் ஒருவராம் சமுதாய இழிநிலையை அவர்க்குத் தந்துவிட்டது.

மிகமிகத் தொன்மைக்காலத்துத் தமிழர், வரலாறு என ஏது ஒன்றும் இல்லாமலே, இவ்வகையில் வளர்ச்சி பெற்றனர். நாகரீக வளர்ச்சி குறித்த அளவுகோலில், அவர்கள் சிறிது சிறிதாக அடைந்த வளர்ச்சி நிலையை, அவர்களுடைய மொழியிலிருந்தும் வரலாற்றுக்கு முந்திய அவர்களின் நாகரீகம் பற்றி ஆய்வு மேற்கொள்ளும் மாணவர்களின் கண்டுபிடிப்புகளிலிருந்தும் அறிந்துகொள்ளலாம்; உலக இலக்கியங்களில், நனி மிகப் பழைய இலக்கியங்களாம் வேதங்களிலும், உலகின் மிகப் பழைய வரலாற்று மூலங்களாம் மெஸபடோமியப் பள்ளத்தாக்குக் கல்வெட்டுகளிலும், வட இந்தியாவோடும் அதற்கு அப்பாலும், அவர்கள் மேற்கொண்டிருந்த வாணிகம் அறியப்பட்டதும், அவர்கள், வரலாற்றில் முதன்முதலாகத் தெரியவந்தனர்.

# அதிகாரம் : II

# பண்டைக்காலத்தில் (ஏறத்தாழ, கி.மு. 3000-2000) வட இந்தியத் தொடர்பு

## தென்னிந்தியா வெளி உலகோடு தொடர்பற்றது :- இது ஒரு பொய்க்கோட்பாடு

திருவாளர் வீ. ஏ., சிமித் அவர்கள், "நில இயல் நிலைமைகள், பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை, இந்திய வரலாற்றை, நன்கு வரையறுக்கப்பட்ட, மூன்று அரசியல் நிலப் பிரிவுகளாகப் பிரித்திருந்தன : 1 சிந்து கங்கை பாயும் பள்ளத் தாக்குகளை உள்ளடக்கிய வட இந்தியச் சமவெளிகள். 2) நர்மதா ஆற்றுக்குத் தெற்கும், கிருட்டிணா துங்கபத்திரை ஆறுகளுக்கு வடக்கிலும் உள்ள, தென்னிந்திய மேட்டு நிலம். 3) அவ்விரு ஆறுகளுக்கு அப்பால், தமிழ்நாடுகள் பலவற்றை உள்ளடக்கிய தென்கோடி. பொதுவாக நில இயல் சார்ந்த இம்மூன்று பிரிவுகளும் ஒவ்வொன்றும், தனக்கே உரிய தெளிவான, நனிமிகச் சிக்கல்வாய்ந்த கதைகளைக் கொண்டுள்ளது. இம்மூன்று வரலாற்றுப் பிரிவுகளுக்குமிடையே, நிலவிய தொடர்புபற்றிய குறிப்புகள், மிக அதிகமன்று" எனக் கூறுகிறார். இவ்வகையில், இவ்வாசிரியர், தம்முடைய இந்தியா பற்றிய ஆக்ஸ்போர்டு வரலாற்று நூலில் தக்கண பீடபூமி, மற்றும் தென்கோடி நிலப்பரப்புகளின் கதைகளுக்கு இரண்டாந்தர இடமே கொடுத்திருப்பதற்கு நியாயப் படுத்துகிறார்.[1] இம் மனப்போக்கை விளக்க, "தென்னாடு நர்மதா, விந்தியம், சாத்புரா மலைகளாலும், மலைக்காடுகளாலும் பரந்த, அறவே உட்புகமாட்டாத் தடையரண்களால் மூடப்பட்டுக் கிடந்தது. வடக்கிற்கும் தெற்கிற்கும் இடையே, இன்று காணலாம், பிரிவினைக்கான மூலவேர், கடந்த காலத்தின், எந்த அளவுக்கும் அகழ்ந்து அடையலாகா ஆழத்திற்கும் சென்று ஊடுருவிக் கிடக்குமாதலின்,

வடக்கிற்கும்-தெற்கிற்கும் இடையே, அந்நனி மிகப் பழங் காலத்தில் நிலவியிருந்த, இயற்கை விளைவித்த, பிரிவினை குறித்த ஆய்வு மேற்கொள்ளுவது, பயன் அளிக்கக்கூடியதே'' என்றெல்லாம், மேலும் மேலும் கூறிச் செல்கிறார்: ''இந்தோ-ஆரிய முன்னோடிகள், தென்னாட்டுக்கு ஊடுருவிச் சென்றது அமைதியான முறையில் ஆகும். அவர்கள் தொடர்பு கொண்ட முக்கியவழி, எக்காலத்தும், கிழக்குக் கடற்கரை வழியே'' என்று மேலும் கூறுகிறார்.[2] போக்கு வரத்து வழித்தடம் பற்றிய திருவாளர் சிமித் அவர்கள்கூறிய கருத்தின் பொருத்தம் குறித்து,திருவாளர். டி.ஆர்.பந்தர்கார் அவர்கள் எதிர்வாதம் செய்துள்ளார். ''பாவரீ'' என்ற பிராமண ஆசிரியரின் மாணவர்கள் மேற்கொண்ட பயண நெறிகளை விளக்கிக்கூறும் ''சுத்தனி பாதம்'' என்ற நூலி லிருந்து, ஒரு கதையை, அவர், சான்றாக எடுத்தாளுகிறார். ''தக்கண பாதத்தில், அசகா அஸ்மகா நாட்டில், கோதாவரிக் கரையில் உள்ள ஒரு சிற்றூரில், ''பாவரீ'', குடியேறி வாழ்ந் திருந்தார். அவர், தம்முடைய பதினாறு மாணவர்களைப் புத்தபெருமானுக்குத் தங்கள் வழிபாட்டினைச் செலுத்தி வருமாறு பணித்து அனுப்பிவைத்தார். அவர்கள் வடக்கில், ''மூளகா'' நாட்டைச் சேர்ந்த (நைசாம் அரசின் ஆட்சி எல்லைக்கு உட்பட்டதான இன்றைய ''பைதான்'') படித் தானத்திற்கும், அடுத்து ''மாகிஸ்மதீ''க்கும் (இது இந்தோர் நாட்டெல்லையில், நர்மதாக் கரையில் உள்ள ''மாந்தாதம்'' ஆக அடையாளம் காட்டப்படுகிறது) உச்சயினிக்கும், சாகே தத்திற்கும் அவற்றிற்கு அப்பாலும் பயணம் செய்தனர்.[3]

இதிலிருந்து அம்மாணவர்கள், மாகிஸ் மதீயிலிருந்து, விந்திய மலையின் அப்பால் பகுதிக்கு, விதர்ப்ப நாட்டின் மூலமாகவே சென்றிருக்கவேண்டும் எனப், பொருத்தமுறக் கொள்கிறார் திரு. பந்தர்கார் அவர்கள். ஆரியர்கள், தென் னிந்தியாவுக்குச் சென்றபோது மேற்கொண்ட வழித்தடம் அவ்வாரியர்கள், விந்தியத்தைக் கடந்து, தென்னிந்தியாவுள் புகுவதற்குப் புறப்பட்ட இடமாம், நர்மதா ஆற்றங்கரையில்

உள்ள மாகிஸ்மதி அல்லது மாந்தாத நகரைத், தென்கோடி நகரமாகக் கொண்ட, அவந்தி நாட்டின் ஊடே அமைக்கப் பட்டிருந்ததாம் என அறுதியாக முடிவு செய்கிறார். 4

திருவாளர் பந்தர்கார் அவர்கள், ஆரியர்கள், தென்னிந் தியாவுக்குச் சென்றிருக்கக்கூடிய பிறிதொரு வழித்தடமாம் கடல் வழியையும் குறிப்பிட்டுள்ளார். "அவர்கள், சிந்து வெளியிலிருந்து, கலங்களில் அல்லது கட்டுமரங்களில் கச்சத் திற்குச் சென்று, அங்கிருந்து கடற்கரை வழியாகச் சௌராட் டிரம் அல்லது கத்தியவாருக்குச் சென்று, கத்தியவாரி லிருந்து பகருகச்சசம் அல்லது இன்றைய ப்ரோச்சுக்கும், பகரு கச்சசத்திலிருந்து பம்பாய் மாநிலம், தானா மாவட்டம், சுப்பாரகம் அல்லது கொபாராவுக்குச் சென்றிருப்பதாகத் தெரிகிறது.[5]

மேற்கூறிய வகையால், விந்தியமலையும், தண்டகாரண் யக் காடும், வட இந்தியாவுக்கும், தென் இந்தியாவுக்கு மிடை யில் கடக்கலாகாத் தடைகளாக இருந்தன என்ற கூற்று உண்மையற்றதாகிறது. வேத மந்திரங்களோடு இணைந் துள்ள சில உண்மைகளைக் கருத்தில் கொண்டால், வேத காலத் தொடக்கத்திலிருந்தே, ஆரிய வர்த்தத்திற்கும், தக்கண பாகத்திற்கும் இடையில், பரந்த அளவிலான வாணிகப் போக்குவரத்து இருந்து வந்திருக்க வேண்டும்; விந்தியத்திற்குத் தெற்கே உள்ள இந்தியாவைத் தனிமைப் படுத்தும், திருவாளர் சிமித் அவர்களின் கூற்று அடிப்படை யற்றது என்ற முடிவினை நாம் கொள்ளலாம்.

### வேதங்களில் தென்னிந்தியா

சமஸ்கிருத இலக்கியங்களில், தென்னிந்தியா பற்றிய மிகப் பழைய குறிப்பு, இருக் வேதத்தைச் சேர்ந்த, (X 61 : 8) "சரத்பதா ந தக்கணா பராவர்ன் நதாநுமெ ப்ர்ஸன்யொ ஜக்ர்பரெ" எனவரும் பொருள் விளங்காப் பாட்டில் இடம் பெற்றிருப்பதாகக் கூறப்படும் ஒன்று: திருவாளர் சாயனா அவர்கள், "அய்த்ரேய பிராமணாவில்" வரும் ஒரு புராணக் கதையைப் பின்பற்றி, "தக்கிணா" என்ற சொல்லுக்கு ஆடு

மாடு போலும் கால்நடைகளாகக் கொடுக்கப்படும் ஒரு வகை வரி எனும் பொருள்கொண்டுள்ளார். ஆனால் ஐரோப்பிய அறிஞர்கள், அச்சொல்லைத் "தெற்கு" என மொழிபெயர்த்துள்ளனர். திருவாளர்கள் மேக்டொனெல், கெய்த் இருவரும் "தக்கணாபதா" (தென்னாடு நோக்கி வைத்த கால்), நாடு கடத்தப்பட்ட குற்றவாளிகளை (பராவர்ஜ்) நாடு கடத்தும் இடத்தைக் குறிக்கும் என்கின்றனர்.[6]

அத் தொடருக்குத் திருவாளர்கள் மேக்டொனெல் அவர்களும் கெய்த் அவர்களும் அளிக்கும் பொருள் விளக்கம் சரியானதே. ஆரிய நாகரீகம் விந்தியத்துக்கு அப்பால் தெற்கில் நுழையாத, மிகப் பழைய வேத காலத்தில், தக்கண பாதம், நாடு கடத்தப்பட்டவர்களின் இடமாகக் கருதப்பட்டது என்பது, விஸ்வாமித்திரர், மற்றும் அவர் மகன்களின் கதையால் உறுதி செய்யப்படுகிறது. இக் கதை அய்த்ரேய பிராமணத்தில் கூறப்பட்டுளது. ஆனால், அதனாலேயே அக்கதையில் கூறப்பட்டிருக்கும் நிகழ்ச்சிகள், அய்த்ரேய பிராமணா காலத்தைச் சேர்ந்தனவாகக் கொள்வதுகூடாது; அது, ஏறத்தாழ கி. மு. 2000 இல் வாழ்ந்திருந்த, காயத்திரி மந்திர ரிஷியாகிய, முதல் விசுவாமித்திரர் காலத்தைச் சேர்ந்த ஒரு பழங்கதை. இந்த விசுவாமித்திரர், அரிச்சந்திரன் மகன், ரோகிதாசுவின் வேண்டுகோளின்படி, நடைபெற்ற நரபலி வேள்வியில், பலியாகக் கொல்லப்பட இருந்த, தன் உடன் பிறந்தார் மகனாகிய சுனக்சேபனைப், பலியிடுவதிலிருந்து காப்பாற்றியபோது, கொலையிலிருந்து விடுபட்ட அவனைத் தன் மகனாகத் தத்து எடுத்துக்கொண்டு, அவனுக்குத் தேவராதன் எனப் பெயரும் சூட்டினார். விஸ்வாமித்திரருக்குப் பிறந்த ஐம்பது மகன்களும், சுனக்சேபன் தங்கள் குடும்பத்தின் தலைவனாக உயர்த்தப்பட்டதை எதிர்த்தனர்; சின அடக்கம் உடைமைத்திறன் எக்காலத்தும் பாராட்டப்படாதவராகிய விசுவாமித்திரர் சபித்து "அவன்தான் வஹ்ரப்ரஜா பக்ஸ்ஸிட்" எனக் கூறிச் [illegible]ங்கள் தார்; இத் தொடர்க்குத் திரு. கெய்த் அவர்களால் "உ[illegible]ளைக் கால்வழியினர், நில மகளின் கடைகோடிப் பகுதிக

குடியுரிமையாகக் கொள்வார்களாக" என்பது பொருளாகக் கொள்ளப்பட்டது. ஆனால், சாயனா அவர்கள், "அன் தான் பக்ஷிஸ்ட்" என்ற தொடரை, "சண்டாளாதி ரூபம் நீச ஜாதி விஸேஸம் பஜதாம்" என, அதாவது "ஆரியரல் லாத தஸ்யூக்கள் ஆவார்களாக" எனும் பொருள் உணர்த்து வதாகக் கொண்டார். அய்த்ரேய பிராமணா, "த எதென்ந்த் ஹ்ராஹ் புண்ட்ராஹ் ஸபராஹ், புளிந்தா, மூதிபா, இத்யூதந் தியா பஹுவோவோ வைஸ்வரா மித்ரா தஸ்யூநாம் ப்ஹூயிஸ்ட் ஹா" அதாவது, "எல்லைக்கப்பால் வாழும் மக்கள் ஆந்திரர், புண்டரர், சபரர், புளிந்தர், மற்றும் மூதியர் ஆகியோர் ஆவர். இந்த தஸ்யூக்களில் பலர், விசுவாமித்திரர் வழியில் வந்தவராவர்" என்பதையும் கூறுகிறது. ஆதலின், சாயனா அவர்களின் பொருள் விளக்கம் மிகவும் நல்ல பொருள் விளக்கமாம்.[7]

புண்ணிய பூமியாம் ஆரிய வர்க்கத்தின் தென் எல்லை யாக, விந்தியம் இருந்து வந்தமையாலும், ஆரிய வழிபாட்டுப் பயன்கள் பறிக்கப்பட்டவர்கள் கட்டாயமாக, விந்தியத்திற் குத் தெற்கேதான் செல்ல வேண்டும் ஆதலாலும், சாதி நீக்கம் செய்யப்பட்டவர்கள், தெற்கே சென்றனர். "வடக்கு தெற்கு மலைகள், அதாவது, இமயமும், விந்தியமும், ஒருவனை அழித்துவிடுவான் வேண்டி, தமக்குத்தாமே சுழன்றுகொண்டிருந்தாலும் "பிராண (நில உலகும் தனி யொரு பொருளும்) மெய்ப் பொருளாம் உயிர் ஆற்றல் ஆகிய இரண்டுக்கும் உள்ள வேறுபாடுகளை உணர்ந்துகொண்ட வனை அவற்றால் அழிக்க இயலாது" எனக் கூறுகிறது கௌஸீதகி உபநிஷத். ஆகவே, வேத மந்திரங்கள் இயற்றப் படுவது கைவிடப்பட்ட காலத்துக்கு மிகப் பிற்பட்ட காலத் திலும், விந்தியமலைகள், ஆரிய நாட்டைப், பிற உலகிற்கு மறைத்து வைத்திருப்பதாகவே கொள்ளப்பட்டது.[8]

ஒரு அறிவுடையோர், "இவ்விரு மலைகளுக்கிடையே உள்ள ஆரியவகை, மான்இனக் கருப்பு ஆடு திரியும் நிலப்பரப்பை, என்யவர்த்தம் (அதாவது அது ஒரு பண்டைய மரபு) ...ும் இதனின் வேறுபட்ட நிலப்பரப்பை

இரு பிறப்பாளர் வாழ்தற்குமட்டுமே உரியதான மிலேச்சம் என்றும் அழைத்தனர். ("தயோர் எவாந்தரோ கிர்யோர் ஆர்யாவிர்த்தம் விதுர் புத்ஹாஹ் கிர்ஷ்ணா ஸாரஸ்து சாரதி ம்ரிகொ யத்ர, ஸ்வப்ஹாவத்ஹா-எதானி த்விஜாதயொ தெஸானி"[9]

இவ்வகையில், இப்போது நாம் பெற்றிருக்கும் மனுஸ்மிருதி இயற்றப்பட்ட காலத்திலும் (அது பிராமணர்கள், இந்தியா முழுமையும் வாழத் தொடங்கிய காலம்), தன் எல்லைக்குள் மட்டுமே ஆரியர்கள் வாழக்கூடிய தான, ஆரிய வர்த்தத்தின் எல்லை குறித்த பழங்கருத்து அதன் பழமை காரணத்தால் அதிகாரம் வாய்ந்ததாகத் திரும்பத்திரும்பக் கூறப்பட்டு வந்துளது.

**முத்துக்கள்.—**

வேதகாலத்தில் அலங்காரத்திற்காகப் பெரிய அளவில் பயன்படுத்தப்பட்ட பொருள், தென்கோடி விளைபொருளாம் முத்துக்குத் தென்னிந்தியாவையே வேண்டியிருந்தனர். ஆதலின், சமய காரணங்களுக்கு, முனிவர்கள் ஆரியர்களை ஆரிய வர்த்தத்திற்கு உள்ளாகவே வைத்திருந்த உண்மை நிலையிலுங்கூட, பண்டைக் காலத்திலிருந்தே, ஆரியவர்த்தத்திற்கும், தக்கிண பாதத்திற்கும் இடையில், மிகப் பெரிய வாணிகப் போக்குவரத்து இருந்திருக்க வேண்டும்.[10]

முத்துக்கள், வேதகாலத்தில் பெரு வழக்கில் பயன்படுத்தப்படுவது பற்றிக் குறிப்பிடும் சில மந்திரங்களிலிருந்து ஒரு சில பகுதிகள் இதோ:-"சவிதாவின் தேர், பன்னிற முத்துக்களால் அணி செய்யப்பட்டது" ("அப்ஹீவிற்தம் க்ற்ஷனயிர் விஸ்வரூபம் ரதம்" (ரிக் வேதம் 1;33.4.) "தெய்வத் தேர்களின்-அலங்காரம் முத்துக்களால் அழகு செய்யப்பட்ட அரசுத் தேர்களின் அலங்காரம் போன்றது", அவற்றை ஈர்த்துச் சென்ற குதிரைகளும் முத்துக்களால்- ("க்ஹ்ஷனெப் ஹிரஸ்வன்") அழகு செய்யப்பட்டன" (ரிக் வேதம்: :68:11), குதிரைகள்தாமும் "க்ற்ஷனதஹ்" (ரிக்வேதம் :1.126:4)

''கிற்ஷனின் ஹ்'' (ரிக்வேதம் : 18:23) அழகுசெய்யப்பட்டன. கங்கைச்சமவெளியிலிருந்து, சிறிய அளவில் கொண்டுவரப் பட்ட. தரம் குறைந்த முத்துக்கள், தேவையை மிக அருகியே நிறைவேற்ற, அதனால், முத்துக்கள் தென்னிந்தியாவி லிருந்து, வடக்கிற்குத் தூக்கிச்செல்ல வேண்டுமளவு, முத்தை யும், அதன் தாய் முத்தையும் பயன்படுத்துவது மிகப் பெரிய அளவினதாக இருந்தது. தாய் முத்தினாலான தாயத்தை அணிந்துகொள்ளும்போது ஓதப்படுவதான, அதர்வ வேதத்தின், ''சங்கு மணி ஆக்கம்'' என்ற ஒரு முழு ஆக்கம், முத்துக்களைப், பின்வருமாறு புகழ்கிறது, ''இப் பொன்முத்துச் சிப்பி, காற்று மண்டலத்திலிருந்து மின்னலின் ஒளியிலிருந்து, பிறந்து, எங்களைக் காப்பாற்று மாக'' (''வாதாஜ்ஜாதொ அந்தரிக்ஸாத் வித்யுதொ ஜ்யொதிஸஸ்பரி ஸ நொ ஹிரண்யயா கங்ஹஹ் கிர்ஷனஹ் பாத்வம்ஹஸஹ்'' (அதர்வ வேதம் : 10:1) ''நீ, தேர்மீது தெளிவாக, முனைப்பாகக் கிடக்கின்றாய் ; அம்பறாத்தூணி மீது புத்தொளி காட்டித் திகழ்கின்றாய்'' (ரதெ த்வமஸி தர்ஷத இஸூத்ஹவு ரொகனஸ் த்வம்'' (அதர்வ வேதம் : 6:10; 6)'' மின்னலோடு கூடிய பர்ஜன்யத்திற்கு எதிராகக் கடல் முழங்கும்போது, அக்கடலிலிருந்து பிறக்கிறது, இப் பொன் துளி'' (யத் சமுத்ரொ, அப் ஹ்யக்ரன்தத் பர்ஜன்யொ வித்யதா சஹ்தொ ஹிரண்யயொ பிந்துஸ்ததெ. ஆர்ப்ஹொ அஜாவத'' (அதர்வ வேதம் IX 30:5) சத்விம்ஸ பிராமண; (V: 6) முதலில் கூறிய சங்குமணி ஆக்கத்தைப் போலவே எடுத் துக் காட்டிய கடைசி மந்திரமும், கடலில் விழும் மழைத் துளிகளின் உருமாற்றத்தினாலவேயே முத்துக்கள் பிறக்கின் றன என்ற நம்பிக்கையைக் குறிப்பாகச் சுட்டுகிறது எனத் திருவாளர் வெயிட் நெய் (Whit Ney) அவர்கள் குறிப்பிடு கிறார்கள். எல்லைகாண மாட்டாக் காலத்திலிருந்தே, கடலடியில் கிடக்கும் முத்துச் சிப்பிகளை மூழ்கிக்கொண்டு வரும், தென்கோடித் தமிழகத்தில் கட்டிவிடப்பட்ட பாமர மக்களின், உயிரியல் சார்ந்த கருத்து அது. ஆடவர் பெண்டிர் களை மட்டுமல்லாமல், அவர்களுடைய தேர்கள், குதிரைகள், அம்பறாத்தூணிகள், மற்றும் பிற பொருட்களையும்

அணிசெய்வதற்குத் தேவைப்பட்ட பெருங்குவியலான முத்துக் களைக் கொண்டு செல்வதற்கு ஏற்பவும், மக்களிடையே நிலவிய அதன் பிறப்புப் பற்றிய பழங்கருத்து ரிஷி நாடாம் வடநாட்டிற்கு, அப்பண்டத்தைத் தொடர்ந்து உடன் செல்வதற்கு ஏற்பவும், தேவையான மிகப்பெரிய போக்கு வரத்து, வட இந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையில் இருந்திருக்க வேண்டும் என்பதை, நாம் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

''க்ரட்னா'' என்ற சொல்லின் பிறப்பியல், ஆராய்வதற் குரியது. அது, மெலிந்து சிறுத்துப்போன எனும் பொருளுடையதான ''க்ர்ஷ்'' என்ற மூலத்திலிருந்து பிறந்த தாகத் தெரிகிறது. அது காற்றுக்கும், ஞாயிற்றுக்கும், ஞாயிற்று ஒளிக்கும் நீண்டகாலம் திறந்து போடப்படின், மற்ற நவரத்தினங்கள் போலல்லாமல், கெட்டுவிடும் காரணத்தால், அதற்கு, அப்பெயர் இடப்பட்டது போலும். இதுதான் அச்சொல்லின சரியான பிறப்பியல் என்றால் ''கிருஷ்ணா'' என்ற பெயர் முத்துக்குப் பொருத்தமான கவிதைப் பெயராகும். அதன் பயனை நீண்டகாலம் உணர்ந்த தன் விளைவாக, அதற்கு, அப்பெயர் இடப்பட்டிருக்க வேண்டும். அதன் மற்றொரு சமஸ்கிருதப் பெயர் ''முக்தா''. இச்சொல் வேத இலக்கியங்களில் ''விமுக்தா'' என்ற வடிவில், ஒரு முறை இடம் பெற்றுளது. (''யத்சமுத்ரொ அப்யக்ரன்தத் பர்ஜன்யொ வித்யுதா ஸஹ்ததொ ஹிரண்யயொ பின்துஸ்த தொகர்ப்ஹெர அஜாயத'') (ரிக்வேதம் xlx ; 30 : 5 : சத்விம்ஸ பிராமணா v : 6) திருவாளர்கள் மெக்டொனெல், கெய்த் ஆகியோரால் ''அது, சிப்பியுள் மறைக்கப்படுகிறது'' என விளக்கம் அளிக்கின்றனர். (வேதங்களின் அட்டவணை 11 ll 304). தம்முடைய சமஸ்கிருதச் சொற்களின் அகர முதல சொற்பொருள் பட்டியலில், திருவாளர் மோனியர் வில்லியம்ஸ் அவர்களால் ''முக்தா'' சிப்பியிலிருந்து ''விடு விக்கப்படுகிறது'' எனும் பொருளுடையதாக்கப்படுகிறது. ஆனால், முத்து எனும் பொருள் உடையதான ''முத்தம்'' என்ற தமிழ்ச் சொல்லைக் கடனாகப்பெற்றுச் சமஸ்கிருத

வடிவம் கொடுக்கப்பட்டதே; முக்தா என்ற இச்சொல் என்பதில் நான் உறுதியாக உள்ளேன்.

அணி செய்யத் துணைபுரியும் ஒரு பொருளாக மட்டுமே, முத்தைப் பார்த்தவரும், சிப்பிகளுள் விழும் மழைத்துளிகளே முத்துக்களாக மாறுகின்றன என்ற, அடிப்படையில்லாத கதைகளைக் கேட்டவரும் ஆகிய மக்கள், வேதங்களில், முத்துகுறித்து எழுதி வைத்திருக்கும் குறிப்புகளைச் சிப்பியுள் கிடக்கும் முத்தை, அது பிறக்கும் நாட்டில் அறிந்த ஒரு புலவர் பாடிய பாட்டில், காணப்படும். ''முதிர்வார் இப்பி முத்த வார்மணல் கதிர்விடும் மணி'' - (புறம் : 53 : 1 - 2) என்ற பகுதியை (முதிர்ந்த நீண்ட சிப்பியில், விளையும் முத்துக்கள் போலும், அறலிட்டுக் கிடக்கும் மணல் மீது ஒளி வீசும் நவமணிகள் கிடக்கின்றன) ஒப்பிடுவது சுவையானது. புறம் : 377, ''கடல் பயந்த கதிர் முத்தம்'' குறித்துப் பேசுகிறது. பெரும்பாணாற்றுப் படை (335) ''முத்தவார் மணல்'' (முத்துக்கள் பரந்து கிடக்கு மணல்) குறித்துப் பேசுகிறது.

**பொன்னும் வைரமும்:-**

முத்துக்கள் மட்டுமல்லாமல், வேறுபல தென்னிந்தியப் பொருட்களும், ஆரியவர்த்தத்தில், மிகவும் வேண்டப் பட்டன. அவை, வேறு பல பொருள்களோடு, பொன்னும், வைரமும் ஆம். வேத காலத்தில், அணிகள் செய்வதற்கும், நாணயங்கள் செய்வதற்கும் ஏராளமான பொன் பயன் பயன்படுத்தப்பட்டது. திருவாளர்கள், மெக்டொனெல், மற்றும் கெய்த் அவர்களின் வேத அட்டவணையில், பின் வருமாறு கூறப்பட்டுள்ளது: ''வேதகால இந்தியர், பொன்னுக்கு நிர்ணயித்த விலையை மிகைப்படுத்துவது, எளிதில் முடியக்கூடியதன்று ... புரவலர்களால் வழங்கப்பட்ட பொற்களஞ்சியங்கள் (ஹிரண்யாநி) குறிப்பிடப்பட்டுள்ளன. ...கழுத்து அணிகளுக்காகவும், மார்புஅணிகளுக்காகவும் [''நிஷ்க''] காதணிகளுக்காகவும், (கர்ண ஸோபன) மற்றும் குடிகலனாம் கிண்ணங்களுக்காகவும், பொன் பயன்படுத்தப் பட்டது. பொன்னின் தெளிவான எடையளவுகள் குறிப்பிடப் பட்டுள்ளமையால், பொன் நாணயச்செலாவணி, உறுதியாக

அறியத் தலைப்பட்டிருக்கவேண்டும். அவ்வாறே "அஷ்டாப்ருட்" என்ற ஓர் எடை, சமிதாக்களில் இடம் பெற்றுள்ளது; நூறு "கிருஷ்ணலம்" எடை பொன் கொண்டதான, "சதமானம்" என்ற எடைச்சொல், அதே மூலத்தில் காணப்படுகிறது.[11]

ரிஷிகள் காலத்தில், "ஹிரண்யபிண்டம்", "நிஸக்" என்ற, முறையே, முத்திரையிட்ட, முத்திரையிடாத, இரண்டு வகை உலோக நாணயங்கள் இருந்தன என்பதைத், திருவாளர், டி. ஆர். பண்டார்கர் அவர்கள், ஐயத்திற்கு இடமின்றி உறுதி செய்துள்ளார்.[12] ஆகவே, வடஇந்தியர்களால், சிந்து நதியின் மணலைக் கழுவிப்பெற்ற பொன் தூள்கள், இக்காரியங்களுக்குப் போதுமானவை ஆகா[13]. இவ்வகைப் பொன், அப்பொன் தூள்களின் வடிவளவிலிருந்து கொள்ளப்பட்ட, எறும்பு போன்றவை எனும் பொருள் உடையதான "பிபீலிகம்" என அழைக்கப்பட்டது. ஆகவே, வடஇந்தியர்கள், அதைப் பொன் சுரங்கங்களிலிருந்தும் இறக்குமதி செய்ய வேண்டியதாயிற்று. நாம் அறிந்த வகையில், நமக்குத்தெரிந்த முக்கியமான பொன்னெடுக்கும் பழைய (சுரங்கங்கள்) இடங்கள், தென் இந்தியாவைச் சேர்ந்தனவே; ஆகவே, தென்னிந்தியப் பொன்னே, ஆரிய வார்த்தத்தில் பயன் பட்டது என்பது, இயல்பாக நிகழக்கூடியதே. தக்கிணாபதத்தில் பெருமளவில் கிடைத்த முத்தின் தாய் உட்பட, அனைத்து வகைச் சங்குகள், நவமணிகள், மற்றும் விலையுயர்ந்த மணிக்கற்கள், முத்து, பொன் போலும் பொருள்களினாலான வாணிகம், கி. மு. நான்காம் நூற்றாண்டில், தென்னிந்தியாவுக்கும், வடஇந்தியாவுக்கும் இடையில், வளமாக நடைபெற்றிருந்தது என்ற உண்மை நிகழ்ச்சிக்குக் கௌடல்யரின் அர்த்தசாஸ்திரத்தில், அகச்சான்றுகள் உள்ளன.[15]

மௌரிய காலத்துக்கு முந்திய காலத்து மக்கள் இப்பொருட்களை, உலகின் பிற பகுதிகளிலிருந்து முதன் முதலாகப் பெற்றிருக்க இயலாது; ஆகவே, இது வேதகாலத்து வாணிகத்தின் வளர்ச்சியும், தொடர்ச்சியுமேயல்லது, மௌரிய

காலத்துத், திடுமெனத் தோன்றிவிட்ட வாணிக வளர்ச்சியாகாது என்பதை, நாம் எளிதில் நம்பலாம்,

**மற்றப் பண்டங்கள் :-**

அதர்வ வேதத்தில் அடிக்கடி குறிப்பிடப்படும் நறுமணத் தைலங்கள், மருந்துகளில், தென்னிந்தியப் பெயர் கொண்ட பண்டங்களும், தக்கிணாபதத்திலிருந்து சென்றனவே யாதல் வேண்டும். இவையல்லாமல் ''லாக்ஷா''[16] என்ற மரவகைப் பெயரும், ''மயூரா''[17] என்ற பறவையினப் பெயரும், தமிழ் மொழியிலிருந்து பெறப்பட்டனவாகவே நான் ஐயுறுகின்றேன். இவை போலும் சொல்லியல் ஊகங்கள் இல்லாமல், வடஇந்திய ஆரியர்களுக்கும், தென்னிந்திய தஸ்யூக்களுக்கும் இடையில், இருடிகள் காலத்தில், மிகப்பெரிய வாணிகத் தொடர்புகள் இருந்தன என்பதற்கும் எண்ணற்ற வேறு அகச்சான்றுகளும் உள்ளன. கையுடைய ஒரு விலங்கு என, யானை வேதங்களில், அடிக்கடி குறிப்பிடப்படுகிறது: விந்திய மலைப்பகுதி அல்லது அதற்கு அப்பாலும் தெற்கில் உள்ள பகுதிகளிலிருந்து, அவை பிடிக்கப்பட்டிருக்க வேண்டும்.[18] எனக்குத் தெரிந்தவரை, தந்தத்தில் செதுக்கு வேலை பற்றிய குறிப்பு, வேதங்களில் இல்லை. ஆனால், அலங்காரங்களில் ஒன்றாகப் ''புதியதாகச் செலுத்திய கம்பத்தின் மீது உடையணியா இரு மகளிரின் மெல்லிய உருவங்கள் என்பது போலும்'' சித்திரச்செதுக்கு வேலைப்பாடு குறிப்பிடப் பட்டுள்ளது.[19] இந்த உருவங்கள், மரம் அல்லது பொன், அல்லது தந்தம் ஆகியவற்றால் செய்யப்பட்டனவாதல் வேணடும். வடஇந்தியர்கள் தந்தச் செதுக்குக் கலையில் பயிற்சி பெறாதிருந்தால், அரசர்கள் கொண்டிருந்த, எண்ணற்ற யானைகளிலிருந்து பெறும் அவ்வளவு தந்தங்களையும் எவ்வாறு பயன்படுத்தினர் என்பதற்கு விடைகாண இயலாது போகும். தந்தச்செதுக்கு வேலை வேதகாலத்துக்கு ஆயிரம் ஆயிரம்ஆண்டுகளுக்கு முந்தியதா. பழங்கற் காலத்தில் இருந்தது, நாகரீக வளர்ச்சி உறறதும், அது, அழிந்து போயிருக்க இயலாது. பிற்காலத்தில், சிலவ நாக - ஜாதகக் கதைகளில் (72), தந்தத்தை, வேறுபட்ட வடிவங்

களாகவும் உருவங்களாகவும் செய்வது, பெனாரஸ் நகர மக்களின் தொழிலாகக் கூறப்படுகிறது. இக்கதை, ஜாதகக் கதைகளுள் இடம் பெறுவதற்கு முற்பட்டு, (கி. மு. ஐந்து அல்லது ஆறாம் நூற்றாண்டில்) அத்தொழில், உண்மையில், புதிய தொழிலே அன்று. ஆக அக்காலத்தில் தென்னிந்தியா விலிருந்து வடஇந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட மற்றொரு பொருள் தந்தம்.

**பணியர் :-**

வேதவழிபாட்டுப் பாடல்களில் பல இடங்களில் குறிப் பிடப்படும் பணிகள் என்ற சொல், இவ்வணிகப் பண்டங் களை, ஆரியர்களுக்குக் கொண்டுசென்ற வணிகர்களாவர் எனப் பல இடங்களில் வாதிட்டுள்ளேன்[20]. இதில் திருவாளர்கள் கிரிப்த் (griffth) மெக்டொனெல் (Macdonell) போன்ற ஐரோப்பிய ஆசிரியர்களால் தப்புவழி காட்டப் பட்டுத் தவறு செய்துவிட்டதாக அறிகிறேன். பணி எனும் அச்சொல் இடம் பெறும் மந்திரங்களை நுணுக்கமாக, விழிப் போடு, மறு ஆய்வு செய்தால், அவர்கள் வணிகர்களோ, அல்லது கார்மேகங்களைக் களவாடி, மழையினைத் தடுத்து விடுவதாகக் கூறப்படும் காற்றுப் பேய்களோ அல்லர்; மாறாக ஆரியர்களை எதிர்த்து வந்த, பல்வேறு தஸ்யூ இனத்தவருள் ஒருவராவர் என்பதைக் கண்டுகொண்டேன். அவர்கள், வணிகரும் அல்லர்; பேயும் அல்லர்; குதிரைகளும், ஆனிரை களுமாகக் கால்நடைச் செல்வங்களைக் குவித்து வைத் திருக்கும் உழவர்களாவர்.[21]

அவர்களின் செல்வமாம் கால்நடைகள், மலைக் குகைகளில் வைக்கப்பட்டிருக்கும்.[22] அச்சொல், தீக்கொழுந்துகளைக் கக்கும் கொள்ளிவாய்ப் பேய்கள் எனப் பிழையாகக் கொள்ளப்பட்டது. ஆரியர், திராவிடர் ஆகிய இருவரிடையேயும், பலரும் அறிய இருந்த, பழைய பழக்க வழக்கங்களை அறியாத காரணத்தால் நேர்ந்த, தவறான பொருள்கோள் அது: மிகப் பழைய இந்தியப் பழக்க

வழக்கங்கள் பற்றிய குறிப்புகளைக் கொண்டிருக்கும் தொல்காப்பியத்திலிருந்து, பகைவரின் ஆனிரைகளைக் கவர்ந்துகொள்வது, போர்தொடக்கத் திற்கான மிகப்பழைய முறையாகும்; அது வெட்சி எனப்படும்: போர்ப் பாடல்களில், வெட்சி ஏன் ஒழுக்கத்திற்குரிய நிலமாக மலைநாட்டைக் கொண்டிருந்தது என அறிகிறோம்.

மலைக் குகைகளில் வைத்திருக்கும் கால்நடைச் செல்வத் தால், சிறந்த ஒரு பழங்குடியினராவர், பாணிகள் என்பவர். அவர்கள், ஆரியருள் ஒரு பிரிவினரின் பகைவராவர். அவ் விரு இனத்தவரும், ஒருவரோடொருவர், பழங்காலப் புகழ் வாய்ந்த முறையாம் ஆனிரை கவர்தல் மூலம் போர் மேற் கொண்டனர். அத்தகைய போர் ஒன்றில், ஐரோப்பியப் பேராசிரியர்கள் கருதுவதுபோலும், ஒரு நாட்டின் மீது படைகளை அணிவகுத்து எடுத்துச் செல்லும் போர் அல்லாத போர் ஒன்றில், தங்கள் துணைக்கு, அக்னி, சோமன் ஆகிய கடவுள்களை நம்பியிருக்கும் கடவுள் வழிபாட்டாளர்களாகிய அக்னி, சோமன் என்ற இனத்தவர், பணிகளிடமிருந்து கால் நடைகளைக் கவர்ந்துகொண்டனர். [23]

இந்திரன் அல்லது அவனுக்காகப் பணியாற்றும் பிரகஸ் பதி, பாணிகளின் கால்நடைகளைக் கவர்ந்துகொண்டான். [24]

இவ்வகையில், பாணிகள் என்பார் தஸ்யூக்களில், கால் நடைச் செல்வத்தால் சிறந்த ஓர் இனத்தவராவர்; அவர்கள் வணிகர்களே அல்லர் என்பது காணக்கிடக்கிறது. வேத காலத்தில் தென்னிந்திய வாணிகம், கடலைச் சார்ந்து வாழ்ந்து, மிகப் பழைய காலத்திலிருந்தே, பரதவர் என அழைக்கப்பட்டு வரும் வணிகர்கள் கையில் இருந்தது. [25]

**சேர நாட்டில் ஆரியர் :**

"மூன்று இனத்தவர் ஆணை மீறினர்"—ப்ரஜா ஹதிஸ்ரொ அத்யாயம் கீயூஹ்" என்ற ஒரு தொடர், ரிக் வேதத்தில் (7 : 101; 14) வருகிறது. இத் தொடர்க்கு விளக்கம் அளிக்கும் நிலையில், "தைத்திரீய ஆரண்யகம்"

ஆணை மீறிய இம் மூன்று இனத்தவர், வாயசகர், வங்காகடர், சேரபாதகர்வயா வைதா இமாஹ் ப்ரஜாஸ் திஸ்ரொ அத்யாயம் ஆயன் தானி இமானி வயாம்ஸி வங்காவகடாஸ், செரபாதாஹ்'' என்கிறது.[26]

கடைசியில் வரும் மூன்று சொற்களுக்கும், திருவாளர் சாயனா (Sayana) அவர்கள், பறவைகள், மரங்கள், மர வகைகள், பாம்புகள் என்றும், திருவாளர் ஆனந்ததீர்த்தர்- (Anandateerthar) அவர்கள், பிசாசுகள், இராக்கதர்கள், அசுரர்கள் என்றும் பொருள் கொண்டனர். திருவாளர் கெய்த் அவர்கள் வாயஸர்கள் என்பார், இனச் சின்னமாகப் பறவைகளைக் கொண்டவர் (மத்ஸியர்களும், ஆஜர்களும், வேறு வேறு விலங்குகளைத் தங்கள் இனச் சின்னங்களாகக் கொண்டிருப்பது போல) என்றும், வங்காவகடர் என்பார் பெரும்பாலும் வங்கர், மகதர் என்றும், சேரபாதர் என்பார், சேரர் என்றும் பொருள் கொண்டுள்ளார். கூறப்பட்டிருக்கும் சூழ்நிலையை நோக்க, அவர்கள் ஆணை மீறியது என்பது, தீவழிபாட்டைப் புறக்கணித்தலாம்; திரு. கெய்த் அவர்களின் பொருள்விளக்கம், முறையானது என நான் நினைக்கின்றேன். நான், பின்னர் விளக்க இருப்பதுபோல், ஆரிய நாகரீகம், சேர நாட்டைப் பண்டை நாட்களில், பரசுராமன் குடியேற்றத் தொடக்க நாட்களில் சென்று அடைந்திருக்க வேண்டும்.

**விந்தியத்திற்குத் தெற்கில் ஆரிய அரசர்கள் :-**

வேத காலத் தொடக்கத்தில், விந்தியத்திற்குத் தெற்கில் உள்ள இந்தியாவில், ஆரிய அரசர்களின் ஆட்சியின் பரப்பளவு குறித்து இனி ஆய்கின்றேன். புராணங்களிலிருந்து, அரிச்சந்திரனுடைய பாட்டனார் திரய்யாருணனின் சம காலத்தவன், கார்த்தவீரியார்ச்சுனன் என அறிகிறோம்; அவன், ஆரிய வம்சம் தொடங்கி, ஏறத்தாழ முப்பது தலை முறைகள் பின்னரும், இராமச்சந்திரனுக்கு ஏறத்தாழ முப்பது தலைமுறைகள் முன்னரும், அதாவது வேதகாலத்தின் முக்கூறுகளில், முதல்கூற்றின் கடைசியில் வாழ்ந்தவன்; அர்ச்சுனன்

ஒரு மகாவீரன்: அவன், சாம்ராட் மற்றும் சக்ரவர்த்தி என்ற இருபெயர்களும் சூட்டி அழைக்கப்பட்டவன். அவன் அய்அய (Haihaya) குலத்து ஆட்சியை, நீண்டகாலம் வரை உச்ச நிலையில் வைத்திருந்தான். அத்துடன் வட இந்தியா முழுவதையும் தன் ஆட்சியின்கீழ்க் கொண்டு வருதல் பொருட்டு, தக்கண பாதத்தைச் சேர்ந்த, பெரிய தஸ்யூஇனத்துக் கார்க்கோடக நாகரிடமிருந்து மாகிஸ்மதீயைக் கைப்பற்றி, அதைத் தன்னுடைய படைக்கலத் தலைநகராக்கினான்.[27]

அவனால் வெற்றி கொள்ளப்பட்ட ஏனையோரில், இலங்கை அரசன் இராவணனும் ஒருவன். அவனை மாகிஸ்மதீயில் சிறைவைத்தான் என்றெல்லாம் அறிகிறோம்.[28]

இந்த இராவணன், குறைந்தது ஐந்நூறுஆண்டுகள்கழித்து வாழ்ந்த, இராமச்சந்திரனின் பகைவனாகிய இராவணன் அல்லன் என்பது உறுதி. ஆகவே, கார்ந்த வீரியன்னால் சிறை செய்யப்பட்ட இராவணன், அப்பெயரே கொண்ட இராமர் காலத்து இராவணனுக்குப் பல ஆண்டுகாலம் முன்னர் வாழ்ந்திருந்த ஓர் அரசனாக வேண்டும்; அல்லது, ராவணா என்பது, இறைவன் என்ற தமிழ்ச் சொல்லைச் சமஸ்கிருதப் படுத்தியதன் வடிவாம் அல்லது வேறு இல்லை. ஆகவே அது ஒரு தமிழரசன் எனும் பொருள் உணர்த்தும், இறைவன் என்பதன் திரிபாம் என்று டாக்டர் ஸ்டென் கொனொவ் (Dr. Sten konow) அவர்களின் யூகம் உண்மையாதல் வேண்டும்.[29]

இந்த அர்ச்சுனன், அல்லது அவனுடைய மகன்கள், பார்கவ முனிவர் சமதக்கினியின் ஆசிரமத்தைச் சூறையாடி, அவரையும் அவமானம் செய்து, அவருடைய பசுங்கன்றைக் கொண்டு சென்றனர். சமதக்கினியின் மகன், வெலற்கரிய பேராற்றல்வாய்ந்த இராமன், அவர்கள்மீது போர்தொடுத்து, அவர்களில் பலரையும், ஹய்ஹய குலத்தவரையும் அழித்தான். இராமனும், பார்கவர்களும் அவர்களோடு திருமண முறையால் உறவினர்களான, அயோத்தியா மற்றும் காண்ய குப்ஜ சிற்றரசர்களால் ஆதரிக்கப்பட்டனர்.[30]

தசரதராமனிலிருந்து வேறுபடுத்திக் காட்ட, பிற்காலத்தில் பரசுராமன் என அழைக்கப்பட்ட சமதக்கினி ராமன், அர்ச்சுனனையும், பல ஹய்ஹய குலத்தவரையும் கொன்றான்; போர் வெற்றிகளுக்குப் பிறகு பரசுராமன் தவிக்காகக் கடல் ஒரு சிறு நிலப்பகுதியை ஒதுக்கிக் கொடுத்துவிட்டுச் சில மைல் தொலைவு பின்னடைந்துவிட்ட இடமாம், மேற்குக் கடற்கரைக்கண் ஓய்வு கொண்டான்.[31]

கொங்கணத்திற்கும், மலபாருக்கும், ராமன், வருகை தந்தது, பெரும்பாலும், மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்கும், கடலுக்கும் இடையில், நீண்ட ஒரு சிறு நிலப்பகுதியை நீர்மட்டத்திற்கு மேலே கொணர்ந்து விட்டு, கடல், சில மைல் பின்னடைந்துவிட்ட காலத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும். ஆகவேதான், எண்ணற்ற புராணங்களில், கொங்கணம், மற்றும் மலபார்களின் மீட்சியோடு, பரசுராமன் பெயர் தொடர்புபடுத்தப்படுவது எழுந்துளது; வேத வேள்வி வழிபாட்டு முறையினைத் தமிழ்நாட்டுக்குக் கொண்டு சென்ற முதல் இருடி பெரும்பாலும் பரசுராமன் ஆவன்.

கான்யகுப்ஜத்தைச் சேர்ந்த விசுவாமித்ரர், பரசுராமனின் சம காலத்தவர் ஆவர். இவர், தம்முடைய ஐம்பது மகன்களை, விந்தியத்திற்கு அப்பால் நாடு கடத்திய கதை முன்னரே கூறப்பட்டது. அந்த விசுவாமித்ரர்கள், ஆரிய வழிபாட்டு முறையினைத் தக்கண பாதத்தில் பரப்பினர்; விசுவாமித்ரரின் நாடுகடத்தப்பட்ட மக்கள் குறித்து, திரு. டி. ஆர். பண்டர்கார் அவர்கள், வியத்தகு செய்தி ஒன்றைக் கொடுத்துள்ளார். ''அவர்கள், ஆரிய நாகரீகத்தை, ஆதிப் பழங்குடியினரிடையே பரப்புவதற்காக அப் பழங்குடியினரை மணந்தனர்; அவர்களோடு தங்கு தடையின்றிப் பழகினர்'' என அவர் கூறுகிறார்.[32]

முன் கோபியாகிய தந்தையால் சபிக்கப்பட்டபோது, விஸ்வாமித்ரர்கள் மணமாகாதவர்களாதலின், அவர்கள் தஸ்யூ மனைவிமார்களை மணந்தனர் என்பது ஒருவேளை

உண்மையாக இருக்கவும் கூடும். ஆனால், தஸ்யூக்களை, நாகரீக மக்களாக மாற்றுவதற்காகவே மணந்தனர் என்பது, அறவே தேவையற்ற ஒரு கூற்று ஆகும். தஸ்யூக்கள் நாகரீக மற்ற பழங்குடியினர் அல்லர். வரலாற்று ஆசிரியர்கள் பலரும், புதிய கற்காலத்தைச் சேர்ந்த, கலை நுணுக்கம் வாய்ந்த கைவினைப் பொருட்களிலும், பண்டைய தமிழ்ச் சொற்களிலும், எண்ணற்ற சான்றுகள் காணக்கூடிய, பிற் காலத் தமிழிலக்கியங்களில் எதிரொலிக்கக் கூடிய 33 ஆரிய காலத்திற்கு முந்திய காலங்களில், இந்தியர்கள் அடைந் திருந்த மிகச் சிறந்த நாகரீகத்தை உணராமையாலும், தஸ்யூக்களில் நாகரீகம் பற்றிய வேதக்குறிப்புகளை மதியாமையாலும், நாகரீகமற்ற தஸ்யூக்கள் பற்றிய புராணக் கதைகளைக் கட்டி விட்டனர். ஆரியவர்த்தத்தின் மரபு வழிப் புனிதத் தன்மையும், பழம் புராணக் கதைகளில் நிறையக் கிடைக்கும், இராக்கதர்களின் கொடுமைகளை மிகைப்படுத்திக் கூறும் கதைகளும், இத்தவறான கூற்றை உறுதி செய்யத் துணைபுரிந்தன. தஸ்யூக்கள் பற்றி இருடிகள் பேசும்போது, அவர்கள், அவர்களின் பகைவர் குறித்தும் பேசுகின்றனர், என்பதை நினைவில் கொண்டு உண்மையைக் கடும்வெறுப்புக் காரணமாக மிகைப்படுத்திக்கூறும் கூற்றி லிருந்து, கழித்தே பார்க்க வேண்டும். வேத மந்திரங் களிலும், வீரகாவியங்களிலும், புராணக் கட்டுக்கதைகளிலும், தஸ்யூக்கள், ராக்ஷதர்களின் காட்டுமிராண்டித் தனம் பற்றிய பழிப்புரைகளுக்கு இடையிடையே, அவர்களுடைய உயர்ந்த நாகரீகம், கோட்டை நிகர் மாளிகைகள், பொன் அணிகள், செல்வ வளங்கள், மற்றும் பிற நலங்கள் பற்றிய ஏராளமான பகுதிகளும் உள்ளன என்பதையும் நாம் மறத்தல் கூடாது. ஆக, அத்தஸ்யூக்கள் நாடு கடத்தப்பட்ட ஆரியர்களாலும், அவ்வப்போது வந்துசேரும் ஒரு சில ஆரிய வந்தேறிகளாலும், நாகரீகம் பெறக் காத்திருந்த நாகரீகம் கல்லாப் பழங் குடியினர் அல்லர்.

தக்கண நாடு, வடநாட்டிலிருந்து கட்டுறுதியாகப் பிரிவுண்டு தனிமைப்படுத்தப்பட்டிருந்தது; பழங்கால ஆரிய

அரசர்கள் வேதமந்திர இருடிகள் வளமுற வாழ்ந்திருந்த காலத்தில், அதாவது, இக்ஷ்வாகு காலம்முதல், மகாபாரதப் போர்வரை (என்னுடைய, பழைய இலக்கியக் காலவரிசைப் படி, கி. மு. 3000 முதல் 1400 வரை) விந்தியத்திற்கு வடக்கில் உள்ள நாடுகள் வரையிலேயே, தங்கள் நாட்டாசைகளை அடக்கிக் கொண்டனர் என்ற தப்பான முடிவுகளை, வரலாற்று ஆசிரியர்கள் கொள்ள, ஆரிய வர்த்தத்தின் புதினத் தன்மையும், தப்புவழி காட்டி விட்டது. திருவாளர் டி. ஆர். பந்தர்கார் அவர்கள் 'இந்தியாவின் வடபாதியிலிருந்து தென் இந்தியாவைப் பிரிக்கும் விந்தியமலையை, ஆரியர்கள், அய்த்ரேயபிராமணா காலத்தில்தான் முதன் முதலாகக் கடந்தனர்; உதாரணத் திற்கு:- அய்த்ரேய பிராமணத்தில், பீமா என்ற இளவரசன், வைதர்ப்பா என்ற பெயரில், வைதர்ப்ப நாட்டின் இளவரச னாக முடிசூட்டப்பட்டுள்ளான். இது ஆரியர்கள், விந்தியத்தின் அடிவாரத்திற்கு வந்து, விதர்ப்பம் அல்லது விந்திய மலைத் தொடர்க்கு மிக அணித்தாகத், தெற்கில் உள்ள, மேற்குப் பேராறில் குடியேறினர்[34] என்க்கூறுகிறார். வரலாறு பற்றிய ஆய்வில் திறனாய்வு முறையினைத் தவறாகப் பயன்படுத்துவதற்கான, ஒரு முன் மாதிரி, இது.

பீம வைதர்ப்ப என்ற பெயரை, அய்த்ரேய பிராமணா குறிப்பிட, இருக்குவேத மந்திரங்கள் குறிப்பிடாமையால், ஆரிய அரசர், அப்போது தான் விந்தியத்தைக் கடந் துள்ளனர்! அய்த்ரேய பிராமணா இயற்றப்படுவதற்கு ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், பீமா வாழ்ந்திருக்க வேண்டும்; ஆனால், அந்நூல் அவனைக் குறிப்பிடும் இப் போது தான், அவன் விந்தியத்தைக் கடந்துள்ளான்! இட்சு வாகுவும், புரூவர்களும் முறையே, சூரிய, சந்திர அரச குலங் களைக் கண்டுபிடித்த காலம்தொட்டு, தொண்ணூறு முதல், நூறு வரையான, அரசதலைமுறைகள் கழிந்து போகும் வரையான கால வெள்ளத்தில் மிதந்து வந்த, பழைய காது வழிச் செய்திகளையெல்லாம் பதிவு செய்துளது, அய்த்ரேய பிராமணா; ஆகவே, அந்நூல்களில்; ஒருவனைப் பற்றிக்

குறிப்பிடப்பட்டிருப்பதால், அவன், அந்நூலாசிரியர்களின் சமகாலத்தவன் என்பது பொருளாகிவிடாது. உண்மையில், விதர்ப்ப நாட்டு, பீமா அல்லது பீமரதன் என்பவன், இராமனுக்கு ஏறத்தாழ, பதினைந்து தலைமுறைகளுக்கும், மகாபாரத காலத்துப் பிரஹத்பாலனுக்கு நாற்பது தலைமுறைகளுக்கும் முற்பட்டவனான, அயோத்யா நாட்டு அயுதாயுவின் சம காலத்தவன். அய்த்ரேயா மற்றும் பிற பிராமணாக்கள், மகாபாரதக் காலத்து வேதவியாசர், சமிதாக்களைத் தொகுத்ததன் மூலம், வேத மந்திரங்களுக்கு "முடிவுகட்டிவிட்ட காலத்திற்குச் சிறிது பிற்பட்ட காலத்தில் இயற்றப்பட்டனவாம். ஆக, பீமா, அய்த்ரேய பிராமணாக்களுக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு, முன்பே வாழ்ந்தவன்; அவனுக்குப் பத்துத் தலைமுறைகளுக்கு முன்னரே, விந்தியம் கடக்கப்பட்டு, விதர்ப்ப நாடு தோற்றுவிக்கப்பட்டு விட்டது. ஜயாமகன் என்ற யாதவ குல இளவரசன் ஒருவன், அவனுடைய நாடுகடத்தப்பட்டு, நாகர்களும், பிற தஸ்யூக்களும் குடிவாழும், நர்மதாவின் மலைகள்செறிந்த, மேட்டுப் பகுதியில், தன் எதிர்கால வாழ்வைத் தெற்கு நோக்கித் தேடலாயினன் ; அவன், அங்கு, கொள்ளையடித்து உண்ணும் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தான். அவன், அல்லது அவள் மகன், விதர்ப்பா என்பவன், தெற்கு நோக்கிச் சென்று, தபதி ஆற்றங்கரையில், தனக்கென ஒரு நாட்டைத் தோற்றுவித்துக் கொண்டான். அந்நாடும் அதன் தலைநகரும் அவன் பெயரால் விதர்ப்பம் என அழைக்கப்பட்டது.[35] அவனுக்குப்பிறகு பலஆண்டு கழித்தே, பீமரதன் ஆட்சி மேற்கொண்டான்.

விந்தியப் பகுதியில், பண்டைக் காலத்தில் விதர்ப்பம் மட்டுமல்லாமல், வேறுபல ஆரிய நாடுகளும் நிறுவப்பட்டிருந்தன. விதர்ப்பம், அல்லாமல், தக்கண கோசலம், சேதி, தஸாரணம், நிடதம் ஆகியவைகள், விந்திய மலையடிவாரத்தில், வேதகாலத்து இடைப்பகுதியில் இருந்த ஆரியக் குடியிருப்புகளாம். சேதி நாட்டு ராஜா, கசு என்பான் ரிக்வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளான்[36] சேதி, தஸாரணம்,

விதர்ப்பம், தெற்குக் கோசலம் மற்றும் பல நாட்டு அரசர்களைப் பற்றிய சுவையான விளக்கங்கள், மகாபாரத நளோபாக்கியானத்தில் கூறப்பட்டுள்ளன. புராணங்களில் சைதைய நாட்டு அரசர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். முட்கல நாட்டு அரசன் மனைவி, இந்திரசேனை என்பாள், தன் கணவன், தஸ்யூக்களோடு நடத்திய போரில், அவன் தேரை ஓட்டினாள்,[37] அவள், தேரோட்டுவதில் புகழ் பெற்ற நளனுடைய மகளாதலின், அவள், அது செய்ததில் வியப்பில்லை. (மகாபாரதம் : 3. 114 : 24) நளனுடைய நண்பன் ருதுபர்ணன், தக்கண கோசலத்து அரசனாவன், விதர்ப்பம், அதை ஒட்டியுள்ள நாடு. ஆகவே, தக்கண பாதத்தின் ஒரு பகுதி. இராமர் காலத்திற்கு வெகு காலத்திற்கு முன்பே, ஆரிய அரசர்களால் கைப்பற்றப்பட்டது.[38] இக்கால அளவில், முந்திய அதிகாரத்தில் விளக்கிக் கூறியவாறு, தமிழ் இந்திய மக்கள். அவரவர்க்குரிய திணை நிலங்களில் வாழ்க்கையை வளர்த்துக் கொண்டிருந்தனர் ; வட இந்திய மக்களோடு வாணிகம் செய்து வந்தனர். ஆனால், ஆரிய வர்த்தத்தின் தீவழிபாட்டு நாகரீகம், இக்காலத்தில், விந்தியமலைக்கு அப்பாலும், மெல்ல, மெல்ல நுழையலாயிற்று என்றாலும், வடவர்களால், தஸ்யூ நாகரீகம் என அழைக்கப்பட்ட தமிழர் நாகரீகம், அவ்வாரிய வர்த்தத் தீவழிபாட்டினால் அடிமை கொள்ளப்படவில்லை.

---

1. Oxford History of India, page - I - III
2. Oxford History of India, page-14
3. Bhandarkar Carmichael Lectures: 1981. page:4-5
4. Bhandarkar Carmichael Lectures : page: 22
5. Bhandarkar Carmichael Lecturars: page: 23
6. Vedic Index Vo. I. page 337
7. Aitareya Brahmana: VII, 18
8. கௌஸ்தகி உபநிஷத் 11: 12, 13

9. மனு: II: 22: 24

10. தக்ஷிண பாதா என்ற சொல் வடிவம், தெற்கு எனும் பொருள் உணர்த்துவதான "தக்ஷிண" எனக் குறுக்கப்பட்டது. ப்ராகிருத மொழியில் "தக்கிண" என வரும் இச்சொல், பிற்காலத்தில், விந்தியத்திற்குத் தெற்கில் உள்ள, இந்தியாவின் பெயராக இருந்த "தக்கின்" என மாறிவிட்டது. முஸல்மான் வரலாற்று ஆசிரியர்களைத் தொடர்ந்து, ஆங்கிலேயர்களும் அச் சொல்லை "டெக்கான்" எனத் திரித்து, உணர்த்தும் பொருளையும் மாற்றிவிட்டார்கள். தென்னிந்தியா பற்றிப் பேசும்போதெல்லாம், முனிவர்கள், பொதுவாகக் கருத்தில் கொள்ளும், கிருஷ்ணா ஆற்றிற்கும் தெற்கே உள்ளதான, தென் இந்தியாவின் தென்கோடியில் உள்ள ஒரு பகுதியை, டெக்கான் என்ற சொல் உணர்த்தும் பொருட்குறிப்பிலிருந்து நீக்கிவிட்டு, பீடபூமியை மட்டுமே குறிப்பதாக, அதன் பொருளை வரையறுத்துக்கொண்டு, தென்கோடிப் பகுதியைக் குறிக்க "பார்சௌத்" (Farsowth) என்ற தொடரை வரவழைத்துக் கொண்டனர்.

11. Vedic index : II - 504-5

12. Carmichael Lectures: 1921 page: 56-75

13. கழுவிப் பொன் கொள்ளுதல், தயித் சமிதத்தில்: VI :7: 1; பதிவு செய்யப்பட்டுள்ளது. சிந்து நதி, "பொன் மயமான" என்றும், "பொன் அருவி" என்றும் கூறப்பட்டுள்ளது. ரிக்வேதம் X 75, 8; VI: 61 : 7; VIII : 26: 78 Ved. Ind : II: 504-5

14. மண்ணுக்கடியிலிருந்து எறும்புகளால் மேலுக்குக் கொண்டு வரப்பட்டு, அதனால், அதன் பெயரால் அழைக்கப்படும் பொன், யுதிஷ்டிரர்க்குத் திறைப் பொருளாகக் கொண்டுவரப்பட்டது என மகாபாரதம் (11 : 1860) கூறுகிறது. கிரேக்க எழுத்தாளர் மெகஸ்தனிஸ் அவர்கள், சிறிதே புராணத் தன்மை வாய்ந்த இச்சிறு கதையை, ஒரு பெரிய கதையாக மாற்றிவிட்டார் "கிழக்கு எல்லையில், 3000" "ஸ்டேடியா" சுற்றளவுள்ள உயர்ந்த மேடு ஒன்று உளது. அம்மண்ணுக்கடியில், பொன் சுரங்கங்கள் உள்ளன. அதற்கேற்ப பொன்னைத் தோண்டும் எறும்புகளும் காணப்படுகின்றன. அவை, கொடிய காட்டு நரிகளுக்கு வடிவால் தாழ்ந்தவைகளல்ல' அவை, வியத்தகு வேகத்தில் ஓடுகின்றன ; வேட்டைப் பொருள்மீது வாழ்கின்றன. அவை தோண்டும் காலம், மாரிக் காலம்; அவை, சுண்டெலிகளைப் போலவே சுரங்க வாய்களில் மண் மேட்டைக் குவிக்கின்றன. பொன் தூள்கள், கொதிக்குச் சிறிது ஆளாக்கப்பட வேண்டியும் உளது. அண்டை அயலில், உள்ள மக்கள் பொதி

காளைகளோடு, இரகசியமாக வந்து, அவற்றைக் கொண்டு செல்கின்றனர்'' (Macrindle. Anc. Ind. p. 95) மெகஸ்தனிஸ் கூறும், அக்கொதி, திபேத்தில் இப்போதும் நடைபெறுவது போலும் பொன் காய்ச்சுவதைக் குறிக்கும்.

15. அர்த்தசாத்திரம் vii : 12

16. அதர்வ வேதம் v 5–7

17. ரிக் வேதம் 1 : 191 : 4

18. கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், பாண்டிய நாட்டிலிருந்து கலிங்க நாட்டுக் காரவேல அரசர்களுக்கு, யானைகள் அனுப்பப்பட்டன. இது, இவ்விலங்கு வகையிலான நனிமிகப் பழங்கால வாணிகத்தின் தொடர்ச்சியேயல்லது வேறன்று.

19. ரிக்வேதம் 4 : 32 : 23

20. பண்டை இந்தியாவில் வாழ்க்கை முறை; (Life in Ancient India) பக்கம் : 16; இந்திய வரலாற்றுக் காலாண்டு வெளியீடு. (Indian Historic Quarterly) பாகம் : 1 · பக்கம் : 695 ஆரியத்துக்கு முந்திய தமிழர் நாகரீகம் (pre-Aryan Tamil culture) பக்கம் 80.

21. ரிக் வேதம் : 83: 4 : 1. 32- I: 2 : 24 : 9

22. ரிக்வேதம் 2 : 24 : 6 ; 4 : 58 : 4

23. ரிக்வேதம் 1 : 93 : 4

24. ரிக்வேதம் 67 : 6

25. "பரதர் மலிந்த மாடம்'' (பெரும்பாணாற்றுப் படை : 323

26. அய்த்ரேய ஆரண்யகா ; III : 1 : 1 திருவாளர் கெய்த் அவர்களின் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழக, வரலாற்று நுணுக்கங்கள் (Anecdote Oxoniensa, Keith)

27. இந்த மாகிஸ்மதி நகரம், இக்கால கட்டத்திற்கு நெடுங் காலத்திற்கு முன்னர், விசுவாமித்திரருக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பு, வாழ்ந்திருந்த மகிஸ்மான் என்பவனால் கட்டப்பட்டது : இது, நாகர்களால் எடுத்துக்கொள்ளப்பட்டு, அவர்களிடமிருந்து அர்ஜுனனால் கைப்பற்றப்பட்டிருக்க வேண்டும்.

28. திருவாளர் பர்கிதர் அவர்களின் "பண்டை இந்தியாவின் வரலாற்று மரபுகள் (Ancient Indian Historical Tradition) 265–266 புராணங்களில் வருவன எல்லாம், அவருடைய அடிக் குறிப்பில் முழுமையாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

29. J. R. A. S. 1914) பக்கம் 285. அயோத்தியா அரசன் அனரண்யனோடு போரிட்ட மிகப் பழங்காலத்தைச் சேர்ந்த இராவணன் ஒருவனும் இருக்கிறான். திருவாளர் பர்கிதர் அவர்களின், "பண்டைய இந்தியாவின் வரலாற்று மரபுகள்" என்ற நூலின் 263 பக்கம்...... காண்க.

30. Pargiter, Ancient Indian Historical Tradition. page : 257

31. Pargiter Ancient Indian Historical Traditions' page : 190-200

32. Charmichael Lectures 1928 page : 21

33. என்னுடைய ஆரியத்துக்கு முந்திய தமிழ் நாகரீகம் என்ற நூலைக்காண்க.

34. Carmichael Lectures : 1918. page : 2

35. Pargiter. page : 269

36. இருக்குவேவம் : 8 : 5 . 37

37. இருக்குவேதம் : 9 : 102: 2

38. Vide: Sitanath pradhan, Chronology of Ancienr India, Chapter, I, 12 : 18.

## அதிகாரம் : III

# தொடக்க காலத்தில் வெளிநாட்டு வாணிகம்

### தென் இந்தியாவும் சுமேரியாவும் :

நெய்தல் அல்லது கடல் சார்ந்த நிலத்தில், வாணிகம், தேவையை அடிப்படையாகக் கொண்டே தொடங்கப் பெற்றது என்பது, முதல் அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டது. தமிழ்நாட்டின் பெரும்பகுதி கடலுக்கு அணித்தாக உளது. அக்கடற்கரை மாவட்டங்களில், குடிவாழ்வார், தொடக்க காலத்திலிருந்தே பரதவர், அல்லது கடலோடிகள் என அழைக்கப்பட்டனர். தென்னிந்தியக் கடற்கரையின ரான பரதவர், பருவக்காற்றின் காலந்தவறாமையினைத், தொடக்கத்திலேயே கண்டு பிடித்திருப்பர். உண்மையில், பருவக்காற்றுக் காலந்தவறா இயற்கையின் இயல்பையும், அதிலிருந்து கடன் மேற்செலவு இயல்பாகிவிடும் உண்மையை யும் புரிந்து கொள்ளாமல், மலையாள நாட்டில், ஓராண்டு காலம் வாழ்வதுகூட உண்மையில் இயலாது. பருவக் காற்றின் அனுகூலத்தைப் பயன்படுத்திக் கொள்ளாத போதும், மாலுமிகள், கரையோரமாகவே, ஆப்கனிஸ்தான் பர்ஷியக் கடற்கரை வரையும் செல்லக்கூடும். அண்மையில் உருவான ஒரு வரலாற்றுத் தத்துவப்படி, மெஸபடோமியப் பள்ளத்தாக்கில், பழைய சுமேரிய நாகரீகத்தைத் தோற்று வித்ததாகக் கூறப்படும், அப்பள்ளத்தாக்கின் தமிழர் குடியேற்றத்திற்கு, நனி மிகப் பழைய காலத்தில், கடல்வழி, நில வழிகளில் நடைபெற்ற விரிவான பயணம் மட்டுமே வழி செய்திருக்க முடியும். திருவாளர் எச். ஆர். ஹால் என்ற வரலாற்றுப் பேராசிரியர் ''சுமேரியர்களின் மொழி, செப்டிக், ஆரியம் மற்றும் பிற மொழிகளிலிருந்து வேறுபடுவது போலவே, அவர்களின் உருவச்சிலை, மற்றும் புடைப்பு ஓவியங்களில் அழுத்தமாகப் பதிக்கப் பெற்றிருக்கும், அவர்

களின் இனச் சார்பு வாய்ந்த, மாதிரிப் படிவங்களும, அவர்களைச் சுற்றி வாழ்ந்திருந்த இனத்தவரின் மாதிரிப் படிவங்களிலிருந்து வேறுபடுகின்றன. ஐயத்திற்கு இடன் இன்றி, உறுதியாக மாதிரிப் படிவத்தில், அவை இந்திய இயல்புடையவே. இன்றைய சராசரி இந்தியன் ஒருவனுடைய முகஅமைப்பு ஒரு சிறிது ஐயத்திற்கும் இடமில்லாமல், முழுக்க முழுக்க ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவராய, அவனுடைய திராவிட முன்னோர்களின் முக அமைப்பேதான். திராவிடரை வெற்றிகொண்ட ஆரியர்களின் முகஅமைப்பு, இன்றைய கிரேக்கர் அல்லது இத்தாலியரிடையே உள்ளது போலவே, இன்றைய இந்தியர்களிடையேயும், நாகரீக வளர்ச்சிக்கு முற்பட்ட காலத்து முக அமைப்பின் இயல்பு போலவே, பண்டைய ஆரியருக்கு முந்திய தான முக அமைப்பு அழியாமல் அப்படியே உளது. பழைய சுமேரியரின் நினைவுச் சின்னங்களிலிருந்து நாம் மதிப்பிடுவது போலவே இந்தியாவின், இத்தகு திராவிட இனச் சார்பான உருவ அமைப்போடுதான், சுமேரியன், முழு ஒருமைப்பாட்டினைக் கொண்டுள்ளான். திராவிட மொழிகளை, இன்றும் வழங்கும் தென்னாட்டு இந்துவை, அவன் பெரிதும் ஒத்துள்ளான். நிலவழியாக, ஒருவேளை, கடல் வழியாகவும், பர்ஷியாவின் ஊடே, அந்த இரண்டு ஆறுகளும் ஓடும் பள்ளத்தாக்கிற்குச் சென்ற இந்தியப் பழங்குடியைச் சேர்ந்தவர்தாம், சுமேரியர் என்பது, எவ்வகையிலும், நம்பக்கூடாத ஒன்று அன்று. (இவ்வாக்கியத்தில் வரும் 'நிலம்' 'கடல்' என்ற சொற்கள் குறித்த அடிக்குறிப்பில், அவர் 'பலுஜிஸ்தானத்தில், பிராஹுகி என்ற திராவிட இனமக்களை இன்று நாம் பெற்றுள்ளோம். திராவிட இனத்தவர் போன்றவர், தென் பர்ஷியாவில் காணப்படுகின்றனர். பாபிலோனியாவையும் இந்தியாவையும் இணைக்கும் இணைப்பாகச் செயல்பட்ட, பழைய பர்ஷியாவின், ஆரியரல்லாத மக்கள் (கிரேக்க மக்கள் இனத்தைச் சேர்ந்த அனரியகோயி), அதே இனத்தைச் சேர்ந்தவர்தாம் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை'. 'திருவாளர் பெரோசுஸ் அவர்களால் எடுத்துக்காட்டப் பெற்ற மனித மீனுகிய "கேனெஸ்" பற்றிய பழங்கதை, கடலுக்கு அப்பாற்பட்ட, நாகரீகம்

மிக்க ஒரு நாட்டோடு கடல்வழித் தொடர்பு இருந்தது பற்றி வாதிடுகிறது. கேனெஸ், நாகரிகக் கலையைத் தன் உடன் கொண்டு, பர்ஷியன் வளைகுடாவை நீந்திக் கடந்து, தனி மிகப் பழைய சுமேரிய நகரங்களை (எரிடு நகரும், பிற நகரும்) அடைந்தான் என்று கூறியுள்ளார்.] இந்தியாவாம், அவர்கள் தாயகத்தில்தான், (அது, சிந்துநதிப் பள்ளத்தாக்காதல் கூடும்), அவர்கள் நாகரீகம் வளர்ச்சி பெற்றதாக நாம் கூறுகிறோம். அவர்களின் எழுத்துக்கலை அங்குதான் முதன்முதலில் கண்டு பிடிக்கப்பட்டு, முழுக்க முழுக்க, படிவவடிவாம் நிலையிலிருந்து எளிமையும், சுருங்கிய வடிவும், உடையதாக வளர்ந்திருக்கக் கூடும். அது, பாபிலோனியாவில், பிற்காலத்தில் மென்மை யான களிமண்மீது, நாற்சதுர வடிவிலான முனையினை யுடைய எழுத்தாணிகொண்டு எழுதப்பட்டதால், தனிச் சிறப்பு வாய்ந்த ஆப்பு வடிவின் தோற்றத்தைக் கொண்டு விட்டது. வழியில் தங்கள் நாகரீகத்தை "எலம்" (Elam) எனும் இடத்திலும் விட்டுச் சென்றனர். இதுவே, சுமேரிய நாகரீகத் தோற்றத்தின் நம்பத்தக்க தத்துவமாகத் தெரி கிறது. இன்றைய எழுத்தாளர்களால், உறுதிப்படுத்த, போதிய நேரான அகச்சான்று இல்லாத, ஆனால் நிகழக் கூடியதாகத் தெரியும் ஒரு தத்துவமாகவே அளிக்கப்படுகிறது என்பது தெளிவாகப் புரிகிறது" என்று கூறுகிறார்.[1]

## மொகஞ்சோ-தரோ

திருவாளர் ஆல்ஸ் அவர்களின் நூல் வெளிவந்த பன் னிரண்டு ஆண்டுகளுக்குள், அரப்பா, மொகஞ்சோ-தரோ அகழாய்வின் பயனாக அவர் தத்துவத்தை அரண் செய்வதற் கான நேரிடை அகச்சான்று"—(Direct Evidence to back) தரப்பட்டு, அவர் கருத்துப்படி, எது "நடக்கக்கூடியதாகக்" கருதப்பட்டதோ, அது "நடந்ததாகவே" ஆகிவிட்டது. அவர் கூறிவந்த கையெழுத்துப் படிவங்களுக்கான மாதிரிப் படிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. சிந்துவெளிப் பழம்பெரும் நாகரீகத்தை விளக்க வல்ல நினைவுச் சின்னப் பழம் பொருள்கள், போதிய அளவு அகழ்ந்து எடுக்கப்பட்டன.

"வெட்டுக் குழிகள் செம்பொடுகள் இணைந்த கட்டுமான காலத்தைச் சேர்ந்த, இடையீடின்றித் தொடர்ந்த பல அடுக்குக் கட்டிடங்கள் இருந்ததை வெளிப்படுத்துகின்றன". கரடு முரடான திருந்தா வேலைப்பாடும், தொன்மையை வெளிப்படுத்தும் தோற்றமும் வாய்ந்த சில உருவங்கள் மொகஞ்சோ-தரோவில் கண்டுபிடிக்கப்பட்டன. ஆனால், "எடுப்பான மூக்கு, கண்களுக்குக் களிமண்ணாலான தட்டிய சிறுகுண்டுகளைப் பொருத்துவது ஆகிய இவை, மெஸபடோமியாவில் மிகப் பழைய காலத்தைச் சேர்ந்த இவைபோலும் உருவங்களின் தனிச்சிறப்பு ஆகும்"* சிந்துவெளிப் பழம் நாகரீகத்தின் வடிகாலே, சுமேரிய நாகரீகம் என்பதற்கான தெளிவான அகச் சான்றுகளாம். இக் கண்டுபிடிப்புகளே அல்லாமல்' இவைபோலும் பல கண்டுபிடிப்புகள் மொகஞ்சோ-தரோவில் கண்டுபிடிக்கப்பட்ட எழுத்துகள் முடிவாகப் படிக்கப்பட்டுப் பொருளுணரப்பட்டபோதே கிடைக்கும்.

**பாபிலோனியாவுடன் பண்டை வாணிகம் :**

சிந்துவெளிப் பள்ளத்தாக்கிற்கும், சுமேரியாவுக்கும் இடையில் போக்குவரவுத் தொடர்பு இருந்திருக்குமேயானால், அதைவிடப் பெரிய அளவிலான போக்குவரத்துத் தொடர்பு இவ்விரு நாடுகளுக்கும், தென் இந்தியாவுக்கும் இடையில் இருந்திருக்க வேண்டும். இதற்கான அகச் சான்றுகள் திருவாளர் சாய்ஸி அவர்கள் குறிப்பிடும் இரு உண்மைகளில் காணப்படுகின்றன. ஒன்று, கி. மு. 4000 ஆண்டில், சுமேரிய மன்னர்களின் தலைமை இடமாம் ஊர் (முகையீர்) நகரின் அழிபாடுகளில், இந்தியத் தேக்கு மரங்கள் காணப்பட்டன என்பது; மற்றொன்று, மெல்லிய ஆடையைக் குறிக்கும் "சிந்து" என்ற சொல், பழைய பாபிலோனியன், உடைப் பட்டியலில் இடம் பெற்றுள்ளது என்பது (Sayce: Hibbert Lectures P. P. 136-138) இச் சொல்லில் "எஸ்" என்ற எழுத்து மறையாமல் இடம் பெற்றிருப்பது, சிந்து என்னப்படும் அம் மெல்லிய ஆடை, மெஸபடோமியாவுக்குப் பர்ஷியா வழியாகச் செல்லவில்லை என்பதை உறுதி செய்

கிறது. அது, பர்ஷியா வழியாகச் சென்றிருந்தால் ''சிந்து'' என்ற ஆற்றின் பெயரிலிருந்து வந்த இந்நாட்டின் பெயர் ''ஹிந்து'' என ஆனது போல, அச்சொல்லின் மொழி முதல் எழுத்தாகிய ''எஸ்'' பர்ஷிய வழக்காற்றில் ''எச்'' என ஆகியிருக்கும். ஆகவே, இம் மெல்லிய ஆடை, தமிழ்நாட்டுக் கடற்கரையிலிருந்து, பர்ஷியன் கடற்கரைக்குக் கடல் வழியாக, நேரிடையாகச் சென்றது என்றும், மெல்லிய ஆடையைக் குறிக்கும் பாபிலோனியச் சொல்லாகிய ''சிந்து'' இதுவரை கருதிவந்ததுபோல், ஆற்றின் பெயரிலிருந்து பெறப்பட்டது அன்று; மாறாக, துளு, கன்னட மொழிகளில் ஆடையின் ஒரு துண்டு எனும் பொருளில் இன்றும் வழங்கி வருவதும், கொடி எனும் பொருளில் ''சிந்து'' என்ற தமிழ்ச் சொல்லால் பிரிதிநித்துவம் செய்யப்படுவதுமாகிய பழைய திராவிடச் சொல் ''சிந்து'' என்பதிலிருந்தே பெறப்பட்டது என்றும் நான் முடிவு செய்கின்றேன்.

### எகிப்துடன் பண்டை வாணிகம் :

பெரு வாணிகத் தொடர்பு, தமிழ்நாட்டிற்கும், மெஸப டோமியப் பள்ளத்தாக்கிற்கும் இடையில் மட்டுமே இருந்து விடவில்லை. தென்னிந்திய வாணிகம், கி. மு. 3000ல், எகிப்து வரையும் பரவுயிருந்தது என்பதற்கான சில அகச் சான்றுகளும் உள. திருவாளர் ஸ்காப் அவர்கள், ''கிரேக்கர் கள், தங்கள் காட்டுமிராண்டித் தன்மையிலிருந்து விடுபட்டு வெளிப்படுவதற்கு ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, எகிப்தும், பழைய இந்திய நாடுகள் பலவும் நிலைபேறுடைய வாகிவிட்டன. தங்கள் தங்கள் நாட்டு விளை பொருள் களையும், செய்பொருள்களையும் கைம்மாற்றிக் கொள்ளு- ஒரு பெரு வணிக முறை, பொருள்களை மாற்றிக்கொள்ளு மைய இடத்தைப் பர்ஷிய வளைகுடாவின் தலைப்புக்கு அணித்தாகக் கொண்டு, வளர்ந்திருந்தது. அப்பகுதி மக்களாம், பல்வேறு அராபியப் பழங்குடியினர், குறிப்பாகபு புரிந்துகொள்ளமாட்டாப் புதிராக விளங்கும், சிவப்

மனிதராம் பொயினீஷியப் பழங்குடியினர்தாம், அப்பொருள் களைக் கொண்டு சென்றவர்; அல்லது பண்டமாற்றுச் செய்த இடைத்தரகராவர். இந்தியாவில் நாகரீக வளர்ச்சி, யூப்ரடீஸ், ஆப்பிரிக்கா, மற்றும் இடம் விளங்காக் கீழை நாடுகளுக்குச் சென்று வாணிகம்புரிய, விரைந்து சுறு சுறுப் பாகச் செயல்படும் வாணிகக் கப்பற்படை ஒன்றை உருவாக்கி விட்டது. அராபிய வணிகர்கள், ஆப்பிரிக்காவில், இந்திய வணிகர்கள் இருப்பதை மேலெழுந்தவாரியாகப் பொறுத்துக் கொண்டனர். ஆனால், விலைமதிப்பற்ற நவமணிகள், இலவங்கம்; மிளகு, சாதிக்காய் போலும் உணவுக்காம் மணப் பொருள்கள், மேலும் மேலும் பெருகிக்கொண்டேயிருக்கும் எகிப்தியக் கடவுள் வழிபாட்டிற்கான நறுமணப்புகைஎழுப்பும் சாம்பிராணி போலும் மெழுக்குகள் பற்றிய, மிகுவருவாய் தரும் வாணிகத்தைச், செங்கடற்பகுதிக்கண் தங்கள் கையி லேயே வைத்துக் கொண்டனர். எகிப்திய அரசர்களின் செல்வ வளத்திற்குக் கூறப்படும் காரணப்படி, இதுவே, அவர்களின் பெரிதும் விழிப்போடு காத்துவந்த தனிச்சிறப்புரிமை. இதன் அடிப்படை மீதுதான் அவர்கள் வாழ்ந்தார்கள்; வளம் பெற்றார்கள். ஏடன் வளைகுடாவின் இருபக்கங்களிலும் உள்ள துறைமுகங்களில், இந்திய வணிகர்களிடமிருந்து, மஸ்லின் மணப் பொருள்களாம் இந்தியப் பண்டங்களை அவர்கள் விலை கொடுத்து வாங்கிக் கொண்டனர்; அல்லது பெற்றுக் கொண்டனர். அடுத்து, அப்பொருள்களைச் சுமந்து கொண்டு மேட்டு நிலங்களைக் கடந்து நைல் நதியின் தலைப் பிற்குச் சென்றனர்: அல்லது செங்கடல் வழியாகவும்; பாலை வனத்தைக் கடந்தும் "தேபெஸ்" (Thebes) அல்லது "மெம்பிஸ்" (Memphis) பகுதிக்குச் சென்றனர் என்று கூறு கிறார்.[2] அராபிய இடைத்தரகர்களால், எகிப்துக்கு எடுத்துச் செல்லப்பட்ட பொருள்கள் தென்னிந்தியப் பொருள்களாம் என்பதையும், தென்னிந்தியப் பரத வர்கள் அப்பண்டங்களைத் தம்முடைய படகுகளில் ஏடனுக் கும், கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரைக்கும் கொண்டு சென் றனர் என்பதையும் இணைத்துக் கொள்ளலாம்.

"கி. மு. 2600ல் ஆட்சி புரிந்திருந்த, எகிப்திய அரச மரபில் நான்காவது மரபில் வந்த மெர்னெரே (Mernere) என்ற அரசரின்கீழ், உயர் குடிமகனாகச் சிறப்புற்றிருந்த, அசுவான் (Asswan) இனத்து அர்க்ஹூப் (Harkhwf) என்பானின், கல்வெட்டுகளில், கீழ்க்காணும் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன :— 'நறுமணப் புகை தரும் மெழுக்கு, கருங்காலிமரம், நவதானியம், சிறுத்தைப் புலி, தந்தம், தடிகள் மற்றும் சிறந்த பொருள்களைக் கொண்ட பொதி மூட்டைகள் ஏற்றப்பட்ட 300 சுழுதைகளோடு தெற்கு நுபியாவில் (Southern Nubja) உள்ள 'யாம் (Yam) நாட்டிலிருந்து இறங்கி வந்தேன்' இதில் கூறப்படும் கருங்காலி, ஆப்பிரிக்கக் கருங்காலி ஆகலாம். ஆப்பிரிக்கக் கருங்காலியைவிட உயர்தரமானதும், தொன்மைக் காலத்தில் இந்தியாவிலிருந்து, பர்ஷியன் வளைகுடாவிற்கு எடுத்துச் செல்லப்பட்டு, அங்கிருந்து, அராபியர்களால்' ஆப்பிரிக்கக் கடற்கரைக்குக் கொண்டு செல்லப்பட்டு அங்கிருந்து கி. மு. 1500 போலும் பிற்காலத்தில், மேலை நைல் நதிமூலம் எகிப்துக்குக் கொண்டு செல்லப்பட்டதுமாகிய இந்தியக் கருங்காலியாகவும், இது இருக்கக்கூடும்; இத் தேதிக்குப் பின்னர் (கி. மு. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த) திருவாளர் தியோபிரஸ்டஸ் (Theophrastus) என்பார், இம்மரத்தை இந்தியாவிற்கு மட்டுமே உரியதாக்குமளவும், திருவாளர் விர்ஜில் (Virgil) என்பவர், (Georgics ii-116-117) இந்தியாவிற்கே உரிய தனிச்சிறப்பு வாய்ந்ததாகக் கூறுமளவும், இந்தியக் கருங்காலி, பெருஞ்சிறப்பு வாய்ந்ததாகிவிட்டது"[3]. பின்வரும் அதிகாரம் ஒன்றில் நவதானியங்களும், சிறுத்தைப்புலியும், ஆப்பிரிக்காவுக்குப் பிற்பட்ட காலத்தில் ஏற்றுமதி செய்யப்பட்டன என்பது விளக்கப்படும். ஈண்டுக் குறிப்பிடப்பட்ட இவ்விரண்டும் தென்னிந்தியாவிலிருந்தே சென்றன ஆதலும் கூடும்.

கி. மு. 26ஆம் நூற்றாண்டில், ஆறாவது அரச குலத்தைச் சேர்ந்த இரண்டாம் பெபி (Pepi) என்பானின்கீழ்ப் பணிபுரிந்திருந்த டைகிரே (Tigre) எனும் மேட்டு நில ஆட்சிப்

பொறுப்புக்கு அனுப்பப்பட்ட அரசு குடும்பத்து அலுவலர் செப்னி (Sebni) என்பான், வாவெட் (Wawat) உத்தெக் (Uthek) பகுதிகளுக்கு எவ்வாறு இறங்கிச் சென்று இரி (Iri) என்ற அரசு ஊழியனை மேலும் இரு ஊழியர்களோடு நறுமணப் புகைதரும் மெழுக்கு உடைகள் (பெரும்பாலும் பருத்தி உடைகள்) யானைத்தந்தம் விலங்கின் தோல் ஆகிய பொருள்களைச் சுமந்துவர அனுப்பி வைத்தான் என்பதைக் குறித்து வைத்துள்ளான்.[4] நனிமிகப் பழமை வாய்ந்த அந் நாட்களில் உலகில் தென்னிந்தியா ஒன்றில்தான் பருத்தி ஆடைகள் நெய்யப்பட்டன.

மேலே குறிப்பிட்ட தந்தம் ஆப்பிரிக்கத் தந்தமாம், ஆனால் அது இந்தியத் தந்தமாகவும் இருக்கக்கூடும். இந்தியத் தந்தம், வேறு எந் நாட்டுத் தந்தத்தினும் மிகச் சிறந்து விளங்கினமையால் தொடக்க காலத்திலிருந்தே அது மிக அதிக மாக வேண்டப்பட்டு வந்துளது. மேலும் யானைகளைக் கொல்வது கொடுவிலங்குகள் நிறைந்த, பருமரங்களால் அடர்ந்த கொடுநோய்களின் நிலைக்களமாம் ஆப்பிரிக்கக் காடுகளினும் இந்தியக் காடுகளில் எளிது. எகிப்திய அரசர் களுக்கு ஆப்பிரிக்கத் தந்தங்களைக் கொடுத்துவந்த அபிசீனிய சோமாலிலாந்து யானை வேட்டையாளர், வாய்ச்சி, கோடரி, வாள் முதலாம் படைக்கலங்களையும் பயன்படுத்தினர். அந் நாட்களில் இரும்புத் தொழிற்கருவிகளை ஏற்றுமதி செய்யக் கூடிய நாடு இந்தியா ஒன்றுதான்; அவற்றிற்குப் பதிலாக இந்தியா ஆப்பிரிக்காவிலிருந்து இந்நாட்டில் வேதகாலத்தில் பெரிதும் பயன்படுத்தப்பட்டு நறுமணப் புகைதரும் பொருள்கள், இனிய மணம் கமழும் மரப்பிசின்களை இறக்கு மதி செய்து கொண்டது. அடுத்துவந்த காலங்களில் இந்தியா விலிருந்து இரும்பு ஏற்றுமதி செய்யப்பட்டதற்கான எழுத்தா வணம் இருக்கிறது. அவ்வாணிகம் அந்நாட்களிலும் முந்திய தொடக்க நாட்களிலும் இருந்து வந்தது என உறுதியாக நம்பலாம்.

பண்டமாற்றிற்காகத் தொலை நாடுகளுக்குச் சென்று வந்த மக்களை வேதமந்திரங்கள் குறிப்பிடுகின்றன.[5]

பொருளீட்ட விரும்பிக் கப்பல்களைக் கடலில் போக்கினர்.[6] "வணிகக் குழுக்கள் விற்பனைக்காகவும் பண்டமாற்றிற்காகவும் நூறு துடுப்புகளைக்கொண்ட கப்பல்களில் கடல்மேல் சென்றனர்.[7] இது தமிழர் வாணிகத்தைக் குறிக்கவில்லை என்பது உண்மையாகலாம். ஆனால் தமிழர்கள் தொடக்க காலத்திலிருந்தே மிகப் பெரிய கடல் வாணிகத்தை வளர்த்து வந்திருந்தனர் ஆதலாலும், வட நாட்டு ஆரியர் இத் தொடக்க காலத்தில் மாலுமித் தொழில் தெரிந்தவரல்லர் ஆதலாலும், அவ்வடநாட்டு ஆரியர் தொலை நாடுகளுக்குச் சென்று வாணிகம் புரிந்து வந்தனர் என்றால் தென்னிந்திய மாலுமிகளே அவர்களுக்கு அத் துறையில் ஆசிரியர்களாதல் வேண்டும்.

**பண்டை வாணிகம் குறித்துத் திருவாளர் கென்னடி:**

சில வரலாற்று ஆசிரியர்கள் இவ்வாணிகம் இருந்தமைக்கு எதிராக வாதிடவும் செய்துள்ளனர். அவர்களுள் தலையாயவர் திருவாளர் கென்னடி.[8] அப்பொருள் பற்றிய தம்முடைய கட்டுரை ஒன்றில் எகிப்துடனோ அல்லது அஸிரியாவுடனோ, கி. மு. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னர் இந்திய வாணிகம் இருந்தது என்பதை மறுப்பதற்தாகத், தம்முடைய பரந்த கல்வியால் பெற்ற அத்துணை ஆதாரங்களையும் செலவிட்டுள்ளார். வணிகர்கள் கடல் பயணம் கடலில் கலம் கவிழ்ந்து போதல் ஆகியனவற்றைக் குறிப்பிடும் ரிக்வேத அதர்வவேத மந்திரப் பகுதிகளை அவர் அறவே புறக்கணித்துள்ளார். ஆனால் இந்தியமக்கள் சிறப்பாகக் கடற்கரையை அடுத்து வாழ்மக்கள் கடல் வாழ்க்கையில் பழகிவிட்டவர்கள் என்பதை அவர் ஒப்புக் கொள்கிறார். கட்டடப் பணிக்குத் தேவைப்படும் உறுதிவாய்ந்த மரங்களையும், பழங்காலத்தில் தெய்வ வழிபாடுகளின் போது மிகப்பெரிய அளவில் பயன்படுத்தப்பட்ட நறுமணத்தைலங்களை வடிக்க உதவும் இனிய மணம் கமழும் மரங்களையும் இந்தியா பெருமளவில் உற்பத்தி செய்தது என்பதை அவரால் மறுக்க இயலாது. எகிப்தியர்களும் அஸ்ரியர்களும், இந்தியா பெருமளவில்

கொடுத்து உதவக் கூடிய லவங்கம் மிளகுபோலும் மணம் தரும் உணவுப் பொருள்களுக்காகவும், முத்து மற்றும் நவரத்தினங் களுக்காகவும் ஆர்வத்தோடு காத்திருந்தனர் என்பது நன்கு தெரிந்த ஒன்று. புதிய கற்காலம் முதலாகவே இந்தியர்கள் பருத்தியாலான ஆடைகளைப் பெருமளவில் நெய்தனர்; அவற்றிற்கு வண்ணமும் ஊட்டினர். நெய்யவும் மெருகு ஏற்றவும் துணை செய்யவும் கல்லால் ஆன மழமழப்பாகும் கல் உட்படப் பல்வேறு தொழிற்கருவிகள் கண்டு பிடிக்கப் பட்டிருப்பது இதை உறுதி செய்யும். இவ்வளவு இருந்தும் திருவாளர் கென்னடி அவர்கள், ஒரு பக்கம் இந்தியா மறு பக்கம் எகிப்து அஸிரிய நாடுகள் ஆகிய இவற்றிற்கிடையில் நடைபெற்றிருந்த பழங்கால வாணிகத் தொடர்புக்கான, இவ்வகச் சான்றுகளைக் காண மறுத்துக், கண்களை மூடிக் கொள்கிறார். பாபிலோனிய ஆரிய மக்கள் வழங்கிய ஆப்பு வடிவ எழுத்து முறை கொண்ட அக்கேடிய மொழியும் (Accadian) எபிரேய மொழியும் (Hebrew) அராபிய மொழியும் சமஸ்கிருத தமிழ் மொழிகளிலிருந்து கடன் வாங்கிய வாணிகப் பொருள்களைக் குறிக்க வழங்கும் சொற்கள் அளிக்கும் அகச்சான்றுகளின் மதிப்பை அவர் புறக் கணிக்க முயல்கிறார். ஜெர்மானிய வரலாற்றுப் பேராசிரியர் களால் சான்றுகாட்டி நிறுவப்பட்ட அஸிரிய மக்களோடு ஆரியர்கள் கொண்டிருந்த தொடர்பினை உறுதிசெய்யும் வேத அகச் சான்றுகளைச் சிறிது சிறிதாக இல்லையாக்க முயலுகிறார். இடைத் தரகர்களால், கடல் வாணிகம் பரந்த அளவில் வளர்ச்சி பெறுவதற்குத் தடையாக நிற்கக் கூடிய சில இடையூறுகளைப் பெரிது படுத்துகிறார். இறுதியாக அதற்கான போதிய வலுவான அகச் சான்று இல்லை என முடிக்கிறார்.

**திருவாளர் ஸ்காப் அவர்களின் மறுப்புரை:**

பெரிபுளூஸ் நூலின் அமெரிக்கப் பதிப்பாசிரியராகிய திருவாளர் ஸ்காப் அவர்கள், திருவாளர் கென்னடி அவர்களின் வாதங்களைப் பின்வருமாறு முடிந்த முடிவாக மறுத்துள்ளார்:

''எகிப்தியர்களின் கடல் வாணிகப் பயணத்தை, முழுக்க முழுக்க உள்நாட்டு வாணிகமாகக் கருதியும், எபிரேய சமய வழிபாட்டு நூல்களில் அவர் காணும் பழம் பெரும் வாணிகத்தில் இடம் பெற்ற பண்டங்கள், அவ்வாணிகம் நடைபெற்ற வழிகள் பற்றிய எண்ணற்ற குறிப்புகளை, ஏழராவின் (Ezra) வருகையைத் தொடர்ந்து மேற்கொண்ட மறு பதிப்பின் விளைவாம் என முடிவு கட்டியும் எகிப்தியர்களின் பண்டைய கடல் வாணிகப் பயணத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்து விட்டார். ஏழரா அவர்களின் எபிரேய சமய வழிபாட்டு நூல்களின் மறுபதிப்பு என்ன கூறினும், ஒத்த காலத்தைச் சேர்ந்த எகிப்திய ஆவணங்களில் ஏறத்தாழ அதே வாணிகப் பண்டங்கள்தாம் விளக்கப்பட்டுள்ளன. இந்த உண்மைகள் ஏழராவின் காலத்திற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர், இந்திய மூலம் வாய்ந்த வணிகப் பண்டங்கள் சோமாலி கடற்கரைக்கும் நைல்நதிக்கு அப்பாற்பட்ட மேட்டு நிலங்களுக்கும் கொண்டு சென்று விற்கப்பட்ட ஒரு வாணிகம் நடைபெற்றதை உணர்த்துகின்றன. இவைபோலும் கருத்துகள் இடைவழியில் பொதுவான சந்திப்புகளில் வணிகப் பண்டங்கள் கைம் மாறுவது நடைபெறாமலே இடையீடின்றித் தொடர்ந்து நடைபெற்ற வணிகப் பயணத்தை யூகிக்கின்றன. ஆனால், நாகரீகவளர்ச்சிபெறா, நனிமிகப் பழைய காலத்திய வாணிகம் ஒரு பழங்குடியினரிடமிருந்து ஒரு பழங்குடியினர்க்கும், ஒரு கடல் துறை நகரிலிருந்து பிறிதொரு கடல்துறை நகருக்குமாகவே நடைபெற்றது.''[3]

---

(1) H. R. Hall, The Ancient History of the Near East; pages 173-4.

* Archaeological Survey of India, Annual Report 1925-26 Pages 72-98.

(2) Periplus P: 3.

(3) Sehoooff's Periplus Page 61. 153 Warmington - Commerce between the Roman Empire and India P: 213.

(4) Schoff's Periplus : page : 121.

(5) A. V. iii 15.4.

(6) R. U. I. 48. 3.

(7) R. V. I. 116. 5 A. V. I. 56-2 A. V. III. 15-4.

(8) Journal of the Royal Asiatic Society 1898-Page 248-297.

(9) Scoffs priplus Page 228.

## அதிகாரம் : IV

# இராமனும் தென் இந்தியாவும் (கி. மு. 2000)

**இராமாயண வளர்ச்சி :**

தென்னிந்தியா முழுவதையும், மக்கள் கவனத்திற்கு, நிச்சயமாக, இராமகாதைதான் முதன் முதலில் கொண்டு வந்தது. மகாபாரதம், இரகு வம்சம், மற்றும் பிற நூல்களில், இராமகாதை பற்றிய, பெரும்பாலும் ஒன்றற்கொன்று தொடர்பில்லாத நிகழ்ச்சிக் குறிப்புகள் பல இடம் பெற்றிருந்தாலும், இராமாயணத்தில்தான், அக்கதை, முழுமையாக, விளங்க உரைக்கப்பட்டுள்ளது. இராமாயணம் அளிக்கும் அகச் சான்றுகள், பல்வேறு காரணங்களால் மிகவும் விழிப்போடு ஏற்றுக் கொள்ளப் படல் வேண்டும். இராமன் சம காலத்தவரான ஒரு முனிவரும், மருட்சியுள்ள மன நிலையில், கணவனால் துரத்தப்பட்ட சீதைக்குப், புகலிடம் அளித்து அவள் மகன்களுக்குக் கல்வி அறிவு புகட்டி, தாங்கள் கல்வி பெற்று வளர்ந்து வந்த ஆசிரமத்திற்குத் தங்கள் தந்தை வந்தபோது, அத்தந்தைக்கு எந்தப் பாக்களிலிருந்து சில பாடிக் காட்டினார்களோ, வந்தப் பாடல்களை அவர்களுக்குக் கற்பித்துக் கொடுத்தவருமாகிய வால்மீகியின் நூலாக, அது உரிமை கொண்டாடுகிறது. ஒரு வகையில், அறிந்த நிகழ்ச்சிகளிலிருந்து பெறலாகும் உண்மைகளால் உறுதிப்படுத்தப் படுவதல்லது, வேறு வகையில் உறுதி செய்ய இயலாதனவாய இராமாயணம் அளிக்கும் செய்திகளை, நம்ப மறுக்குமாறு நம்மை வற்புறுத்தும் தனிக்காரணம் எதுவும் இல்லை. அதற்கு மாறாக நாம் இப்போது பெற்றிருக்கும் இராமாயணம், முழுக்க முழுக்க வால்மீகி இயற்றிய அதே இராமாயணந்தான் என்பதை நம்பவும் இயலாது. அதற்கு ஒரு காரணம், இராமன் வேத காலத்தின் முக்கூற்றில், இரண்டாம் கூற்றின் இறுதிக்

காலத்தில் வாழ்ந்திருந்தான். அக்காலத்தில் இயற்றப்பட்ட தோத்திரப் பாடல்கள், அவற்றிற்கு முற்பட்டனவும், பிற்பட்டனவும் ஆகிய காலத்திய பாடல்களைப் போலவே, வேத வழக்கு மொழியில் உள்ளன. ஆகவே இராமர் காலத்து இராமாயணமும் அதே வேத வழக்கு மொழியில் "சந்தாஸ்" எனப், பாணினி பெயரிட்டழைக்கும் மொழியில், அல்லது அக் காலத்தில் வழக்கில் இருந்த "பிராக்கிருத" மொழியில் இருந்திருக்க வேண்டும். ஆனால் நாம் பெற்றிருக்கும் இராமாயணம் கி. மு. பத்தாம் நூற்றாண்டிற்கு முன்னர், நிச்சயமாக வழக்கில் இல்லாத "பாஷா" எனப் பாணினி பெயர் சூட்டி அழைக்கும் இலக்கிய மொழி நடையில் உளது. மந்திரப் புனைவுநார்களின் வழிமுறை எந்தக் காலத்திற்குப் பிறகு அழிந்து விட்டதோ, பாரதப் போர் நிகழ்ந்த அந்தக் காலத்தில் கிளை மொழியாம் சந்தா மொழியும் மறைந்து விட்டது. பிராமணாக்களிலும், ஆரண்யாக்களிலும் மேற் கொள்ளப்பட்ட சந்தா மொழிக்கும், பாஷா மொழிக்கும் இடைப்பட்டதான, வேறொரு கிளை மொழி, சந்தா மொழியைத் தொடர்ந்து வந்தது. நாம் பெற்றிருக்கும் இராமாயணத்தை, இராமன் காலத்தவரான வால்மீகி எழுதிய இராமாயணமாக ஏன் ஏற்றுக் கொள்ள முடியாது என்பதற் கான மற்றொரு காரணம், அதில், இராமன், உயர்பெரும் கடவுளாம் விஷ்ணுவின் திருவவதாரமானவன் என்ற கருத்து இடப் பெற்றிருப்பதாம். வேத வழிபாட்டு நெறியில் விஷ்ணு ஒப்புயவர்வற்ற கடவுள் அல்லன்; அவனுடைய அவதாரங்கள் பற்றிய கொள்கை வேதசமயக் கோட்பாடுகளுக்குப் புறம் பானது. இராமனுடைய பெயர் "ராமா", ரிக் வேதத்தில் (10 : 92 : 14), வேள்விகளை நிறுவிச், சமய குருமார்களுக்குப் பெரிய பெரிய தக்ஷிணைகளைத் தந்த மகவான்களின் பெயர்ப் பட்டியலில் இடம் பெற்றுள்ளது. இங்கு தெய்வத் தன்மை குறித்த உரிமை எதுவும் ஏற்றப்படுவதின்றி, வெறும் மானிடனாகவே அவன், குறிப்பிடப்பட்டுள்ளான். இராம னுக்குத் தெய்வத்தன்மையை இராமன் வாழ்ந்திருந்த காலத் தில் ஏற்றிக் கூறியிருப்பார் வால்மீகி என்பது ஒப்புதற்கு

இயலாதது. மேலும் வைணவ ஆகமங்கள் வேதங்களைப் போலவே வைணவர்களுக்கு அதிகாரம் பெற்றனவாம் என்பதை உறுதி செய்ய ஆகமப் பிராமண்யம் என்ற நூலை, யாமுனாச்சாரியார் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் எழுத வேண்டுமளவு தொடக்க காலத்தில் வேதச்சமயக் கொள்கைகளோடு முரண்பட்டதான, ஆகமச் சமய நெறியில் உருப் பெற்றவை, தெய்வத் திருவவதாரக் கருத்துகள். மகாபாரதப் போருக்குப் பின்னர், வேத வேள்வி வழிபாட்டு நெறிகள் குன்றத் தொடங்கிய நிலையில், வட இந்தியாவில் ஆகம வழிபாட்டு நெறிகள் முக்கியத்துவம் அடைந்தன. ஆகவே, விஷ்ணுவின் அவதாரங்களில், இராமாவதாரமும் ஒன்று என்ற கொள்கை, இராமகாதையில், கி.மு. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னரே இடம் பெற்றிருக்க இயலும். ஆகவே, வால்மீகியால் இராமன் வாழ்ந்த காலத்தில் எழுதப்பட்ட இராமகாதை, கி. மு. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர், "பாஷா" எனப் பாணினி பெயரிட்டழைக்கும் ஒரு மொழியில் திரும்ப எழுதப் பட்டது. வேறு பல புறம்பான நிகழ்ச்சிகள் அல்லாமல் இராமன் ஒரு அவதாரம் என்ற கொள்கையும், அக்கதையுள் அப்பொழுது நுழைந்து விட்டது என நான் முடிவு செய்கிறேன். பௌதாயன தர்மசூத்திரத்தின் கிரந்த எழுத்துகளிலான தென்னிந்தியப் பதிப்பு ஒன்றில் கொடுக்கப்பட்டிருக்கும், கோத்திரம் படைத்தவர்களின் பெயர்ப் பட்டியலில், கோத்திரம் படைத்தவர்களாக வால்மீகி, பாணினி ஆகியோரின் பெயர்கள் ஒருசேர இடம் பெற்றுள்ளன. இது யாரோ ஒரு வால்மீகியும், பாணினியும் சம காலத்தவர் என்ற கருத்தைக் கொடுக்கும். கி.மு. ஏழாம் நூற்றாண்டினராகிய இந்த வால்மீகி, "ப்ராசெதஸ்" வால்மீகியின் இராமாயணத்தை இலக்கியச் சமஸ்கிருத நடையில் திருப்பி எழுதி, அதில் இராமன் விட்டுணுவின் திருவவதாரம் என்ற கொள்கையையும் இணைத்திருக்க வேண்டும். இராமாயண மகாபாரதங்களை மிக நுணுக்கமாக ஆராய்ந்த பின்னர், திரு "லாஸன்" அவர்கள் 'வீரகாவியங்களில் இராமனும், கிருட்டிணனும், விட்டுணுவின் அவதாரங்களாகக் காணப்

படுகின்றனர் என்பது உண்மைதான் என்றாலும், அதே சமயம் அவ்விருவரும் மானிட வீரர்களாகவே, நம்முள் வருகின்றனர்; அவ்விரு வீரர்களும், தெய்வத் தலைமையினைச் சிறிதும் பயன்கொள்ளாமல், மானிடக் கோட்பாடுகள்படியே நடந்து காட்டும், சிறந்த வாய்ப்பினைப் பெற்ற மனிதர்களாகவே, பெரும்பகுதி காட்டப்படும் வகையில், அவ்விரு நிலைகளும் (தெய்வநிலை, மானிட நிலை) வேறு பிரிக்க இயலாவாறு இரண்டற இணைக்கப்பட்டுள்ளன. தெய்வத் தன்மையை வற்புறுத்த வேண்டி இணைக்கப்பட்ட, இன்றியமையா ஒரு சில இடங்களில் மட்டுமே, அவர்கள், விட்ணுவின் இயல்புகளை மேற்கொள்கின்றனர். இவை போலும் பிற்காலத்தில் இடைச் செருகல்களையும் இப் பகுதிகள் பல்வேறு இடங்களில் அறிவுக்குப் பொருந்தா நிலையில் நுழைக்கப்பட்டிருப்பதையும் நினைவுகோடல் இன்றி, அவை எவ்வாறு ஏனைய விளக்கங்களோடு தொடர்பு இன்றி இணைக்கப்பட்டுள்ளன என்பதையும், அதன் வளர்ச்சிக்கு, அவை, எவ்வாறு தேவையற்றன என்பதையும் உற்று உணராமல், இவ்விரு நூல்களையும் கருத்தோடு படிப்பது இயலாது'' எனக் குறிப்பிடுகிறார்.[1]

இராமாயணத்தின் மொழி நடை, அப்பாடல்கள் இரு வேறு ஆசிரியர்களால் இயற்றப்பட்டவை என்ற எண்ணத்தை அளிப்பதாக இல்லை. ஆனால், இக்கருத்து இரண்டாவது வால்மீகி அவர் காலத்தில் வழக்கிலிருந்த மொழி நடையில் எழுத விரும்பியிருந்தால், அப்பாடல்களைத் தொடக்கத்திலிருந்து புதிதாகவே பாடியிருக்க முடியும் என்பதை நினைவில் கொண்டால் மறுக்க முடியாத தடையாக நிற்காது.[2]

**மற்றொரு இராமகாதை :**

இராமகாதை, பெரும்பாலும் அனைத்துச் சிற்றூர்களிலும் நாள்தோறும், பண்டிதர்களாலும், இசையொடு கலந்து கதை கூறுவோர்களாலும் விரித்துரைக்கப்படுவதால் அக்கதை அதன் முழு விளக்கங்களோடு, இன்றைய; இந்தியாவின் இந்துக்களில் பெரும்பகுதியினர்க்குத் தெரியும்;

ஆனால், கி.மு. ஏழாம் நூற்றாண்டில், நிலைமை அவ்வாறு இல்லை, வால்மீகி இராமாயணத்தின் முக்கிய நிகழ்ச்சிகளிலிருந்து வேறுபட்டதான இராமகாதை, நாடோடிப் பாடல்களாக, அன்று வழக்கில் இருந்தது என்பது பௌத்த ஜாதகக் கதைகளில், 461வது காதையான தசரத ஜாதகக் கதையால் உறுதியாகிறது.[3]

அக் கட்டுக் கதை வருமாறு: பனாரஸ் அரசன் தசரதனுக்குப் பதினாறாயிரம் மனைவியர் உள்ளனர்; அவனுடைய மூத்த ராணிக்கு, இராம பண்டிதன், அதாவது அறிவாளி ராமன், லக்கண குமாரன், சீதாதேவி ஆகியோர் பிறந்தனர். இந்த ராணி இறந்ததும், தசரதன், மற்றொருத்தியை மூத்த ராணியாகக் கொண்டான். அவளுக்குப் பரதன் பிறந்தான். இந்த ராணி, தன் மகனுக்கு அரசைக் கொடுக்குமாறு அவனைத் தொல்லைப்படுத்தினாள். தசரதன் அவ்வாறு செய்ய மறுத்துவிட்டு, நாட்டில் இருந்தால் அவர்கள் அழிவிற்கு மூத்தராணி சூழ்ச்சி செய்துவிடுவாள் ஆதலின், இராமனையும், லக்கணனையும், சீதாதேவியையும், காட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்துவிட்டு நிமித்திகன் கூறியவாறு, தான் இறந்துவிடும் பன்னிரண்டாம் ஆண்டு இறுதியில் திரும்பி வந்து அரசுரிமையைக் கேட்குமாறு பணித்தான். அவர்கள் இமயத்திற்குச் சென்று ஒரு பர்ணக சாலையில் வாழ்ந்து வந்தனர். ஒன்பதாண்டுகளுக்குப் பிறகு துயரத்தால் அரசன் இறந்துவிட்டான், பரதன், இராமன் தங்கியிருந்த ஆசிரமத்தை நாடி அடைந்து திரும்பிவந்து நாடாளுமாறு இராமனை வேண்டிக்கொண்டான். தந்தை ஆணையிட்ட பன்னிரண்டு ஆண்டுகள் கழிவதற்கு முன்னர் வர முடியாது என மறுத்துவிட்டுப், பரதனிடம் தன்னுடைய பாதுகைகளைக் கொடுத்து, அவை மூன்றாண்டு காலம் நாட்டை ஆளும் எனக் கூறி அனுப்பினான். பின்னர்ப் பரதன், லக்கணன், சீதாதேவி ஆகிய மூவரும் பாதுகைகளோடு தலைநகர் திரும்பினர். மூன்று ஆண்டுகள் கழிந்ததும், இராமன் பனாரஸுக்குச் சென்று, சீதா, தன் மனைவியாக, அவனோடு அரசனாக முடிசூட்டிக்கொண்டு பதினாறாயிரம்

ஆண்டுகள் நேர்மையாக அரசு புரிந்து (த்ஹம்மென ரஜ்ஜன் கரெத்ப) ஸ்வர்க்கம் புகுந்தான்.

இக் கட்டுக்கதை, பொதுமக்களிடையே பெருவழக்காய் இருந்தது. பல பிறவிகளுக்குப் பிறகு கௌதமராகப் பிறந்த போதி சத்தராக, இராமரை மாற்றிய பௌத்தர்களால் வழிபடு பொருளாக ஆக்கப்பட்டது என்ற உண்மை, வால்மீகி கூறும் கதையமைப்பு, அக்காலப் பொதுமக்களில் ஒரு பிரிவினர்க்குத் தெரியவில்லை என்பதை உறுதி செய்கிறது. பாணினியின் சம காலத்தவரான வால்மீகியால், இனிமையோடு கலந்த அழகிய, அதே நிலையில் எளிய சமஸ்கிருதத்தில், இராமன் விட்ணுவின் அவதாரமாம் என்ற ஆகமக் கோட்பாட்டையும், இரண்டற இணைத்து ஆக்கப்பட்ட அவ்வீர காவியத்தின் மறு ஆக்கம், அப்பாட்டை வட இந்தியாவில் பக்தி மார்க்கம், பெருவழக்காய் ஆகிவிட்ட கி. மு. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிறகு, பலரும் அறிந்த ஒன்றாக ஆக்கிவிட்டது. இது, வெறும் தத்துவந்தான். ஆனால், இஃது ஒன்றுதான் உண்மை நிகழ்ச்சிகளோடு ஒத்த தத்துவம்.

**இராமாயணத்தில் தென்னிந்தியா பற்றிய குறிப்பீடுகள் :**

மேலே கூறியனவற்றை ஓரளவு ஏற்றுக்கொள்ளக்கூடிய புனைந்துரைகளாகக் கொண்டால், இராமர் காலத்தைச் சேர்ந்த கதையின், உயிர்நிலை போலும் முக்கியப் பகுதிகளாகி, இராமாயணத்தில் இடம் பெற்றிருக்கும் தென்னிந்தியா பற்றிய குறிப்புகளைத், தம் காலத்திய தென்னிந்தியா பற்றிய சில செய்திகளை அறிந்தவரும் அறிந்தவற்றைக், கால முறையைக் கருத்தில் கொள்ளாது, முற்பட்ட நிகழ்ச்சிகளைப் பிற்பட்டனவாகவும், பிற்பட்ட நிகழ்ச்சிகளை முற்பட்டனவாகவும், தம் பாக்களிடையே நுழைத்துவிட்டவருமாகிய, பிற்கால வால்மீகியால் கி.மு. முதலாயிரத் தாண்டில் நுழைக்கப்பட்ட நிகழ்ச்சிகளிலிருந்து வேறு பிரித்துக் காண நமக்கு வழிவகைகள் உள்ளன. இராமர் காலத்தில், அரக்கரின் ஆட்சி, அவர்களின் புறக்காவல்

நிலையமாம், ஜனஸ்தானம் இடம் பெற்றிருந்த, கோதாவரித் தென்கரை வரை பரவியிருந்தது எனக் கொள்ளலாம்.[4] கோதாவரிக்கு வடக்கில் எண்ணற்ற ஆரிய அரசுகள் நிறுவப்பட்டிருந்தன. ஆனால், விந்தியத்திற்கு அப்பாலும் சென்று, இயக்கர்களும், அரக்கர்களும் மேற்கொள்ளும் திடீர்த் தாக்குதல்களைத் தடுக்கவல்ல பலம் வாய்ந்தவர்களாக, அவர்கள் இல்லை. விசுவாமித்திரரோடு அவர் நடத்தும் வேள்விகளை, அரக்கர்களால் கலைக்கப்படுவதினின்றும் காத்தற் பொருட்டு, இராமன் அப்பகுதிகளுக்கு வருகை தந்த போது, விந்தியத்திற்கு வடபகுதியில் திரிந்துகொண்டிருந்த அரக்கி தாடகை, அவள் மகன் அரக்கனாகிவிட்ட மாரீசன் மற்றும் சுபாகு ஆகியோரோடு அவன் போரிட நேர்ந்தது. இராமர் காலத்தில் இருடிகளின் குடியிருப்புகள், எந்த ஆறு வரை பரவியிருந்தனவோ, அந்தக் கோதாவரி ஆற்றங்கரைக்கு அணித்தாக உள்ள இடங்களில், அவை, இராவணனின் ஆட்சி எல்லைக்கு அணித்தாக இருந்தமையாலும், அவன் துணையைப் பெறலாம் என்பதாலும், எண்ணற்ற அரக்கர்கள் திரிந்துகொண்டிருந்தனர். ஆங்கு, இராவணனின் உடன் பிறப்பாளன், நெடிதுருவம் வாய்ந்த கரன் என்பான், ஆங்கு ஜனஸ்தானத்தில் வாழ்ந்திருந்த ஆரியர்களை வாட்டி வதைத்தான். இராமனைத் தமக்கு அணித்தாக இருந்த காட்டில் சந்தித்த முனிவர்கள், அரக்கர்கள் செய்யும் அட்டூழியங்கள் குறித்துக் கடுந்துயரோடு முறையிட்டுக் கொண்டனர். "ஆரியரல்லாதார், முனிவர்களின் முன் வந்து நிற்கின்றனர், அவர்களின் வழிபாட்டினைப் புனிதம் இழந்த அழுக்குப் பண்டங்களால் கெடுக்கின்றனர்; சிற்றறிவு படைத்த அவர்கள், ஆசிரமங்களில் கடுந்துறவு மேற்கொண்டிருக்கும் முனிவர்களைப் பின்னாலிருந்து தாக்கி அழிப்பதில் மகிழ்ச்சி கொள்கின்றனர். தெய்வத் தன்மை வாய்ந்த வேள்வித் தீயில் பலி உணவுகளைப் படைக்கும் நிலையில், அந்த யாக கலசத்தைத் தூக்கி எறிகின்றனர். தண்ணீர் ஊற்றி வேள்வித் தீயை அணைக்கின்றனர்; பானைகளையும் உடைத்து எறிகின்றனர்."[5]

இராமாயணத்தின் இப்பகுதி, இராமர் காலத்தில் ஆரிய வழிபாட்டு முறைகளுக்கு, ஆரியரல்லாதாரின் கடும் வெறுப்பை நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது. இந்த ஆரியரல்லாதார், சமற்கிருதம் பேசமாட்டார். வேதத்தில், அவர்கள் "மரித்ஹர வா" — நலங்கெட்ட பேச்சாளர் என்றும், "அனாஸ" வாயற்றவர் அல்லது நல்ல பேச்சு அற்றவர் என்றும் அழைக்கப்பட்டுள்ளனர்.[6] "அனாஸ" என்ற சொற்றொடர் ஐரோப்பிய ஆசிரியர்களால் மூக்கற்றவர் எனத் தவறாகப் பொருள் கொள்ளப்பட்டு, தஸ்யூக்களின் தட்டை மூக்கைக் குறிப்பதாகவும் கொள்ளப்பட்டது. இச்சொற்கள் அரக்கர்கள், ஆரியர் பேசிய மொழியிலிருந்து வேறுபட்ட ஒரு மொழி பேசினர் என்ற உண்மையை உணர்த்துகின்றன. இல்வலன் என்பான் ஓர் அரக்கன் பிராமணன் போல மாறுவேடம் கொண்டு உண்மையில், தன்மொழி அல்லாததான சமற்கிருதம் பேசிப் பிராமணர்களை ஏமாற்ற முயன்றான் எனக்கூறுவதன் மூலம் இராமாயணம், இதை மேலும் உறுதி செய்கிறது.[7] இப்பாட்டில் வரும் இதுபோலும் குறிப்பிடத்தக்க பிறிதொரு குறிப்பு, ஆரியர்களுக்கும் தஸ்யூக்களுக்கும் இடையில், ஈமச்சடங்கு முறையிலான குறிப்பிடத்தக்க வேறுபாட்டினை உணர்த்துகிற, ஆரியரின் தீஓம்பல் வழக்கம் தோன்றுவதற்கு முன்னர்ப் பிணங்களை இயற்கையின் செயலாண்மையின் அழிக்கும் ஆற்றலுக்கு ஆளாக்கிடும் நனிமிகப்பழைய வழக்கம் நிலைபெற்றிருக்கும் இடங்கள் தவிர்த்து, உலகம் முழுவதிலும் புதைப்பதே, இறந்தவர் உடலுக்கு முடிவுகாணும் சாதாரண முறையாகும். தீவழிபாட்டு முறை, எரியூட்டல் வழக்கத்திற்கு-அதாவது இறந்தவரைத் தீ மூலம் கடவுள்களுக்கு அர்ப்பணிக்கும் வழக்கத்திற்கு வழிவகுத்தது. இந்தியாவிலும், வேறு இடங்களிலும் எரியூட்டல் முறையின் நுழைவு, ஆரிய வழிபாட்டு முறை பரவியதன் உறுதியான அறிகுறியாம். அரக்கர்கள் ஆரியரல்லாதாராதலின் தங்களுடைய இறந்தவர்கள் உடல்களைப் புதைத்தனர். ஆகவே விராதன் இராமனால் கொல்லப்பட்டபோது புதைப்பது இராக்கதரின் பண்டைய வழக்கமாதலின் தன் பிணத்தைப் புதைத்துவிடுமாறு இராமனிடம் வற்புறுத்தினான்.[8] ஆரியரல்லாதாரின்

பழக்கவழக்கங்கள் பற்றிய, இங்கொன்றும் அங்கொன்றுமான இவை போலும் குறிப்பீடுகளைப் பிற்கால இடைச் செருகல்களாக மதிப்பிடல் கூடவே கூடாது; அவை, ஆரிய பழக்க வழக்கங்கள், கோதாவரிக்குத் தெற்கில், இராமர்காலத்தில் பரவத்தொடங்கின; ஆனால் மெல்ல மெல்லப் பரவத் தொடங்கின என்ற உண்மைக்கு விளக்கம் காணத் துணை புரிகின்றன. ஆரிய நாகரிகத்தின் கட்டாய மேலாதிக்கம் ஒரு சில இராக்கதர்களைச், சமற்கிருதம் கற்கச் செய்தது. சமற்கிருதம் அறிந்தவன் இலவலன் ஒருவன் மட்டும் அல்லன். சமற்கிருதத்தில் வல்லவன் என இராவணன் புகழப்படுகிறான். அதற்கேற்ப, சீதையுடன் எம்மொழியில் உரையாடுவது என்பது குறித்துத் தனக்குத்தானே ஆராய்ந்துகொள்ளும் போது, அனுமன் "சமற்கிருதத்தில பேசினால், அவள், என்னை இராவணனாகத் தப்பாகக் கருத நேரிடுமே எனக் குறிப்பிடுகிறான் ("யதி வாகம் ப்ரதாஸ்யாமி த்விஜாதிரிவ சமஸ்க்ரதாம்" ராவனம் மன்யமானாமாம் சீதா ப்ஹீத ப்ஹவிஷ்யதி "வானரஸ்ய விஸெஷெண கத்ஹம் ஸ்யாட் அப்ஹிப்ஹாஷனம் அவஸ்யிம்எவ வக்தவ்யம் மானுஷம் வாக்யம் அர்த்ஹவத்" ராமாயணம் 5 : 20 : 19) அனுமான்தானும் சமற்கிருத மொழியின் எட்டாவது இலக்கணப்பெரும் பேராசிரியன் எனக் கூறப்படுகிறான். ஆனால் இது பிற்கால அனுமான் ஒருவனைக் குறிப்பதாகக்கூடும். மேலும், இராக்கதர் பலர், சிறந்த பிராமண்யர்களாயினர்; வேதங்களில் சிறந்த மாணவர்களாயினர்; தவம் மேற்கொள்ளலாயினர்; அத்தகையோரர் பிரம்மராக்கதர் என அழைக்கப்பட்டனர்; அகத்தியர்களும், விசுவாமித்ரர்களும், இவ்வினத்தைச் சேர்ந்தவர்களாவர். நம்முள் ஒருவனாக இராவணனையும் கொண்ட "பௌலஸ்த்யர்"களும் "நைற்றகர்"களும் கூட பிரம்மராக்கதர்கள் தாம். (பர்கிதர் அவர்கள் நூல் : பக்கம் : 242 காண்க)

அயோத்திக்குத் திரும்புமாறு இராமனைத்தூண்ட விரும்பியதைத் தொடர்ந்து, பரதன், படையொடு சென்ற போது, தன்னுடைய வீரர்கள், கார்மேகங்க்ள் போல் கறுத்த

கேடயங்களை ஏந்தித், தென்னவர்களைப் போலத் தலையில் மலர்களைச் சூட்டிக்கொண்டனர். என அவன் கூறுகிறான். (''குர்வந்தி குஸுமாபிடான் கிரஸ்ஸு ஸுரப்ஹீனமி மெக்ஹப்ரகாஸயிஹ் பலகயிர் தாக்ஷினாத்யாஷஹ் யத்ஹானராஹ்'' (அயோத்யா காண்டம் 93 : 13) அம்பட்டரைக் குறிக்கும், உண்மையான தமிழ்ச்சொல் இல்லை; இப்போதுள்ள சொல் ஒன்று, சமற்கிருதத்திலிருந்து கடன் பெற்றது, அல்லது பிற்காலத்துத் தொகைச் சொல் ஆகும் என்ற உண்மை நிலையிலிருந்து அம்பட்டர் செய்யும் முடிதிருத்தும் தொழில், பண்டைய தென்னிந்திய மக்களுக்குத் தெரியாத ஒன்று ஆதலின், அவர்கள், தலை முழுதும், முடி வளர்த்தனர். தாங்கள் வாழும் நிலங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மலர் தங்களின் காதல் போர்க் கடமைகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொருமலர் என எல்லாவகை மலர்களாலும், தங்கள் தலைமுடியினை ஒப்பனை செய்துகொள்வதில் தமிழர்கள் காதல் கொண்டிருந்தனர். உண்மையில் மலர்கள் பற்றிய விஞ்ஞான அறிவு, அவர்களிடையே மிகச் சிறந்து வளர்ந்திருந்தது. ஆகவே, இப்பழக்கம் வடவர்களுக்குப் பண்டைக் காலத்திலேயே தெரிந்திருப்பதில் பொருந்தாமை எதுவும் இல்லை.

**உண்மைக்கு மாறான சில தகவல்கள் :-**

மேலே கொடுக்கப்பட்ட, தென்னிந்தியா பற்றி இராமாயணத்தால் அளிக்கப்பட்ட தகவல்கள் அப் பாக்களின் தொடக்கநிலை வருகையைச் சேர்ந்தனவே ஆகும் : ஆனால் தமிழரசுகள் குறித்துக் கருத்துக்கூறப்பட இருப்பன அதற்கு ஒப்பான நிலையினை உடையன இல்லை. எல்லாத் திசைகளிலும், சீதையைத் தேடத் திட்டமிட்டபோது, சுக்ரீவன் தன்னுடைய தொண்டர் ஒருவரைத் தெற்கே அனுப்பினான். இதுபற்றிய விளக்கத்தைத்தரும்போது நூலாசிரியரின் கிஷ்கிந்தாவுக்கு மட்டும் தெற்கில் உள்ளதாக அல்லாமல், விந்தியமலைக்கும் தெற்கில் கிடந்த அரசுகளின் பட்டியல் ஒன்றைத் தருகிறார். அதில் ''ஆந்திரர், புண்டார், சோழர்,

பாண்டியர், கோவில்களையும், சேர்த்துள்ளார் ("தைநவ் ஆன்த் ராம்ஸ்க, புண்ட்ராம்ஸ்க, சொலான், பாண்டயான், கெொலான்" (கிஷ்கிந்தா காண்டம் 41 : 2) மேற்கே அனுப்பிய படைக்குக் கட்டளைகள் இடும்போது மலபார்க்கடற் கரையைச் சேர்ந்த மிகப் பழைய பெரிய துறைமுகமான முசிரியாம், முரசீபட்டணத்தைக் குறிப்பிட்டுள்ளார் (கிஷ் கிந்தாகாண்டம் : 42 : 13.) இப்பகுதிகளையும் மேலே கூறிய பகுதியையும் திருவாளர் கிரிப்த் (Griffth) அவர்களின் இராமாயணத்தில் மொழி பெயர்க்கப்படவில்லை. (ஆகவே வடஇந்திய, திருத்தப்பட்ட பதிப்பில் அவை காணப்பட வில்லை என்று எண்ணுகிறேன்) இவ்விரு குறியீடுகளும், உண்மையில், இராமாயணத்தைச் சேர்ந்தவையாயின், அவை அப்பாடலின் தொடக்ககால வரைவைச்சேர்ந்தனவாக இருக்க முடியாது. "முத்தாலும் பொன்னாலும் அணிசெய்யப்பட்ட, பாண்டியர் பொன் வாயில்களைப் பெருங்கடலின் கரைக்கண் காண்பீர்" எனத், தன்னுடைய வானரக் கூட்டத்திற்குச் சுக்கிரீவன் ஆணையிடுவது இடம் பெற்றிருக்கும், திருத்தப் பட்ட எல்லா மறுபதிப்புகளிலும் காணப்படும். பாண்டியர் பற்றிய குறிப்புகளும் இத்தகையவே. ("தொ ஹேமமயம் திவ்யம முக்தா மணி விப்ஹூஷிதம் / யுக்தம் கவாடம் பாண்டியனாம் கதாத்ரக்ஷியத வானராஹ்] திருவாளர் கோவிந்தராசன் என்ற ஒரு தமிழர் இப்பகுதிக்கு உரை கூறும்போது, கவாடம் என்பது, அப்பெயர் தாங்கிய ஒரு நகரத்தைக் குறிப்பதாக விளக்கம் அளித்துள்ளார். திருவாளர் கோவிந்தராசன் அவர்கள், கவாடபுரம், பாண்டியரின் பண்டைத் தலைநகராகும் என்ற காதுவழித் தமிழ்க் கதை கேட்டு, அவ்வாறு கேட்டு அறிந்ததைத் தம் உரையுள் கொண்டு வந்து இருக்க வேண்டும். அத்தமிழ்க் கதைதானும், தமிழ் இலக்கியங்களில் மிகவும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தது. இராமாயணத்து இப்பகுதியைத் தவறாகப் பொருள் கொண்ட தன் விளைவாகக் கட்டிவிடப்பட்ட கதையாகவும் இருக்கக் கூடும்) இராமாயணக் கதையின் பொதுவான கதைப் போக்கு, கோதாவரிக்குத் தெற்கில், தங்கள் தங்களுக்கெனத் தனித்

தனி தலைவர்களைக் கொண்ட வானரங்களுக்கு உரியதான, தண்டகாரண்யத்தின், அடர்ந்த பருமரக் காடுகள் நிறைந்த உட்பகுதியாம் சில மாவட்டங்கள் தவிர்த்து, தென் இந்தியா முழுவதும், இராவணனின் ஆட்சிக்கீழ் இருந்தது என உய்த்துணர அமைந்துள்ளது. பிறர் வாழப் பொறாதவனும் அனைத்து வகையாலும் ஆற்றல் வாய்ந்தவனுமான இராவணன், தன் வாயிலுக்கு அணித்தாகப் பாண்டியர் பெருஞ் செல்வாக்கோடிருப்பதை ஒருகணப் போதும் பொறுத்துக்கொள்ளமாட்டான், மேலும் அந்நாட்களில், பாண்டியர், ஆட்சியாளர்களாக இருந்திருப்பின், இராவண னுக்கும், இராமனுக்கும் நடைபெற்ற பெரும் போரில், அவர்கள், எந்தப் பக்கமும் சேர்ந்துகொள்ளாதிருந்திருப்பது, நம்புதற்கு அரியதாகும். மேலும், இந்த மாவட்டங்களும், எந்த நாட்டின் கடற்கரையிலிருந்து, இராமன் கடல் கடந்து இலங்கைக்குச் சென்றானோ அந்தப் பாண்டிய நாடும், இந்தியாவின் தென்கோடியில் நடைபெற்ற இராமனுடைய பாதயாத்திரையை விளக்கிக் கூறும் பகுதியில் குறிப்பிடப்பட வில்லை. இராமன், தன்னுடைய புகழ்பெற்ற பாலத்தைப் பாண்டிய நாட்டிலிருந்தே கட்டத் தொடங்கினான். பாண்டி யர்கள், அவன் காலத்தில் இருந்திருப்பாராயின், அது, அப் பாட்டில், இதுபற்றிக் கூறும் பகுதியில் குறிப்பிடப்பட் டிருக்கக் கூடும்.

ஆகவே, இராமாயண காலத்திற்குப் பிறகு, இராவண னுடைய ஆட்சி மறைவின் பயனாகச் சோழ, சேர, பாண்டியப் பழம்பேரரசுகள் எழுந்தன என நான் சொல்கின்றேன். இராமாயணத்தில், பாண்டியர், அல்லது மூன்று அரசுகளுடன் அனைத்தும் பற்றிய குறிப்பீடுகள், அக்கதையில் அப்பாட்டின் இரண்டாம் வரைவில் கி. மு. முதலாம் ஆயிரத்தாண்டில் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

**அகத்தியர் :**

இராமாயணம் குறித்து மற்றுமொரு கருத்து ஈண்டு ஆராய்தற்குரியது. விதர்ப்ப நாட்டு இளவரசி லோபா

முத்திரையின் கணவராகிய முதல் அகத்தியர், இராமனுக்கு இருபது தலைமுறைகளுக்குச் சிறிது அதிக காலம் முன் வாழ்ந்திருந்த காசி நாட்டு அரசன், அலர்கா என்பவனின் சமகாலத்தவராவர். ஆக, நனிமிகப் பழங்காலத்து அகத்தியர், விந்தியத்திற்கு மிக மிக அணித்தான பகுதியில் வாழ்ந்திருந்தார். இது, அகத்தியர், விந்தியத்தின் முடியை நசுக்கித், தாம் தெற்கிலிருந்து திரும்பும் வரை தாழ்ந்தே இருக்குமாறு ஆணையிட்டார்என்றகட்டுக்கதையின் பொருளாதல் காட்டும். அவருடைய ஆஸ்ரமம், சாத்புரா மலைத்தொடரின் மேற்குப் பகுதியாகிய வைடூரிய மலைக்கு அருகில் இருந்ததாகத் தெரிகிறது. அவர், தென்பால் நாடுகளைத், தம்முடைய தவ நெறியால், முழுக்க முழுக்கக் காப்புடையதாக ஆக்கினார். ஆனால், பஞ்சவடியிலிருந்து இரண்டு யோசனை தொலைவில் இராமன் சந்தித்த அகத்தியர், இராமனுக்கு நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த முதல் அகத்தியராக இருக்க முடியாது. பிற்பட்ட அகத்தியர்களில் ஒருவராகவே இருக்க வேண்டும். இராமர் காலத்தவராகிய இந்த அகத்தியர் தெற்கு நோக்கிச் செல்லும் இராமன் தங்கியிருந்த தவக்குடில் அருகில் இருந்த கோதாவரிக்கு அருகில் வாழ்ந்திருந்தார். அவன் தன் மனைவி சீதையோடு, தன்னுடைய புஷ்பகத் தேரில் திரும்பி வரும், வடக்கு நோக்கிய பயணத்தின் போதும் அவர் தவக்குடிலாக, அது, தொடர்ந்து இருந்தது. ஆகவே அகத்தியர் தவக்குடில், இராமன் காட்டில் அலைந்துகொண்டிருந்த காலம் முழுவதும் பஞ்சவடிக்கு, இரண்டு யோசனை தொலைவிலேயே இருந்தது. என்றாலும் கூட சீதையைத் தேடுமாறு, தன் வானரங்களைத் தெற்கே அனுப்பியபோது, சுக்ரீவன், ''தெய்வத்தன்மை வாய்ந்த, நோய் தவிர்க்கவல்ல, தெளிந்து ஒளிவீசும், பெருமை வாய்ந்ததும், அப்ஸர மகளிர் அடிக்கடி வந்து நீராடிச்செல்வதும், ஆகிய நீரினை உடைய காவிரி ஆற்றைக் காண்பீர்கள்'' எனக் கூறி அனுப்பினான் (''ததஸ்தாம் ஆபகாம் திவ்யாம் ப்ரஸன்ன ஸலிலாம் ஷ்வாம்) தத்ர த்ரக்ஷ்யத்ஹ காவெரீம் விஹிதாம் அப்ஸலோசண இஹ திஸ்யாஸீனாம் நகஸ்யாக்ரெ மலயஸ்ய, மஹ ஹெஉஜஸாம்/

த்ரக்ஷத்ஹாதித்யசங்காஸம்அகஸ்த்யாம்ர்ஷித்தமம்'' இராமாயணம் வி. 41:15:16) ஈண்டு, சீதை, இராவணனால் மாயமாகக் கவர்ந்து செல்லப்பட்டது போல, அகத்தியர், நூலாசிரியரால், மாயமாகக் கொண்டு செல்லப்பட்டு, மலையமலை உச்சியில் போடப்பட்டுள்ளார்: ஆகவே, இராமர்காலத்து அகத்தியரை விட அதிக தூரம் தெற்கே சென்று, தமிழ்நாட்டில் வாழத் தொடங்கிவிட்ட அகத்தியர்களுக்குப் பிறகு வாழ்ந்த பிற்காலப் புலவர் ஒருவரால், இது, நுழைக்கப்பட்டிருக்க வேண்டும்.

**தென்னிந்தியாவில் ஆரிய வழிபாட்டு முறை பரவுதல்:**

இராமன் வெற்றி, இராவணன் அழிவுகளின் விளைவு, தென்னிந்தியாவில் மிகவும் பெரியது. இராமர் காலத்திற்கு முன்பே, ஜனத்தானத்திற்குத் தெற்கே நெருக்கிப் புகுந்து கொண்டிருந்த ஆரியர்கள், பெரும் எண்ணிக்கையில் மேலும் தெற்கில் பரவி வாழலாயினர். பிரமராக்கதரின் எண்ணிக்கை பெருகிற்று. பிரம்மராக்கதர் என்ற சொல் பிற்கால வழக்கில் விரும்பத்தகாத கசப்பான பொருளைப் பெற்றுவிட்டது. அவர்களுடைய செயல்பாடுகள் குறித்து, பொருத்தமற்ற கட்டுக்கதைகள் கட்டிவிடப்பட்டன. ஆனால், அச்சொல் தொடக்கத்தில் விசுவாமித்ரரின் மகன்களைப் போல, தஸ்யூக்கள், இராக்கதர்களோடு மண உறவு கொண்டு, அந் நிலையால் பிராமணர்களாகவே இருந்து, விசுவாமித்ர, கௌசிகக் கோத்திரங்களைக் கண்ட பிராமணர்களின் மரபு வழியில் வந்தவர்கள் அல்லது அகத்தியர்களின் மாணவர்களாக அவர் கோத்திரத்தோடு கலந்துவிட்டவர்கள் என்றும் பொருளுடையதாகும். (விசுவாமித்திரர் ஆணைக்கு அடங்கியிருந்த மத்துவச்சந்தன் மற்றும் இளைய மகன்கள் கௌசிக மரபினர் ஆயினர்: அவர் ஆணையை மறுத்த மூத்த மகன்கள், விஸ்வாமித்திர கோத்திரத்தைச் சேர்ந்தவராயினர் என்கிறது. பாகவதபுராணம்''.[IX:.16: 29-37 பர்கிதர் :பக்கம் : 235] (இவர்களுக்கு முன்பே, பார்க்கவர்களும் அவர்களின்

ஆன்மநெறிவழிவந்தவர்களும், தென்னிந்தியாவில், பரவலாகச் சென்று வரலாயினர். இக்குடும்பங்கள் தென்னிந்திய பிராமண மேலாதிக்கத்திற்கு மையக் கருவை உருவாக்கி விட்டன. நாட்டின் இப்பகுதியைச் சேர்ந்த பிராமணர்கள், சில வகையில், வேதகாலத்துப் பழக்க வழக்கங்ளை அப்படியே காப்பாற்றிக் கொண்டு பிற வகைகளில் ஆரிய வர்த்தத்திற்குத் தெரியாத, தென்னிந்தியப் பழக்க வழங்கங்களை மேற் கொள்ளும் சிறப்பியல்பினைக் கொண்டுள்ளனர். நடுநிலையில், முனைப்பாக, பண்டைய வாஸிட்டர்களைப் போல, உச்சிக் குடுமியின் முடிநன்கு தெரியும் வகையில், தலை மயிரை வழித்துக் கொள்கின்றனர். (ரிக்வேதம் : 7 : 33 : 1) பண்டு, ''பவஸ்த'' மற்றும் ''வவ்ரி'' என்றும், அல்லது ''பரொத் ஹானம்'' மற்றும் ''நீவி'' என்றும் அழைக்கப்பட்ட இரண்டு ஆடைகளை அணிந்தனர். (அதர்வ வேதம்.4.7.6; 9.10.7; 8. 2.16) இயலும் போதெல்லாம் தைத்த ஆடை அணிவதைத் தவிர்த்தனர். பிற்கூறிய பழக்கத்தில் ஆடவரினும், மகளிர் மிகவும் குறியாக இருந்தனர். ஆனால், பிறிதொரு வகையில், திருமணச்சடங்குகளில் நனிமிகு இன்றிமையா நிகழ்ச்சியாகத், தாலி அணிந்துகொள்வது, மஞ்சள் பூசப்பட்ட சிறு கயிற்றைக் கழுத்தில் அணிந்து கொள்வது போலும், ஆரிய மல்லா வழக்கங்கள் தென்னிந்தியப் பெண்டிர்க்கு மிகவும் விருப்பம் தருவனவாய் அமைந்தன. (இது திருமணச் சடங்கைப் புனிதமாக்கத் தேவைப்படும் உயிர்நாடியான சடங்குகளாகக் கைப்பிடித்தல் (பாணிகிரகணம்) ஏழு அடி எடுத்து வைத்தல் (சப்தபதி) ஆகிய நிகழ்ச்சிகளைக் கருதும் ''க்ஹ்ஹ்ய சூத்ரங்களுக்கு, அறவே தெரியாத, தனித் தமிழ் வழக்கங்களாம்) மேலும், கணவனாக வரப்போகிறவனை, மணப்பெண்களின் தாயும், மணப் பெண்ணின் தோழிகளும் வரவேற்கும் முறையும், தஸ்யூக்களின் பழைய மணச் சடங்குகளின் சின்னங்களே ஆகும். மணமகனையும் மணமகளையும் திருமணப்பந்தற்கீழ் நிற்கவைத்து, அவர் கால்களைக் கழுவுதல் அடையாளமாகப் பால் வார்த்துக்கழுவி, செந்நிறம் ஊட்டப்பட்ட சோற்று உருண்டைகள் நான்கு திக்கிலும் வீசப்படும். (மணமக்களைத்

திருமணப்பந்தற்கீழ் வரவேற்றல், அகநானூற்றில் (86) விளங்க உரைக்கப்பட்டுள்ளது. ''நிரைகால்தண் பெரும் பந்தல்''. முருகனை வழிபடும்போது, அவனுக்கு அளிக்கும் பலியாக, திருமுருகாற்றுப் படையில் (233-34) உரைக்கப் பட்டிருக்கும் இரத்தத்தோடு கலந்த சோற்றிற்கு ''குருதி யோடு விரஇய தூவெள்ளரிசி, சில்பலிச்செய்து'' - பார்ப் பனர்கள் கொண்ட மாற்றுப் பொருள், செந்நிறம் ஊட்டிய சோற்று உருண்டை) இப்பழக்க வழக்கங்கள் பழைய ஆரிய வந்தேறிகள் மணந்து கொண்ட தஸ்யூக்களின் பெண்களால், ஆரிய விவாகச் சடங்குகளில் நுழைக்கப்பட்டிருக்க வேண்டும். தென்னிந்திய ஆரியர்களின் வாழ்க்கை நெறிச் சட்டங்களை வகுத்தளித்துவரும், பிற்காலச் சூத்ரகாரர்களில் ஒருவரும் ஆகிய ஆபஸ்தம்பர், ''சூத்திரர்களும், பெண்டிரும் கொண்டிருக்கும், இவ்வறிவு அனைத்தும், கற்று முடித்துப் பெற்ற ஒன்று'' எனக் கூறுமளவு, இவை போலும் மிகப் பழைய தஸ்யூ மணச்சடங்குகள், அத்துணைப் புனிதம் வாய்ந்தவையாக மதிக்கப்பட்டன. (சானிஷ்டஹா யாவத்யா ஸ்த்ரீஸு ஸுத்ரொஷ்ரக.'' (தரும சாத்திரம்) தென்னிந்திய மகளிர், தங்களுடைய வடக்கத்திய உடன் பிறப்புகளுக்குத் தெரியாத பிறிதொரு வழக்கத்தையும்-சேலையைக் கால் களுக்கு இடையே நுழைத்துக் கட்டும், அதாவது கச்சம் கட்டும் வழக்கத்தைச் சமய நெறியாகவே கொண்டு பின்பற்றி வருகின்றனர். இது பிராமண இனத்து மகளிர் தவிர்த்து, வேறு இனத்து மகளிர்களால் பின்பற்றப் படுவதில்லை. ஆகவே, இஃது ஒரு தஸ்யூ வழக்கமன்று. உறுதியாக-தம் முடைய ஆரியக் கணவன்மார், கச்சத்திற்குச், சிறப்பான புனிதத் தனித்தன்மை சேர்த்திருப்பதால், அவர்களுடைய மனைவிமார், தொடக்க காலத்தில், மணமாகாத, மறுபிறவி யினராகாத தஸ்யூ சகோதரிகளிலிருந்து தங்களை வேறு பிரித்துக்காட்ட, கணவர் செய்ததையே செய்துகாட்ட இது வந்தது போலும்.

**ஓர் அறிவார்ந்த விளக்கம்:**

விசாகப் பட்டினம் ஜமீன் மேலாளர், திருவாளர், ஜெய்ப்பூர். ஜி. ராமதாஸ் பந்துலு என்பவர், இராவணன்

வழிவந்தவர், திராவிடப் பழங்குடியினராவர் என்ற கொள்கையை எண்பிப்பதற்குத் தேவையான அகச் சான்று களைத் தரவல்ல ஒரு குறிப்பீட்டினை எனக்கு அனுப்பி யுள்ளார். நமக்குக் கிடைக்கும் நனிமிகப் பழைய திராவிடக் கிளைமொழி, மத்திய மாநிலத்திற்கும், வடசர்க்கார் மாநிலத் திற்கும் இடையில், மலைப்பகுதியில் பேசப்படுவதும், சில சமயம் "கோந்த்" எனத் தவறாக அழைக்கப்படுவதும் ஆகிய "கூயி" மொழி ஆகும். இம் மொழி பேசுவோர் திராவிடர் களில் மிகவும், நாகரீகம் பெற்றவர்கள். நாளடைவில் விட்டொழிந்த பழைய பழக்க வழக்கங்களைக் கைவிடாமல் அப்படியே காத்து வருகின்றனர். குறிப்பீடு தந்த ஆசிரியர், "அக் கூயி" மக்களிடையே பல ஆண்டுகள் வாழ்ந்தவர். ஆகவே, அவர் தரும் செய்தி முதல் தரமானவை. அவர் கூறு கிறார்: 'ஒவ்வொரு கூயி' இதைத்துச் சிற்றூரும் ஊர் முகப்பில் "நிஷான் பெண்ணு" எனும் பெயர் தாங்கிய பெண் தெய்வத்தைக் கொண்டுள்ளது. அது ஆறு அல்லது ஒன்பது அங்குல உயரம் உள்ள நீண்ட உருளை கல்வடிவில் ஊர் நுழைவாயிலில் ஒரு மரத்தடியில் நிறுவப்பட்டுள்ளது. அதை மனிதர்களோ மிருகங்களோ தொட்டுப்பழுதாக்கிவிடக் கூடாது என்பதற்காக அது கற்குவியல்களால் சூழப்பட்டிருக்கும். அக்கல் உடைந்துவிட்டாலோ அல்லது இருந்த இடத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டாலோ அல்லது வேறுவகையில் பழுது பட்டாலோ அவ்வூருக்குச் சில கேடுகள் வந்துறும் என நம்பப் படுகிறது. கிராமத்தவர் ஒவ்வொரு விழாவின் போதும் கோழி ஆடு எருமை பசு பன்றி ஆகியவற்றை அப்பெண் தெய்வத்திற்குப் பலி கொடுத்து வருகின்றனர். "இராவணன் தலைநகரின் காவல் தெய்வமாம் "லங்கா" என்பவள், தன்னால் அழிக்கப்பட்டபோது அவளோடு அனுமான் நடத்திய போர் பற்றிக் கூறும் வால்மீகியின் கவிதைக் கூற்றின் பின்னணியில், இந்நிகழ்ச்சி நுண்ணியதாக உய்த்துணரப் படும். அவள் அந்நகரைக் காத்து நிற்கும் கட்புலனாகாக் கன்னித் தெய்வம், முழுமுதற்கடவுள், அவளை நோக்கி, "வானர வீரன் ஒருவனால், நீ அழிவுறும்போது இராக்கதர்

களை, அழிவுகாலம், அணுகிவிடும் என்பதை அறிந்து கொள்வாயாக'' எனக் கூறியிருந்தது. (அஹம் து நகரீ லங்கா ஸ்வயமெவ ப்லவங்கம/நிர்ஜிதாஹம் த்வயா வீர விக்ரமெண ம ஹா பல / இதம் க தத்ஹ்யம் ஸ்குனு மெ ப்ருவான்த்யா வை ஹரீஸ்வர / ஸ்வ்யம் ஸ்வயம்ப் ஹூனா தத்த வரதானம் யத்ஹா மம /

யதா த்வாம்வானரஹ் கஸிசித் விக்ரமாத் வஸம் ஆனயெத்/ததா த்வயா விஜ்ஜெயம் ரக்ஸஸாம் ப்ஹயமாகதம். ராமாயணம்: 5 : 3 : 45-47) தென் இந்தியச் சிற்றூர்கள் ஒவ்வொன்றும், குறிப்பாகக், கல்வி செல்வ நிலைகளில் தாழ்ந்திருப்போரால் வழிபடப்படுவதும், உயர்சாதியினரால், சிறந்த தாய்க்கடவுளாம் துர்க்கையின் பல்வேறு உருவெளிப் பாடுகளாகக் கருதப்படுவதும் ஆகிய, எல்லையம்மன் என்ற எல்லைக்காவல் தெய்வம் ஒன்றை இன்றும் கொண்டுள்ளன.

தலைநகருள் நுழையும் அனுமான், களிப்பூட்டும் காட்சி அரங்குகளுக்கிடையே ‘‘தாருபர்வத்ம்’’ அல்லது பட்டுப் போன மரத்துண்டுகளின் குன்று நிகர் குவியல்களைக் கண்டான். திரு. ராமதாஸ் பந்துலு அவர்கள், ‘‘விசாகப் பட்டிணம் மாவட்டத்தின் சமஸ்தானச் சிறு நிலப்பரப்பு களில், தாரு என்ற சொல், எரிபொருள் எனும் பொருள் தருவதாக உணரப்படுகிறது. எரிபொருள்கள், சிறு குன்றுகள் போலவும் கோயில் கோபுரங்கள் போலவும் சேர்த்து வைக்கப்படுவது, எங்கும் காணக்கூடிய ஒன்று. இம் மலைப் பகுதிகளில், மழை, மிகப் பெருமளவில் பெய்யுமாதலால், காய்ந்த சிறு மரத்துண்டும் கிடைக்காதபோது, அப் பருவ விளைவுக்கு எதிராக, அவைபோலும் பெரும் போர்கள் தேவையாகிவிட்டன. அனுமான் இலங்கைக்கு மாரிகாலம் கழித்துச் சென்றான், ஆதலின், வானரத்தூதுவன், இராவணன் வாழிடத்திற்கு அணித்தாக, இவைபோலும், மரக்குவியல்களைக் கண்ணுற்றதில், வியப்பேதும் இல்லை. (இராமாயணம் 5 : 6 : 36)

திரு. ராமதாஸ் பந்துலு அவர்கள் குறிப்பிடும் மற்றொரு கூற்றும் ஈண்டும் குறிப்பிடத்தக்கது, ‘‘இராவணன் போருக்குச்

சென்றபோது, புலி, குதிரை, ஒட்டகம், கலைமான் போலும் முகங்களையுடைய சிலவும் உடன் சென்றன. (யஸ்ஙகவ நாநா வித்ஹக்ஹொர நலிபர் வ்யாக்ஹரோ ஹ்ஷ்ர நாகெந்த்ர ம்றகாஸ்வ, வக்த்ரஹ் / ப்ஹூதனதர்வ்ஹதொ ப்ஹாதி, விவற்ப்த்த நெத்ரைஹ் கொஸென சுராணாமபி தர்பஹன்தா/ (இராமாயணம் : 6 : 59 : 24) இந்தப் பூதங்கள், மேலே கூறிய விலங்குகளின் முகம் போலும் முகமூடிகளை அணிந்த ராக்ஷதர்களாவர். தண்டகாரண்யத்தில் அமைதி வாழ்வு நடத்தி வருபவர்களையும், போரில், தங்கள் பகைவர்களை யும் அச்சுறுத்த ராக்ஷதர்கள் கையாளும் பல்வேறு முறை களில் இதுவும் ஒன்று. ஆரியர்களோடு போராடிய வடஇந்திய தஸ்யூக்களும், இவைபோலும் முறைகளைக் கையாண்டனர். மாயாஜால முறைகளைக் கையாளுவதில் புகழ் பெற்றவர் என்பது பொய்யன்று: மெய்யே, (ப்ர மாயினாம் அமினாத் வர்பணிதிஹ் - 'மாந்திரிகரின் சூதுவாது நிரம்பிய தலைவனை எளியோர் வளர்க்கின்றனர். ரிக்வேதம் (திரு. கிரிப்த் பதிப்பு) III : 34 : 3.

''மாயாவான் அப்ரஹ்மா தஸ்யுஹ்'' — 'மந்திரவாதி. வழி பாடு இல்லாத தஸ்யூ' (ரிக்வேதம் : 4 : 16-9) ஸுஸ்னஸ்ய மாயா - சுஸ்ஸனன் ''மாயாஜாலம்' — (ரிக்வேதம் 5:-31-7) 'அஹிர்மாயஸ்ய - பாம்புகளின் இழி தன்மை யினை உணர்ந்த ஒருவன் 6 : - 20 - 7. ''அதெவீஹ்'' மாயாஹ மாயாஜாலத்தின் கடவுள் அற்ற கலை''. (ரிக்வேதம்- 1-10) கூயி இனத்துப் பழங்குடியினரும் கொடு விலங்குகளின் முகங்கள் போலும் முகமூடிகளை அணிந்து கொள்வது காட்டெருமை, கலைமான்களின் கொம்புகளைத் தலையில் அணிந்து கொள்வது ஆகிய வழக்கங்களைக் கொண்டுள்ளனர். தொடக்கத்தில், போருக்குப் பயன்படுத்தப் பட்ட இவ்வழக்கங்கள் இப்போது ஆடல் பாடல் போலும் இன்பக் கேளிக்கைகளுக்கும் மேற்கொள்ளப்படுகின்றன. கோந்து இனத்தவரின்போருடை, காண்பவர் உள்ளத்தில் அச் சத்தை ஊட்ட எண்ணிக், காட்டெருமைகளின் கொம்புகள், கான் மயில்களின் இறகுகளைக் கொண்டு வகை செய்யப்பட்டு

மடிப்புக் கலையாமல் அலையலையாகத் தொங்கும் சிவப்பு மேலங்கி, தோலால் ஆன மெய்யுறைகளைக் கொண்டு நுட்பமாகச் செய்யப்பட்டவையாம். (Thurston's Castes and Tribes. 3 : பக்கம். 364) நடனத்தின்போது, மான், காட்டெருமைகளின் கொம்புகளையும் சிலர் தலையில் அணிந்து கொள்கின்றனர். (Central probinces Gazeteers, Chatisganu Fenudatory States. Page : 51.)

இராவணனின் பத்துத் தலைகள் பற்றிய ஐயம் தீர்த்துக் தெளிவளிக்கும் குறிப்பீடு ஒன்றையும் திருவாளர், பந்துலு அவர்கள் கொண்டுள்ளார். "தஸாஸ்ய" "தஸக்ரீவ" என்ற சொற்களின் தவறான பொருள்கோளே. இராவணனுடைய பத்துத்தலைகளுக்குக் காரணம் என நீண்ட நாட்களாக யூகிக்கப்பட்டுவருகிறது. இவ்விரு சொற்களின் பிறப்பியல்பு குறித்து ஏற்கக் கூடிய விளக்கத்தைப் பந்துலு அவர்கள் தருகிறார்.

"தஸாஸ்ய" என்பது இராவணனுக்குச் சூட்டப்பட்ட ஒரு பெயர். அதுவும் அதனோடு இனத் தொடர்புடைய "த்ஸக்ரீவ" "த்ஸானன" என்ற சொல் வடிவங்களும் பத்துத் தலைகளைக் குறிப்பனவாகப் பொருள் கொள்ளப்பட்டுள்ளன. அதன் விளைவாக இராவணன் எப்போதும் பத்துத் தலைகளையுடைய கொடுமை செய்யும் பேயாகவே உருவகம் செய்யப்பட்டு வந்துள்ளான். ஆனால் வால்மீகி தம்முடைய நூலில் எங்கும் அவ்வாறு விளக்கவில்லை. ஒவ்வொரு இடத்திலும் ஒரு தலையும் இரு கைகளும் உடையவனாகவே அவனைக் காட்டியுள்ளார். அங்ஙனமாகவும் அரக்கர் தலைவனுடைய இந்தப் பெயர்களுக்கு உரையாசிரியர்கள் கொடுக்கும் விளக்கம் எவ்வகையில் முறையாகும்? இவ்விரு சொற்கள் குறிக்கும் சிறப்புப் பொருள் முற்றிலும் வேறாகவே இருக்கவேண்டும். அவ்வாறே "தஸாஸ்ய" "தஸக்ரீவ என்ற இவ்விரு சொற்களும் வீரகாவியத்தில் ஆளப்பட்டிருக்கும் இடங்களை நோக்க அவை யாருக்குச் சூட்டப்படுகின்றனவோ அவர்களின் குறிப்

பிட்ட ஓர் ஒழுக்க நிலையை உணர்த்துபவையாகத் தெரிகின்றது. ''ராவணோனம ப்ஹத்ரந்தெ தஸக்ரீவஹ் ப்ரதாபவான்'' (III-48-2) ''ஸெதெயாஹ் வாசம் ஸ்றுத்வ தஸக்ரீவஹ் ப்ரதாபாவான்'' என்ற தொடர்களில் ''ப்ரதா பவான்'' என்ற சொல்லை இணைத்திருக்கும் முறை ''ராக்ஷஸென்த்ஹ் ப்ரதாபவான்'' என்ற தொடரில் இணைத் திருப்பது போன்றதே ஆகும். இந்த மூன்று எடுத்துக் காட்டு களிலும் இராவணன் ''ப்ரதாபம்'' அல்லது புகழ் அச் சொல்லின் முன் இணைக்கப்படும் சொற்களாலேயே உணர்த்தப்படுகிறது. கடைசித் தொடரின் பொருள்: ''ராக்ஷ தர்களுக்கு அரசன் என்ற புகழை இராவணன் பெற்றுளான்'' எனும் பொருளுணர்த்துகிறது. ஆகவே அத் தொடரின் பொருள் தெளிவாகவே உளது. ஆனால், இராவணன் எந்தெந்த வகையில் புகழ்பெற்றவன் என்பதை உணர்ந்து கொண்டாலல்லது முதல் இரு தொடர்களின் பொருளை அறிவது இயலாது. அரக்கர் தலைவனின் புகழ்,

ராவணொ - லொக - ராவஹஹ்;

ராவணொ - ஸத்ரு - ராவன்அஹ்;

யென வித்ரஸித-லொக-ஸ்ஸதெவ் ஆஸுர-பற்றக்அஹ் லொக க்ஷொப் ஹயிதாரம்க நாதை ர்ப்ஹுதவிராவினம்''

என்ற தொடர்களில் வெளிப்படுகின்றன. அவன் உலகங் களைத் தொல்லைக்கு உள்ளாக்கினான். பகைவர் களைத் தொல்லைக்கு உள்ளாக்கினான். கடவுள் உலகிற்கும் அசுரர்களுக்கும் பன்னர்களுக்கும் பேரச்சம் ஊட்டினான். உலகைத் துன்புறுத்தி ஆங்கு வாழ்பவரைத் தன் குரலால் அச்சுறுத்தினான்.

இராவணனுடைய சிறந்த புகழெல்லாம் ஒவ்வொருவருக் கும் தொல்லை விளைவிப்பதிலேயே அடங்கியிருந்தது என்பதை இவை காட்டுகின்றன. ''தஸக்ரீவஹ ப்ரதாபவன்'' என்பதன் பொருள் தொடக்கத்தில். தொல்லை தரும் அல்லது இன்னல் தரும் புகழுடையான் என்பதாம். ''தாஸஸ்ய'' என்பதும்

நிச்சயமாக அதே பொருளையுடையதுதான். 'ஸ' அல்லது 'அஸி' என்பது, கூயி மொழியில் இடப்பெயர் விகுதி ஆகும். மூலச் சொல்லாகிய "தஸாஸி" அல்லது "தஸாஸ" சமஸ்கிருதத்தில் "தஸாஸ்ய" என எளிதில் ஆகிவிடும். இராவணன் ஒரு "தஸாஸி" அதாவது அல்லல் உறுத்தும் ஒரு மனிதன்.

கூயி மொழியில் 'கிவ' என்பது ஒரு வினைச்சொல் விகுதி; தஸ-கிவ என்பது அல்லல் உறுத்துவதற்கு; திய-கிவ என்பது சின மூட்டுவதற்கு; 'வேப-கிவ' என்பது கொல்லுவதற்கு அல்லது மோதுவதற்கு; 'ஒப-கிவ' என்பது எடுத்துக் கொள்வதற்கு. 'பண்டி-கிவ' என்பது ஏமாற்றுவதற்கு ஆகிய இவை, பெயர்களோடு 'கிவ' என்பதை இணைப்பதால் உருவாகும் 'கூயி மொழி வினையெச்சங்களுக்கான எடுத்துக்காட்டுகள். 'தஸ-கிவ' என்பது 'தஸக்ரீவ' என எளிதில் ஆகிவிடும். 'தஸ-க்ரீவஹ் ப்ரதாபவான் என்ற சொற்றொடர் அவன் பெருமை அல்லது புகழெல்லாம் பிறரைத் துன்புறுத்துவதே என்பதை அறிவுறுத்துகிறது. இராவணன் தோள்மீது பத்துத்தலைகளை வைக்கும் பொருள் கோளினும், இப்பொருள்கோள், இராவணன் இயல்போடு மிகவும் பொருந்துவதாம்.

---

1. இவ்விளக்கத்திற்காக, தமிழ்ச் சொல் விளக்க அகராதி (Tamil Lexicon) துணை ஆசிரியர், திருவாளர் பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி அவர்களுக்கு நான் கடமைப் பட்டுள்ளேன்.

2. இது பற்றிய நுண்ணிய ஆய்வுக்கு மேலே எடுத்துக் காட்டப்பட்ட திரு. லாஸன் அவர்களின் கூற்று எடுக்கப்பட்ட திரு. மூரி அவர்களின் ஸமஸ்கிருத மூல பாடங்கள் (Mwiris Original Sanskrit Text,) என்ற நூலினைக் (பகுதி: 4 பக்கம்: 164-182) காண்க. அந்நூலின் 441—491 பக்கங்களும் ஆய்வுக்கு உரியவே.

3. இந்த ஜாதகக் கதை எழுதப்பட்டது எந்தத் தேதியேயாயினும் அக்கதை நீண்ட நாட்களாகவே கூறப்பட்டு வந்துள்ளது.

4. இக்கூற்றுக்கான அகச் சான்றுகளாகத் திரு. பர்கிதர் அவர்களால் பின் வருவன கொடுக்கப்பட்டுள்ளன: பக்கம்; 277. மகாபாரதம்: 3-2-76: 15986; 7: 59; 2226; இராமாயணம்: 2:116:11; 3 : 1825.

5. அப்ரஸஸ்தயிர் அஸ¬கிப்ஹி சம்ப்ரயொஜ்யக தாபஸான்/ப்ரதிக்ஹனனிதி அபரான் க்ஸிப்ரம் அனார். யாஹ் புரதஹ் ஸ்திதாஹ்/தெஸ¬ தெஸ்வாஸ்ரம ஸ்தாநெஸ¬ அபுத்ஹம் அவலீய க/ரமன்தெ தாபஸாம்ஸ்தத்ர நாஸ் - அயன்தோ அல்பசெதஸஹ/.

அவக்ஷிபந்தி ஸ்ருக் ப்ஹாண்டன் அக்னின்ஸிஞ்சந்தி வாரின / கலஸாம்ஸ்க ப்ரம்ர்த்நன்தி ஹவனெ ஸமுபஸ்தி தெ. 11 ராமாயணம்: 2 : 116-15-17.

6. ரிக்வேதம் : 174 - 2; 5- 32 : 8; 5. 29-10.

7. த்ஹாரயன் ப்ராஹ்மணம் ரூபம் இல்வலஹ் ஸம்ஸ்க்ர்தம் வதன்''. ராமாயணம் 3-11-58.

8. ''அவதெ காபி மாம் ராம ப்ரக்ஷீப்ய குஷலிவ்ரஜா/ ராக்ஷஸாம் கதசதவானாம் எஸ தஹ்ர்மஹ் சனாதனஷஹ்/ இராமாயணம் 3: 4-20.

**இணைப்பு :-**

**சேர, சோழ, பாண்டிய அரசுகள், இராவணன் ஆட்சி அழிவின் விளைவாகப், பெரும்பாலும் இராமாயண காலத்திற்குப், பின்னரே தோன்றியிருக்க வேண்டும் ?**

*தமிழர் வரலாற்று நூலாசிரியர், திருவாளர், பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் கொண்ட முடிவு இது:*
"The three ancient powers of sola, sera, pandya rose, probably, as a result of the extinction of Ravana's rule, after the age of Ramayana". (History of the Tamils; (Page : 54)

*என அவர் கூறுவது காண்க.*

*இதே கருத்துப்பட, வேறு சில இடங்களிலும் அவர் பின்வருமாறு கூறியுள்ளார். சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூன்று பெரும் அரச இனங்களின் தோற்றம், தென்னிந்தியா, இராமனால் அமைதிப்படுத்தியதன் அரசியல் விளைவே என நாம் யூகிக்கலாம். இம் மூன்று பெயர்களும் இராமாயணத்தில் இடம் பெற்றிருந்தாலும், புராணங்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் மூன்று இராவணன்களின் ஆட்சிக் காலத்தில், அச் சேர, சோழ, பாண்டிய அரச இனங்கள் செல்வாக்குப் பெற்றிருக்க மாட்டா, என்பது உறுதி. இந்த இராவணன்கள், தென்னிந்தியா முழுமையும் தன்னேரில்லா அரசியல் செல்வாக்குப் பெற்றிருந்தனர். கோதாவரி ஆற்றங் கரையிலானதான ஜானஸ்தானம், மூன்றாவது இராவணன் காலத்தில், அவன் ஆட்சியின் எல்லைக் காவல் நிலையமாக இருந்தது. அவன் குடிமக்களாம் அரக்கர்கள், விந்தியத்தின் தென்பால் உள்ள இந்தியா முழுவதும் திரண்டு கிடந்தனர். ஒரு சிலர், அவ்வப்போது ஆரிய வர்த்தத்துள்ளும் புகுந்து வாழ்ந்தனர். அவன் ஆட்சி நிலவும் எல்லைக்குள், வேறு அரச இனங்கள், ஆட்சி மேற்கொண்டிருந்தன என்பது*

நடந்திருக்க இயலாத ஒன்று. அக் காலத்தில், சேர, சோழ, பாண்டியப் பழங்குடியினர் இருந்திருக்க இயலும். ஆனால், அக் குடிகளிலிருந்து தோன்றிய அரச இனங்கள் இருந்திருக்க இயலாது. "A Probably political, consequence of the pacification of south India by Rama was, we may presume. the rise of the three great royal dynasties of sola, sera, and pandya. Though these names occur in the Ramayana, it is certain, that the dynasties could not have flourished in the ages, when the three Ravana's that are mentioned in the, puranas ruled. These Ravanas apparently wielded unrestricted sway all over south India. Janasthana, on the bank of the Godavari, was one of the outposts of the latest Ravana. His subject swarmed all south of the vindhyas and stray bodies of them, frequently entered Aryavartha, with in the boundaries of this realm, it was not possible for other dynasties to rule. The three tribes, solas, seres, pandyas perhaps existed at time; but the royal dynasties that rose out of them did not" (History of the Tamils ; Page : 85)

தமிழ் அரச இனங்கள் மூன்றும், தென்னிந்தியா, ஸ்ரீ ராமனால் அமைதியுறப் பெற்ற பின்னர், ஆட்சிக்கு வந்திருக்க வேண்டும் என நான் கருதுகின்றேன்.

(I have assumed that the three Tamil dynasties rose to power, after the pacification of south India by Sri. Rama" Page : 150)

இதற்கு ஆதாரமாக அவர் காட்டும் காரணங்கள் பின் வருவன :

1. கோதவரிக்குத் தெற்கே உள்ள அனைத்து இந்தியாவும், இராவணன் ஆட்சியின் கீழ் இருந்தது.

2. பொறாமையும்,பேராற்றலும் வாய்ந்த, இராவணன், தன் நாட்டின் வாயிற்புறத்தே பாண்டிய அரசு இடம்

பெற்றிருப்பதை ஒரு கணமேனும் தாங்கிக் கொண்டிருந்திருக்க மாட்டான்.

The jealous and all powerful Ravana would not have brooked for a moment the prevalance of the pandyas near his own doors : (Page : 53)

3. இராமாயணம் நடைபெற்ற அந்த நாட்களில், பாண்டியர்கள், ஆட்சியாளர்களாக இருந்திருப்பின், அவர்கள், இராமனுக்கும், இராவணனுக்கும் நடைபெற்ற பெரும் போரில் எந்தப் பக்கத்திலும் சேர்ந்திருந்தாரல்லர் என்பது நம்பக்கூடாத ஒன்று.

"If the Pandyas had been rulers at that time, it is impossible to believe, that they joined neither side in the great war between Rama and Ravana.". (Page : 53)

4. மேலும், இந்தியாவின் தென்கோடிப் பகுதியில் நிகழ்ந்த இராமனின் படைச் செலவினைக் குறிப்பிடும் பகுதியில், இம் மாவட்டங்கள் குறிப்பிடப்படவில்லை. ஏன்? இராமன் எந்தக் கரையிலிருந்து கடலைக் கடந்து இலங்கை அடைந்தானோ' அந்தக் கடற்கரையினைக் கொண்ட பாண்டிய மாவட்டங்கூடக் குறிப்பிடப்படவில்லை. தன்னுடைய புகழ்மிக்க பாலத்தைப் பாண்டி நாட்டிலிருந்தே தொடங்கினான். பாண்டியர்கள், அந்தக் காலத்தில் இருந்திருப்பாராயின், பாட்டின் அப்பகுதியில் அது குறிப்பிடப்பட்டிருக்கும்".

"Moreover, these districts not even, that of the pandyas, from whose coast, Rama, Crossed to Ceylon, are not mentioned when describing Rama's march in the southern most part of India. He started his famous bridge from the pandya country and if the Pandyas had existed in his time it would have been mentioned in this part of the poem" (Page : 53, 54)

இனி இக்காரணங்களின் வன்மை மென்மைகளைக் காண்போம்.

கோதாவரிக்குத் தென்பால் உள்ள அனைத்து இந்தியாவும் இராவணன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது எனக் கூறும் திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், தம்முடைய இம் முடிவினை உறுதி செய்யவல்ல ஒரு சான்றினையேனும் காட்டினாரல்லர். மேலும், அரக்கர் நடமாட்டம் கோதாவரிக்கும் தென்பால் மட்டும் அன்று, அதற்கு வடக்கிலும், ஏன்? விந்தியத்திற்கு வடக்கிலும்கூட இருந்தது. இதைப் பி. டி. எஸ். அவர்களும் ஒப்புக் கொண்டுள்ளார். "கோதாவரிக்கு வடக்கில் எண்ணற்ற ஆரிய அரசுகள் நிறுவப்பெற்றிருந்தன. ஆனால், விந்தியத்திற்கு அப்பாலும் வந்து தொல்லை தரும் அரக்கர்களை அடக்க, அவர்களால் முடியவில்லை. விசுவாமித்திரரோடு, அப்பகுதிக்கு வந்த இராமன், விந்தியத்திற்கு வடக்கிலும் நுழைந்து தொல்லை கொடுத்த தாடகை, அவள் மகன் மாரீசன் சுபாகு ஆகியோருடன் போரிட வேண்டியிருந்தது" என அவர் கூறுவது காண்க.

"North of the Godavari a number of Aryan Kingdoms had been established. But they were not powerful enough to check the incursions of Yakkas and Raksasas in to the regions, beyond the Vindhyas. For when Rama visited these regions along with Viswamitra to guared the latter's secrifices from being distured by Raksasas, he had to fight with the yaksini Tataka, Marica her sow and Subahu, who three had strayed north of the Vindhyas" (Page 49)

இங்கெல்லாம் அரக்கர் நடமாட்டம் இருந்தது என்றால், அங்கெல்லாம் அவர் ஆட்சி அல்லது அவர்கள் தலைவனாம் இராவணன் ஆட்சி இருந்தது எனக் கொண்டுவிடக் கூடாது. தங்கள் நாடாம் இலங்கை விடுத்து, அவ்வப்போது வெளியேறி, தாம் விரும்பும் அவ்விடங்களில் சில காலம் தங்கி, ஆங்கிருந்த முனிவர்களுக்கும் அவர் தம் வேள்விகளுக்கும் தொல்லை கொடுத்து வந்தனர் எனக் கொள்ள வேண்டுமே ஒழிய,

அவர்கள் அங்கேயே நிலைத்த குடியினராய் வாழ்ந்திருந்தனர் எனல் பொருந்தாது.

மேலும், அவர்கள் விந்தியத்திற்கு வடக்கிலும் சென்று திரிந்து வந்தாலும் குமரிமுதல், விந்திய வடபால் வரையான நாடுகளில் இருந்த எந்த அரசோடும் மோதிக் கொண்டா ரல்லர். ஒருமுறை, கிட்கிந்தைக் காவலன், வாலியோடு மோத அதற்கான பலனை அனுபவித்துவிட்டான் இராவணன். தன்னோடு மோதிய இராவணனை, வாலி, தன் வாலில் வலித்துக்கொண்டவாறே வழக்கம் போல் எட்டு மலை களுக்கும் தாவித் தாவிச் சென்று வழிபாடாற்றினான். "இராவணன் என்பான் தன்னைச் சுந்திரத்தோள்களோடும், வாலிடைத் தூங்கச் சுற்றிச், சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன்" எனக், கம்பரும் அது கூறுவது காண்க. (அங்கதன் தூது; 24)

அவ்வகையால் வாலியிடம் பட்ட அடி, அரக்கர்குலக் காவலன் உடலிலும், உள்ளத்திலும் ஆழமாகப் பட்டுவிட்ட மையால், நாடாளும் காவலர் எவரோடும் மோதிக்கொள்ளும் எண்ணத்தை, அதன் பின்னர், அவனோ, அவன் குலத்தவரோ கனவிலும் கருதினாரல்லர் போலும். ஆகவே, கோதாவரிக்குத் தெற்கே உள்ள அனைத்து இந்தியாவும் இராவணன் ஆட்சியின் கீழ் இருந்தது என்ற கூற்றில் உண்மை இல்லை என உணர்க.

2. பொறாமையும், பேராற்றலும் வாய்ந்த இராவணன் தன் நாட்டின் வாயிற்புறத்தே பாண்டிய அரசு இடப் பெற்றிருப்பதை ஒரு கணமேனும் தாங்கிக் கொண்டிருந்திருக்க மாட்டான் என்ற காரணமும் ஏற்புடையதாகாது. இராவணன் வாழ்க்கை வரலாறு இதற்குத் துணை புரிவதாக இல்லை. மேலே கூறியவாறு, அரக்கர் நடமாட்டம், குமரி முதல், விந்தியத்திற்கு வடக்கில் உள்ள நாடுகள் வரையும் இருந்துவந்தது. திருவாளர் பி. டி. எஸ் அவர்கள் கூற்றுப்படி, இங்கெல்லாம் அவர் செல்வாக்குப் பெருகவே இருந்தது. ஆனால், அரக்கர்களின் செல்வாக்குப் பெருகியிருந்த அப்பெரு நிலப்பரப்பின் இடையேதான் கிட்கிந்தை என்ற நாடும்

இருந்தது. அரக்கர்கோன் இராவணன், கிட்கிந்தை என்ற நாடு இருந்ததைத் தாங்கிக் கொண்டது மட்டும் அன்று; அதனுள் நுழையவும் அஞ்சி ஒதுங்கியே வாழ்ந்தான்.

மலைக்கல்லும், மரக்கிளையும் தவிர்த்து வேறு படைக் கலமோ, வானரக் கூட்டம் தவிர்த்து வேறு படைப்பிரிவோ பெறாத, ஒருவானரத் தலைவன் நாடு இருந்ததைத் தாங்கிக் கொண்டவன், வில், வாள், வேல் போலும் படைக்கலன் களும், தேர், யானை, குதிரை, வீரர் என்ற நாற்படையும் கொண்ட பாண்டியர் நாடு இருந்ததைத் தாங்கிக் கொண்டிருந் திருக்க மாட்டான் என்பது ஏற்கக் கூடியவாதம் அன்று.

3. இராமாயணம் நடைபெற்ற அந்நாட்களில் பாண்டியர்கள் ஆட்சியாளராக இருந்திருப்பின் அவர்கள் இராமனுக்கும் இராவணனுக்கும் நடைபெற்ற போரில் எந்தப் பக்கத்திலும் சேர்ந்திருந்தாரல்லர் என்பது நம்பக் கூடாத ஒன்று என்ற வாதத்திலும் வலுவில்லை.

இந்தியாவின் தென்கோடி நாட்டவராம் சேர சோழ பாண்டியர் வடகோடிக்குச் சென்று குருச்சேத்திரப் பெரும் போரில் பாண்டவர்க்குத் துணை நின்று போரிட்டனர். சேரர் குலக் காவலன் ஒருவன் இருபக்கத்துப் படையினர்க்கும் போர் முடியுங்காறும் உணவு படைத்தான் என்னும்போது தன் காலடிக்கண்ணதாகிய இலங்கையில் இராமாயணப் போர் நடைபெற்றிருக்கும்போது, பாண்டியர் இருந்திருந்தால் அப்போரில் பங்கு கொள்ளாது இருந்திருப்பாரா என்பது முறையான கேள்விதான்.

பாரதப் போரில் பாண்டவர் துரியோதனாதியர் ஆகிய இருவருமே தங்களுக்குப் படைத்துணை அளிக்குமாறு அரசர் பலரையும் அணுகினர். அதனால், சேர சோழ பாண்டியர்கள் மட்டுமல்லாமல் வேறுபல தென்னிந்தியப் பேரரசுகளும் வட இந்திய அனைத்து அரசுகளும் அப்போரில் பங்கு கொண்டன. ஆனால், இராமாயணப் போரின் நிலையே முற்றிலும் வேறுபட்டது; உறங்கிக் கிடந்த உடன்பிறப்பு கும்பகர்ணனைத்தான்

எழுப்பிவரப் பணித்தானே அல்லது பிறர் எவர்பாலும் படைத்துணை வேண்டினான் அல்லன் இராவணனும்; அதே போல் இராமனும் யார் மாட்டும் தனக்குப் படைத்துணை வேண்டினானல்லன்; படைத்துணை வேண்டாதது மட்டும் அன்று; மனையாளை மாற்றான் கவர்ந்து சென்றுவிட்டதைக்கூடக், குரங்கினம் தவிர்த்து வேறு யாருக்கும் அறிவித்தான் அல்லன்; அறிவித்திருந்தால் பாண்டியர் மட்டும் அன்று பன்னாட்டுக் காவலரும் அவன் அழைக்காமலே அவனுக்குப் படைத்துணையாகச் சென்றிருப்பர். செய்தி அறிந்திருந்தால் "ஏழைமை வேடன் இறந்திலன்" எனச் செம்மாந்து கூறும் குகன் துணைக்கு வாராது இருந்திருப்பானா? அயோத்தி நாட்டுப் பெரும்படையோடு பரத சத்ருக்கனர் சென்றிருக்கமாட்டாரா? கோசல நாட்டுக் கோமகன் சென்றிருக்கமாட்டானா? கேகய நாட்டுக் காவலன்தான் கேளாக்காதனாக இருந்திருப்பானா? ஆனால் இராமாயணப் போரில் பாண்டியர் மட்டுமே பங்கு கொள்ளத் தவறிவிட்டவர் அல்லர். மேலே கூறிய இவர்களில் யாரும் பங்குகொள்ளவில்லை. என்ன காரணம்? இராமன், "கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவன்" மேலும் தன் மனையாளைக் கவர்ந்து சென்றானைக் கொன்று தன் மனையாளை மீட்கும் முயற்சி முழுக்க முழுக்கத் தன்னுடையதாகவே இருத்தல் வேண்டும்; பிறர் துணை நாடுவது பேடித்தனம் என்ற உரம்வாய்ந்த உள்ளம் உடையவன். அதனால் தனித்தே நின்று போரிட்டான்.

ஆக, இராமாயணப் போரில் பாண்டி நாட்டவரல்லாத பிற நாட்டவர் அனைவரும் பங்கு கொண்டது போலவும் பாண்டியர் மட்டுமே பங்கு கொள்ளவில்லை என்பது போலவும் கொண்டு அது காரணம் காட்டி அப்போது பாண்டியரே இல்லை எனக் கொள்ளும் முடிவு தருக்க நெறியோடு பொருந்தாப் போலி முடிவாகும்.

4. இராமன் இலங்கை மீது படையெடுக்கத் தொடங்கியது பாண்டி நாட்டுக் கடற்கரையிலிருந்து.

கடலைக் கடக்கக் கட்டிய பாலத்தின் தொடக்கம் பாண்டி நாட்டுக் கடற்கரையிலிருந்து, அந்நாட்களில் அப்பகுதியில் பாண்டிய ஆட்சி நடைபெற்றிருந்திருக்குமாயின் அப்பகுதி பாண்டி நாட்டுக்கு உரியதாக வால்மிகத்தில் குறிப்பிடப் பட்டிருக்கும். ஆனால் அவ்வாறு குறிப்பிடப்படவில்லை. ஆகவே அக்காலத்தில் ஆங்குப் பாண்டிய அரச இனமே தோன்றவில்லை என்பதும் ஏற்புடையதாகாது.

ஓரிடத்தில் "அ" என்ற இனத்தவர் இல்லை என்பதை உறுதி செய்யும்போது, அந்த இடத்தில் வேறு யாரோ ஓர் இனத்தவர் இருந்திருக்க வேண்டுமல்லவா? அந்த இனத்தவர் "ஆ" என்ற இனத்தவர் எனக் கொண்டு அந்த இடத்தில் 'ஆ" என்ற இனத்தவரே இருந்தனர்; "அ" என்ற இனத் தவர் அல்லர்" என்பதை உறுதி செய்யவல்ல வலுவான அகப்புறச் சான்றுகளைக் காட்டிய பின்னரே அது செய்ய வேண்டும். அது செய்யாது ஓர் அரச இனத்தவர்க்குரிய ஓர் இடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுவிட்டு, அவ் விடத்தை ஆண்டிருந்த அரச இனத்தவரைக் குறிப்பிடாத ஒரே காரணத்தைக் காட்டி அந்த நிகழ்ச்சி நடைபெற்ற போது அந்த இடத்தில் அந்த அரச இனத்தவரே இல்லை என வாதிடுவது வாத முறையாகாது.

இராமன் தமிழகத்தின் தென்கோடி முனையில் பாலம் அமைத்துக் கடலைக்கடந்தபோது அத் தென் கோடி நிலப் பரப்பில் பாண்டியரே இல்லை என வாதாடும் திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், பாண்டியர் இல்லை ஆயின் ஆங்கு, வேறு யாரோ ஓர் இனத்தவர் இருந்திருக்க வேண்டுமல்லவா? அந்த இனத்தவர் இன்னார் என்பதைச் சான்று காட்டி உறுதி செய்த பின்னரே' பாண்டியர் ஆங்கு இல்லை என்ற முடிவிற்கு வந்திருக்க வேண்டும். அது செய்யாது இராமன் பாலம் அமைத்த அந்நிலத்துக்கு உரியவர் பாண்டியர் என வால்மீகி கூறவில்லை. ஆகவே பாண்டியர் அப்போது ஆங்கு இல்லை எனக் கொண்ட முடிவு உண்மையொடு பட்ட முடிவு ஆகாது.

ஒரு நூலில், ஒரு பொருள் குறிப்பிடப்படவில்லை என்பதினாலேயே அப்பொருள் அந்நூல் எழுதிய காலத்தில் இல்லவே இல்லை என்றவாதம், இருக்கு வேதத்தில் ஆலமரம் குறிப்பிடப்படவில்லை என்பதினாலேயே, இருக்குவேத காலத்தில் ஆலமரமே இல்லை என்பதுபோலும் பொருளற்ற வாதமாம். திருவாளர் பி. டி. எஸ். அவர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட வாத முறை இது.

கி. மு. ஏழாம் நூற்றாண்டினராய பாணினி, தம்முடைய இலக்கண நூலில் சேர, சோழ, பாண்டியர் பெயர்களைக் குறிப்பிடவில்லை. ஆகவே, அவர் காலத்தில் அப்பெயர்களைப் பாணினி அறிந்திருக்கவில்லை எனத் திருவாளர் பந்தர்கார் கொண்ட முடிவினை மறுக்கும் நிலையில், திரு. பந்தர்கார் அவர்களின் வாதம், வாய் மூடி இருப்பது விடுத்துப் பெரு நகைப்பிற்கு உரிய ஒன்றாகத் தள்ளி விடுவதாம் எனக் கூறி, தம் வாதத்திற்கு ஆதாரமாக வேதத்தில் "ஆல்" குறிப்பிடப்படவில்லை என்பதால் வேத காலத்தில் "ஆலே", இல்லை என்பது போலாம் எனக் கூறும் திரு. பர்கிதர் அவர்களின் வாதத்தைத், திருவாளர் பி. டி. எஸ். அவர்களே ஆண்டுள்ளார். To say that he did not know the names of the countries (Pandya. Cola, and Kerala) he does not mention in his grammar, is to push the arangement from silence to the most absurd lengths: Speaking of the argument from silence pargiter remarks, One might argue with more force that, because the banyan is not mentioned in the Rg. Veda, there were none in India, when the hymns were composed" (History of the Tamils : Page-124)

ஆக சேரர், சோழ, பாண்டிய அரச இனங்கள், இராமாயண காலத்தில் தோன்றவில்லை. இராவணன் வீழ்ச்சிக்குப் பின்னரே தோன்றியிருக்க வேண்டும் என்பதற்குத் திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் காட்டிய காரணங்கள் பொருத்தமானவையோ, போதுமானவையோ அல்ல என்பது

தெளிவு: மேலும், வால்மீகி தம்முடைய இராமாயணத்தில் பாண்டியரைப் பெயர் கூறிக் குறிப்பிடவில்லை என்பதும் உண்மை அன்று. மாறாக, இராமாயணம் கிஷ்கிந்தா காண்டத்தில், இரண்டு சுலோகங்களில் பாண்டி நாட்டைப் பெயர் சுட்டியே கூறியுள்ளார்.

தென்திக்கில் அனுமாரை அனுப்புவது என்ற 41வது சருக்கத்தில், சீதையைத் தேடவேண்டிய நாடுகளின் பட்டியலைக் கூறும் சுக்கிரீவன், விதர்ப்பம் தொடங்கிப் பல்வேறு நாடுகளைக் குறிப்பிட்டுவிட்டு இறுதியாக "கேரள தேசங்களையும், சோள தேசங்களையும் உள்ளிட்ட பாண்டிய நாடுகளையும் எல்லாவற்றையும் கவனமாய்த் தேடிப் பாருங்கள்" என ஆறாவது சுலோகத்திலும், கடக்க வேண்டிய கடலைக் குறிப்பிடும்போது, அதற்கு முன்பாக, "பொன்மய மானதும், அழகானதும் ஏற்றதும், முத்துக்களாலும், ரத்தினங்களாலும் இழைக்கப்பெற்றதுமான, பாண்டிய நாடுகளின் உட்புகு வாயில் கதவுகளைக் காண்பீர்கள்" எனப் பதின்மூன்றாவது சுலோகத்திலும் கூறியிருப்பது காண்க.

அதுமட்டுமன்று; இராமயணப்போர் முடித்துச் சீதையைச் சிறை மீட்டு விமானம் மூலம் அயோத்தி திரும்பும் இராமன், இடைவழியில் உள்ள இடங்களைச் சீதைக்குக் காட்டியது கூறும், யுத்த காண்டம், இரண்டாம் பகுதி, 126வது சருக்கத்தில், "தடங்கண்ணாய்! உன் காரணமாய், நீர் நிறைந்த பெருங்கடலில் கட்டுவதற்கு அரிய நளசேது என்ற இந்த அணை, என்னால் கட்டப்பட்டது" எனச் சேதுவைக் காட்டிவிட்டு, அடுத்ததான 16 வது சுலோகத்தில் "கரையில்லாததும், முழங்குவதும், சங்குகளாலும், முத்துச் சிப்பிகளாலும் நிறைந்ததுமான இச்சமுத்திரத்தைப் பாராய்" எனப் பாணடி நாட்டுக் கடல் எனப் பெயரால் இல்லை எனினும், "அப்பாண்டிக்கடற்கரைக்கே" உரிய செல்வமான முத்தைக் குறிப்பிட்டுக் காட்டினார் என்றும் கூறியுள்ளார் வால்மீகி.

ஆக, வால்மீகியார், பாண்டிய நாட்டையும் குறிப்பிட்டுள்ளார். அப் பாண்டிய நாட்டுப் பெருநகரத்து வாயில்களையும், அப்பாண்டி நாட்டுக்கே உரிய வளமாம் முத்து வளத்தையும் குறிப்பிட்டுள்ளது. உள்ளங்கை நெல்லிக்கனி என உறுதிப்பட்டிருக்கவும் "வால்மீகி பாண்டியரைப் பெயர்சுட்டிக் கூறவில்லை" என்பதிலும் உண்மை இல்லை.

ஆக, சேர, சோழ, பாண்டிய அரசு இனங்கள், இராமாயண காலத்தில் தோன்றவில்லை. இராவணன் வீழ்ச்சிக்குப் பின்னரே, தோன்றின என்பதற்குத் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் எடுத்துவைத்த வாதம் எடுபடவில்லை. ஆகவே, அவரின் அக்கூற்று, இந்திய வரலாற்று உண்மையொடு பட்ட முடிவன்று என்பது உறுதி செய்யப்பட்டது.

சேதுவைக் குறிப்பிடும் வால்மீகி, அச்சேதுக் கரைக்கு உரியராம் பாண்டியரைப் பெயர் சுட்டிக் கூறாமையைக் காரணம் காட்டி, இராமயண காலத்தில், பாண்டியர், அப் பகுதியை ஆண்டிருந்தால், வால்மீகி அப்பாண்டியரைக் குறிப்பிட்டிருப்பார்; வால்மீகி அவர்களைக் குறிப்பிடவில்லை; ஆகவே இராமாயண காலத்தில், பாண்டியர் அரசு அங்குத் தோன்றவில்லை; இராமர் சேது அணை கட்டியபோது, அச் சேதுக் கடற்கரைப் பகுதியில் பாண்டியர் அரசு தோன்றவில்லை.

(More over, these districts not even, that of the pandyas, from whose coast Rama crossed to ceylon are not mentioned when describing Rama's march in the southern most part of India. He started his famous bridge from the pandya country and if the pandyas had existed in his time, if would have been mentioned in this part of the poem. (Page-54)

எனக் கூறுமுகத்தால், இன்ன ஒரு பொருள் அல்லது இன்ன ஒரு செய்தி அல்லது இன்ன ஓர் அரச இனம், இராமர்

காலத்தில் இல்லை என்பதற்கு, அக்காலத்திய நிகழ்ச்சிகளைக் கூறும் வால்மீகியால், அக்காலத்திய நிகழ்ச்சிகளோடு இணைத்து இராமாயணத்தில் கூறப்படாதிருப்பதைச் சான்றாகக் கொள்ளும் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள், ஒரு பொருளை அல்லது ஒரு செய்தியை, அல்லது ஓர் இனத்தை, வால்மீகி தம்முடைய இராமாயணத்தில் குறிப்பிட்டுவிட்டதினாலேயே, அவை, வால்மீகி காலத்தில், இராமாயண காலத்தில் இருந்தன என்பதை ஏற்றுக் கொள்கிறாரா என்றால் இல்லை. வால்மீகி இராமாயணத்தில் அவை குறிப்பிடப்பட்டுவிட்ட நிலையில் அவை, அக்காலத்தில் இடம் பெற்றிருந்தன என்பதை ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாக, வால்மீகத்தில், அவை, இடம் பெற்றுவிட்டமையினாலேயே, அவை இராமர் காலத்தவை ஆகிவிடா. அவை, இராமாயணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன என்றாலும், அவற்றைக் குறிப்பிட்டவர் இராமர் காலத்து வால்மீகி அல்லர்; அவருக்குப் பலநூறு ஆண்டுக் காலம் கழித்து வாழ்ந்த, வேறு ஒரு வால்மீகி ஆவர். ஆகவே, அவை இராமர் காலத்தைச் சேர்ந்தன ஆகா'' எனத் தம் வாதத்தை வேறு கோணத்தில் எடுத்து வைத்து விடுவர்.

சீதையைத் தேடித் தென்னாடு செல்லும் வானரத் தலைவனுக்கு, அத்திக்கில் அவன் காணலாம் இடங்களை நிரலே எடுத்துக் கூறும் சுக்ரீவன், காவிரிப் பேராற்றையடுத்து மலையக் குன்றின் முகட்டில் வீற்றிருக்கும் அகஸ்தியரைக் காண்பீர்கள் எனக் கூறியதாக, இராமாயணத்தில் குறிப்பிடப்பட்டிருக்கவும், ''இராமர் காலத்தில், அகஸ்தியர் காவிரிக்கரைப் பொதிகை மலையை அடையவில்லை. அவர் கோதாவரிக்கரை பஞ்சவடியிலேதான் நிலைகொண்டிருந்தார். அவரை, எப்படி இராவணன், சீதையை வான வீதி வழியே கொண்டுசென்று இலங்கையில் சிறை வைத்துவிட்டானோ, அதேபோல், பஞ்சவடியில் இருக்கும் அகஸ்தியரைப் பொதிகைக்குன்றின் முகட்டில் கொண்டு வந்து இறக்கியிருக்கும் நிகழ்ச்சி இராமர் காலத்து வால்மீகியார் செயல் அன்று.. இராமர் காலத்து அகஸ்தியருக்குப் பின்னர், தென்னாட்டில்

மேலும் தொடர்ந்து பயணம் மேற்கொண்டு, தமிழ்நாட்டிலும் ஆஸ்ரமம் அமைத்துக் கொண்டுவிட்ட வேறு ஒரு அகஸ்தியர் காலத்துப் பாவலன் யாரோ ஒருவனால் நுழைத்துவிடப்பட்ட இடைச்செருகலாம்". என்று கூறிவிடுவார் திருவாளர் பி. டி. எஸ். அவர்கள். (Agastyas asramam during the whole period of the wanderings of Rama was two yojanas from panchavadi ; yet. when Sugriva, sent his vanaras to the south to search for sita, he told them, that they would see kaveri's stream whose waters were holy, benign and bright ; Near by they the would see seated on the top of Malaya Hill, brilliant as the sun Agastya, the excellent Rishi. Here we see Agastya spirited away by the poet, as sita was by Ravana, from Panchavadi, and dropped on the top of the Malaya Hill. Hence this must have been inserted by the later poet who lived after the Agastyas had procedded further south than the Agastya of Rama s time and settled in the Tamil Country". Page-55)

என அவர் கூறுவது காண்க.

பாண்டிய அரச இனம் இராமாயணத்தில் குறிப்பிடப் படவில்லை. ஆகவே, பாண்டிய அரச இனம் இராமாயண காலத்தில் உருப்பெறவில்லை என ஓரிடத்தில் கூறிவிட்ட திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், பிறிதோரிடத்தில் வால்மீகி இராமாயணப் பிரதி ஒன்றில் சேர, சோழ, பாண்டியப் பேரரசுகள் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணும் நிலையில், அக்குறிப்பீடு, அக்கதையில் கி. மு. முதலாம் ஆயிரத்தாண்டில் எழுதப்பட்ட இராமாயணத்து இரண்டாம் பிரதியில் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

(The reference to the Pandyas or all the three in the Ramayana must have been put into the story in the second draft of the poem in the first millennium B. C. Page-54)

எனக் கூறுவதும் காண்க.

அதிகாரம் : 5

# கி. மு. இரண்டாவது ஆயிரத்தாண்டில் தமிழர் நாகரீகம் :

## இலக்கிய மரபுகளும் மக்கள் வாழ்க்கை முறையும் :-

இராமாயணத்திலிருந்து, பழந்தமிழர் நாகரீகம் குறித்து மிகச் சிலவற்றை மட்டுமே பெற இயலும். இப் பொருள் பொருத்தவரையில், இராமாயணம், மிகப் பெரு மளவில் ஒருதலைப்பட்ட அகச்சான்றாகவே இருக்க முடியும் என்பதை நினைவு கோடல் வேண்டும். நினைத்தாலே திகில் ஊட்டும் பகைவர்களாகவே ராக்ஷதர்களை, ஆரியர்கள், கருதினர். ஆதலின் அவர்கள், அதற்கேற்ப உடலமைப்பில், மனிதரைத் தின்னும் அரக்கராகவும், கொடுமையின் கோர உருவமாகவும், அவ்வாரியர்களால், இயல்பாகவே வருணிக்கப்பட்டனர். ஆனால், அதற்கு அடுத்த காலத் தமிழ்ப்பாக்களின் இலக்கிய மரபுகளை ஆராய் வதிலிருந்து நனிமிகப் பழங்காலத்துத் தமிழர் நாகரீகம் பற்றிய மிகவும் உண்மையான விளக்கத்தினைப் பெறலாம். இலக்கிய மரபு எனக் கூறும்போது, திறனாய்வில் நாமே வகுத்துக்கொள்ளும் கட்டுப்பாடுகள் எனும் பொருளு டையதாக நான் கொள்ளவில்லை. தமிழிலக்கிய மரபுகள் என்பதை, ஹொராஸ் அவர்களால் விளக்கிக் கூறப்பட்ட விதிமுறைகள் போலவும், வீர காவியப் பாக்களுக்கான அரிஸ்டாடில் விதிமுறைகள் போலவும், கவிஞர்களால், கண்மூடித்தனமாகப் பின்பற்றப்பட்ட, பிற்காலத் திறனாய் வாளர்களால் முறைப்படுத்தப்பட்டன ஆகா. பழைய தமிழிலக்கிய மரபுகள், மனித வாழ்க்கையின் மீது, இயற்கைச் சூழலின் செயல்பாடுகள் வளர்த்துவிட்ட பழைய வழக்கங் களின், கல்போலும், திண்ணிய பெரும் பிழம்பாம். இலக்கிய மரபுகள், அதிலும் குறிப்பாக, மிகவும் பிற்பட்ட காலத்தே

வலிந்து இயற்றப்பட்ட, சமஸ்கிருத, தமிழ்ப்பாக்கள் எழுவதற்கு மிகமிக முற்பட்ட காலத்தில் இருந்த, கலப்பற்ற, தூய, பழைய இலக்கிய மரபுகள், மக்களின் இயற்கையோடியைந்த உண்மையான பழக்க வழக்க ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டனவாம். தொடக்கத்தில் பாணர்கள் வானம்பாடிகளைப் போலத், தங்களை மறந்து பாடினர். அவர் பாக்கள், அக்கால மக்கள் நடத்திய வாழ்க்கையினை உள்ளது உள்ளவாறே காட்டும் உண்மையான காலக் கண்ணாடியாக இருந்தன. பழைய இலக்கிய மரபுகளைத் தோற்றுவித்த வாழ்க்கை முறைகள் வேறுபட்டு, பாக்களின் கற்பனைப் பொருள்களெல்லாம் வெறும் இலக்கிய மரபுகளாகிவிட்ட நிலையிலும், பிற்காலப் பாவலர்கள், பழங்காலத்தைச் சேர்ந்த, வழிவழி வந்த இலக்கியக் கற்பனைகளை விடாமல் மேற்கொண்டு வருகின்றனர். உதாரணத்திற்குப் பண்டை நாள்களில் கால்நடைகளே மக்களின் செல்வமாக அமைந்தன. இனத்தலைவர்கள், ஒருவர், பிறிதொருவர் கால்நடையைக் களவாடும்போது, அத் தலைவர்களுக்கிடையே போர்கள் எழுந்தன. ஆகவே, பகைவரின் கால் நடைகளைக் களவாடும்போது, அத்தலைவர்களுக்கிடையே போர்கள் நிகழ்ந்தன. ஆகவே, பகைவரின் கால்நடைகளைக் களவாடுவதில் போர் தொடங்குவதாகப் பாடல் புனைவது, மனித வரலாற்றின் வளர்ச்சி நிலையில், ஒரு கட்டத்து உண்மை நிலைகளை எடுத்துக்காட்டுவதாக அமைந்தது. பிற்காலத்தில், போருக்கு வேறு பல காரணங்களும் உருவாகி விட்டன. ஆனால், இலக்கிய மரபோ, பாவலனைப், போர்களின் மாறாத் தொடக்கமாக, தொடக்ககால ஆனிரை கவர்தலையே பாட வைக்கிறது. அவ்வாறே, கி. பி. ஆறாவது நூற்றாண்டில், வலிந்து பாடப்பெறும் தமிழ்ப் பாடல்கள் தோன்றிவிட்ட காலத்திற்கு முன்வரையும் பிற்காலப் பாடல்களில், காதல், போர் பற்றிய இரு வகைப் பாடல்களை இயற்றுவதை எண்ணில் அடங்கா, இலக்கிய இலக்கண விதிமுறைகள், விடாப்பிடியாக முறைப் படுத்தி வந்துள்ளன.

இவ்விலக்கிய மரபுகளிலிருந்து, மக்கள் மேற்கொண்டிருந்த உண்மை வாழ்க்கை நிலையைப், பாவாணர்கள் பாடிய பாக்கள், உள்ளது உள்ளவாறே எடுத்துக்காட்டிய அக்காலங்களுக்குக் கற்பனையில் பின்நோக்கிச் செல்லலாம். அந்தக் காலக் கட்டத்திலிருந்து, பாக்கள் எழுவதற்கு முற்பட்டதான ஒரு காலத்திற்குப் பின்னோக்கிச் சென்று, இந்தியர்கள், இந்நனிமிகு பழங்காலத்தில் நடத்திய வாழ்க்கைக் காட்சியை—மின்னலின் ஒளிக்கீற்றுக்கள்போல் அங்குமிங்குமாகக் காணக்கிடைக்கும் காட்சியைப் பெறலாம். நனிமிகப் பழங்காலத்தை, இவ்வாறு நுழைந்து பார்ப்பதன் மூலம், தென்னிந்தியர்களின், கி. மு. 2000 அல்லது அதற்கும் முற்பட்ட காலத்து வாழ்க்கை நிலையினைக் கண்ணெதிர் காணலாம் போல் காணலாம். அவ்வாறு செய்வதற்கு முன்னர் அந்நனிமிகச் சேய்மைக் கண்ணதாய பழங்காலத்தில் வளர்ச்சி வேகம், வானூர்தி, கம்பியில்லாத் தந்திகளின் காலமாம் இன்றைய வளர்ச்சி வேகத்திலும் மிகமிகக் குறைவு என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும். இன்றைய வாழ்க்கையின், மூச்சுவிடுவதற்கும் இடைவெளியில்லா விரைவான மாற்றமும், வழுக்குப் பனிப் பாறைகளின் ஆறு போலப் புலனாலும் உணர்ந்து கொள்ள இயலாப் பண்டைய நாட்களின் மெதுவான, சிந்தனைச் செயல்பாடுகளும் இரு கோடித் துருவங்கள் போலும் வேறுபாடுடையன. ஆகவே, கி. மு. 2000இல், எது உண்மை நிகழ்ச்சியோ, அதுவே, அதனினும் நனி மிகவும் பிற்பட்ட பழங்காலத்திலும், உண்மை நிகழ்ச்சியாகும். எண்ணுதற்கும் அப்பாற்பட்ட அப்பழங்காலத்தில், மனிதன், ஏனைய உயிரினங்களைப் போலவே, முழுக்க முழுக்க, நில இயல் கூறுபாடுகளுக்குக் கட்டுப்பட்டே வாழ்ந்தான். அவன் வாழ்க்கை, பெரும்பாலும், அவனுடைய சுற்றுச் சூழல் நிலைகளுக்கு உடன்பாடான விளைவினதாகி, அவ்வகையில், இயற்கையின் கட்டுப்பாடுகளைக் கடக்க கற்றுக் கொண்டு, துருவப் பனிப் பாறைகளோடு வெற்றிகரமாகப் போரிடவும், வானவெளியின் மேல்நிலைகளுக்குப் பறப்பதன் மூலம், நிலைத்து

ஈர்ப்பாற்றல் விதிகளின் எல்லையைக் கடக்கவும் செய்யும் இன்றைய வாழ்க்கையோடு உளம்கொளத்தக்க மாறுபட்ட தன்மையைக் கொண்டதாகும்.

காதற்பாக்களின் இலக்கிய மரபுகள், உண்மையான வாழ்க்கை நிகழ்ச்சிகளிலிருந்து பிறந்தனவே...

உலக நிலப்பரப்பின் மக்கள் வாழத்தக்க பகுதிகள், ஐந்து வகையாகப் பிரிக்கப்படும்; மனிதன் முதன் முதலில் வாழத் தொடங்கி, வேட்டையாடி உயிர் வாழ்ந்த, மரம் செடி, கொடிகளைச் சிறிய அளவிலேயே கொண்ட சிறு மலைப்பகுதி; தண்ணீர் கருதி, மரம், செடி, கொடிகள், அங்கொன்றும் இங்கொன்றுமாகி, மனிதன், முதன்முதலில், வீர ஒழுக்கங்களையும், கொள்ளையடித்து வாழும் உள்ளுணர் வையும் வளர்த்துக்கொண்ட மணல்செறிந்த பாலை; மனித வாழ்க்கையில், ஆனிரை மேய்க்கும் கூட்டத்தை, முதன் முதலில் கண்ட காட்டுப்பகுதி; மனிதன் மீன் பிடிக்கவும், படகுகளில் கடல்மேல் செல்லவும், உணவுப் பொருள் களுக்காக, மீனையும், உப்பையும் பண்ட மாற்றம் செய்யவும் கற்றுக் கொண்ட கடற்கரைப் பகுதி; உழவும், நெசவும் முதன் முதலில் தோற்றுவிக்கப்பட்ட ஆற்றுப்பள்ளத்தாக்கு எனப் பழந்தமிழ்ப் புலவர்களால் ஐந்து திணைகளாக அது பிரிக்கப்பட்டது, என்பது முதல் அதிகாரத்தில் முன்பே குறிப்பிடப்பட்டது. ஒரு நாகரீகத்திலிருந்து மற்றொரு நாகரீகத்திற்கு, மனிதன் மேற்கொண்ட பயணம், காலத்தின் நீண்ட பருவங்களை எடுத்துக்கொண்டது. ஒரு நிலப் பகுதியிலிருந்து, பிறிதொரு நிலப்பகுதிக்கு மனிதனின் குடி பெயர்ச்சியே இதற்குத் தலையாய காரணம். ஆனால், அடுத்து வேறுவகை நாகரீகம் தன்னில் இடங்கொள்ளும் போது, ஒவ்வொரு நிலப்பகுதியும், தத்தமக்குரிய நாகரீகத்தை விடாமல் மேற்கொண்டிருந்தது. அவ்வகையில், மனித நாகரீகத்தின், முதல் நிலை உருப்பெற்ற, குறிஞ்சி அல்லது மலை நாட்டில், மனிதன், பாதி நாடோடி வாழ்க்கையாம், வேடன் வாழ்க்கையை நடத்தி வந்தான். காதல் உறவு,

சமுதாய மரபுகளால் தடுக்கப்படவில்லை: கண்டதும் கொண்ட காதலைத் தொடர்ந்து உடனடிக் கூடலே அக்கால வாழ்க்கைச் சட்டமாம். குலமுறைப்படியான விருந்து பின் தொடர மணந்த இருவரைப், பொதுமக்கள் வரவேற்கும் திருமணவிழா, மிகவும் பிற்பட்ட காலத்தில் எழுந்தது; ஆனால், மணவிழாவிற்கு முந்திய காலாகாலமாக இருந்துவரும் வழக்கமாம். களவுக்காதல் ஒழுக்கம், மலைநாட்டுப் பழங்குடியினரிடையே, இக்காலத்தும் இடம் பெற்று இருப்பதுபோல், கைவிடப்படாமல் அவ்வாறே கடைபிடிக்கப்பட்டது. மலைநாட்டு ஆடவரும் பெண்டிரும், குறைந்த ஆடையில் நிறைவு கண்டனர். மனிதனை மறைக்க, கழுத்திலிருந்து தொங்கும், எண்ணற்ற கிளிஞ்சல் சரடுகள் (பிற்காலத்தில் அரைக்கச்சை அணியாம் மேகலை தோன்றுவதற்குக் காரணமாய் அமைந்த) மலர்களாலும் இலைகளாலும் ஆன மாலைகள், இவையே போதுமானவையாயின. குறிஞ்சி நாட்டு உட்பகுதியில் வாழும் குறவரிடையே, இந்த ஆடை கைவிடப்படாமல் இன்றும் உளது; இக் குறவர் மலைகளிலிருந்து இறங்கிக் கீழ்நாடுகளுக்கு வரும்போது, உடை வகையில் மேற்கொள்ளும் ஒரே மாற்றம், மலர்களாலும், இலைகளாலும் ஆன அரைக்கச்சைக்குப் பதிலாகக் கிழிந்த துணியின் சிறு துண்டை மேற்கொள்வது ஒன்றே. குறவரிடையே, பாக்கள் முதல்முதலில் எழுந்தபோது, பாவாணர்கள் மலைநாட்டுத் தலைவர்களின், புணர்ச்சிக்கு முந்திய கள்ளக் காதலை, அவர்கள், தங்கள் — காதலியர்க்குத், தழை உடை எனப்படும் இலை ஆடைகளையும், அம்மலை நாட்டுத் தலைவர்கள் வேட்டையில் கொன்ற புலிகளின் பற்களையும் கொடுப்பதையே இயல்பாகப் பாடினர். இப் பற்கள், மாலையாகக் கோக்கப்பட்டு, கழுத்திலிருந்து தொங்க அணியப்பட்டு, புலிப்பல் தாலி என அழைக்கப்படும். (புலிப் பல்லால் செய்யப்பட்டு, மணம் ஆவதற்கு அறிகுறியாகக் கழுத்திலிருந்து தொங்கும், இப் புலிப்பல் தாலி, இளஞ் சிறுவர்களாலும் அணியப்பட்டது) பிற்காலத்தில், இதிலிருந்தே பொன்தாலி உருப்பெற்றது. பிற்காலத்தில்

புணர்ச்சிக்கு முந்திய களவுக்காதல், குறிஞ்சித் திணைப் பாடல்கள் என்ற ஒருவகை பாடல்களுக்கு மட்டுமே கருப் பொருளாதல் வேண்டும், மலைநாட்டு மாவின மரவினங்க ளோடும், இலை ஆடைகளைத் தருவதோடும், காதல் நோய்க்கு, அப்பெண்ணைக் கொண்டுவிட்ட மலைநாட்டுக் கடவுளாம் முருகனையே காரணம் காட்டி, வெறியாடல் மூலம், அந்நோய் தீர்த்தலோடும் மட்டுமே தொடர்பு படுத்தல் வேண்டும், என்பது இலக்கியமாகிவிட்டது; உண்மைக்காதல் ஒழுக்கத்தின் ஒரே சீரானபோக்கில் அமையாத இந்நிகழ்ச்சிகளெல்லாம், குறிஞ்சித்திணைப் பாக்களின் கருப்பொருளாக வகைப்படுத்தி வகுக்கப்பட்டன.

அதுபோலவே, கால்நடைகளைக் காத்தற்பொருட்டு ஆயன் பிரிந்து செல்வதுபோலவும் சிறு பிரிவுகளால் நேரும் கடுந்துயரும், இருவரும் பின்னர் இணைந்த வழிப் பிறக்கும் பெருமகிழ்ச்சியும் (காட்டோடும் காடுசார்ந்த நிலத்தோடும் தொடர்புடையதான முல்லைத் திணைப் பாடல்களின் கருப் பொருள்களாக) முடிவு செய்யப்பட்டன; முல்லைத்திணைப் பாக்கள், தம்முடைய கற்பனைகளை, அம்மேய்ப்புலத்து இயற்கைப் பொருள்கள் பழக்கவழக்கங்கலிருந்தே பெற்றுக் கொண்டன.

நெய்தல் திணைப்பாடல்கள், மீன்பிடி பெருந்தொழில் இன்றியமையாததாக ஆக்கி விட்ட நெடும்பிரிவு, உலர்ந்த மீனாம் கருவாட்டு நாற்றத்தை இடைவிடாது வெளிப் படுத்தும், கருமை நிறம் மின்னும் மேனி அழகியாள்பால் அன்புகாட்டல் ஆகியவற்றைப் பாடற் பொருளாக்குகின்றன. வரண்ட பாலைத்திணைப்பாடல்கள், பெருமணல் பரந்து, இடையீடின்றி நீண்ட, வரண்ட நிலப்பரப்பில் வாழ்வோரின், கொள்ளையடித்துண்ணும் வாழ்க்கையின் இடை நிகழ்வாம் நெடும்பிரிவின் தொடர்பாகப் பிறந்தன ஆகவே, நெடும் பிரிவுதரும் கடுந்துயர் பாலை பாக்களின் கருப்பொருள் ஆயின.

தமிழ்க் கவிதை உலகின் ஆட்சி எல்லைக்குள் அவல நிகழ்ச்சி எனப்படுவன, தடை செய்யப்பட்ட ஒன்று, ஆகவே, பழந்தமிழர் மனப்போக்கு தாங்கிக் கொள்ளக்கூடிய துன்பியல் பாக்களின் மிக நெருங்கிய அணுகு நிலை இவ்வளவே.

முடிவாக, முறையான திருமணம், அத்திருமண உறவைத் தொடர்ந்து அன்பு வாழ்க்கையாம் கற்பு நெறி, அதன் பாதையில் முள் உறுத்தும், பரத்தையர் ஒழுக்கத்தால், மனை வாழ்க்கையின் சீர்கேடு, அதன் விளைவாம், மணங்கொண்ட காதலரிடையே ஊடல், அவ்வூடலைத் தொடர்ந்து வரும் மகிழ்ச்சி தரு கூடல் ஆகியவை, ஆற்றுப் பள்ளத்தாக்குப் பாடல்களாம், மருதத்திணைப்பாக்களின் கருப்பொருள் களாம். நீர் நிறைந்த நெல்வயல்களில் சிலமாதக் கடின உழைப்பை அடுத்து, நெற்கதிர் முற்றும் பருவத்திலும், நெல்மணிகள், களஞ்சியத்தில் சேர்க்கப்பட்டு, அடுத்த ஆண்டு உழவிற்குப் பக்குவப்பட்டுக் கிடக்குமாறு நிலம், ஓய்வுக்கு விடப்பட்ட பின்னரும், இயல்பாகவே திணிக்கப் பட்ட ஓய்வு தொடர்ந்து கிடைக்கும் உழவுத் தொழில், நடை பெறும் நிலப்பகுதியில், நாகரீகத்தின் மெருகேற்றும் மலர்ந்து வளர்ந்ததை உணர்ந்து கொள்வது எளிது; இவ்வோய்வுப் பருவத்தில், காதலர்களின் ஊடலும், இன்ப லீலைகளுமே, கிடைக்கக் கூடிய இன்பப் பொழுதுபோக்குகளாகும்.

**நில இயல்புக்கு ஏற்ப அமையும் போர்ப்பாடல் மரபுகள்:**

காதல் அல்லாமல், பாக்களின் மற்றொரு கருப்பொருள் போர். குறிஞ்சி நிலத்தில், போர், வெட்சி எனப்படும் ஆனிரை கவர்தலில் அடங்கியிருந்தது. ஆனிரை கவரப் படையெடுத்துச் செல்வார் வெட்சி மலர்களால் ஆன மாலை அணிந்து கொள்வர் ஆதலின், அப்போர், வெட்சி என அழைக்கப்பட்டது. கவர்ந்து சென்றாரிடமிருந்து ஆனிரை களை மீட்டுக் கோடல், அது போலும் ஒரு காரணத்தால், கரந்தை எனப் பெயரிடப்பட்டது. அடுத்து இருந்த காட்டு நிலம், தற்காப்புப் போர் நிலையில், இயற்கை முதல்தரமாக

அமைந்து, அதனால் காவற்காடு என அழைக்கப்பட்டது. வஞ்சி மாலை அணிந்த படைத்தலைவர்கள், காட்டு நிலத்துள், படையெடுத்துச் சென்றனர்; இது வஞ்சித்திணை என அழைக்கப்பட்டது. அரசர்கள், தங்கள் தலைநகர்களை, ஆற்றுப்பள்ளத்தாக்குப் பகுதிகளில் அதாவது மருதத்தில் நிறுவியபோது, தங்கள் காப்பிற்காகக் கோட்டைகளைக் கட்டினார்கள்; முற்றுகையும், அது தொடர்பான செயல்களும் போர் முறைகளில் ஓர் அங்கமாகி விட்டன. இந் நடவடிக்கைகளின்போது, உழிஞைக்கொடி அணிந்து கொள்ளப்பட்டது. அதனால் அந்நடவடிக்கைகளை விளக்கும் பாடல்கள் உழிஞை என்ற இனத்தின் கீழ் வந்தன. போர்த் தந்திரங்களைப் பேராண்மைகளை மேற்கொள்ள நேரிடும், எதிர் எதிர் நின்று செய்யும் போர்கள், மரங்கள் செறிந்த காட்டு நிலங்களுக்கும், விளை நிலங்களுக்கும் வெகுதொலைவிலான, திறந்த போர்க்களத்திலேயே இயலுமாதலின், நெய்தல் என அழைக்கப்படும் கடற்கரைக்கு அணித்தாக உள்ள, அகன்ற சம நிலங்களோடு தொடர்புடையதாகி, இந் நிகழ்ச்சிகளில், தும்பை மாலைகள் அணிந்துகொள்ளப் பட்டமையால், தும்பை என அழைக்கப்பட்டன. இறுதியாகப் பாலை நிலத்தோடு தொடர்புடைய காதலர்களின் பிரிவோடு ஒத்திருப்பது, பாவாணர்கள், வாகை மலர்மாலை அணிந்து கொண்டு, போரின் அவலம் போர்களிலிருந்து விளையும் நாட்டழிவுகளைப் பாடுவது போலவே, வெற்றிகளையும் பாடும், வாகை ஆகும்.

பல்வேறு வகைப்பட்ட இத்திணைப் பாடல்களெல்லாம் மலர்களால் பெயர் சூட்டப்பட்டுள்ளன என்பது ஈண்டுக் குறிப்பிடல் வேண்டும். ஒவ்வொரு மலரும் ஒவ்வொரு நிலத்தின், தனிச்சிறப்பியல்பு வாய்ந்த விளைபொருளாம். இம்மலர்களால் ஆன மாலைகள், காதல் துறையின், அல்லது போர்த்துறையின், விளக்கப்படும் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சியின் சின்னமாக அணிந்து கொள்ளப்பட்டன. மலர்கள் போர்க்கள நிகழ்ச்சியின்போது, போர் வீரர்களை இனம்பிரித்து உணர்த்தும் சின்னங்களாக அமைந்தன. பழந்

தமிழர்கள், மலர்களில் பேரின்பம் கண்டனர்; தங்களைத், தங்கள் தொழிற்கருவிகளை, ஏனைய உடமைகளைத், தங்கள் வீடுகளைப், பந்தல்களை, நனிமிகப் பழங்காலம் தொட்டே, இலைகளாலும், மலர்களாலும் அழகு செய்தனர்.

கொடிகள், இலைகள், மலர்கள், விலங்குகள் போலும் வடிவங்களைச் செதுக்குவதன்மூலம், தங்களுடைய தொழிற்கருவிகள், வீடுகள், தட்டுமுட்டுப் பொருள்கள், பாத்திரங்கள் ஆகியவற்றை அழகு செய்ததற்கும், இயற்கைப் பொருள்கள் மீது கொண்ட அதே காதல்தான் காரணமாம். இன்றைய நாட்களில்தான், தமிழர் வீடுகளில், அழகிழந்த, அணி நலன் இழந்த, விசைப் பொறிகள் வனைந்து குவிக்கும் பண்டங்கள், அணி அழகுமிக்க பண்டைய பண்டங்களுக்கு மாற்றாக இடம் பெற்றன. இன்றைய நவ நாகரீக வாழ்க்கையை மேற்கொண்டு விட்டோர் உள்ளங்களிலிருந்து, கவின் கலையுணர்வைத் துடைத்து அழித்து விடுகின்றன. தங்கள் பாடல்களில் போலவே, தங்கள் வாழ்க்கையிலும், தங்கள் எண்ணங்களை, அடையாள வடிவில் வெளிப்பட உணர்த்தும், மலர்களின் மொழி ஒன்றைத் தமிழர் வளர்த்தனர்.

**இலக்கிய மரபுகளின் முறையான வளர்ச்சி :-**

பாக்களின், இவைபோலும் பல்வேறு மரபுகளெல்லாம், தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் விளக்கியவாறே, (இனி வெளிவரவிருக்கும், "பண்டைத் தமிழர்கள்" (Ancient Tamils) என்ற என் நூலில் முழுமையாக ஆராயப்பட்டுள்ளன. ஆகவே, அவ்விலக்கண நூலில் விளக்கிக் கூறப்பட்டிருக்கும் இலக்கிய மரபுகள், கீழே குறிப்பிட்டிருக்கும் கால ட்ட வரிசையில்தான் வளர்ந்திருக்க வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவது ஒன்றையே ஈண்டுக் கருத்தில் கொண்டுள்ளேன்.

1) மனித நாகரீகத்தின் ஐந்து படிநிலைகளும், இயற்கை நிலப் பகுதிகள் ஐந்திலும் உருப்பெற்று மெல்ல மெல்ல வளர்ந்த காலகட்டம். (இது ஆயிரம் ஆயிரம் ஆண்டு

களாக எண்ணப்பட வேண்டிய மிக நீண்ட கால கட்டமாதல் வேண்டும்)

2) பாவாணர்கள், ஒவ்வொரு நிலப்பகுதியிலும், பாடத் தொடங்கி, அந்நிலப்பகுதியில், மக்கள் வாழ்க்கை நிலைகள் அந்நிலங்களின் மாவடை, மரவடைகள், சுற்றுச்சூழலுக்கு எதிர் ஏற்று வளர்ந்த பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைத் தங்கள் பாக்களில் தங்களை அறியாதே எதிர் ஒலிக்கும் காலகட்டம்.

3) ஒரு பாட்டு, ஐவகை நிலப்பகுதியில் எந் நிலப்பகுதியில் பாடப்பட்டிருந்தாலும், அது, குறிப்பிட்ட ஒரு ஒழுக்கம் பற்றிக் கூறுவதாயின், அதை, அந்நிகழ்ச்சிக்கு உரியதிணைக்கே உரியதாக ஆக்கச் செய்யும், மாற்றுதற்கியலா இலக்கிய மரபுகளாகப், பாவணர்களின் பாடற்பணிகள் உறுதிப்படுத்தப்பட்ட காலகட்டம். இயற்கை நிலப் பிரிவு, மற்றும் அந்நிலத்து நிகழ்ச்சிகளைக் கூறும், ஒருவகைப் பாடல், என்ற இருபொருள்களை, ஒரு நிலையில் இயல்பாகக் குறித்த, திணை என்ற அச்சொல், இப்போது, இலக்கிய மரபாக, ஐந்து இயற்கை நிலப் பிரிவுகளில், ஒரு நிலப் பிரிவோடு தொடர்பு படுத்தப்பட்டுள்ளது.

இம் மரபுகளெல்லாம், தொல்காப்பியனார் இயற்றிய தமிழ் இலக்கணமாம், தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும், கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்படாத காலத்தில் இயற்றப்பட்டு, இன்றுவரை அழியாமல் இருக்கும் மிகப் பழைய தமிழ் நூலாம் இந்நூல், செய்யுள் இலக்கணம் பற்றிய, இப்போது ஒன்றுகூடக் கிடைக்காத, பழைய விதிமுறைகள் பலவற்றைச் சுட்டுகிறது., அவ்விலக்கணம் தோன்றுவதற்கு அடிப்படையாய் அமைந்த, பெரும்பகுதி அல்லது முழுவதும் அழிந்துபோன தமிழ்ச் செய்யுள் இலக்கியப் பெருந்தொகுதி பண்டு இருந்ததை ஊகிக்கச் செய்கிறது.

காதல், போர் ஆகிய நெறிகளில் நிகழும், பாடல் புனைவதற்கு உரிய கருப்பொருள்களாகும், நூற்றுக்கணக்கான நிகழ்ச்சிகளைத் தொல்காப்பியனார் விளக்கியுள்ளார்.

இலக்கண ஆசிரியன், காதல், போர் பற்றிய ஒழுக்கங்களில், நடைபெறக் கூடிய பல்வேறு நிகழ்ச்சிகள் குறித்து முன்னதாகவே ஆராய்ந்து வகைப்படுத்தி இலக்கணம் வகுத்தான். அதன் பின், பாவாணர்கள், அவ்விலக்கண ஆசிரியன் ஆராய்ந்து வகைப்படுத்திய நிகழ்ச்சிகள் ஒவ்வொன்று குறித்தும் பாக்களைப் புனைந்தனர் எனில், எள்ளி நகையாடற்குரியது. ஆகவே, இந் நிகழ்ச்சிகளில் ஒவ்வொரு நிகழ்ச்சி குறித்தும், தம் காலத்திற்கும்முன் வாழ்ந்த பாவாணர்களால் பாடப்பெற்ற ஒரு சில பாக்களையாவது, தொல்காப்பியனார், தம் உள்ளத்தில் கொண்டிருக்க வேண்டும்.

அழிந்துபடாமல் இப்போது கிடைக்கும் பழம் பாக்கள் அனைத்துமே, தொல்காப்பியர் வாழ்ந்த காலத்திற்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தனவே. தொல்காப்பிய உரையாசிரியர்கள், தொல்காப்பிய விதிகள் பலவற்றிற்கான எடுத்துக்காட்டுகளைப், பிற்காலத்தைச் சேர்ந்த இப் பாக்களில் காணல் அரிது என்பதை உணர்கின்றனர். சில இடங்களில், அவர்கள் காட்டும் பொருள் விளக்க மேற்கோள்கள் பொருத்தமற்றவை ஆகின்றன; பல நேரங்களில், தொல்காப்பிய விதிகளுக்கான மேற்கோள்களைக் கொடுக்கவே இயலாது போக, இயலும் இடங்களில் பொருந்தும் மேற்கோள்களைக் கண்டுகொள்ளுமாறு படிப்பவர்க்கே விட்டு விடுகின்றனர். கூறிய இவ்வெல்லாவற்றிலுமிருந்து தொல்காப்பியர் காலத்திற்கு முன்னர், மிகப் பரந்த தமிழ் இலக்கியம் இயற்றப்பட்டது என்பது தெளிவாகிறது. இவ்விலக்கியம் வளர்ந்த காலம், ஐந்நூறு ஆண்டுகள் என்பது, கூட்டல், குறைத்தல் இல்லா, ஓர் அளவான மதிப்பீடாம்.

இவ்விலக்கியம், அதனுடைய, அழிக்கலாகா, உரம் வாய்ந்ததாக ஆக்கப்பட்டுவிட்ட பாவின மரபுகளோடு இணைந்து தோன்றுவதற்கு முன்னர், இந்த மரபுகளெல்லாம்,

வெறும் மரபுகளாக இல்லாமல், உண்மை நிகழ்ச்சிகளாக இருந்த, உதாரணத்திற்குப், புலவன், காதல் பிறப்பதை, மலைநாட்டுக்கு உரியதாக, பா மரபுக்காகக் கற்பித்துக் கூறாமல், தன்னுடைய பாக்களில் ஐந்து இயற்கை நிலக் கூறுகளின் உண்மை வாழ்க்கை நிலைகளை, உள்ளது உள்ள வாறே எதிரொலித்த வேறு ஒரு இலக்கியம் இருந்திருக்க வேண்டும். அந்த மிகத் தொலை நாட்களில், காதலர்களின் தற்காலப் பிரிவு, முல்லை, நெய்தல், மருதம், பாலை ஆகிய நிலங்களுக்கு உரியதாக மரபுக்காக ஏற்றிப் பாடாமல், அந் நிலங்களில் வாழ்ந்து அந்நிலங்களைப் பாடிய புலவன், அந்நிலம் ஒவ்வொன்றிலும், தான் கண்ணெதிரில் கண்ட, காதலர்கள் பிரிவால் நேரும் கருத்துரையை விளக்கிக் கூறினான். தொல்காப்பியனார், தம்முடைய இலக்கண நூலுக்கு ஆதாரமாய்க் கொண்ட மரபுவழிப்பாடல்களுக்கு முற்பட்டதான, இயற்கைப் பாடல்கள் என அழைக்கப்படும் பாடல்களின் வளர்ச்சிப் பருவத்திற்கு, ஐந்நூறு ஆண்டுகளை வகுப்பது. மிகைப்படுத்தப்பட்ட மதிப்பீடுகளாகா. இவ் வகையில் தமிழ் இலக்கியத் தோற்றத்தின் பிற்பட்ட கால எல்லையாக, ஏறத்தாழ கி. மு. 1000ஐ அடைகிறோம். இவ்வகைப் பாக்களின் வளர்ச்சிக்கு வழி செய்து, அப்பாக் களில் எதிர் ஒளி காட்டும் நாகரீகம் வளர்ச்சி பெறுவதற்குப் பலநூறு ஆண்டுகளை எடுத்துக் கொண்டிருக்க வேண்டும்; ஆகவே, தமிழர்களின் பழம்பெரும் நாகரீகத்தை, அவர்கள், கிறித்துவுக்குச், சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அடைந் திருக்க வேண்டும் என முடிவு கொள்ளலாம்.

**பாட்டுடைத் தலைவர்களாகப் பழங்குடி இனத் தலைவர்கள் :-**

பாவாணர்கள், பண்டைக்காலம் தொட்டே, பரிசில் பெறும் நோக்கோடுதான் பாடினார்கள். ஆகவே, அவர் களுடைய பாட்டுடைத் தலைவர்களெல்லாம், பழங்குடி இனத் தலைவர்களே. போர் இத் தலைவர்களால் கட்டாய மாக மேற்கொள்ளப்பட்டது. ஒரு சில நிகழ்ச்சிகளின் போது மட்டுமே, ஆற்றல்மிகு அருஞ்செயல் ஆற்றும் வாய்ப்பு,

பொதுமக்களுக்கு வாய்க்கும். ஆனால், போரில் ஆற்றும் அருஞ்செயல்களுக்கான பெருமையெல்லாம், பொதுவாகப் போர்ப்படைத் தலைவர்களையே சென்று சேரும். ஏழையின் காதலைப் பாடினால் பரிசு கிட்டாது. ஆகவே காதற் பாக்களின் பாட்டுடைத் தலைவர்களும் அரசர்களே; அவ்வகைப் பாட்டுடைத் தலைவர்களும், அவர் வழிவந்தவர்களும், அவர்கள் வாழும் நிலத்தோடு தொடர்புடைய சொல்லால் பெயரிடப்பட்டனர். "திணைகளுக்குரிய பழங்குடித் தலைவர்களின் பெயர்கள், பெயர் அதாவது பண்பு, வினை, அதாவது செயல் ஆகிய இரண்டை அடிப்படையாகக் கொண்டு வருவனவாம்", என்றும், "ஆயர், வேட்டுவர் என்ற, திணைவாழ் மக்களுக்குரிய பெயர்கள், அத்திணை வாழ் மக்களின் தலைவர்களுக்கும் பொருந்தும்" என்றும் "ஏனைய நிலங்களில் வாழும் மக்களைக் குறிக்க வரும் திணைப் பெயர்களை ஆராய்ந்து காணின், அவையும் இவை போன்றனவே; அவை, அத்திணை மக்களின் தலைவர்களுக்கும் பொருந்தும்" என்றெல்லாம் கூறுகிறார் தொல்காப்பியனார்.

"பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய
திணைதொறும் மரீஇய திணைநிலப் பெயரே".
"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே".
"ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை
ஆனா வகைய திணைநிலப் பெயரே".
—(தொல் : அகத்திணை இயல் : 20, 21, 22.)

பழங்குடி மக்களின் இனப்பெயர்களாக இருந்த அப் பெயர்களெல்லாம், இப்போது, சாதிப் பெயர்களாகிவிட்டன. உ-ம் : குறவர், பரதவர், இடையர், வெள்ளாளர், குறிப்பிட்ட ஒரு நிலப்பகுதியிலேயே வாழ்ந்து, அப்பழங்குடியினரிடையே இயற்கைச் சூழல், விதித்துவிட்ட தொழில்களுக்கே உரிய பழக்க வழக்கங்களை மேற்கொண்டவரிடையே, தங்கள் தங்கள் இனத்தவர்க்குள்ளாகவே, திருமண உறவு கொள்ளும்

முறை, இடம் பெற்று விடுவது இயல்பே. இவ்வகையான உறவுக் கட்டுப்பாடல்லாமல், பழங்குடி மக்களின் பழக்க வழக்கங்கள்பால், இவ்வினப் பெண்டிர் காட்டும் பற்றுமே, பழங்குடி இனம் பிற்காலத்தே சாதியாக மாறியதற்குக் காரணமாம். பழங்குடி இனத்தவர் தலைவன் அல்லது அரசனின் செல்வாக்கும், பழங்குடியினர் பழக்க வழக்கங்களை, அழியா நிலைபேறுடையதாக ஆக்கத்துணை நின்றது: ஆட்சிமுறைஅறிவு, வளர்ந்திருந்தது, அல்லது நூல் வழியிலோ, அல்லது நடைமுறையிலோ, ஒருவகை ஆட்சிமுறை பின்பற்றப்பட்டது என்பதை உணர்த்த, பண்டைத் தமிழ்ப் பாக்களிலோ, தொல்காப்பியப் பொருளதிகாரத்திலோ ஏதுவும் இல்லையாகவே, பழங்குடித் தலைவனின் அரசுரிமை, நாகரீக வளர்ச்சி பெறாக் காட்டுந்தன இயல்பினதாகும்.

**ஒவ்வொரு நிலத்துக்குமான கவி மரபுகள் :-**

பல்வேறு நிலங்களுக்கும் உரிய தெய்வங்கள், அந்நிலங்களுக்கு உரிய கருப்பொருள்களில், முதல்வனவாகக் கூறப்படுகின்றன. திறனாய்வுக்காக, அவை, உடனடியாக எடுத்துக் கொள்ளப்படும். அவை தவிர்த்த ஏனைய கருப் பொருள்கள், அந்நிலம் ஒவ்வொன்றிற்கும், அந்நிலம் பற்றிய பாக்களுக்கும் உரியனவாய, உணவுப் பொருள்கள், மாவினங்கள், மரவினங்கள், பறவைகள், பறைகள், தொழில்கள், யாழ்கள் முதலியனவாம்.

> "தெய்வம், உணாவே, மா, மரம், புள், பறை,
> செய்தி, யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென மொழிப''.
>
> —தொல்காப்பியம் : பொருளதிகாரம் : 18

அக்கருப்பொருள்களை வரிசைப்படுத்திக் காண்பது, பழந் தமிழ்ப் புலவர்கள், எத்துணை நுண்ணிய நோக்கர்கள், இயற்கையோடு உண்மையான உறவு கொண்டிருப்பதில் எத்துணை ஆர்வமுடையவர்கள் என்பதைக் காட்டுகிறது. முல்லைக்கு உரிய உணவு, வரகும், சாமையும் அவரையும்,

மாவினம்: மானும், முயலும். மரம்: கொன்றையும், குருந்தும். பறவை; காட்டுக் கோழியும், கௌதாரியும். தொழில்: நிரை மேய்த்தலும், வரகு, சாமை திரட்டலும். பொழுதுபோக்கு: ஏறுதழுவல். மலர்: இந்நிலத்துக்குத் தனிப்பெயர் தந்த முல்லையும், பிடவும், தளவும் தோன்றியும், நீர்: காட்டாறு.

குறிஞ்சிக்குப் பொருந்தும் உணவு: ஐவனம் எனப்படும் மலை நெல்லும், மூங்கில் அரிசியும், தினையும். மாவினம் புலியும், யானையும், கரடியும், காட்டுப்பன்றியும். மரம்: அகிலும், ஆரமும், தேக்கும், திமிசும், வேங்கையும். பறவை: கிளியும், மயிலும். தொழில்: தேன் அழித்தலும், தினை விளைத்தலும், கிளி கடிதலும், வேட்டையாடலும். மலர்கள்: குறிஞ்சியும், காந்தளும், சுனைக் குவளையும்; நீர்: அருவி நீரும், சுனை நீரும்.

மருதத்துக்குரிய உணவு: செந்நெல்லும், வெண்ணெல்லும்; மாவினம்: எருமையும், நீர் நாயும். மரம்: மருதமும், காஞ்சியும், வஞ்சிக் கொடியும். பறவை; தாராவும், நீர்க்கோழியும், அன்னமும், அல்லிசைப் புள்ளும். தொழில்: நடுதலும், களைக்கட்டலும், அரிதலும, கடாவிடுதலும்; மலர்: தாமரையும், கழுநீரும்; நீர்: ஆற்று நீரும், கிணற்று நீரும், குளத்து நீரும்.

நெய்தல் திணைக்குரிய உணவு: உப்பு, மீன் விற்றுப் பெற்ற பண்டங்கள். மாவினம்: உப்பு மூட்டை சுமக்கும் பொதிமாடு. மரம்: புன்னையும், ஞாழலும், கண்டலும்; பறவை: கடற்காக்கை; தொழில்: மீன் பிடித்தலும், உப்பு விளைத்தலும், அவற்றை விற்றலும். மலர்: கைதையும், நெய்தலும்; நீர்: மணற்கிணறும், உவர்க்குழியும்.

பாலைக்குப் பொருந்தும் உணவு: ஆலனைத்தும், சூறையாடியும் கொண்ட பொருள்கள்; மாவினம்: வலுவிழந்த யானையும், புலியும், செந்நாயும். மரம்: வற்றிய இலுப்பை, ஓமை, உழிஞை, ஞெமை, பாலை; கள்ளி,

தாழை முதலியன. பறவை : கழுகும், பருந்தும், புறாவும் ; தொழில் : ஆறலைத்தலும், சூறைகோடலும் ; மலர்கள் : மரா, குரா, பாதிரி ஆகியவை ; நீர் ; அறுநீர்க் கூவலும் சுனையும். இப்பொருள்களும், தொழில்களும், அவ்வவற்றின் திணைகளுக்குரிய பாக்களில் இடம்பெற்றிருப்பதற்கான எடுத்துக்காட்டுகள், அடுத்துவரும் பல அதிகாரங்களில், மேற்கோள்களாகக் கொடுக்கப்படும் செய்யுட்களில் காணலாம்.

சமயம் :-

மனிதன், தொழிற்கருவிகளையும், உணவு சமைக்கும், ஆடை நெய்யும், சொல்வழங்கும் உயிரினம் மட்டுமல்லன், சமய உணர்வு வாய்ந்த உயிரினமும் ஆவான். உயிரினங்கள் அனைத்திலும், மனிதன் ஒருவன்தான், தன்னை அச்சுறுத்தும் உண்மையான அல்லது கற்பனையான இன்னல்களைத் தீர்த்துத், தான் நீண்ட காலமாக, ஆர்வத்தோடு அவாவி நிற்கும் பெரும்பொருளைக் கொடுத்தருளுமாறு எல்லாவற்றுக்கும் மேலான இறைவன் துணையை வழிபாட்டின் மூலம்வேண்டும், அல்லது வற்புறுத்தும் முறையைக் கண்டவன்.

இச் சமய வழிமுறைகளெல்லாம் சமயச் சார்புடைய மாயமந்திர வழிபாடுகள், சமயங்களுக்கிடையே, உயர்வு தாழ்வு கற்பித்து வேற்றுமை காணல், பாராட்டும், காணிக்கை வழங்கலுமாகிய முறைகள் ஆகியவற்றை உள்ளடக்கிய தாகும். மனிதன், கட்டளைகளுக்கு, இயற்கையின் ஆற்றல்களைப் பணியுமாறு வற்புறுத்தும் வழிமுறையாம் மாயாஜால அநாகரீகக் காட்டுமுறை பிற்பட்ட நாகரீக நிலையைச் சார்ந்ததாம். இச்சமயச் சடங்கு முறை என்பது, சமயச் சார்பான விருந்து [இது, உண்ணா நோன்பைத் தொடர்தலும் கூடும்] சமயச் சார்பான பாடல் கூட்டாகவும் தனித்தும் சமயச் சார்பான ஆடல்களை உள்ளடக்கியதாம். பிற்காலத்தில், விருந்து, பாடல், ஆடல், நாடகம் ஆகியவை, சமய, நெறியிலிருந்து பறிக்கப்பட்டு, உடன்டி இன்ப நுகர்வுக்காக மேற்கொள்ளும் செயல்களாக ஆக்கப்பட்டு விட்டன

ஆனால், இவ்வேறுபாடு, நியபேறுகொள்ள, நீண்ட காலத்தை எடுத்துக் கொண்டது.

மனித வாழ்க்கை வளர்ச்சியின் தொடக்க காலத்தி லிருந்தே, அவன், சில கடவுள் அல்லது கடவுள்களை வணங்கி வந்தான் என்பதில் ஐயம் இல்லை.

அப் பழங்காலத்தில் குடிப்பெயர்களில், அக் குடிகளுக்கு உரிய அடையாளச் சின்னங்களைக் காணவல்ல, இருளிஸ், வன்னியர் போலும், பல்வேறு குழுக்களாக மக்கள் பிரிக்கப் பட்டனர். சமஸ்கிருத இலக்கியத்தில் வானரர், (குரங்குப் பழங்குடி) கஜர் (வெள்ளாட்டுப் பழங்குடி) கருடர் (கருடப் பழங்குடி) மட்சர் (மீன் பழங்குடி) விருஷ்ணர் (செம்மறி யாட்டுப் பழங்குடி) நாகர் (பாம்புப் பழங்குடி) என்ற அடையாளச் சின்னக் குடி பெயர்களைக் காண்கிறோம். இவர்களில் நாகர்கள், வரலாற்றுக் காலத்தில், வடகிழக்கு, வடமேற்கு, மத்திய, தென்னிந்திய மாநிலங்களில் வாழக் காண்கிறோம். ஆதலின், அவர்கள், பரவலாக வாழ்ந்தவர் களாகத் தெரிகிறது. நாக வழிபாட்டுமுறை பெரும்பாலும், மலைநாட்டுக் குகைவாழ் மக்களிடையே தோன்றியதாகும். குலமரபு காட்டும் அடையாளச் சின்னக் கடவுள்களே அல்லாமல், மரங்கள், ஆறுகள், மலைகளில் வாழும் கடவுள்கள், காவல் தெய்வங்கள், கிராம தேவதைகள், எல்லையம்மன்கள், துயர் தரும் பேய்கள், எண்ணற்ற ஆவிகள், பல்வேறு சிறு தெய்வங்களையும் மக்கள் வழி பட்டனர். இந்தப் பழைய கடவுள் வழிபாட்டு முறைகளில், பெரும்பாலானவை, மக்களில், சமுதாய நிலையில் தாழ்ந் திருப்பவர்களிடையே, தங்களுடைய நாகரீகமற்ற காட்டு மிராண்டிக் கரடுமுரடான நிலையில், இன்றும் இடம் பெற் றுள்ளன. சமுதாயத்தில் மேல்தட்டில் நிற்கும் மக்களும் துன்பக் காலங்களில், பேய், பிசாசு போலும் ஆவிகளின் துணை நாடிச் செல்வதை, அடியோடு விட்டுவிட்டாரல்லர்.

இவற்றில் ஒரு சில வழிபாட்டு முறைகள், ஒரு படி உயர்ந்த நாகரீக நிலையை உணர்த்தும், உயர்ந்த வழிபாட்டு

முறைகளால் மேற்கொள்ளப்பட்டுவிட்டன. அவ்வகையில், நாகவழிபாடு, முருகவழிபாட்டோடு இணைந்து ஒன்றாகி விட்டது. அம் முருகன் ஆரியர்களின் சுப்பிரமணியனோடு மீண்டும் இரண்டறக் கலந்து ஒன்றாகி விட்டான். காரணம், பக்தனின் ஊனக் கண்களுக்குச் சுப்பிரமணிய சுவாமி, பாம்பு வடிவிலேயே காட்சி அளிக்கிறான். முருக பக்தன் அவன் துணை வேண்டித் தொழும்போது, பாம்பு தோன்றுவது, அக் கடவுள், அவன் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு விட்டது என்பதே பொருளாம். மர வழிபாட்டுமுறை, சிவ வழிபாட்டு முறையோடு கலந்துவிட்டது. இப்போதுள்ள சிவன் கோயில்களில், மிகவும் புகழ் பெற்ற கோயில்களெல்லாம், ஏதோ ஒரு நிலையில், சில மரங்களோடு, நெருக்கமாகத் தொடர்பு கொண்டுள்ளன. அதுபோலவே, உடலுக்கு நலம் தரும் துளசி வழிபாடும், விஷ்ணு வழிபாட்டோடு கலந்துவிட்டது. நாக வழிபாட்டிலிருந்து, சிவன், எண்ணற்ற பாம்பாபரணங்களைப் பெற்றான். விஷ்ணு, ஆயிரம் தலைகளைக் கொண்ட படுக்கையைப் பெற்றான். புத்தர் தாமே ஒரு நாகர் ஆகிவிட்டார். பல புத்த, ஜையினக் கடவுள்கள், ஐந்து தலை நாக வடிவினராகிவிட்டனர்.

ஆனால், ''ஆஜமிகம்'' எனப்படும், நாகரீக நிலையால் உயர்ந்த இவ்வழிபாட்டு முறைகள் தோன்றுவதற்கு நெடுங் காலத்திற்கு முன்பே, உள்நாட்டுப் பேய்கள், மரம், ஆறு, மலைகளில் குடிகொண்டிருக்கும் ஆவிகளைக்காட்டிலும் உயர்ந்த கடவுள்கள்; நாட்டில் தோன்றி வளர்ந்து நின்றன. இக் கடவுள்கள், ஒவ்வொரு நிலப்பகுதியிலும், அவ்வந்நிலங்களின் நில இயல்புகளுக்கு ஏற்ப, தனித்தனியே தோன்றி வளர்ந்தன. மலைநாட்டுத் தெய்வம் செம்மேனிக் கடவுள், அதாவது சேயோன். அவன்; புணர்ச்சிக்கு முந்தியதான களவுக்காதல் காவலனாம் முருகன் எனவும் அழைக்கப்பட்டான். அவனை வழிபடுவார், அவனுக்காகப் பலி கொடுத்த ஆட்டின் செங்குருதி கலந்த சோற்று உருண்டைகளை அவனுக்குப் படைத்தனர். அவன் ஒரு வேடுவன். வேல் ஏந்துவான். அதனால், வேலன் என அழைக்கப்

பட்டான். அவனை வழிபடும் அர்ச்சகனாம், பூசாரியும் வேலன் என அழைக்கப்பட்டான். மகளிரிடையே, அவன், காதல் நோயைத் தோற்றுவிப்பன். மகளிர் அம் முருகனால் அலைக்கழிக்கப்படும்போது, வேலன், பெண்களின் காதல் நோய் தீர்க்க, மாயாஜால ' வழிபாட்டு முறைகளை மேற்கொள்வன். வேலன், முருகனோடு கலந்து தெய்வம் வரப்பெற்று அவனோடு உரையாடும்பொழுது, அவனும், தெய்வீக வெறிக்கு உள்ளாகி, வெறியாட்டம் எனப்படும் பேயாட்டம் ஆடுவதும் பாடுவதும் செய்வன். இவ்வெறியாட்டத்தில், மகளிரும் பங்கு கொள்வர். ஆடவர் அல்லது மகளிர் பூசாரிகள், கடவுள் ஏறி, அக்கடவுள் ஆட்சிக் கீழ் இருக்கும் போது, ஆடுவதும், பாடுவதும் மட்டும் செய்வதில்லை. இருண்டுபோன இறந்த காலத்தைப் படித்துக் காட்டுவர். எதிர்காலத்தே வருவது அறிந்து கூறுவர். எந்தப் பேய் எந்த நோயைத் தந்தது என நோய்க் காரணம் கண்டு கூறுவர். உடலையும் உள்ளத்தையும் உடைமையாக் கொண்டுவிட்ட அனைத்து நோய்களையும் தீர்ப்பர். நோய் தீர்க்கும் முறை, தெய்வத்தன்மை மட்டுமே வாய்ந்தது அன்று; மலைநாடு, நோய் தீர்க்கும் மூலிகைகளைப் பெருமளவில் கொண்டது. ஆகவே, வேலன், தேவராட்டிகளின் வெறியாடல் நிகழ்ச்சி, அம் மூலிகைகளாலும் அரண் செய்யப்பட்டது. ஆகவே, பழங்காலப்பூசாரி, மருத்துவனும் ஆவன். ஆயிரமாயிரம் சமயத் தத்துவங்கள் வளர்ந்து விட்டிருக்கும். இன்றும், பேய்களை வழிபடுவோரும், மருத்துவருமாக இணைந்த தாழ்த்தப்பட்ட இனத்தவராம் குறவர், சமுதாயத்தில் உயர்நிலை பெற்றவரிடையேயும், இலைமறைவு காய்மறைவாகச் சிறந்த வாணிகத்தை நடத்தி வருகின்றனர்.

மேய்புலமாம் முல்லைநிலக்கடவுள், ஆயர் மகளிர் பாலும், ஆனினங்கள் பாலும் அன்புடையோனாகிய கார் மேனிக் கடவுள் மாயோன். அவன் எப்போதும், குழலில் ஒலியெழுப்பிக்கொண்டேயிருப்பான்: அதன் இசை அனைத்து உயிர்களையும் ஈர்த்து உருகச் செய்யும். இசையில் மட்டுமல்லாமல், ஆடலிலும் மகிழ்வூட்டுவன். ஆய மகளிர்

கூட்டம் புடைசூழ, அவன், அல்லது அவன் பக்தன், இன்றைய ஆயர்களைப் போலவே, எளிதில் பொருள் விளங்காப் பல்வேறு ஆடல்களை மேற்கொள்வர். பால், பால்படு பொருள்கள், சில சமயம், இவற்றொடு கலந்த சோறு, அவன் படையல்களாம்.

மீண்டும் கூடலால் பிறக்கும் இன்பத்தைப் பெரிதாக்கவே உதவும், காதலர்களின் சிறு பிரிவுக்கான வாய்ப்பினை அளிக்கிறது ஆணிரை மேய்க்கும் வாழ்க்கை. ஆதலின், காதல் இன்பத்தை விருப்பம்போல் நுகர, வேட்டையாடும் வாழ்க்கையிலும், ஆணிரை மேய்க்கும் வாழ்க்கை, பெரிதும் துணை நிற்கின்றது. வேட்டையாடுவான் போலவோ, எதிர்பாரா இன்னல்கள் நிறைந்த, நெடுந் தொலைவு கடல் மேல் செல்லும் வாழ்க்கை உடையவரைப் போலவோ அல்லாமல், ஆனிரை மேய்ப்பவர், காட்டில் ஓய்வாக இருந்து ஆணிரை ஓம்புவதில் ஈடுபட்டுள்ளமையால், அவர் வாழ்க்கையே மகிழ்ச்சி நிறைந்த ஒன்றாம், ஆகவே தான் ஆனிரை ஓம்புவாரின் கார்மேனிக் கடவுளும், இந்தியக் கடவுள்களனைத்திலும் மகிழ்ச்சியால் நிறைந்த கடவுளாவன்.

கடற்கரையைச் சார்ந்த நிலத்துத் தெய்வம், அச்ச மூட்டும் கடல் தலைவர் ஆவன். கரிய மேனியராகிய ஆடவரும் மகளிரும், இடுப்பில் தங்கள் குழந்தைகளோடு கடற்கரைக்கண் திரண்டிருந்து, அன்று பிடித்த புத்தம்புதிய அல்லது உப்பிட்டு உலர்ந்த மீனையும், ஊனையும் அக்கடல் தெய்வத்துக்குப் படைக்கும் மீனவ வழிபாட்டாளர்களின் வழி பாட்டுச் சடங்குகளில், அக்கடற் கடவுளின் அடையாளமாகக் கொடிய சுறா மீனின் கொம்பு அமையும். காதல் இன்பம், மீனவர்களுக்கு மறுக்கப்படவில்லை. கழிநீரில் படர்ந்திருக்கும் அல்லி மலர்களை, அவற்றின் மீதுற்ற ஆசையால் அணிந்து கொண்டு தங்களை ஒப்பனை செய்துகொள்ளும் கரிய மேனிய ராகிய மீனவ இன மகளிரின், நன்கு வளர்ந்த உடல் உறுப்புகள், மீன் முடைநாறும் நிலையிலும், அவர்களின் இல்லத்து ஆடவர் கடல்மேல் செலவு குறித்துப் போய்விட்ட

நிலையில் அண்டை நிலத்துச் சிறந்த ஆடவர், தங்கள் காதலியராம் அம் மகளிரைக் காண்டல் விருப்போடு, தங்கள் வண்டிகள் அல்லது தேர்களில், கடற்கரைக்கு வந்து செல்வர் என்பதைப், பிற்கால இலக்கியங்களில் படிக்கிறோம்.

ஏனைய நிலப்பகுதிகளிலும், நாகரீகம் நனிமிக வளர்ந்து விட்ட ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியில், களவுக்காதல், கற்புக்காதலுக்கு வழிவகுத்துவிட்டது. தமிழர்களிடையே இடம் பெற்றுவிட்ட, ஆரியர்களால் திருத்தப்படுவதற்கு முற்பட்டதான, பழைய திருமணச் சடங்குமுறை, அகநானூறு என்ற தொகை நூலைச் சேர்ந்த இரண்டு செய்யுட்களில் விளக்கப்பட்டுள்ளது. "உழுத்தம் பருப்புக் கலந்து நன்கு குழையச் சமைத்த பொங்கலோடு, பெரிய சோற்றுக் குவியல், பலரும் உண்ட பிறகும் குவிந்து கிடக்கிறது. வரிசையாகக் கால்களை நட்டுப் போடப்பட்ட பந்தலின்கீழ், புதுமணல் பரப்பப்பட்டுள்ளது. மனைவிளக்குகள் ஏற்றப்பட்டுள்ளன. மணமக்கள் மாலைகளால் அணி செய்யப்பட்டுள்ளனர். தீயன விளைவிக்கும் கோள்களின் தொடர்பு நீங்கப்பெற்ற, வெண் பிறைத் திங்கள், சிறந்த புகழ் வாய்ந்த உரோகிணி எனும் நாளோடு கூடிய அந்த நல்ல நாளில், இருள் அகன்ற விடியற் போதில், திருமண ஆரவாரத்தில் மூழ்கிவிட்ட முதிய மகளிர், தலையில் கொண்ட குடங்களிலும், கையிற் கொண்ட பண்டங்களிலும் நீரைக் கொண்டுவந்து, வரிசையாகக் கொடுக்கக் கொடுக்க, மகப்பேறு பெற்று மாண்புடைய தூய அணிகள் அணிந்த மகளிர் நால்வர், "கற்பு நெறி வழுவாது, நல்ல பல பேறுகளையும் பெற்றுத்தந்து, கணவனைப் பேணும் அன்புடையை ஆகுக" என வாழ்த்தியவாறே, அத் தண்ணீரால் குளிப்பாட்ட, அந்நீரோடு கலந்து சொரியப்பட்ட நெல்லும் மலரும், மணமகள் கூந்தலில் கிடந்து சிறக்க, திருமணச்சடங்கு இனிதே முடிவுற்ற பின்னர், அன்று இரவு, தமரகத்து மகளிர் எல்லாம் ஒன்று கூடியிருந்து, மணமகளுக்குப், புதுக் கூறை உடுத்திப் "பெரிய மனைக்கிழத்தி ஆகுக" என வாழ்த்தி, அவள் காதலனோடு ஓர் அறைக்குள் அனுப்பி

வைத்தனர். அவளும் நாண்தரு நடுக்கத்தோடு உள்ளே நடந்தாள்''.

> ''உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை,
> பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்
> தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி,
> மனைவிளக்கு உறுத்து, மாலை தொடரிக்,
> கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக்
> கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
> கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
> உச்சிக் குடத்தர், புத்துஅகல் மண்டையர்'
> பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்,
> முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்,
> புதல்வன் பயந்த திதலைஅவ் வயிற்று
> வாலிழை மகளிர் நால்வர் கூடிக்,
> கற்பினின் வழாஅ நற்பல உதவிப்,
> பெற்றோன் பெட்கும் பிணையை ஆகுஎன
> நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி,
> பல்லிருங் கதுப்பில் நெல்லொடு தயங்க,
> வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்,
> கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
> "பேரிற் கிழத்தி ஆகு" எனத் தமர்தர
> ஓரில் கூடிய உடன்புணர் கங்குல்
> கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
> ஒடுங்கினள்.'' —அகநானூறு : 86 : 1–22

கூறிய இப்பண்டைத் தமிழ்த் திருமணச் சடங்கு முறையில், ஆரியக் கலப்பு எதுவும் அறவே இல்லை. தீ ஓம்பல் இல்லை. தீ வலம் வருதல் இல்லை. தக்ஷிணை வாங்கப் புரோகிதர் இல்லை என்பது உணரப்படும். அதே தொகை நூலில், மற்றொரு செய்யுளும், திருமணச் சடங்கு முறையினைக் குறிப்பிடுகிறது. ''இறைச்சி கலந்து நெய் மிதக்க ஆக்கிய வெண்சோற்று உணவு, வரையா வண்மையொடு பெரியவர் களுக்கு வழங்கப்பட்டது. பறவைகள் உணர்த்திய நிமித்த

மும் நன்றாக இருந்தது. வானம் ஒளி வீசிக்கொண்டிருந்தது. திங்கள், குற்றமற்ற உரோகிணியோடு கூடியிருந்தது. மணமனை அழகு செய்யப்பட்டது, அவர்கள் கடவுளை வழிபட்டனர். முரசும் மண இசையும் முழங்கலாயிற்று. மகளிர், மலர் போலும் கண்களை இமையாராய் நீராடி அணி செய்யப்பட்ட மணமகளை ஆர்வத்தோடு நோக்கினர். மாசுபோகக் கழுவிய, நீலமணி போன்ற, பெரிய மலர் இதழ்களாலான வழிபடுகடவுள் வடிவம், வாகையின் கவர்த்த இலைகளோடு கூடிய மலர் மீது, ஆண்டு முதிர்ந்த கன்று மேய்ந்துவிட்ட, கார் மேகத்தின் முதல் மழை பெற்றுத் தலைகாட்டிப் பள்ளத்தில் படர்ந்திருக்கும் அறுகம்புல்லோடு வைக்கப்பட்டது. அது, குளிர்ந்த நறுமணம் கொண்ட மலர் அரும்புகளும், வெண்ணூலும் சூட்டப்பட்டு, தூய உடை அணியப்பட்டு, அழகு செய்யப்பட்டது. மணமகள், மழையொலிபோல், மறை ஒலி எழும், புதுமணல் பரப்பப்பட்ட மணற்பந்தற் கீழ் அமர்த்தப்பட்டாள். அணிந்திருக்கும் அணிகளின் சுமையால், அவள் வியர்த்துப் போகத், தோழியர் அவ் வியர்வைபோக வீசினர். இவ்வகையில், அவள் சுற்றத்தார், அவளை மணம் செய்து கொடுத்தனர்.''

''மைப்பறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு,
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்
சகட மண்டிய துகள்தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து, கடவுட் பேணிப்
படுமண முழவொடு பருஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்றுப்
பூக்கணும் இமையார் நோக்குபு மறைய
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பமல் அறுகைத்
தழங்குகுரல் வானின் தலைபெயற்கு ஈன்ற
மண்ணுமணி அன்ன மாஇதழ்ப் பாவைத்
தண்நறு முகையொடு வெண்நூல் சூட்டித்
தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பின் பெயர்வியர்ப்பு ஆற்றித்
தமர்நமக் கீத்த''

—அகநானூறு : 136 : 1-18

இவ்விரு செய்யுட்களும், நாம் ஆய்வு செய்துகொண்டிருக்கும் காலத்திலும், பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தன. ஆனால், அவை, உண்மையில், மிகமிகப் பழைய காலத்தில் நிலவியிருந்த திருமணச்சடங்கு முறைகளையே விளக்குகின்றன.

திருமண வாழ்க்கை, இவ்வாறு, நல்ல நிமித்தத்தில் தொடங்கினாலும் பெரும்பாலும், ஒரே சீரான வழியில் ஓடியதில்லை. மண வாழ்க்கையில், உண்மையாக நடந்து கொள்வதிலிருந்து, கணவன்மார்களைத் தவறான வழிக்குத் தூண்டிவிடும் பரத்தையரின் சூழ்ச்சிகளால், கற்புக் காலத்து அன்பு வாழ்க்கை, தற்காலிக, அல்லது நிரந்தர முடிவுக்குப், பல சமயம் ஆளாக்கப்பட்டுவிடும். வயல்களில் கதிர் முற்றிக் கொண்டிருக்கும் காலத்திலும், அறுவடைக்குப் பின்னர், நிலம் தரிசாக விடப்பட்டிருக்கும் காலத்திலும், இயல்பாகவே திணிக்கப்பட்ட ஓய்வு நாட்களில், வேலையற்றுக் கிடக்கும் கைகளுக்குச் சில குறும்புகளைக் கொடுத்து விடுகிறது சைத்தான். ஆகவே, விளைநிலப்பகுதிக்கு மட்டுமே தனி உரிமை வாய்ந்த ஒன்று, பரத்தையர் ஒழுக்கமுறை. கோடையில் நீர் வேட்கை மிகுந்து நிலங்களெல்லாம் திணறும்போது, மழை மேகங்களை, இடியேறு (முருகனின் பழைய வேற் படை போலும், கல்லால் ஆன, படைக்கலம்) எனும் படைக் கலத்தால் பிளந்து, மழை பெய்யப்பண்ணும் காரமேகத்தை ஆட்சி கொள்ளும் கடவுள், இந் நிலத்தின் தெய்வமாம்: தன்னை வழிபடும் நிலஉலக ஆடவர், அந்நில உலகப் பரத்தையர்களால் சூழப்பட்டிருப்பது போலவே, இவனும், வானுலகப் பரத்தையர் குழாத்தால் சூழப்பட்டிருக்கும் ஒரு காமக் கடவுளாவன். பொங்கல் என அழைக்கப்படும், பருப்போடு கலந்து ஆக்கிய சோறு, இவன் மிகவும் விரும்பும் படையல். விளைநிலப் பகுதிகளில், அறுவடை விழாவாக, மக்களால், இன்றும் பெரிதும் பாராட்டப் பெறும் விருந்துப் பெருவிழா இது.

கடைசி நிலப்பகுதி, கொள்ளைக்காரர்களின் வாழிடமாம் பாலை. அடுத்துள்ள மலை நிலத்தைப் போலவே, தாயைக்

குடும்பத் தலைவியாகக் கொண்ட சமுதாய முறை, நெடுங் காலம் நிலை பெற்றிருக்கும் நிலப்பகுதி, இது. ஆகவே, இந்நிலத் தெய்வம். வெற்றிப் பெண் தெய்வமாம். கொற்றவை. அவள் வழிபாட்டாளராம் கொடுந்தொழில் புரியும் மறவர், அவளுக்கு, மனிதனையும், விலங்குகளையும் கொன்று குருதிப் பலி தருவர். பாலை ஒரு வரண்ட நிலம்; அதற்கேற்ப, காதலியின் காலடியில் சேர்ப்பதற்குப் பெரும் பொருள் தேடுவான். வேண்டி, இறந்தோர்களின் வெள் ளெலும்புகள் சிதறுண்டு கிடக்கும் மணல் பரந்த நெடு வழியில் பயணம் செய்யும் காலத்தில், காதலிகள் நெடிது பிரிந்து வாழ நேர்வதாம், காதல் அவலத்தோடு, பொறுத்த முறத் தொடர்பு கொண்டுள்ளது. கற்பனை கடந்த நிலையில், பெருங்கள்ளோடும் களியாட்டங்களோடும், கொற்றவை வழிபடப்படுவாள்.

இந்த ஐந்து கடவுள்களில், நான்கு கடவுள்களைத் தொல்காப்பியனார் வரிசைப்படுத்தியுள்ளார். ''மாயோனால் விரும்பப்பட்டது காட்டுவளம்; சேயோனால் விரும்பப்பட்டது மலைநாடு; இனிய நீர் பாயும் புனல் நாடு, கடவுளர்க்குக் கடவுளாம் வேந்தனால் விரும்பப்பட்டது. வருணனால் விரும்பப்பட்டது, பெருமணல் உலகம்; இந் நான்கு உலகமும், முறையே, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என அழைக்கப் பெறும்.

'மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்,
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்,
வருணன் மேய பெருமணல் உலகமும்,
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே''.

—தொல்காப்பியம்; பொருளதிகாரம்: 5

தொல்காப்பியனார், பழந்தமிழ்க் கடவுள்களை, அவற்றோடு நேரொத்த ஆரியக் கடவுள்களாக அடையாளம் கண்டு, ஆரியர்களுக்குச் சுவர்க்கத்தின் கடவுள், தேவர்க்கு அரசனே

ஆதலின், ஆற்றுப் பள்ளத்தாக்குக் கடவுளை, வேந்தன் என்று அழைக்கின்றார்: கடல் தெய்வத்திற்கு, வருணன் எனச் சமஸ்கிருதப் பெயர் சூட்டியுள்ளார் என்பது குறிப்பிடல் தரும். பின் இரண்டின் தமிழ்ப் பெயர்கள் திரும்பக் கிடைக்க வில்லை போலும்; அவை, முறையே, சேயோன், கடலோன் என்பனவாகலாம், தொல்காப்பியனார், மக்கள் நிலையாகக் கூடிவாழும் நிலப்பகுதிகளின் பட்டியலில் பாலையைச் சேர்க்க வில்லையாகவே, அப்பாலைக்குரிய கடவுள் பெயர் குறிப்பிட வில்லை.

வட இந்தியாவில் ஐந்து பழங்குடி இனங்கள் :

இவ்வைந்து வகையான மனித நாகரீகம், தென்னிந்தி யாவைப் போலவே வட இந்தியாவில், பழங்காலத்தில், அதாவது, வேதங்களும், வேத மந்திரங்கள் இயற்றப்படு வதற்கு நிலைக்களமான தீ வழிபாட்டு முறைகளும் எழு வதற்கு முற்பட்ட காலத்தில், வளர்ந்திருக்க வேண்டும். ஆரிய நாகரீகம் தோன்றுவதற்கு முன்பு, வட இந்திய தஸ்யூக்கள், தென்னிந்திய தஸ்யூக்களைப் போலவே, அதே ஐந்து இனத்தவர்களையும் பிரிந்திரிக்க வேண்டும், வட இந்தியா, தென்னிந்தியாவைப் போலவே அதே ஐந்து, இயற்கையோடியைந்த நிலப்பிரிவுகளாகப் பிரிக்கப் படக் கூடியதே; ஆனால், ஒன்று, அவை தென்னிந்தியப் பிரிவுகளைக் காட்டிலும் பரப்பளவில் பெரியனவாம். அங்கு, அதே நிலஇயல் காரணங்கள் சொல்லப்பட்டன ஆகவே அதே விளைவுகளுக்குத்தான் சென்றிருக்க வேண்டும். ஆனால் கடவுளின் வாய், தீ; ஆகவே கடவுளுக்குப் படைக் கும் அனைத்தும், கொழுந்துவிட்டு எரியும் தீக்கடவுளின் வாயில் இடுதல் வேண்டும் என்ற நம்பிக்கையை அளிக்கும் தீ வழிபாட்டு நெறி, வடஇந்தியாவில், ஏறத்தாழ, கி.மு. 4000இல் உருவாகிவிட்டது. இவ் வழிபாட்டு நெறி, ஆரிய வழிபாட்டு நெறி என அழைக்கப்பட்டது. தீ இல்லா வழிபாட்டு நெறியினைப் பின்பற்றிய பழங்குடியினர், தஸ்யூக்கள் எனப்பட்டனர். தீ வழிபாட்டு முறையினைப்

பின்பற்றுவோர், தங்கள் படையலைத் தொடர்ந்து, கவி வல்ல பார்ப்பனராம் ரிஷிகள் இயற்றிய மந்திரங்களை ஓதும் முறையினை மேற்கொண்டனர். சமஸ்கிருத மொழி எப்படி, எப்போது உருவாயிற்று? யார் இந்த ரிஷிகள்? என்பன கண்டுபிடித்தற்கு இயலா. நமக்குத் தெரிந்த ஒரே உண்மை, சொல் அமைப்பிலும், சொற்றொடர் அமைப்பிலும், அது மேற்கு ஆசியா, ஐரோப்பா, அமெரிக்கா ஆகிய நாடுகளைக் கொண்ட பெருநிலப்பரப்பில் பேசப்பட்டுவரும் மொழிகளோடு உறவுடையதாம் என்பது.

இவ்வுண்மையை அடிப்படையாகக் கொண்டும், இனத்திற்கும் மொழிக்கும் இடையிலான வேறுபாட்டினை உணரமாட்டா. வடிகட்டிய அறியாமையால் தூண்டப்பட்டும் மனித இயல்நூல் தன் முழு எதிர்ப்பையும் தெரிவிக்கும் ஆரியர்களின், உலகக் குடிபெயர்ச்சி என்ற தத்துவம் உருப் பெற்றது. ஆனால் வடநாட்டில், ஆரிய நாகரீகம் எழுவதற்கு முன்னர், வாழ்ந்திருந்த மக்கள் வாழ்க்கை முறையினை, ஆரிய நாகரீகத் தோற்றம் எவ்வாறு மாற்றிவிட்டது என்ற வினாவிற்கு, விடை காண்பது ஒன்றே ஈண்டு நம்முடைய நோக்கம்.

அத்தொல்லூழிக்காலத்தில், தங்கள் தமிழ் உடன் பிறப்பாளர்களைப் போலவே, வடஇந்திய தஸ்யூக்களும், அவ்வந்நிலத் தெய்வங்களையே வழிபட்டிருக்க வேண்டும். ஆரியத் தீ வழிபாட்டு நெறி, இந்த உள்நாட்டுக் கடவுள்களைத் தங்களுடையனவாக ஏற்றுக்கொண்டு, அவற்றைத் தங்களுடைய, புது நெறிப்படி, வழிபட்டதா? இது பற்றி ஆராய இது இடம் அன்று. அத்தொல்லூழிக்காலத்திற்குப் பல ஆயிரம் ஆண்டுகள் கழிந்து, இந்த ஆரிய வழிபாட்டு நெறி, தென்னிந்தியாவுக்குக் குடிபெயர்ந்தபோது, தென்னிந்திய உள்நாட்டுக் கடவுள்களாக, சேயோன் சுப்பிரமணியனாக, மாயோன், விஷ்ணுகிருஷ்ணனாக, கடல் தெய்வம், வருணனாக, கார்மேகக் கடவுள் இந்திரனாக, பாலைத் தெய்வம் துர்க்கையாக மேற்கொள்ளப்பட்டு

விட்டன என்பது, ஈண்டுக்குறிப்பிடல் கூடும். இந்த ஆரியக் கடவுள்கள் தாமும், பண்டைய தஸ்யூக் கடவுள்களின் மறு அவதாரங்கள்தாமா? வேதகாலத்தில் அக்கடவுள்களில், இந்திரனுக்கே தலைமை அளித்திருப்பது, ஏனைய நிலப்பகுதிகளில் வாழும் பழங்குடியினரைக் காட்டிலும், ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியில் வாழும் மக்கள், தலையாய நிலை பெற்றிருந்ததன் விளைவுதானா என்பன, ஈண்டு, ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படமாட்டா.

வேதச்சொற்றொடர் ஒன்று, மக்கள் ஐந்து பழங்குடியினராகப் பிரிவுண்டிருந்த வரலாற்றுப் பழஞ்செய்தி ஒன்றை நினைவூட்டுவதாக உள்ளது. ''பங்கஜனாஹ்'' என்பது, அத்தொடர், இப்பொருள் விளங்காத் தொடர், பழைய, புதிய எழுத்தாளர் பலரால், பொருள்காண முயலப் பட்டுளது. ஆனால், மனநிறைவு கொள்ளும் வகையில் பொருள் விளக்க எவராலும் முடியவில்லை. அது, ஆரியத்திற்கு முற்பட்ட, ஐந்து பழங்குடியினரைக் குறிக்க வேண்டும் என்ற ஊகத்தை நான் கூறினேன். ஆனால், தமிழிலக்கியம் பற்றி ஏதும் அறியாத, ஆரியத்துக்கு முத்திய இந்தியாவுக்கும், ஆரிய இந்தியாவுக்கும் இடையில் வரலாற்றுத் தொடர்பின் இன்றியமையாமையினை மதிக்க மறுக்கும் வரலாற்று வல்லுநர்களால், என்னுடைய ஊகத்தின் மதிப்பீட்டை மதிக்க முடியவில்லை.

இந்தியாவில், கற்காலம் (பக்கம் : 28-29) என்ற என் நூலினைக் காண்க.

---

இணைப்பு :

# தொல்காப்பியர் காலம்

தமிழர் வரலாறு (History of the Tamils) என்ற நூலின் ஆசிரியர், திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார், "அழிந்தன போக அழியாதுள்ள தமிழ் நூல்களில் நனிமிகப் பழமையானது, தொல் காப்பியர் இயற்றிய தொல்காப்பியம். அது, பெரும்பாலும், கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்காது"

("These conventions are described in tne Poruladigaram ot the Tamil grammar, clled, Tolkappiyam by Tolkappiyar. This is the earliest extant Tamil book and was probably composed not later than the I or II century A. D." page : 70)

என ஓரிடத்தில் கூறினாலும், பிறிதோரிடத்தில், "தமிழ் நூல்கள் பரவலாக எழுதப்பட்ட கி.மு. முதலாம் நூற்றாண்டிற்கு முன்னர், அகஸ்தியர் வாழ்ந்திருக்க இயலாது. தொல்காப்பியம் பற்றிய ஆய்வு, அதன் ஆசிரியரும், அவர்தம் ஆசிரியரும், அதற்கு ஒரு நூறு ஆண்டு அல்லது அதற்கு மேலும் கழித்தே வாழ்ந்திருக்க வேண்டும் எனக் கொள்ளவே நம்மை வற்புறுத்துகிறது"

("Agattiyanar could not have lived before the I century B. C., when Tamil writing must have begun to be, Commolny used-A study of tne Tolkappiyam compels us to believe, that Master and pupil must have lived, a century or more later" page : 216)

எனக் கூறுவதன் மூலம், தொல்காப்பியரை, கி. மு. முதல் நூற்றாண்டின் கடைவாயிற்கண் நிறுத்தவும் மறுத்துள்ளார்.

அதற்கு அவர் கூறும் காரணம் பின்வருமாறு: "திருமணம் போலும் மங்கல நிகழ்ச்சிகளுக்கு உரிய நாளின் ஒரு கூறு எனும் பொருளில், "ஓரை" எனும் சொல்லைத், தொல்காப்பியர் ஆண்டுள்ளார். "மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும் துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை." (தொல்: பொருள்: களவு: 44) "ஓரை" எனும் இத்தமிழ்ச் சொல், "ஹவர்" (Hour) எனும் ஆங்கிலச் சொல்லைப் போலவே, முடிந்தமுடிவாக, "ஹொர" (Hora) என்ற கிரேக்கச் சொல்லிலிருந்தே பெறப்பட்டதாகும். "ஹொர" என்ற அச்சொல், கிரேக்க மொழியில், கி. மு. ஐந்தாம் நூற்றாண்டு வரை, "ஆண்டின் ஒருபருவம்" என்னும் பொதுப் பொருளே (Season in general) உடையதாகும். ஒரு நாளின், ஒவ்வொரு கூறும், ஏழு கோள்களில் ஒவ்வொரு கோளின் ஆட்சிக்கீழ்வருவதாகக் கொள்ளப்பட்ட கி. மு. இரண்டாம் நூற்றாண்டில்தான், "ஹொர" என்ற அச் சொல்லுக்கு, ஒருநாளின் இருபத்தினான்கு கூறுகளில் ஒரு கூறு உணர்த்தும் பொருள் தரப்பட்டுளது. "ஹொர" என்ற அச்சொல், தான் உணர்த்தும் அச்சோதிடப் பொருள்குறிப் போடு, கி. மு. முதல் இரண்டு நூற்றாண்டுகளில், கிரேக்க மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்டுவந்த காந்தார நாட்டிற்குப் பயணம் செய்தது. சமஸ்கிருத நூலாசிரியர்கள், கிரேக்கர்களின் சோதிடக்கலையைக் கற்றுக்கொண்டபோது, அச்சொல் சமஸ்கிருதத்திலும் இடம் கொண்டது. பின்னர், அது, தெற்கில் பயணம் செய்து, தமிழில் நுழைந்துவிட்டது. ஆகவே, "ஓரை" என்ற சொல், தொல்காப்பியர் காலத்தின் மேல்வரம்பாகும் கி. பி. முதலாம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தமிழில் இடம் பெற்றிருக்க முடியாது என்று கொண்டால், அது, ஒருநடுநிலை மதிப்பீடு ஆகும்.

("The Tamil word "orei, like the English word "Hour", is derived ultimately from the greek word "Hora". Hora meant in Greek in the V century B.C., "season in general", and it was in the II century B. C. that it was endowed with the meaning of the twenty - fourth part of a day, each such twenty-fourth

part being under the rule of one of the seven planets. The word hora travelled with its astro-logical implications to Gand hara, which was ruled in the Second and first centuries B. C. by GreeK monarchs. From there it got in to Sanskrit, when Sanskrit authors, learnt Greek astrology. It travelled down South and entered Tamil. Surely it will be a modest estimate if we assume that "orai" could not have got into Tamil before the I century A. D., which must be the upper limit of the age of Tolkappiyanar." page :216)

இவ்வாறு கூறுவதன்மூலம், ''ஓரை'' என்பது தமிழ்ச் சொல்; அது, தமிழ்வணிகர்மூலம் கிரேக்கம் சென்றது, ''ஹொர'' எனத் திரிந்து, கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிலேயே அம்மொழியில் இடங்கொண்டுவிட்டது எனக் கொள்வதற்குப் பதிலாக, ''ஹொர'' என்ற கிரேக்கச் சொல், காந்தாரத்துச் சமஸ்கிருத வல்லுநர் மூலம், தமிழகத்திற்கு வந்து, ''ஓரை'' எனத்திரிந்து, கி. பி. முதல் நூற்றாண்டில், தமிழில் இடம் பெற்றது எனக் கருதுகிறார், திருவாளர் அய்யங்கார் என்பது தெளிவாகிறது. ஆனால், இவ்வாறு, தமிழ்மொழிக்குப் பிற மொழி வரவினை உறுதி செய்யும் அவர்களே, பின்வருவன வற்றையும் கூறியுள்ளார்.

அர்மினிய நாட்டு, ''அர்ஸசிடே'' மரபின் முதல் மன்னனாகிய ''வளர்ஷக்'' என்பான் காலத்தில் (கி. மு. 149. 127) இந்திய வணிகத்தலைவர் இருவர், யூப்ரடீஸ் ஆற்றின் மேற்குக் கரையில், ''வான்'' என்ற ஏரிக்கு மேற்கில், ஒரு புதிய குடியிருப்பை நிறுவி, அர்மீனிய மொழியில், ''கிஸனி'' ''தெமெதெர்'' என முறையே வழங்கப்பெறும் கிருஷ்ணன், பலதேவன் ஆகியோர்க்குக் கோயில்களையும் கட்டினர். வடஇந்தியாவில், கிருஷ்ணன் வழிபாடு, பெருமளவில் இடம் பெற்றுள்ளது என்றாலும், பலதேவனையும் ஒருங்கே வைத்து வழிபடும் வழக்கம், காணப்படவில்லை. ஆனால், அவ்விரு கடவுளரையும் ''மாயோன்'' என்றும், ''வாலியோன்'' என்றும் பெயர் சூட்டி, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு

முன்னரே வழிபட்டனர் தமிழர். கிருஷ்ணனுக்கு எண்ணிலாக் கோயில்கள் உள்ள வடஇந்தியாவில், பலதேவனுக்குக் கோயிலே இல்லை. ஆனால், மாயோன் கோயிலை அடுத்துக் கட்டப்பெற்ற பலதேவன் கோயில், காவிரிப்பூம் பட்டினத்திலும், மதுரையிலும், சங்ககாலத்திலேயே இருந்தது. பலதேவனுக்கு உரிய கொடி, பனைக்கொடி. பனைமரம் கங்கை வெளியில் வளர்வதில்லை. மணல்பரந்த தமிழ்நாட்டு ஆற்றங்கரைகளிலேயே வளரும். கூறிய இக்காரணங்களைக் கொண்டு நோக்கியவழி, அர்மீனியாவில், கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் இடங்கொண்டிருந்த அவ்வழிபாட்டு முறை, தமிழ் நாட்டிலிருந்து, தமிழ்வணிகர்களாலேயே கொண்டு செல்லப்பட்டது என்பது உறுதியாகிறது."

"In the time of the first Arsacide monarch of Armenia Valarshak (149-127 B. C), two Indian Chiefs established a colony, at Vishap, on the western Euphrates, west of lake Van, and founded temples for the worship of "Gisani (Krishna) and "Demeter" ('Baldeva)., Was this an outflow of Aryan culture from the North of India? Most probably no, for while the puranas talk of Krishna and Baladeva as being avatars of Vishnu, there is little or no evidence of the joint worship of these two gods, as a separate cult in North at any time. But in early Tamil literature gives plenty of evidence of this. The former of these under the name of Mayon was the ancient god of Mullai land and the latter, Valiyon or Vellaiyon, the white god, whose implement was the plough and the flag was the palmyra......... The cult of Baladeva could not have been evolved in the gangetic Vallay; for the palms do not flourish there and his worship must have risen in the Southern lower river valleys, not far from the sea".

"We do not hear of temples dedicated to Baladeva in North India. But they existed in Kaviripattinam and in Madurai side by side with temples to Krishna. Besides these there, were

temples, where the images of Krishna and Baladeva stood together," (History of the Tamils; pages : 202, 203, 204)

"இந்தியா, ஐரோப்பாவோடு மேற்கொண்ட வாணிகத்தில், கி. மு. 500இல், கிரேக்கர்கள் இடைத்தரகர் ஆயினர். அதன் விளைவாக, அரிசி என்ற தமிழ்ச்சொல், "ஒரயஸ்" என்ற வடிவிலும், கருவாப்பட்டையைக் குறிக்கும் கருவா என்ற தமிழ்ச்சொல், "கார்பியன்" என்ற வடிவிலும், இஞ்சி வேர் எனும் சொல், "ஜிக்கிபெரொஸ்', என்ற வடிவிலும், வைடூரியம் எனும் சொல், "பெரியலொஸ்" என்ற வடிவிலும் கிரேக்க மொழிகளில் இடம் பெற்று விட்டன".

("The Greeks were the greatest intermediaries of this trade of India, with Europe, in the half-millennium, that preceded the birth of Christ. One result of this extensive international Commercial intercourse was, that the Tamil names of south Indian articles of trade were borrowed by the Hellenes; they begin to appear in the works of Sophocles, Aristophanes and others. They are "Oryza" from Tamil "arisi", "Karpion", from "Karuva", Chinnamon ;. "Ziggiberos" from Tamil "Ingiver", ginger. "Peperi" from Tamil "pipoli". long pepper; "beryllos" from "vaidurya". (pages ; 193. 194)

"கி.மு. பத்தாம் நூற்றாண்டில், மன்னன் சாலமனுக்கு, ஷீபா அரசியார் அளித்தனவற்றுள், நறுமணப் பொருள்கள், விலைமதிக்கவொண்ணா மாணிக்கங்களும் இடம்பெற்றிருந்தன. சாலமனுக்குரிய கலங்கள், மூன்று ஆண்டிற்கு ஒருமுறை, பொன், வெள்ளி, தந்தம், அகில், சந்தனமரங்கள், வாலில்லாக் குரங்கு, தோகையழகு வாய்ந்த மயில்கள் முதலாம் பொருட்களை வாரிக்கொண்டுவந்தன. தமிழ் வணிகர், தமிழ்நாட்டுப் பொருட்களையே யல்லாமல், அவற்றின் தமிழ்ப் பெயர்களையும் ஆண்டு கொண்டு சென்றனர். அகில் என்ற தமிழ்ச் சொல் "அகல்" என்ற

வடிவிலும், தோகை என்ற தமிழ்ச் சொல், ''துக்கி'' என்ற வடிவிலும், அந்நாட்டு மொழிகளில் இடம் பெற்றிருந்தன''.

("In the X Century B.C. the Queen of Sheba gave king Solomon of spices very great store and precious stones. Once in three years, came the navy of Tharshish (belonged ... Solomon) bringing gold and silver, Ivory, and apes and peacocks... The apes and peacocks were, as in later times, sent as pets from India...Hebrew "thwkki", peacock, is Tamil "togai", tail, the peacock being tee bird, with the splendid tail. Other articles received by the Hebrews along wiih their names from India were... and lastly "ahal" from Tamil ahil". (Page: 129, 130.)

''திருவாளர் சாய்ஸ் என்பார், தம்முடைய சொற்பொழிவு ஒன்றில், ''கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில், சுமேரிய அரசர்களின் தலைநகராய்த் திகழ்ந்து அழிந்துபோன ''உர்'' எனும் இடத்தில், தமிழ்நாட்டைச் சேர்ந்த தேக்கு மரத்துண்டுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன என்றும், மெசபடோமியப் பள்ளத்தாக்கில் விளங்கிய மிகப் பழைய பெருநகராம் பாபிலோனியாவிலும், அதைச்சூழ உள்ள நாட்டிலும் வாழ்ந்த மக்கள் அணிந்த ஆடை வகைகளுள், ''சிந்து'' எனும் பெயருடைய தொரு ஆடையும் இடம் பெற்றுளது என்றும் கூறியுள்ளார். ''சிந்து'' எனும் இச்சொல், தமிழின் உடன்பிறப்பு மொழிகளாகிய துளுவிலும், கன்னடத்திலும், ஆடையின் ஒரு பகுதி, எனும் பொருளில் ''சிந்தி'' என்ற வடிவிலும் தமிழில் கொடி எனும் பொருளில் ''சிந்து'' என்ற வடிவிலும் வழங்கும் சொல்லின் திரிபே ஆகும். அது, ''சிந்தி'' என்ற வடஇந்திய ஆற்றின் பெயரினின்றும் பிறந்ததும் ஆகாது. பர்ஷியா வழியாகச் சென்ற வணிகர் கொண்டு சென்றதும் அன்று. கடல் வழியாகச் சென்ற தமிழ் வணிகரே, அவ்வாடையையும், அச்சொல்லையும் தமிழகத்தினின்றும் நேரே கொண்டு சென்று, ஆங்கு வழங்கியிருத்தல் வேண்டும். பர்ஷிய

வழியாகச் சென்றதாயின், அந்நாட்டு மக்கள் ஒலிப்பில், ''சகரம்'' ''ஹகரமாக மாறும் இயல்பிற்கு ஏற்ப, ''சிந்து'' என்ற சொல், ''ஹிந்து'' என ஆகியிருக்க வேண்டும். ஆனால், அது, அவ்வாறு திரியாது, தமிழில் உள்ளவாறு, ''சிந்து'' என்றே ஒலிக்கப் பெறுகிறது. ஆகவே, அது, தமிழ்ச்சொல்லே; தமிழ் நாட்டினின்றும் சென்றதே என்பதை உறுதி செய்யும்''.

"Indian teak was found in the ruins of ur, which was the capital of the Sumerian Kings in the IV millennium B. C, and the other is that the word "sindhu" of muslin is mentioned in an ancient Babylonian list of Clothing. The occurrence of 'S" in the word, proves, that this muslin did not go to Mesopa tomia, via Persia, for, then "S" would have become "H" in persian mouths... ... I there fore conclude that muslin went direct by sea from the tamil coast to persian coast and the Babylonian word "Sindhu" for muslin, is not derived from the name of the river, but from the old Dravidian word "Sindi", which is still found in Tulu and Canarese, and means, a piece of cloth, and is represented by the Tamil word "Sindhu" a flag". (pages: 38, 39)

ஆக, இவ்வாறெல்லாம் கூறியிருப்பதன் மூலம், கிருஷ்ண னோடு, பலதேவனையும் வழிபடும் வழிபாட்டு நெறி, கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், தமிழகத்திலிருநது அர்மினியா வுக்குச் சென்றதையும், தமிழ்நாட்டு அரிசி, கருவாப்பட்டை, இஞ்சிவேர், வைடூரியங்கள், கிரேக்கநாட்டிற்குக் கி.மு. 500இல் சென்றதையும், அவற்றைக் குறிக்கும். ''ஒரயஸ்'', ''கார்பியன்'', ''ஜிக்கிபெரோஸ்'' ''பெரியலோஸ்'' என்ற கிரேக்க மொழிச்சொற்கள், முறையே, அரிசி, கருவா, இஞ்சிவேர், வைடூரியம் என்ற தமிழ்ச்சொற்களின் திரிபாம் என்பதையும், தமிழ்நாட்டு மயிலும், அகிலும் பாலஸ்தீ னிற்குக், கி. மு, பத்தாம் நூற்றாண்டில் சென்றதையும், அவற்றைக் குறிக்கும் ''துக்கி'', ''அகல்'' என்ற அம்மொழிச்

சொற்கள் தோகை, அகில் என்ற தமிழ்ச்சொற்களின் திரிபாம் என்பதையும், தமிழ்நாட்டு மெல்லிய ஆடை, கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, பாலஸ்தீனத்திற்குச் சென்றதையும், அதைக் குறிக்கும் ''சிந்து'' என்ற அம்மொழிச்சொல், ''சிந்து'' என்ற தமிழ்ச் சொல்லே என்பதையும் ஒப்புக்கொண்டுள்ளார் திருவாளர் சீனிவாச அய்யங்கார் என்பது உறுதியாகிறது.

திரு. பி. டி. எஸ். அவர்கள் ஒப்புக்கொண்டு கூறும் வேறு ஒருவரலாற்றுச் செய்தியையும் ஈண்டுக் குறிப்பிடல் நலம்,

வேத காலம் ஏறத்தாழ கி. மு. 3000இல் தொடங்கியதாகவும், அது, ஒவ்வொன்றும் 500 ஆண்டுகளைக் கொண்டதான மூன்று யுகங்களை உள்ளடக்கியதாகவும் நான் கருதுகின்றேன்...... ஸ்ரீ ராமச்சந்திரன், வேத காலத்தின் மூன்று பகுதிகளில், இரண்டாவது பகுதியில் இருந்தார். ஆகவே, அவருடைய காலம் கி. மு. 2000 எனக் கருதுகின்றேன்...... ஸ்ரீராமருக்கும், ஸ்ரீகிருஷ்ணனுக்கும் இடையில் கடந்துபோன காலம் 500 ஆண்டுகள் என்பது ஒரு நல்ல மதிப்பீடு. இது, வேதகாலத்தின் முடிவுக்கு நம்மைக் கொண்டு சேர்க்கிறது.

"I assume the vedic period to havc begun circa 30000 B C, that period extended over three yugas of five centuries each. Ramachandra lived at the end of the second third part of the vedic age. Hence I assume his date to be 2000 B. C.........Five hundred years is a fair estimate forthe lengtn of time that lapsed between sri Rama and Sri Krishna. This brings us to the end of the vedic period". History of the Tamils. Indroduction. P. 57)

ஆக, கி. மு. 3000 தொடங்கி, கி. மு. 1500 வரையான காலம், வேதகாலம் என்பது, திருவாளர், பி. டி. எஸ் அவர்களின் கருத்தாம் என்பது தெளிவாயிற்று.

''கி. மு. 3000 முதல் கி. மு. 1500 வரையான காலமாகக் கருதப்பட்ட வேதகாலத்தில், தென் கோடித் தமிழகத்தின் விளைபடுபொருளாம் முத்து, வடஇந்திய ரிஷிகளால்,

ஒப்பனைப் பொருளாகப் பெருமளவில் பயன்படுத்தப் பட்டது''.

"The articles much used for decoration in the Vedic Age, was the product of the extremest south, viz; the pearl." page: 22)

எனக்கூறிவிட்டு, அதை உறுதி செய்ய, இருக்குவேதத்திலிருந்து எண்ணற்ற சுலோகங்களை, அகச்சான்றுகளாக எடுத்துக் காட்டியுள்ளார், திருவாளர் அய்யங்கார்.

இது கூறிய அவர், ''அம் முத்திற்குச் சமஸ்கிருதம் இட்டு வழங்கும் பெயர் முத்தா என்பது. இது வேத இலக்கியங்களில், ஓரிடத்தில் ''விமுத்தா'' என இடப்பெற்றுளது;

("Another sanskrit name for it is mukta; This word occurs in the form 'Vimukta' in fhe Vedic literature". p. 23)

என்றும் கூறிவிட்டு, அச்சொல்லின் மூலம் குறித்து, மேனாட்டுச் சமஸ்கிருத முது பெரும் திறனாய்வாளர்களாகிய திருவாளர்கள், மேக்டொனேல் (Macdonel) கெய்த் (Keith) மோனியர் வில்லியம்ஸ் (Monier Williams), ஆகியோர் அளிக்கும் விளக்கங்களை வலுவாக மறுத்துவிட்டு, ''முக்தா'' என்ற அவ்வடசொல், தமிழ்நாட்டு முத்து என்ற பொருளோடு, கடனாகப்பெற்று, முக்தா எனச் சமஸ்கிருதமாக்கப் பட்ட முத்து என்ற தமிழ்ச் சொல் அல்லது வேறு அன்று என்றும் கூறி முடித்துள்ளார்.

("Mukta is but the Tamil word muttam, pearl, borrowed and sanskritised." p. 24)

ஆக, தமிழ்நாட்டின் தென்கோடி விளைபடுபொருளாம் முத்து மட்டுமல்லாமல் அதன் பெயரும், வேத காலத்தில் அதாவது கி. மு. 3000க்கும், கி. மு. 1500க்கும் இடைப்பட்ட காலத்தில், வடநாடு சென்று, அம்மொழி வழக்காற்றில் இடம்பெற்றுவிட்டது என்பதைத், திருவாளர் பி. டி. எஸ் அவர்களே உறுதிசெய்துள்ளார் என்பது தெளிவாயிற்று.

ஆக, இவ்வகையால், கி. மு. 4000 தொடங்கி, கி. மு. 200 வரையான காலத்தில் தமிழ்ச் சொற்கள், மேலைநாடுகளுக்கும் வடநாட்டிற்கும் சென்று, அம்மொழிகளில் இடம் பெற்று விட்டமைக்குத்தான் சான்றுகள் உள்ளனவே ஒழிய, அக்கால அளவில், அம்மேலைநாட்டு மொழிச்சொற்களோ வடநாட்டுச் சொற்களோ தமிழகம் வந்து தமிழில் இடம் பெற்றமைக்கான சான்று எதுவும் இல்லை என்ற இவ்வுண்மையையும் ஏற்றுக்கொண்டுள்ளார் திருவாளர் அய்யங்கார் என்பது உறுதியாகிறது.

இவ்வுண்மைகள்வழி கொண்டால், "ஓரை" என்பது, தனித் தமிழ்ச் சொல். அது, கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் கிரேக்கம் சென்று, அம்மொழியில், "ஹொர" என வழங்கிய அம்மொழிச் சொல், காந்தாரம் முதலாம் நாடுகள் வழியாகப் பயணம் செய்து, கி. பி. முதலாம் நூற்றாண்டில் தமிழ்நாடு வந்தடைந்து, தமிழில் "ஓரை" எனத் திரிந்து வழங்கலாயிற்று என்பது உண்மையொடு பட்டதாகாது எனக்கொள்வதே முறையாகும்.

ஆகவே, தமிழ் ஓரை, கிரேக்க மொழி "ஹொர" என்பதன் திரிபாம் என்ற அய்யங்கார் அவர்களின் கூற்றோ அது கொண்டு, தொல்காப்பியரைக், கி. பி. முதல் நூற்றாண்டிற்குக் கொண்டுவந்து நிறுத்தும் அவர் முடிவோ ஏற்றுக்கொள்ளத் தக்கன ஆகா.

தொல்காப்பியர், கி. பி. முதல் நூற்றாண்டிற்கு முன்னர் வாழ்ந்திருக்க இயலாது என்பதற்குத், திரு. சீனிவாச அய்யங்கார் கூறும் இரண்டாவது காரணம் பின்வருமாறு:-

"தொல்காப்பியப் பொருளதிகாரம் ஏழாவது இயல், 189, 190, 197 எண்ணிட்ட சூத்திரங்களில், தலைவன் தலைவியர்களின் காதல் வாழ்க்கைக்குத் துணைபுரியும் பாங்கனில், பார்ப்பனப் பாங்கனும் கூறப்பட்டுள்ளான். ஆகவே, பார்ப்பனர்கள், காதல் நெறியில் பெருந்தோழர்களாகப் பணிபுரிந்ததைத், தொல்காப்பியர்

கருத்தில் கொண்டுள்ளார் எனத் தெரிகிறது. ஆனால், அஃது ஒருசமஸ்கிருத நாடக மரபு''.

("Chief among the "Pangar", companions of a Chief and his helpers, in his love-campaigns, Tolkappiyanar names the "Parppar". Brahmanas. Thus Tolkappiyanar Contemplates the employment of Brahmanas as chief ministers of love. This was a convention of the Sanskrit Drama". (page:217.)

''அகநானூறு, புறநானூறு, குறுந்தொகைகளில் பார்ப்பனர், பதினாறுக்கும் மேற்பட்ட இடங்களில் குறிப்பிடப்பட்டிருந்தாலும், அங்கெல்லாம், அரிதின் பேணிப் போற்றப்படவேண்டிய சான்றோர் என்பது போலும் வேறு நிலைகளில்தான் குறிப்பிடப்பட்டுள்ளனரே யல்லாமல், தலைவன் தலைவியர்க்குள் காதல் வாழ்க்கையில் துணை போகும் பாங்கனாம் நிலையில் கூறப்பட்டிலர். ஆகவே, தொல்காப்பியர், இதைத் தமிழர் பழக்க வழக்கங்களையொட்டி மேற்கொண்டாரல்லர்; சமஸ்கிருத நாடக மரபையொட்டியே மேற்கொண்டுள்ளார். ஆகவே, அவர் சமஸ்கிருத மொழியில், நாடக மரபுகள் நன்கு வளர்ந்து விட்ட காலத்திற்குச், சிறிது பிற்பட்ட காலத்திலேயே வாழ்ந்திருக்க வேண்டும்."

"The word parppar occurs four times in puram; there are ten other references to andanar or to their lore. But these alloude to their vedic scholorship, their sacrificial fire, the gifts recieved by them, but not to their services as go-bet weens... As Tolkappiyanar has transferred this convention from sanskrit drama to Tamil poetry, he must have lived sometimes after the formal drama was developed in sanskrit". (Page : 217–218).

''சமஸ்கிருத இலக்கியத்தில் நாடக மரபுக்கு வழி வகுத்தவர், அம்மொழிமுதற் புலவர் 'ப்ஹாஸர்' ஆவர். அவர், கி. மு. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்னர் வாழ்ந்

திருக்க இயலாது. அச் சமஸ்கிருத நாடக மரபு, தென்னாடு அடைந்து தொல்காப்பியத்தில் இடம் பெறுமளவு, தமிழகத்தில் செல்வாக்குப் பெற, மேலும் சில நூற்றாண்டு காலம் கழிந்திருக்க வேண்டும்.'' இவை, திரு. அய்யங்கார் அவர்களின் வாதம்.

''Bhasa'' is our earliest sanskrit poet and he can not belong to an age, earlier than the III century B.C., and it must have taken some time for the literary convention of the Sanskrit Drama to reach south India, to enable Tolkappiyanar to include it in his grammar''. (Page : 218).

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்; இதுவே மரபு. தமிழ்மொழி, தமிழர் வாழ்வு பற்றிய இலக்கணத்தை வகுத்தவர் தொல்காப்பியர். ஆகவே, அதில், அவர், அது எழுதுவதற்கு முற்பட்ட காலத்தில், தமிழ் மொழியில் நிலவிய, தமிழர் வாழ்க்கையில் இடம்பெற்றுவிட்ட மரபுகளுக்குத்தான் இலக்கண வடிவம் கொடுத்திருப்பரேயல்லாது, பிறமொழி, பிறமொழியினர், மரபுகளைக் கருத்தில் கொண்டிருப்பாரல்லர். ''செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி'' என்றுதான் பாயிரமும் கூறுகிறது.

பார்ப்பனப் பாங்கர்கள், தமிழகத்துத் தலைவன் தலைவியர்தம் காதல் வாழ்க்கைக்குத் துணைபுரிந்து, அது அக்காலத்தமிழ்ப் பாக்களில் இடம் பெற்றிருக்க வேண்டும். அதனாலேயே, தொல்காப்பியர், அதற்கு இலக்கண வடிவம் கொடுத்திருக்க வேண்டும். அம்மரபு, பிற்காலத்தே வழக்கிறந்து போக, அக்காலத்தில் எழுந்த தமிழ்ப் பாக்களில், அது இடம் பெறாது போயிருக்கு வேண்டும். தொல்காப்பியர் காலத்தே இருந்து, தொல்காப்பியரால் இலக்கண வடிவம் கொடுக்கப்பட்டுப், பின்னர் வழக்கிறந்து போனது இஃது ஒன்று மட்டுமன்று. அந்நிலைக்குத் தள்ளப்பட்டவை இன்னமும் எத்தனையோ உள்ளன, தொல்காப்பியத்திற்கு உரை கண்ட இளம்பூரணரும், நச்சினார்க்கினியாரும், அத்தகு இடங்களில், ''இவ்வழக்கம் பிற்காலதே வழக்கிறந்தன

போலும்" எனக் கூறிச் செல்வதைப் பல இடங்களில் காணலாம். இதைத், திருவாளர் பி. டி. எஸ். அவர்களும் உணர்ந்துள்ளார். "தொல்காப்பியம், தனக்கு முன் இருந்த இலக்கண நூல்களுள் எதுவும் இப்போது இல்லை. தனக்கு முன், எண்ணற்ற தமிழ்ப் பாக்கள் இருந்ததை உணர்த்துகிறது. அப் பாக்களில் பெரும்பாலன, அல்லது அறவே அழிந்து போயின. இப்போதுள்ள பழந்தமிழ்ப் பாக்களெல்லாம், தொல்காப்பியர் காலத்துக்குப் பின்னர்ப் பாடப்பட்டனவே. உரையாசிரியர்கள், தொல்காப்பியம் கூறும் இலக்கணத்திற்கான மேற்கொள்களை, இப்பாடல்களில் காண இயலாது, "மேற்கோள் வந்தவழிக் கண்டுகொள்க" எனக் கூறி விடுவதும் செய்துள்ளனர்" என, இந்நூலிலேயே, அவர் குறிப்பிடுவதும் காண்க".

"The earliest Tamil poems which are now extant belong, almost all, to the age that succeeded the time of Tolkappyanar, and commentators on the Tolkappiyam find it difficult to discover in this later poetry illustrations for many of Thol-kappiyar's rules; some times they tell the reader to find his own illustrations when he can." (Page : 70)

ஆக, பார்ப்பனப்பாங்கன் பற்றிய குறிப்பு இடம் பெற்ற பாக்கள், பண்டு பாடப்பெற்றிருந்தமையாலேயே தொல்காப்பியர், அதற்கு இலக்கணம் வகுத்தார். அவர் காலத்துக்கு முன்னர் வழக்கில் இருந்து, பின்னர் வழக்கிறந்து போன பலவற்றுள் இதுவும் ஒன்று ஆகலாம். ஆகவே, அது, பிற்காலப் பாக்களில் இடம் பெற்றிலது என்றுதான் கொள்ளவேண்டுமே ஒழிய, அது, தமிழ்ப் பாக்களில் இடம் பெறவில்லை. ஆகவே, அது தமிழர் மரபு அன்று; சமஸ்கிருத மொழியாளர் மரபு, அம்மரபு, சமஸ்கிருதத்தில் வளர்ந்தது, கி.மு. 300இல் அது, தமிழகம் வந்து தமிழரிடையே செல்வாக்குப் பெற மேலும் சில நூற்றாண்டுகள் கழிந்திருக்கும். ஆகவே, அதற்குத் தம் இலக்கண நூலில் வடிவம் கொடுத்த தொல்காப்பியர், கி. பி. முதல் நூற்றாண்டிற்கு முன்னர் வாழ்ந்திருக்க இயலாது எனக் கொள்வது முறையாகாது.

பார்ப்பனப் பாங்கன் பற்றிய குறிப்பு, எட்டுத்தொகை நூல்களில் இடம் பெறவில்லை என்ற திரு. அய்யங்கார் கூற்றிலும் உண்மை இல்லை.

கணவன், பரத்தையர் தொடர்புகொண்டு ஒழுக்கம் கெட்டு அலைகின்றான் என்பதறிந்து, அவன் மீது கடுஞ்சினம் கொண்டிருப்பாள் ஒரு கற்பு நிறை மனைவிபால் சென்று, அவள் சினம் போக்கிக் கணவனை ஏற்றுக் கொள்ளச் செய்வான் வேண்டி, அவள்பால், அவள் கணவனின் புகழ்களை, அடுக்கடுக்காக எடுத்துக் கூறும் அந்தணப் பாங்கன் ஒருவன் கலித்தொகையில் காட்சி அளிக்கின்றான்; "வெறிது நின் புகழ்களை வேண்டார் இல் எடுத்து ஏத்தும் அறிவுடை அந்தணன்" (மருதக்கலி:7:17-18) இவன், திரு. அய்யங்கார் அவர்கள் கண்களில் பட்டிலன்.

ஆனால், தன் உள்ளம் கவர்ந்த ஒருத்தியை, அதே போல் அவள் உள்ளத்தைத் தன்பால் பறிகொடுத்துத் தவிக்கும் ஒருத்தியை அடையமாட்டாக் காதற்பெருந்துயரால் கலங்கிக் கருத்திழந்து கடமை மறந்து கிடந்தான் ஓர் இளைஞன். அவனுக்கு ஒரு பார்ப்பனத் தோழன். பார்ப்பன குலக்கோலமாம் தண்டு கமண்டலத்தோடு காட்சி அளிப்பவன்; விரத நாட்களில் உண்ணாது இருந்து விரதம் காத்துப் பின்னரே உண்ணும் ஒழுக்க நெறியில் நிலைத்து நிற்பவன். எழுதப் படாதது என்ற பெருமைக்கு உரியதான நால்வேதங்களை முறையாகக் கற்றுணர்ந்தவன். அவன், தன் நண்பன் காதல் நோயால் கருத்திழந்து கடமை மறந்துகிடப்பது காணப் பொறாது அவனுக்குச் சிலபல அறிவுரைகளை வழங்கினான். ஆனால், காதல் மயக்கத்தில் ஆழ்ந்து போய்விட்ட இளைஞன், பார்ப்பன நண்பனின் அறிவுரையினை ஏற்க மறுக்கும் முகத்தான், நால்வேதம் கற்ற அவன் அறிவுத்திறனைப் பாராட்டி விட்டு, "நண்பனே! நீ, இவ்வாறெல்லாம் எனக்கு அறிவுரை கூறுவதை விடுத்து, நீ கற்ற அந்த வேதத்தில், என்னையும், என் காதலியையும் போலப் பிரிந்து துயருற்றுக் கிடக்கும் இளம் காதலர்களை ஒன்றுபடுத்தும் திறம் வாய்ந்த

மாமருந்து ஏதேனும், இருப்பின், அது அறிந்து தெரிவித்து, நாங்கள் இருவரும் ஒன்றுபடத் துணைபுரிவாயாக; அதுவே நண்பனுக்குச் செய்யக்கூடிய நல்லதுணை'' எனக் கூறியதான கருத்தமைந்த பாடல் ஒன்று குறுந்தொகையில் உளது.

> ''பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!
> செம்பூ முருக்கின் நல்நார் களைந்து
> தண்டொடு பிடித்த, தாழ்கமண் டலத்துப்
> படிவ உண்டிப் பார்ப்பன மகனே!
> எழுதாக் கற்பின் நின்சொல் உள்ளும்
> பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
> மருந்தும் உண்டோ? மயலோ இதுவே'' —குறுந்:156

இப்பாடலில் உலாவரும் அப் பார்ப்பனப் பாங்கனைத் திருவாளர், பி. டி. எஸ். அவர்கள் பார்த்துள்ளார். தம்முடைய நூலில், அவனைப் படம் பிடித்தும் காட்டியுள்ளார். ஆனால், அப் பாட்டின் கருப்பொருள், இடித்துரைத்த பார்ப்பனப் பாங்கனின் அறிவுரையினை ஏற்க மறுத்து மாறாகத், தன் காதல் கைகூடத் துணை நிற்குமாறு தலைவன் வேண்டுவதே ஆகவும், திரு. அய்யங்கார் அவர்கள், அதை அக்கருத்தோடு நோக்காது அது மணமாகாத, பல்கலைவல்ல, ஒரு பார்ப்பன இளைஞனைப் படம் பிடித்துக் காட்டுகிறதேயல்லாது, காதலுக்குத் துணைபோகும் பாங்கன் பணிகுறித்து எதுவும் காட்டவில்லை எனக்கூறித் தட்டிக் கழித்துவிட்டுள்ளார். இது, அவர் கருத்துக் குற்றமேயல்லது வேறு அன்று:

"There is one Kurunthokai, to his appurtenances, as a bachelor, but none to his function as minister of love". (Page: 218).

தொல்காப்பியர், கி. பி. முதல் நூற்றாண்டிற்கு முன்னர் வாழ்ந்திருக்க இயலாது என்பதற்கான சான்றுகளை, மேலே கூறியவாறெல்லாம் காட்ட முயன்றிருக்கும் திருவாளர், பி. டி. சீனிவாச அய்யங்கார், தொல்காப்பியர், கி. மு.

ஏழாம் நூற்றாண்டிற்கும் முற்பட்டவராவர் எனக் கூறப்படும் ஒரு கருத்து நிலவுவதை அறிந்திருந்தும், அதை மறுத்து ஒரு சொல்லும் கூறினாரல்லர்.

"பெரும்பாலான ஐரோப்பிய திறனாய்வாளர்கள், பாணினி, கி. மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்ற தப்பான கொள்கையிலிருந்து விடுபட்டிலர். திருவாளர்கள் கோல்டுஸ்டக்கர், அவர்களும், ஆர். வி. பந்தர்காா் அவர்களும், அவருடைய காலம், கி. மு. ஏழாம் நூற்றாண்டு என்பதற்கான எண்ணற்ற சான்றுகளைக் கொடுத்துள்ளனர்."

"Most European scholars have not yet relesed themselves from the prejudiced view, that Panini lived in the IV Century B.C. though Goldstrucker and Sir R. B. Bhandarkar have smashed all the arguments in favour of this view and have given number of proofs, which establish his age as the VII century B.C.,'. (Page : 116)

"கி. மு, ஏழாம் நூற்றாண்டில் புகழ் பெற்றிருந்தவராக நான் கருதும் பாணினி, நர்மதை ஆற்றிற்குத் தெற்கில் உள்ள நாடு எதையும் குறிப்பிடவில்லை."

"Panini, who, as I think, flourished in about the VII century B.C. makes no mention of any province to the south of Narmada". (Page: 123)

"பாணினிக்குச் சில நூற்றாண்டுகள் கழித்து, பெரும்பாலும் கி. மு, நான்காம் நூற்றாண்டில் காத்தியாயனர் வாழ்ந்திருந்தார்."

"A few centuries after Panini, perhaps in the IV century B.C. lived Katyayana" (Page: *135*)

மேலே கூறியிருப்பன அனைத்தும், திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் கருத்துகளாம். இவ்வாறெல்லாம் கூறுவதன் மூலம், பாணினி, கி. மு. ஏழாம்

நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பதே தம் கொள்கையாம் என்பதை உறுதி செய்துள்ளார் திருவாளர் அய்யங்கார் அவர்கள்.

திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்காருக்கு முற்பட்டவரும், அவருடைய 'தமிழர் வரலாறு' (Histry of Tamils) என்ற நூலுக்கு முற்பட்டதான 'தமிழ் ஆராய்ச்சி' (Tamil Studies) என்ற நூலின் ஆசிரியரும் ஆகிய, திருவாளர் எம். சீனிவாச அய்யங்கார் அவர்கள், தொல்காப்பியர், கி.மு. 350க்கு முற்பட்ட காலத்தவராவர் எனக் கூறி, அதை உறுதி செய்யும் இரண்டு வலுவான சான்றுகளைக் கொடுத்துள்ளார்.

"தொல்காப்பியப் பாயிரம், தொல்காப்பியர் இந்திரன் இயற்றிய ஐந்திரம் என்ற இலக்கண நூலை அறிந்தவர்; அதை முதல் நூலாகக்கொண்டு தம் தொல்காப்பியத்தை இயற்றியவர் எனக் கூறுகிறது. 'ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன்' என்பது பாயிரம். சமஸ்கிருத இலக்கணத்திற்கு முழுமுதல் நூலாகக் கருதப்படுவதும், ஊழிக்கால அளவை உறுதி செய்யத் துணை புரிவதுமாகிய பாணினியின் இலக்கண நூல் இருக்கும்போது, தொல்காப்பியர், அதைப் பயின்று, தாம் இயற்றிய தமிழ் இலக்கணத்திற்கு, அதை முதல் நூலாகக் கொள்ளாதது ஏன்? என்ற கேள்விக்குத், தொல் காப்பியர் காலத்துத் தென்னாட்டு இந்துக்களுக்குப் பாணினி, அறிமுகம் ஆகாதிருந்திருக்க வேண்டுமென்பது உண்மை யானாலல்லது, விடை காண்பது இயலாது. தம்முடைய இலக்கண நூலில், பாணினி குறிப்பிடும் முன்னோர்கள் அறுபத்து நால்வரில், இந்திரனும் ஒருவர். ஆகவே, அவ்விந்திரன், பாணினிக்கு முற்பட்ட காலத்தே வாழ்ந்தவ ராதல் வேண்டும். அவ்வகையால், தம்முடைய தொல் காப்பியத்திற்கு, முதல் நூலாகப் பாணினியத்தைக் கொள் ளாது, அப் பாணினிக்கு முற்பட்டவராய இந்திரன் இயற்றிய ஐந்திரத்தைக் கொள்ளும் தொல்காப்பியர், பாணினிக்கு உரிய காலமாகச், சிறந்த வரலாற்றுப் பேராசிரியர்களால் வகுக்கப்பட்ட கி. மு. 350க்கு முன்னர்

வாழ்ந்தவராதல் வேண்டும்.'' என்று கூறுகிறார் திருவாளர் எம். சீனிவாச அய்யங்கார். இது ஒரு காரணம்.

"In the colophon to the Tolkappiyam, the author says, that he has mastered the sanskrit grammar of Indra-ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் - when the epoch-making work of Panini, had long been considered, the highest authority on the subject in sanskrit. why Tolkappiyanar should study and follow Indra's work in his grammar of the Tamil language is inexplicable, unless it be, that Panini was not known to the southern Hindus of Tolkappiyar time. One of the sixty-four predecessors, quoted by panini in the field of grammatical science was Indra, and he should therefore have flourished before him. Thus, Tolkappiyar must have lived anterior to B.C. 350, which is the date assigned to Panini, by the best-authorities." (Tamil studies : Page : 117)

> "ளஃகான் முன்னர் யவவும் தோன்றும்"
> ' ஞநமவ என்னும் புள்ளி முன்னர்
> யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே"
> "மஃகான் புள்ளி முன் வவ்வும் தோன்றும்."
>
> —தொல் : எழுத்து:24, 27, 28.

என்ற சூத்திரங்களிலிருந்து, தொல்காப்பியர் காலத்தில் ல்ய, ள்ய, ஞ்ய, ந்ய, ம்ய, வ்ய, ம்வ என்பன போலும் மெய்ம் மயக்கங்களை இடையில் கொண்ட சொற்கள் வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது. அச் சூத்திரங் களுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியார், "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின், அக்காலத்து ஒருமொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றும், அவை இக்காலத்து இறந்தன'' எனக் கூறியுள்ளார். இவை போலும் சொல் எதுவும், இன்றைய தமிழ் இலக்கியங்களில் இடம் பெறவில்லை. கி. பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்ததான திருக்குறளிலும், அவை இடம் பெற்றில. ஆகவே, அத்தகைய சொல்லாட்சி, திருக்குறள் காலத்துக்குக், குறைந்தது, 300

ஆண்டுகளுக்கு முன்னரே வழக்கில் இருந்திருக்க வேண்டும். இக்காரணங்களால், தொல்காப்பியர், கி. மு. 350க்கு முற்பட்ட காலத்திலேயே வாழ்ந்திருக்க வேண்டும்'' என்றும் கூறியுள்ளார், இது அவர் காட்டும் இரண்டாவது காரணம்.

"Again, it will be seen from the following sutras, that at the time of Tolkappiyar, there were in use, some Tamil words, in the middle of which letter-Combination like lya, lya, jnya, nya, mya, vya, mva, could occur.

> "லளஃகான் முன்னர் யவவும் தோன்றும்"-1:24.
> "ஞநமவ வென்னும் புள்ளி முன்னர்
> யஃகானிற்றல் மெய்பெற் றன்றே"-1:27
> "மஃகான் புள்ளி முன் வவ்வுந் தோன்றும்''.-1:28

Commenting on these suthras (சூத்திரங்கள்) Nachinarkiniyar writes thus: இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின், அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம்; அவை இக்காலத்து இறந்தன''.

Not a single word of the kind referred to in rhe sutras is to be found in the whole range of existing Tamil literature. The earliest work of any magnitude, that is the kural of Thiru valluvar, goes back to the first century A.D., and the period when wuch words were current shouid have been, at-least three or four centuries before the age of that work. For these reasons, it wouldnot be too much to suppose, that Tholkappiyar flourised before B.C. 350". (Tamil Studies:Page:118)

திருவாளர் எம். சீனிவாச அய்யங்காரவர்களின் இந் நூலைத், திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்காரவர்கள் பார்த்துப் படித்துள்ளார். அதிலிருந்து சில பகுதிகளைத், தம்முடைய நூலில் மேற்கோளாகவும் காட்டியுள்ளார். திருவாளர் எம். சீனிவாச அய்யங்கார், அவருடைய தமிழ் ஆராய்ச்சி (Tamil studies) என்ற நூலின் 287 ஆம் பக்கத்தில், மணக்கிள்ளி குறித்துக் கூறியிருப்பதை ஏற்றுத் தம்முடைய

தமிழர் வரலாறு (History of the Tamils) என்ற நூலின் 512 ஆம் பக்கத்தில், "மணக்கிள்ளியை, நெடுஞ்சேரலாதனின் உடன் பிறந்தாள் கணவனாகக் கொண்டு, அவிழ்க்க இயலா முடியைத், தைரியமாக அவிழ்க்க முயன்றுள்ளார். திரு. எம். சீனிவாச அய்யங்கார்"

(Mr. Srinivasa Aiyangar boldly attempted to cut the guardian knot by taking Manakkilli, as Nedunjerals 'sister's husband") எனக் கூறியிருப்பது காண்க.

திறனாய்வு நிலையில், ஒரு பொருள் பற்றி, ஒருவர், ஒரு முடிவினை நிலைநாட்ட முயலும்போது, அதற்குத் துணை நிற்கும் சான்றுகளை அடுக்கடுக்காக எடுத்து வைப்பதைக் காட்டிலும், அம்முடிவிற்கு மாறாக எடுத்து வைக்கப்படும் சான்றுகளைத், தக்க காரணம் காட்டி மறுக்க வேண்டியது தலையாய கடமையாகும். தருக்க முறையில், இதைப், "பிறன் கோள் மறுத்துத் தன் கோள் நிறுவுதல்" என்ப.

தொல்காப்பியர், கி. பி. முதல் நூற்றாண்டிற்கு முற்பட்டவராகார் என்பதை நிலைநாட்ட முயலும் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள், தொல் காப்பியர், கி. மு. 350க்கு முற்பட்டவராவர் என்பதை நிலை நாட்ட, திரு. எம். சீனிவாச அய்யங்காரவர்கள் எடுத்து வைக்கும், மேலே கூறிய, வலுவான இரு சான்றுகளை மறுக்க வில்லை. திரு. எம். எஸ் அவர்கள் அம்முடிவு கொண் டுள்ளார் என்பதை அறிந்திருந்தும், அதை மறுக்காமை மட்டு மன்று; அவ்வாறு ஒரு கருத்து நிலவுகிறது என்றுதானும் குறிப்பிடவில்லை. அதை மறுப்பதற்கான காரணத்தைத் திரு. பி. டி. எஸ் அவர்களால் காண இயலவில்லை என்பதே அதற்குப் பொருளாம்.

தொல் காப்பியரைக், கி. பி. முதல் நூற்றாண்டிலேயே நிறுத்த, திரு. பி, டி. எஸ். அவர்கள் தேடிப்பிடித்த, தமிழ் "ஓரை"யும் அவர்க்குத் துணை புரியவில்லை; தலைவன்

தலைவியர்தம் காதல் வாழ்க்கைக்குத் துணை போகும் பார்ப்பனப் பாங்கனும், திரு. பி. டி. எஸ் அவர்களைக் கை விட்டுவிட்டான். தொல்காப்பியர், கி. மு. 350க்கு முற்பட்டவர் என்ற எம். எஸ் அவர்களின் வாதத்தின் முன் நிற்கவும் மாட்டாது தலைமறைவாகி விட்டார். திரு. பி. டி. எஸ்.

---

## அதிகாரம் : VI

# பாரதப் போர்

### தமிழ் அரசு இனங்களின் தோற்றம்:

தென் இந்தியாவை, இராமன் அமைதிப்படுத்தியதன் அரசியல் விளைவு, சோழ, சேர பாண்டியப்பேரரசு இனங்களின் தோற்றமாம் எனக் கொள்ளலாம். இராமாயணத்தில், இவ்வரசு இனப் பெயர்கள் இடம் பெற்றிருந்தன என்றாலும், புராணங்களில் குறிப்பிடப்படும் மூன்று இராவணர்கள் ஆண்ட காலத்தில், இவ்வரசு இனங்கள் பெரு வாழ்வு வாழ்ந்திருக்க முடியாது. இது பற்றிய மொழி பெயர்ப்பு ஆசிரியர் கருத்து பின்இணைப்பில் தனியே ஆராயப்பட்டுள்ளது. இந்த இராவணர்கள், தென்னிந்தியா முழுவதும், கட்டுப் பாடற்ற அரசியல் செல்வாக்கினை நாடறியச் செலுத்தி வந்தனர். கோதாவரிக்கரையில் உள்ள ஜனஸ்தானம் கடைசி இராவணனின் புறக்காவல் அரண்களில் ஒன்றாக இருந்தது. அவனுடைய மக்கள் விந்தியத்துக்குத் தெற்கில் உள்ள பகுதிகளில் பெருந்திரளாகக் காணப்பட்டனர். அவர்களில் சிறுசிறு கூட்டத்தவர், ஆரிய வர்த்தத்துள்ளும் அடிக்கடி நுழைந்தனர். அவன் ஆட்சி நிலவும் எல்லைக்குள், பிறஅரச இனங்கள் ஆட்சி செலுத்துவது இயலாது. அந்நாட்களில் சோழ, சேர, பாண்டியப் பழங்குடிகள் இருந்திருக்கக் கூடும். ஆனால், அவற்றிலிருந்து எழுந்த அரச இனங்கள் இருந் திருக்கா. பிற்காலத்திய தென் இந்திய மரபுவழிச் செய்திகள் அவர்களை உலகம் தோன்றிய நாள்தொட்டு ஆள்வோராக ஆக்குகின்றன: "கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே, முன் தோன்றி மூத்த குடி" என்கிறது அது. "நினைவுக்கு எட்டாப் பழங்காலத்திலிருந்தது" என்பதே இத்தொடரின்

உண்மைப் பொருள். வேறுவகையில் கூறுவதானால், இம் மூவேந்தர் குடியின் தோற்றமூலம் குறித்து எதுவும் தெரியவில்லை என்பதாம். புதிதாக எழுந்த, இந்தச் சோழ, சேர பாண்டிய அரசர்கள், வடஇந்தியாவோடு, தென் இந்தியா கொண்டிருந்த, ஆண்டாண்டு, காலத் தொடர்பை விடாது கட்டிக் காத்தனர். இராமன் இறப்பிற்குப் பின்னர், ஆரிய வர்த்த அரசியலில், அயோத்தியா கொண்டிருந்த ஆதிக்கம் முடிவுக்கு வந்துவிட்டது. சில தலைமுறைகள் கழித்து, குரு, பௌரவ ஆட்சியைப் புகழ்சிறக்க உயர்த்தினார். குருஷேத்திரம், இந்தியாவின் தலைநகராய் உயர்ந்தது. இராமன் காலத்திற்குப் பின்னர்ப்பதினைந்து தலைமுறைகள்* கழித்துக், குருவின் வழிவந்தவர்களிடையே, பகையும், இந்தியச் சிற்றரசர்களிடையே பொறாமையும் வளர்ந்தன. இறுதியில் பாரதப் போரில் கொண்டுபோய் விட்டது. இக்கால கட்டத்தில், மகாபாரதக் கூற்றுக்களால் உறுதிப் படுத்தப்படுவது போல, தென்னிந்திய அரச இனங்கள் மூன்றும், வடஇந்திய அரசர்களோடு, அமைதி அல்லது வேறு முறையிலான உறவினை வளர்த்து வந்தனர்.

**மகாபாரதப் படைப்பு:**

அப்பெருங்காப்பிய அகச்சான்றுகளைப் பயன் கொள்ளும் முன், அந்நூல், பல்வகைப் பொருட்பாடலாம் என்பதை நினைவில் கொள்ளுதல் வேண்டும். அதன் உள்ளடக்கம், கீழ்க்காணும் மூன்று வகைகளில் பிரிக்கப்படலாம்.

1. பாரதப் போர்வீரர்களின் வாழ்க்கை, மற்றும் அப்போர் பற்றிய கட்டுக்கதைகள். இவை, அப்பாட்டில் கருப் பொருளாக அமைந்து, அப்போர் நிகழ்ந்த காலந்தொட்டு,

---

*. சீதாநாத் ப்ரதான் அவர்களின் பண்டை இந்தியாவின் கால வரிசைப்பட்டி (chronology of ancient India) பக்கம்:109. பர்கிதர் அவர்கள் 20 தலைமுறையாகக் கணக்கிடுகிறார். பழைய இந்தியா வரலாறும், மரபுகளும் (Ancient India. History and Tradition) பக்கம்:148—149.

பெரும்பாலும், நாட்டுப்புறப் பாடலாக உயிர் பெற்றிருந்து, பௌரவ அரசமரபில், அர்ச்சுனனுக்கு ஆறாவது தலைமுறையில் வந்த அதிசீமகிருஷ்ணன் ஆட்சிக்காலத்தில், நைமிசாரணயத்தில் நடைபெற்ற பெரிய வேள்வியின்போது, நெடும் பாட்டாகத் தொகுத்துப் பாடப்பட்டதாக நான் கொள்கிறேன். பழைய அரசியல் நாட்டுப் பாடல்கள், வேள்விகள் நிகழும்போது பாடப்படும் வழக்கத்தால், மக்கள் நினைவில் அழியாமல் வைக்கப்பட்டன. பாரதப் போர் வீரர்களின் வாழ்க்கையைக் கூறும் பாரதத்தின் பகுதி, அப்போர் நிகழ்ந்த காலத்தில் (கி. மு. 1400) அதில் கூறப்பட்டிருக்கும் மக்களும், நிகழ்ச்சிகளின் செயல்பாடும் இருந்தமைக்கான அகச்சான்றாகக் கொள்ளப்படும்.

2. கி. மு. 3000இல் நிகழ்ந்திருக்கும் என நான் மதிப்பிடும், சூரிய, சந்திர அரசமரபுகளின் கால்கோள் ஆண்டு முதல், அப்பாரதப் பெரும்போர் நடைபெற்ற ஆண்டு வரையான காலத்தில் அரசர்கள், அவ்வரசர்களின் குடிவழிப் பட்டியல் குறித்த புராணக்கட்டுக் கதைகள், மற்றும் கவிதைகள் இடம்பெற்றுவிட்டன. அப்பாரதப் பெரும்போர் வரையான காலத்தில், ஹெரோடொட்டஸ் (Herodotos)க்கும் விதிவிலக்கு இல்லாமல் மிகப் பழைய வரலாற்று அகச்சான்றுகள் அனைத்தும் குறித்துச் செய்ய வேண்டுவது போல, வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்து, எளிதில் வேறு பிரித்துக் காணக் கூடிய புராண நிகழ்ச்சிகள் சிலவற்றின் இடைச்செருகுகள் சிலவும் இப்பழங் கதைகளில் உள்ளன. இவ்வரலாற்றுச் செய்திகள், வேதங்களிலும், இராமாயணத்திலும், புராணங்களிலும் காணக்கூடிய வரலாற்றுச் செய்திகளோடு ஒப்புக் காணப்பட வேண்டும். இவை, அரசவைப் பாடகர்களால், நனிமிகப் பழைய காலம் தொட்டுப் பாடப்பட்டு வந்த அரசியல், நாட்டுப் பாடல்களிலிருந்து பெறப்பட்டவை. பர்கிதர் மற்றும், சீதநாத் ப்ரதான் ஆகியோர் வெற்றிகரமாகச் செய்தது போல், இவை நுணுக்கமாக ஆராயப்பட்டால், பண்டைய இந்திய வரலாற்றை மீண்டும் வரைவதற்குப் பெருந்துணை அளிக்கவல்லன. மகாபாரதத்தில்

இடம்பெற்று உள்ள இவைபோலும் புராணக்கதைகள், மகாபாரதப்போருக்கு முந்தைய காலத்து நிகழ்ச்சிகள் குறித்த அகச்சான்றுகளாகக் கொள்ளப்படும். அவை, அப்போருக்குப் பின்னர் நெடுங்காலம் கழித்து, அப்பாக்களுள் வழிகண்டு நுழைந்துவிட்டன.

3. விஷ்ணு, சிவன் குறித்து, வேதங்களில் கூறப்படும் கதைகள் அல்லாத வேறு கதைகள்; இவை பாரதப்போரை அடுத்து வந்த காலங்களில், முக்கியத்துவம் பெற்று ஆகம நெறிகள், அந்நாட்களில், பாகவதநெறி, மாகேஸ்வர நெறி என இரண்டே இருந்தன. முன்னது விஷ்ணு வழிபாட்டையும், பின்னது சிவ வழிபாட்டையும் குறிப்பன. விஷ்ணுவை, சிவனை, அவர்களின் சின்னங்களை வழிபடும் வழிபாட்டு முறைகள் விஷ்ணுவின் அவதாரங்கள், சிவன் மக்களிடையே தோன்றும் திருவிளையாடல்கள் குறித்த கவிதைகள், ஏகாந்திகளும், சிவயோகிகளும் பின்பற்றிய குறிப்பிடத்தக்க சிறப்பியல்பு வாய்ந்த யோகப் பயிற்சிகள், மனிதன் பேரின்பத்தின் நுண்ணிய பிண்டமாம் மனித உயிர், உலகப்பெரும்படைப்பு, பேரண்டம் ஆகியன குறித்து சாங்கியத் தத்துவப் பிரிவுகளிலிருந்து வளர்ந்த பல்வேறு கொள்கைகளாகக் காணும் தத்துவஞான ஆய்வுகள் ஆகியன அவ்வாகம நெறியில் வளர்ந்து உருப்பெற்றன.

இந்த ஆகம நெறிகள், ஏறத்தாழ கி. மு. 1000க்குப் பின் சில நூற்றாண்டுகள் கழித்து, மகாபாரதத்தில் முறைப்படுத்தா நிலையில் இணைக்கப் பெற்றன.

4. அர்த்த சாத்திரங்கள் தர்மசாத்திரங்கள், மோட்ச சாத்திரங்கள், இப்பொருள்கள் குறித்த பழைய கொள்கை ஆய்வுகள் இவை மறைந்துபோகும் அபாயத்தில் இருந்து பாரத வீரகாவியத்தில் பற்றுற இணைக்கப்பட்டு, அதன் நாடகப் பாத்திரங்களின் உரையாடல்கள் என்ற வகையில், அக்கவிதையில் பின்னப்பட்டுப் புதிய வாழ்வுரிமை பெற்றவை. ஆய்வு செய்து முழுவடிவம் பெற்ற பிற்காலக் கொள்கை

விளக்கம் போலல்லாமல், இச்சாத்திர முடிவுகளெல்லாம், ஏறத்தாழ உருவம் அற்றவை.

5. வேதாந்தம் போன்ற பல்வேறு தத்துவ ஞான முறைகளின் கொள்கை விளக்கங்கள் அதாவது, வேதங்களின் கடைசி அத்தியாயங்களின் போதனைகள் பொருந்துற அமைப்பதானால் ''வேதாசிரம்'' அதாவது, உபநிஷதம், நியாயம், வைசேஷிகம், எல்லாவற்றிற்கும் மேலாகச், சாங்கியம், யோகம், மற்றும் ஆகமங்களின் இறுதி முறைகளின் இரண்டின் கொள்கை வளர்ச்சி, கடைசியில் கூறப்பட்ட சமய முறையில், மிகப்பெரிய முன்மாதிரி எடுத்துக்காட்டு பாகவதர்கள் வழிச் சமயதத்துவம் ஆனதும், ஏனைய சமயாசிரியர்களெல்லாம், உலகை உணர்ந்து, உளத்தால் பற்றிக்கொள்ள முயற்சிப்பதற்கு இடமான, ஒருவரின் ஆற்றல் எல்லைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட பெருநோக்கு நிலையில் இடம்கொண்ட உலகம் கண்ட மிகப்பெரிய சமயாசிரியன், வேதாந்த காலத்திய சமய நெறிகளின் முரண்பட்ட உபதேசங்களை ஒருமுகப்படுத்தி; சரியாகச் சொல்வதானால், அறிவெல்லைக்கெல்லாம் அப்பாற்பட உயர்த்தியதுமான, பகவத்கீதை ஆகும்.

6. நிலஇயல் சார்ந்த பகுதிகள்; இவை, இந்தியாவின் பல்வேறு இடங்களைக் குறிப்பாக, தெய்வத் திருமேனிகளை நாடிச், சமய யாத்திரிகர்கள் சென்ற இடங்களைக் குறிப்பிடுகின்றன.

மகாபாரதத்தின், இக்கடைசிப் பகுதிகள், கி. மு. 1000க்கும் 500-க்கும் இடைப்பட்ட காலத்தில், பாக்களில் இடம்பெற்று, அந்த வீரகாவியத்தை, ஐந்தாம் வேதமாக மதிக்குமாறு உயர்த்திவிட்டன.

**தென்னிந்தியாவும் பாரதப் போரும் :**

மகாபாரதத்தின் உயிர் நிலையாகிய, போர்க்காதையில், தென்னிந்தியாவுக்கும், வடஇந்தியாவுக்கும் இடையில் அரசியல் உறவுகள் இருந்தன என்பதற்கான அகச்சான்று உளது. திரௌபதியின் சுயம்வரத்திற்கு வந்திருந்தவர்களில்

பாண்டிய அரசனும் ஒருவன், (மகாபாரதம்:189:7020) யுதிஷ்டிரர் விளக்கிக் கூறிய கிருஷ்ணனின் தெய்வத் தன்மை வாய்ந்த வெற்றிச் செயல்களில் (திவ்யானி கர்மானி), பாண்டியர் வாயில்கள் உடைக்கப்பட்டு, [மகாபாரதம்: 7:11 ; 398 : 8 : 23 : 1016 ; இரண்டாவது குறிப்பில், "பின்ன கபாடே பாண்டியனாம்" என்ற தொடர் வந்துளது. ஈண்டு, "கபாடே" என்பது, உறுதியாக "வாயில்" என்றுதான் பொருள்படும். ஆகவே பக்கம் 53இல் ஏற்கனவே குறிப்பிடப் பட்டிருக்கும் இராமாயணக் "கபாடம்" என்பதும் வாயிலைத் தான் குறிக்கும். தென் இந்திய உரையாசிரியர்கள் விளக்கம் அளிப்பது போல், கபாடபுரத்தைக் குறிக்காது]. பின்னர்ப் பாரதப் போரில், பாண்டியர் பக்கம் இருந்து போரிட்ட சாரங்கத்வஜன் (இது மான் கொடியன் என்பதன் மொழி பெயர்ப்பாதல் ஆகும்) தந்தை கொல்லப்பட்ட நிகழ்ச்சியில், கிருஷ்ணன், பாண்டி ராஜாவைத் தோற்கடித்த நிகழ்ச்சி இடம் பெற்றுளது. கிருஷ்ணன் சோழர்களோடும் போரிட்டுள்ளான். (மகாபாரதம் 7: 11. 321), யுதிஸ்டிரர் ராஜசூய வேள்வி கொண்டாடியபோது, முதல் நடவடிக்கையாகப் போர் அல்லது சமாதானம் மூலம் இந்தியா முழுவதும் தம் மேலாட்சி நிலையை உறுதி செய்துகொள்வது தேவைப்பட்டது. சகாதேவன், திக்விஜயமாகத், தென்னாடு புகுந்து, திராவிடர்களையும், சோழர்களையும், சேரர்களையும் பாண்டியர்களையும் வெற்றி கொண்டான். சோழர்களும் திராவிடர்களும், ஆந்திரர்களைப் போலவே ராஜசூயத்திற்கு வந்திருந்தனர். (மகாபாரதம் : 2: 34 : 1988), சோழர்களும், பாண்டியர்களும், யுதிஷ்டிரருக்குப் பரிசுகள் கொண்டு வந்தனர் (மகாபாரதம் : 2 : 52 : 1893). பாரதப்பெரும்போர் தொடங்கியபோது, கிருஷ்ணனால் தோற்கடிக்கப்பட்ட பாண்டியராஜாவின் மகன், சாரங்கத்வஜன், படையோடு, யுதிஷ்டிரனுக்குத் துணை வந்தான். [மகாபாரதம்:19:1576, 4:50:2084. பாடபேதம், இப்பெயரை, சாகர்த்வஜன் எனக் குறிப்பிடுகிறது] கேரளர்களும், சோழர்களும் கூட, பாண்டவர் பக்கம் நின்று போரிட்டனர். [மகாபாரதம்:

22:455; 1893 பாண்டிய அரசன் துரோணர்க்கு எதிராகப் போரிட்டு, அசுவத்தாமனால் கொல்லப்பட்டான் [மகாபாரதம்:4:23: 1019 : 8: 21 : 81].

புதிதாக மணம் கொண்ட பாண்டவர்களின் மனைவி, திரௌபதி, யுதிஷ்டிரர் தொடங்கி, ஆண்டுக்கு ஒருவரோடு வாழவேண்டும் என்ற முறை ஏற்பட்டவுடனே, அர்ஜுனன் தீர்த்தயாத்திரை மேற்கொண்டான். அத்தீர்த்தயாத்திரையின் போது, மணிபுர மன்னன் சித்ரவாகனன் மகள், சித்ராங்கதாவை மணம் செய்து கொண்டான். [மகாபாரதம்: 7:11:3986. 1:215:7826.] மணி என்ற சொல், தமிழில் நீலமணியைக் குறிக்கும். பழைய சமஸ்கிருத இலக்கியங்களும், பழைய கரலவேலக் கல்வெட்டுகளும், பாண்டிய நாட்டு நீலமணியைப் பேசக் கேட்டுள்ளோம். ஆகவே, மணிப்பூர் என்ற பெயர், அம் மணி கிடைக்கும் பாண்டியர் தலைநகர்க்குப் பொருந்திய பெயரே]. அப்பெருங்காப்பியத்தின் தென் இந்தியப் பதிப்புகளில், அப்பெயர் "மணலூர்" எனக் குறிப்பிடப்பட்டுளது. ஆக, மணலூர் என்பது உண்மையில் தமிழ்ப் பெயரே. பிறிதோர் இடத்தில் (ஆதிபர்வம்:6:1:64.) அர்ச்சுனனின் இம்மனைவி பாண்டவ அரசகுமாரியாகக் கூறப்பட்டுளது. சித்ராங்கதாவை மணம் செய்துகொள்ளுமுன், அர்ச்சுனன், உலூபி என்ற நாகக் கன்னிகையை மணந்து கொண்டான். (மகாபாரதம்: 1:214:7810) தன்னுடைய தீர்த்தயாத்திரையின் போது, அர்ச்சுனன் சென்ற இடங்கள், சீதையைத் தேடிவருமாறு தன் வானர வீரர்களைச் சுக்கிரீவன், பெரிய குழப்ப நிலையில் பணித்தது போன்ற குழப்பநிலையில், நிலவியல் சார்ந்த நிலைமைகளுக்கு மதிப்பளிக்காமலே குறிப்பிடப்பட்டுள்ளன. அவன் மணந்துகொண்ட உலூபி, கங்கைக் கரையில் அர்ச்சுனன் முன் திடுமென வந்து நிற்குமாறு செய்யப் பட்டாலும், அவள் பாண்டி நாட்டிற்கு அணித்தாக உள்ள ஒரு நாட்டைச் சேர்ந்தவளே ஆவள்.

## நாகர்கள் குறித்த மற்றொன்று விரித்தல் :

புராணங்கள், நாகர்களைப் ''பாதாள''த்தில் வாழவைக்கின்றன. ஆரியவர்த்தத்தின் மையப் பகுதியிலிருந்து வெகு தொலைவில் உள்ள நாடு எதுவும் பாதாளம்தான். இன்று, நாகர்கள், வடகிழக்கு இந்தியாவில் உள்ளனர். வடமேற்கில் உள்ள தக்ஷசீலத்தில் உள்ள நாகர்கள், பரீக்ஷித்தின் மரணத்திற்குப் பொறுப்பாளர். நாகப்பட்டினம், நாகூர் என்ற பெயர்கள் சான்று கூறுவது போல், தென் இந்தியாவில் நாகர்கள் இருந்தனர். பாம்புகளை மட்டுமே வழிபடும் நாக வழிபாடு, வாழ்க்கை வளர்ச்சி நிலையில், மனிதன், தொடக்க காலத்தில் வாழ்ந்த, மலைநாட்டில்தான் முதன்முதலில் முகிழ்த்தது. உலகம் முழுவதிலும், அது, பரவலாக இருந்து வந்தது. நாகர்கள், பண்டைக்காலத்தில் இந்தியா முழுவதும் வாழ்ந்திருந்தனர். தங்கள் இனச்சின்னங்களாகப் பல்வேறு பொருட்களை மேற்கொள்ள, ஆதிப்பழங்குடி இனத்தவரைத் தூண்டிய காரணங்கள், நமக்குத் தெரியவில்லை. ஆனால், விரைந்து உயிர் போக்கவல்ல நாகம், உலகம் முழுவதும் ஏன் வழிபடப்பட்டது என்பதை, நாம் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம். நாகரீகமற்ற காட்டுமக்களின் வாழ்க்கை பற்றிய ஆராய்ச்சி மாணவர்களுக்குத், தங்கள் இனச்சின்னமாம் கடவுள்களின் பழக்க வழக்கங்களை, அக்கடவுள்களை வழிபடுவாரும், அப்படியே பின்பற்றுவதன் உண்மை நன்கு தெரியும், பழைய குகைவாழ்மக்கள், பாதுகாப்பு நாடிக், குகையுள் தவழ்ந்து செல்வதும், பாம்பு, தன் புற்றினுள் ஊர்ந்து செல்வதும் ஆகிய இரண்டிற்கும் உள்ள ஒற்றுமை, அவன் திருந்தா உள்ளத்தில், அவனுடைய கடவுள்மீது வழிபாட்டுணர்வை நிறைவித்துவிட்டது. [சிவனின் முதல் பக்தனாகிய காளை செய்வது போலவே செய்து காட்டுவதன் மூலம், நந்தியை மகிழ்விக்கலாம். தமக்கும், சிவனுக்கும் இடையில், நல்ல வலுவான தூதுவனைப் பெறலாம் என்ற நம்பிக்கையில், சிவ வழிபாட்டாளர், இன்றும் காளை போலப் பொருளற்ற குரல் எழுப்புகின்றனர்].

சிவ, விஷ்ணு வழிபாட்டு முறைகள் எழுந்த பிறகும் பலர் அவ்வழிபாட்டு முறைகளில் இணைந்துவிடாமல் நாக வழிபாட்டாளர்களாகவே இருந்துவிட்டனர். ஆனால், நாகர் எனக் குறிப்பிட்டு அழைக்கப்பட்டு ஏனைய மக்கள் கூட்டத்திலிருந்து வேறுபடுத்தி வைக்கப்பட்டனர். தென்னிந்தியாவில், மலபார் நாகர்களின் தலைமையிடமாக இருந்தது. இதுவே அந்நிலைமை என்பதை உணர்ந்த, புத்த ஜாதகாவிலிருந்து இரண்டு குறிப்புகளைக், கீழே கொடுக்கின்றேன். கிறித்துவுக்குப் பிறகு, முதல் ஆயிரத் தாண்டின் முற்பாதியின் பிற்பாதி காலத்தைச் சேர்ந்த, பத்துப்பாட்டில், கரைக்குக் கடல் அலைகள் கொண்டு வந்து சேர்த்ததால் திரையன் எனப் பெயர் சூட்டிப் பாராட்டப்பட்ட ஓர் இளவரசன் குறிப்பிடப்பட்டுள்ளான். "அந்நீர்த் திரைதரு மரபின் உரவோன்" (பெரும்பாணாற்றுப் படை 30-31)). இப்பாட்டின் உரையாசிரியர், நாகப் பட்டினத்துச் சோழ அரசன் ஒருவன் பாதாளம் சென்று, அங்கு ஒரு கன்னிகைபால் காதல் கொண்டான். அங்கு அவர்க்குப் பிறந்த மகனை அவள், அவன்பால் திரைவழி யாக அனுப்பி வைத்தாள் என்ற ஒரு கட்டுக்கதையைக் கூறி இத்தொடர்க்குப் பொருள் கூறியுள்ளார். "நாகப் பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று, நாகக் கன்னிகையைப் புணர்ந்த காலத்து, அவள், யான் பெற்ற புதல்வனை என்செய்வேன் என்றபொழுது, தொண்டையை அடையாளமாகக் கட்டி கடலிலேவிட அவன் வந்து கரையேறின், அவற்கு யான் அரசவுரிமை செய்வித்து நாடாட்சி கொடுப்பன் என்று அவன் கூற அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின் திரையன் என்று பெயர் பெற்றதைக்கூறினார்". (மேற்படி உரை) இது தமிழர்கள், இந்தியாவின் தெற்குக் கடற்கரைகள் வழியே நாகர் உலகோடு தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகிறது. பத்துப் பாட்டுக்காலத்திலும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்த மணிமேகலையில், மற்றொரு சோழன், ஈங்குக் காவிரிப் பூம்பட்டினத்துக் காவலன் நெடுமுடிக்கிள்ளி என்பான்

தன் தலைநகரைச் சார்ந்த ஒரு சோலையில் ஒரு நாகக் கன்னிகையைக் கண்டு காதல் கொண்டான். ஒரு திங்கள் கழித்து அவள் மறைந்துவிட்டாள். சிலகாலம் கழித்து அவள் அவர்களுக்குப் பிறந்த மகனைக் கம்பளச்செட்டி என்ற வணிகனின் கலம் வழி அனுப்பி வைத்தாள். ஆனால் கலம் கடலில் கரை அருகே கவிழ்ந்துவிட்டது. அது கேட்டு அரசன் மகனைத்தேடி அலைந்தான். அதனால், ஆண்டு தோறும் நிகழும் இந்திர விழாவை மறந்தான். அதன் விளைவால், தலைநகரைக் கடல் கொண்டது என்ற கதை கூறப்பட்டுளது. [மணிமேகலை: 24:29-43:25:178-192 பூரி தத்த ஜாதகக் கதைகள்படி, கம்பளர், அஸ்ஸதரர் இருவரும் பழங்குடியினராவர். எண்:543] இக்கதைகள், கிழக்குக் கடற் கரையிலிருந்த நாகர் உலகத்திற்குக் கடல் வழித் தொடர்பு இருந்தது என்பதை உணர்த்துகின்றன.

நாகர் மொழி, தமிழ் அன்று; ஆனால், ஒரு தமிழனால், அம்மொழியைக் கற்றுக்கொள்வது இயலாத ஒன்றன்று. அம்மொழி கற்றவன், சாதுவன் என்ற செட்டி, வங்கத்தொடு, கடல் வாணிகம் செய்யச் சென்று, சென்ற கலம் கவிழ்ந்து போக, நிர்வாண நாடோடிகளாம் நாகர் வாழும் கடற் கரையை அடைந்து, அவர்கள் மொழியைக் கற்றிருந்ததனால் உயிர் பிழைத்து, அவர்கள் அளித்த சந்தனக் கட்டை, மெல்லிய நூலாடை, அணிகளோடு திரும்பினான். [மணிமேகலை : 16 : 60 :-61. அவர்பாடை மயக்கறு மரபின் கற்றனன் ஆதலின்] இச்செய்திகளிலிருந்து நாம் பெறக்கூடிய இயல்பான முடிவு, இன்று மலபார் என அழைக்கப்படுவதே, தென்னிந்தியாவில் நாகர் நாடாம் என்பதே. நாகர் வழிபாடு பெருமளவில் இருக்கும் இந்தியா வின் ஒரு பகுதியாக, இன்றும் இருப்பது மலபார். மலபார் நாட்டின் முக்கிய இனத்தவரின் பெயராகும் "நாயர்" என்ற சொல், "நாகர்" என்ற சொல்லிலிருந்து பிறந்ததாதல் கூடும். மேலும், ஏனைய, தென்னிந்தியப் பழங்குடியினரைப் போலவே, நாகர் பழங்குடியினரும், தலைமுழுவதும் மயிர் வளர்த்தனர், என நாம் கொள்ளலாம். கடவுளைப்

போலவே கோலம் கொள்வதும், ஒருவகை உள்ளார்ந்த வழிபாடாகும். ஆதலின், வழிபடுவாரின் முகம், படம் விரித்தாடும் பாம்பு போல் காட்சி தரும் வகையில், நாக வழிபாட்டாளர்கள், தங்கள் தலைமயிரைக் கோதி, தலை உச்சியில் ஒன்று சேர்த்து, முடி நிமிர்ந்து நிற்குமாறு முடி போட்டுக் கொள்வர் என நான் நம்புகிறேன். இந்த முறையில் அழகுசெய்யப்பட்ட தலைமயிர் கொண்ட, தென்னிந்தியர்களை நான் பார்த்ததிலிருந்து, பண்டைய நாகர்கள் தங்கள் தலைகள், தாங்கள் வழிபடும் நாகம் போலச் செய்துகொள்ள முயற்சித்தனர் என உய்த்துணர்கின்றேன். இத்தகு மக்களிடையே, மயிர்வழுக்கை வழக்கம் புகுத்தப்பட்ட போதும் கைவிட முடியாத அளவு, மிகமிகப் பழமையானது, அதனால் மிகவும் புனிதமானது என்பதால், தலை உச்சியில், சிறுமுடி எடுக்கப்படாமல், இன்றும் விடப்படுவதற்கு இதுவே விளக்கமாகக் கூடும். இந்நாகரிக முறையை, நாயர்கள், இன்றும் கொண்டிருப்பதால், அவர்கள், பெரும்பாலும், பழைய நாகர்களின், இன்றைய பிரதிநிதிகளாவர். பரசுராமனின், குடி அல்லது ஆன்மீக வழியில் வந்தவர்களிடமிருந்து ஆரிய நாகரிகத்தை, முதன்முதலில் ஏற்றுக் கொண்ட நாகர்கள், நம்பூதிரிகள் என்றும் நான் முடிவு செய்கின்றேன்.

மலபாரைச் சேர்ந்த நம்பூதிரிகள், தென்னிந்திய பிராமணர்களின், மிகப்பழைய சமுதாயப் பிரிவினராவர் என்பது, திருவாளர், கே. ராமவர்மராஜா அவர்களின் கட்டுரையில் காணும் பின்வரும் உண்மைகளாலும், உறுதி செய்யப்படுகிறது.

1, நம்பூதிரிகளில் பெரும்பாலான யஜுர்வேதிகள், பௌதாயன, மற்றும், பாதூலக வழியைச் சேர்ந்த மிகப் பழைய சூத்திரர்கள்.

2. முதல் மூன்று வேதங்கள் மட்டுமே, அவர்களிடையே பழக்கத்தில் உள்ளன. ஆகவே, அவர்கள், வேதவரிசையில், அதர்வவேத சமிதா இணைவதற்கு முன்பு, அதாவது,

வேதவியாசர் காலத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்பு தோன்றியவர்களாதல் வேண்டும்.

3. ஒரேசமயம், ஒன்றுக்கு மேற்பட்ட பூனூல் என்றும் அணிந்ததில்லை. இரண்டு, அல்லது மூன்று புரிகள் அணிவது பிற்கால வழக்கமாம்.

4. வேதகால வழக்கங்களாம், பூப்பு நாள் கழித்துத் திருமணம் கொள்வது, நான்காம் நாளன்று, மணச்சடங்கை நிறைவு கொள்வது போன்றவற்றை விடாது காப்பாற்றி வருகின்றனர்.

5. ஸ்ரார்த்தம், ஒருவன் இறந்த நட்சத்திரத்தில் செய்யப்படுகிறது. இறந்த திதியில் செய்யப்படுவதில்லை.

இந்த விவாதங்களிலிருந்து, தன் மனைவியாக, அர்ச்சுனன் ஏற்றுக் கொண்ட உலூபி, ஒரு மலபார் கன்னியாம் என நாம் முடிவுகொள்ளலாம்.

அகஸ்தியர்கள் :

மகாபாரத காலத்திற்கு முன்பே, இந்தியத் தீபகற்பத்தின் தென்கோடி வரை அகஸ்தியர்கள் பரவி வாழ்ந்திருந்தனர். பல்வேறு அகஸ்தியர்கள், பல்வேறு இடங்களில், பல்வேறு காலங்களில் வாழ்ந்திருந்தாலும் புராணங்களில் உள்ளது போலவே, பாரத வீரகாவியத்திலும், எல்லா அகஸ்தியர்களையும் ஓர் அகஸ்திய முனியாகவே கொண்டுபேசப் பட்டுளது. மகாபாரதம், பஞ்சவடியில், பழைய அகஸ்திய ஆஸ்ரமம் ஒன்றைக் குறிப்பிடுகிறது. (மகாபாரதம்: 3:99:8632) கடல் இடையே சவுபத்ரா எனுமிடத்தில், அகஸ்திய துறவி மடம் ஒன்றையும் அது குறிப்பிடுகிறது. ஐந்து நாரீ தீர்த்தங்களில் ஒன்றாகப், பாண்டிய நாட்டைச் சேர்ந்த அகஸ்திய தீர்த்தம் ஒன்றையும் குறிப்பிடுகிறது. (மகாபாரதம்: 1 : 21646, 217, 78-77) இவற்றில் இறுதியாகக் குறிப்பிடுவது, தமிழ்மரபுவழிச் செய்திகளின்படி தமிழ்நாட்டிற்கு வந்த பிறகு, அகஸ்தியர் தம்முடைய நிலையான உறைவிடமாக

வகுத்துக்கொண்ட பொதியமலையிலிருந்து வரும் அருவியா லாம், நெல்லை மாவட்டம் பாபநாசம் நீர் வீழ்ச்சியாதல் கூடும்.

நாரீதீர்த்தங்களின் பட்டியலில், பாண்டிய நாட்டுக்குமரி தீர்த்தம் என அழைக்கப்படும், குமரிக்கடல் புனித நீராடு மிடம், முதற்கண் குறிப்பிடப்பட்டுளது.

இத்தீர்த்தம், கன்யாதீர்த்தம் என்றும் அழைக்கப்படும். ஆக, இந்தியாவின் தென்கோடிமுனையில், குமரி ஒருத்தி, சிவனை எதிர்நோக்கி, தவம் கிடக்கிறாள் என்ற இப்புராணக் கதை, இக்காலத்தில் உருப்பெற்றதாதல் வேண்டும். நிலக் கோடியைக் குறிப்பிடும் சொல் எதுவும் தமிழில் இல்லை. ஆகவே, இப்புராணக்கதை அல்லது, குமரிமுனை ஒரு புனித இடம் என்பதற்கும் தமிழர்க்கும் இடையில் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆக, அப்பெருங்காப்பியம் அளிக்கும் அகச்சான்றுகளிலிருந்து, வட இந்திய ஆரியர்களுக்கும், தமிழர்க்கும் இடையில், மகாபாரதப் போர்க்காலத்தில் நெருக்கமான போக்குவரத்து இருந்து வந்தது என உறுதி யாகக் கொள்ளலாம்.

---

அதிகாரம் : VII

# கி. மு. இரண்டாம் ஆயிரத்தாண்டில் வெளிநாட்டு வாணிகம்.

## வெளிநாட்டு வாணிக வளர்ச்சி :

சீனர், யவனர் போலும், இந்தியரல்லாத இனத்தவர் பாரதப்போரில், போரிட்ட படைப்பிரிவுகளைக் கொடுத்ததை மகாபாரதம் குறிப்பிடுகிறது. [CINAS fought in the Contingent of Bhagadatra of prajotisa. Magabharata. 5 : 18: 584 : 5 : 18 : 321] மகாபாரத காலத்தில், வடஇந்திய அரசர்களுக்கும் இந்தியாவுக்கு வெளியிலிருந்த அரசர்களுக்கு மிடையில், அரசியல் உறவுகள் இருந்தன என்பதைக், குறிப்பாக உணர்த்தும் இந்த அறிவிப்பில் பொருத்தமற்றது எதுவுமில்லை. இஃது உண்மையோ அல்லவோ, ஆனால் ஒருபக்கம் தென்னிந்தியா, மறுபக்கம் பாபிலோனியா, அரேபியா, ஆப்பிரிக்க நாடுகள், ஆகிய இவற்றினிடையே, வேதகாலத்தில் நிலைபெற்றிருந்த வாணிக உறவு, கி. மு. இரண்டாயிரத்தில் செழிப்புற வளர்ந்திருந்தது என்பதை உணர்த்த சில அகச்சான்றுகள் உள. வடமேற்கு ஐரோப்பாவின் வடகோடியின் பாலைநிலங்களாம் ஸ்காண்டினேவியாவைச் சார்ந்த, நெட்டையான உருவமும், நெடிய மண்டை ஓடும் கொண்ட வெள்ளைநிறத்துப் பழங்குடியினர் (Nordic Tribe) உரிய தமிழ்ப்பெயரில் கூறுவதனால், வடகோடி நெடிய முல்லைநிலத்து ஆயர் கி. மு. 2000இல், மேற்கு நோக்கி இடம்பெயர்ந்து, கோதான் முதல் கிழக்கு மத்திய தரைக் கடற்கரை வரையான, பண்டை நிலவழிவாணிகத்தை அழித்து விட்டு, சீனாவுக்கும் மிகப்பழைய நகரங்களுள் ஒன்றான டிராய் (Troy) நகருக்கும் இடையில் நடைபெற்று வந்த, பச்சை மாணிக்கம் (Jafe-Stone) வாணிகத்தைத் துண்டித்துவிட்டனர்.

அவர்கள் இந்திய ஆரியரோடு, இன்று நிலவும் பண்பாட்டுச் சார்பான மனித இனநூல் கொள்கைக்கு முரணாக, நான் கருதுவதற்கேற்ப, கொண்ட உறவு எதுவும் இல்லை. வட நாட்டில் இவ்வாறு, ஆணையிட்டுத் தடுக்கப் பட்டுவிட்ட வணிக அலை, தெற்கு நோக்கி வீசி, இந்தியாவின், குறிப் பாகத், தென் இந்தியாவின் கடல்வழி வாணிகத்து மேல் வளர்ச்சிக்கு வழிவகுத்து விட்டது.

எகிப்து உடனான வாணிகம் :

"வாணிகப் பொருளாகவும், கி. மு. 1580 - 1350 இல், பதினேழாவது அரச குலத்து ஆட்சியில், திறைப்பொருளாக வும், தந்தம் பெறப்பட்டதற்கான எண்ணற்ற ஆவணச் சான்றுகள் உள்ளன. ----தந்தம் போலவே, தந்தத்தாலான நாற்காலிகள், மேசைகள், இழுப்பறைப்பெட்டிகள், உருவச் சிலைகளும் பெறப்பட்டன." [Scoff's periplus. page : 61] இவை பல்வேறு இடங்களிலிருந்து வந்தன. அந்நாட்களில் எகிப்துக்கும், இந்தியாவுக்கும் இடையில் நடைபெற்ற வாணிகத்தில், பெரிய பொருள்சேமிப்பு இடமாக விளங்கிய, சோமாலிலேண்டைச் சேர்ந்த புன்ட் (punt) அவ்விடங்களில் ஒன்று. இச்செய்தி, பழைய காலத்தில் நிகழ்ந்ததுபோலவே, தந்தமும், தந்தத்தினாலான பொருள்களும் இந்தியாவின் மேற்குக் கடற்கரையிலிருந்து நைல் பள்ளத்தாக்கிற்குச் சென்றதை உணர்த்துகிறது.

பதினெட்டாவது அரசர்குலமாகிய தேபன் (Theban), அரசகுலத்து ஆட்சியின்போது, சிறந்த எகிப்துக் கப்பற் படைகள், புன்ட் (punt) பகுதிக்கு அனுப்பப்பெற்றன. "அவை திரும்பிவரும்போது, நறுமணப்பொருள்செய்யப் பயன்படும் பிசின், கருங்காலி மரம், தந்தம், பொன், லவங்கம், மணம்கமழும் புகைதரும் பொருள்கள், கண் மை, வாலில்லாக் குரங்குகள், குரங்குகள், நாய்கள், சிறுத்தையின் தோல்கள் ஆகிய பெரும்பொருட் குவியலோடு வந்தன." "சிரியா நாட்டிலிருந்தும், அரேபியா மற்றும் கிழக்கு நாடு

களின் கருவூலங்களின் பெரும் பகுதியாம், மணம்கமழ் புகை தருவான்கள், எண்ணெய், உணவு தானியங்கள், மது, பொன், வெள்ளி, மதிப்புமிக்க கல்வகைகள்'' ஆண்டுதோறும் செலுத்தப்பட்டன. பாபிலோனியாவிலிருந்து, மாணிக்கக் - கள் வகைகள் வரப்பெற்றன. ''கி. மு. 1198 - 1167 இல் இருபதாவது அரசர் குலத்தில் மூன்றாம் ரமேஸஸ் (Rameses III) என்பான் ஆட்சியின் கீழ், நாட்டின் செல்வ - வளம் அனைத்தும், அமோன் (Amon) என்பான் மடியில் கொட்டப்பட்டு விட்டதுபோல் காணப்பட்டது. பாபிரஸ் ஆரிஸ் என்பார், (Papyrus Haris), அமோன் என்பான் கல்லறைக்காக, ''பாபிரஸ் ஆரிஸ்'' என்ற பெயரில், தொகுத்து இயற்றிய, தம்முடைய நன்கொடை அறக்கொடை களின் சிறந்த ஆவணத்தில், ஆண்டுதோறும், ''பொன், வெள்ளி, மணிக்கல், உயர்மெருகு ஏற்கும் பச்சைநிறக்களிப் பொருள், மதிப்புமிக்க மாணிக்க வகைகள், செம்பு, சிறந்த நார்மடியால் ஆன அரச உடைகள், லவங்கம் 246 நாழி'' என்ற தொடர்கள் இடம் பெற்றுள்ளன. (இம்மேற்கோள்கள், திருவாளர் பிரஸ்டெட் (Breasted) என்பாரின், எகிப்தின் பழைய ஆவணங்கள் (Ancient Records of Egypt) என்ப திலிருந்து எடுக்கப்பட்டன.'' [Schoff's periplus, p. 121-122] மேலே காட்டிய மேற்கோள்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் பொருள்களில், கருங்காலி, பெரும்பாலும் தென்னிந்தியாவி லிருந்தே சென்றது என்பது, ஏற்கெனவே விளக்கப்பட்டுளது. மணிக்கல் உட்பட, மதிப்புமிக்க கல்வகைகள், பிற்காலத்தில், மேற்கத்தவர்களால், இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப் பட்டது என்பது பின்னர் விளக்கப்படும்.

இவ்வாணிகம், பெரும்பாலும், 18 வது அரசர் குல ஆட்சி யில், செல்வ வளங்கொழித்திருந்த நாட்களில், எகிப்தோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்த அனைத்து நாடுகளும், ஆமோன் அவர்களுக்கு வழிபாடு செலுத்துவான் வேண்டி வந்து, அலைமோதிய காலத்தில் தொடங்கியதாதல் வேண்டும். எகிப்தியர்களால், 'லாப்பிஸ் லாஸுலி' (Lapis Lazwli) என அழைக்கப்படும் நீலமணிக்கல், எகிப்தியர்

களால் நனிமிகப் பழங்காலத்திலிருந்தும், அஸிரியர்களால் அதனினும் பிற்பட்ட காலத்திலிருந்தும் அறியப்பட்டது என்கிறார் திருவாளர் குட்சைல்டு (Good Cuild) என்பார்.

''சலாமிஸ்ஸின் (Salamis) மதகுருவாம் எபிபனியாஸ் (Epiphanias) என்பார், மோஸஸுக்கு (Moses) வழங்கிய சட்ட கட்டளைகள், நீலமணிக்கல்லில்தான் செதுக்கப் பட்டன எனக் கூறுகிறார்''. [Scoffs' periplus page: 171] நார்மடி ஆடைகள் எகிப்திலேயே, அக்காலத்தில் உற்பத்தி செய்யப்பட்டன ஆதலாலும், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள், அவற்றினும் உயர்தரம் வாய்ந்ததான, பிற் காலத்திற்போலவே அக்காலத்திலும் இந்தியா மட்டுமே தரக் கூடியதுமான பருத்தி ஆடைகளால் ஆனவையாதல் வேண்டும். ஆதலாலும், அரசர்க்கான உடைகள், இந்திய மஸ்லினால் தைக்கப்பட்டவையாம். வாலில்லாக்குரங்குகள், குரங்குகள், நாய்கள், சிறுத்தையின் தோல்கள் ஆகியவை பொருத்தமட்டில், பத்தாவது அதிகாரத்தில் குறிப்பிடப்பட இருப்பதுபோல், ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னர், இப் பொருள்களும், இவற்றிற்கு இனமான பொருள்களும், மேலை நாடுகளுக்கு இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டன. ஆதலின், இறக்குமதி செய்யப்பட்ட இப் பொருள்கள் அனைத்தும் இல்லையாயினும், இவற்றில் ஒரு பகுதி, இந்தியாவிலிருந்து வந்தனவாம் என்பதில் சிறிது உண்மையிருக்கிறது. லவங்கப் பட்டையைப் பொருத்தவரை ''கி. மு. 15ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த அட்ஷே புஸ்ட் (Hatshe pust) என்ற அரசியாரின் படையெடுப்பு குறித்த, எகிப்து மொழிக் கல்வெட்டுக்கள் எகிப்துக்குத் திரும்பக் கொண்டுவரப்பட்டுவிட்ட, புன்ட் (Punt) நாட்டின் அற்புதங்களில் ஒன்று, லவங்கப்பட்டை மரம் எனக் குறிப்பிடுகின்றன என்பது குறிப்பிடப்படலாம். (Scoff's periplus Page: 82). ஆனால், லவங்கப்பட்டை குறித்த வாணிகத்தின் ஏகபோக உரிமையைத், தங்கள் கைகளிலேயே வைத்துக் கொள்வதற்காக, அதன் இந்தியப் பிறப்பை, மேற்கத்திய மக்களிடையே மறைத்துவிட்ட அராபிய வணிகர்களால், லவங்கம், இந்தியத் துறைமுகங்

களிலிருந்தே, அவ்விடங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டது: லவங்கம், மலபாரிலும், சீனாவிலும் வளர்கிறது. ஆனால், அதை மேலை நாடுகளுக்குக்கொண்டு சென்ற அராபிய வணிகர்கள், அதன் ஆப்பிரிக்கப்பிறப்புப்பொய்க் கவிதைகளைக் கட்டி வளரவிட்டனர். "தெளிவற்ற தன்மையிலும் அறிவுறுத்தும் பகுதி, பிளைனி அவர்களின் எழுத்தில் உளது. அவருடைய காலத்தில், மக்களின் பேராதரவு பெற்றிருந்த ஒருவகை லவங்கம் குறித்துத், தோம்னா (Thomna)வைத் தலைநகராகக் கொண்டிருந்த அராபியர்களின் அரசன், கெப்னிடே (Kefianitae) என்பான், அரச ஆணை அல்லது பொதுஏலம் மூலம் விற்பனையை ஒழுங்குபடுத்தும், முழுக் கட்டுப்பாட்டுரிமையை ஒரு காலத்தில் பெற்றிருந்தான் என்றும், அம்மரங்கள், ஆட்சியிலிருப்போரின் கொடுஞ் செயல் துணையாலோ, அல்லது வெறும் எதிர்பாராச் சூழலாலோ, அறுதியிட்டுச் சொல்ல இயலா நிலையில், கொடிய காட்டு மனிதர்களால் எரிக்கப்பட்டுப் பெற்ற ஒரு பவுண்டு நிறையுள்ள அம்மரத்தின் சாறு, "டெனாரி" [Denari] என வழங்கும் ஆயிரம் உரோம வெள்ளி நாணயம் வரை, சில சமயம் ஆயிரத்து ஐந்நூறு நாணயம் வரையும் விலை போயிற்று என்றும் திருவாளர் பிளைனி அவர்கள் கூறுகிறார். திருவாளர் பிளைனி அவர்கள் அளிக்கும் அகச் சான்றுகளில் சில அத்தகைய பேரழிவுக்கு, லவங்கத் தோட்டம் தீப்பிடித்துக் கொள்ளுமளவு தென்றல் காற்று கடுமையாக வீசுவதைக் காரணம் காட்டுகின்றன. ஈண்டு இரண்டு செய்திகளைக் குறிப்பிட வேண்டும். முதலாவதாக, அரேபிய ஆட்சியாளர்கள், லவங்க வாணிகத்தின்மீது கொண்டிருந்த கடுமையான கட்டுப்பாடு; இரண்டாவதாக, லவங்கம் வழங்குவதில் ஏற்பட்டுவிட்ட தோல்விக்கு, உண்மையான காரணத்திற்குப் பதிலாக உதாரணத்திற்கு, இந்தியப் பகுதியிலிருந்து வரும் கடற்பயணத்தின்போது அனுபவித்த, பேரழிவு விளைவித்துவிட்ட கொடுங்காற்று போலும் உண்மையான காரணத்திற்குப் பதிலாக, உள்நாட்டுக் காரணம் கற்பித்து, வாதிடும் தவறான விளக்கம். லவங்கம் கிடைக்கக்

கூடிய உண்மையான வழிமூலத்தை, இடத்தை வெளியிடாமல், இது போலும் உண்மைக் காரணத்தை மேல்நாட்டு வணிகர்களுக்குக் கொடுக்க இயலாது. செல்வச் சீமான்களால் பெரிதும் விரும்பப்படும் ஒரு நறுமணப் பொருளுக்கு வழக்கமான விலையைக் காட்டிலும், அதிக விலையைக் கொடுக்கக், கிரேக்கர்களைத் தூண்டும் குறிக்கோளுக்காகவே, அப்பொருள் கிடைப்பதில் கட்டுப்பாட்டினை ஏற்படுத்திவிட்டு, அத்தட்டுப்பாட்டிற்குப் பொய்யான, ஆனால் அதே நிலையில் நம்பத்தகுந்ததான விளக்கத்தைத் தருவதில் அரேபியர்கள் வல்லவர் என்பதை உண்மையில் நம்பலாம். மேற்கு இந்தியா அல்லது மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ள வாணிக மையங்களுக்கு வழக்கமாக வந்து செல்லும் அரேபிய வணிகர்களுக்காக, வங்காளம், கொரமண்டலம், மலபார், வடமேற்குப் பகுதிகளைச் சார்ந்த இந்தியர்கள், பெரும்பாலான அப்பொருள்களைச் சீனாவிலிருந்தும், இந்தியாவிலிருந்தும் கப்பல்களில் கொண்டு வந்திருக்கவேண்டும்.'' [Warmington Commerce between the Roman Empire and India, Page: 192-193] கிரேக்க, இலத்தீன் மொழி எழுத்தாளர்கள், லவங்கம் முதலாம் பொருள்களின், மூலம் குறித்து எழுதிய குறிப்புகளை, அப்படியே ஏற்றுக் கொள்ளக்கூடாது என்பதையும், கி. மு. இரண்டாவது ஆயிரத்தாண்டைச் சேர்ந்த எகிப்தியர்கள், சீன, இந்திய லவங்கத்தை ஏடன். சோமாலி கடற்கரைகளில், இந்தியக் கப்பல்களிலிருந்து பெற்றுக் கொண்டனராதலின், எகிப்தியர் நம்பியது போலவும், கிரேக்க வணிகர், பிற்காலத்தே எண்ணியது போலவும், லவங்கம் புண்ட் நாட்டின் அதிசயப் பொருள்களுள் ஒன்றாகாது என்பதையும் இது தெளிவாக்கிவிட்டது.

புண்ட் நாட்டிலிருந்து எகிப்துக்கு வழங்கப்பட்டனவாக, மேலே குறிப்பிடப்பட்ட கீழ்நாட்டு அரும்பொருள்களுள், எண்ணெய், தானியங்கள் ஆகியவை இடம்பெற்றிருப்பதைக் கண்டோம். அவற்றுள், எண்ணெய் பிற்பட்ட காலத்தில், இந்தியாவிலிருந்து, காலம் தவறாமல் முறையாக இறக்குமதி செய்யப்பட்டதாகப், பெரிபுளுஸ் மூலம் நாம் தெரிந்து

கொண்ட நல்லெண்ணெய் ஆகும். திருநெய்யாட்டு என்பது, அரசர்களும், மதகுருக்களும் மேற்கொண்ட ஒரு விழா. நறுமணத் தைலம் காய்ச்சுவதற்கும் எண்ணெய் தேவைப் பட்டது. நறுமணத்தைலம் செய்யப்படும் தொழிற்சாலைகள், எகிப்திலும் சிரியாவிலும் இருந்தன. தானியங்கள் என்பதில் அரிசி, பெரும் சோளம், சோணை முடிய தினை ஆகியன பெரும்பாலும் இடம் பெற்றிருக்கும். அட்ஸேபுஷ்ட் (Hatshe pust) அரசியாரின் படையெடுப்பும், புண்ட் நாட்டி லிருந்து கருங்காலியைக் கொண்டு வந்தது. இந்தியப் பண்டங்கள், இந்தியாவிலிருந்து, காலம் தவறாமல் முறை யாக எடுத்துச்செல்லப்பட்ட இடம் புண்ட் நாடாகவே, அரசியார், மலபார் காடுகளில் வளர்ந்த நேர்த்தி வாய்ந்த கருங்காலியைப் பெற்றுக்கொண்டதற்குப் பெரிய வாய்ப்பு இருந்தது. [Scoff's periplus : page: 153]

**பாலஸ்தீனத்துடனான வாணிகம்:**

கி. மு. இரண்டாம் ஆயிரத்தாண்டு முடிவதற்குச் சிறிது முன்னர், எபிரேயர்கள், எகிப்தில் அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுப், பாலஸ்தீனத்திற்குக் குடிபெயர்ந்துவிட்டனர். அவர்களோடு சென்ற இனிய மணப்பொருள்கள், புனிதத் தன்மை வாய்ந்தனவாக மதிக்கப்பட்டன. இஸ்ரேல் அரசின் தோற்றத்தில், வளம் கொழிக்கும் வாணிகம் முக்கியத்துவம் வாய்ந்ததாகிவிட்டது. ஆகவே அரேபிய வாணிகர்களால் இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட லவங்கம், எபிரேய மத குருக்களின் புனித திருநெய்யாட்டு எண்ணெய்யின் கலவைப் பொருள்களுள் ஒன்றாகிவிட்டது என்பதை அறிகிறோம். (Exod. XXX) நீலமணிக்கல்லும் இந்தியா விலிருந்தே கொள்முதல் செய்யப்பட்டது என்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டுளது. இந்தியாவிலிருந்து எகிப்து பெற்ற அனைத்துப் பண்டங்களும், பாலஸ்தீனத்திலும் இறக்குமதி செய்யப்பட்டன எனச் சிரமமின்றி முடிவு செய்து கொள்ள லாம்.

**சீனாவுடனான வாணிகம்:**

சீன லவங்கம், இந்தியக் கப்பற்பயணம் மூலம் அரேபியா மற்றும் கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரைகளுக்கு வழிகண்டது என்றால், சீனாவுக்கும், இந்தியாவுக்கும் இடையில் கி. மு. இரண்டாம் ஆயிரத்தாண்டில், வாணிகப்போக்குவரவு இருந்திருக்க வேண்டும். இவ்வாணிகம் குறித்த எழுத்துமூல ஆவணங்கள் சில அழியாமல் உள்ளன. யுதிஸ்டிரர் பெற்ற திறைப்பொருள்களுள், சீனாவிலிருந்து வந்த பட்டையும் குறிப்பிடுகிறது, மகாபாரதம்: ["சீன கமுத்பவன் அவுர்ணம்" மகாபாரதம் : 2 : 51 . 1843] சீன நாட்டு வரலாற்றுப் பதிவேடுகள், கிறிஸ்துவ ஆண்டுத் தொடக்கத்திற்கு முன்னர், ஏறத்தாழ, கி. மு. 12 ஆம் நூற்றாண்டு போலும் அத்துணைப் பழங்காலத்தில், மலாக்காவோடு கொண்டிருந்த கடற்பயணத்தைக் குறிப்பிடுகின்றன. [Scoff's periplus page : 246] அதிலிருந்து, மலேயா, இவ்வாணிகத்தின் பொருள்களஞ்சியமாக இருந்து வந்துளது. தமிழ்நாட்டில், அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் ஒரு பொருளாம் வெற்றிலை, தமிழர்களால் வரையறையின்றித் தின்னப்படுகிறது என்றாலும், ஆதியில், அஃது ஓர் உள்நாட்டுப் பொருளன்று. தமிழில், அதற்குப் பொருத்தமான இயல்பான இயற்பெயர் இல்லை. அவிக்காமல் உண்ணக்கூடிய ஒரே இலையாக அது இருப்பதால், வெற்றிலை, அதாவது, வெறும் இலை எனச் செயற்கையாலான ஒரு பெயரினாலேயே, அது குறிக்கப்படுகிறது. தமிழ் இலக்கணத்தில் பெயர்கள், இடுகுறிப் பெயர், காரணப் பெயர் எனப்பிரித்து வழங்குவதில் காணலாம். பயன்குறித்த ஆய்வுக்கு என்னுடைய "ஆரியத்துக்கு முந்திய தமிழ் நாகரீகம் (pre - Aryan Tamil Culture : Page : 13 - 16 என்ற நூலைக் காண்க] பிற இந்திய மொழிகளிலும், பெரும்பாலும், மலேயாவிலிருந்து வந்த அதன் நுழைவு கருதி, அப்பெயர் இடப்பட்டது என்பதைக் காட்டும் வகையில், அது, இலை என்றே அழைக்கப்படுகிறது. [வெற்றிலை உண்ணும் வழக்கத்திற்கான சில பழங்குறிப்புகள், கி. பி.

5 அல்லது 6 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றன. உண்டு முடித்த கணவனுக்குக் கண்ணகி, பாக்கோடு கலந்த வெற்றிலை தந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. ''உண்டு இனிதிருந்த உயர் பேராளற்கு, அம்மென் திரையலோடு அடைக்காய் ஈத்த'' (கொலைக்களக்காதை : 54 - 55) வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்புகளை வைத்துக் கொள்வதற்காக, பல மடிப்புகள் உடையனவாகத் தைக்கப்பட்ட, இன்றும் வழக்கத்தில் இருக்கும் சிறிய பை, அடைப்பை என்ற பெயரில் ஆதி காலத்திலும் பழக்கத்தில் இருந்தது. பொன்னால் செய்யப்பட்ட அடைப்பை சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுளது. ''சாமரைக் கவரியும் தமனிய அடைப்பையும்'' (ஊர்காண்காதை : 128] அரசர்களையும், அரசர் நிகர் செல்வர்களையும், வெற்றிலை அடங்கிய பை ஏந்துவார் எனும் பொருளுடையதான, அடைப்பைக்காரர் என அழைக்கப்படும் பணியாளர் எப்போதும் சூழ்ந்துகிடப்பர். அப்பணியாளர் பாசவர் அதாவது, பச்சிலை எனும் பொருளுடையதான பாசு ஏந்துவார் என அழைக்கப்படுவர். அரசனைச் சூழ்ந்திருக்கும், எண்பேராயம் என அழைக்கப் படும் எண்மரில், அவரும் ஒருவராவர் ''பாசவர், வாசவர்'' — (சிலப்பதிகாரம் ; இந்திர விழவூரெடுத்த காதை: 26).

சீனாவுடன் நடைபெற்ற தலையாய வாணிகம், தொடக்கத்தில் அந்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டு, அங்கிருந்து இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பட்டு, கற்கண்டுத்தூள் ஆகிய இவ்விரண்டில்தான். வேறு பண்டங் களின் உருவகப்படுத்தி விரித்த பெயர்களே, தமிழில், அவற்றின் பெயர்களாயின. பட்டு எனும் சொல் தொடக்கத் தில் மடித்தல் எனும் பொருளுடையதாகவே, பலமுறை மடிக்கப்பட்டு, தோள்மீது அணிந்துகொள்ளும் ஆடை, பட்டு எனப்பட்டது. சீனாவிலிருந்து வந்த ஆடையும், அவ்வாறே மடித்து அணியப்பட்டதால் அப்பெயர் அதற்கும் நீண்டு விட்டது. சீனாவிலிருந்து வந்த ஒன்று எனும் பொருளில் அது சீனம் என்றும் அழைக்கப்படும். வடமொழியிலிருந்து

கடன் வாங்கி வழங்கப் பெறும் சர்க்கரை எனும்சொல், தொடக்கத்தில் மணல் எனும் பொருள் உடையது. கற்கண்டுத்தூள் மணல் போல் காட்சி அளிப்பதால், அப்பெயர், கற்கண்டுத்தூளுக்கும் இடப்பட்டுவிட்டது. தொடக்கத்தில் கரும்பு எனும் பொருளுடையதான அக்காரம் என்ற சொல், ஆகுபெயராக, அக்கரும்பிலிருந்து பெறப் படும் பொருள்களாம் வெல்லம் சர்க்கரைக்கும் பெயராகி விட்டது. சீனாவில் உற்பத்தியானது எனும் பொருளில் அது, சீனி என்றும் அழைக்கப்படும். பட்டும், சர்க்கரையும், தொடக்கத்தில், நறுமணப்புகை தருபொருள்கள், சிகப்புப் பவழம், (Costus), மிளகு ஆகிய இப்பண்டங்களுக்காக மாற்றிக் கொள்ளப்பட்டன. தென் இந்தியர் சீனாவுக்கும், மேற்கு ஆசியாவுக்கும் இடையில் வணிக இடைத்தரகர் களாகவும் செயல்பட்டனர். வழக்கமான கடல்வழி, கோதன் (Khotan) வழியாகவே இருந்துவந்தது. ஆனால் அடிக்கடி நிகழ்வதுபோல், துருக்கிப் பழங்குடியினரின் திடீர்த் தாக்குதல்கள் காரணத்தால், வணிகப்பாதை, தெற்குக்கு மாறித், தமிழ்நாட்டுத் துறைமுகங்கள், மேற்கு ஆசியாவுக்கும், கிழக்கு ஆசியாவுக்கும் இடையிலான சந்திக்கும் இடமாகிவிட்டன.

# அதிகாரம் VIII

## ஆகமங்களின் தோற்றம்

**வேதங்களுக்கு எதிரான ஆகமங்கள் :**

ஏறத்தாழ முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் "இந்திய தத்துவத்தின் சுருக்கம்" என்ற என் நூலில், இந்தியர்களால் இன்று பின்பற்றப்படும் சமயம், பெரும்பாலும் ஆகமங்களையே முழுமையாக அடிப்படையாகக் கொண்டுளது. வேதங்களோடான தொடர்பு ஒரு சிறிதும், அல்லது, அறவே இல்லை எனக் குறிப்பிட்டிருந்தேன். வேதநெறிக் கடவுள் வழிபாட்டுமுறையான வைதீகநெறி, மகாபாரதப் போருக்குப் பின்னர் அழியத் தொடங்கிவிட்டது. இக்காலை, அது பெரும்பாலும் அழிந்தேவிட்டது. "ஸ்ரௌத கர்மாவின்" (அதாவது, வேதவழிபாட்டு நெறியின்) பெரும்பகுதி அழிந்தே விட்டது. "அக்னி ஆதானம்," மிகவும் எளிமையாக்கப்பட்ட "வாஜபெயம்", "கருடசயனம்", மற்றும் "சோமயாகம்" போலும், அத்துணைச் சிறப்பிலா வழிபாட்டு நெறிகள் மட்டுமே, ஒருசில மக்களால் அவ்வப்போது மேற்கொள்ளப்படுகின்றன. இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், தீ ஓம்பல் கடமையை மூன்று தலைமுறைகளாகப் புறக்கணித்துவிடுவரோ, அப்பார்ப்பனக் குடும்பத்தவர், பார்ப்பனராம் தகுதியை இழந்தவராவர் என்ற விதிமுறையை அடிப்படையாகக் கொண்டு மதிப்பிட்டவழி நனிமிகக் குறைவான குடும்பத்தவரே பிராமணர்களாக மதிக்கப்படுமளவு, "ஸ்மார்த்த கர்ம" நெறிதானும் விரைந்து மறையலாயிற்று. இருந்தும் இந்தியா ஆழ்ந்த சமயச் சார்புடையதாகவே உளது; ஆனால் அந்த ஆழ்ந்த சமய உணர்வு, வேதநெறி வழிபாட்டு முறைகளையல்லாமல், ஆகமநெறி வழிபாட்டு முறை அளவிலேயே அமைந்துளது.

(ஆகமம் பற்றிக் கூறும் போது, அச்சொல் உணர்த்தும் பல பொருள்களுள், "ஆப்தவசனம்" அதாவது, முற்றும் உணர்ந்த பெரியோர்களின் மெய்யுரை என்பதும் ஒன்று என்பதையும், அதிலிருந்தே, ஆகமம் என்பதன் மற்றொரு பொருள் உருப்பெற்றது என்பதையும் "ஆப்தவசனங்களில்", மிகப்பெரியது அல்லது மிகச் சிறந்தது. வேதம் ஆதலின், அவ்வேதமும் சில சமயம் ஆகமம் என அழைக்கப்படும் என்பதையும் நான் மறந்துவிடவில்லை. உண்மையில், "ஆகமம்" என்ற சொல், பழமையிலிருந்து வந்தது எனும் பொருள் உடையதாகும். ஆனால், ஆகமம் என்பது, சிவ, விஷ்ணு, சக்தி வழிபாட்டு நெறிகளை உணர்த்தும் புத்தகங்களாகிய "தந்திரம்" என்பதன் பெயர்களை உணர்த்தும் உண்மைப்பெயராகும். இப்பொருள்நிலையில், ஆகம நெறி வழிபாடுகள், வேதங்களோடு வேறுபட்டனவாம்; பௌத்தர்கள், ஜைனர்களின் சமயக் கருத்துக்களும் பழமையாகவே வருவன ஆதலின், அவையும் ஆகமங்கள் என்றே அழைக்கப்படும். இவ்வாகமங்கள் அனைத்தும் அவற்றின் தொடக்க நிலையில், வேதங்களுக்கு அதாவது "கர்ம காண்டங்"களுக்கு எதிரிகளாம். சைவ ஆகமநெறி, "மகேஸ்வர" நெறி, "பாசுபத" நெறி எனவும் வழங்கப் படும். வைஷ்ணவ ஆகமநெறி, "பாகவதம்" என்றும் (அதாவது இறை சார்புடைய) "சாத்தவதம் என்றும் (சாத்தவத அரசியல் குடும்பத்தவரே, அவர்களைப் பெரும் பாலும் முதன் முதலில் ஆதரித்தமையால்), "பாஞ்சராத்ரம்" என்றும், வழங்கப்படும். இறுதியில் கூறிய இச்சொல், வேறு ஒரு பொருளையும் குறிக்கும். அது, விஷ்ணுவின் திருமேனியை வழிபடும் சிறப்பு வழிபாட்டு நெறியை உணர்த்தி, அப்பொருள் உணர்த்தும் வகையால், "வைகானஸர்"கள் பின்பற்றும் வழிபாட்டு நெறியோடு முரண்படுவதுமாம். குறிப்பிட்ட ஒரு வழிபாட்டு நெறியை உணர்த்தப் பயன்படுவதோடு, "வைகானஸர்" எனும் இச்சொல், காடு சென்று வாழும் சந்நியாசிகளையும், பொது வாகக் குறிக்கும்] ஆகம வழிபாட்டு நெறிகள், வைதீக வழி

பாட்டு நெறிகளுக்குப் பகையாக அமைந்த பழங்காலத்தில், ஆகமத்திற்கும், வேதத்திற்கும் இடையிலான வேறுபாடு நன்கு உணரப்பட்டது. ஆனால் கடந்த பலநூறு ஆண்டுகாலமாக, அவை இரண்டும் இரண்டறக் கலந்துவிட்டமையால், இக்கால மக்களால், அவ்விரண்டிற்கும் இடையிலான வேறுபாடு உணரப்படவில்லை. அது மட்டுமல்லாமல், அதற்கு மேலும் ஒருபடி சென்று, ஆகமநெறிகள், முடிந்த முடிபாக, வேத நெறிகளிலிருந்தே உருப்பெற்றன; வேத உண்மைகளின் விரிவுரைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளன; அல்லது இன்றைய கால நிலைக்கும் ஏற்கும் வகையில் அவ்வேத உண்மைகளைத் தத்தெடுத்துக் கொண்டுள்ளன என்ற கொள்கையும் பரவலாக வழங்கலாயிற்று. மந்திரங்கள் இயற்றப்பட்ட காலகட்ட முடிவிற்கும், பின்னர், வேதங்கள், "அபௌருஷேயம்", அதாவது, காலவெளி எல்லைகளைக் கடந்த புருஷனாகிய ஈஸ்வரனாலும் இயற்றப்படாதன, எனக் கருதப்பட்டன. ஆனால், ஆகமங்கள் (சைவ, சாக்த, வைஷ்ணவ) மட்டும், சிவன் அல்லது விஷ்ணுவின் வாயிலிருந்து வெளிப்பட்டனவாக உரிமை கோரப்பட்டு அதனால், அவை, முறைப்படி "பௌருஷேயம்" என அழைக்கப்படலாயின; "வேத சம்ஹிதாக்களில் கூறப்பட்டிருப்பன எல்லாம், வைதீக சடங்குகளின்போது, ஓதுவதற்கான மந்திரங்களாம். ஆனால், ஆகமங்கள், சிவ அல்லது விஷ்ணு வழிபாட்டு நெறிகளின் விளக்கங்களையும், யோகப் பயிற்சி முறைகளையும், தத்துவ ஞான ஆராய்ச்சிகளையும் நம்மகத்தே கொண்ட பாடநூல்களாம். மந்திரப் பகுதி, பிராமணப்பகுதி ஆகிய இரண்டையும் கொண்ட, அல்லது கர்மகாண்டம், ஞானகாண்டம் ஆகிய இரண்டையும், அல்லது, வேத வேதஸிரஸ் ஆகிய இரண்டையும், குறிக்க, வேதங்கள், ஒரு மீமாம்ஸத்தின் துணையை நாடுகின்றன. ஆனால் ஆகமங்கள், முறையான பாடநூல்களாதலின் ஒரோவழி, தேவைப்படினும், உரைவிளக்கம் ஒன்றை மட்டுமே எதிர் நோக்கும். ஆகமங்கள், கி. பி. 1000க்குப் பிற்பட்ட காலத்தே வழக்காற்றிற்கு வந்த "பாஷை" என்ற மொழிவடிவில் இருக்க, வேதங்கள்,

"சந்தாஸ்" எனப்படும், மிகப்பழைய கிளை மொழியில் உள்ளன. இவ்வளவும், எழுத்து வடிவம் பற்றியனவாம். இனி வழிபாட்டு முறை பற்றியன. வைதீக வழிபாடு, தீ வழிபாடாம். ஒவ்வொரு வழிபாட்டு நிலைக்கும், நெருப்பு மூட்டப்பட வேண்டும். அந்நெருப்பு தீக்கொழுந்தாக எழுப்பப்பட வேண்டும். அத்தீயிடையிலேயே படையல்கள் கொட்டப்படவேண்டும். ஆகமவழிபாடு, தீயற்ற வழிபாடு. படையல்கள், வணங்கப்படுவதன் முன் வறிதே காட்டப்பட்டுப் பின்னர் எடுத்துக்கொள்ளப்படும். முன்னதில் படையல்கள், தீயிடையே இடப்படுவதால் அவை, கடவுள்களால் உண்ணப்படுகின்றன. பின்னதில் ஆண்டவன், கண்ணுக்குப் புலப்படா நுண்ணிய ஒன்றைமட்டுமே ஏற்றுக் கொள்ளுமாதலின், இறைவழிபாட்டாளன், அப் படையலைத் தானும் உண்டு, தன் உறவினர்க்கும், நண்பர்களுக்கும் பகிர்ந்து அளிப்பன் ஆதலின் வழிபாட்டாளன், தன் படையல் பொருளில் எதையும் இழப்பதில்லை. வைதீக வழிபாட்டு நெறியில், உலகப் படைப்பு நிலையில் ஒவ்வொன்றும் தனித்தனி கடமைகளைக் கொண்ட எண்ணற்ற கடவுள்கள் வழிபடப்பட்டன. ஆகமவழிபாட்டு நெறியில், விவிலிய நூலில் கூறப்படும் யூதர்களின் கடவுளாகிய "ஜெஹோவ்" (Jehovah) வைப்போல, ஒரே ஒரு கடவுள்தான் வழிபடப்பட்டது. உலகத்தொடர்பான அத்தனைச் செயல்பாடுகளும், அதன் கைகளிலேயே அடங்கிவிடும். வேதவழிபாட்டு நெறியில் கடவுளுக்குப் படைக்கப்படும் ஒவ்வொரு படையலும், வேதமந்திரம் தொடரவே படைக்கப்படும் என்பது மட்டும் அன்று, வழிபடுவோனின் ஒவ்வொரு செயலும், உதாரணத்திற்குச், சோமபானம் கொண்டுவர வண்டியில் காளைகளைப் பூட்டுவது, அக்காளையைத் துரத்தி ஓட்ட ஒரு கொம்பினை ஒடிப்பது, படையல் பொருள் ஒன்றைக் கையால் பற்றுவது, பாலைக் கொதிக்க வைப்பது, கடைந்து மோர் ஆக்குவது, சுருங்கச் சொல்லின், சிறியனவோ, பெரியனவோ ஆன ஒவ்வொரு செயலும், செய்யுள் வடிவில் அல்லது உரைவடிவிலான ஒரு மந்திரம்

ஓதுலைத் தொடர்ந்தே நடைபெறும். ஆனால் ஆகம வழிபாட்டு நெறியில் வேத மந்திரங்களுக்குச் சட்டபூர்வமான இடம் எதுவும் இல்லை. ஒருசில இங்கும் அங்கும் ஓதப்படுகின்றன. ஆனால் அதுவும் பெரிதும் முறையற்ற நிலையிலேயே ஓதப்படும். உதாரணத்திற்கு "து" என்ற அசைச்சொலோடு தொடங்கும் ஒரு மந்திரம், கடவுளுக்கு மணப்பொருளை அர்ப்பணிக்கப் பயன்படுத்தப்படும். உ-ம். "தூப". உண்மையில் இம்மந்திரம், ஒரு வண்டியின் நுகத்தடியை எடுக்கப்படுவதைக் குறிப்பதாம். ஆனால் ஆகம வழிபாட்டு நெறியின் உயிர்ப் பகுதி, வணங்கப்படும் கடவுளைக் குறிக்கும் பல்வேறு பெயர்களை, நான் வணங்குகிறேன் எனப் பொருள்படும் "நமஹ" என்பதை இணைத்துத், திரும்பத் திரும்பக் கூறுவதே ஆகும். வைதீக வழிபாட்டு நெறியின் சாரம், படையல்களைத் தீயிடைச் சொரிவதே ஆம். ஆனால், ஆகம வழிபாட்டு நெறியின் சாரம், உபகாரம் ஒன்றே; அதாவது தாம் வழிபடும் கடவுள் திருமேனியை நீராட்டுவது, ஒப்பனை செய்வது, உணவு படைப்பது, உண்மையில், தங்கள் வீட்டிற்கு வரும் விருந்தினர் அல்லது தங்கள் அரசன் ஆகியோர்க்குச் செய்யும் அத்துணை உபசரனைகளையும் செய்வதாம். ஆகவே, வைதீக வழிபாட்டு நெறியில், வழிபடும் கடவுளின், காணக்கூடிய வடிவுடைய பிரதிநிதித்துவம் அதாவது தெய்வத்திருமேனி எதுவும் தேவையில்லை, காணக்கூடிய தீ ஒன்றே எல்லாக் கடவுள்களின் பிரதிநிதி ஆகும். ஆகமவழிபாட்டு நெறியில், வழிபடப்படும் ஒரு கடவுள், யாதோ ஒருவகையில் கட்புலன் ஆகக்கூடிய சில சின்னங்களாக அமைய வேண்டும். அச் சின்னம், மூட நம்பிக்கை சார்ந்த, வாள் அல்லது தண்டு, பட்டுப்போன அல்லது உயிருள்ள மரம், கல், ஓடும் அருவி, லிங்கம், சாலகிராமம் அல்லது அனைத்திற்கும் மேலாக, ஒரு படம், அல்லது வழிபடுவோரின் கருத்திற்கு ஏற்ப, உலோகம், கல், செங்கல், சுண்ணாம்பு இவற்றால் ஆன சிலை ஆகியன மூலம் பிரதிட்டை செய்யப்படுதல் வேண்டும்.

**வேதாந்தம் :**

வேதத்தின் முடிந்த முடிவு வேதாந்தம். வைதீகக் கர்மத்தின் முடிந்த முடிவு ஞானம். இறவாப்பெருநிலையை அடைவதற்குரிய மார்க்கம் அறிவுடைமை. "அவனை அறிவதன் மூலமே, இந்நில உலகில், ஒருவன் இறவாப் பெருநிலையை அடைகிறான். அவனை அடைவதற்கு இது தவிர்த்து வேறு வழி இல்லை" (தம் எவம்வித்வான் அமர்த பஹவதி நான்யஹ பந்தா அயனாய வித்யதே" என்கிறது ஸ்ருதி) ஆகம நெறியின் முடிந்த முடிவே பக்தி. இறவாப் பெருநிலையை அடைவதற்கான வழி, அவன்மீது இடைவிடாத் தியானம் ஒன்றே ஆம் (அனன்ய சிந்தா). அல்லது, ஸ்ரீ கிருஷ்ணன் வலியுறுத்திக்குறிப்பிட்டுக் கூறுமாறு, ஒருவனைப் பற்றியே சிந்தித்தல், (ஏக பக்தி). உபநிஷதத்தில் கற்பிக்கப்படும் முப்பத்திரண்டு வித்தைகளும், ஒருவன் தன் வாழ்க்கையின் குறிக்கோளை அடைவதன் முன்னர், அவன் கடைப்பிடிக்க வேண்டிய சில கட்டுப்பாட்டு நெறிகளின் வடிவங்களாம். ஆகமங்களின், முதலாவதும், இரண்டாவதுமான நூல்கள் (சரியை, கிரியை) சிவன் அல்லது விஷ்ணுவை வழிபடுவதற்கான வழிமுறைகளைக் கூறுகின்றன. ஆனால் பக்தி நெறியின் கட்டுப்பாட்டு நிலைகள், பல இடங்களில் யோகப் பயிற்சி வடிவிலான தத்துவார்த்த கடமைகளையும் உடன் கொள்ளவேண்டியிருப்பதால், ஆகமங்களின் மூன்றாவது நூல், யோகநிலை பற்றிக் கூறுகிறது. ஈண்டு ஞானம் எனக் கூறப்பட்டது, மேலே குறிப்பிடப்பட்ட ஞானம் அன்று. மாறாக, ஆகமநெறிக் கோட்பாடுகளில் புதையுண்டுகிடக்கும் தத்துவார்த்தக் கொள்கைகளை விளக்குவது என்ற பொருள் உடையதாகும். இந்தத் தத்துவம், வேதாந்தத் தத்துவத்திலிருந்து முற்றிலுமாக வேறுபட்டது. காரணம், பின்னது, இப்பிரபஞ்சத்திற்குப் பின்னால், ஒரேயொரு உண்மைப் பொருளை மட்டுமே, அதாவது பிரம்மாவை மட்டுமே உண்மை என ஏற்றுக்கொள்கிறது. முன்னது, முப்பொருள் உண்மைகளை ("தத்வ த்ரயம்") அதாவது, ஈஸ்வரன், தனிமனிதன், செயல் ஆகியவைகளை, உண்மைப் பொருள்

களாம் என ஏற்றுக்கொள்கிறது. இவ்வாறு ஒவ்வோர் ஆகமமும், யோகபதம், ஞானபதம் என இரண்டைக் கொண்டுள்ளன என்றாலும், உபநிஷதங்கள், ஞானமார்க் கத்தின் சமயத்திருநூல் தொகுதியாதல் போல, ஆகமங்கள், தொடக்கத்தில், பக்தி மார்க்கத்தின் சமயத்திருநூல் தொகுதியே ஆகும். ஆகமத்திருமுறை நூல் பலர்க்கு உரிய தாம். உபநிஷதம், குறிப்பிட்ட சிலர்க்கு மட்டுமே உரியதாம். ஆகம நெறி எளிய நெறி. உபநிஷத நெறி கடின நெறி. ஸ்ரீ கிருஷ்ணன் பின்வருமாறு கூறுவது காண்க. "அருவுருவாம் இறைவன் மீது இதயத்தை நிறுத்தி வழி படுவார், அனுபவிக்க வேண்டிய துன்பம் மிகப் பெரிதாம். அகவுணர்வுகளுக்குப், புறஉருவம் கொடுத்து, வழிபடுவார்க்கு, இறைவனை அருவுருவ நிலையில் நிறுத்தி வழிபடும் நெறி, மிகப் பெரிய துன்பத்தைத் தரும், ...... ........................

[கிலெஸோதிகரஸ் தெஷாம் அவ்யக்தாஸக்த செதஸாம் அவ்யக்தாஹிகதிர்-துக்கம் தெஹவத்பிர் அவாப்யதெ."

—பகவத் கீதை ; 12 : 5]

வைதீக வழிபாட்டு முறை, மக்களில், நான்கு வருணங்கள் பிரிக்கப்படுவதைத் தேவைப்படுத்திற்று. வேத, வேதாந்தங் களைக் கற்பதிலிருந்து, நான்காவது வருணமக்களை, ஒதுக்கி வைப்பதற்கும் கொண்டு சென்றது. மக்களை நான்கு வருணங் களாகப் பிரிப்பது, வருணாஸ்ரம தர்ம வளர்ச்சிக்கும், அந் நான்கு வருணத்தவர்க்கும் ஆஸ்ரமங்களை வகைப்படுத்து வதற்கும் வழி வகுத்துவிட்டது. இதன் விளைவு, சந்நியாசம், பிராமணர் ஒருவர்க்கு மட்டுமே உரிமையுடையது. மோக்ஷம், சந்நியாச வாழ்க்கையில் இடம் பெறும் தனிப்பயிற்சிக்குப் பின்னரே அடையக்கூடும் என்ற கோட்பாடுகளாயின. இக்கோட்பாட்டின் முடிந்த முடிவு, வைதீக நெறிப்படி, மோக்ஷம், பிராமணர்களால் மட்டுமே அடையக் கூடியது என்பதாகிறது. ஆகம நெறி, இக்கோட்பாட்டுக்கு எதிராக நிற்கிறது. எவன் ஒருவனும், ஏன், ஒரு சண்டாளனும் கூட, விஷ்ணு அல்லது சிவனின் திருமேனி அல்லது சின்னத்தைக்

கொண்டுவந்து வைத்துப் பூசை செய்யலாம். சிவனடியார்கள் வரலாறு கூறும் தமிழ்ப் பெரிய புராணம், கோயில்களில், சிவனை வழிபட்ட, இழிகுலத்துச் சைவ அடியார்களைக் குறிப்பிடுகிறது. காளத்தித் திருக்கோயிலில் உள்ள சிவனுக்குக் கண்ணப்ப நாயனார், இறைச்சி உணவைப் படைத்துள்ளார். வைஷ்ணவ ஆழ்வார்களில் ஒருவரான, பெரும்பாலும் கி. பி. 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாணன், சீரங்கம் திருக்கோயிலைச் சூழ உள்ள தெய்வத் திருமண்ணில் நடப்பதற்கும் தகுதி அற்றதாம் அளவு இழிவுடையவாகக் கருதப்படும், கால்களைக் கொண்ட இழிகுலத்தவராகக் கருதப்பட்டவர். ஆகமங்கள், நான்கு சாதிக் கொள்கையை ஏற்கவில்லை. ஆனால், உண்மையில் வேதத்தின் ஒரு பகுதியாகிய வேதாந்தம், சூத்திரர்களுக்குக் காட்டப்படாது மறைக்கப்பட்ட ஒரு நூலாகும். இதை உறுதிப்படுத்தும், ஒரு தனிப் பிரிவையே "பாதராயணம்" கொண்டுளது, காரணம், சூத்திரர்கள், தங்களைத் தூய்மைப்படுத்திக்கொள்ளும், சடங்கு நெறிகளுக்குத் தகுதிபடைததவரல்லர், ஆகவே, அவர்கள், வேதங்களை, ஓதவும் கேட்கவும் விலக்கப்பட்டனர். [வேதம் : சூத்திரம். 1 : 3 35-38] ஆகமங்கள் இதற்கு மாறாக, அனைத்து மக்களுக்கும் உரிமையுடையவாம். அதன்படி இன்றும் சிவ தீக்ஷை பெற்ற ஒரு பறையன், அத் தீக்ஷையைப் பிராமணன் ஒருவனுக்குக் கொடுத்து, அப்பிராமணனுக்குக் குருவாகவும் ஆகலாம். ஆகம நெறியாளர்களிடையே சந்நியாச நிலைகளும் பரவலாயின. வைஷ்ணவ சந்நியாசிகள், "ஏகாந்திகள்" என்றும், சைவ சந்நியாசிகள், "சிவயோகிகள்" என்றும் அழைக்கப்பட்டனர். ஆகமங்களின் அடிப்படைக் கொள்கைப்படி, எல்லா இனத்தவர்க்கும் உரியதான பக்தி நெறி, ஒரு இல்லறத்தானையும், வாழ்க்கைப் பெருங்கடலைக் கடந்து கரைசேர்க்க வல்லதாம் ஆதலின், சந்நியாச நிலை, மோக்ஷம் அடைவதற்கான அடிப்படைத் தேவையன்று. பக்தர்கள் சந்நியாசிகள் ஆகின்றனர் என்றால், அதற்குக் காரணம் யோகப்பயிற்சி, ஆகம நெறியோடு இரண்டறக் கலக்கவில்லை ஆயினும்,

அதன் ஒரு பகுதியாக ஆகிவிட்டது. மேலும், யோகப்பயிற்சி, சந்நியாச வாழ்க்கையில் எளிதில் மேற்கொள்ளக்கூடிய தாயிற்று.

### வைதீக நெறியாளர்க்கும் ஆகம நெறியாளர்க்கும் இடையிலான போட்டி :-

பண்டை நாட்களில், வைதீக நெறியாளர்களுக்கும், ஆகம நெறியாளர்க்கும் இடையில் பெரும்பகை - கடும்பகை - நிலவி இருந்தது. ஆகமநெறியாளர்கள், கடவுள் பெயரால் இரத்தம் சிந்தப்படுவதை வெளிப்படையாகவே கண்டித்தனர். இறைச்சி உண்பதை, அதிலும் மாட்டிறைச்சி உண்பதை எதிர்த்தனர். இரத்தம் சிந்தும் யாகங்கள் குறித்த அவர் கண்டனங்களின் எதிரொலி, மகாபாரதத்தில் கேட்டது. வைதீக ஆகம நெறிகளின் ஒருங்கிணைந்த அவ்விரு நெறிகளிலும் உள்ள நல்லன வற்றையெல்லாம் தேர்ந்து தன்னகத்தே கொண்ட ஒரு நெறியினைப் பின்பற்றத்தொடங்கியமக்களால், பிற்காலத்தில் மேற் கொள்ளப்பட்ட யாகங்களில், உயிருடைக் கால் நடைகளுக்குப் பதிலாக, மாவினால் செய்யப்பட்ட, அவற்றின் வடிவங்களை ("பிஷ்டபஷு") மாற்றுப் பொருளாக ஏற்கும் நிலைக்கும் கொண்டுவந்துவிட்டது. பகவத்கீதை, தொடக்கத்தில், ஆகமநெறியாளரின் ஒருபிரிவினராகிய பாகவதர்களின் சமய நூல்தொகுப்போடும், ஸ்ரீ கிருஷ்ணன், பாகவதர்களின் பக்தி நெறியை, வேதாந்திகளின் ஞானநெறி, சாங்கியர்களின், தனிமிகு நுட்பம் வாய்ந்த இயல்கடந்த ஆய்வு நெறிகளோடு ஒருங்கு இணைத்து, வேறுவேறுபடும் இந்நெறிகள் எல்லாம், ஓரே உண்மைப் பொருளின் பல்வேறு கோணங்களாகத் தோன்றும், உயர்ந்த நிலையிலிருந்து பேசத் தொடங்கி, அறிவெல்லை கடந்த இப்பேருண்மையை அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்தான். என்றாலும், பகவத் கீதை, வேதத்தை, அதாவது கர்மகாண்டத்தை மிகமிகக் கடுமையான சொற் களால், தூற்றிக் கண்டிக்கும் நிலையில், தன்னுடைய ஆகம நெறி இயல்பை வேண்டுமளவு இன்னமும் பெற்றுள்ளது; "ஓ பார்த்தா! வேதங்கள் பற்றிய வாதங்களில் மகிழ்ச்சி

காணும், அறிவிலிகள், அணிநயம் கலந்த இவ்வினிய சொற்களைக் கூறுகின்றனர். "கர்ம பாதையைத் தவிர்த்து வேறு எதுவும் இல்லை, அவர்களின் உள்ளம் ஆசைகளால் நிரம்பி வழிகிறது. அவர்கள் ஸ்வர்க்கத்தில் அனுபவிக்கப்போகும் இன்பத்திற்காக ஏங்கி நிற்கின்றனர். அவர்கள், மறு பிறவியை எது தருமோ, அதிலும், கர்மத்தின் பயனிலும், எண்ணற்ற சடங்குகளைக் கொண்டுள்ள விழா நிகழ்ச்சிகளிலும், குறியாக நிற்கின்றனர்; இன்ப நுகர்வு அதிகார ஆணை நெறிகளைப் பின்பற்றுகின்றனர். இன்ப நுகர்வுக்கும், அதிகார போதைக்கும் அடிமைப்பட்டுப்போன உள்ளத்தோடு, இன்ப நுகர்விலும், அதிகார போதையிலும் ஈடுபாடு கொண்டுவிடும் அவர்களின் புத்தி, அவர்களுக்குச் சிறிதே அறிவினைத் தருமாயினும், அமைதியான தியானத்தில் நிலையாக நிற்காது. வேதம், மூன்று குணங்களால் உருவான பொருள்களைப் பற்றிக் கூறுகிறது. ஆனால், "அர்ஜ்ஜுனா! அம் முக்குணங்களால் உருவாகும் பொருள்களுக்கு அப்பாற்பட்டவனாக இருப்பாயாக". இவையல்லாமல், ஆகமங்களுக்கே உரியவாய எண்ணற்ற சொற்கள் பகவத்கீதையில் இடம்பெற்றுள்ளன.

["யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்த அவிபஷ்கிதஹ
வேதவாத ரத்ஹாஹ பார்த்த! நான்யத் அஸ்திதி
வாதிஹை
காமரத் மாஹ ஸ்வர்க்க பராஹ ஜன்மகர்ம பஹல
பிரதாம்
கிரியாவிஸேஷ பஹுலாம் போகைஸ்வரிய பஹலம்ப்ரதி
போகைஸ்வர்ய ப்ரஸக்தனாம் தயா அப்ஹ்ருத செதஸாம்
வ்யவ ஸாயாத்மிகா புத்திஹி சமாதௌன விதியதெ
த்ரைகுண்ய விஷ்யா வேதா நிஸ்த்ரை குண்யொ
பவராஜுவர்"
—பகவத் கீதை : 2 : 42-45)

வைதீகர்கள், இதற்கு மாறாக, ஆகம வழிபாட்டினரை தனிமிக இழிந்தவராகவே மதித்தனர். இது பண்டை

ஆரியர்கள், மந்திரம் ஓதும் தஸ்யூக்களை, "ம்ரித்ரவாச்ஹ"* என அழைத்து வந்த ஏளனத்தின் தொடர்பே அல்லது வேறு அன்று. இவ்வெறுப்பு வளர்ச்சியின் அடையாளம் இன்றும் காணக்கூடியதே. வைதீக நெறியும், ஆகமநெறியும், யாமுனாச்சாரியர் காலம் தொட்டே, ஒரே நெறியாக இரண்டறக் கலந்துவிட்டன என்றாலும், சைவம் வைஷ்ணவம் ஆகிய இரு சமயங்களையும் சார்ந்த கோயில் குருக்களைப் பொறுத்தமட்டில், கொடிய வேதாந்திகளால் இழிகுலப் பிராமணர்களாகவே மதிக்கப்பட்டனர். உண்மையில், ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரும்கூட, எனக்குத் தெரிந்த வகையில், எந்தக் கோயிலுக்கும் நுழையாத அத்வைத வேதாந்திகள் இருந்துள்ளனர். வேதத்தின் முடிந்த முடிபாகிய வேதாந்தமும், ஆகமவழிபாட்டு நெறியை வன்மையாகக் கண்டிக்கிறது. "பாசுபதர்கள்" (வேதாந்த சூத்திரம் : 2. 2 : 34-41) "பாஞ்சராத்ரர்" (வேதாந்த சூத்திரம் : 22 : 2 ; 42-44) ஆகிய இருவர்களையுமே, பாத்ராயணர், தம்முடைய சூத்திரங்களில் வெளிப்படையாகவே பழித்துள்ளார்.

## ஆகம வழிபாட்டு நெறிகள் தோன்றியது எப்போது?

இனி, ஆகம வழிபாட்டு நெறிக்கொள்கைகள், உருப்பெற்றது எப்போது, அவை எங்கிருந்து முகிழ்த்தன என்பன பற்றி ஆராய்கின்றேன். முதற்கேள்வி, விடை காண்பதற்கு அரியது அன்று. அண்மையில் நடந்து முடிந்த உலகப்போரின் போது நடைபெற்றுவிட்ட, நினைத்தாலும் நடுங்கத்தக்க பேரழிவு, புதிய வாழ்க்கை நெறிகளைக் கொணரத் தொடங்கியதுபோல் - அது எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை உய்த்துணர்ந்து கூறுவது அத்துணை விரைவில் இயலாது-மகாபாரதப் போரின் மிகப் பெரிய படுகொலைகள், இந்திய நாட்டு வாழ்வியலில், ஓர் ஆழமான மாற்றத்திற்கு வழிவகுத்துவிட்டன. "மந்திர". "மந்திரத்ர ஷ்டாரஹ"ங்களின் கண்காணிப்பாளர்களாகிய ரிஷிகளின் காலம், மீண்டும் வாரா வகையில் மறைந்துவிட்டது. வேதத்தின் கர்மகாண்டம் உறுதி அளித்த ஒன்றேயொன்றான, எல்லாமே கெட்டவை

தாம் எனக்கருதும், அழுத்தமான சோர்வு வாதம், அதாவது இம்மையிலும், மறுமையிலும், சுவர்க்கலோகத்தில் போலவே, பூலோகத்திலும், ஐம்பொறி இன்ப நுகர்வின் மீதான கொடிய வெறுப்புணர்ச்சி, மக்களை அடிமை கொண்டுவிட்டது. சிந்தனையாளர்கள், நிலைதடுமாறும், இவ்வுலகியலுக்கு இடையில் ("நாமரூபம்") நிலைதடுமாறும் இயல்பு வாய்ந்த ஒரே பொருளான (அக்ஷரம்) பிரம்ம பரமம் மீதான பல்வேறு வகையான தியான நிலைகளில், கேட்டிலிருந்து மீள்வதற்கான ஒரு வழியினைத், தேடிக்காணலாயினர். அதன் பயனாய், உபநிஷதத்தின் முப்பத்திரண்டு வித்யாக்கள் பிறந்தன. கர்மகாண்டத்து வழிமுறைகளின் அடிச்சுவடுகள் "சாண்டொக்யத்திலும்," "பிரஹதாரண்யக" விலும் விளங்க உரைக்கப்படும், வித்யாக்களில் தெளிவுறத் தோன்றுமளவு, உபநிஷதங்கள், கர்மகாண்டத்திலிருந்து படிப்படியாகத் தோன்றி வளர்ச்சிநிலைபெற்றன. என்றாலும், மக்களில் பெரும்பாலோர் உள்ளுறுதி அற்ற நோஞ்சான்களாயினர். அவர்களின் உள்ளம், ஔபநிஷத கொள்கை, பயிற்சிகளின் விழுமிய சிறப்பு நிலையினை அடையும் உணர்வுகளால் நிறைந்து வழியலாயிற்று. அவர்களுக்காகவே முகிழ்த்தன, ஆகமக் கொள்கைகளும் பயிற்சிகளும். இவை, உலகின் சாதாரண வாழ்வின் இயல்புகளோடு பங்கு கொண்டு விட்டன. கடவுள் வழிபாடு என்பது, மக்களைப்போற்றும், சிறப்பாக, குருக்கள் மற்றும் அரசர்களைப் போற்றும் வழிபாட்டு நெறியின் மறுபடிவமேயாம். இவ்வாறு, பாரதப் போருக்குப் பிற்பட்ட காலமே, உபநிஷதங்களும், தலையாய ஆகமங்களும் தோன்றிய காலமாம் என்பதைக் காண்கிறோம்

**ஆகமங்களின் மூலம் :**

ஆகமப் பயிற்சிகள் எங்கிருந்து தோன்றின என்ற இரண்டாவது வினாவிற்கு விடை காண்பது சிறிது அதிக அருமையுடைத்து, ஆகம வழிபாட்டு முறைகள் முழுக்க முழுக்கத் தீ வழிபாடற்றது ஆதலாலும், வழிபாட்டைத் தொடர்ந்த வேதம் ஓதல் வேண்டப்படாதது ஆதலாலும், அவை, தஸ்யூ

வழிபாட்டு முறையிலிருந்தே வளர்ச்சி பெற்றனவாதல் வேண்டும். தஸ்யூ வழிபாட்டுமுறை, வடக்கு தெற்கு உள்ளிட்ட இந்தியப் பெரு நிலப்பரப்பு முழுவதிலும், ஆரிய வழிபாட்டு முறை தோன்றுவதற்கு முன்னரே, நிச்சயமாக இருந்து வந்தது. வேதங்களும், அவற்றின் துணை நூல்களான வேத இலக்கியங்களும், அத்துணைப் பரப்புடையவும், எல்லாப் பொருள்களையும் தம்மகத்தே அடக்கிக்கொண்டனவும் ஆம். ஆதலின், தஸ்யூ வழிபாட்டு உரிமைகள், வேத காலத்தில் என்ன ஆயின என்ற வினாவை, எவன் ஒருவனும் தனக்குத் தானேயும் கேட்டுக்கொண்டான் அல்லன். ஐரோப்பிய வரலாற்று ஆசிரியர்கள், ஆரியர் தஸ்யூக்களிடையேயான பகை, இனம் பற்றியதாம் என்பதற்காம் பல்வேறு விளக்கங் களிலும், தஸ்யூக்களை ஆரியர்களோடு இரண்டறக்கலக்கப் பண்ணும் புரியாப்புதிரிலும், முழுமையாக ஆழ்ந்து போயிருந் தமையால், ஆரிய வழிபாட்டுமுறை பரவிய பின்னர், தஸ்யூ வழிபாட்டு முறையின் வரலாறு பற்றி ஆய, அவர்கள் ஒரு முறையும் நின்று நோக்கினாரல்லர். இவ்வினாவுக்குப் பொருத்தம் உற விடையளிக்க நம்மால் இயலுவதற்கு, ''ஸ்ரௌத'' வேள்விகள் எனப்படுபவை, ''ர்த்விகா'' என அழைக்கப்படும் வேள்வி ஆசிரியர்கள் மட்டுமே பங்கு கொள்ளக் கூடியது; வேதவேள்விகளை நடத்துவதற்குத் தேவைப்படும் பொருட்களைத் தருமளவு பெருஞ்செல்வம் வாய்ந்த வேந்தர்களும், வேந்தர்நிகர் விழுநிதிச் செல்வர்களும் வணிகர்களும், அவ்வேள்விகள் தரும் கட்புலனாகாப் பலன் களைத்தான் பெற முடியுமேயல்லாது, அவ்வேள்விச் சடங்கு களில் பங்கு கொள்ளக் கூடாது. எல்லோர்க்கும் தெரிந்த சமயம் என அழைக்கப்பட வேண்டியதான பொதுமக்களின் சமயச் சடங்குகள் ஆகா என்பதை நாம் நினைவில் கொள்ளுதல் வேண்டும். மனைகளில் மேற்கொள்ளப்படும் பல்வேறு தீ வழிபாடுகளில் பயன்படும் மந்திரங்களை அதர்வ வேதம் கொண்டுள்ளது உண்மை; ஆனால், இவ் வழிபாட்டு முறைகள், ஒருவர்விடாமல் மக்கள் எல்லோராலும், ஏதும் அறியாப் பாமரர்களைப் போலவே முற்றவும் அறிந்த உயர்ந்

தோர் ஒருசிலராலும் பின்பற்றப்பட்டன என்பதை உறுதி செய்யும் சான்று எதுவும் அறவே இல்லை. வேதகாலம் முழுவதும் சாதாரண பொதுமக்கள் தீ வழிபாட்டு முறை யல்லாத, சமய வழிபாட்டு நெறிகளைப் பெற்றே இருக்க வேண்டும். அவை, பண்டைய தஸ்யூ வழிபாட்டு முறை களாகவே இருந்திருக்க வேண்டும். அவ்வழிபாட்டு முறைகள் எவ்வகையைச் சார்ந்தவை, பொதுமக்கள் வழிபட்ட கடவுள்கள் யாவை என்பதை அறிந்துகோடற்கான மார்க்கம் ஏதேனும் உண்டா? தமிழ் இந்தியா, வடஇந்தியாவைப் போலவே, ஆரிய தீ வழிபாட்டு நெறி தோன்றுவதற்கு முன்னர், தஸ்யூக்களின் தீ வழிபாடற்ற வழிபாட்டு முறை யினையே பின்பற்றி வந்தது; பண்டைத் தமிழரின் சமய வழிபாட்டு முறைபற்றிய விளக்கக் குறிப்பு முன்பே கொடுக்கப்பட்டுளது. வடநாட்டுச் சாதாரண மக்கள், வேத காலம் தொடங்குவதற்கு முற்பட்ட காலத்தில் வழிபட்டு வந்தது போலவே, வேதகாலத்திலும், தீ வழிபாடு இல்லாத, உள்நாட்டுக் கடவுள்களையே வழிபட்டு வந்திருக்க வேண்டும். அவரவர்களின் இன்றைய வழிபாட்டு நெறியைப் போலவே, தஸ்யூக்களின் வழிபாட்டு நெறி வழிபாட்டினை அடிப்படை யாகக் கொண்ட, ஆடல் பாடல் தொடர்ந்துவர கடவுள் திருமேனிகளுக்கு உணவு படைத்தலைக் கொண்டிருந்தது. வால்மீகி கூற்றுப்படி, சுக்கிரீவனின் முடிசூட்டுவிழா, அவ்வகையில்தான் கொண்டாடப்பட்டது. அந்நாட்களில் முடிசூட்டுவிழா, சமயச்சார்பற்றது அன்று. மாறாக சமயச் சார்புடைய ஒரு சடங்கே ஆகும்.

மகாபாரதப் போருக்குப் பின்னர், தீ வழிபாட்டு முறை மறையத் தொடங்கவே பிராமணச்சமய ஆசிரியர்கள், தங்கள் தொழில் அழிந்துபோனதை அறிந்துகொண்டு நாட்டில் அப்போதும் நடைமுறையில் இருந்துவந்த தீ வழிபாடற்ற வழிபாட்டு நெறியில் தங்கள் கருத்தைத் திருப்பியிருத்தல் வேண்டும். பெரும்பாலான மக்களின் இயல்பு உணர்ச்சிவயப் பட்டுப் போவதே ஆதலின் - கட்புலனாகா நுண்ணிய உலகியல் கடந்த பொருளுணர்ச்சி குறித்த ஆய்வாம்

உணர்விலேயே - வாழ்ந்துவிடவல்ல உள்ளம் வாய்க்கப்பெற்ற, அறிவார்ந்த உணர்ச்சியினராகிய மக்கள், எக்காலத்தும் ஒரு சிலரே, அம்மக்களுக்குப் பத்தி மார்க்கம் மீதான கவர்ச்சி பிராமணர்களின் கருத்தைப் பக்திவழியில் திருப்பியதற்கான மற்றொரு காரணக்கூறு ஆதல்வேண்டும். அப்பிராமணர்கள், திரிமூர்த்திக் கொள்கையை, தாங்கிய சமயக் கொள்கையாம் உலகப்பருப்பொருளின் முக்குணக் கொள்கையோடு ஒன்று படுத்திட உருவாக்கினர். விஷ்ணுவின் பல்வேறு அவதாரங் களுக்கும், சிவனின் எண்ணற்ற, ஆனால் தற்காலிக மானிட இயல்பு காட்டும் திருவிளையாடல்களுக்கும் உருவம் கொடுத்து வளர்த்தனர். [பாகவத புராணம் குறைந்தது 22 அவதாரங்களைக் குறிப்பிடுகிறது] [பிரம்மாவின் செயல் பாட்டுத் திறன், படைப்புத் தொழிலோடு தீர்ந்துவிடுவதால், அவன் உயிர்களை மோட்சத்திற்கு அழைத்துச் செல்ல இயலான் ஆகவே, ஆகமங்கள், அவனை இருட்டடிப்புச் செய்துவிட்டன.] அப்பிராமணர்கள், 108 வைஷ்ணவ ஆகமங்களையும், 28 சைவ ஆகமங்களையும் இயற்றினர். 77 ஆகமங்களைக் கொண்டிருப்பதாய்ப் பெருமை சாற்றிக் கொள்ளும், சக்திக்கு உரியதான பிறிதொரு ஆகம நெறி பிற்காலத்தே வளர்ச்சி பெற்றது. இக்காலங்களில், சிவ வழிபாடும், கிருஷ்ண வழிபாடும் வழக்காற்றில் இருந்தன என்பதற்குப் பாணினியும் சான்று பகர்கின்றார்.

பையப்பைய, வேதாந்த நெறியும், ஆகம நெறியும், ஒன்றையொன்று ஈர்க்கத் தொடங்கின. புராணங்களில் அவை, அடுத்தடுத்து இடம் பெற்றுள்ளன. ஆனால், இரண்டறக் கலந்து ஒன்றாகிவிடவில்லை. சங்கராச்சாரியார் காலத்திலும் (கி. மு. 8 ஆம் நூற்றாண்டு) அவை, ஒன்றாகி விடவில்லை என்பதை நாம் அறிகிறோம். வேதாந்த சூத்திரங்களை விளக்கிக்கூறும் நிலையில், பாசுபத சமய நெறியும், பாஞ்சராத்ர சமய நெறியும் ஒன்றோடொன்று முரண்பட்டவை எனக் கூறுவதில், அவர் பாத்ராயணரைப் பின்பற்றுகிறார் என்றாலும், அவருடைய "பிரபஞ்ச ஹ்ர்தயம்" என்ற நூல், உண்மையான ஆகம நூலே ஆகும்.

செவிவழிச் செய்திப்படி, விஷ்ணு, சிவன் சக்தி, கணபதி, சுப்பிரமணியர், சூரியன் ஆகியோர் வழிபாட்டு நெறிகளை முறைப்படுத்தினார். அவற்றிடையே, தாம் கண்டு நிறுவிய மதங்கள் பின்பற்றும் வழிபாட்டு முறையினைப் புகுத்தினார் என்ற காரணங்களால், அவர் ''ஷண்மத ஸ்தாபனாசாரியர்'' (அறுவகை மதங்களைக் கண்ட ஆசிரியர்) எனவும் அழைக்கப் பட்டார். இவ்வகையால், தம்முடைய வேதாந்த நூல் களையும், ஆகம நூல்களையும், ஒன்றோடொன்று கலக்க விடாது வேறுபடுத்தியே அவர் வைத்திருந்தார் என்பதைக் காண்கிறோம். பொதுவாக, ''விஸிஷ்டாத்வைத வேதாந்தம்'' என அழைக்கப்படும் வைஷ்ணவ வேதாந்த நெறியைத் தோற்றுவித்த யாமுனாச்சாரியர்தாம், வைஷ்ணவத் தலைமைக்கு, (ப்ராமாண்யம்) அதாவது, வேதத்திற்கு நிகரானது, ''சாத்விக ஆகமம்'' என்பதற்கு, முதன்முதலில் வாதிட்டவராவர். உண்மையில் இராமானுஜ ஆச்சாரியர்தாம், அவை இரண்டையும் இரண்டற்று ஒன்று பட இணைத்தவராவர். இது, ஆகம நெறிக் கொள்கைகள் தென்னிந்தியாவில் குடிபெயர்ந்ததற்குப் பல்லாண்டு காலத் திற்குப் பின்னரே நிகழ்ந்தது. தென்னிந்தியாவில், அவை எப்பொழுது, எவ்வாறு பரவி யிடங்கொண்டன என்பது பின்னர் ஆராயப்படும்.

ஆரியத்துக்கு முந்திய இந்தியவழிபாட்டு நெறியிலிருந்து முகிழ்த்த ஆகம வழிபாட்டு நெறி, கி. பி. 5, 6 ஆம் நூற்றாண்டுகளில், தென்னிந்தியரின் உள்ளத்தை ஆட்கொள்ளவும், வேதாந்த நெறியோடு இரண்டறக் கலந்து விட்டபோது, மீண்டும் வடஇந்தியாவுக்கே பாய்ந்து சென்று, கடந்த ஆயிரம் ஆண்டுகளாக இருந்துவரும் இந்து சமய மாகவும் விதிக்கப்பட்டுவிட்டது ஆதலின் வடஇந்தியாவில் ஆகம நெறிகளின் வளர்ச்சி குறித்து, இவ்வளவு விரிவாக ஆராய வேண்டியதாயிற்று.

அதிகாரம் : IX

# "வடஇந்தியாவும் தென் இந்தியாவும்"
# (கி. மு. 1000 முதல் கி. மு. 500 வரை)

## ஆபஸ்தம்பரும் பௌத்தாயனரும் :

சூத்திரகாரர்களில் (உரையாசிரியர்களில்) பெரும்பாலும், கடைசி சூத்திரகாரராகிய ஆபஸ்தம்பர், கோதாவரி ஆற்றின் மேலைப் பள்ளத்தாக்கில் வாழ்ந்து, கற்பித்து வந்தார். யஜுர் வேத தாக்ஷிணாத்ய பிராமணர்களுக்கு வாழ்க்கை முறைகளை வகுத்து அளித்தார். திருவாளர் பூலர் அவர்களின் கூற்றுப்படி, அவர் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர்க் கொண்டுபோகப்படுவாரல்லர். [Sacred Text Books of the East II Page: xxxvii—xliii] அவரைக், குறைந்தது, மேலும் இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னர்க் கொண்டுபோய் நிறுத்த விரும்புகிறேன். காரணம் பாரதப்பெரும்போருக்கு ஐந்து தலைமுறைக்குப் பிற்பட்ட, அதாவது கி. மு. 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த, ஸ்வேதகேதுவை, "அவர்" அதாவது அண்மையில் வாழ்ந்தவராக, அவர் பேசுகிறார். [Pargiter: Ancient Indian Historical Tradition Page : 330]. மேலும், "ஆப்ஸ்தம்பர், பாணினியின் இலக்கண நெறியைப் பின்பற்றவில்லை". "அவர் அதை அறிந்திருப்பதும் நடைபெறாத ஒன்றாம்" என்றும் திருவாளர் பூலர் கூறுகிறார். [Sacret Text Book of the East. II Page: XLIII] பெரும்பாலும், அவர், பாணினிக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்திருந்தவராவர். கி. மு. நான்காம் நூற்றாண்டு வாழ்ந்தவர் பாணினி என்பதற்கு ஆதரவாகக் கூறப்படும் வாதங்கள் அனைத்தையும், திருவாளர்கள் "கோல்டுஸ்டக்கர்" அவர்களும் பி. ஆர். பந்தர்கார் அவர்களும், தகர்த்துவிட்டு, அவருடைய காலம்,

கி. மு. ஏழாம் நூற்றாண்டுதான் என்பதை வலுவாக உறுதி செய்யும் எண்ணற்ற சான்றுகளைக் கொடுத்துள்ளனராகவும், ஐரோப்பிய வரலாற்று ஆசிரியர்களில் பெரும்பாலோர், பாணினி கி. மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்ற தவறான முடிவிலிருந்து, தங்களை, இன்னமும் விடுவித்துக் கொண்டாரல்லர். ஆபஸ்தம்பர், பாணினிக்கு முற்பட்டவராயின், அவருடைய காலம், நான் மேலே கருத்துத் தெரிவித்த காலத்திலும் முற்பட்ட காலமாதல் வேண்டும். ஆபஸ்தம்பரைப் போலவே, ''சாகா'' என்ற வேதக் கொள்கையின் விளக்கவுரைகாரராகிய பௌதாயனர், அவரைவிட இருநூறாண்டு மூத்தவராவர். இவ்விரு சூத்ரகாரர்களும் (Soothrakaaras) கிருஷ்ணயஜுர் வேதத்தின் ''தைத்திரிய'' சாகா பிரிவைச் சேர்ந்தவராவர்.

இக்கொள்கை, விந்தியத்திற்குத் தெற்கிலேயே சிறப்பாகப் பரவியிருந்தது. வடஇந்தியாவில், இந்நெறியைப் பின்பற்றுபவர், கடந்த ஆயிரம் ஆண்டுகால எல்லைக்குள் வடநாட்டிற்குக் குடிபெயர்ந்த தென் இந்தியப் பிராமணர்களின் வழிவந்தவராவர். ஒரு பிரிவு ''சாகா''வைப் (வேதக் கொள்கை ஒன்றை) பின்பற்றுவோர் அனைவரும், தாங்கள் வாழ்ந்திருந்த இடத்தில் வாழ்ந்திருந்தமைக்கான சிறு அடையாளந்தன்னையும் விட்டுவைக்காமல், வடக்கிலிருந்து தெற்கே குடிபெயர்ந்துவிட்டனர் என்பதைக், கற்பனை செய்துபார்க்கவும் நம்மால் இயலாது ஆதலின், ''தைத்திரீய'' சாகா, தனி சாகாவாகப் பிரிந்து வழங்கிய காலந்தொட்டு, அதாவது வைசம்பாயனரின் மாணவராகிய வியாசர் காலந்தொட்டு, அதாவது பாரதப் பெரும்போர் காலந்தொட்டு, அத்''தைத்திரீய'' சாகா, தென்னிந்திய சாகாவாக ஆகியிருத்தல் வேண்டும் [பாண்டவர் பக்கம் இருந்து போரிட்ட தென்னாட்டவருள் ''தித்திரி'' என்பார்களும் இருந்தனர். அவர்களின் சாகா, 'தைத்ரேயம்'' என அழைக்கப்பட்டது என்றும், வைசம்பாயனர், யாக்ஞவல்கியரின் எச்சிலை விழுங்கியது குறித்த கட்டுக்கதை, ஒரு பறவையின் பெயர், சாகா என வழங்கப்படுவதற்கான

பிற்காலக் கற்பனை என்றும் எண்ணுகின்றேன்.] இது போலும் பேரழிவு சார்ந்த நிகழ்ச்சிக்கான சிறுகுறிப்புதானும் புராணங்களிலோ, அல்லது மரபு வழிச்செய்திகளிலோ காணப் படவில்லை. ஆகவே, கிருஷ்ண யஜுர் வேதம், தக்ஷிண பிராமணர்களின் "சாகா"வாக ஆதற்குப் போதுமான போக்குவரத்து, கி. மு. 14, கி. மு. 13 நூற்றாண்டு காலத்தில், தென்னிந்தியாவுக்கும், வடஇந்தியாவுக்கும் இடையில் இருந்துவந்தது. இச்சமய நெறிக்கான விதிமுறைகளை, முதன்முதலில் வகுத்த ஒருவர், பௌதாயனர் ஆதலின் அவரை, கி. மு. 900இல் கொண்டு நிறுத்த விரும்புகின்றேன். இக்காலம், பாரத்தாயனார்க்குப், பொருத்தம் அற்ற பழங் காலமாகத் தோன்றக் கூடும், ஆனால், கோதாவரி ஆற்றங் கரையில், இராமர் காலத்திற்கு முன்பிருந்தே ஆரியர் இருந்து வந்தனர் என்பதையும், தென்னிந்தியாவை, இராமன் அமைதி நிலவும் இடமாக மாற்றியது, ஆங்கு ஆரியர்கள் மேலும் பரவுவதற்கு வழிசெய்தது என்பதையும், வேதவியாசர் மற்றும் வைசம்பாயனர் காலத்தில், கிருஷ்ண யஜுர் வேத மாணவர்கள், அந்த ஆற்றை அடுத்திருந்த மாவட்டங்களுக்கு உள்ளாகவே இருந்தனர் என்பதையும், அச் சாகாவின், முது பெரும் சூத்ரகாரர் பௌதாயனர் ஆவர் என்பதையும் நினைவில் கொண்டால், மேலும், பாணினி கி. மு. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பதையும், ஆபஸ்தம்பர், பாணினியின் சமகாலத்தவர் அல்லது சில ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் என்பதையும், பௌதாயனர், ஆபஸ்தம்பரை விட, குறைந்தது இரண்டு நூற்றாண்டுகாலம் முற்பட்டவர் என்பதையும் ஏற்றுக்கொண்டால், பௌதாயனர் காலம் பற்றிய என்னுடைய மதிப்பீடு எவ்வாறு மறுக்கப்படும் என்பதைக் காணமுடியவில்லை. ஆனால், பௌதாயனர், அத்துணைப் பழங்காலத்தைச் சேர்ந்தவராயினும், அவர் பெயரால் வழங்கப்படும் சூத்திரங்களுக்கு அப்பழங்காலத்தைக் கொடுக்க இயலாது; ஆபஸ்தம்பரின் சூத்திரங்களைப் போல் அல்லாமல், பௌதாயரின் சூத்திரங்கள், அவரைப் பின்பற்றுவோர்களில், மிகமிகப் பிற்பட்ட காலத்தவரால்

பெரும் அளவில் புதியன புகுத்தலுக்கும் திருத்தங்களுக்கும் ஆளாகிவிட்டதாகத் தெரிகிறது. காரணம்: அவற்றில் விதிக்கப்பட்டுள்ள சில வழிபாட்டு நெறிகள், அவை மிகமிகப் பிற்பட்டன ஆதல் கூடுமோ என்ற ஐயுணர்வை எழுப்புமளவு அத்துணை விரிவாக உள்ளன. வான்கோள்களை, அவை ஆட்சிபுரியும் வார நாட்களின் வரிசையில் குறிப்பிட்டிருப்பது, அச்சூத்திரங்கள், பிற்காலத்தில், வரன்முறையின்றித் திருத்தப்பட்டுள்ளன என்பதைக் காட்டுகிறது.

**வட ஆரியப்பழக்க வழங்கங்களுக்கு எதிரான தென்னாட்டவர் பழக்க வழங்கங்கள்:**

தென்னாட்டுப் பிராமணர்களின் வாழ்க்கைமுறைகளுக்கான விதிகளை வகுக்கும்போது, பௌதாயனர், ஆரிய வர்த்தத்து ஆரியர்களுக்கு, ஒருவகையில் வெறுப்பூட்டுவனவும், தென்னாட்டவர்களுக்கே உரியனவுமாய வழக்கங்களை இயல்பாகவே விவாதிக்கிறார். தென்னிந்தியர்கள், ஆரிய வழிபாட்டு நெறியை ஏற்றுக்கொண்டு, ஆரிய வாழ்க்கை முறைகளுக்குக் கட்டுப்பட்டுவிட்ட பின்னரும், கைவிட்டு விடாது, மேற்கொண்டிருந்த பழைய, தஸ்யூவழக்கங்கள் ஐந்து, பௌதாயனரால் குறிப்பிடப்பட்டுள்ளன. "அவை யாவன: சமயதீக்கை பெறாதவரோடு உடன் இருந்து உண்ணல்; மகளிரோடு இருந்து உண்ணல்; பழைய உணவை உண்ணல்; ஒருவன், தன் தாய்வழி அம்மான் மகளோடும், தந்தையோடு உடன் பிறந்தாள் மகளோடும், காதல் உறவு கொள்ளுதல், ...... கூறிய இவ்வழக்கங்கள்-ஒவ்வொன்றிற்கும், அந்நாட்டு நடைமுறை விதியே, அதிகார உரிமையுடையதாகக் கருதப்பட வேண்டும். [யதநத் அனுபநேன ஸஹ போஜனம்; ஸ்திரியா ஸஹபோஜனம்; பர்யுஷித போஜனம்; மாதுல பித்ருஸ்வஸ்ற்துஹிதிர் கமநம்; இதி...... தத்ர தேசப்ராமாண்யம் எவஸ்யாத்" —Baudhayana Dharma Sutras. 1 :1, 2, 3, 6] வடநாட்டு, வாழ்க்கைச்சட்ட வல்லுநராகிய கௌதமர், உள்நாட்டு வழக்கங்களை, அடிப்படை ஆதாரமாக ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைப் பௌதாயனர்

அறிந்திருந்தார். [Mithyaitaditi Gawtamah. 1 : 1, 2, 7.] அவரால் முடிந்திருந்தால், இப்பழக்க வழக்கங்களைப் பௌதாயனர் அகற்றி இருப்பார் என்பதை இது காட்டுகிறது. ஆனால், நர்மதை ஆற்றுக்குத் தெற்கில் உள்ள ஆரியர்களை, அவர்களின் பழைய பழக்க வழக்கங்களைக் கைவிடத் தூண்டுவதற்கான வலுவற்றவராக அவர் இருந்தார். பண்டைய பழக்க வழக்கங்கள், அத்துணை எளிதில் அழிந்துவிடுவதில்லை. 'உண்மையைக் கூறுவதாயின், அவை என்றுமே அழிவதில்லை. மாறாக, ஆயிரம் ஆயிரம் ஆண்டுவரையும், ஒன்று, இருந்தது இருந்தவாறே, அல்லது சிறிதே திரிந்த நிலையில் இறவாது இடம் பெற்றிருக்கும்.

"பௌதாயன தர்ம சூத்திரங்கள்" [Sacred Text Book of the East. பகுதி : 14] என்ற தம்முடையமொழி பெயர்ப்பு நூலில், திருவாளர் பூலர் (Buhler) அவர்கள், அண்ணன் மகனுக்கும், தங்கை மகளுக்கும் போலும் உடன் பிறந்தார் இருவரின் மக்களுக்கு இடையிலான திருமணமாக, "மாவல பித்ர்ஸ்வரர் துஹித்ற் கமனம" என்ற திருமணத்தைத் தவறான நிலையில் பொருள் கொண்டுள்ளார். இவைபோலும் திருமணங்கள், தென்னிந்தியாவில் முறையானவையே ஆகும். இற்றைய நாளில், தெலுங்கு பிராமணர்களிடையே, உண்மையில், இது கட்டாயமாம்; ஏனைய தென்னிந்திய பிராமணர்களிடையேயும் இதுவே பெரும்பாலான வழக்கமாம். [தெலுங்கு பிராமணரல்லாதாரிடையே, தென்னாட்டுப் பிராமணரிடையே நன்குதெரிந்த வழக்கமாம், ஒருவன் தன் உடன்பிறந்தாள் மகளை மணங்கொள்வது பொதுவான வழக்கமாம். அதனால், பிராமணரல்லாதாரால் பேசப்படும் தெலுங்குக் கிளைமொழியில், "கோடலு" என்ற சொல், உடன்பிறந்தார்மகள் என்றும் பொருள்படும், மனைவி என்றும் பொருள்படும்] உடன் பிறந்தான் மகனுக்கும், உடன் பிறந்தாள் மகளுக்குமிடையேயான திருமணமே, வழக்கமான திருமணமாம்; ஆதலின், அவைபோலும் திருமணம் நிகழாத போது, அவ்வுடன்பிறந்தாள் மக்கள், இழந்த அந்நல்வாய்ப்பினுக்கு ஈடு செய்துகொள்ள முயல்வர். அது, வேறுபிற

சூழ்நிலைகளில், நனிமிகக் கொடிய ஒழுக்கக் கேடோடு கூடிய கயமையாகக் கருதப்படுவதுபோல், கருதப்படுவதில்லை. உடன் பிறந்தான் மகனும் உடன் பிறந்தாள் மகளும், ஒருவரையொருவர் மணந்து கொள்ளா நிலையிலும், சமுதாயப் பெரும்பழிக்கு ஆளாகா நிலையில், ஒழுக்க நலனைப் புண்படுத்தவல்ல, கேலியொடு கூடிய இன்ப விளையாட்டு, அவர்களிடையே பரிமாறிக் கொள்ளப்படுவதும் உண்டு. உடன் பிறந்தார் மக்களிடையேயான திருமண வழக்கத்தில் மற்றொரு விளைவு, தமிழில் "அத்தான்" என்ற ஓரே சொல், தந்தையொடு உடன் பிறந்தாள் மகனையும், மனைவியொடு உடன் பிறந்தவனையும், தமக்கையின் கணவனையும் ஒரு சேரக்குறிப்பதாம்". "பர்யுஷித போஜனம்" என்பது, பழையது உண்பதாம். ஆக்கிய சோற்றை, ஓர் இரவு, நீரில் இட்டுவைத்து உண்பது; உயிர்ச் சத்தும், ஊட்டச்சத்தும், அரைபட்டுப் போகாப் புழுங்கல் அரிசியாயின், அது ஓர் உடல் நலம் காக்கும் நல்ல வழக்கமாம். இவ்வழக்கம், வடநாட்டு ஆரியர்களால், அருவருப்போடு மதிக்கப்பட்டு, புனிதமற்ற செயலாகக் கருதப்பட்டது. ஆனால், ஆரிய எதிர்ப்பு இருந்தாலும், தமிழர்களால், அது விடாது கடைப்பிடிக்கப்பட்டது. ஆனால், வாழ்க்கைச் சட்டம் வகுப்போர், ஏதும் செய்யமாட்டா செயல் இழந்து போனதைப் பர்யுஷித அன்னத்திற்கு அதாவது பழைய உணவிற்குப் பதிலாக உடல் உணர்வுகளுக்கு ஊக்கம் ஊட்டுவனவாய, காபி, சூட்டோடு புதிதாகப் பண்ணப்படும் அரிசி ஆப்பம் ஆகியவற்றை, மாற்றுப் பொருளாக்கித் தரும் நவநாகரீகம் செயல்படுத்தி விட்டது.

**பண்டைய பிராமணர்கள் இறைச்சி உண்ணல் :**

இக்காலத்தைச் சேர்ந்த, தென்னிந்திய பிராமணர்; வட இந்திய பிராமணர்களைப் போலவே இறைச்சி உண்பவர்களாம்; "புலால் உண்ணும் விலங்குகள், பழகிய பறவைகள், பழகிய சேவற்கோழி, மற்றும் பன்றி ஆகியவை உண்ணப்படாதனவாக, ஆடுகள், ஐந்து ஐந்து கால்விரல்களைக்கொண்ட

விலங்குகள் (பஞ்ச பஞ்ச நகஹாற) முள்ளம்பன்றி, உடும்பு, முயல், முள்ளெலி, ஆமை, பிளவுபட்ட குளம்புகளைக் கொண்ட ஐந்து விலங்குகள், (த்விகுரிஹைஹ), "நீல்காய்", புள்ளி இல்லா மான், புள்ளிமான், எருமை, காட்டுப்பன்றி, கால்களால் கிளறித் தின்னும் ஐவகைப் பறவைகள், கௌதாரி பாறைகளில் கூடு கட்டி வாழும் புறா, "கபிஞ்சா", "வார்த்ஹராணஸ", மயில், "கஹஸ்ரதம்ஷ்ட்ரீ", "சிலிசிம" "வர்மி", "ப்ரஹச்சிரஸ்" "மஷகரி", "ரொஹிக" மற்றும் "ராஜீ" போலும் மீன் வகைகள், ஆகிய இவை உண்ணப்படலாம் எனப் பௌதாயனர் கூறுகிறார். இந்நீண்ட பட்டியலோடு, காண்டாமிருகமும், கருப்பு மறிமானும் எதிர்ப்புகளிடையே சேர்க்கப்பட்டன [Baudhayana Dharma Sutras. 1 : 5, 2 : 1 : 8.] ஆபஸ்தம்பர், தின்னக் கூடாத விலங்குகளின் பட்டியல் ஒன்றைத் தருகிறார். ஆனால், இறைச்சி உண்பது பற்றிய அவர் கொள்கைகள், பால்தரும்பசுக்கள், காளைகள் ஆகியனவும் தின்னப்படலாம்எனக்கூறும் தனியான ஒரு சூத்திரத்தைக் கொண்டிருப்பதோடு, மற்ற வகையில், பௌதாயனர் கொள்கையோடு ஒத்துள்ளன. [Apasthamba Dharma Sutras 1, 3, 17, 30] "வாஜகனேயர்" அவர்கள், "காளை மாட்டின் இறைச்சி படையலுக்கு உரியது" எனப் பலர் அறிய வெளிப்படுத்திய கருத்தைத், தாம் கூறியதோடு இணைத்துக் கொள்வது பொருந்தும் என ஆபஸ்தம்பாயனர் கருதினார் என்பதிலிருந்து, மாட்டிறைச்சி உண்பதற்கு எதிரான, உணர்வு பூர்வக் கருத்து தென்னாட்டில், தானாகவே கைவிடப்பட்டது என்பதை அறிந்துகொள்ளலாம். [யாஞ்ஞவல்கியர், "பசு, காளைகளின் இறைச்சி முதிரா இளமையவாயின், அவற்றை உண்போரில் நானும் ஒருவன் (Sat. Brah. 3 ; 1, 2, 21) எனக் கூறுகிறார்]. ஆபஸ்தம்பர் கூற்றுப்படி, இறந்த முன்னோர்களை மகிழ்விக்கவும், செய்வோர்க்குப் பல்வேறு வகையான பலன்களை ஈட்டுவதற்கும், ஸ்ரார்த்தங்கள் ஒவ்வொரு மாதத்திலும், பிற்பகுதியில் செய்யப்படுதல் வேண்டும். அவர்கள் மனநிறைவு கொள்ளும் கால அளவு, படைக்கும் இறைச்சியின் வகைக்கேற்ப

அமையும். அவ்வகையில், மாட்டிறைச்சி, அவர்களை ஓராண்டு காலத்திற்கு மன நிறைவு கொள்ளச் செய்யும்; எருமை இறைச்சி, மேலும் நீண்ட காலத்திற்கும், காண்டா மிருகத்தின் இறைச்சி, அவற்றினும் நீண்ட காலத்திற்கும் மன நிறைவினைத் தரும். "சதபலி" என்ற மீன் வகையும், "வார்த்ரானஸ்" எனப்படும் நாரை இனமும் நீண்ட காலத்திற்கு மனநிறைவைத் தரும். [Yajanavalkia's Sat. Brah. 2:7, 16:4, 7 26-28. 17: 1-3] தென்இந்திய பிராமணர்கள், எப்போது, ஏன், இறைச்சி உண்ணலைக் கைவிட்டனர் என்பது ஒரு சுவையூட்டும் நிகழ்ச்சியாம். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராக நான் கருதும் தமிழ்ப்புலவர் கபிலர், "புலால் நாறும் கொழுத்த கறி இறைச்சித் துண்டங்களை, பூமணம் நாறும் புகை எழத் தீ கொளுத்திச் சமைத்த ஊனையும், துவையலையும், கறியையும், சோற்றையும் உண்டு வருந்தும் செயல் அல்லது, வேறு செயல் அறியாவாகலின், பாடுவார் கைகள் மென்மையுடையவாயின" எனக்கூறி யுள்ளார். பிறிதோரிடத்தில், தம்பாடற்காம் பரிசிற் பொருளாக, "மது இருந்த சாடி வாய்திறப்பவும், ஆட்டுக்கிடாய் வீழ்ப்பவும், சமைக்கப்பட்டுக் குவிந்து கிடக்கும் கொழுவிய துவையலையும், ஊனையும் உடைய சோற்றையுமே" விரும்பியுள்ளார்.

"புலவு நாற்றத்த பைந்தடி
பூ நாற்றத்த புகைகொளீஇ, ஊன்துவை
கறி சோறு உண்டு வருந்து தொழில் அல்லது
பிறிது தொழில் அறியா வாகலின், நன்றும்
மெல்லிய பெரும! ... ... ...
... ... பாடுநர் கையே,".

"மட்டுவாய் திறப்பவும், மை விடை வீழ்ப்பவும்,
அட்டு ஆன்று ஆனாக் கொழுந்துவை ஊன் சோறும்
பெட்டாங்கு" — (புறம்: 14 : 12–19; 113–1-3)

கி. பி. ஐந்து, ஆறாம் நூற்றாண்டுகளில், விஷ்ணு, சிவன் மீதான பக்திப் பெருவெள்ளம், தமிழ்நாட்டில் பெருக்

கெடுத்து ஓடிற்று. இவ்வழிபாட்டு நெறிகள், சமணர் வழிபாட்டு நெறியோடு போரிட வேண்டியதாயிற்று. சமணத் துறவிகளாம் ஆசிரியர்கள்தாம், சமய உணர்வு வாய்க்கப் பெறாத் தம் மாணவர்களுக்கு, இறைச்சி உணவினைக் கைவிடுமாறு முதன்முதலில் வற்புறுத்தினர். வைஷ்ணவ, சைவ வழிபாட்டு நெறிகள், இறைச்சி உணவு உண்டலைக் கைவிடாது போனால், சமணவழிபாட்டு நெறிக்கு எதிராக இருந்து, வெற்றி பெறல் இயலாது. ஆகவே, இறைச்சி உண்ணல், கள் உண்ணல் ஆகியவற்றிலிருந்து ஒதுங்கி நிற்பதைத், தங்களின் அடிப்படைத் தத்துவங்களில் ஒன்றாக மேற்கொண்டனர். தென் இந்தியாவில் வைஷ்ணவ, சைவ ஆகமங்களின் முதல் ஆசிரியர்களாக விளங்கிய பிராமணர்கள், இறைச்சி உணவினைக் கைவிட்டமைக்கு இதுவே காரணம் என யூகிக்கின்றேன்.

**வருணங்கள் :**

தென்னிந்திய சூத்ரகாரர்கள் வகுத்த வாழ்க்கைச் சட்டங்களெல்லாம், முக்கியமாக, அக்கால அளவில், தமிழ் நாட்டில் மிகச் சிலராகவும், கோதாவரிப் பள்ளத்தாக்கின் தலைப்பில், மிகப் பலராகவும் வாழ்ந்திருந்த பிராமணர்களைக் குறித்தனவே. அச் சூத்திரங்கள், நான்கு பெருஞ் சாதிகளையும், எண்ணற்ற கலப்புச் சாதிகளையும் குறித்துப் பேசுகின்றன என்றாலும், அவை கூறும் சட்டங்களில், ஏனையோரிலும், பிராமணர் குறித்தே, அவை தாமும் அக்கறை கொண்டுள்ளன ஆதலின், அவை கூறும் அச்சாதிக் கூறுபாடுகள், வெறும் தத்துவ அளவினவே ஆம். ஆரியர்களின் நால்ஜாதி அமைப்பு (சாதுர் வர்ண்யம்) வேதகாலத்தில், ஆரிய வர்த்தத்தில் மட்டுமே நடைமுறையில் இருந்த ஒன்று. மகாபாரதப் போருக்குப் பின்னர், அர்ஜுனன் எதிர்பார்த்தது போல், வட இந்தியாவில் பெரும் சாதிக் குழப்பம் (வர்ணசங்கரம்) நிலைகொண்டுவிட்டது. [பகவத் கீதை : 1. 41-43] தென் இந்தியாவில் சாதுர்வர்ணயம், எக்காலத்தும் கொள்கை அளவில் இருந்ததே அல்லது, என்றும்

நடைமுறையில் இருந்தது இல்லை. காரணம் : கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு வரையும் பிராமணர்களின் வாழ்க்கை முறை, பெரும்பாலான தமிழ் மக்களின் வாழ்க்கை முறையிலிருந்து முழுமையாக வேறுபட்டே இருந்தது. ஆரியச் சமய நெறிகள், தமிழ் நாட்டில் பரவுவதற்கு நெடுங்காலத்திற்கு முன்னர், தமிழ்நாட்டு மக்கள் கற்கால அளவில், பாலை, மலை, கடல், காடு, ஆறு ஆகிய நிலங்களில், அவர்கள் மேற் கொண்ட வாழ்க்கை நிலைக்கு ஏற்ப, முறையே, நாடோடும் மறவர், வேட்டுவர், மீனவர், ஆயர், உழவர் என ஐவகை யினராகப் பிரிக்கப்பட்டிருந்தனர். இப்பழங்குடியினர் ஐவரும், ஆரியப் பழக்கவழக்கங்கள் பண்பாடுகளிலிருந்து, பல நிலைகளினும் வேறுபட்ட, தங்களுக்கே உரிய பழக்கவழக்கங்களையும் பண்பாடுகளையும் வளர்த்துக் கொண்டனர். ஆரிய வாழ்க்கை நெறிகள், தமிழர் வாழ்க்கை நெறிகளைப் பாதிக்க இயலவில்லை. ஆகவே, தமிழரின், அம்மண்ணுக்கே உரிய நாகரீகப் பெருவெள்ளமும், வந்து புகுந்த ஆரிய நாகரீகச் சிற்றருவியும், யமுனையும், கங்கை யும், பிரயாகை தொடங்கி, பலகாவதம் இரண்டின் வெள்ள மும், ஒன்றோடொன்று கலக்கப் பெறாமலே, ஓடி வருவது போல், அடுத்தடுத்து ஓடுவவாயின, நமக்கு இப்போது கிடைத்துள்ள தமிழ்ப் பாக்களில், நனிமிகப் பழைய பாக்கள், பலநூறு ஆண்டுக் காலம் வரையும், தமிழ்ப் பிராமணர்கள், தமிழரின் தேசீயப் பெருவாழ்வாம், வெள்ளப் பெருக்கி லிருந்து பெருந்தொலைவு ஒதுங்கியே வாழ்ந்துவந்தனர்; தமிழ்ப்பாக்களின் போக்கை ஆட்கொண்டிலர் என்பதை உணர்த்துகின்றன.

**பாணினியும், தென் இந்தியாவும் :**

மகாபாரதப் போர் முடிவிற்கும், நந்த அரசுஇனம் ஆட்சியமைப்பிற்கும் இடைப்பட்ட காலத்தில் குரு - பாஞ் சாலம், மகதம், அவந்தி மற்றும் பிற வட இந்திய நாடு களில், அரச இனங்கள், வண்ணம்மாற்றிக் காட்டும் கண்காட்சி போல், மாறிமாறி ஆட்சி ஏறிய நிகழ்ச்சியில்

தமிழரசர் பங்கு சிறிதே அல்லது அறவே இல்லை எனலாம். ஆகவே, பாணினி போலும், முதலாம் ஆயிரத்தாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த, வடஇந்திய சமஸ்கிருத நூலாசிரியர்கள், தென்னாட்டவரை, அறவே குறிப்பிடவில்லை. நான் எண்ணுவதுபோல், கி. மு. ஏழாம் நூற்றாண்டில் சிறப்புற்று விளங்கிய பாணினி, "அஷ்மகம்" ஒன்றுதவிர்த்து, நர்மதை ஆற்றுக்குத் தெற்கில் இருந்த எந்த ஒரு நாட்டையும் குறிப்பிட்டாரல்லர்.

இதிலிருந்து, திருவாளர் டி.ஆர். பந்தர்க்கார் அவர்கள் தென்னிந்திய நாடுகளின் பெயர்களே பாணினிக்குத் தெரியாது என உய்த்துணர்கிறார். "அஷ்டாத்தியாயி"யைக் கற்று, அறிவார்ந்த ஆசிரியன் எவனும், பாணினி, ஒரு பொருப் பற்ற, அல்லது ஏதும் அறியாத இலக்கண ஆசிரியன்ஆவன் எனக் கூறுமளவு துணிவு பெற்றவனாக மாட்டான். ஆனால் நாம் பெற்றிருப்பது ஒரு சொல்அன்று. பாண்டியா, சோழா, கேரளா என்ற மூன்று சொற்கள். ஆழமாகவும், முழுமையாகவும் ஆய்ந்து காணும் இலக்கண ஆசிரியன் எவனும், அச் சொற்களை அவன் அறிந்திருந்தால், தவறாமல் செய்திருக்க வேண்டிய, அச் சொற்களின் அமைப்பு பற்றிய விளக்கம் பாணினியால் அளிக்கப்படவில்லை. ஆகவே, தென்னிந்திய நாடுகளின் பெயர்கள் பாணினிக்குத் தெரிந்திருக்கவில்லை. அல்லது, வேறு வகையில் கூறுவதாயின், கி. மு. ஏழாம் நூற்றாண்டில் ஆரியர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை என்பது ஒன்றே முறையான முடிவு ஆகும்" எனக் கூறுகிறார் பந்தர்க்கார். [Carmichael Lectures ; 1918. Page : 4-7] இக்காரணகாரியங்களின் பொருத்தத்தை என்னால் ஏற்றுப் பாராட்ட இயலாமைக்கு வருந்துகின்றேன். பாணினி, அச் சொற்களை அறிந்திருக்க முடியும் ; ஆனால், அவற்றைச் சமஸ்கிருதச் சொற்களாக மதித்திருக்க முடியாது. (உண்மையில் அவை தமிழ்ச் சொற்கள்). நாம், இப்போது பஞ்சாப் என்றும், ஆப்கானிஸ்தான் என்றும் பெயரிட்டு அழைப்பனவும், அவற்றிற்குத் தெற்கில் உள்ள மேலும் சிலவுமான, அவர் நேரிடையாகத் தெரிந்திருந்த அண்டை

மாவட்டங்களில் உள்ள இடங்கள், ஆறுகளின் பெயர்களை அவர் குறிப்பிட்டு ஆய்வு செய்திருப்பது நடைபெற்றுளது. இவ்வுண்மையை அடிப்படையாகக் கொண்டு, அவருடைய அஷ்டாத்தியாயியை, அவருக்குத் தெரிந்திருந்த இந்திய நிலப்பரப்பில், முழுமையான நில இயல் நூலாக மதிப்பது சரியாகாது. தம்முடைய இலக்கண நூலில் குறிப்பிடாத நாடுகளின் பெயர்கள் அவருக்குத் தெரியாது என்று கூறு வதும், மேலும் ஒருபடி சென்று அவர் காலத்து ஆரியர்கள், அப்பெயர்களை அறிந்திருக்கவில்லை என நிலநாட்டுவதும், இவ் வாதம் குறித்து ஏதும் பேசாமல் இருப்பது விடுத்து அதைப் பெரும் நகைப்பிற்குரிய ஒன்றாகத் தள்ளிவிடு வனவாம்.

["இந்தியாவின் தனிமிகச் சிறப்பியல்பு வாய்ந்த மரமாம் ஆல், ரிக் வேதத்தில் குறிப்பிடப்படவில்லை. ஆகவே, ரிக் வேதப்பாராயணப் பாடல்கள் பாடப்பெற்றபோது, ஆல் போலும் ஒருமரம் இந்தியாவில் இல்லை என ஒருவன் மிகவும் ஆணித்தரமாக வாதிடவும் கூடும்" எனக் கூறுவதன் மூலம், இவ்வாதத்தை எள்ளி நகையாடியுள்ளார் திருவாளர் பர்கிதர் அவர்கள் : (Pargiter's Ancient Indian Historical Tradition : Page : 125). "அது, ஆல் குறித்தும் உப்பு குறித்தும், இன்றைய ஆய்வாளர் முடிவுப்படி, ஆரியர்கள் சென்று தங்கியிருந்த பாரியாத்திரா மலைக்குன்றுகள் (ஆரவல்லி மலைத் தொடர்) குறித்தும் ரிக்வேதம் ஊமையாகவே இருப்பதை ஒருவன் கருத்தில் கொண்டவழி, விந்தியமலை, மற்றும் பிற நிலஇயல் கூறுகள் குறித்து அவை ஏதும் கூறா திருப்பது, அது, அவற்றை ரிக்வேதம் அறிந்திலது என்பதை உணர்த்துவதாகாது", என்று, மேலும் அவர் கூறியுள்ளார். (Pargister's Ancient Indian Historical Traditions : Page : 299) இருவரில், ஒருவர், பெரும்பாலும், பாணினியின் சம காலத்தவரும், பிறிதொருவர், அவர் காலத்திற்கு முற்பட்ட காலத்தில் சிறப்புற வாழ்ந்தவரும் ஆகிய பௌதாயனரும், ஆபஸ்தம்பரும், தென்னிந்தியாவில் வாழ்ந்து, வாழ்க்கைச் சட்ட திட்டங்களை வரைந்தனர். அவர்கள், ஆரியர்கள்

தாம் உறுதியாக; மேலும், பாணினி, எடுத்துக்காட்டாகக் காட்டவல்ல பெருமை சார்ந்த, முழுமையான பல்பொருள் அறிவு நிரம்பியவராயின், தங்களுடைய வார்த்திகத்திலும், மகாபாஷ்யத்திலும், பாணினியின் இலக்கணக் கொள்கை களை, மேலும் விரிவுபடுத்த வேண்டிய தேவை, முறையே காத்தியாயனர்க்கும், பதஞ்சலிக்கும் நேர்ந்திருக்காது.

ஜாதகா கட்டுக்கதைகளும் தென் இந்தியாவும்:

பிற்காலத்தில் கௌதம புத்திரராக உயர்ந்துவிட்ட போதி சத்தரின் எண்ணற்ற பிறப்புகள் குறித்த கட்டுக்கதை களின் தொகுப்பாகிய ஜாதகா கட்டுக்கதைகள் என்ற நூல், வட இந்தியரிடையே, ஐந்தாம் நூற்றாண்டிலும் அதற்கு முந்திய நூற்றாண்டுகளிலும் வழக்கில் இருந்த, தர்மவிரோத பௌத்த வழிபாட்டு நெறியின் நாட்டுப்புறக் கட்டுக்கதை களின் ஆவணம் ஆகும். இக்கதைகள், கி. மு. நான்காம் நூற்றாண்டு அளவில் எழுதப்பட்டன. ஆனால், அவை, புத்தர் காலத்திற்கு நெடுங்காலந்திற்கு முன்பிருந்தே, நாட்டுப் புறக் கட்டுக்கதைகளாக இருந்திருக்க வேண்டும். அக்கதை களில் ஒரு சில, வடக்கிற்கும் தெற்கிற்கும் இடையிலான போக்குவரத்து, அக்காலத்திற்கு முன்னரும் பின்னரும் போலவே, நெருக்கமாக இருந்தது ன்பதை உணர்த்து கின்றன. அக்கதைகள், தம் இனத்தைத் தாமே கொன்று தின்னுபவராக நம்பப்படும் பழங்குடியினர் என்றும் பெண் பூதங்கள் என்றும் அழைக்கப்படும் ''யக்கினீஸ்' கள் ''ஸ்ரிஸவத்து'' நாரில் வாழும் ''தம்பபண்ணி'' தீபத்தோடு (இலங்கை) நடைபெற்ற வணிகர்களின் கடற் பிரயாணங்கள் பற்றிப் பேசுகின்றன. அவ்விடத்திற்கு அண்மையில் வணிகர் களின் கலங்கள் உடைந்துவிடும்போது, யக்கினீஸ் என்ற அவர்கள், அவ்வணிகர்களுக்கு உணவும், மதுவும் அளித்து அவரைக் காத்து மணந்துகொள்வதும் செய்து, இறுதியில் அவர்களைத் தின்றுவிடுவதும் செய்வர். இந்த யக்கினீக்கள், இரைதேடி, கல்யாணி ஆறு முதல் நாகதீபம் வரை கடற்கரை யில் அலைந்து திரிவர். [Valahassa Jataka No. 196.

நாகதீபம் என்பது, ஈழம், மலபார் கடற்கரைகளைக் குறிக்க வழங்கப்படும்] அத்தீவு யக்கினிக்களால் இலங்கையின் நெருக்கமாக அகப்புடுத்தப்பட்டிருந்தது. பழங்குடியினர் பற்றிய பழைய ராமாயணக்கட்டுக் கதைகளின் நினைவுச் சின்னம் இவை என்ற உண்மை ஒருபால் இருக்க, ஒருபிரிவு மக்கள், இலங்கைக்குப் பயணம் செய்து, ஆங்கு சந்நியாசிகள் ஆயினர். [Hatripala Jataka. 509: Mugapakka Jataka. 538] சிறிய வில்லாளனாகப் பிறந்த புத்தர்தாமும், தக்கசீலத்தில் வேதங்களைக் கற்றுத் தம் கல்வியை நிறைவு செய்துகொண்டு, வாழ்க்கை அனுபவங்களைப் பெற ஆந்திர நாட்டிற்குச் சென்றார். [Bhima Sena Jataka. 80] அவர் ஆங்குப் பெற்ற அனுபவம் குறித்து நாம் பொருட்படுத்த வில்லை; அவருடைய பிறவிகளில் பிறிது ஒன்றில், "சேரி" என்ற நாட்டில் அவர், ஒரு மண்பாண்ட வணிகர்; அவர் "சேரிவன்" என அழைக்கப்பட்டார். இச் "சேரி", பெரும் பாலும் சேர நாடு ஆம். விலை கூவி விற்கும் வணிகனாக, ஊர் ஊராகச் செல்லும் அவர் பயணத்தில், அவர் "தெலவாஹ" ஆற்றைக் கடந்து "அந்தபுராவை" அடைந் தார். அந்த அதாவது ஆந்திரநாடு, சேர நாட்டிலிருந்து வெகுதொலைவில் இல்லை. [சேரிவாண்ய ஜாடகா எண் : 3]

போதிசத்தரின் பிறிதொரு அவதாரத்தில், அவர் பிராமண "மகாகால"ரின் மகன் "அகித்தி" ஆகப் பிறந்தார். அவர் துறவியாக மாறி உடன் பிறந்தவளான "யசவதீ" என்பாளுடன் பெனாரஸிலிருந்து பத்துக்கல் தொலைவில் உள்ள ஓரிடத்திற்குப் போய்விட்டார். ஆனால், அவர்மீது அன்புகாட்டுவாரின் அன்புத் தொல்லைகளிலிருந்து விடுபட, அவ்விடத்தை அவராகவே விடுத்து, "தமிலா" நாட்டை அடைந்து, காவேர பட்டணத்திற்கு அருகில் இருந்த, ஒரு மலர்த்தோட்டத்தில் (உய்யானம்) தங்கியிருந்தார். இதிலிருந்து இந் நாட்டுப்புறக்கதைகள் வழக்கில் இருந்த போது, காவேரிப்பட்டணம், சோழர்களின் தலைநகர்களில் ஒன்று (அக்கதையில் சோழர்கள் பெயர்சுட்டிக் கூறப்பட வில்லை என்றாலும்) என்பதும், வட இந்தியக் கிளைமொழி

களில், அது, "காவெரபட்டன்"மாக மாறி வழக்கப்பட்டது என்பதும், ஆற்றுப் பெண்தெய்வத்தின் தந்தை பெயர் "கவெரரிஷி" என்றும், கட்டுக்கதை பெரும்பாலும் வழக்கத்தில் இருந்தது என்பதும் உய்த்துணரப்படும். ஈண்டும், "அகித்தி", அன்புசெலுத்துவோரால், அன்புத்தொல்லைக்கு உள்ளாக்கப்பட்டார். அதனால், "அஹிதீப" என அழைக்கப்படுவதும், பெரும்பாலும், "நாகதீபம்" போன்றதே ஆனதும், "தம்பபண்ணி" (ஈழம்) என்ற தீவிற்கு அண்மையில் இருப்பதும், அதனால், நான், முன்னரே கூறியது போல், நாகர்களின் நாடாம் மலபார்க் கடற்கரையான "காரதீபம்" என்ற இடத்திற்குச் சென்றுவிட்டார். அங்கு, "அகித்தி", அதாவது போதிசத்தர் நிறைபேரறிவு பெற்றுவிட்டார். "அகித்தி", ஒருசிலரால், நிலபேறுடைய காரணம் ஏதும் இன்றி, அகஸ்தியராகக் கருதப்பட்டார்.

**ஸீஹபாஹு:**

ஜாதகா கதைகளில் காணப்படும், தென்னிந்தியா பற்றிய இவைபோலும் குறிப்புகள், கி. மு. முதல் ஆயிரத்தாம் ஆண்டின் மத்தியில், தென் இந்தியா, வட இந்தியாவிலிருந்து துண்டிக்கப்பட்டுவிடவில்லை; இந்தியாவின் அவ்விரு பிரிவுகளுக்கும் இடையில் அரசியல் அல்லாத பிற உறவுகள், எப்போதும் போலவே சுறுசுறுப்பாகவே இருந்து வந்தன என்பதை உறுதி செய்கின்றன. புத்தர் இறந்த, பௌத்தர் சொல் நடையில் கூறுதாயின், உலகப் பேரிறைவன் "பரினிபான" படுக்கையில் படுத்துவிட்ட அன்று ["பரினிபான பஞ்சம்ஹி நிபன்னெ லொகநாயகெ - மகாவம்சம் : 7 : 1] சிங்கப்படை கொண்ட ஸீஹபாஹுவின் மகன் விஜயன், தன்னைப் பின்பற்றுவோர் ஏழுநூறு பேருடன், "லாள" ("ராத" - கிழக்குவங்காளம்) நாட்டிலிருந்து அவனுடைய தீயொழுக்கத்திற்காக, அவனுடைய தந்தையால் நாடுகடத்தப்பட்டு, சிலோனில் அடியிட்டான். கலத்தில் ஏற்றிக் கடலில் விடப்பட்டான். அவன் கடற்பயணம் பற்றிய நிலவியல், வழக்கம்போல் நம்புதற்கு

இயலாத ஒன்றாம். அவன் வட பம்பாயைச் சேர்ந்த இன்றைய ஸோபராவாம் '‘ஸுப்பரகாவில்’' கரை இறங்கினான். சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர், பெரிபுளூஸ் என்பவரால், ஸோபட்மா என்பது கீழ்க்கடலைச் சேர்ந்த துறைமுகமாகக் குறிப்பிடப்பட்டுளது. ஆதலின், இது பெரும்பாலும் ஒரு தவறு ஆகும். வங்காளக் கடற்கரையிலிருந்து புறப்பட்டுச் சிலோனுக்குச் செல்ல வேண்டிய ஒரு கலம், ஸோபாரவுக்குச் செல்வது இயலாத ஒன்று. அங்கிருந்து, அவன் மீண்டும் கலம் ஏறிச், சிலோனுக்கு வடக்கில் இருந்த தம்பபண்ணியில் கரை இறங்கினான். ஆங்கு வாழ்ந்திருந்த மக்களாம் ‘யக்கர்’களை (யக்ஷ) வென்று அழித்து, அந் நாட்டின் அரசன் ஆகிவிட்டான். தனக்கும், தன் உடன் வந்தவர்க்கும் மனைவியர் வேண்டி, பண்டு அரசன் மகளை இசைவிப்பதற்காகவும், ஏனையோர்க்கும் மனைவியர்களைப் பெறும் பொருட்டும், பரிசில் பொருள்களோடு, ஆன்றோர் சிலரை தக்கின (தென் இந்தியா) நாட்டில் உள்ள மதுரைக்கு அனுப்பிவைத்தான். [மதுரை அரசன ‘பண்டவ’ என அழைக்கப்பட்டான். பதஞ்சலி, பாண்டு என்ற சொல்லிலிருந்து பாண்டிய என்ற சொல்லைத் தோற்றுவிப்பது போல, பாலி மொழி எழுத்தாளர்கள், ‘‘பாண்டியா’’ என்ற சொல்லை, அவர்களுக்கு நன்கு தெரிந்த ‘‘பாண்டவா’’ என்ற சொல்லாகக் கருதுவர்] எண்ணற்ற தமிழ்ப் பெண்கள், அணிகளால் ஒப்பனை செய்யப்பெற்று, யானைகளும், குதிரைகளும், பொதி நிறை வண்டிகளும் பின்தொடர சிலோன் சென்றனர். இந்தக் கதை, வட இந்தியாவுக்கும் தென் இந்தியாவுக்கும் இடையிலான மிகப்பழைய போக்குவரத்து, தொடர்ந்து இருந்தமைக்குச் சான்று பகர்கிறது. இது பாண்டியர்களும், வடநாட்டவரும் ஒருவருக்கொருவர் அறிமுகம் ஆகா அந்நியர் அல்லர், மாறாக வழக்கமான நிகழ்ச்சிபோல, பாண்டியர் மகள் ஒருத்தி, விஜயனுடைய கைப்பிடிக்க, ஆணையிட்டுப் பெறுமளவு ஒருவருக்கு ஒருவர் அறிமுகமானவர் என்பதையும் உறுதி செய்கிறது. அர்ச்சுனன், சித்ராங்கதாவையும் மணந்துகொண்டு, நாகர் மகள்

உலூபியோடு, தற்காலிக உறவுக்கும் வழி செய்திருந்தது போலவே, விஜயனும், இடையில் கைவிடக்கூடிய ஒரு திருமணத்தை ஒரு யக்கினியாம் ''குவண்ணா'' என்பவளோடு அவன் கொண்ட உறவு, பாண்டிய அரசிளங் குமரியோடு கொண்ட திருமண உறவு போன்றதன்று. மாறாக, புதியாள் ஒருத்தியோடு, மேற்கொண்ட நிலையிலாக் காதல் திருவிளையாட்டே.

> ததொ ஸோ விஜயொ ராஜ பண்டுராஜஸ்ஸ துஹிதரம்
> மஹதா பரிஹாரெண மஹேஸித்தே ப்ஹிஸேசயி
>
> —மகாவம்ஸோ : 7 : 72.

## அதிகாரம் : X

# வெளிநாட்டு வாணிகம்: கி. மு. 1000 – 500

**பாலஸ்தீனமும் இந்தியாவும் :**

கி. மு. பத்தாம் நூற்றாண்டில், ஷீபாவின் அரசி (Queen of Sheba) சாலமன் அரசனுக்கு (King of Solomon) "மிளகு போலும், உணவுக்கு மணமூட்டும் பொருள்களின் மிகப்பெரிய குவியலையும், கிடைத்தற்கரிய மதிப்பு மிக்க ரத்தினக் கற்களையும் கொடுத்தாள். ஷீபா அரசி, சாலமன் அரசனுக்குக் கொடுத்த, மணப்பொருளின் இக்குவியல் போலும் ஒரு மணப்பொருள்குவியல் மீண்டும் வரவேயில்லை." [I Kings. x : 10] அந்நாட்களில், இப்பண்டங்கள், இந்தியாவிலிருந்துதான் மேற்கு நாடுகளுக்குச் சென்றன. இம் மணப் பொருள்களும் நவரத்தினங்களும், அரசியின் கைகளை அடைவதற்கு முன்னர், அவை இந்தியப் படகுகளில், ஆப்பிரிக்கக் கடற்கரையை அடைந்தன என உறுதியாகக் கூறலாம். "ஒப்ஹியரிலிருந்து ஒப்ஹியர் (Ophir) பொன்னை ஏற்றி வந்த ஹிராம் (Hiram) கப்பல் படையும், அங்கிருந்து ஏராளமான அகில் மரங்களையும், நவரத்தினங்களையும் கொண்டுவந்தது. அரசன், அகில் மரம் கொண்டு, இறைவன் திருக்கோயில், அரசன் பெருங்கோயில்களுக்கான தூண்களையும், இசைவாணர்களுக்கு வில்யாழ், விரல் தெறித்து இசையெழுப்பும் நரப்புக் கருவிகளைச் செய்தான். அதன்பின்னர், அத்துணைப் பெருமளவிலான அகில் மரங்கள் இந்நாள் வரை வரவில்லை. காணப்படவும் இல்லை," [I Kings : x:11-12] இந்த அகில் மரங்கள், சந்தன மரங்களாக அடையாளம் காணப்பட்டன. அல்முக் (Almug) என்ற அதன் ஆங்கிலப் பெயர், சமஸ்கிருத "வலகு" என்பதன் திரிபாகக் கருதப் பட்டது. தென் இந்தியாவின், சிறப்பாக, மைசூர்

கோயமுத்தூர், சேலம் மாவட்டங்களின் உள்நாட்டுப் பொருளாம் இச் சந்தன மரம், குஜராத் மாநிலத் துறைமுகங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு, அங்கிருந்து, அரேபியா வழியாகச் சிரியாவுக்கு ஏற்றி அனுப்பப்பட்டிருக்க வேண்டும். ஒபீரிடமிருந்து (Ophir) எடுத்துக்கொண்ட பொன்னில், முழுமையும் இந்திய நாட்டுப் பொன்தானா, அல்லது ஒரு பகுதிதானா என்பது ஒபீர் பற்றிய வாதத்தின் முடிவாம், விளக்கத்தைப் பொறுத்துளது. ஆனால், சாலமன் மிகப் பெரிய அளவிலான பொன் பெற்றிருந்தமையால், அவனுடைய அப்பொற்களஞ்சியத்தின் ஒரு பகுதி, இந்தியாவிலிருந்து பெறப்பட்டதாதல் கூடும் [1. Kings. x : 14 - 17 and 21] "ஹிராம் (Hiram) கப்பற்படையோடு தார்ஷிஷ் (Tharshish) கப்பற் படையொன்றையும், அரசன் கடலில் பெற்றிருந்தமையால், தார்ஷிஷ் கப்பற்படை மூன்றாண்டுக்கொருமுறை பொன், வெள்ளி, தந்தம், வாலில்லாக் குரங்கு, மயில்களோடு, வந்து சென்றது என மேலும் அறிகிறோம்;" [I Kings. x. 22] "அரசன், தந்தத்தினால் ஒரு பெரிய அரியணை செய்து, அதன் மேற்பரப்பைச் சிறந்த பொன் கொண்டு பூசி மெருகிட்டான்" [1. Kings. x : 18] எபிரேய மொழி "ஹபின்", எகிப்திய மொழி "எபு" ஆகிய இரு சொற்களுமே, சமஸ்கிருத "இப்ஹ" என்ற சொல்லிலிருந்து பிறந்தன வாதலையடுத்துத், தந்தத்தைக் குறிக்கும் "ஷென் ஹபின்" என்ற எபிரேய மொழிச் சொல், யானையின் பல் எனும் பொருள் தருவதான "இப்ஹ தந்த" என்ற சமஸ்கிருதச் சொல்லின் மொழி பெயர்ப்பாகக் கொள்ளப்படுமாதலின், அவ்வாறு வந்த தந்தங்களில் ஒரு பகுதி, இந்தியாவால் கொடுக்கப்பட்டது என்பது உண்மையாதல் கூடும்; ["எல் (el) என்பது, அராபிய மொழியில், சொற்களின் முன் இணைக்கப்படும் இடைச்சொல்லாதலின் "எல்-எபாஸ் (El-ephas) என்ற கிரேக்கச் சொல் "எபு" (ebu) என்பதிலிருந்து பிறந்ததாம்.)] பிற்காலத்தில் நிகழ்ந்தது போலவே, வாலில்லாக்குரங்குகளும், மயில்களும், ஆசைக்கு வளர்க்கும் உயிரினங்களாக, இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டன. எபிரேயமொழி

'கோப்' (Koph) சமஸ்கிருத 'கபி' (Kabi) ஆகும். 'ஏப்' (ape) எனும் சொல், எகிப்தியரால் 'கபு' (Kabu) என்ற வடிவில் கடன் வாங்கப்பட்டது. மயிலைக்குறிக்கும் எபிரேய மொழியின் 'துக்கி' (Thukki), மயில், பேரழகு வாய்ந்த வால் உடையவாதல் கருதி, தமிழில் வால் எனும் பொருளில் வழங்கும் 'தோகை' என்பதன் திரிபாம். எபிரேய மக்கள், இந்தியாவிலிருந்து அவற்றின் பெயர்களோடு பெற்ற பிற பொருள்களாவன: "சடின்" (Sadin) பருத்தி உடைகள்; திராவிடச் "சிந்து" விலிருந்து பிறந்தது. (முன்பும் குறிப்பிடப்பட்டுள்ளது). "கற்பஸ்" (Karpas) பருத்தி. சமஸ்கிருத "கற்பாஸ" (Karpasa) என்பதிலிருந்து பிறந்தது. கடைசியாக, "அஹல்" (ahal), தமிழ் அகில், சமஸ்கிருத "அகரு", கிரேக்க "அகலோச்சம்" (agallochum) ஆங்கிலத்தில், "ஈகல் ஹுட்" (Eagle-Wood) "அலோயெஸ் ஹுட் (aloes-Wood) அல்லது "லின்-அலோயெஸ்" (lign-alloes) [("நறுமணச் செடிகள், காழகில், நிலவாகை ஆகியவற்றாலான தங்கள் எல்லா ஆடைகளும்" என்கிறது "வழிபாட்டுப்பாடல்-" ["All thy garaments of myrrah and aloes and cassia"] Psalun xlv : 8)] பாலஸ்தீனத்திற்குச் சென்ற மற்றொரு இந்திய வணிகப்பண்டம், கருங்காலி. திருவாளர் ஸ்காப் அவர்கள், "நனிமிகப் பழைய, தெளிவான பழைய கட்டளையின் (Old Testament) குறிப்பு, எழெக்கில் (Ezekiel) அதிகாரம் 27; பிரிவு 13ல் வருகிறது: அதில், அது, டயரின் (Tyre) வாணிகப் பண்டங்களுள் ஒன்றாகப் புலப்படுகிறது. "டேடன்" (Dedan) நாட்டு மக்கள், தங்கள் வணிகர்கள் ஆவர்; பல தீவுகள், அவர்களின் வாணிக நிலையங்களாம், தந்தத்தாலும் கருங்காலியாலும் ஆன ஊதுகொம்புகளைப் பாத காணிக்கையாகத், தங்களுக்காக, அவர்கள் கொண்டு வந்தனர்" [The men of Dedan were thy merchants ; many isles were the merchandise of thime hand ; they through three, fora present, horms of ivory and ebony] டேடன் என்பது பர்ஷ்ய வளைகுடாவின் தென் கரையாகும் என, ஆக்ஸ்போர்டு பதிப்பாசிரியர் கூறும்

விளக்கம் சரியானதாயின், மேலே கூறிய இப்பகுதி, கி. மு. ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னர், இந்தியாவிலிருந்து வரும் கருங்காலி மரத்தின் நிலையான வாணிக நிகழ்வைக் குறிப்பிடுகிறது. கருங்காலி, பாரிகாஸாவிலிருந்து (Barygaza) ஒம்மனா (Ommana) அப்லோகஸ் (Apologws) பகுதிகளுக்குக் கடலில் அனுப்பப்பட்டது எனக் கூறும் பெரிபுளூஸ் கூற்றை உறுதி செய்கிறது. [Scoff's Periplus. P. 153] பிற்பட்ட காலத்து ஆவணங்களை அடிப்படையாகக் கொண்டு, குறிப்பிட்ட வாணிகம், பழங்காலத்திலும் இருந்துள்ளது என வாதிடுவதில் உள்ள நியாயத்தின் வலுவை உறுதி செய்வதுமாம்.

**இந்தியாவும் அஸ்ரியாவும் :**

கி. மு. 860 ஆம் ஆண்டைச் சேர்ந்த மூன்றும் ஷால்-மெனெஸர் (Shalmenaser) அவர்களின் ஒற்றைக்கல்லாலான சதுரத் தூபியில், வாலில்லாக் குரங்குகள், இந்திய யானைகளின் உருவங்கள் உள்ளன. "அஸிரியப் பேரரசன், மூன்றாம் திக்லத் பிலேசரின் (Tiglats Pilesar) நிம்நட் (Nimrwd) கல்வெட்டுக்கள், 'அஷுரின் (Ashur) பேரறிவு கண்டு கொண்ட காரணத்தால் எங்கள் இறைவா! கடல் நாட்டு அரசன், யாகினை (Yakin) மெரோடக் பலடன் (Merodach-baladan) எவ்வாறு வெற்றி கொண்டான் என்பதைக் கூறுகிறது. அவன், தன் நாட்டு அளவிறந்த பொன் தூள்கள், பொற்கலங்கள், பொன்னாலான கழுத்தணி, விலையுயர்ந்த ரத்தினக் கற்கள், கடல் படு பொருள் (முத்து), நீர் வளர்பிரம்பு ஒருபால் ஒரு வண்ணமும், ஒருபால் பிறிதொரு வண்ணமுமாக வண்ணம் ஊட்டப்பெற்ற ஆடைகள், எல்லாவகையிலுமான மணம்தரும் உணவுப் பொருள்கள் ஆகியவற்றைத் திறைப் பொருளாகக் கொண்டுவந்து கொடுத்து எவ்வாறு பணிந்து போனான்" என்பதையும் கூறுகிறது. இங்கே எடுத்துக் கூறிய எல்லாமே, அந்நாளைய, இந்திய ஏற்றுமதிப் பொருள்களாம். பாரசீக வளைகுடாத் துறைமுகங்களைப், பர்ஷிய நாட்டிற்குக் கிழக்கில் வெகு தொலைவில் சார்மணியம்,

இமயம் போலும் இடங்களாக ஆக்குவதையும் அவன் செய்தான் [Scoff's Periplus. Page: 160]

கடலின் நுழைவிடத்தில் இடம்பெற்ற 'டைரஸ்' என்ற வாணிக நிலையத்தில், [Ezekil. XVII. 19] பளிச்சிடும் இரும்பு, தரம் தாழ்ந்த லவங்கப்பட்டை, மருந்தாகப் பயன்படும் மணம்தரும் ஒருவகைப்புல் ஆகிய பொருள்கள் இருந்தன. [இந்திய இரும்பைக் காய்ச்சிப் பக்குவப்படுத்துவது குறித்த, கிரேக்க நாட்டுத் தனி ஒப்பந்தம், பிற்காலத்தில் உருவாயிற்று என்கிறது, திருவாளர். வார்மிங்டனின், "இந்தியாவுக்கும், உரோமப் பேரரசுக்குமிடையிலான வாணிகம்" என்ற நூல்: ["Commerce between the Roman Empire and India" By warmington. page : 258] பளிச்சிடும் இந்திய எஃகு, பழைய காலத்தில், பல்வேறு நாடுகளால், போர்வாட்கள் பண்ணுவதற்காக இறக்குமதி செய்யப்பட்டது. இலவங்கப்பட்டையின் பழைய பெயர் "காஸியா" (Cassia) என்பதாம்: நறுமணம் கமழும் ஒரு வகைப் புல்லின் பெயர் "கலமஸ்" (Calamus) என்பதாம்.

நறுமணப் பொருள்கள், ரத்தினக் கற்கள், பொன் ஆகிய பொருட்களைப் போலவே, இப்பொருட்களும் "ஷீபா" (Sheba) அரசியாரின் வணிகர்களால் இந்தியாவிலிருந்து டயரஸுக்கு (Tyrus) எடுத்துச் செல்லப்பட்டன ; [ஏழெகில் : 17 : 22]

கி.மு. 704-681ல் ஆட்சி புரிந்திருந்த சென்னசெரிப் (Sennacherib) என்ற அரசன், நினவே (Nineveh) என்ற நகரை விரிவுபடுத்தி, அதில் தனக்காக ஓர் அரண்மனையைக் கட்டி, ஓர் பெரிய மலர்த் தோட்டத்தையும் எழுப்பி, அத்தோட்டத்தில் ஏனைய மரங்களோடு, இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்த, "ஆட்டுமயிர் விளையும் மரங்களையும்" (250 ஆண்டுகட்டுப் பிறகு, ஹிரோடோடஸ் (Herodotous) அவர்களால் பருத்திச் செடியைக் குறிக்க வழங்கப்பட்ட ஒரு தொடர்) பயிரு இட்டான். [Journal of the Royal Asiatic Society. 1910 Page : 403. Pinches.]

"இந்திய முன்னோர்கள், உயிரினங்களைக் கடல் வழியாகப் பாரசீக வளைகுடாப் பகுதிக்கும், ஆப்பிரிக்க, சீன நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்தனர். [J.R.A.S. 1920. Page. 147] வண்டிகளை ஈர்க்கவும், பொதிகளைச் சுமக்கவும், ஊர்ந்து செல்லவும் பயன்படுத்தப்பட்ட, முதுகில் திமில் உடைய இந்தியக் கால் நடைகள், பர்ஷியா, சிரியா, ஆப்பிரிக்க நாடுகளின், வீட்டுவளர்ப்புக் கால்நடைகளின் ஒரு பகுதியாம் வண்ணம், நிலவழியாக, மேற்குநோக்கிப் பரவியது இயற்கையே. இவ்வகையால், அஸிரியா, மற்றும் அதற்குப் பிற்பட்ட காலக் கலைகளில், அவற்றின் உருவமைப்புகளை நாம் காண்கிறோம்" எனத், திருவாளர் வார்மிங்டன் குறிப்பிடுகிறார். [J.R.A.S. 1910. Page: 149-150] இந்தியர்களால் மேற்குநோக்கி அனுப்பப்பட்ட விலங்குதரு பொருள்களில், சிங்கம், புலி, சிறுத்தைகளின் நேர்த்தியான தோல்களும் இருந்தன என்றும் நாம் நம்பலாம். [J.R.A.S. 1910 Page: 159] குறைந்த அளவான எண்ணெய் உற்பத்தி செய்யப்பட்டு, தேவை மிகுதியாகிவிடுவது இயல்பாகிவிட்ட கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளுக்கு நெய்யும், எள் எண்ணெய்யும் பிற்காலத்தில் அனுப்பப்பட்டன. கி.பி. முதல் ஆண்டைய உண்மை நிலை இது. பழங்காலத்து நிலையும் இதுவாகவே இருந்திருக்கும். [Periplus: page 41]

பிற பண்டங்கள் :-

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டனவற்றுள், நறுஞ்சுவை மண மருந்துப் பொருள்கள், உணவிற்கு மணம் காரம் ஊட்டும் பொருள்கள் ஆகிய இரண்டும், மிகுந்த மதிப்புடைய விளை பொருள்கள். திருவாளர் வார்மிங்டன் கூறுவதுபோல, அரேபியர், இப்பொருள்களைத் தங்கள் தீபகற்பத்தின் ஒரு கரையிலிருந்து மறு கரைக்குக் கொண்டு செல்வது, பல நூற்றாண்டுக்காலம் நடைபெற்றது. பழைய பொயினிஷியன் கப்பல்களில், மிளகே, மிகமுக்கியமான வணிகப் பண்டம். தனிமிகப் பழங்காலத்திலிருந்தே, லவங்

கப்பட்டை, இந்தியக் கப்பல்களில், சோமாலி கடற்கரைக்கு நேரே கொண்டு செல்லப்பட்டு, அங்கிருந்து, அரேபியாவுக்கும், எகிப்துக்கும், சிரியாவுக்கும் கைமாறிற்று, [J.R.A.S. 1910 ; Page : 180-187].

இந்தியாவுக்கும் பழைய எகிப்துக்கும் இடையில், நீலம், மற்றும் பிற வண்ணக் கலவைப் பொருள்களில், நீண்ட கால வாணிகம் இருந்து வந்தது என்பது நன்கு தெரிந்த ஒன்று. [J.R.A.S. 1910 ; Page : 204] கிறிஸ்து ஆண்டுத் தொடக்கத்திற்குப் பின்னர், இந்தியத் துறைமுகங்களிலிருந்து நேராகவோ, அல்லது அரேபிய, எகிப்திய இடைத்தரகர்கள் வழியாகவோ, உரோமானியர் பெற்றுக்கொண்ட வேறுபிற எண்ணற்ற இந்தியப் பண்டங்கள் பற்றிய ஆவணங்கள் நம்மிடையே உள்ளன. இப்பொருள்களின் வணிகப் போக்குவரத்து, மேலும் பழமைவாய்ந்த காலத்திலிருந்தே வழக்காற்றில் இருந்திருக்க வேண்டும். ஆனால், அக்காலத்தைச் சேர்ந்த அகச்சான்று எதுவும் நம்மிடையே இல்லை. இந்திய வாணிகம், அப்பழங்காலத்தில் நடைபெற்றது அரேபியாவுடனும், கிழக்காப்பிரிக்காவுடனுமாம். அது பண்டமாற்று முறையிலேயே நடைபெற்றது. தங்கள் பண்டங்களுக்கு மாற்றுப் பொருள்களாக, இந்தியர்கள், பொன், சாம்பிராணி, குங்கிலியம், நறுமணப் பொருளுக்குப் பயன்படும் பிசின், ஒட்டு மரப்பிசின் ஆகியவற்றைப் பெற்றனர். இந்திய வணிகப் பண்டங்கள், சோமாலிக்கண்ணதான, ஆப்பிரிக்கச் சந்தைகளுக்கும், ஸொகொத்ர (Socotra) தீவுக்கும், அனைத்திலும் மேலாக, அராபிய இந்திய வணிகர்களின் சந்திப்பு இடமாகவும், பிற்காலத்தில், கிரேக்க வணிகர்களும் வந்து சந்திக்கும் இடமாகவும், வளம்மிக்க, செல்வச் சிறப்பு வாய்ந்த இடமாகவும் அமைந்த அராபிய நாட்டு ஏடனுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. திருவாளர் வார்மிங்டன் குறிப்பிடுவதுபோல், சோமாலிச் சந்தைவணிகர்களாம் அராபிய ஆப்பிரிக்க மக்கள், 'ஸ்பீசெஸ்' (Spices) முனையை மையமாகக் கொண்ட, இந்திய, அராபிய, ஆப்பிரிக்கக் கப்பல் போக்குவரத்து மூலம், கேம்பே (Cambay) இந்தியர்களோடு, நெடிது, நீண்ட வணிகப்

போக்குவரத்தினை மேற்கொண்டிருந்தனர். [J. R. A. S. 1910 : Page : 13].

ஏலமும், மற்றும் பிற சீனநாட்டுப் பண்டங்களும் இந்தியக்கப்பல்களில் மேற்காசியாவுக்கும், கிழக்கு ஆப்பிரிக்காவிற்கும் தொடர்ந்து சென்றுகொண்டு இருந்தனவாகவே, இக்காலகட்டத்தில், கொரமண்டல, மலபார் கடற்கரைகள், சீனாவுடன் கொண்டிருந்த வாணிகம், வழக்கற்றுப் போகவில்லை என உறுதியாகக் கூறலாம்.

அதிகாரம் : XI

# வடக்கும் தெற்கும்.
# கி.மு. 500 முதல் கி.மு. 1 வரை

## காத்யாயனரும் பதஞ்சலியும் :

*பாணினியின் ''அஷ்டாத்யாயீ'' குறையுடையது எனக் கண்டு, பாணினியின் விதிமுறைகளுக்குத் துணையாக வாத்திகம் அதாவது உரைவிளக்கம் எழுதிய காத்யாயனர், பாணினிக்குச் சிலநூற்றாண்டுகளுக்குப்பின்னர், பெரும்பாலும் கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்தார். தமிழ் லெக்ஸிகன் துணை ஆசிரியர் திருவாளர். பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார் அவர்கள் தந்த ஒரு குறிப்பின்படி காத்யாயனார், ஒரு தென்னிந்தியர் ஆவர். அக்குறிப்பு பின் வருமாறு; ''பாணினி அவர்களின் அஷ்டாத்யாயின் வார்த்திக ஆசிரியரான வரருசி (காத்யாயனரின் இயற்பெயர்), ஒரு தென்னாட்டவர் என்ற உண்மை, தென்னாட்டவர், வியாகரண பாஷ்யகாரர் ஆகிய பதஞ்சலியின் தந்திர வடிவங்களில் விருப்புடையவராவர் : (பிரியதத்தித தாக்ஷிணாத்யாஹ) சொல்லும் அதன் பொருளும், அவற்றின் தொடர்பும் நிலைபேறுடையவாயின், அச்சொல், அப்போது உலக வழக்கில் உள்ள பொருளில் வழங்கப்படுமாயின், இலக்கண அறிவு, ''லொகவெதைக'' என்பதை ஆள்வதற்குப் பதிலாகத் ''தத்திதப்ரத்யய''த்தைப் பயன் கொண்டு வரருசி, ' லௌசீகெ : வதிகெசு'' என்பதை ஆண்டுள்ளார் எனக் கூறும் மஹாபாஷ்யத்தின் முதல் ஆனிகாவில், அபூர்வதர்மம், தியாகதர்மம் குறித்த சரியான சொற்களை ஆளுவதில் விதிமுறை வகுக்கிறது (சிந்த்ஹே சப்தார்த்ஹ சம்பந்திஹே லொகதொ ரத்ஹப்ரயுக்தெ சப்தப்ரயொகெ சாஸ்த்ரென தர்ம நியமஹ யத்ஹா லௌகிகவைதிகெசு) என்ற அறிவிப்பி*

லிருந்து உண்மையாகிறது. ஒரு சமஸ்கிருத இலக்கண ஆசிரியர் மரபே, தென்னிந்தியாவில் உருவாகிவிட்டது. பாணினி நனிமிகச் சேயதான காந்தார நாட்டில், எழுதிய இலக்கணத்தை அவர்கள் கற்றுத் தெரிந்தனர். அந்நூலின் பொருளுக்கு மேலும் விளக்கம் ஊட்டும் உரைகளை எழுது மளவு தேர்ந்திருந்தனர் என்பதை உறுதி செய்ய இதுவே போதுமானது.

காத்யாயனர், ஒரு தென்னாட்டவராகவே, சமஸ்கிருத இலக்கியங்களில், ''பாண்ட்ய'', ''சொட'', ''கெரள'' என முறையே திரிந்து வழங்கப்படும் ''பாண்டிய'', ''சோழ'', ''சேர'' என்ற சொற்கள், பாணினியால் ஆராயப்படவில்லை என்பதை உணர்ந்து, அவற்றின் சொல் அமைப்பு குறித்து, விதிமுறைகளை வகுக்க முனைந்தார். ''வழிவழி மரபில் வந்தவர் எனும் பொருள் உடையதான் ''அஞ்'' என்ற விகுதி, ஒரு சொல்லின் ஈற்றில் வந்து, அவ்வாறு வருவதால் ஒரு நாட்டினைக்குறிப்பிடும் அதே நிலையில், சத்திரிய இனத்தைச் சேர்ந்த, ஓர் அரசமரபையும் குறிப்பிடும்'' எனக் கூறும் ஒரு விதியினைப் பாணினி அவர்கள் இயற்றினார்கள், [ஜனபத சப்தாத் சத்திரியாத் ''அஞ்'' (அஷ்டாத்யாயீ : 4 : 168)] இவ்விதி, போதுமான பொருள்விளக்கம் உடையதல்லதாகவே, காத்தியாயனர், பல துணைவிதிகளை இணைத்தார்; அவற்றுள் மூன்றாவது விதி, ''சத்திரிய அரச இனங்களையும், நாடுகளையும் ஒருசேர உணர்த்தும் சொற்களைப் பொறுத்த மட்டில், அச்சொற்களை, அவற்றுள் அரசனை உணர்த்தவும் செய்யவேண்டுமாயின், ''மகன்'' என்னும் பொருள் உணர்த்துவதான ஒரு விகுதி இணைக்கப்பட வேண்டும்'' எனக் கூறுகிறது. [சத்திரிய சமான சப்தாஜ் ஜனபதாத்ஸ்ய ராஜ நியபத்யவத்''] அவ்வகையில், பாஞ்சாலர்களின் அரசன் ''பாஞ்சாலஹ்'' எனவரும். இவ்விதியும், பாண்டிய என்ற சொல் தோன்றுவதற்கான விளக்கம் தரவல்லதாகாது. ஆகவே, ''பாண்டு'' என்ற சொல்லைப் பொறுத்தமட்டில், ''ட்யன்'' என்ற விகுதி ஆளப்படும். அவ்வகையில் பெறப் படும் சொல் ''பாண்ட்ய'' என்பதாம் எனக் கூறும் வேறு ஒரு

விதியினைக், காத்யாயனர் வகுத்தார். (பாண்டோர் ட்யன் வக்தவ்யஹ்'' [பதஞ்சலியின் வியாக்கரண மகாபாஷ்யத்தின் திரு. கெயிலார்ன்ஸ் அவர்களின் பதிப்பு : பகுதி: 2. பக்கம்: 269] ''சோட'' மற்றும் வேறு சொற்களின் தோற்றம் குறித்துப், பாணினியின் வேறு ஒரு விதியினை மேற்கொண் டுள்ளார் காத்யாயனர்.

''காம்போஜ என்ற சொல்லுக்குப் பின்னர் ஈற்றுவிகுதி எதுவும் இல்லை'' என்பதே அவ்விதி. இவ்வகையில், ஒரு நாட்டைக்குறிக்கும் ''காம்போஜ'' என்ற சொல்லிலிருந்து, அதன் அரசன் பெயராம் ''காம்போஜஹ்'' என்ற சொல் பெறப்படும். காத்யாயனர், இவ்விதியை, ''காம்போஜ மற்றும் பிற பொற்களுக்கு இணைக்கும் ''லுக்'' என்ற விகுதி ''சோட'' மற்றும் பிற சொல்லாக்கத்திற்கும் பயன்படுத்தப் படும்'' என மேலும் விரிவுபடுத்தினார். [கம்பொஜா திப் யொலுக் வகனம் சொடாத்யர்த்ஹம்''.] இவ்வாத்திகம் (விதி) சோடஹ், கதொஹ், கெரளஹ் என்ற சொற்களின் தோற்றத் திற்கு வழி செய்வதாகப் பதஞ்சலி கூறுகிறார். இவ்வகையில், அரச இனப்பெயர்களைக் குறிக்கும் சோட, கெரள என்ற இவ்விருசொற்களும் அந்நாடுகளைக் குறிக்கும் சொற்களி லிருந்து பெறப்பட்டன. ஆனால், பாண்ட்ய என்ற சொல் மட்டும், ஒரு நாட்டின் பெயராகவும், ஓர் அரச இனத்தின் பெயராகவும் ஒருசேர வழங்கப்பெறும் பாண்டு என்ற சொல்லிலிருந்து பெறப்பட்டது என்ற கருத்துடையவர் காத்யாயனரும், பதஞ்சலியும் எனத் தெரிகிறது.

மதுரை சூழ்ந்த நாட்டிற்கு அரசு வழங்கிய பழங்குடி இனம், ''பாண்டியர்'' என அழைக்கப்பட்டனரே அல்லது ''பாண்டு'' என அழைக்கப்படவில்லையாதலின், இச்சொற் பிறப்பு முறை ஏற்றுக்கொள்ளக்கூடியதன்று. உண்மை இயல்பு இதுவாகவும், இச்சொற்பிறப்பு முறைமீது, பாண்டு என அழைக்கப்படும் வடநாட்டுச் சத்திரிய இனம் ஒன்று தென்னாடு நோக்கிக் குடி பெயர்ந்து, தென்னாட்டிலும்; இலங்கையிலும் பாண்டிய அரசுகளை நிறுவினர் என்ற மிகப்

பெரிய கோட்பாட்டினைக் காட்டிவிட்டார் திருவாளர் டி. ஆர். பந்தர்க்கார் அவர்கள். [Carmichal Lectures ; 1918 Page : 9-13)].

காத்யாயனரோ, பதஞ்சலியோ, பாண்டு என்ற சொல், ஒரு வட நாட்டு அரச இனத்தின் பெயர் என்று கூறவில்லை. அவர்களுடைய தேவைக்குப், பாண்டு என்ற அச்சொல், ஆளும் ஓர் அரச இனம், ஒரு நாடு இவற்றைக் குறிப்பதாதலே போதும். ஆளும் அரசர்கள் அனைவருமே சத்திரியர்களாகக் கருதப்பட்டனர் ஆதலின், பாலி மொழியில் "பண்டு" என வரும் "பாண்டு" என்ற சொல்லை, ஒரு சத்திரிய இனத்தைக் குறிக்கும் சொல்லாகக் கொண்டதில் பதஞ்சலி பெரியதொரு பிழையினைச் செய்துவிடவில்லை. ஆனால், அதையே அடிப்படையாகக் கொண்டு, தமிழ் இனம் அல்லாத ஒரு வெளி நாட்டு இனத்தவர் படையெடுப்பினைக் கட்டிவிடுவது, முற்றிலும் தவறானதாகும். திருவாளர். டி.ஆர். பந்தர்க்கார் அவர்கள், தம்முடைய கூற்றினை வலுப்படுத்துவதற்காக, மெகஸ்தனிஸ் அவர்களின் எழுத்திலிருந்து எடுத்துக்காட்டப் பட்டதாகக் கூறப்படும், பொருளற்ற, பொருத்தம் அற்ற ஒரு கட்டுக் கதையினை வலிந்து புகுத்தியுள்ளார். "எராக் லெஸ், இந்தியாவில் ஒரு மகளை ஈன்றெடுத்தார். அம்மகளை அவர், பண்டைய எனப்பெயரிட்டு அழைத்தார். அவளுக்குத், தெற்கு நோக்கி நீண்டு, கடல் வரையும் பரவியிருந்த நாட்டை அளித்தார். ஆங்கு, கப்பம் கட்டுவதில் தவறியவர்களை வற்புறுத்தித் திறை செலுத்தும் முறைமைப்பாடு உடைய வரின் துணை அரசியார்க்கு எப்போதும் கிடைப்பதற்காக, ஒரு நாளைக்கு ஒரு சிற்றூர், அரண்மனைக் கருவூலத்திற்கான கப்பத்தைக் கொண்டுவந்து சேர்க்க வேண்டும் என்று ஆணையிட்டு, ஆங்கு, அவள் ஆட்சிக்குட்பட்ட மக்களை, 365 ஊர்களுக்குமாகப் பங்கிட்டு அளித்தான்" எனக் கூறுகிறது அக்கதை. [Macrindle. Ancient India as described by Megasthenes and Arrian. : P ge : 159.]

இதைப் பண்டைக் காலத்திய மதுரை பற்றிய நாம் அறிந்தனவற்றோடு ஒன்றுபடுத்திக் காணும் முயற்சியில், வெற்றிகாணமாட்டாதே, அறிவுத்திறன் பெருமளவில் பாழ்படுத்தப்பட்டது. முன்பே குறிப்பிடப்பட்ட எறும்பு மனிதர் பற்றிய அவர் கட்டுக்கதை போல, அல்லது, பாண்டிய நாட்டில், ஆறு ஆண்டுகள் நிரம்பியதுமே கருவுறும் பெண்கள் பற்றிய, அவருடைய வேறு ஒரு கட்டுக்கதைபோல [Macrindle. Ancient India as described by Megasthenes and Arrian. Page : 144] இது, மெகஸ்தனிஸ் அவர்களின், எதையும் நம்பும் ஏமாளித்தனத்தை உறுதி செய்யும் மற்றொரு கட்டுக்கதையல்லது வேறு அன்று. வேறு உண்மையான வரலாற்று மூலங்கள் வழியாக அறியவந்த, கி. மு. நான்காம் நூற்றாண்டில், பாண்டிய நாட்டிற்கும் பாடலிபுத்ரத்திற்கும் இடையில், போக்குவரவு இருந்து வந்தது. மெக்ஸ்தனிஸ், அந்நாட்டைக் கேட்டறிந்திருந்தார், என்ற உண்மையை மட்டுமே, அக்கட்டுக்கதை உறுதி செய்யும். உண்மை நிலை இதுவாகவும், திரு. டி. ஆர். பந்தர்க்கார் அவர்கள், எராக்லெஸ்ஸின் மகள் மதுரை ஆண்ட கட்டுக்கதையினை நம்புவது மட்டும் அல்லாமல், இந்தியக் கடவுள் இயல்புகளோடு முற்றிலும் மாறுபடும் "டியொனிஸொஸ்", "எராக்லெஸ்" போலும் கிரேக்கக் கடவுள்களுக்குச் சரிசமமாக, இந்தியக் கடவுள்களை, யூகத்தின் மூலம், எத்தகைய அகச்சான்றும் இல்லாமல், ஆக்க முயன்று தோற்றுப் போன ஆசிரியர் கூட்டத்தோடு சேர்ந்துகொள்வதும் செய்துள்ளார்: கிருஷ்ணனின் குழலிலிருந்து எழும், உள்ளம் உருக்கும் இசை, எரக்லெஸின், பருத்த கைத்தடித் தத்துவத்திற்கு, எதிர் துருவம் போன்றதாகவும், திரு. பந்தர்க்கார், கிருஷ்ணனை, எரெக்லெஸுக்குச் சரிசமம் ஆக்கிப்பார்க்கிறார். மெகஸ்தனிஸ், முட்டாள்தனத்தின் முடிவுக்கே சென்று, மத்ய தேசத்தில் இருந்தவனாக, கி. பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த வராஹமிஹிரரால் உறுதி செய்யப்பெறும் பாண்டஸ் என்பான் அவ் வராஹமிஹிரரின் காலத்திற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில், தமிழ்நாட்டின் மீது

படையெடுத்துச் சென்று, ஆங்கு, ஒரு பேரரசர் மரபினையும், குறுநிலத் தலைவர் மரபினையும் நிறுவினான் என்பதை. இன்னமும் நம்புகிறார், இது ஒரு வஞ்சனைக் கற்பனை!

தமிழர்களால் எப்போதும் மூவேந்தர் என அழைக்கப்படும் சோழ, சேர, பாண்டியர் ஆகிய தமிழ் அரசர் மூவரும், உலகம் தோன்றிய நாள்தொட்டு, அல்லது, சரியாகக் கூறுவதாயின், தமிழ்ப் புலவர்கள் தமிழரசர்களைப் பாடிப் பாராட்டத் தொடங்கிய நாளிலிருந்தே, தமிழ்நாட்டில் அரசோச்சியிருந்தனர் என்பதே, வரலாற்றுக்கு முந்திய மரபுவழிச் செய்தியாம், பல்வேறு அரசகுலங்களைத் தோற்றுவித்ததாகக் கூறப்படும் ஞாயிறு, திங்கள்களிலிருந்து தாங்கள் வந்தவர்களாக உரிமை கொள்ளுமாறு மிகமிகப் பிற்பட்ட காலத்தில், தமிழரசர்களைப் பிராமணர்கள் தூண்டிவிட்டனர். அந்நிலையிலும், அவர்கள் வேற்று மண்ணுக்கு உரியவர்களாகக் கருதப்படாமல், தமிழ்நாட்டு அரசர்களாகவே மதிக்கப்பட்டனர். மேலும், சோழர், சேர, பாண்டிய என்ற சொற்கள், தமிழ்ப் பழங்குடிப் பெயர்களாம். காவிரிப் பள்ளத்தாக்கில் வாழ்ந்து, அந்நிலத்துக்குரியதாம் ஆத்திமலரைத் தங்கள் குலச்சின்னமாகக் கொண்ட சோழர், உழவர்களாம் வேளாளர் இனத்தைச் சேர்ந்தவராவர். காவிரிப் பேராற்றின் துணைநதிகளின் தோன்றுமிடம் தொடங்கி, தென்னிந்தியாவின் மேற்குக் கடற்கரை வரையான, தன் மண்ணுக்குரிய மரமாகப் பனையைக் கொண்டிருக்கும், மலைநாட்டு மக்களாம் குறவர் இனத்தைச் சேர்ந்தவர் சேரர், பனையைத் தங்கள் அடையாளமாகக் கொண்டிருந்தனர். பாண்டியர், வேம்பினைத் தன் மண்ணுக்குரிய மரமாகவும், மீன்பிடி தொழிலைக் குலத்தொழிலாகவும் கொண்ட, இந்தியாவின் தென்கோடி நிலப்பரப்பில் வாழ்ந்த மக்களாம் பரதவர் இனத்தவர் ஆவர். கயலும், வேம்பும் அவர்கள் குல அடையாளங்களாம். [இன்றைய குறவர், பண்டைக் குறவரினும், நிலையால் தாழ்ந்துவிட்ட வழிவந்தவராதல் வேண்டும்] [பழந்தமிழ் இலக்கியங்களில், பரதவர் என்ற சொல், கடலோடிகள்

மற்றும் பாண்டி நாட்டுத்தலைவர்கள் என்ற இரு பொருளும் உடையதாகும். உ.ம்; "தென்பரதவர் மிடல்சாய" (புறம் : 378 : 1)" தென் பரதவர் பேரேறே" (மதுரைக் காஞ்சி:144] இப்பழங்குடி மக்களின் பழக்கவழக்கங்களும், தொழில்களும், அவர்கள் வாழ்ந்த சுற்றுச் சூழல், அவர்கள் மீது செலுத்திய ஆட்சியின் நேரிடைப் பயனாம். ஆகவே, அவர்தம் இயல்பான வாழ்க்கைச் சூழ்நிலைக்கு வெளியே உள்ள ஓர் இடத்திலிருந்து வந்தவர்களாக அவர்களைக் கொண்டுவரக் காட்டும் கற்பனை மாடங்கள் அனைத்தும், நேர்மைக்கு மாறான காரணங்களின் எடுத்துக்காட்டுக்களாம்.

## மகதப் பேரரசு :

கி.மு. 400 அளவில், மகாபத்ம நந்தன், மகதத்தின் அரசன் ஆனான். அவன் சத்திரியர்கள் அனைவரையும் பூண்டோடு அழித்துவிட்டான். அவன் காலத்திற்குப் பிறகு சூத்திரர் வழிவந்தவரே, நாட்டில் சிறந்தோங்கியிருந்தனர். அவன் இந்தியா முழுமைக்குமான தனி அரசன் ஆனான். பேரரசின் ஒரே வெற்றிக் கொடைக்கு உரியவன் ஆனான்; ["சர்வ சத்ராந்த கொன்பஹ் ததஹ் ப்ரப்ற்தி ராஜானொ, ப்ஹவிஷ்யஹ் சூத்ர யொனயஹ் எகராத் ச மகாபத்ம எகச் ஹத்ரஹ்" [Pargiter : Dynasties of Kali Age : Page : 25) அந்நாள் முதல், மகத அரசர்கள், ஆரிய நாகரீகத்திற்கு அந்நாள் வரை அடிமைப்படாத மக்கள் வாழ்ந்திருந்த தமிழ் நாடு தவிர்த்த இந்தியப் பெருநிலப்பரப்பு முழுமைக்கும் தனிப் பேரரசர்களாக உரிமைகொண்டனர். தம் உரிமையை நிலை நாட்ட, தக்ஷிண பரதத்தின் மீது மேற்கொண்ட படையெடுப்பு எதையும் கேட்டிலம் ஆதலின், மகதப் பேரரசின் தனி ஆட்சி உண்மை, அசோகன் இறக்கும் காலம் வரை ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்தது. கலிங்கத்தில், நந்தர்களால், ஒரு பாசனக் கால்வாய் வெட்டப்பட்டிருந்தது ஆதலின், ஏனைய மாநிலங் களோடு, கலிங்கமும், மகத அரசின் கீழ் இருந்தது. ஆகவே, அசோகன், கலிங்கத்தில் மேற்கொண்ட போர், உள்நாட்டுக் கலவரம் காரணமாகவே ஆதல் வேண்டும். அசோகன் அரச

ஆணையின் கல்வெட்டுப் படிகள், ஏனைய இடங்களோடு, மைசூர் நாட்டைச் சேர்ந்த சித்தபுரம், ஜதிங்க ராமேஸ்வரம், பிரம்மகிரியிலும், நைஸாம் மாநிலத்தில் உள்ள மஸ்கியிலும், நனிமிக அண்மைக்காலத்தில் கர்னூல் மாவட்டத்திலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இது, வடநாட்டுத் தலையாய உள்நாட்டு மொழி, கி.மு. மூன்றாம் நூற்றாண்டில், தமிழ் நாடு நீங்கிய தென்னிந்தியர்களால் பொருள் உணரப்பட்டிருந்தது என்பதையே உணர்த்துகிறது. (இன்று, அடிப்படையில் ஒன்றாகவே கருதப்படும் இந்துஸ்தானி அல்லது, இந்தி அல்லது உருது, இந்தியாவின் பெரும்பகுதியில் பொருள் உணரப்படுகிறது. இது, வழக்கமாக நம்புவது போல், முகம்மதிய சுல்தான்களின் ஆட்சியால் நேர்ந்தது அன்று; மாறாக, வடக்கிற்கும், தெற்கிற்கும் இடையில், பலநூறு ஆண்டுகாலமாக இருந்து வந்த, வாணிகம், சமயம், இலக்கியம் ஆகிய துறைகளிலான தொடர்பே காரணமாம்.) அவ்வரச ஆணைகள், புலமை சான்றவர்க்கு மட்டுமே மேற்கொள்ளப் பட்டவை அன்று; அதுவாயின், அவை சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருக்கும். அதற்குமாறாக, அவை பொதுமக்களைச் சென்று அடைவதற்காகவே மேற்கொள்ளப்பட்டவை; ஆகவே, வடநாட்டில் பேசப்பட்டு வந்த முக்கிய கிளைமொழி, அக்காலத்தில் வடபெண்ணையாற்றங்கரை வரையும் உணரப் பட்டிருந்தது என உய்த்துணர்ந்து கொள்ளலாம். எழுத்தைப் பொறுத்தமட்டில், அசோகன் எழுத்துக்கள் எனப்படும் அதே எழுத்துக்கள், கி.மு. மூன்றாம் நூற்றாண்டில், இந்தியா முழுவதும் பயன்படுத்தப்பட்டது. பண்டைக் காலத்தில் வட இந்தியா, தென்னிந்தியாவுக்கிடையேயான போக்குவரவு பெரிதாம். அப் போக்குவரவு, மகாபத்மநந்தன் நாடு முழுமைக்குமான ஒரே அரசன் (ஏகராட்) ஆகிவிட்டான். மகதம் பெற்றிருநத இவ்வாட்சி மேலாண்மை, மௌரியப் பேரரசர் காலத்தும் தொடர்ந்து இருந்து வந்தது என்ற உண்மை நிகழ்ச்சிகளால், மேலும் பெருகிவிட்டது என்பதையே இது உணர்த்துகிறது.

**மகதத்துடன் வாணிகம் :**

கி.மு. நான்காம் நூற்றாண்டில், வட இந்தியாவுக்கும், தென்னிந்தியாவுக்கும் இடையிலான வாணிகம், எப்போதும் இருந்திராத அளவு மிகப்பெரிய அளவினை அடைந்திருந்தது. இது குறித்துக் கௌடில்யர் கூறியன அனைத்தையும், அப்படியே முழுமையாகத் தருகின்றேன். "நிலவழி நெடுஞ் சாலையைப் பொறுத்தமட்டில், இமாலயத்திற்குச் செல்லும் வழி, தக்ஷிண பரதத்திற்குச் செல்லும் வழியினும் மேலானது என்று கூறுகிறார் ஆசிரியர். வெகு தொலைவில் உள்ள முன்னதிலிருந்து, யானைகள், குதிரைகள், நறுமணப் பொருள் வகைகள், தந்தம், தோல், மிகமிக நேர்த்தியான பொன், வெள்ளி அணிகலன்கள் வந்தன. அப்படி இல்லாமல், ஆட்டு மயிர்க்கம்பளங்கள் நீங்கலாக, தோல், குதிரை, சங்குகள், வைரம், நீலம் முதலாம் மாணிக்கங்கள், பொன்னாலான அணிகலன்கள் தக்ஷிண பரதத்திலிருந்து பெருமளவில் வந்தன என்று கௌடில்யர் கூறுகிறார். தக்ஷிண பரதத்தில், பற்பல சுரங்கங்கள் வழியாக, மிகச் சிறந்த வாணிகப் பொருள்கள் பெருமளவில் கிடைக்கும் நகரங்கள் வழியாக, பல்வேறு வகை மக்களை ஆங்காங்கே கொண்டுள்ள வழியாகச் செல்லும், நீண்ட வழிப்பயணம் செய்வதற்கு எளிமையானது; ஏனைய வழிகளிலும் சிறப்பு வாய்ந்தது." ["ஸ்த்ஹல பாத பி ஹை-மவதோ தக்ஷிணா பத்ஹாஎக்ரெயான்

ஹய்த்யஸ்வ கந்த்ஹ தந்தாஜின ரூப்ய ஸ்வர்ண பன்யாஹ் சாரவத்தராங் இத்யாசார்யஹ்

நெதி கௌடில்யஹ் கம்பலாஜினாஸ்வபன்ய வர்ஜாஹ் சாங்ஹவஜ்ரமணிமுக்தாஹ். சுவர்ணபண்யாஸ்கப்ரப்ஹூத்ரா: தக்ஷிணாபத்ஹே

தக்ஷிணாபத்ஹே பி பாஹூகனிஹ் சாரபண்யஹ் ப்ரசித்த கதிர் அல்பவ்யாயாமொ வா வணிக்பதஹ ஸ்ரெயான்'' [அர்த்த சாஸ்திரம். ஜாலி மற்றும் ஸ்மித் வெளியீடு: பகுதி: 2 : 12 : பக்கம் : 30-34)].

இது பண்டங்களைக் கொண்டு செல்லும் பழைய முறையினைப், புகைவண்டித் தொடர்களும், லாரிகளும், அழித்து விடாமல் விட்டு வைத்திருக்கும் இடங்களில் இன்றும் நாம் காண்பதுபோல, "கிரீச்" எனும் ஒலி ஓயாது எழ, குமரி முதல் பாடலி வரையான, சீர்மிகு, சீர்கெட்ட நெடுஞ்சாலைகளில் செல்லும் கட்டை வண்டிகளாம் வணிகச் சாத்துக்கள் மூலம் நடைபெற்ற மிகப் பெரிய வாணிக நிலை பற்றிய காட்சியைக் காட்டுகிறது. வேறு ஓர் இடத்தில் அரசன் கருவூலத்திற்குச் செல்லும் அரும் பொருட்கள் பற்றிக் குறப்பிடும்போது, கௌடல்லியர், தாம்பரபரணி, பாண்டியகாவடகா, மற்றும் சூர்ணா (இது, பிற்காலத்தே உரையாசிரியரால், "முரசி" அதாவது கேரள நாட்டில் உள்ள முசிறிக்கு அணித்தாக ஓடும் ஆறு என விளக்கம் அளிக்கப்பட்டுளது) ஆகிய இடங்களிலிருந்து வந்த ரத்தினங்கள் [அர்த்தசாஸ்திரம் : 11 26 : 2] பல்வேறு வண்ணங்களில் ஆன வைடூரியங்கள் [மேற்படி: 26 : 30] (ஓர் உரையாசிரியர் இது, ஸ்திரீராஜ்யத்திலிருந்து அதாவது மலபாரிலிருந்து வந்ததாகக் கொள்வர்), பட்டை தீட்டப்பெற்ற மாணிக்கக்கல்லின் மேனி போல் மெத்தென்றிருக்கும், கருமை நிறம் வாய்ந்த பௌண்ட்ரகக் கம்பளங்கள், (அர்த்த சாஸ்திர மொழி பெயர்ப்பாளராகிய காமா சாஸ்திரியார் இவை, பாண்டி நாட்டுச் செய்பொருள்கள் என்கிறார்) [பக் : 90]. மற்றும், மதுரையில் இருந்து வந்த பருத்தி ஆடைகள் ஆகியவற்றைக் குறிப்பிட்டுள்ளார். [Arthasastra: Jolly and Schmidt. ii. 26. 119]

**சந்திரகுப்தனும் தென் இந்தியாவும் :**

கி. மு. நான்காம் நூற்றாண்டின் கடைசி கால் நூற்றாண்டில், உலகம் அறிந்த தனிமிகு புகழ்வாய்ந்த சந்திர குப்தன், ஒரு நூற்றாண்டின் கால் கூறு காலத்திய ஒளிமயமான ஆட்சிக்குப் பின்னர், இந்தியப்பேரரசர் பலரையும் போலவே, வைராக்கியமாகிய நோயால் திடுமெனப் பற்றிக் கொள்ளப்பட்டு, ஒரே இரவில் வாளையும் முடியையும் துறந்து, சமணத்துறவியாகி, பத்ரபாகுவின், 12,000 மாணவர்

களில் ஒருவராகிவிட்டான். தன் குருவோடும், தன்னொத்த மாணவர்களோடும், மைசூர் மாநிலம், ஹாசன் மாவட்டத்தில் உள்ள சரவண பெல்கோலாவைக், கால்கடுக்க நடந்து அடைந்தான். ஏனையோர் ஆங்கிருந்து பாண்டிய, சோழ நாடுகளுக்குச் சென்றனராக, பத்ரபாகுவும், சந்திரகுப்தனும் ஆங்கேயே தங்கிவிட்டனர். ஆங்குப் பிச்சைக்காரனாக மாறிவிட்ட அப்பேரரசன், தன்குரு இறக்கும் வரை, அவருக்குத் தேவையானவற்றை அளித்துப் பணிவிடைசெய்து கொண்டிருந்தார். சந்திரகுப்தன், தன் ஆசிரியருக்குப் பின்னர்ப் பன்னிரண்டு ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தான். பின்னர்த், தான் உயிர் வாழ்ந்த பயன் கிட்டிவிட்டது: தன் உடல் தனக்கு இனிப் பயன் இல்லை என உணர்ந்ததும், சமண சமயமுறையாம், பசியோடிருந்து வடக்கிருந்து உயிர் துறத்தலாம் "சல்லெக்ஹனம்" மேற்கொண்டு உயிர் துறந்தான். ஒரு பேரரசின் வாழ்க்கை, மறைவுகள் குறித்து நாம் கருத்தில் கொள்ளத் தேவையில்லை. ஆனால், இப்போது சாதுக்கள் என அழைக்கப்படும் ஆயிரக்கணக்கானவர், இன்று வழிபாட்டிடங்களுக்குச் சென்று திரும்பும் பல்லாயிரவர் போல, வடநாடு விடுத்துத் தென்னாடு வந்தது பற்றியே கருத்தில் கொள்ளுதல் வேண்டும். இச்சமண முனிவர்கள் தமிழ்நாடு மலைச்சரிவுகளில் உள்ள இயற்கையான குகைகளில் வாழ்ந்து, படித்துப் பொருள்காண்பதன் மூலம், தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு ஒளிகாட்டும், கல்வெட்டுக்களை அக்குகைகளில் விட்டுச்சென்றுள்ளனர்.

### பௌத்த நாடோடிகள் :

சமணர்களைப் போலவே, பௌத்தர்களும், தம் யோக நெறியை அமைதி குலையாமல் பயில்வதற்கு ஏற்ற தனிமை இடங்களைத் தேடி, தென்னிந்தியாவுக்கு அலைந்து திரிந்து வந்து சேர்ந்தனர். அவர்களும், இயற்கைக்குகைகளில் வாழ்ந்து கல்வெட்டுக்களை விட்டுச் சென்றனர். பல இடங்களில், குறிப்பிட்ட ஒரு குகை, சமணர் வாழ்ந்ததா, பௌத்தர் வாழ்ந்ததா என்பதை அறிந்துகொள்வதில் சிறிது

கிரமமே. அதுபோலும் குகைகள், பாண்டிய, சேர நாட்டுப் பல்வேறு மலைகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பௌத்த சந்நியாசிகளின், தொடக்ககால இக் குடிபெயர்ச்சிக்கு அரசியலோ, சமயம் பரப்பும் ஆர்வமோ, காரணங்களாகா. பண்டைக்கால ரிஷிகளைப் போலவே, கி. மு. ஐந்து மற்றும் நான்காம் நூற்றாண்டு புத்த பிக்குகளும், அரசர்களின் நிறை மனத்தோடு படாத ஆதரவிலிருந்தும், துறவறச் சந்நியாசிகளை வரையறையின்றி மகிழ்விப்பதன் மூலம் மிகப் பலவாய புண்ணியத்தையும், மலிவான தகுதிப்பாட்டையும் பெறத் துடிக்கும், பொறுப்பற்ற மாணவர்களின், பொறுக்க வொண்ணாப் போலிப் புகழ்ப்பாட்டிலிருந்தும் தப்பித்துக் கொள்ளவே, தங்கள் சொந்த மாநிலங்களை விட்டு வெளியேறினர். சமணர்களும், பௌத்தர்களும் முறையான மனப்பயிற்சியினை யோக முறை மூலம், மேற்கொள்ளுதல் வேண்டும்; அதன் வெற்றிப் பயிற்சிக்குத் தனிமை தேவை. சமணர்களுக்கு, இவற்றிற்கு மேலாக, ''சல்லேகனம்'' என அழைக்கப்படும் ஒருவகைத் தனிச்சிறப்பு வாய்ந்த முறையாம் வடக்கிருந்து அமைதியாக உயிர் விடுதற்கு ஏற்புடைய, மக்கள் நடமாட்டத்திற்கு அப்பாற்பட்ட உறைவிடமும் தேவைப்பட்டது. பண்டைக்காலத்தைச் சேர்ந்த இம்முனிவர்களுக்கு, உயிரைக் காக்கத்துடிக்கும் பேராசை எதுவும் இல்லை. மகாவீரரும், புத்தரும், மக்களைப் பெருங் கூட்டமாக வானுலகிற்கு அனுப்புவனவாகச் சமயங்களைக் கருதவில்லை. கட்டாயமாக்கப்பட்ட பிறப்பு, மறுபிறப்பு எனும் வாழ்க்கைச் சக்கரத்திலிருந்து தனிமனிதனைக் காக்கும் மனப்பயிற்சி முறைகளைச் சந்நியாசிகளுக்குக் கற்பித்தலே சமயமாம் எனக் கொண்டனர். இவ்வறவுரையாளர்கள், உலகத்தவர்க்கு உலக வாழ்க்கைக்கு வேண்டுகோள் விடுக்கவில்லை. துறவிகளுக்குத் துறவற நெறிக்கே விடுத்தனர். அவர்கள் தொழுகை இடங்களை நிறுவினார் அல்லர். நோன்பிடங்களையே கண்டனர். அவர்கள், மாணவர்களின் மனத்தைச் சமயக்கருத்துக்களால் நிரப்பினாரல்லர். மாறாக' அவர் உள்ளங்களை, உயிர் உணர்ச்சிகளைத் தூண்டவல்ல

அறவுரைகளால் கிளர்ச்சி பெறச்செய்தனர். எப்பொழுது, ஓயாது இயங்கிக்கொண்டு இருக்கும் அலையலையான அகக் கிளர்ச்சிகள் அடங்கிப் போக, அவற்றின் இடத்தைத்தன்னை மட்டுமே உணரும் நிலைபேறுடைய மனவுணர்வுக்குவியல் வெற்றி கொண்டுவிட்டதோ, எப்பொழுது, கடுமையான புலனடக்க நெறி மேற்கொண்டு, தன் உயிரின் வீடுபெற்றிற் காம் விருப்பம், உலகத்தவர்க்குச், சமயக் கொள்கைகளை அவர் உள்ளம் ஈர்க்கும் சொற்களால் விளக்கி, அவ்வுலகத்து உயிர் அனைத்தையும் காக்க வேண்டும் என்ற விருப்பத்தால் குப்புறத் தள்ளப்பட்டதோ, எப்பொழுது, உணர்ச்சிக்கு உள்ளாகி, ஓயாது துடித்துக்கொண்டிருக்கும் உயிர், மாறா நியதிகளாம், வலிய இரும்புச் சங்கிலிகொண்டு சிறைசெய்யப் பட்டுவிட்டதோ, எப்பொழுது, புத்தர் கூறுவதுபோல, மனத்தொடுபடும் கோட்பாடு, கண்ணொடுபடும் கோட்பாட்டால் கெட்டு மங்கிப்போய்விட்டதோ, எப்பொழுது, சாங்கியர் கூறுவதுபோல், புத்தியின் "அத்யவசாயம்" மனத்தின் "சங்கல்பவிகல்ப"ங்களால், ஒளி கெட்டு மங்கிப் போய்விட்டதோ, அப்பொழுதே, ஜீனர், புத்தர்களின் போதனைகள் சமணமாகவும், பௌத்தமாகவும் தாழ்நிலை உற்றுவிட்டன ; உற்றன ; இந்திய மக்களுக்குப், பெருங் கேடாக, மனிதனின், தன்னை மட்டுமே மதிக்கும் அகவுணர்வு, மேலும், இரு சமயப் பிரிவுகளை உருவாக்கி விட்டது. அந்நிலையே பௌத்தர்களின் பேரவைகள் கூடலாயின ; ஏனைய மக்களின் உயிர்களைக் காக்கும், சமயத்தின் பெயரால், வெறுப்புணர்ச்சியைத் தூண்டும் வேட்கையால் உந்தப்பட்ட, புத்தத்துறவிகள், நாட்டை அலைக்கழிக்கத் தொடங்கிவிட்டனர். முந்திய தலைமுறைகளைச் சேர்ந்த புத்த பிக்குகள் போல் அல்லாமல், போர்க்குணம் வாய்ந்த

இப்புத்தத்துறவிகள் தங்கள் சமயப் பிரசாரத்திற்கு மகதப் பேரரசின் துணையையும் பயன் கொண்டனர்.

**அசோகனும் தமிழ்நாடும் :**

ஆனால், அசோக வர்த்தனன் காலத்திலும், தமிழ்நாடு, மகத ஆட்சி எல்லைக்கு வெளியிலேயே இருந்துவந்துள்ளது. மக்களின் நோய் தீர்க்கவும், மாவினங்களின் நோய் தீர்க்கவும், அவன் நிறுவிய இரு நிறுவனங்கள் குறித்துப் பேசும், அவனுடைய இரண்டாவது பாறைக்கல்வெட்டில், சோழ, பாண்டிய, க்ஷத்திய புத்திர, மற்றும் கேரள புத்ரர்களை "அந்த" அதாவது அண்டை நாட்டவர் அல்லது, எல்லைப் புறத்தில் உள்ளார், என்றே குறிப்பிட்டுள்ளான். அவனுடைய 13 வது கல்வெட்டில், தெற்கில் தம்பண்ணி அதாவது தாம்பர பரணி வரையான சோழ பாண்டிய நாடுகளில் தர்ம விஜயத் தில் வெற்றிகொண்டதாகக் கூறுகிறான். உலகிற்கு உபதேசிப் பதில் அவன் பெருமகிழ்வு கண்ட, பிராமண, சமண, பௌத்த சமயப் பேராசிரியர்கள் வழங்கும் அறிவுரைகளின் ஒன்றுபட்ட தொகுப்புத் தர்மமாம் பல்வேறு வகையான நன்னெறிகளை, மக்களுக்குப் போதிக்கும் சமயத் தூதுவர்களைப் பல்வேறு நாடுகளுக்கு அனுப்பி வைப்பதுதான், தர்மவிஜயம் என்பது. இது பண்டைக்கால, இன்றைய வரலாற்றுத் திறனாய்வாளர் இருதிறத்தவராலும், பல்வேறு நாடுகளுக்குப் பௌத்த சமய போதனையாளர்களை அனுப்பியதாகத் தவறாகக் கொள்ளப் பட்டுள்ளது. ஒன்று, அசோகன், ஒருவர் விடாமல் மக்கள் அனைவர்க்குமான தன் உபதேசங்களைப் "பௌத்த சத்யாணி" என்று எக்காலத்தும் பெயரிட்டு அழைத்ததில்லை. மாறாக, எச்சமயத்தோடும் சாராததான "தர்மம்" என்றே எப் போதும் பெயரிட்டு அழைத்துள்ளான். இரண்டாவது, பௌத்த மதம் பரப்பும் புத்த சந்நியாசிகளைப், பல நாடு களுக்கும் அனுப்பிய தன் செயலைப், பலரும் அறியச் செய்ய விரும்பியிருந்தால், உஜ்ஜைனியில் தான் ஆளுநராக இருந்த போது மணந்துகொண்ட தேவி வழிப்பிறந்த தன் மகன் மகிந்தனைப், புத்தமதம் பரப்ப ஈழ நாட்டிற்கு அனுப்பி

யதைக் கல்வெட்டில் பொறித்து இருப்பான். ஆனால், இச் செய்தியை மகாவம்சந்தான் நமக்கு அறிவிக்கிறது. அசோகன், தூதுவர்களை, தர்ம விஜயத்திற்கே அனுப்பினனாக, பல்வேறு நாடுகளுக்குப் புத்தசமயப்பிரசாரகர்களை, மூன்றாவது புத்தப்பேரவைதான் அனுப்பியது. அசோகன், பிராமண இல்லறத்தார், துறவறத்தார், சமண முனிவர்களை மதித்தது போலவே, பௌத்த முனிவர்களையும், மதித்தான் என்பதில் ஐயம் இல்லை. ஆனால், இது பௌத்த சந்நியாசிகளைச் சமயப் பிரசாரகர்களாக அனுப்பியதாகப் பொருளாகாது. இப்பொருள் குறித்தவரை, பௌத்த வரலாற்று அட்டவணையாகிய மகாவம்சம், ஒருதலைப்பட்ட சான்றே ஆகும். ஆனால், நம்முடைய ஆய்வு அப்பொருள் பற்றியதன்று. அசோகன் கல்வெட்டுக்களிலிருந்து, அசோகன் காலத்தில், அவனுடைய முந்தையோர் காலத்தைப் போலவே, தமிழ் நாடு, வட இந்தியாவோடு சுறுசுறுப்பான மிகப் பெரிய போக்குவரவினைக் கொண்டிருந்தது என்பதை அறிந்து கொள்வது ஒன்றே போதும்.

இன்றைய வரலாற்றுத் திறனாய்வாளர்கள், மௌரியப் பேரரசு பற்றியும், பிற்காலத்தே குப்தர்களின் முடியாட்சி பற்றியும் பரவலாகப் பேசுகின்றனர். பேரரசு, பேரரசைச் சார்ந்த எனப் பொருள்படும் [Empire : Imperial] என்ற இவ்வாங்கிலச்சொற்கள், பண்டைக்காலத்தில், இந்திய நாடுகள் ஒன்றோடொன்று கொண்டிருந்த அரசியல் உறவு பற்றி மிகப் பெரிய தவறான கருத்தினையே உணர்த்துகின்றன. இந்திய வரலாற்றில், இவ்வரலாற்றின் போக்கில், தவறான கொள்கையினை ஏற்படுத்தாமல், "எம்பயர்" (Empire) என்ற சொல்லை ஆள்வது இயலாது. பேரரசு (Empire) என்ற அச் சொல் உணர்த்தும் உள்ளார்ந்த பொருள் அத்தகைத்து. தன் ஆட்சிக்கு உட்பட்ட நாடுகளில் அமைதி நிலைநாட்டல், உரோம் நாட்டுக் குடியுரிமை உரோம் நாட்டுச் சட்டம் ஒழுங்கு முறைகளை மெல்ல மெல்ல விரிவாக்கல், இலத்தீன் மொழியைப் பரப்புதல் ஆகிய இவையே உரோமப் பேரரசு என்பதன் பொருளாம். சட்டம் ஒழுங்கு நிலையில் பிரித்

தானியர் முறைகளை நிறுவுதல், நிர்வாகத்தில் ஆங்கிலத்தைப் பயன் கொள்ளுதல், ஆங்கிலமுறைப் பள்ளிகளையும், பல்கலைக்கழகங்களையும் பரப்புதல், ஆங்கிலேயர் வர்த்தக முறையின் மிகப் பெரிய விரிவாக்கம், கிறித்துவசமயப் போதனைகளை மெல்ல மெல்லத் தொடங்கல், பிரித்தானிய நாட்டு மக்களாட்சி முறையின் மெதுவான வளர்ச்சி ஆகிய இவையே பிரித்தானியப் பேரரசு என்பதன் பொருளாம். பண்டை நாட்களில், இந்தியாவில் பேரரசு நிறுவல் என்பது, இவற்றில் எதுவும் அன்று. மரபு வழிப்பட்ட 56 இந்திய சிறு நாடுகளும், பிராமண ஆசிரியர்கள், அவ்வப்போது எடுத்து விளக்கிக் கூறும் தர்ம சாஸ்திரப்படியே, பெரும்பாலும் ஆளப்பட்டு வந்தன. பேராற்றல் வாய்ந்த பேரரசன் ஒருவன், "ஒருதனி ஆழி உருட்டுவோன்", "உலகெலாம் ஒரு குடைக் கீழ் ஆள்வோன்", "உலகெலாம் ஆள்வோன்" எனக் கூறப்படும் நிலையிலும், அவன் ஆட்சிக் கீழ் அடங்கிய நாடுகளில் ஆட்சி நிர்வாக முறைகளில், அமைச்சர் புரோகிதர் உள்ளிட்ட அரசவை ஐம்பெருங்குழுக்களில் எவ்வித மாற்றமும் நிகழ்வதில்லை. போர்க்காலனிகள் எதுவும் ஆங்கு ஏற்படுத்தப்படுவதில்லை. வெற்றி கொண்ட பேரரசனின் சிறுபடைப் பிரிவும் ஆங்கு நிறுத்தப்படுவதில்லை. பெருவீரன் ஒருவன், எண்ணற்ற நாடுகளுக்கும், தன்னைத் தலைவனாகக் கூறிக் கொள்வதும், ஆண்டுதோறும் அல்லது அவ்வப்போது, திறை செலுத்துவதன்மூலம, அவ்வரசனின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்வதும் ஆகிய இவையே, அச்சொற்றொடர்களுக்குப் பொருளாம். தன் மேலாதிக்கத்தை, நிலைநாட்டிக் கொள்வது, அசுவமேத யாகம் இயற்றுவதன் மூலமே பொதுவாக மேற்கொள்ளப்படும். பொதுவாக, யாகத்திற்கு முன்பாகப் படையெடுப்பு எதுவும் நிகழ்வதில்லை. ஆனால், யாகத்தில் பலி கொள்ள இருக்கும் குதிரையை, அவ்வரசனின் மகன், அல்லது மகள் வயிற்று மகன் பொறுப்பில் கட்டவிழ்த்து விடுவதும், அவ்வேள்வி செய்யும் அரசனின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கும் அரசன் நாட்டிற்குச் சென்ற அக்குதிரை ஆங்கு அவனால் கட்டப்பட்டுவிடுமாயின், அது

மீட்பதற்குப் போர் நிகழ்வதும் மட்டுமே வேள்விக்கு முன்பாக நிகழும். ஆனால், பேரரசு ஆட்சி என்பது தனி அரசன் ஒருவனின் தனிப்பட்ட இயல்புகளைப் பொறுத்ததே அல்லது, ஓர் அரச இனத்தின் செயலே அன்று ஆகவே, இந்தியப் பேரரசுகள் குறித்துக் கூறப்படும் பொதுவான கருத்துக்கள் எல்லாம், குறுகிய காலகட்டத்தில் நிற்பன; பொருள் அற்றன.

அசோகனுக்குப் பின்னர் அரியணை ஏறியவரெல்லாம், அரசியல் நெறியாலும், ஒழுக்க நெறியாலும் வலுவிழந்தவர்கள்! ஆகவே அவன் மறைவினை, மகதம் போன்ற பிற நாட்டு மன்னர்களின் புகழேற்றம் இடங்கொண்டுவிட்டது. அத்தகைய அரசர்களுள் ஒருவன், கலிங்க நாட்டுக் காரவேலன். அவனுடைய கல்வெட்டுக்கள், அவன் நாட்டிற்கும் மதுரைக்கும் இடையில் நடைபெற்ற வாணிகத்திற்குச் சான்று பகர்கின்றன.

## கலிங்கமும் தென் இந்தியாவும் :

விதி, எப்போதும்போல விளையாடிவிடவே, அசோகன் கடைப்பிடித்த தர்மம், அவன் இறப்பிற்குப் பின்னர், அவன் பேரரசைச் சிதறுறச் செய்துவிட்டது. அவ்வகையில் தன்னாட்சி பெற்ற நாடுகளில் கலிங்கமும் ஒன்று. அதன் அரசன் காரவேலன் (கி.மு. 200), பாண்டி நாடுவரையும் சென்று பரவிய பெரும் புகழ்ச்சிக்கு உரியனாகிவிட்டான். அங்கிருந்து குதிரைகள், இரத்தினங்கள், முத்துக்கள், நீலக்கல் மட்டுமல்லாமல், அவற்றைச் சுமந்துவந்த யானைகளும் கப்பல்களும் அவனுக்குப் பரிசுப் பொருட்களாகக் கிடைத்தன. குதிரைகளையும், யானைகளையும், மாணிக்கங்களையும் ஏற்றிக் கொண்டு, வியத்தகு யானைக்கப்பல்களும் கொண்டுவரப்பட்டன. முத்துக்கள், நீலமணிகளோடு இவற்றையும் பாண்டிய அரசன் அனுப்பிவைத்தான். [அப்ஹூத அசரியம் அத்தினாவன் பாரிபுரம் யு(ப) தென்ஹ ஹய ஹதி ரத்ன (மா) நிகம் பண்டராஜா எதானி அனெகானி முதமணிரத்னானி ஹராபயதி இத்ஹ சத ச) [ஹதிகும்பா கல்வெட்டுக்கள்; J. B. O. R. S. iv. 401)]

## அதிகாரம் : XII

# வழக்கில் உள்ள பழந்தமிழ்ப் பாக்கள் :

### பாக்களின் தோற்றம் :

பாக்கள், பொதுவாக, கடவுள்களையும், காவலர்களையும் பாராட்டும் புகழுரைகளோடு பிறந்தன. எப்பொழுதெல்லாம், வழிபாட்டு நெறி ஒன்று நிறுவப்படுகிறதோ, அல்லது, ஓர் அரசகுலம் தோன்றுகிறதோ, பாணர் முதலாம் புகழ்பாடுவார் அவற்றைப் பாராட்டிப் பாடுவதன் மூலம், அக்கடவுள்களின் அக்காவலர்களின் அரவணைப்பைப் பெறத் தொடங்கினர். வேதங்கள் போலும் சமயப்பாக்களின் திறனாய்வை விடுத்துப் பார்த்தால், எந்த ஒரு மொழியிலும், சமயச்சார்பற்ற பாட்டு, அம்மொழி பேசும் அரசன், பாராட்டத்தக்க போர் வெற்றிகளைப் பெறும்போது பாடத் தொடங்கப்பெறுகிறது என முடிவு கொள்ளலாம். பாணர் முதலாம் இரவலர்கள், இறைச்சி மீன் பாலும், இனிய மதுவின் பாலும் தணியா வேட்கையுடையராய், எப்போதும் அரைப் பட்டினியோடிருப்பர். காதல், போர் ஆகிய துறைகளில், மன்னர்களும், குறுநிலத்தலைவர்களும் பெறும் பெருஞ்செயல்களைப், பாக்களில் வைத்துப் பாராட்டுவதன் மூலம், இறைச்சியையும், இனிய மதுவையும் பெற முயற்சிப்பர். தமிழ்க் கவிதைக்கலை, பிறந்த வழி தெளிவாக, உறுதியாக, இதுவே.

நனிமிகப் பழம் பாடல்களெல்லாம், உண்மையில், பேச்சுவழக்கிலிருந்த, திருந்தாக் கிளைமொழிகளிலேயே இருந்தன. சமஸ்கிருத மொழி, சமஸ்கிருதமாக (அதாவது செப்பம் செய்யப்பெற்று, மரபுவழி நெறிப்படுத்தப்பட்டு, கண்டிப்பான இலக்கண விதிமுறைகளின்கீழ்க் கொண்டு

வரப்பட்ட நிலை) திருந்திய வடிவமாக ஆக்கப்பட்டு, வேத மந்திரங்களின் யாப்பு முறைகளும், இலக்கிய மரபுகளும் தோன்றுவதற்கு முன்னர்ப், பலநூறு ஆண்டுகாலம் வழக்கில் இருந்திருக்க வேண்டிய சமஸ்கிருத நாடோடிப்பாடல்கள் அழிந்துபட்டதுபோலவே, அப்பழந்தமிழ்ப் பாடல்களும், அழிந்துபோயின. வேத மந்திரங்கள், மாக்ஸ் முல்லர், வெறியுணர்வோடு விளக்குவதுபோல், "குழந்தை நிலை மானுடத்தின் பொருளற்ற உளறல்" அன்று. அம்மந்திரங்களின் மொழிநடை, "புலமை நலம் வாய்ந்த இலக்கிய மொழி நடை". "மதகுரு, வழிபாட்டு இசைப்பாணர்களுக்கிடையே. தலைமுறை தலைமுறையாகக் கொண்டுவரப்பட்ட, செயற்கையாக வழக்கிறந்து போன தாக்கப்பட்ட பழம் பெரும் மொழி. [A Macdonell. Sans. Lit. P. 20.] வேறு நடையில் சொல்வதானால், வேதமொழி, பாதிரி முதல் பறையன் வரையான, எல்லா நிலையில் உள்ளாராலும் பேசப்பட்ட ஒரு மொழி அன்று. அது ஒரு "தேவ பாஷை". அது போலவே, இப்போது நாம் பெற்றிருக்கும் பழந்தமிழ்ப் பாடல்களெல்லாம், ஒப்புநோக்க, பிற்பட்டகால இலக்கிய வளர்ச்சியினைக் காட்டுவனவாம். அவற்றின் மொழிநடை, சாதாரண மக்களின், பேச்சுநடையன்று. நனிமிகத் திருத்தம் பெற்ற, மரபுவழிப்படுத்தப்பட்ட, இலக்கிய நடையாகும். இப்பழம்பாடல்கள், யாப்பிலக்கண விதிகளின் கட்டுப்பாட்டிற்கு உறுதியாக அடங்கியிருப்பவை. இலக்கிய மரபுகளின், நனிமிக உயர்ந்த, பல்வேறு விதிமுறைகளை விளக்கிக் காட்டவல்லன.

**இலக்கியக் கிளைமொழிகள் :**

தமிழ் அரச இனங்கள் மூன்றும், தென்னிந்தியா, ஸ்ரீ ராமனால் அமைதியுறப் பெற்ற பின்னர், ஆட்சிக்கு வந்திருக்க வேண்டும் என நான் கருதுகின்றேன். இம் மூன்று இனங்களில், பாண்டிய அரச இனம், மதுரை நாடு என, இன்று நாம் அழைக்கும் பகுதியில் ஆண்டிருந்தது. இந்நாடு, தமிழகத்தின், இருதயம் போலும் மைய இடமாகும்.

முழுக்க முழுக்க மருதமாகவே (விளை நிலமாகவே) இருக்கும் சோழநாடு போலவோ, பெரும்பகுதி குறிஞ்சியாக (மலை நாடாக) இருக்கும் சேர நாடு போலவோ அல்லாமல், பாண்டிய நாடு, ஐந்திணைக்காதல் பாடல்களும், அவை ஒவ்வொன்றோடும் உறவுடையவாய, ஐந்திணைப் போர்ப் பாடல்களும் எழுவதற்கு ஏற்புடைய, ஐந்திணைக்கும் உரிய வாழிடங்களைக் கொண்டிருந்தது. ஆகவே, தமிழிலக்கிய வளர்ச்சியின் நடுவிடமாக, இலக்கிய நடைத்தமிழ், அதாவது செந்தமிழ் வழங்கும் இடமாக, மதுரை சிறந்து உயர்ந்தது வியப்புக்கு உரியதன்று. செந்தமிழ் நாட்டை அடுத்திருந்த, அவ்வந்நிலத்துக்கே உரிய கிளைமொழிகள் வழக்கில் இருந்த பன்னிரண்டு மாவட்டங்கள் குறித்துத் தமிழ் இலக்கணங்கள் குறிப்பிடுகின்றன. [''செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம்'' . தொல்காப்பியம் : சொல்லதிகாரம் : 9 : 3] நன்கு தெரிந்த ஒரு தமிழ்ப்பாட்டு, அச் செந்தமிழ் வழங்கும் பன்னிரு நாட்டையும், தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா நாடு, வேணாடு, பூழிநாடு, பன்றிநாடு, அருவாநாடு, அருவாவடதலை நாடு, சீத நாடு, மலையமா நாடு, சோழ நாடு என வரிசைப்படுத்திக் காட்டுகிறது.

''தென்பாண்டி, குட்டம், குடம் கற்கா, வேண், பூழி,
பன்றி, அருவா, அதன் வடக்கு — நன்றாய
சீதம், மலாடு, புனல்நாடு, செந்தமிழ்சேர்
ஏதம்இல் பன்னிருநாட்டு எண்''

தொல்காப்பிய உரையாசிரியரான சேனாவரையர், தென் கிழக்கிலிருந்து வரிசைப்படுத்தத்தொடங்கி, பொங்கர் நாடு, ஒளி நாடு, தென்பாண்டி நாடு, குட்டநாடு, குடநாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழிநாடு, மலைநாடு, அருவா நாடு, இறுதியாக அருவாவடதலை நாடு என முடிக்கிறார். இறுதியாகக் கூறப்பட்டது தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர்த், தொண்டைநாடு என்றும், வட இந்திய எழுத்தாளர்களால் திராவிடம் என்றும் அழைக்கப்பட்ட நாடாகும்.

ஓரிடத்தில் வழங்கும் மொழி, ஏனைய இடங்களில் வழங்கும் மொழிகளைப் போலவே, சிறந்ததும் ஆம், அல்லது சிறப்பற்றதும் ஆம், ஆதலாலும், இலக்கியத்தமிழ், முதன் முதலில், பாண்டி நாட்டில் மேற்கொள்ளப்பட்டது ஆதலாலும், அவ்விலக்கியத் தமிழ், பிற நாடுகளில் பாக்களில் மேற்கொள்ளப்பட்டபோது, ஆங்கு வழக்கிலிருந்த, அந்நிலத்துக்குரிய சொற்கள் சில, அப்பாக்களில் இடம் பெற்றன ஆதலாலும், தமிழ்நாடு, இவ்வாறு பிரிக்கப்பட்டிருந்தது கொண்டு, பொதுவாகக் கருதப்படுவது போல, பாண்டிய நாட்டில் வழங்கிய தமிழ், ஏனைய பன்னிரு நாடுகளில் வழங்கிய தமிழைவிட உயர்ந்தது என்பது பொருளாகாது.

தொடக்ககாலப் பாக்கள் அனைத்தும் அழிந்துவிட்டன :

இப்போது வழக்கில் உள்ள பழைய செய்யுட்களின் பண்பாகிவிட்ட, திருந்திய இலக்கண இலக்கிய மரபுகள் எல்லாம் இடம்பெறுவதற்கு முன்பே, எண்ணற்ற பாக்கள் இயற்றப் பட்டிருக்க வேண்டும். நான் அடிக்கடி, மேற்கோள் காட்டும் அந்த ஐந்திணைப்பாக்களில், ஒவ்வொரு திணைப்பாட்டும், அந்தந்தத் திணைக்கே உரிய நிலத்தில், ஒரு நிலத்திலிருந்து ஒரு நிலத்திற்கிடையே நிகழ்ந்த மக்கள் குடிபெயர்ச்சி அவ்வந் நிலத்துப் பழங்குடி மக்களின் சிறப்புப் பண்பாடுகளைத் தடம் தெரியாவாறு அறவே அழித்துவிட்டு, பண்பாட்டுக் கலை வளர்ச்சியில், சுற்றுச்சூழல் செலுத்தும் ஆதிக்கத்தை மூடி மறைத்துவிட்ட ஏற்றத்தாழ்வற்ற ஒரே நிலையில் நடைபோடும் நவ நாகரீக வாழ்க்கையைத் தோற்றுவிப்பதற்கு முன்னர், பிறந்தனவாதல் வேண்டும். இவ்வகைப் பழம் பாடல்கள் அனைத்தும், இப்போது அழிந்துவிட்டன. (நனி மிகப் பழம் பாடல்களின் மாதிரிகளாக, இப்போது நாம் பெற்றிருக்கும் பாக்களுக்குக், கிறிஸ்துவ ஆண்டின் தொடக்கத்திற்கு மிக மிக முற்பட்ட காலத்தை வகுக்க இயலாது.) அப் பழைய இலக்கியங்களெல்லாம் ஏன் மறையலாயின? ஹாரப்பா, மொகஞ்சோதாரோக்களில் நிகழ்ந்த அண்மைக்கால அகழ்

வாரய்ச்சிகளால் தெரியவருவதுபோல், இந்தியர்களுக்குக், கி. மு. 3,000 அல்லது 4,000 போலும் மிகப் பழைய காலத்திலேயே எழுதத் தெரிந்திருந்தது என்றாலும், நிலப்படைத் துணைத் தலைவர், திரு. வாடல் ஷோ (Lient col. Waddel show) அவர்களால் பொருளாயப்பட்ட, சிந்துவெளிப்பழைய கல்வெட்டுக்களின்படி, எழுத்துக்கலை, நீண்ட காலம்வரை, அரச வீரர்களின் வெற்றிச் செயல்களை வரிசைப்படுத்தி எண்ணப் பயன்பட்டதேயல்லாமல், இலக்கியப் பணிக்காகப் பயன்படுத்தப்படவில்லை என்பதை நாம் நினைவில் கொள்ளல் வேண்டும். வேத மந்திரங்களின் தெய்வீகத் தன்மையும், ஆரியவர்த்த ஆரியர்களை, நினைவுப்பாறைமீது பொறிக்க அல்லது செய்யுள் வடிவில் தரத் தூண்டவில்லை. சமயச் சார்பற்ற இலக்கியங்கள், இலக்கியத் திறனாய்வாளர்கள், அவற்றின் சிறப்புகளைச் சுட்டிக்காட்டி, மனித நினைவாற்றல் குறைவால் மறைந்துபோவதிலிருந்து, அவற்றைக் காக்க வேண்டிய விருப்பத்தைத் தெரிவித்த நிலையில்தான், ஓலை அல்லது காட்டுமரப்பட்டைகள் மீது எழுதப்பட்டன. இவ்வகையில், மிகவும் பழிக்கப்படு திறனாய்வாளர்களும், நாகரீக வளர்ச்சியில், பயனுள்ள ஒரு செயலைச் செய்தவர்களாயினர். சிறந்த திறனாய்வாளராம் தொல்காப்பியர் துணை இல்லாமல், பழந்தமிழர் வாழ்க்கை ஓவியத்தை, மறுவலும் வரைந்திருக்க நம்மால் இயன்றிராது. ஆகவே இலக்கியத்திறனாய்வாளர்கள், குறிப்பாக இந்தியாவில், நாகரீக வளர்ச்சிக்கு மிகச் சிறந்த பணிபுரிந்துள்ளனர். பிற நாடுகளைப் போலவே, தமிழ்நாட்டிலும், பண்டைத்தமிழ்ப் புலவர்கள், பறவைகளைப் போலத், தங்களை அறவே மறந்து பாடினார்கள். ஆரியர்கள், தென்னிந்தியாவில் வந்து வாழத் தொடங்கியது மட்டுமல்லாமல், தமிழ்மொழி, தமிழிலக்கியங்களைக் கற்று அம்மொழி இலக்கணங்களையும், அம்மொழியில் யாக்கப்பட்ட பாக்களையும் ஆராயத் தொடங்கிய பின்னரே இலக்கியத்தின் மீது எழுத்துக்கலை பொறிப்பதான தமிழ் இலக்கியம் எழுத்து வடிவம் பெறத் தொடங்கி, ஒருசில காலம் வரையாவது அழியாதிருக்கும் நிலையைப் பெற்றது.

நனிமிகப் பழைய தமிழ் இலக்கியங்களெல்லாம் அழிந்து விட்டன. முதன் முதலில் எழுதப்பட்ட தமிழ்ப்பாக்கள் ஒவ்வொன்றும், ஒரு சில வரிகளையே கொண்ட சின்னம் சிறு பாக்களே எனக் கொள்ளலாம். அதற்குப் பிற்பட்ட காலத்திலும், நான்கு வரிகளிலிருந்து இருபது அல்லது முப்பது வரிகளைக் கொண்ட பாக்களே தொடர்ந்து இயற்றப்பட்டன. சில நூறு வரிகளைக் கொண்ட பத்துப் பாட்டுப் பாக்கள், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில்தான், தோன்றத்தலைப்பட்டன. ஆரிய இலக்கியங்கள், தமிழின் மேதகவினை மேலும் வளப் படுத்தத் தொடங்கிய பின்னரே, நீண்ட காவியங்கள் எழலாயின. பரசுராமர்காலந் தொட்டு, தங்களை ஆரியத் தன்மையராக ஆக்கிக்கொண்டதன் காரணத்தால், தங்களைப் பிரம்மராக்கதர் எனக் கூறிக்கொண்ட, ஒருசில தென்னிந்தியரால், ஆரிய நாகரிகம் பின்பற்றப்பட்ட நிலையிலும், இராம - இராவணப் போருக்குப் பிறகும், மறுபடியும் மகாபாரதப் போருக்குப் பிறகும், ஆரிய நாகரீகத்தைப் பின் பற்றும் தென்னாட்டவர் எண்ணிக்கை உயர்ந்துவிட்ட நிலையிலும், பழந்தமிழ்ப் பாக்கள், ஆரிய ஆதிக்கம் சிறிதும் இன்றி, அதே நிலையில் பலநூறு ஆண்டு காலம் தொடர்ந்து இருந்து வந்துள்ளன. காரணம், தென்னாட்டு ஆரியர்களும், பெரும் பாலான தமிழர்களும், வேதகாலத்தில், வட இந்திய ஆரியர் களும், வட இந்திய தஸ்யுக்களும் போலவே, தங்கள் தங்கள் நாகரீகச் சாதனைகளிலும், வழிபாட்டு நெறிகளின் சிறப்பு களிலும், ஒருவரோடு ஒருவர் பெருமிதம் கொண்டு வாழலாயினர்.

**சமஸ்கிருதச் செல்வாக்கிலிருந்து விடுபட்ட பழைய தமிழ்ச் செய்யுள் :**

தமிழர் வாழ்க்கை, தம்முடைய போக்கின் ஒரே சீரான ஒழுங்கு நடையினைச், சமஸ்கிருதத் தன்மை வாய்ந்த எதனாலும், தீண்டப்படாமல், பல நூறு ஆண்டுகள், கடைப் பிடித்துச் சென்றது. பழைய தமிழ்ச் சொற்களஞ்சியம், தமிழ் மேதைகளின் உள்ளங்களைத் தம்மால் மட்டுமே

தொடவல்ல கருத்துக்களை வெளிப்படுத்த, முற்றிலும் தகுதி வாய்ந்ததுவாதலின், பழைய தமிழ் இலக்கியங்களில், ஒருசில சயஸ்கிருதச் சொற்கள் மட்டுமே இடம் கொண்டன. தமிழர்களில் பெரும் பிரிவினர், ஆரியப் பழக்கவழக்கங்கள், ஆரிய வாழ்க்கைத் தத்துவங்களால் பாதிக்கப்படாமல், தங்கள் பழைய வழிகளிலேயே வாழ்ந்து வந்தனர். ஆகவே, தமிழ்நாட்டில், தமிழர் வாழ்க்கை நீரோட்டம் தென்னாட்டு ஆரியர் வாழ்க்கை நீரோட்டம் என்ற, தங்கள் நீர்த்தாரைகளை ஒன்றுகலக்கவிடாத, அடுத்தடுத்த நேர்க் கோட்டில் ஓடிய இரு நீரோட்டங்கள் இருந்தன. தமிழரின் சிறப்பியல்பு, ஆரியரின் சிறப்பியல்போடு, முற்றிலும் வேறுபட்டது. தமிழர், காணும் இந்நிலவுலகை, உண்மை என ஏற்று, உலகவாழ்க்கை இன்பத்தில் மன நிறைவு கண்டனர். அழிக்கலாகாக் காதல் தூண்டுதல், போரின் வெறிகொண்ட மகிழ்ச்சி, மகளிர்பால் பெருங்காதல், பகைவர்பால் பெரும் வெறுப்பு, முறையே, அகம், புறம் என அழைக்கப்படும் இவை, அவர்பாட்டின் கருப்பொருளாதற்குப் போதுமானவை ஆகும். ஆரியர்கள், குறிப்பாக ஆக்க அழிவுகளுக்கிடையே ஆன இறுதிப் போராட்டமாம் பாரதப் பெரும்போருக்குப் பிற்பட்ட காலத்து ஆரியர்கள், மண்ணுலக, விண்ணுலக இன்பங்களின் வெற்றுஆரவாரங்களைப், போர்கள், கணப்பொழுது தோன்றி அழியும் காதலின்பம், மேற்கொண்டாரை அழித்துச் சாம்பலாக்கும் போரின்பால் பெருமகிழ்ச்சி ஆகியவற்றின்பால் மிகப்பெரிய வெற்றுஆரவாரங்களை நினைந்து நினைந்து ஏங்குவாராயினர். பிறப்பு, இறப்பு, மீண்டும் பிறப்பு என்ற வாழ்க்கைச் சக்கரத்திலிருந்து விடுதலை பெறுதற்கான வழிமுறைகளை இடைவிடாது ஆராய்ந்து வந்தனர். அதுபற்றிய ஆழ்ந்த சிந்தனை, அவர் உள்ளத்தில், என்றும் அழியாப் பெருமாற்றமாம் வைராக்கிய உணர்வை, அதாவது பற்றற்ற நிலையினைத் தோற்றுவித்துவிட்டது. ஆதலால், அழிபேறுடைய வாழ்க்கை இன்பத்தைத் துறப்பது, கால, இடங்களின் கட்டுப்பாடற்ற, அழியாப் பெருவாழ்வின் நிலைபேறுடைய பேரானந்த நுகர்விற்குக் கொண்டுசெல்லும்

என்ற நம்பிக்கையோடு, வைஷ்ணவர்கள், சைவ ஆகமிகள், ஜைனர்கள், பௌத்தர்கள் ஆகிய வைதிகர்களிடையே சந்நியாச வாழ்க்கை முறை வளரலாயிற்று. பழந்தமிழ்ப் புலவர்கள், இந்நிலவுலக வாழ்வினர். அவ்வுணர்வுடையவர்; மக்கள் உணர்ந்தவாறே, வாழ்க்கையின் நடைமுறை இயல்வுகளை, அழியா ஓவியங்களில் வடித்துக் காட்டினர். வேத காலத்துப் பிந்திய ஆரியர்கள், மண்ணுலக வாழ்வின் பிடிப்பிலிருந்து, பருத்திக் கம்பளம்போல் விடுதலை பெற்றுத் தருவதும், ஞாயிறும், திங்களும், ஏன், மண்ணும் விண்மீன்களும் புகுந்து ஒளிகாட்டமாட்டாப் பேருலகிற்குச் சென்றவர்க்கு மட்டுமே. மேலான அழியாப் பெருநிலை தரவல்லதுமான, படிப்படியாக வளர்ந்து நிற்கும், கட்புலனாகாக் கருத்துக்களுக்கு உரியராயினர். காணும் இந்நில உலகைப் பொறுத்த வரையில், தமிழரின் மனப்போக்கு, எதிலும், நலமே காணும் நம்பிக்கை உடையதாக, ஆரியரின் மனப்போக்கு, எதிலும், துன்பமே காணும் நம்பிக்கை அற்றதாக அமைந்துவிட்டது. அன்றைய தமிழர்கள், கடுமையான சாதிப் பிரிவுகளால் பிரிக்கப்படவில்லை. ஆனால், ஆரியர்கள், நான்கு வருணத் தலைவர்களாகப் பிரிவுண்டிருந்தனர்; பழைய தமிழ்ப் பாக்களின் மரபு சமஸ்கிருதப் பாக்களின் மரபிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருந்தது. ஆகவே, பெரும்பாலான தமிழர்களும், தென்னாட்டு ஆரியர்களும், மற்றவர் பண்பாட்டு நாகரீக நிலையைப் பாதிக்காத வகையில், அவரவர்க்குரிய தனி வாழ்க்கை முறையில் வாழ்ந்து வரலாயினர். பழந்தமிழ்ப் பாடல்களில் பெரும்பகுதி அழிந்துவிட்டன என்றாலும், கிறித்துவ ஆண்டுக்குப் பிறகும், சில ஆண்டுகாலம், சமஸ்கிருத நாகரீகம், தமிழ்ப்புலவர்களின் உள்ளத்தை ஆட்கொண்டுவிடவில்லை என்பதை உறுதி செய்வதற்குப் போதிய பாக்கள், இன்னமும் உள்ளன.

**தொகை நூல்கள் :**

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலும், அதற்குப் பிற்பட்ட ஆற்றாண்டுகளிலும், பழந்தமிழ்ப்பாக்களில், மறந்து

போகாமல் நினைவில் நின்ற எல்லாப் பாக்களும், பல்வேறு தொகை நூற்களில், ஒன்று தொகுக்கப்பட்டன. நேரிடையாக அல்லது ஒருவகையில் போரோடு தொடர்புடைய நானூறு எண்ணினைக் கொண்ட, வெவ்வேறு அளவுடைய பாக்கள், புறநானூறு என்ற தலைப்பின் கீழ்த் தொகுக்கப்பட்டன. அன்பின் ஐந்திணை ஒழுக்கத்தோடு தொடர்புடைய அகப்பாடல்கள், ஒவ்வொரு தொகையிலும் இடம் பெறும் பாக்களின் அடிகள் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டு, மூன்று தொகை நூல்களில் தொகுக்கப்பட்டன. ஒவ்வொரு தொகை நூலும் சரியாக, நானூறு, நானூறு பாக்களைக் கொண்டனவாக, குறைவான அடிகளைக் கொண்டவை குறுந்தொகைஎன்றதொகையிலும், எண்ணிக்கையில் இடைநிலையான அடிகளைக் கொண்டவை நற்றிணையிலும், நிறைந்த அடிகளைக் கொண்டவை நெடுந்தொகை அல்லது அகநானூற்றிலும் தொகுக்கப்பட்டன. தொகை நூல்களைத் தொகுத்தவர்கள், ஒவ்வொரு தொகைக்கும், ஒன்று கூடுவதோ, ஒன்று குறைவதோ இல்லாமல், செவ்வெண்ணாக, நானூறு பாக்களை எவ்வாறு பெற்றார்கள்? நானூறு என்ற செவ்வெண் கிடைக்க, ஒரு சிலவற்றை அவர்களே இயற்றிக்கொண்டார்களா? அல்லது சிலவற்றைக் கழித்துவிட்டார்களா? என்ற வினாக்களுக்கு விடை காண்பது இயலாது. ஒவ்வொரு தொகையிலும் இடம் பெற்றிருக்கும் பாக்கள் அனைத்தும் ஒரே காலத்தன அல்ல. அப்பாக்களில் இடம் பெற்றிருக்கும் மொழிநடை, கருப்பொருள், உவம உருவக அணிவகைகள், உள்ளுறைப் பொருள்களைக் கருத்தில் கொண்டு மதிப்பீடு செய்தால், அவற்றில் பிற்காலப் பாக்களிலிருந்து பழங்காலப் பாக்களை, வேறுபிரித்துக் காண்பது இயலாத ஒன்றன்று. உதாரணத்திற்குப், பழம் பாடல்களில் சமஸ்கிருதச் சொற்கள் பெரும்பாலும், அறவே இடம் பெறவில்லை. கூறப்பட்டிருக்கும் பழக்க வழக்கங்கள் ஐந்திணை நிலங்களுக்கே உரிய, பண்டைத் தமிழ்ப் பழக்க வழக்கங்களாம். கூறப்பட்டிருக்கும் மரவடை, மாவடைகள் இந்நிலங்களுக்கே உரியவை; கூறப்பட்டிருக்கும் மூட நம்பிக்கைகளும்,

தமிழ்த்தன்மை வாய்ந்தவை; ஆரியத் தன்மை வாய்ந்தன அன்று. ஆரியக் காவியக் கற்பனைகள் பற்றிய குறிப்பு எதுவும் அறவே இடம் பெறவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, அக்காலப் பாவாணர் எவரும் பிராமணர் அல்லர். கி. பி. முதல் ஆயிரத்தாண்டின், முற்பாதியின் இறுதி நூற்றாண்டில், பிராமணர்கள், தமிழ்ப் பாக்களை இயற்றத் தலைப்பட்டனர். அவர்கள் ஆண்டாண்டு காலமாக இருந்து வந்த தமிழிலக்கிய மரபுகளை, உறுதியாகப் பின்பற்றி வந்தாலும், ஆரிய எண்ணங்கள், கொள்கைகள், நம்பிக்கைகள், மூடநம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவை, தங்கள் பாக்களில் நுழைந்து இடம் பெற்றுவிடுவதை அவர்களால் தடுக்க முடியவில்லை. சென்னைப் பல்கலைக்கழக ஆராய்ச்சி மாணவர்கள், இப்பொருள் பற்றிய ஆராய்ச்சியினை மேற்கொண்டு, அப்பாக்களில் கிடைக்கும் அகச்சான்றுகளை நுண்ணிதாக மதிப்பீடு செய்து, இந்த ஆயிரத்து அறுநூறு (அகம், புறம், குறுந்தொகை, நற்றிணை) பாக்களில், பழம்பெரும் பாக்களைப் பிற்பட்ட காலத்துப் பாக்களிலிருந்து வேறுபடுத்திக் காண்பது விரும்பத்தக்கது; வேண்டத்தக்கது. ஆனால், அத்தகைய விரிவான ஆராய்ச்சி இல்லாமலே கூட, இப்பாக்களை நுணுக்கமாகப் படிக்கும் எவரும் இப்பாக்கள், நீண்ட கால அளவில், குறைந்தது ஐந்நூறு ஆண்டு கால அளவில் பாடப்பட்டுள்ளன என்பதை மன நிறைவோடு காண்பர் என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன்.

**அகநானூறு:**

இத்தொகை நூல்களில், அகநானூறு, உக்கிரப் பெருவழுதி ஆணைப்படி, இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் கூற்றுப்படி, அகப்பொருள் சூத்திரம் அறுபதின் உண்மைப் பொருள் காணும் புலவர் குழாமுக்கு, ஊமையாக இருந்தும் தலைமை தாங்கிய உருத்திர சன்மனால் தொகுக்கப்பட்டது ஆதலின், அது முதன் முதலில் தொகுக்கப்பட்ட தொகை நூல் ஆகும். அப்பாக்கள் அனைத்தும், திருமண

உறவுக்கு முற்பட்ட, திருமண உறவுக்குப் பிற்பட்ட, காதல் நிகழ்ச்சிகளைக் கருப்பொருளாகக் கொண்டுள்ளன. அப்பாக்களில், மூன்று, எழுதியோர் பெயர் அறியப்படாதன. ஏனைய பாக்கள், சிலர் பண்டைக்காலத்தைச் சேர்ந்தவராகவும், ஏனையோர், நான்கு, ஐந்தாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவராகவும், உள்ள 142 புலவர்களால் பாடப்பட்டுள்ளன. அப்பாக்கள், அவை பாடப்பட்டபோது சிறப்புற்றிருந்த அரசர்கள், குறுநிலத்தலைவர்கள் பற்றிய, பாராட்டத்தக்க பேரரசர்கள், பெரிய வள்ளல்களின் வரலாறுகளை எழுதத் துணைபுரியவல்ல குறிப்புகளை உள்ளடக்கிய எண்ணற்ற உவமைகளைக் கொண்டுள்ளன. அவற்றிலிருந்து மக்களின் அன்றாட வாழ்க்கைபற்றிய செய்திகளையும் பெறலாம். இத்தொகையில் உள்ள பாக்கள், 13 அடிகளிலிருந்து 37 அடிகள் வரை என அளவால் வேறுபட்டுள்ளன. முதற் காட்சியிலேயே கொள்ளும் காதல், அக்காதல் தொடர்பான நிகழ்ச்சிகளைக் கூறும் குறிஞ்சி, காதலர்களிடையே பல்வேறு காரணம் குறித்து நிகழும் பிரிவுகளையும், பிரிவு இறுதியில் இருவரும் ஒன்றுபடும் கூட்டத்தையும் கூறும் முல்லை, பாலை, நெய்தல், பரத்தையர் இடையீட்டால் மண வாழ்க்கையில் இடம்பெறும் ஊடல், கூடல்களைக் கூறும் மருதம் ஆகிய அகப்பொருள் குறித்த ஐந்து தலைப்புகளும் இத்தொகை நூலில் விளக்கப்பட்டுள்ளன. இப்பாக்கள், ஒருவகை செயற்கை முறையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. 1 முதல் 399 வரையான பாக்களில் ஒற்றைப்படை எண்ணுள்ள பாக்கள் பாலைத்திணை குறிக்கின்றன. 4 முதல் 394 வரையான பாக்களில் 4 என்ற எண்கொண்டு முடியும் எண்ணுடைய பாக்கள் முல்லைத் திணை குறிக்கின்றன. அதுபோலவே, 6 முதல் 396 வரையான பாக்களில் 6 என்ற எண் கொண்டு முடியும் எண்களைக் கொண்ட பாக்கள் மருதத் திணை குறிக்கின்றன. 2 முதல் 398 வரையான பாக்களில், 2, 8 என்ற எண்களில் முடியும் பாக்கள் குறிஞ்சித் திணை குறிக்கின்றன. பத்து என்ற எண் கொண்டு முடியும் எண்களைக் கொண்ட பாக்கள் நெய்தல் திணை குறிக்கின்றன.

ஆக, இறையனார் அகப்பொருளுக்கு உரைக்கப்பட்ட உரைகளுள் ஏற்புடைய உரை எது என்பதை மதிப்பீடு செய்த அந்த ஊமைப்பிள்ளை, தன் தொகை நூல் பாடல்களை வரிசைப்படுத்தும்போது, ஒருசீராக எண்ணும் அறிவும் கொண்டிருந்தான் போலும் !

**குறுந்தொகையும் நற்றிணையும் :**

குறுந்தொகையில் இடம் பெற்றிருக்கும் பாடல்கள், நான்கடி முதல் எட்டடி வரையானவையாகவும், நற்றிணையில் இடம் பெற்றிருக்கும் பாடல்கள், ஒன்பது முதல் பன்னிரண்டு அடிவரையானவையாகவும் உள்ளன என்பது ஒன்றினாலேயே அகநானூற்றிலிருந்து இவை வேறுபடுகின்றன. இம்மூன்று தொகை நூல்களையும், ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்திக் காட்ட, அவற்றின் பாக்களின் கருப்பொருளில் எதுவும் இல்லை. எல்லாப் பாக்களுமே, களவு கற்பு, என்ற இருநிலைக் காதல்களையும் கூறுகின்றன. அரசர்கள், குறுநில மன்னர்களைக் குறிப்பிடுகின்றன. தமிழர் கொள்கைகள், வாழ்க்கை அமைப்புகள் பற்றிய குறிப்புகள் நிறையக் கொண்டிருந்தாலும், ஆரியக் கடவுள்கள் ஆரிய நம்பிக்கைகளை அருகியே குறிப்பிடுகின்றன. ஐந்திணைப் பாடல்களைத் தொகுத்ததில், இவ்விரண்டிலும் எந்தவிதமான வரிசை முறையும் மேற்கொள்ளப்படவில்லை. நற்றிணை, பன்னாடு தந்த மாறன் வழுதி ஆணையாலும், குறுந்தொகை, பூரிக்கோ ஆணையாலும் தொகுக்கப்பெற்றன. இருவருமே, பெரும்பாலும் ஆறாவது நூற்றாண்டைச் சேர்ந்த அரசர்களாவர்.

**புறநானூறு :**

புறநானூற்றுப் பாடல்கள் நானூறும், யாருடைய ஆணையின் கீழ், யாரால் தொகுக்கப்பெற்றன என்பது அறியப்படவில்லை. மற்ற தொகை நூல்களோடு பல வழிகளில் வேறுபடுகின்றன. முதலாவது, அவை, அரசர்கள், குறுநில மன்னர்களின் போர்ச் செயல்கள், தங்களைப் பாடிய, புலவர் பாணர் போன்றார்க்கு அவர்கள் வழங்கிய

கொடைவளம் ஆகியவற்றைக் கூறுகின்றன. இரண்டாவதாகப், போர்கள் குறித்துக் கூறுவதோடு, போரில் உயிர் நீத்த அரசர்கள் கொடைவள்ளல்கள் மீதான கையறுநிலைப் பாடல்களையும் கொண்டுளது. முதல் பாதிப்பாக்கள், போர்கள் குறித்தும் அடுத்துள்ள பாதியில் பாதிப்பாக்கள், கையறு நிலை குறித்தும், கடைசிக் காற்பகுதி, மேற்கூறிய இரு பொருள்கள் மீதுமான, பிற்காலத்தே கண்டுபிடிக்கப் பட்ட, கலப்படப் பாடல்களின் பின் இணைப்பாம். மூன்றாவதாக, பெரும்பாலான பாக்களின் கீழ், அப்பாக்கள் பாடப் பட்ட சூழ்நிலையை விளக்கும், கொளு எனப்படும் பின்னுரைகள் இணைக்கப்பட்டுள்ளன. இக்கொளுக்கள், அவை கூறும் கருத்தின் ஒரு பகுதியை அப்பாக்களைப் படித்து அறிந்துகொண்டதன் மூலமும், ஒரு பகுதியை, வழிவழியாக வந்த காதுவழிச்செய்திகள் மூலமும் அறிந்துகொண்ட, அத்தொகை நூலைத் தொகுத்தவரின் பிற்காலத்தைச் சேர்ந்த ஒருவரால் எழுதப்பட்டனவாகத் தெரிகிறது. இத்தொகை நூலுக்குத், தெள்ளாறு எறிந்த நந்திவர்ம பல்லவன் (கி. பி. 830-854) காலத்தில் வாழ்ந்திருந்த, கி. பி, ஒன்பதாம் நூற்றாண்டுப் புலவர், பாரதம் பாடிய பெருந்தேவனார், பாடிய, கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றும், முன்னுரைப் பாடலாகக் கொடுக்கப்பட்டுளது. இக்கடவுள் வாழ்த்துப் பாடல் ஆகம சமயக்கொள்கைகள், கி. பி 6 முதல் 9 வரையான நூற்றாண்டுகளில், மக்களிடையே செல்வாக்குப் பெற்றுவிட்ட பின்னர் ஏற்றுக்கொள்ளப்பட்ட சிவனாகக்கொண்டு சிவன் புகழ் பாடுகிறது. இப்பெருந் தேவனார், சிவன் புகழ்பாடும் கடவுள்வாழ்த்து முன்னுரைப் பாடல்களை அகநானூறுக்கும், ஐங்குறுநூறுக்கும், முருகன் புகழ்பாடும் கடவுள் வாழ்த்துப் பாடலைக் குறுந்தொகைக் கும்; விஷ்ணு சகஸ்ராாம ஸ்லோகத்தின் மொழிபெயர்ப்பாக விளங்கும் திருமால் வாழ்த்துப் பாடலை நற்றிணைக்கும் கொடுத்திருப்பதால், இப்பெருந்தேவனார், பழங்காலப் பாடல்களைத் தொகுப்பதில் பெரு முயற்சி மேற்கொண்டார் எனத் தெரிகிறது.

**பிற்காலப்பாக்களைக் கொண்ட மற்ற நான்கு தொகைகள் :**

இந்நான்கு தொகை நூல்கள் அல்லாமல், ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலிநூற்றி ஐம்பது என்ற வேறு நான்கு தொகை நூல்களும் உள்ளன. இவை முன்னவை போல, வேறு வேறு ஆசிரியர்களால், பாடப்பட்ட வேறுவேறு பொருள் கொண்ட பாக்கள் கலந்துவரத் தொகுக்கப் பெற்றவை அல்ல. முதலாவதான ஐங்குறு நூறு, ஒவ்வொரு திணைக்கும் அத்திணைப் பொருளை விளக்க, ஓர் ஆசிரியரால் பாடப்பெற்ற நூறு நூறு பாக்களாக, ஐந்திணைக்குமாக ஐந்நூறு பாக்களின் தொகுப்பு ஆகும். அதுபோலவே கலித் தொகை, ஒவ்வொரு திணைக்கும் முப்பது என ஐந்து திணைக்குமாக, முன்னைய தொகைகளின் பாவகை போல் அல்லாமல், வேறு பாவகையில் யாக்கப்பட்ட, ஆனால் அதே பயன் குறித்த நூற்றிஐம்பது பாக்களைக் கொண்டது. பரி பாடல் என்ற பாவகையில், வைகை, திருமால், முருகன் என்ற தலைப்புகளில் பாடப்பெற்ற பாக்களின் தொகுப்பு, பரி பாடல். பதிற்றுப்பத்து, சேர அரசர்களின் புகழ்பாட இயற்றப்பட்ட பாக்களின் தொகுப்பு ஆகும். இத்தொகை நூல்களில், அவ்வப்போது நிகழ்கிற சிறப்பு நிகழ்ச்சிகளைக் கொண்ட பாடல்களே இடம்பெற்றிருக்க, முந்தைய நான்கு தொகை நூல்களில், குறிப்பிட்ட ஒரு கொள்கையை விளக்க, ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காகப் பாடப்பட்ட பாடல்கள் இடம் பெற்றுள்ளன, என்பதால், பிந்திய தொகை நூல்கள் நான்கும், முந்திய தொகை நூல்களிலிருந்து குறிப்பிடத்தக்க வகையில் வேறுபடுகின்றன. இலக்கியத் திறனாய்வு குறித்துத் தொல்காப்பியப் பொருளதிகாரச் சூத்திரங்கள் வகுத்த நெறிகளில் பாக்கள் புனையப்பட வேண்டும் என்ற எண்ணம், பிற்காலத்தில் வழக்கில் வந்தது. மேலும், பிற்கூறிய தொகை நூலை உருவாக்கிய பாக்கள், சிவன், விஷ்ணு குறித்த ஆரியக் கோட்பாடுகளும், ஆகம நெறி போதிக்கும் வழிபாட்டுமுறை களும், தமிழ்நாட்டில் கால் கொண்டுவிட்ட காலத்தை, வேறு வகையில் கூறுவதானால், சிந்தனையிலும், வழிபாட்டு முறை யிலும், தமிழர்கள், ஆரிய மயமாகிவிட்ட காலத்தைச்

சேர்ந்தனவாம். இப்பாக்கள் தமிழ்ச் செய்யுள் மரபுகளை, இன்னமும் கொண்டுள்ளன என்றாலும், அவை கூறும் சமயக் கருத்துக்கள், ஆகமகருத்துக்களுக்கேற்ப மாறுதல் பெற்று விட்டன. ஆகவே, முந்தைய தொகை நூல்களை உருவாக்கிய பாக்களில் சில, பிந்திய தொகை நூல்களைச் சேர்ந்த இப்பாக் களினும், மிகமிக முற்பட்ட காலத்தைச் சேர்ந்தன. இப்பாக் களும் பழம்பாடல்களே என எண்ணப்பட்ட பிற்காலத்தே, இத்தொகை நூல்களும், எட்டுத்தொகை நூல்கள் என்ற பொதுப்பெயரைப் பெற்றுவிட்டன.

பத்துப்பாட்டு :

பத்து நெடும் பாக்களைக் கொண்ட, பத்துப்பாட்டு எனும் பெயருடைய மற்றொரு தொகை நூலும் உளது. பத்துப்பாட்டு 103 அடிகள் முதல் 782 அடிகள் வரையுள்ள நீண்ட பாக்களைக் கொண்டது. அவற்றுள் காலத்தால் முற்பட்டதும், கரிகாலனின் தொடக்கநிலை வாழ்க்கையைப் பாடுவதுமாகிய பொருநராற்றுப்படை கி.பி. 400க்குச் சிறிது முற்பட்ட காலத்தில் பாடப்பட்டது. காலத்தால் கடைசியில் நிற்பதான திருமுருகாற்றுப்படை, கி.பி. ஆறாம் நூற்றாண் டின் இறுதிக்காலத்தைச் சேர்ந்தது. காலத்தால் முற்பட்ட பாட்டிலிருந்து பிற்பட்ட பாட்டுவரையான இப்பத்துப் பாட்டுப்பாக்களில், சமஸ்கிருதச் சொற்களின் படிப்படியான பெருக்கமும், நாட்டின் பெருகும் ஆரியத்தன்மையும், மிகத் தெளிவாகச் சுட்டிக்காணக் கூடியனவாம்; மேலும், அப்பாக் களில் இடம் பெற்றிருக்கும் வரலாற்றுக் குறிப்புகளோடு, அப்பாட்டு ஒவ்வொன்றும் பாடப்பட்ட காலத்தை உணரும் துணைச்சான்றாகவும், அவை கொள்ளத்தக்கலவாம். பத்துப் பாட்டு, முற்பட்ட காலத்தைச் சேர்ந்த அந்த நான்கு தொகை நூல்களோடு, பாக்களின் யாப்பு முறையிலும், இலக்கிய மரபு களிலும், பெரிய அளவில் வேறுபடுவன அல்ல. ஒவ்வொன்றும் கொண்டிருக்கும் நீளத்தால் மட்டுமே வேறுபடுகின்றன. கி.பி. நான்காம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரையான காலத்தில், தமிழர்கள் நடத்திய வாழ்க்கை

பற்றிய முழு ஓவியத்தை வரைதற்கு அவை, இன்றியமையா மதிப்புடையவாம்.

**பதினெண் கீழ்க்கணக்குப் பாக்கள் :**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் என்ற மூன்றாவது வகை நூல்கள் உள்ளன. அவை, பொதுவாக, ஒவ்வொன்றும் இரண்டு முதல் நான்குவரை அல்லது ஐந்துவரையான அடிகளைக் கொண்ட பாக்களைப் பெற்றுள்ளன என்பது இப்பாக்களின் சிறப்பு இயல்பாகும். இப்பதினெட்டு நூல் களில், சில நூல்கள் அகப்புறப்பாடல்கள் எவ்வாறு பாடப்பட வேண்டும் என்ற இலக்கண விதிகளை விளக்கும் எடுத்துக் காட்டுக்கள் ஆவதற்காகவே பாடப்பட்டுள்ளன. அவை, பழைய மரபுகளைக் கொண்டுள்ளன என்றும் சொல்லலாம். ஏனையவை, சிறப்பாக, அவற்றில் தலையாயதாம் திருக்குறள், பழந்தமிழ் இலக்கியங்களில் அறவே இடம் பெறாத, ஒழுக்க நெறிஉணர்த்தும் ஒருவகைப்பாக்களை அறிமுகம்செய்கின்றன. ஆன்மீக நோக்கிலிருந்து சிறந்த ஒழுக்க நிலையைக் கற்பிக் கின்ற, கலையுணர் நோக்கிலிருந்து, அணிநலம் வாய்க்க யாக்கப்பட்ட, கவர்ச்சி அற்ற வறண்ட அறிவுரை வழங்கும், செய்யுட்குரிய புகழ்வடிவிலிருந்து விடுபடாத பாக்களைக் கொண்ட, சமஸ்கிருத மொழியின் தர்ம, அர்த்த சாத்திரங்கள், பொருள்வளம் நிறைந்த சொற்செறிவுமிக்க மொழிநடைச் சூத்திரங்கள் ஆகியவற்றின் இணைப்பாகும். இப்புதுவகை இலக்கியம், பழைய தொகை நூல்கள், பத்துப்பாட்டு ஆகிய நூல்களுக்கு எழுச்சியூட்டிய பாக்களிலிருந்து முற்றிலும் வேறு பட்டனவாம். பதினெண் கீழ்க்கணக்கில், அறிவுரை கூறும் நூல்களின் காலம், ஐந்தாம் நூற்றாண்டில் தொடங்கி, எட்டாம் நூற்றாண்டுவரை நீண்டுசெல்கிறது. 19 அல்லது 20 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நவீன காலத்தவர்க்கு மேலே குறிப்பிட்ட அனைத்துப் பாக்களுமே, பழம் பாக்கள்தாம். பழைய என்பதன் பொருள் கூறப்படாதவரை, எல்லாமே பழமையானவைதாம். துரதிர்ஷ்டவசமாக, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய இம்மூன்று

தொகை நூல்களையும், ஒருசேர ஒரே காலத்தை ஒரே நூற்றாண்டைச் சேர்ந்தனவாக மதிப்பதும், அவற்றிலிருந்து தமிழ் இலக்கியங்களின் படிப்படியான வளர்ச்சி குறித்த வரலாற்றினை அறிய விரும்பும் ஆராய்ச்சியாளர்களால், ஒப்புக்கொள்ளத்தக்கன அல்ல என மறுத்து ஒதுக்கத் தக்கதான, வரலாற்றுக்குப் புறம்பான முடிவுகளைக் கொள்வதும் வழக்கமாகிவிட்டது.

---

## அதிகாரம் : XIII

# தமிழர் வாழ்க்கை: கி.மு. 500 முதல் கி.பி. 1 வரை

### மலைநாட்டில் காதல் :

கி.மு. 500 முதல் கி.பி. 1 வரையான இக்கால கட்டத்தில் தமிழ் அரசர்கள், அரசுகள் பற்றி, வட இந்தியாவிலும் சிலோனிலும் உள்ள, பாலி அல்லது சமஸ்கிருத இலக்கியங் களில் கிடைக்கக் கூடிய குறிப்புகள் அனைத்தும், முந்திய இரு அதிகாரங்களில் எடுத்துக் கூறப்பட்டன. இந்த ஐந்நூறு ஆண்டுகளில், எண்ணற்ற தமிழிலக்கியங்கள் பாடப்பட்டிருக்க வேண்டும். அப்படியில்லை என்றால், பின் வரும் ஓர் அதிகாரத்தில் குறிப்பிட இருப்பது போல், தமிழ்மொழி குறித்த, வியத்தகு நிலையிலான நனிமிகப் பொருந்தும் இலக் கணங்களை அகத்தியனாரும், தொல்காப்பியனாரும் இயற்றி யிருக்க இயலாது. அந்த இலக்கியங்கள் அறவே அழிந்து போயினவாக நம்பப்படுகிறது. என்றாலும். இப்போதுள்ள தொகைநூல்களில் இடம் பெற்றிருக்கும் பாடல்களில் சில, அக்காலத்தைச் சேர்ந்தனவாதல் கூடும் என நான் எண்ணுகின்றேன். அவற்றுள் ஒருசில, பாடினோர் பெயர் அறியமாட்டா நிலையின. இதற்குக் காரணம், அவை நனி மிகப் பழங்காலத்தைச் சேர்த்தனவாதலின், தொகை நூல் களில், அவை வரிசைப்படுத்திய காலத்தில், அவற்றைப் பாடியவர் பெயர் மறந்திருக்கக் கூடும். மேலும், அவற்றில் சமஸ்கிருதச் சொற்கள் இடம் பெறா நிலையால் அவை, தனிச் சிறப்புடையவாக மதிக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும், அவற்றில் குறிப்பிடப்பட்டிருக்கும் பழக்கவழக்கங்கள், முழுக்க முழுக்கத் தமிழர்க்கே உரியவாம். ஆரியக் கருத்துக்கள் பற்றிய குறிப்பு அவற்றில் அறவே இடம் பெறவேயில்லை. கிடைக்கும்

பாக்கள் அனைத்தையும் கணக்கில் கொண்டாலும், அவை ஒருசிலவே ஆயினும், அவற்றை, அக்காலத்திய இலக்கியங்களின் நினைவுச்சின்னங்களாகக் கொள்ளலாம். அவற்றிலிருந்து, தமிழ்நாட்டு ஐந்திணைகளில், ஒவ்வொரு திணைக்கும் உரியவாய சில பாக்களை ஈண்டு எடுத்துக்காட்டுகிறேன். அப்பன்னெடும் காலத்தில் தமிழர் நடத்திய வாழ்க்கைநிலை பற்றிய படக்காட்சியை, மறுவலும் உருவாக்கிக் காணப்படிப்பார்க்கு அவை துணை புரியும். இந்த வாழ்க்கை முறை பெரும்பாலும் அக்காலத்திற்கு முன்பும், அக்காலத்திற்குப் பின்பும், இருந்த வாழ்க்கை முறையேதான் என்பதும் காணப்படும். புறத்நூண்டுதல் இன்றி, அகத்தூண்டுதலால் எழும் இயற்கைக் காதல் நிலை, பின்வரும் சிறுபாட்டில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. "என் தாயும் உன் தாயும் ஒருவருக்கொருவர் எத்தகைய உறவின் முறையினராவர்? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவினர்? உள்ளத்தால் இப்போது ஒன்றுபட்டு நிற்கும் நானும், நீயும், ஒருவரையொருவர், எவ்வாறு முன்பு அறிந்திருந்தோம்? இம்மூன்றும் இல்லையாகவும், செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர், அம்மண்ணோடு கலந்து அதன் தன்மையை அடைதல் போல, அன்புடைய நம்நெஞ்சங்கள், தாமாகவே ஒன்று கலந்துவிட்டனவே.

"யாயும் ஞாயும் யாரா கியரோ?
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்?
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே.

—குறுந்தொகை : 40

காதலர், என்றும்போலவே, அன்றும் மன உறுதியுடையரல்லராயினர். அதனால் காதலனால் கைவிடப்பட்ட கன்னிப்பெண், அக் கைவிடப்பட்டமையை எண்ணி எண்ணிப் புலம்பத் தொடங்கிவிட்டாள், "நானோ, இவ்விடத்திலேயே

இருக்கிறேன்; என்னோடு பிரியாமல் ஒன்றியிருந்த என் பெண்மை நலனோ என்றால், தினைப்புனம் காத்து நிற்பார் விடும் கவண் கல்லின் ஒலிகேட்டு அஞ்சி, காட்டுயானை, தான் கைப்பற்றியிருந்த பசிய மூங்கிலைக் கைவிட்டதாக, அம் மூங்கில், மீனைக் கவர்ந்துகொண்ட தூண்டிற்கோல் போல, விரைந்து மேலே எழும் இடமாகிய காட்டு நாட்டானாகிய என் காதலனோடு, நாங்கள் பழகிய அவ்விடத்திற்கு ஓடி விட்டதே!

''யானே, ஈண்டையேனே! என் நலனே,
ஏனல் காவலர் கவண்ஒலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீன் எறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொடு ஆண்டுஒழிந் தன்றே!''

—குறுந்தொகை : 54

ஊர்வம்பு பேசித் திரியும் அயலில் மகளிர், காதலர் குறித்து அம்பல் உரைக்கலாயினர். ஆதலால், அப்பெண்ணின் வளர்ப்புத் தாயாம் செவிலியின் மகளாய், அப்பெண்ணோடு வளர்ந்தவளாய தோழி ''நம் காதலை இனியும் மறைத்துப் பயன் இல்லை. அதை ஊர் அறிய உலகு அறிய உணர்த்தி விடுதலே நலம்'' என மறைத்துமொழிகிளவியால் கூறத் தொடங்கினாள்: ''மகளே! உன் மார்பை விரும்பும் நம் இனிய தலைவன், மலைவளர் சந்தனம் பூசிய மார்பில் முத்துமாலை அணிந்துகொண்டு, சுனையில் வளர்ந்த குவளையின், வண்டுபட விரிந்த மலர்களால் ஆன கண்ணியைத் தலையில் புனைந்துகொண்டு, நம் வீட்டிற்கு நள்ளிரவில் வந்து செல்கின்றான்; அக்காலத்தில், அவன் வந்து செல்லும் வழியில், மன்றங்களில் வாழும் மரையா வெகுண்டு ஓடுமாறு, அதன் ஆணைக் கொன்றுவிட்டு, சிவந்த கண்ணும், கருத்த உடலும் வாய்ந்த புலி முழங்கும். ஆகவே, நம் களவு ஒழுக்கத்தை மறைக்கும் காலம் இதுவன்று; நம் களவு ஒழுக்கத்தைப்

பலர் அறிய நான் கூறிவிடுவேன். அதை நீயும் விரும்பி ஏற்றுக்கொள்வாயாக''.

> ''மலைச் சேர் அஞ்செஞ் சாந்தின், ஆர மார்பினன்,
> சுனைப்பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன்,
> ஒருநாள் வந்து நம்மனைப் பெயரும்;
> மடவரல் அரிவை? நின் மார்புஅமர் இன்துணை
> மன்ற மரையா இரிய ஏறுஅட்டுச்
> செங்கண் இரும்புலி குழுமும்; அதனால்
> மறைத்தற் காலையோ அன்றே;
> திறப்பல்; வாழி, வேண்டு; அன்னை நம் கதவே''
>
> —குறுந்தொகை : 321

காதலர் இருவரையும் ஒன்றுபடுத்துவதின் முன்னர், சமுதாய முறைப்படி இன்றியமையாது நடைபெற வேண்டிய களவு வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கும் மணிமுடியாம் திருமணத்தைக், காதலன் காலம் கடத்திக்கொண்டே வந்தால், அவன் காதலியை நோக்கி வந்தபோது, தோழி, ''வரைந்துகொள்வது விடுத்து, இவ்வாறு வருவதைக் கைவிடுக'' எனக் கூறி மறுத்து அனுப்புகிறாள். ''ஓ மலை நாடனே! மழை பெய்து ஓய்ந்த மேகங்கள், மலையிலே சென்று இடங்கொண்டுவிட்டன; தேனடைகள் தொங்கும் மலையுச்சியிலிருந்து, அருவிகள் ஆரவாரம் செய்துகொண்டே உருண்டோடி வீழ்கின்றன; அழகிய மலையில் நிற்கும் வேங்கை மரங்கள் நாட்காலையில் நறுமண மலர்களைக் கொட்டுகின்றன. தன் தோகை அழகோடு, அவ்வேங்கை உதிர்த்த மகரந்தப் பொடிகளாலும் மூழ்கப்பெற்று மகிழ்ந்து ஆடி இளவெயில் இன்பத்தை நுகர்கின்றன மயில்கள். இத்தகு இன்பக் களஞ்சியமாய்த் திகழும் மலைநாட்டுக்கு உரியனாகிய நீயோ, இவளுக்கு நீங்குதல் இல்லாக் காம நோயைத் தந்துள்ளாய். இதை யாரிடத்தில் கூறி நோவேன்? வந்து புணர்ந்து செல்லும் ஒவ்வொரு நாளிலும், இனிய சொற்களை இவள் விரும்புமாறு கூறுகின்றனை; அவ்வாறு

கூறும் நீ, கூறியவாறே நடந்து மணந்துகொள்வதே, இவள் உயிரைக் காக்கும் வழியாம் என்பதை மட்டும் கூறியதை மறுத்து மயங்குகின்றனை; இதை நான் யாரிடம் சென்று முறையிடுவேன்?''

''பெய்துபோகு எழிலி வைகுமலை சேரத்,
தேன்தூங்கு உயர்வரை அருவி ஆர்ப்ப,
வேங்கைதந்த வெற்புஅணி நன்னாள்
பொன்னின் அன்ன பூஞ்சினை நுழைஇக்
கமழ்தாது ஆடிய கவின்பெறு தோகை
பாசறை மீமிசைக் கணம்கொள்பு ஞாயிற்று
உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடன்
நின்மார்பு அணங்கிய செல்லல் அருநோய்
யார்க்கு நொந்துரைக்கோ யானே! பன்னாள்
காமர் நனிசொல் சொல்லி
ஏமம்என்று அருளாய், நீமயங் கினையே''

—நற்றிணை : 396.

இப்பாக்கள், மலைநாட்டுக்குரியதான, மணத்திற்கு முந்தியதான களவுக் காதல் பற்றியனவாம். குறிஞ்சித் திணைக்கு உரியவாம்.

முல்லையில் காதலர் :

காடு சார்ந்த நிலத்து மக்கள் ஒழுக்கமாகிய முல்லைத் திணை, சிறு பிரிவின் துயர் ஆற்றமாட்டாது வருந்தி, இருத்தலைக் குறிப்பதாகும். போர் முடிந்து மீளும் காதலன், தேர்ப்பாகனிடம் பின்வருமாறு கூறுகிறான்: ''நம் அரசனும் செய்தற்கரிய போரை முடித்துக்கொண்டான். மலைச் சுனைகளில், மகளிர் கண்போல் ஒளிவிடும் குவளைகள் மலர்ந்துவிட்டன. பரந்து அகன்ற காடெங்கும் வேங்கை, தன் மலர்களை உதிர்க்கலாயின. இம்மெனும் ஒலி எழ, வண்டுகள் எத்திசையும் பறக்கலாயின. பேரூர்களின் அகன்று

நீண்ட தெருவுபோலும் பெருவழிகளில் நெடிது நடை போட்ட நம் வீரர்கள் ஆங்காங்கே இருந்து இளைப்பாறலா யினர். வெண்காந்தள் மலரின் பெரிய இதழ்கள், குதிரை களின் கவிழ்ந்த குளம்புகளால் மிதியுண்டு, வெண்சங்கு உடைந்து சிதறினாற்போல் சிதறுண்டு போயின. இவை கண்டு தோள்வலிக்க விரைந்து மீளும் நம் வருகையை, அழகிய புள்ளிகள் பொருந்திய அல்குலையும், இனிய மொழி யையும் உடையளாய்த் தன் மகளை அழாமல் ஆற்றுவான் வேண்டிப் பொய்க்கதைகளைக் கூறிக்கொண்டிருக்கும் நம் காதலிக்கு, நிமித்தம் காட்டும் காக்கைகள் கரைந்து அறிவித் திருக்குமோ?

''இறையும் அருந்தொழில் முடித்தெனப், பொறைய
கண்போல் நீலம், சுனைதொறும் மலர,
வீதா வேங்கைய வியன்நெடும் புறவின்
இம்மென் பறவை யீண்டுகிளை இரிய,
நெடுந்தெருவு அன்ன நேர்கொள் நெடுவழி
இளையர் ஏகுவனர் பரிப்ப, வளையெனக்
காந்தள் வள்ளிதழ் கவிகுளம்பு அறுப்பத்
தோள்வலி யாப்ப ஈண்டுநம் வரவினைப்
புள்அறி வுறீஇயன கொல்லோ? தெள்ளிதின்
காதல் கெழுமிய நலத்தள்; ஏதில்
புதல்வற் காட்டிப் பொய்க்கும்
திதலை அல்குல் தேமொழி யாட்கே''

—நற்றிணை : 161

பிரிந்து வாழும் காலம் நனிமிகக் குறுகியதே ஆயினும், அப் பிரிவு தரும் துயர், தாங்கமாட்டாக் கொடுமை வாய்ந்த தாம். காதலனைப் பிரிந்தாள் ஓர் இளமகள், தன் தோழி முன் இவ்வாறு புலம்புகிறாள். ''ஞாயிறு மறைந்துவிட்டான்; முல்லை மலர்ந்து விட்டது; ஞாயிற்றுக் கதிர்களின் கொடுமை யும் தணிந்து விட்டது; நம்மைச் செயலற்றவராக்கும் கொடிய

இம்மாலைக் காலத்தை, இரவை எல்லையாகக் கொண்டு கடந்துவிடலாம்; ஆனால், தோழி! அவ்வாறு மாலைக் கொடுமையைக் கடந்துவிடுவதால் யாது பயன்? அடுத்துக் கடக்க வேண்டிய இரவு என்னும் கடல் இருக்கிறதே, அது கடத்தற்கரிய கடலினும் பெரிதாக உளதே! அதை எவ்வாறு கடப்பது?''

''எல்லை கழிய, முல்லை மலரக்
கதிர்சினம் தணிந்த கையறு மாலையும்
இரவுவரம் பாக நீந்தினம் ஆயின்,
எவன்கொல்? வாழி! தோழி!
கங்குல் வெள்ளம், கடலினும் பெரிதே!''

—குறுந்தொகை : 387

**நெய்தலில் பிரிவுப் பெருந்துயர் :**

பிரிந்துறையும் பெண்ணின் உள்ளத்தை அலைக்கழித்து நோவப்பண்ணும் நெடும்பிரிவு, கடல் சார்ந்த நிலத்து ஒழுக்கமாம் நெய்தல் திணையோடு தொடர்புடையது. ''வெள்ளை நாரைகள் ஓயாது ஒலிக்கும், இனிய மணம் நாறும் கடற்கரையில், மலர் செறிந்த சோலையில் உள்ள அன்றலர்ந்த புது மலர்களைக் கலக்கச் செய்து வீசும் அலைகள் வந்து மோதி, உடைந்து பின்னிடும் துறைக்கு உரியவனாகிய தலைவனோடு, பல்லெல்லாம் தோன்ற வாய்விட்டுச் சிரித்து அன்று மகிழ்ந்ததன் பயன், இன்று நம் இயற்கை அழகு அழிய, நம் தோள், நலம் கெட்டு மெலிய, அல்லல்படும் நெஞ்சோடு இரவெல்லாம் உறங்காமல், பசலையுற்று நாம் அழிந்து போவதுதானோ?''

''தொல்கவின் தொலைந்து, தோள்நலம் சாஅய்,
அல்லல் நெஞ்சமொடு அல்கலும் துஞ்சாது
பசலை யாகி விளிவது கொல்லோ?
வெண்குருகு நரலும், தண்கமழ் கானல்,

பூமலர் பொதும்பர் நாண்மலர் மயக்கி
விலங்குதிரை உடைதரும் துறைவனொடு
இலங்குஎயிறு தோன்ற நக்கதன் பயனே''.
— குறுந்தொகை : 381

பிரிவுத் துயர் பொறாது துயர் உறும் ஓர் இளமகளை, அவள் தோழி தேற்றும் முறை இது: ''தோழி! சுரத்தின்கண் உள்ள இலுப்பை மரத்தின் வெண்ணிறப் பூப்போலும் மெத்தென்ற தலையை உடைய இறால்மீன்களுடன், திரளாகக் கிடைக்கும் பிற மீன்களையும் அகப்படுத்திக்கொள்ளுமாறு பின்னி விரித்த வலைகளை உடைய பரதவர்களின், வண்மைமிக்க தொழிலில் வல்லவர்களாகிய சிறுவர்கள், காட்டில் மரங்களில் ஏறி நின்று மானினங்களை வெருட்ட விரும்பி விரைந்து செல்லும் வேட்டுவச் சிறார்களைப் போல, மீன்பிடி படகில் ஏறிக்கொண்டு, கடல்பரப்பில் நெடுந்தொலைவு சென்று, மரங்களை ஈர்த்துப் பிளக்கும் வாள் போலும் வாயையுடைய சுறா மீன்களுடன், பிற பெரிய மீனினங்களையும் பிடித்து, அவற்றைத் துண்டித்த இறைச்சிகள் நிரப்பிய தோணிகளோடு, மீண்டுவந்து, கடற்காற்று சுழன்று அடிந்துக் குவித்த மணல் பரப்பில் இறங்கும் உப்பங்கழி சூழ்ந்த நம் பாக்கத்தில், கல்லென ஆரவாரம் எழ, நம் தலைவன் தேர்வந்து நிற்கும். இது உறுதி; ஆகவே, நீ வருந்தாதே''.

''அத்த இலுப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇயர்,
வரிவலைப் பரதவர் கருவினைச் சிறாஅர்,
மரன்மேற் கொண்டு மான்கணம் தகைமார்
வெந்திறல் இளையர் வேட்டெழுந் தாங்குத்
திமில்மேல் கொண்டு திரைச்சுரம் நீந்தி,
வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி
நிணம்பெய் தோணியர் இடுமணல் இழிதரும்
பெருங்கழிப் பாக்கம் கல்லென
வருமே, தோழி! கொண்கன் தேரே''.
— நற்றிணை, 111

பிரிவால் வருந்தும் காதலர்களோடு, கடற்கரை கொண்டிருக்கும் இம்மரபுத் தொடர்பை விளக்கும் புலவர்கள், அதே நிலையில், அக்கடற்கரைவாழ் மீனவர்கள், அவர்தம் வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை விளக்கவும் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

**பாலையில் பெரும் பிரிவு :**

பாலை எனப்படும் ஒருவகைப் பாட்டில், ஒன்று, காடுகளுக்கும் அப்பாற்பட்ட தொலை நாடுகளுக்கும் காதலன் சென்றுவிட்டதைக் கூறும். அல்லது, காதலனோடு அவனூர் சென்றுவிட்ட மகளின் தாய், செவிலி போன்றோரின் துயரைக் கூறும். முன்னதற்கான ஓர் எடுத்துக்காட்டு இது: "வாயிற்கண் வந்து நின்று இரப்பவர்க்கு அவர் விரும்புவன கொடுத்து அவர் இன்மையைப் போக்க வேண்டியது இல்லறத்தார் கடன்; அது செய்ய மாட்டா நிலையுற்ற நமது தலைவர், என் கண்ணையும், தோளையும், தண்ணெனக் குளிர்ந்து மணம் நாறும் கூந்தலையும், திதலை படர்ந்த அழகிய அல்குலையும் பலவாறு புகழ்ந்தபடி, நேற்றும் இங்கேயே இருந்தார். இன்று அவரைக் காணோம். பெரிய நீர்ப்பரப்பு போல் காணப்படும் கானல் நீராம் பேய்த்தேரை, மரங்களே இல்லாமல் நீண்ட அப்பொட்டல் காட்டில், மான் கூட்டம் நீரென்று மயங்கி, அது நோக்கி விரையும் கொடுமைமிக்க, மண்ணால் செய்து சுடப்பட்ட தயிர்த்தாழியில், மத்திட்டுக் கலக்கிய காலத்து, வெப்பத்தால் கைகூடாது சிதறிக்கிடக்கும் வெண்ணெய் போல, உப்புப் பூத்துக் கிடக்கும் களர் நிலத்தில் ஓமை மரங்கள் மட்டுமே நெருங்க வளர்ந்து கிடக்கும் காட்டில், வெயில் நிலைபெற்று நிற்பதால் வெம்மை மிக்க பாலை நிலத்தில் தனியாகச் சென்றுகொண்டிருப்பார் என அண்மையில் உள்ள அயலார் கூறுகின்றனர். நான் இக்கொடுமையை எங்ஙனம் ஆற்றுவேன்?"

"கண்ணும், தோளும், தண்ணறும் கதுப்பும்
திதலை அல்குலும் பலபா ராட்டி,

நெருநலும் இவணர் மன்னே; இன்றே,
பெருநீர் ஒப்பின் பேஎய் வெண்தேர்
மரன்இல் நீளிடை மான்நசை யுறாஉம்
சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பிடத் தன்ன
உவர்எழு களரி ஓமையம் காட்டு
வெயில்வீற் றிருந்த வெம்மலை அருஞ்சுரம்
ஏகுவர் என்ப தாமே; தம்வயின்
இரந்தோர் மாற்றல் ஆற்று
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே''

— நற்றிணை : 84

காதல் திருமணம் ஏற்றுக்கொள்ளப்பட்ட சமுதாய முறைதான் என்றாலும், தன் மகள், தங்களை மறந்து, அவள் விரும்பும் காதலனோடு அவனூர் சென்றுவிடுவதால் ஏற்படும் மனக்கலக்கத்தை எந்தத் தாயும் தாங்கிக்கொள்ள மாட்டாள். தன் மகள், அவள் விரும்பும் காதலனை அவளே தெரிந்துகொண்டு மகிழ்வதை அவள் தாய் மறுப்பதில்லை என்றாலும், அண்டை அயலார், அது குறித்துக் கூறும் வம்பு உரைகள் கேட்ட வழிப் பெரிதும் வருந்துவள். அவ்வகையில் வந்தது இப்புலம்பல். "கரிய எருமைக்கு அண்மையில் பிறந்த பெரிய காதுகளை உடைய கன்று, புதுமலர்கள் உதிர்த்த தாதுக்கள் எருவாகக் குவிக்கப்பட்டிருக்கும் தொழுவத்தில் கிடந்து இனிதே உறங்கத்தக்க வளம் நிறைந்த வாழ்தற்கினிய மாளிகையையும் என்னையும் இங்கே விடுத்து, தன்னுடன் வரும் காளைபோலும் இளையோன் கூறும், அளவு-கடந்த பொய்யுரைகளில் மயங்கி, நெடுந்தொலைவில் உள்ள அவன் ஊரை அடைய விரும்பி, பசியெடுத்தபோது, உண்ணுவதற்கு வேறு உண்பொருள் கிடைக்காமையால், வழியிடையில் உள்ள நெல்லிமரச் சோலையில் உதிர்ந்து கிடக்கும் முற்றித் தேர்ந்த காய்களைத் தின்று, நீர் வறண்டு கிடக்குஞ் சுனையில் ஒரு சிறிதே தேங்கி நிற்கும் நீரைக் குடித்து,

செல்லும், நெய்தல் மலர்போலும் மையுண்ட கண்களை உடைய, என் மகளை, பனங்குருத்துக்களைப் பிளந்து பதனிடுவான் வேண்டிப் போட்டுப் பரப்பும், மாலைப் போதில் விரிந்த நிலவொளியிலே சென்று, தேடிப் பின்சென்று காணும்படியாகச் செய்த, இதற்கு முன்னரே, என்னைப் பெரிய கரிய தாழியில் இட்டு அடக்கம் செய்வதற்கு ஏற்ப, என் உயிரைக் கொண்டு செல்லாத அந்தக் கூற்றுவன் தன் வலி அழிந்து, அத்தாழியில் இட்டுக் கவிக்குமாறு இறந்து போகக் கடவனாக''.

> ''இரும்புனிற்று எருமைப் பெருஞ்செவிக் குழவி,
> பைந்தாது எருவின் வைகுதுயில் மடியும்
> செழுந்தண் மனையோடு எம்இவண் ஒழியச்
> செல்பெரும் காளை பொய் மருண்டு, சேய்நாட்டுச்
> சுவைக்காய் நெல்லிப் போக்கரும் பொங்கர்
> வீழ்கடைத் திரள்காய் ஒருங்குடன் தின்று
> வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த,
> குவளை உண்கண் என்மகளோ ரன்ன
> செய்போழ் வெட்டிப் பெய்த லாய
> மாலைவிரி நிலவில் பெயர்புபுறம் காண்டற்கு
> மாயிரும்தாழி கவிப்பத்
> தாவின்று கழிகஎற் கொள்ளாக் கூற்றே.''
>
> —நற்றிணை : 271

காதல் கொண்டாரை அடைவதில் ஏற்பட்டுவிடும் காலக் கழிவின் நீட்சி, காதல் உணர்வை, இயல்புக்கு மாறான வகையில் வெளியிடுவதாம் முறையை வளர்த்துவிட்டது; அதுவே, காதற்பாட்டின் - அகத்துறைப் பாட்டின் - ஒரு பொருளாகவும் ஆகிவிட்டது. காதலில் தோல்வியுற்ற ஒருவன் மேற்கொள்ளும் நனிமிகக் கொடுமை வாய்ந்த முறை, பனை மடல்களால் ஆன குதிரை மீது அமர்ந்துகொள்ளும் மடலேறுதல் என்பதாம். இதை விளக்க, பிற்காலப் பாடல்கள்

ஈண்டு எடுத்துக் காட்டப்படும். "காமநோய் தணித்தற்கு இயலாவாறு முதிர்ந்துவிட்டால், ஊர்ந்து செல்லும் குதிரை என்று பனைமடலால் ஆன குதிரைமீதும் ஏறிக்கொள்வர்; மாலை என்று, சூடத்தகாத, குவிந்த அரும்புகளை உடைய எருக்கமலர்களால் ஆன மாலையையும் சூடிக்கொள்வர். தெருவில், பலர் பழிக்க வலம் வருதலும் செய்வர். அந் நிலையிலும் தம் காதல் நிறைவேறாதாயின் உயிர் விடுவதும் செய்வர்."

> "மா என, மடலும் ஊர்ப; பூ எனக்
> குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப;
> மறுகின் ஆர்க்கவும் படுவ;
> பிறிதும் ஆகுப; காமம்காழ்க் கொளினே."
>
> — குறுந்தொகை; 17

'நெஞ்சே! அழகு மிகுந்து விளங்கும், அசைந்து அசைந்து செல்லும் நடையுடையவளாகிய நம் காதலி, நம்மீது இரக்கம் கொண்டிலள்; இனி நாம் விடும் தூதாக, மிக உயர்ந்த பனை மரத்தில் விளைந்து முதிர்ந்த பெரிய மடல்களால் பண்ணிய குதிரைக்கு, மணிகளைப் பூட்டி, பெரிய மலர் மாலையையும் முறைப்படி சூட்டி, நாம் வெள்ளெலும்புகளை மாலையாக மார்பில் அணிந்துகொண்டு, பார்ப்பவரெல்லாம் இகழுமாறு அம்மடல் மாமேல் அமர்ந்து, ஒருநாள், நம் உயிரோடு பிறந்த நாணத்தையும் கைவிட்டு, அவள் உறையும் ஊர்த்தெருவில் திரிவதுதானோ?

> "விழுத்தலைப் பெண்ணை விளையல் மாமடல்
> மணிஅணி பெருந்தார் மரபில், பூட்டி,
> வெள்ளென்பு அணிந்து பிறர்எள்ளத் தோன்றி,
> ஒருநாள் மருங்கில் பெருநாண் நீக்கித்
> தெருவின் இயலவும் தருவது கொல்லோ?

கவிந்துஅவிர் அசைநடைப் பேதை
மெலிந்திலள்; நாம் விடற்கு அமைந்த தூதே''
— குறுந்தொகை ; 182

காதலனை ஏற்றுக்கொள்ளப் பிடிவாதமாக மறுத்திருக்கும் ஓரிளம் பெண்ணின் தோழி, அவளுக்குப் பின் வருமாறு கூறுகிறாள்: ''உணவு உண்ணமாட்டா ஒரு குதிரையைப் பனைமடல்களால் பண்ணி, அதற்குச் சிறிய மணிகளைக் கட்டி, முதுகில் இட்ட கலன் நழுவாதவாறு பின்னே கட்டும் வார்க்கசிகையும் கட்டி, சிறுசிறு அரும்புகளைக் கொண்ட எருக்கமலர் மாலை அணிந்த ஓரிளைஞன் அதில் வீற்றிருக்க: நம் ஊர்க்குறும்பு மிக்க இளஞ்சிறுவர்கள், நம்மூர்த்தெருவில், எம்பின்னே, தொடர்ந்து ஈர்த்து வரலாயினர் ; என்னே அவர் செயல் !

''சிறுமணி தொடர்ந்து பெருங்கச்சு நிறீஇக்
குறுமுகிழ் எருக்கம் கண்ணி சூடி,
உண்ணா நல்மா பண்ணி, எம்முடன்
மறுகுடன் திரிதரும் சிறுகுறு மாக்கள்.''
—நற்றிணை : 220

பெருந்திணை என வழங்கப்படும் இத்தகைய பாடல்கள், இறை வழிபாட்டுப் பாடல்கள் பாடத் தொடங்கிவிட்ட கி. பி. 600க்குப் பிறகு, காதலன் கடவுளாக, அவன் மீது கொண்ட காதல் கைகூடாததாகப் பாடப்படும் ''மடல்'' எனும் ஒருவகைப் பாடலுக்கு வழிசெய்துவிட்டன். ஆகவே, அவை மிகவும் சுவையுடையவாயின.

**மக்களின் அன்றாட வாழ்க்கை :**

மக்களின் காதல் வாழ்க்கை மட்டுமல்லாமல் அக்காலத்திய, அவர்களின் அன்றாட வாழ்க்கை நிலைகளும் அப்பாடல்களில் வரைந்து காட்டப்பட்டிருக்கும். ஆனால், அப்பாடல்களெல்லாம் அழிந்துவிட்டனவாதலின், மக்கள் நடத்திய அன்றாட வாழ்க்கை நிலை பற்றிய ஒரு படத்தை,

ஒரு நிலத்தை அடுத்து ஒருநிலமாக, எழுதிக்காண, அடுத்து வந்த காலத்தைச் சேர்ந்த சில பாடல்கள், ஈண்டு எடுத்துக் காட்டப்படுகின்றன. இருவேறு காலங்களில் மக்கள் வாழ்க்கை முறைகளில் பெரிய வேறுபாடு இருக்காது.

**மலைநாட்டில் :**

காதல் ஒழுக்கத்தின் முடிந்த நிலையாம் முறையான திருமணச்சடங்கு விரைவில் நிகழ்ந்துவிடும் என்ற காதலியின் நம்பிக்கை இடம்பெற்றிருக்கும் பின்வரும் பாட்டில், மலை நாட்டு மக்களின் அன்றாட வாழ்க்கைமுறை பற்றிய ஒரு விளக்கமும் காணக் கிடைக்கும்.

''தனக்கு வேண்டும் இரையைத் தேடிப்புறப்பட்டு, அகன்ற வாயையுடைய ஆண் கரடி, வழியில், மேலே வளைவு வளைவான வரிகள் கிடக்கும் புற்று ஒன்று இருக்கக் கண்டு, அதைப் பெயர்த்து, அதன் உள்ளே அடங்கியிருக்கும் நல்ல பாம்பும் ஒடுங்கி நடுங்கிவிடுமாறு முழங்கி, புற்றினுள் வாய்வைத்துக் கொல்லன் ஊதுகின்ற உலைமூக்கே போல் பெருமூச்செறிந்து அகத்தே குடிகொண்டிருக்கும் ஈசல்களை உறிஞ்சி உண்ணும், இரவில் நடுயாமத்தில் நீ வருவது வழக்கம் என அறிந்து யாம் அஞ்சுகின்றோம் என்று கூறி, அவ்வச்சம் அகலும் வண்ணம், இனியும் காலம் தாழ்த்தாது மணந்து கொள்வாயாக என நாம் இரந்து வேண்டிக்கொண்டால், நாள் நீட்டியாது நல்ல நாளில், நம்மை நம் மலைநாட்டில் மணம் புரிந்துகொண்டு, வேங்கை மலர்களால் ஆன மாலை சூடும் வழக்கம் உடையவர்களாகிய குறவர்கள், எருதுகளைக் கொண்டு கதிர்ப் போரடிக்கும் களத்தைச் செப்பம் செய்தாற் போன்ற அகன்ற பாறையில், புனத்தில் விளைந்த தினைக்கதிர்களைத் துவைத்து அதன் தாளைப் பெரிய போராகப் போடுதற் பொருட்டு, வைகறைப் போதில் எழுந்துகொள்ளுமாறு அவர்களை எழுப்புவான் வேண்டி, களிறு பிளிறிக் குரல் எழுப்பும் அவர் மலை நாட்டுக்கு நம்மோடு செல்லா நிற்பன்; இஃது உறுதி''.

''இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை
கொடுவரிப் புற்றம் வாய்ப்ப, வாங்கி
நல்அரா நடுங்க உரறிக் கொல்லன்
ஊதுஉலைக் குருகின் உள்உயிர்த்து அகழும்
நடுநாள் வருதல் அஞ்சுதும் யாம்என
வரைந்துவரல் இரக்குவ மாயின், நம்மலை
நன்னாள் வதுவை கூடி, நீடின்று
நம்மொடு செல்வர்மன்; தோழி! மெல்ல
வேங்கைக் கண்ணியர், எருதுஏறி களமர்
நிலங்கண் டன்ன அகன்கண் பாசறை
மென்தினை நெடும்போர் புரிமார்
துஞ்சுகளிறு எடுப்பும் தம்பெருங்கல் நாடே'';

—நற்றிணை: 125

''பேயினங்கள் காற்றுப் போல விரைந்து இயங்கா நிற்க, ஊரினர் அனைவரும் உறக்கம் கொண்டுவிட்டனர். ஆனால், குறிஞ்சிப் பண்ணைக் கேட்போர் அச்சம் கொள்ளுமாறு பாடும், இவ்வூர்க் காவலராய கானவர் கண்துயில் கொண்டாரல்லர். வலிய ஆண்யானையோடு போரிட்ட, வாள் போல் வளைந்த கோடுகளையுடைய புலி, மலையடிவாரத்தே இருந்து முழங்கா நிற்கும். வானளாவ உயர்ந்து நிற்கும், மலைச்சரிவுகளில், விரைவில் விடியாது நீண்டு செல்லும் இரவின் ஒரு யாமத்தில், பாம்பும், தன் அழகிய நீலமணியைக் கக்கி வருந்துமாறு, பேரொளிகாட்டி மின்ன, பேரொலி எழ இடித்து மழை பெய்யா நின்றது. அந்தோ! முன்பே மெலிந்திருக்கும் என் தோள்கள் மேலும் மெலிவுற்று நாம் வருந்த நேரினும், அவர், அந்நள்ளிரவில் அக்கொடு வழியில் வாராதிருப்பராயின், அதுவே நனிமிக நன்றாம்''.

''கழுது கால் கிளர, ஊர்மடிந் தன்றே;
உருகெழு மரபின் குறிஞ்சி பாடிக்

கடியுடை வியன்நகர்க் காவவர் துஞ்சார் ;
வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை
கன்முகைச் சிலம்பில் குழுமும் ; அன்னோ !
மென்தோள் நெகிழ்ந்துநாம் வருந்தினும், இன்று அவர்,
வாரார் ஆயினோ நன்றுமன் ; தில்ல ;
உயர்வரை அடுக்கத்து ஒளிருபு மின்னிப்
பெயல்கால் மயங்கிய பொழுதுகழி பானாள்
திருமணிஅரவு தேர்ந்து உழல
உருமுச்சிவந்து எறியும் ஓங்குவரை யாறே''

—நற்றிணை : 255

மலைநாட்டு மகளிரின் கடமைகளுள் ஒன்று, தினை, கதிர் முற்றும் பருவத்தில் அத்தினைப்புனத்தைக் காத்தல் ஆகும். அதனால்தான், தங்கள் காதலர்களை எளிதில் சந்திக்கும் வாய்ப்பு அம்மகளிர்களுக்குக் கிடைத்துவிடுகிறது. தினை முற்றி அறுவடைப்பருவம் வந்துற்றதும், இம்மகளிர் வீடுகளுக்கு அனுப்பப்பட்டுப், புறம் போகவிடாது காக்கப் படுவர். இது, இற்செறிப்பு எனப்படும். அவ்வாறு இற்செறிக்கப்பட்டாள் ஓர் இளம்பெண்ணின் தோழி இவ்வாறு புலம்புகிறாள் : ''தோழி ! தினையின் கதிர்கள் எல்லாம், விரிந்த அலைகளையுடைய கடல் வற்றிவிட்டாற்போலக் காய்ந்து கொய்யும் பருவம் அடைந்துவிட்டன ; அந்நிலையை நீ காண்பாயாக ; இனி, நமர், அவற்றைக் கொய்துகொண்டு போவதல்லாமல், உன்னை வீட்டில் இட்டு வெளியே போகா வண்ணம் காப்பதும் செய்துவிடுவர். அது உறுதி. பொன் போலும் நிறம் வாய்ந்த மலர்களால் நிறைந்த வேங்கை மரங்கள் வளர்ந்து மணம் நாறும் மலைச்சாரலில், பெரிய மலைநாட்டுக்கு உரியோனாகிய காதலனோடு, தினைப் புனத்தில் தங்கியும் சிவந்த வாய்களை உடையவாகிய கிளிகளைத், தினைக்கதிர்களைக் கொய்து செல்லாவாறு ஓட்டியும், அடுத்திருக்கும் கரிய மலைச்சாரலில் உள்ள அருவி யில் நீர்விளையாடல் புரிந்தும், மலைச்சாரலில் வளர்ந்து

நிற்கும் சந்தன மரத்தாலான சாந்தை அதன்மணம் அறிந்து வண்டுகள் வந்து மொய்க்க மேனியெல்லாம் பூசிக்கொண்டும், பெரிதும் விரும்பி மேற்கொண்ட அந்நட்பு, மெல்ல மெல்லச் சிறுகி, முடிவில் அதுதானும் இல்லாவாறு போய்விட்டது போலும் ஒரு காட்சியை நான் மனக்கண்ணால் காணு கின்றேன். அதுகுறித்து நாம் என்னதான் செய்ய இயலும்?"

"யாங்குச்செய் வாம்கொல்! தோழி! பொன்வீ
வேங்கை ஓங்கிய தேம்கமழ் சாரல்,
பெருங்கல் நாடனொடு இரும்புனத்து அல்கிச்,
செவ்வாய்ப் பைங்கிளி ஓப்பி; அவ்வாய்ப்
பெருவரை அடுக்கத்து அருவி ஆடிச்
சாரல் ஆரம் வண்டுபட நீவிப்
பெரிதுஅமர்ந்து இயைந்த கேண்மை சிறுநனி
அரிய போலக் காண்பேன்; விரிதிரைக்
கடல்பெயர்ந் தனைய வாகிப்
புலர்பதம் கொண்டன, ஏனல் குரவே."

—நற்றிணை: 259

பாலை நிலத்தில்:

"மேலைத் திசையில் சாய்ந்துவிட்ட ஞாயிறு மறைந்து போகவே வந்து பரவிய மாலைப் போதில், ஞாயிற்றுவெப்பத் தால் நிலம் பிளவுபட்ட நீண்ட மலைச்சாரலில், ஒன்றிற்கும் உதவா வன்னிலத்தில் அமைந்த சிறிய குடிலின்கண், வழங்குவார் அற்றுப்போகவே, அழகிழந்து அச்சம் ஊட்டும் ஊர்மன்றத்தில் உள்ள, கல்லிடை அகழ்ந்த குழிகளில் தேங்கிக் கிடக்கும் கலங்கல் நீரைப், பெருமழைப் பொழிவைக் கண்டும் அறியாக் கொடுமையால் முகந்து கொணர்ந்து, பசி தீர்க்க மாட்டாக் குறையுணவே உண்டு, இரவில், அழுக்குப்போகத் துவைத்தல் அறியாமையால் காவிபடிந்த ஆடைகளையும் ஏவினார் உயிரைத் தப்பாது கொல்லவல்ல அம்புத் தொடை

களையும் உடைய ஆறலை கள்வர்கள், வழியில் பொருளோடு வரும் வழிப்போவாரை எதிர் நோக்கிக் காத்திருக்கும் அச்சம் தரும் வழி''.

> ''படுசுடர் அடைந்த பகுவாய் நெடுவரை
> முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாலைப்
> புலம்புகூட் டுண்ணும் புல்லென் மன்றத்துக்
> கல்லுடைப் பகுவில் கலுழி தந்து,
> நிறைபெயல் அறியாக் குறைக்கூன் நல்லில்
> துவர்செய் ஆடைச் செந்தொடை மறவர்
> அதர்பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறி''.
>
> —நற்றிணை : 33 : 1-7

பாலை நிலத்தில் மிக எளிதில் கிடைக்கும் உணவு, விளாம் பழம், ''நிலம் பிளவு படுமாறு மண்ணுள் இறங்கிய வேரும், பெரிய கிளைகளும், உடும்புகள் அணைந்து கிடப்பதுபோலும் பொரிந்த செதில்களும் உடைய மிக உயர்ந்த விளாமரத்தின் கிளைகளிலிருந்து அறுபட்டுப், பச்சைக்கம்பலத்தை விரித்தாற் போலும் பசும்புல் விளைந்து கிடக்கும் நிலத்தின்மீது, இளம் சிறார்கள் ஆடி விடுத்த பந்து கிடப்பது போல் வீழ்ந்து பரந்து கிடக்கும் விளாங்கனிகளாம் உணவு''. பாலை நிலத்துமக்கள், விளாங்கனிகளைத் தங்களுடைய முக்கிய உணவாக மேற் கொள்வர்.

> ''பார்பக வீழ்ந்த வேருடை விழுக்கோட்டு
> உடும்பு அடைந்த நெடும்பொரி விளவின்
> ஆட்டொழி பந்தின் கோட்டுமுக்கு இறுபு
> கம்பலத் தன்ன பைம்பயிர் தாஅம்
> வெள்ளில் வல்சி''.
>
> —நற்றிணை : 24 : 1

மேய்ச்சல் நிலத்தில் :

மலைநாட்டு மக்கள் நடத்துவது போன்ற இன்ப வாழ்க்கையைக் கால்நடை ஓம்புவோராகிய ஆயர்களும், முல்லை நிலத்தில் நடத்தி இன்புறுவர். "புன்செய் நிலங்களாம் கொல்லைகளில் குடிவாழும் ஆயர்களுக்கு உரிமையுடையதான சிறிய புனத்தில் வளர்ந்து நிற்கும் குறுகிய கிளைகளைக் கொண்ட குராமரத்தின் குவிந்த கொத்தில் உள்ள வெண்ணிற மலர்கள், ஆடுகளை மேய்க்கும் இடைமகன் அணிந்து மகிழும் வண்ணம் மலரும்".

"கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்ந்த
குறுங்கால் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை இடையன் சூடப் பூக்கும்".

—நற்றிணை : 266 : 1-3

"பாறைபடுதயிர் என்பதுபோல் நன்றாக முற்றிய தயிரைப் பிசைந்த காந்தள்மலர்போலும் மெத்தென்ற கையால், தயிர்க் கறைபோகக் கழுவிய கையினால் மட்டுமே தொடத்தக்கதான உயர்ந்த ஆடையைக், கணவனுக்காம் உணவை விரைந்து முடிக்கும் ஆர்வ மிகுதியால், கழுவாமலே எடுத்து உடுத்துக் கொண்டு, குவளைமலர் போன்ற மை உண்ட கண்களுள் தாளிப்புப் புகை புகுந்து தாக்க, தானே சமைத்து முடித்த புளிக்குழம்பைக், கணவன், இனிது இனிது எனக் கூறியவாறே மகிழ்ந்து உண்ணக் கண்ட அவ்விளமகளின் ஒளிவீசும் முகம், புறத்தே புலனாகாவாறு அகத்துக்குள்ளாகவே அகமிக மகிழும்".

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்,
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்,
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்,
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்

இனிது எனக் கணவன் உண்டலின்,
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.''
—குறுந்தொகை : 167

''தோழி! மதுவை நிரப்பிவைத்திருக்கும் நீலக்குப்பிகளைப் போன்ற குறுகிய வாயையுடைய சுனைகளில் வாழும் பிளந்த வாயையுடைய தேரைகள், கிளியோட்டும் கருவியாகிய தட்டைப்பறை ஒலிபோல ஓயாது ஒலிக்கும், நாட்டுக்கு உரியவனாகிய நம் காதலன், களவுக்காலமாகிய பழைய திங்களில், முழுமதி நிலவொளியில் என் தோளை ஆரத் தழுவினான். அதனால் அவன் மேனியின் முல்லை மணம் என் தோள்களில் இன்றும் வீசா நிற்கும்''.

''மட்டம் பெய்த மணிக்கலத்து அன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கும் நாடன்,
தொல்லைத் திங்கள் நெடுவெண் நிலவின்
மணந்தனன் மன்நெடுந் தோளே;
இன்றும் முல்லை முகைநா றும்மே''.
—குறுந்தொகை : 193

''பரல்கற்கள் மலிந்த பாலை நிலத்தில் வளர்ந்து ஓங்கி நிற்கும், மீன்குத்திப் பறவைபோலும் முளைகளையுடைய கள்ளிச்செடி மீது படர்ந்து தழைத்திருக்கும் முல்லையின் மணம்மிக்க மலர்களை, எப்போதும் ஆடிக்கொண்டிருக்கும் தலையை உடையவாகிய ஆட்டுமந்தையை மேய்த்துவரும் வலிய கையையுடைய இடையன், இரவிலே கொய்து, பனம் குருத்தின் பிளவினால் தொடுத்த மாலையின் நறியமணம், மாலைப் போதில் தெருவெங்கும் கமழும் சிறிய குடிகளை யுடைய பாக்கம்.''

''பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி
மீமிசைக் கலித்த வீநறு முல்லை

ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்
வன்கை இடையன் எல்லிப் பரீஇ
வெண்போழ் தைஇய அலங்கலம் தொடலை
மறுகுடன் கமழும் மாலைச்
சிறுகுடிப் பாக்கத்து''

—நற்றிணை : 169 : 4-10

''தொழுவத்தில் கட்டப்பட்டிருக்கும், பெரிய தலையினை உடைய கரிய எருமையை, அதனிடமிருந்து மிக இனிய பாலை நிரம்பக் கொள்வான் வேண்டி, அவற்றின் கன்றுகளை அத்தொழுவத்திலேயே விட்டுவிட்டு, ஊரில் மாடு மேய்க்கும் இளம் சிறுவர்கள், அவ்வெருமைகளின் மேல் அமர்ந்து கொண்டு மேய்புலம் நோக்கிக் கொண்டுசெல்லும், நிறை இருள் மெல்ல மெல்லக் கழியும் விடியற்காலம்.''

''மன்ற எருமை மலர்தலைக் காரான்
இன்தீம் பால்பயம் கொண்மார், கன்றுவிட்டு
ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புலர் விடியல்''

—நற்றிணை : 80 : 1 - 4

**கடல் சார்ந்த நிலத்தில் :**

கடல் சார்ந்த நிலத்தைச் சேர்ந்த இளமகளிர் நாள் தோறும் முறையாக மேற்கொள்ளும் வாழ்க்கை முறை, அப்பெண்களின் தோழி பாடிய இந்தப் பாட்டிலிருந்து நன்கு தெரியவரும்:

''தோழி! நீ வாழ்வாயாக! பெரிய உப்பங்கழிகளில் உள்ள மீன்களாகிய இரையைத் தின்ற பல்வேறு இனப்பறவைகளின் வரிசை வரிசையான கூட்டம், வளைந்த பனைமடல்களிடையே கட்டிய குடம்பைகளில், அடங்கி இராப்பொழுதை நெருங்கியிருந்து கழிக்கும். அப்பனைமரங்கள் வானளாவ உயர்ந்துநிற்கும், வெண்மணல் பரந்த கொல்லைகள் சூழ்ந்த

கானலிடத்துக்கு உன் தோழிமாரோடு, காலைப்பொழு திலேயே சென்று, தேன் துளிக்கும், மணம்கமழும் மலர்களை உடைய நெய்தலின், ஒன்றோடொன்று மாறுபடும் உருவம் வாய்ந்த இலைகளைப் பறித்துக் கொணர்ந்து ஆடையாகத் தைத்து அதை உடுத்துக்கொண்டு, சிற்றில் புனைந்து, அது சிறக்கக் கோலமும் இட்டு மகிழ்ந்து விளையாடி, புலால் நாறும் அலைகளால் மோதுற்று மோதுற்று வளைந்துபோன அடியை உடைய கண்டல் மரத்து வேர்களின் இடையே, இணை இணையாகச் செல்லும் சிவந்த நண்டுக் கூட்டங்களின் நடை அழகைக் கண்டு மகிழும், இவைபோலும் சிறுசிறு விளையாடல்களையும் கைவிட்டுப் பெரிதும் வருந்திக் கிடக் கின்றனையே; உனக்கு வந்துற்ற அத்துயருக்கு யாதுதான் காரணம்? கூறாய்தோழி!''

''உரையாய்; வாழி! தோழி! இருங்கழி
இரையார் குருகின் நிரைபறைத் தொழுதி,
வாங்குமடல் குடம்பைத் தூங்கிருள் துவன்றும்
பெண்ணை ஓங்கிய வெண்மணல் படப்பைக்
கானல் ஆயமொடு காலைக் குற்ற
கட்கமழ் அலர தண்நறும் காவி
அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ
வரிபுனை சிற்றில் பரிசிறந்து ஓடிப்
புலவுத்திரை உதைத்த கொடுந்தாள் கண்டல்
செம்பேர் இரணை அலவற் பார்க்கும்
சிறுவிளை யாடலும் அழுங்க,
நினக்குப்பெரும் துயரம் ஆகிய நோயே'';

—நற்றிணை : 123

ஆற்றுப்பள்ளத்தாக்கில் :

ஆற்றுப்பள்ளத்தாக்கில் மக்கள் நடத்திய வாழ்க்கை முறையினைப் பின்வரும் பாக்களிலிருந்து உணர்ந்து கொள்ள லாம்:

"தேன்கலந்து மிகுசுவை உடையதாக ஆக்கிய இனிய வெண்ணிறம் கெடாப் பால் உணவை, சிறந்த ஒளிவீசும் பொன்னால் பண்ணப்பட்ட கிண்ணத்தில் இட்டு, அக்கிண்ணத்தை ஒரு கையில் எடுத்துக்கொண்டு, மலர் நிறைந்த பூங்கொடிபோலும், மெல்லியகொம்பை மறு கையில் ஓக்கியவாறே அணுகி, 'இப்பாலை உண்ணுவாயாக' எனக் கூறலும், தெள்ளத் தெளிந்த முத்துக்களைப் பரலாக இட்டுப் பண்ணப்பட்ட பொற்சிலம்பு காலிலிருந்து ஒலிக்கப் பாய்ந்து, மெல்ல நரைக்கத் தொடங்குமளவு, அறிவாலும் ஆண்டாலும் முதிர்ந்த செவிலித்தாய் பின் தொடர்ந்து வந்து பற்றிக் கொள்ளமாட்டாது தளர்ந்து போகுமாறு ஓடி, மனை முன்றிலில் உள்ள மலர்ப்பந்தற் கீழ்ப் போய் நின்றுகொண்டு, 'உண்ணேன்; உணவு வேண்டேன்' என மறுத்து உரையாடும் சிறிய விளையாட்டுப் பருவத்தாள் என் மகள்".

"பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்
புடைப்பில் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்என்று ஓக்குபு புடைப்ப, தெண்ணீர்
முத்துஅரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரீஇ மெலிந்துஒழியப் பந்தர் ஓடி
ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி".

—நற்றிணை : 110 : 1 - 8

மலைகளைச் செய்துவைத்ததுபோல் காட்சி அளிக்கும் அடி பரந்து மிக உயர்ந்த, நெல் நிறைந்திருக்கும் பலகூடுகளை உடைய, ஏர்களில் எருமைகளைப் பூட்டி உழுகின்ற உழவ! மறுநாள் நடைபெற வேண்டிய உழவுப் பணிகள் பற்றிய ஆராய்ச்சியில் இருந்துவிட்டமையால் கண்ணுறக்கம் கொள்ளாமல் இருந்து, குளிர்ந்த விடியற்போதிலேயே எழுந்து கொண்டு, கரிய கண்களையுடைய வரால் மீனின் பெரியபெரிய துண்டுகள் மிதக்குமாறு பண்ணிவைத்திருக்கும் குழம்போடு

உண்பதற்கு ஏற்ப நன்கு தீட்டப்பட்ட அரிசியால் ஆன சோற்றுத் திரளைக், கை நிறைய வாங்கி வாங்கி உண்டு முடித்து, நீர் நிறைந்திருக்கும் நன்செய்யில், நாற்றுக்களை நட, உன்னோடு தொழிலாற்றும் நாற்று நடுவாருடன் நீ செல்கின்றனை".

"மலைகண் டன்ன நிலைபுணர் நிவப்பின்
பெருநெல் பல்கூட்டு எருமை உழவ!
கண்படை பெறாது, தண்புலர் விடியல்
கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி
நீருறு செறுவில் நாறுமுடி அழுத்தநின்
நடுநரோடு சேறி".

—நற்றிணை : 60 : 1 - 8

உழவர் மகளின் அன்றாடக் கடமை, உணவு சமைத்தல் ஆகும். அவள் காதலன், அவள் பெற்றோரின் விருந்தோம்பும் பண்புக்கு ஏற்ப, அம் மனைபுகும் விருந்தினருள் ஒருவனாகச் சென்று, தன் காதலியைக் கண்டு மகிழ்வதோடு, உழவர்வாழ் சிற்றூர்களின் மனை வாழ்க்கையின் மாண்பு எத்தகையது என்பதை நாம் அறியவும் செய்துள்ளான்:

"வளைந்து நீண்ட கொம்புகளையுடைய எருமையின் தளர்ந்த நடையுடையவாய இளம் கன்றுகள், வீட்டுத் தூண்கள் தோறும் கட்டப்பட்டுக், காண்பதற்குக் களிப்பூட்டும் நல்ல மனையின்கண், வளைந்த குண்டலங்களைக் காதில் அணிந்துகொண்டிருக்கும், செழித்த உடல் நலம் உடையவளாகிய நம் காதலி, சிறிய கல்மோதிரம் செறிக்கப்பட்ட மெல்லிய விரல்கள் சிவந்து போகுமாறு, வாழையின் குளிர்ந்த இளம் தண்டை, சிறுசிறு துண்டுகளாக நறுக்கி அடிசில்ஆக்குதலால், புகைபடிந்து சிவந்த கண்களை உடையளாகி, அழகு உண்டாகுமாறு, பிறைவடிவான நெற்றி

யில் உண்டாகியிருக்கும் சிறுசிறு துளிகளான வியர்வையைத் தன்னுடைய அழகிய சேலைத்தலைப்பால் துடைத்துக் கொண்டு, சமையல் முடிந்தும், கணவன் வந்திலனே என்ற நினைப்பால் நம் மீது கொண்ட சினத்துடன் அட்டிற் சாலையில் இருக்கிறாள். விருந்தினராய் வர விரும்புவார் என்னோடு வருவார்களாக; விருந்தினர் முன்னே, அழகிய மாமை நிறம் வாய்ந்த என் காதலி, என்னைச் சினந்து கண் சிவந்து காட்சி தரமாட்டாள்; முள்போலும் சிறிய பற்கள் சிறிதே தோன்றப் புன்னகையே காட்டுவள்; அவளின் சிரிதே முகத்தை நானும் கண்டு மகிழ்வேன்'':

''தடமருப்பு எருமை மடநடைக் குழவி
தூண்தொறும் யாத்த, காண்தகு நல்இல்,
கொடுங்குழை பெய்த செழுஞ்செய் பேழை,
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப,
வாழை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகைஉண்டு அமர்ந்த கண்ணன், தகைபெறப்
பிறைநுதல் பொறித்த சிறுநுண் பல்வியர்
அந்துகில் தலையில் துடையினள், நப்புலந்து
அட்டி லோளே, அம்மா அரிவை!
எமக்கே, வருகதில் விருந்தே; சிவப்பாளன்று;
சிறிய முள் எயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகம்காண் கம்மே''.

—நற்றிணை : 120

**சிற்றூர் ஆட்சிமுறை :**

பண்டைய நாட்களில், தமிழ்நாட்டின் வாழ்க்கை முறை, முழுக்க முழுக்க சிற்றூர்களைச் சார்ந்தே இருந்தது. சிற்றூர்கள், இப்பொழுதைக் காட்டிலும், அன்று, தன்னிறைவு பெற்று விளங்கின. சிற்றூர் ஆட்சிமுறை, எளிதில் விளங்கிக் கொள்ளலாகாச் சட்டங்களை எதிர்நோக்கியிருக்கவில்லை. சட்டங்கள் மூலம், மக்கள் எதை எதிர்பார்த்தனரோ,

அதை, அம்மக்களின் பழக்க வழக்கங்களே வழங்கிவிட்டன; ஏதேனும் ஓர் இடையூறு, ஒரு வழக்கு ஏற்பட்டுவிட்டால், ஊர்ப்பெரியவர்கள், தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்கள் இன்றும் செய்வதுபோல், ஊர்நடுவே நிற்கும் மரத்தடியில், பொதுவாக, ஆலமரத்தடியில் கூடியிருந்து, ஒரு கலயம் கள்ளுக்கு, அவ்வழக்கினைத் தீர்த்துவிடுவர். அத்தகு மரங்களின் அடியில் இருக்கும் திறந்தவெளி, "பொதியில்," "பொதியம்", "பொதுவில்", "மன்று", "மன்றம்" என்றெல்லாம் அழைக்கப்படும். மன்றம், என்றால், பொதுவாக ஊர்ப்பொதுவிடம் எனப்படும். ஊர்க்கால்நடைகள் ஆங்கே மடக்கி வைக்கப்படும். கன்றுகளை அழைக்கும் "அம்மா" எனும் குரல் எழுப்பியவாறே மன்றில் புகுந்து நிறைந்துவிடும். ("கன்றுபயிர் குரல மன்று நிறைபுகுதரும்" (அகநானூறு: 14 : 11) இதே வரி, குறிஞ்சிப்பாட்டிலும், எவ்வித மாற்றமும் இன்றி இடம் பெற்றுளது. (குறிஞ்சிப்பாட்டு: 218) கால்நடைகள், வரிசை வரிசையாக மன்றுள் நுழைவதையும், கொல்லேறு எனும் காளைகள், அம்மன்றத்தில் திரிவதையும் புறநானூற்று வரிகள் உணர்த்துகின்றன. "மன்று நிறையும் நிரை" (புறம்: 387 : 24), "கொல்லேறு திரிதரு மன்றம்" (புறம்: 309 : 4) மரம் செடி கொடிகள் அற்ற, மேடுபள்ளம் இல்லாத திறந்த வெளிகளும், பொது நிகழ்ச்சிகளுக்காக ஒதுக்கி வைக்கப்படும், அத்தகு இடங்களும் மன்றம் என அழைக்கப்படும். ஆங்கு மகளிர் செல்வதும், குரவை போலும் கூத்தாடுவதும் செய்வர். "மென்தோள் மகளிர் மன்றம் பேணார்" (புறம்: 375: 12) "மன்று தொறும் நின்ற குரவை", (மதுரைக்காஞ்சி: 615) பெரியாழ்வார் திருமொழி, மன்றில் குரவை ஆடிய திருமாலைக் குறிப்பிடுகிறது. "மன்றில் குரவை பிணைந்த மால்" (11 : 2 : 2 : 12)

இதுபோலும் திறந்த வெளிகளில், அவ்வந்நிலத்துக்கே உரிய மரங்கள் வளர்க்கப்படும். பாண்டியர்க்கு உரிய மன்றத்தில், வேம்பு வளர்க்கப்பட்டு, தங்கள் தலைமாலைக்கு வேண்டும் தழை அம்மரத்திலிருந்து கொய்யப்படும். பாண்டியன் நெடுஞ்செழியன் ஊர்மன்றத்தே இருக்கும்

வேம்பின் பெரிய கிளைகளில் உள்ள தளிர்களை உழிஞைக் கொடியோடு கலந்து கட்டிய தலை மாலை அணிந்து போருக்குப் புறப்பட்டான்.

"மன்ற வேம்பின் மாச்சினை ஒண்தளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடுமிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி"

— புறம் : 76 : 4 - 6

வேம்பு நிற்கும் ஊர்மன்றத்தில் உள்ள குளத்துக் குளிர் நீரில் மூழ்கி அம்மரத்து ஒள்ளிய தழைகளை அணிந்து கொண்டான்: "மூதூர் வாயில் பணிக்கயம் மண்ணி, மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து" (புறம் : 79 : 1 - 2) பல்வேறு நிலங்களைச் சேர்ந்த மன்றங்களில், அவ்வந்நிலத்துக்கு உரியவாய் நிற்கும் பல்வேறு மரங்களாவன, 1. பலா : "மன்றப் பலவின் மாச்சினை," "மன்றப்பலவின் மால்வரை" (புறம் :128-1 : 476 : 5) 2. விளாம் : "மன்றவிளவின் மனை வீழ் வெள்ளில்" (புறம் : 181 : 1) 3. இலந்தை : "இரத்தி நீடிய அகன்றலை மன்றம் ;" "மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து அலந்தலை இரத்தி அலங்குபடு நீழல்" (புறம் : 34 : 12 ; 325 : 10 - 11) புன்னை : "மன்றப் புன்னை மாச்சினை" (புறம் : 49 : 8)

பொதியில், மன்றம் என்ற சொற்கள், ஊர்ப்பெரியவர்கள் ஒன்றுகூடியிருந்து, ஊர் நிகழ்ச்சிகளைப் பேசித் தீர்க்கும் மரத்து நீழல், பொதுவாக ஆலமரத்து நீழல் என்றும் பொருள்படும். அம்மரம், ஊர்முகப்பில் நிற்கும். பிற்காலத் தவராய மாமூலனாரும் அத்தகு மரத்தடி மன்றம், இன்று இருப்பது, போலவே, தம் காலத்தும் இருந்ததைக் குறிப்பிட்டுள்ளார். "முன்னூர்ப் பொதியில்" (புறம் : 390 : 19) "தொன்மூது ஆலத்து அரும்பணைப் பொதியில்" (அகம் : 251 : 8). நகரங்கள் எழுந்ததும், அரசர்கள், முதலில் ஒரு பொதுக்குடிசையை, அடுத்து, ஒரு பொது வீட்டை, அல்லது நகர அரங்கைக் கட்டினார்கள். அவையும் பண்டைப்

பெயரிலேயே அழைக்கப்பட்டன. அதில், கந்து அல்லது கந்தம் எனப்படும் மரக்கிளை நடப்பட்டு, அம்மரத்துண்டில் இடம் பெற்றிருப்பதாகக் கருதப்படும் கடவுள், தண்ணுமை முழக்கத்திற்கிடையே வழிபடப்பெறும். ''பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை'' (புறம் : 89 : 7). இவ்வரங்குகளில், ஆரியர்களிடையே, நிகழ்ந்தது போலவே, பண்டைக் காலத்தில் சமய நிகழ்ச்சிகளோடு நடைபெற்றதான சூதாட்ட நிகழ்ச்சியும் நடைபெற்றது. கீழ்வரும் பாட்டு, அவ்வாறு பாழுற்றுக் கைவிடப்பட்ட ஒரு கோயில் பற்றிய விளக்கமாம்: ''வீடுதோறும் மீன் சுடுதலால் புலால் நாற்றத்தோடு கலந்து எழும் புகையின் நீண்ட ஒழுங்கு, வயலருகே நிற்கும் மருத மரத்து வளைந்த கோடுகளில் சென்று சூழ்ந்துகொள்ளும் பெரிய வருவாய் இப்போது இல்லையாகிப் போகவே, முழவு முதலாயின முழங்க, பலியிட்டு வழிபட்ட கடவுள் எல்லாம், தாம் குடியிருந்த கந்தங்களை விட்டுப் போய்விட்டன; அதனால் பாழுற்றுப்போன ஊர் மன்றங்களில் பண்டெல்லாம், நரைதிரையுற்ற முதியோர் ஓய்வாக அமர்ந்து சூதாடுங்கால், சூதாடுகருவிகள் வீழ்ந்து வீழ்ந்து பண்ணிவிட்ட குழிகள், உடலெல்லாம் புள்ளிகளைக் கொண்ட காட்டுக் கோழிகள் இட்ட முட்டைகளால் நிறைந்துவிடும்''.

> ''மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி
> வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
> பெருநல் யாணரின் ஒரீஇ, இனியே
> கலிகெழு கடவுள் கந்தம் கைவிடப்,
> பலிகண் மாறிய பாழ்படு பொதியில்
> நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
> வல்லின் நல்லகம் நிறையப் பல்பொறிக்
> கான வாரணம் ஈனும்''.
>
> —புறம் : 52 : 9-16

இதுபோலவே பாழுற்றுப் போன பொதியிலில் உள்ள பள்ளங்களிலிருந்து கொண்டுவந்த தண்ணீரை நற்றிணை குறிப்பிடு

கிறது. "மன்றத்துக் கல்லுடைப் படுவிற் கலுழி" (39 : 3-4) அதே தொகை நூலில், "முருங்கை மரத்தில், வேனிற் காலத்தில் காய்ந்து முற்றிய நெற்று போன்ற அழகு இல்லாத விரல்களையுடைய, அச்சம் ஊட்டும், பேரொலி எழுப்பும் வாயையுடைய பேய், வளப்பத்தைப் பண்டு உடையதாகி இருந்த ஊரின்கண் உள்ள, தெய்வத்தை வழிபட்டு இடும் பலிச்சோற்றை உண்ணுவான் விரும்பிப், பாழ்மன்றம் நோக்கி மோதி எழும்" துன்பமிக்க மாலைப்பொழுது விளக்கப் பட்டுள்ளது.

> "வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன
> மாணா விரல வல்வாய்ப் பேஎய்
> மல்லல் மூதூர் மலர்ப்பலி உணீஇய
> மன்றம் போழும் புன்கண் மாலை";
>
> —நற்றிணை : 73 . 1-4

மேலும் பிற்பட்ட காலங்களில், ஊர்மன்றமாகப் பெரிய மாளிகைகள் கட்டப்பட்டு, மன்னர்களைப் பாடிப் பரிசில் பெறு வான் வேண்டிவரும் புலவர்களும் பிற இரவலர்களும் தங்கும் இடமாகவும் பயன்படுத்தப்பட்டது. மரத்தாலான பல கம்பங்களைக் கொண்ட நகர் அரங்கின் ஒருபக்கம், பள்ளியாகப் பயன்பட்டதைப் புறநானூறு காட்டுகிறது. "பல்கால் பொதியில் ஒருசிறை பள்ளி ஆக" (புறம் : 375 : 2-3) "மன்றுபடு பரிசிலர்" (புறம் : 135 : 11) நகரில் உள்ள, மன்றம், பொதியில் போலும் இடங்களெல்லாம் பிற்காலத்தில், கோயில் தெய்வத்திருமேனிகளின் உறைவிடங்களாகிவிட்டன. "மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்" (திருமுருகாற்றுப்படை ; 226) வழக்கறுக்கும் நடுவர் மன்றமாகவும் விளங்கிய உறையூர் நகர் அரங்கம், புறநானூற்றில் (220 : 7) "மூதூர் மன்றம்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. என்றாலும், உரை ஆசிரியர் ஒருவர், மன்றம் என்பதற்குக் "குதிரைகள் ஓடும்செண்டுவெளி" என்ப் பொருள் கூறி யுள்ளார்.

அறம் வழங்கும் ஊர்ப்பெரியவர்கள் கூடும் ஆலமரத்திலும், ஊர் முதியோர் ஓய்வு கொள்ளும் பழைய குடில்களிலும் நடப்பட்ட கந்து எனும் மரக்கழிகளிலும் இடம்பெற்றிருந்த கடவுள் எது என்னும் வினா, விடைகாண மாட்டாதே நிற்கிறது. இவ் வினாவிற்கு விடை காண்பதற்கு முன்னர், நாம் ஆய்ந்துகொண்டிருக்கும் இக்காலத்திற்கு மிகமிக முற்பட்ட காலமாகிய கற்கால கட்டத்தில், ஐயத்திற்கு இடம் இன்றி வழிபடுவதற்காக என்றே கல் லிங்கங்கள் செய்யப் பட்டன என்பது குறிப்பிடல் பொருந்தும். உலோகக் காலம் (வட இந்தியாவில் செப்புக் காலம், தென் இந்தியாவில் இரும்புக்காலம்) தொடங்கிய பின்னரும் கல்இலிங்க வடிவங்கள் தொடர்ந்து வழிபட்டுவரலாயின. லிங்கம் போல் தோற்றம் அளிக்கும் சில பொருட்கள், ஹாரப்பா, மோகன்-ஜோதரோக்களில் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் இரண்டு வகைகள் உள்ளன. ஒன்று. உயரத்தில் அரை அங்குலத்திலிருந்து ஓர் அடிவரை வேறுபடும் சதுரங்க விளையாட்டுக்காய்கள் போலும் வடிவுடையன; இரண்டு, குறுக்கே அரை அங்குலத்திலிந்து 3 அடி அல்லது 4 அடி உயரம் உள்ள வட்டக்கல் வடிவுடையன. "அவற்றுள் சில காணப்பட்ட சூழ்நிலையோடு, அது தொடர்பான பொருள்களின் தொகுதியினையும் இணைத்துப் பார்க்கும்போது, அவ்வுண்மைகள் வழிபாட்டு முறைக்கு உரிய, யாதோ சில பொருள்கள் அங்கு இருந்தன என்ற முடிவிற்குச் சிறு சந்தேகத்திற்கும் இடம் வைக்கவில்லை. அவ்வட்டக்கல், மெஸபடோமியாவில் காணக்கிடைத்த ஒரு பொருளோடு ஒருமைப் பாடுடையதான செண்டு அல்லது தண்டாயுதத்தின் தலையாக இருக்காலம் என்ற கருத்தும் கூறப்பட்டது. ஆனால், நூலாசிரியரின் கருத்துப்படி, பலபடியாலும் ஏற்றுக்கொள்ளக் கூடிய விளக்கம், வட்டக்கல், யோனி ஆகும். சதுரங்கக்காய் போலும் பொருள் லிங்கம் ஆகும் என்பதே ஆம். யோனியும் லிங்கமும், வடகோடி முதல் தென்கோடிவரை, கீழ்க்கோடி முதல் மேற்கோடி வரையான இந்தியா முழுவதும், சிவனைக் குறிக்க, எல்லோர்க்கும் விளங்கும் வடிவமாகும் லிங்கவழிபாடு,

ஆரியர் வருகைக்கு மிகவும் முற்பட்ட, நனிமிகப் பழைய வழிபாட்டு முறையாம் என்பதில் எவ்வித வினாவிற்கும் இடம் இல்லை.'' என்கிறார் திருவாளர் ஜான் மார்ஷெல் அவர்கள். [Archaeological Survey of India. Annual Report. 1925-26 Page: 79].

தென்னிந்தியாவில், கி. பி. 500க்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த பாடல்களில், சிவன், ஆலமர் செல்வனாகவே கூறப்பட்டுள்ளான் என்பது ஈண்டுக் குறிப்பிடல் பொருந்தும், புறநானூறு பாட்டு ஒன்று, ஆலமரத்தைக் கடவுளுக்கு உரியதாகக் கூறுகிறது. ''கடவுள் ஆலம்'' (1:1). வேறுசில பாடல்கள், சிவனை, ஆலில் உறையும் இறைவனாம் எனத் தெளிவாக உணர்த்துகின்றன. ''ஆலமர் செல்வன்'' (சிறுபாணாற்றுப்படை: 1 : 97 ; கலித்தொகை : 81 : 9 : 83 : 45), ''ஆல்கெழுகடவுள்'' (திருமுருகாற்றுப்படை : 256). இப்பாடல்கள், ஆரியக் கருத்துக்கள், தமிழ்ப்பாடல்களிடையே இடம் பெறத் தொடங்கிய காலத்தைச் சேர்ந்தவை என்றாலும், கந்து எனப்படும் கம்பத்தில் இடம் பெற்ற கடவுளும், ஆலமரத்தில் இடம்பெற்ற கடவுளும் ஒன்றே: பண்டைத் தமிழ் இலக்கிய காலத்தில், சிவன், ஒரு நிலத்தின் தெய்வமாக இடம் பெறவில்லை. அவன் ஒரு சிறு தெய்வமே; முருகனுக்குத் தந்தையாக உணர்ந்து முடிவாக, ஐந்து ஆறு நூற்றாண்டுகளில், சைவ ஆகம நெறி, தமிழ் நாட்டில் பரவியபோது பெருந்தெய்வம் ஆயினான். வட இந்திய ருத்ரன், தொடக்கத்தில், ஒரு மலைநாட்டுத்தலைவன் மகளை மணந்துகொண்ட ஒரு மலைக்கடவுளாவன்; ஆகவே அவன் தங்கள் தவ ஒழுக்கத்தை மேற்கொள்வான் வேண்டி மலைகளில் சென்று தங்கும் யோகியர்களுக்குக் கடவுளாகிவிட்டான். தென்னாட்டிற்கு அவன் குடி பெயர்ந்ததும், சிவவழிபாடு சிறந்து வளர்ச்சியைப் பெற்று விட்டது. ஆனால், அது நிகழ்வதற்கு முன்னர், கிடைக்கக் கூடிய நனிமிகப் பழைய தமிழ்ப்பாடல்களில் காணப்படுவது போல், தமிழ்நாட்டில், அவன் ஆலமரத்துக் கடவுளாகவே இருந்துள்ளான். ஒருவேளை, ஆலமரத்து நிழலில் ஒரு லிங்கம்

நடப்பட்டிருக்கக்கூடும். அங்ஙனம் இல்லை என்றால், அவன் ஆலமர் செல்வனாக ஆகியிருக்க முடியாது. மருதம், இலந்தை, நாவல் போலும் மரத்தடிகளிலும், லிங்கம் வைக்கப்பட்டது. சிவ வழிபாடு பெருகி, அம்மரங்களை உள்ளடக்கிச் சிவன் கோயில்கள் கட்டத் தொடங்கிய ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு, அவையெல்லாம் புகழ் பெற்ற வழிபாட்டிடங்களாகிவிட்டன. இப்போது தென்னாட்டில், மிகவும் புகழ்பெற்று விளங்கும் சிவன் கோயில்களில், இவையும் இடம்பெற்றுள்ளன. புனித மரங்களிலிருந்து வெட்டப்பட்டு, இம்மரம், அம்மரத்தடி லிங்க வடிவம் ஆகிய இரண்டின் இறைத்தன்மையும் கொண்டுவிட்ட கோயில் குடில்களில் நடப்பட்டு, கந்து எனப்படும் அக்கழிகளும், லிங்கமாகக் கருதியே நடப்பட்டிருக்கக் கூடும்.

## நகரங்களின் தோற்றம்

ஒரு நிலத்துப் பண்டங்களைப் பிற நிலங்களின் பண்டங்களுக்கு விலையாகப் பண்டமாற்றம் செய்துகொண்டதன் விளைவாகவே, தொடக்கத்தில் நகரங்கள் தோன்றலாயின. கடற்கரை நாட்டின் பொருளாம் உப்பு, ஏனைய நாடுகளில், இன்றியமையாப் பொருளாகிவிட்டது. அதனால் நனி மிகப் பழங்காலத்திலிருந்தே, உப்பைச் சிலசமயம் உலர்ந்த மீனையும் ஏற்றிக் கொண்ட, தள்ளாடித்தள்ளாடிச் செல்லும் கட்டை வண்டிகளின் வரிசை, மண் சாலைகளைக் கடந்து, மலைநாட்டின் அடிவரைக்கண்ணதான உள்நாடுகளுக்குச் செல்லலாயின. உப்பு வண்டிகளும், உப்பு வணிகரும் புலவர்களால், அடிக்கடி கூறப்பட்டனர். "குன்றின் மீது தோன்றும் உப்பு வணிகர் தலைவன்" "குன்றில் தோன்றும் குலவுமணல் சேர்ப்ப" (அகம் : 310 : 10) (குறிப்பு : "குலவுமணல்" என்ற தொடரைக் "குவ, உமணர்" எனச் சொற்சிதைவு செய்து அவ்வாறு பொருள் கொண்டுள்ளார். அது தவறு. குன்றுபோல் தோன்றும், மணல்மேடுகள் நிறைந்த கடற்கரைத் தலைவனே என்பதுதான் அத்தொடர் உணர்த்தும் பொருளாகும். அதே அகத்தில், பாலையில் பயணம்

கொண்ட உப்பு வணிகர், ஆங்கே மூன்று கற்களால் செய்து கொண்ட அடுப்பு உணர்த்தப்பட்டுளது. "உமண் சாத்து இறந்த ஒழிகல் அடுப்பு" (அகம் ; 119 : 8). அப் பாக்கள் கூறும் விளக்கத்திலிருந்து, பண்டங்கள் வண்டி வண்டியாக, ஓரிடத்திலிருந்து பிற இடங்களுக்குக் கொண்டுபோகப் பட்டன என்பது தெரிகிறது. கடலைச் சார்ந்த நிலத்தில், கழிநீரால் விளைந்த உப்பை ஏற்றிக்கொண்டு, மலை நாட்டை நோக்கிச் செல்லும் வண்டியின், ஆரக்கால்களை யுடைய சக்கரம் பள்ளத்தில் பாய்ந்துவிடும்போது, தன் உரங்கொண்டு அத்தளர்ச்சி தீர்த்து ஈர்த்துச் செல்லும், பெரும்பாரம் தாங்கவல்ல மிக்க வலியுடைய காளைக்கு ஓர் அரசன் ஒப்புக் கூறப்பட்டுள்ளான் :

"கானல்
கழிஉப்பு முகந்து கல்நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட்டு அன்ன எங்கோன்"
—புறம் : 60 : 6-9

இடைவழியில் முரிவுற்றுப் போயின், ஆங்கு உதவுவதற்காகத் தனியாக ஓர் அச்சு உடன் கொண்டு செல்லுமளவு, வண்டிகளில் பெரும்பாரம் ஏற்றப்படும் ; அவ்வாறு தனியே எடுத்துச் செல்லும் அச்சு "சேம அச்சு" எனப்படும். எருதுகள் இளையன : நுகத்தடியில் இதற்கு முன் பூட்டி அறியாதன. வண்டியிலோ பண்டப் பொதிகள் மிகப் பெருமளவில் ஏற்றப்பட்டுள்ளன, மேடுநோக்கி ஏறும் போதோ, பள்ளம் நோக்கிப் பாயும்போதோ ஏதேனும் ஆகக் கூடும் ; அதை முன்கூட்டி அறிதல் இயலாது. எதற்கும் தனியே ஓர் அச்சு உடன் கொண்டு சேரல் நல்லது என எண்ணும் உமணர், உள்ள அச்சின் கீழே, வேறோர் அச்சைத் தனியே பிணித்துக்கொண்டு செல்வர் என்கிறது புறநானூற்றுப் பாட்டு ஒன்று.

''எருதே இளைய ; நுகம்உண ராவே;
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே;
அவல் இழியினும், மிசை ஏறினும்
அவணது அறியுநர் யார்? என உமணர்
கீழ்மரத்து யாத்த சேம அச்சு''

—புறம் : 102 ; 1-5

உப்பு வண்டிகள் ஒழுங்காகச் செல்வது, இளம் சிறார்களுக்குக் களிப்பூட்டும் கண்காட்சியாம். இனிய நீர் நிறைந்து, மிக்க அழகுடையதான சுனையில் பூத்த செங்கழுநீரின் மொட்டு அவிழ்ந்த மலர்ந்த மலர்களைப் புற இதழ்களை நீக்கிவிட்டு முழு மலர்களால் ஆன ஆடை அசையும் அல்குலையும், பேரழகு வாய்ந்து அருள் ஒழுகும் கண்களையும், இனிய இள நகையினையும் உடைய இளமகளிர், புல் நெருங்க முளைத்துக் கவர்த்த வழியினையும், நெருங்க முள்வைத்துச் செய்த வேலியினையும், பஞ்சு நிறைந்த முற்றத்தினையும் உடைய வீட்டின் ஒருபால் உள்ள பீர்க்கங் கொடியும், சுரைக் கொடியும் படர்ந்து கிடக்கும், ஈச்ச மரத்து இலைகளையும் கொண்ட குப்பை மீது ஏறி நின்று, உமணர் வண்டிகளை, ஒன்று, இரண்டு என எண்ணிக்கொண்டிருக்கும் காட்சி ஒன்று புறநானூற்றுப் பாடல் ஒன்றில் இடம் பெற்றுளது.

''தீநீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்
கூம்புஅவிழ் முழுநெறி புரள்வரும் அல்குல்,
ஏந்துஎழில் மழைக்கண்; இன்னகை மகளிர்,
புன்மூசு கவலைய முள்மிடை வேலிப்
பஞ்சு முன்றில் சிற்றில் ஆங்கண்
பீரை நாறிய சுரைஇவர் மருங்கின்
ஈத்துஇலைக் குப்பை ஏறி, உமணர்
உப்பொய் ஒழுகை எண்ணும்.''

—புறம் : 116 : 1-8

ஒரு நிலத்திலிருந்து ஒரு நிலத்திற்கு உப்பைக் கொண்டு செல்வது இவ்வளவு பெரிய அளவில் நடைபெற்றது என்றால், மற்றப் பண்டங்கள், அதைவிட மிகப் பெரிய அளவில் கொண்டுசெல்லப்பட்டிருக்க வேண்டும் என உறுதியாக நம்பலாம். அவ்வாறே, அரிசியும் பருத்தி ஆடைகளும் ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியிலிருந்து வறண்ட பகுதிக்குக் கொண்டு செல்லப்பட்டன; பயறு வகைகளும் பால்படு பொருள்களும் முல்லைப் பகுதியிலிருந்து நன்செய் நிலப்பகுதிக்குக் கொண்டு செல்லப்பட்டன. தினை, தேன், மற்றும் மலைபடு பொருள்கள், மற்றப் பகுதிகளுக்குக் கொண்டுசெல்லப்பட்டன. இப்பண்டங்கள், முல்லை, குறிஞ்சி போலும் மேட்டு நிலமும், தாழ்வான நிலப்பரப்பும் இணையும் இடங்களில், பெருமளவில் பண்டமாற்றம் செய்யப்பட்டன. அத்தகு பண்டமாற்று மிடங்களெல்லாம் பெரு நகரங்களாக வளர்ந்துவிட்டன.

ஆகவே, வறண்ட நிலமாம் புன்செய் நிலப்பகுதியிலும், நீர்வளம் மிக்க நன்செய் நிலப்பகுதியும் இணையும், அதாவது, ஆறு, தன் இடைநிலைப் போக்கைக் கைவிடுத்து, சம நிலத்தில் அமைதியாக ஓடத் தொடங்கிய இடத்தில், முதன் முதலாக நகரங்கள் எழலாயின. சோழர் தலைநகர் உறையூர், சேரர் தலைநகர் கரூர், பாண்டியர் தலைநகர் மதுரை ஆகிய பழம்பெரும் நகரங்களின் தோற்றத்திற்கு இதுவே காரணம். இந்நகரங்கள், பருத்தி விளையும் பகுதிகளிலிருந்து பருத்தி கொண்டுவரப்பட்டு, எங்கு ஆடையாக நெய்யப்படுமோ, அந்த இடங்களில், இன்றே போல், பண்டும், ஆடை நெசவுக்குப் பெயர் பெற்றிருந்த இடங்களில், இடம் பெற்று உள்ளன. இவ்விடங்களில் வளர்ந்து பெருகிய வாணிகம், தமிழரசர்களின் தலைநகராம் பெருமையை, அந்நகரங்கள் தொடக்கத்திலேயே பெறத்துணை புரிந்தன. இந்நகரங்கள் குறித்த விளக்கம் பழம்பாடல்களில் இடம் பெறவில்லை.

**முக்கிய துறைமுகங்கள் :**

இக்கால கட்டத்தில் தமிழ்நாட்டின் மிகப் பெரிய வெளி நாட்டு வாணிகம், அடுத்த நூற்றாண்டில் பெரிபுளூஸ் ஆசிரிய

ராலும், தாலமியாலும் விரிவாக எடுத்துக் கூறப்பட்ட எண்ணற்ற துறைமுகங்கள் இடம் பெறத் துணைபுரிந்தது; முந்திய அதிகாரத்தில் எடுத்துக் காட்டிய பௌத்த ஜாதகா கதையிலிருந்து, கி. மு. முதல் ஆயிரத்தாண்டில், காவிரிப்பூம் பட்டினம், சோழ அரசர்களின்மிகப் பெரிய துறைமுகமாகவும், அவர்களின் இரண்டாவது தலைநகராகவும் திகழ்ந்தது என்பதை அறிந்துகொண்டோம். சமஸ்கிருத எழுத்தாளர் களால் பாண்டியரின் நுழைவாயில் எனும் பொருளில், "பாண்டிய கவாடம்" என அழைக்கப்பட்ட கொற்கை, பாண்டியர் தலைநகராம் பெருமையை மதுரையிலிருந்து பறித்துக்கொண்டு, பாண்டியர் தலைநகர், அண்மையில், மதுரைக்கு மாற்றப்பட்டது எனத் தாலமி கூறும் காலம் வரை, தக்கவைத்துக் கொண்டிருந்தது. கொற்கையின் முக்கியத் துவம், பண்டையோரால் பெரிதும் புகழப்பட்ட முத்து வாணிகத்தின் நிலைக்களமாய் உண்மையிலேயே இடம் பெற்றது. சேரர்களின் முக்கியத்துறைமுகங்கள், மேற்கு ஆசியாவுக்கும், எகிப்துக்கும், அவற்றிற்கு அப்பாலும், மிளகையும், மற்றும் மணம்தரு உணவுப் பண்டங்களையும் ஏற்றுமதி செய்த முசிறியும், தொண்டியுமாம்.

**அரசர்கள் :**

நாகரீக வாழ்வு காணா அப்பழங்காலத்தில், அரசனுக்கான நிர்வாகப் பணிகள் மிகச்சிலவே ; ஆட்சி முறையில் தேவைப் படும் ஒரு சிலவும், ஊர்அறங்கூர் அவைகளால், நனிமிகப் பழைய முறைக்கேற்ப நிறைவேற்றப்பட்டன. சேர, சோழ, பாண்டியராகிய மூவேந்தர்கள், ஒருவரோடொருவர் தொடர்ந்து போரிட்டுக்கொண்டிருந்தனர். அப்போதெல்லாம் நாடு பிடிப்பதற்காக என்று இல்லாமல் தங்கள் வீரத்தைப் பறைசாற்றவும், பிற அரசர்களைக் காட்டிலும், தானே பெரியவன், பேரரசன் என்ற நிலையை நாட்டவுமே நடை பெற்றன. அம்மூன்று நாடுகளின் எல்லைகள் ஒரு நிலை யிலேயே இருந்தன. களத்தில் வெற்றிகண்டிருந்தாலும், எல்லைகள் மாற்றம் பெறவில்லை. மூன்று அரசுகளும்,

அமராவதி ஆறு, காவிரியோடு கலக்கும் மூன்று முக்கோணங்களின் பொதுவான முனையில் சந்திக்கின்றன. அந்த இடத்தில், மூவேந்தர்களின் வழிபாடுகளை ஒரு சேரப் பெற்றவளும், அன்புக்கடவுள்-வளம்-வழங்கும் கடவுள் என்றெல்லாம் பாராட்டப் பெறுபவளுமான செல்லாயி என்ற பெண் தெய்வத்துக்கு, ஒரு சிறு கோயில் நிற்கிறது. அக்கோயில் நிற்கும் இடம், எனக்கு உரியது, என யாரும் வாதாடமாட்டா ஒருவர்க்கே உரிய இடமாக உளது. அவ்விடத்தில் காவிரியோடு கலக்கும், "கரைபோட்டானாறு" என்ற பொருள் பொதிந்த பெயருடைய ஒரு சிற்றாறு, இரு நாடுகளுக்கு மிடையே எல்லைவகுத்து, மேற்குக் கடற்கரை வரை நீண்டிருக்கும் சேர நாட்டை, வங்காள விரிகுடாவரை நீண்டிருக்கும் சோழநாட்டிலிருந்து பிரிக்கிறது. காவிரியின் அக்கரையில், பண்டு இருந்ததற்கான அடிச்சுவடு இன்றும் காணப்படும், செயற்கையாலான ஒரு மேடு, சோழ, பாண்டிய நாடுகளின் எல்லையைக் குறிப்பிடுகிறது. [புறநானூறு 47ஆம் எண் செய்யுட்குக் கீழ்வரும் கொளுவிலும், மணிமேகலை, 19-ஆம் காதை 126-ஆம் வரியிலும் குறிப்பிடப் பட்டிருக்கும், காரியாற்றுக் துஞ்சிய நெடுங்கிள்ளி இறந்த காரியாறே, இந்தக் கரைபோட்டானாறாதல் கூடும். பின்னர்க் கூறிய மணிமேகலைப் பகுதியில் சோழ நாட்டின் எல்லைக்கு அருகில் உள்ள காரியாற்றின் கரையில் நடைபெற்ற போர் ஒன்று குறிப்பிடத்தக்கது] சோழ நாட்டின் தலைநகர், உறையூர், ஆற்றின் கீழ்ப்பகுதியில் உளது; சேர நாட்டின் தலைநகர் கரூர், ஆற்றின் மேற்பகுதியில் உளது. பாண்டி நாட்டின் தலைநகர் மதுரை, ஆற்றிற்குத் தெற்கில் உளது.

அரசர்களின் தலையாய பணி, நாட்டை, ஆடுமாடுகளைக் கொள்ளையடித்துச் செல்பவரிடமிருந்து காத்தல், கால்நடைகள், ஒன்று, மறவர், கள்ளர்களின் இனத்தலைவர்களாம் கொள்ளைக் கூட்டத்தலைவர்களால் கடத்திச் செல்லப்படும். அல்லது, அந்நாட்டு அரசனோடு விடுத்த அறைகூவலாக, மற்றொரு நாட்டு அரசனால் கடத்திச் செல்லப்படும். இவ்விரண்டில் எது குறித்துப் போர் மேற்

கொண்டாலும், அரசன் தன் குலத்துக்கு உரிய மாலையோடு, சோழனாயின், ஆத்திமாலையோடு, பாண்டியனாயின் வேப்ப மாலையோடு, சேரனாயின்பனை மாலையோடு, தான் குறித்துச் செல்லும் போருக்கு உரிய அடையாள மாலையையும், அணிந்து செல்வர். நாடு காவலை அடுத்து அரசனுக்கு உரிய பிறிதொரு தலையாய கடமை, தம் பாக்கள்மூலம் தன் புகழ் பாடும் புலவர் போலும் இரவலர்களை அழைத்துத் தன்னைச் சூழ வைத்துக்கொண்டு, அவர்கள் பாராட்டு கேட்டு மகிழ்ந்து பரிசாக, நல்ல உணவும், மதுவும், நிறைபொருளும் கொடுத்தல்; கீழ்வரும் செய்யுள், சிறிது பிற்பட்ட காலத்தைச் சேர்ந்ததேயாயினும், அரசர்களின் இக்கடமைகளைத் தெளிவாக உணர்த்துகிறது. அவையே, அக்காலத்தும், அதற்கு முந்திய காலத்தும் பிந்திய காலத்தும் இருந்த உண்மையான நிலையாகும். "குறையாத வண்மையும், பகை அழிக்கும் பேராண்மையும் வாய்ந்த தலைவ, உன் படையைச் சேர்ந்த யானைகள் மலைகள் போல் காட்சி அளிக்கின்றன. நின் நாற்படையின் ஆரவாரப்பேரொலி, கடல் அலைபோல் முழங்குகிறது: கூரிய முனையை உடைய உன் வேற்படை மின்னல்போல் ஒளி வீசுகிறது. இத்தகு பெருநிலையால் உலகத்துப் பேரரசர்களெல்லாம் உளம் ஒடுங்குவதற்கு ஏதுவாய பேராற்றலோடு திகழ்கின்றனை; நினக்கோ நின் நாட்டிற்கோ வரக்கூடிய குற்றம் எதுவும், இல்லையாயிற்று; இந்நிலை, உன் குடிக்கு வழிவழியாக வரும் பெருமையாகும்...அதனால், உலகத்து ஆறுகள் எல்லாம், மலைகளிலிருந்து வீழ்ந்து விரைந்து கடலை நோக்கி அடைவது போல், புலவர்களும் இரவலர்களும் உன்னை நோக்கி வருவாராயினர்".

"ஆனா ஈகை, அடுபோர் அண்ணல்!
யானையும் மலையின் தோன்றும்; பெரும! நின்
தானையும் கடல்என முழங்கும்; கூர்நுனை,
வேலும் மின்னின் விளங்கும்; உலகத்து

அரைசு தலைபணிக்கும் ஆற்றலை ; ஆதலின்
புரைதீர்ந்தன்று ; புதுவதோ அன்றே ;
..........................................
மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
புலவர் எல்லாம் நின்நோக் கினரே''.

—(புறம் : 42 : 1-6 ; 19-21)

## அதிகாரம் : XIV

# வெளி நாட்டு வாணிகம்
# கி. மு. 600 முதல் கி. பி. 14 வரை

### தாரியஸ் ஆட்சியில் :

கி. மு. 606-ல் அஸ்ஸிரியப் பேரரசு கவிழ்க்கப்பட்டது. அது நிகழ்ந்ததும், பாபிலோன், ஆசிய வாணிகத் தலைமையிடமாக ஆகிவிட்டது. யவனர், யூதர் பொய்னீஷியர், இந்தியர். சீனர் என்ற உலக வணிக இனங்கள், தங்கள் வணிகப் பண்டங்களைப், பாபிலோனிய சந்தைகளுக்கு எடுத்துச் சென்றன. 'அயெஸ்செய்லஸ் (Aeschylus) என்பார் "எல்லா வகை மக்களும் வேறறக் கலந்துவிட்ட ஒரு பெருங்கூட்டம்" (Painminikton hocion) என அழைக்குமளவு, பாபிலோன் நகரத்து மக்கள் கலந்துவிட்டனர். கி. பி. ஏழாம் நூற்றாண்டு வரை தொடர்ந்து வளம் பெற்றிருந்த தென்னிந்திய வணிகர் களின் குடியிருப்பு ஒன்று, அந்நகரில் இடம் பெற்றுவிட்டது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில், நிப்பூரில் (Nippur) இருந்த, முராஷுவுக்கும், (Murashu), அவர் மகனுக்கும் உரிமையுடையதான பெரிய வர்த்தக நிறுவனத்தின் வணிகத் தொடர்புடைய பட்டயங்களில், வணிகர் தொடர்பான குறிப்புகளைக் காண்கிறோம். [J. R. A. S. 1917, P. 237 Kennedy] கி. மு. 538-ல் ஸைரஸ் (Cyrws), பாபிலோனியப் பேரரசை அழித்துவிட்டான். அவன் வழிவந்த மதிப்பார்ந்த தாரியஸ் (Dariws) கி. மு. 20-ஆம் நூற்றாண்டு போலும் காலத்தில், ஸெஸோஸ்-டிரியெஸ் (Sesostrises) என்ற ஒருவனால் முதன் முதலாக வெட்டப்பட்டு, கி. மு. 15-ஆம் நூற்றாண்டில் 18வது அரச மரபினர் ஆட்சியின் கீழ், மீண்டும் திறக்கப்பட்ட சூயஸ் கால்வாயைக், கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில், ஒரு பகுதியைத் திறப்பதன் மூலம், கடல்

வணிக வளர்ச்சிக்குத் துணை புரிந்தான். அவன், வடமேற்கு இந்தியாவைத் தன் பேரரசோடு இணைத்துக் கொண்டான். அது, இந்துகுஷ் மலையின் குறுக்காகப், பால்க் (Balkh) பகுதிக்கும், அங்கிருந்து எக்ஸைன் (Ewxine) பகுதிக்கும் சென்ற, பாலைவனத்தைக், கூட்டமாகக் கடக்கும் வணிகச் சாத்துமுறை புத்துயிர் பெற வழிவகுத்துவிட்டது. அது, கார்மேனியன் (Karmanian) பாலையைத் தொட்டுச்செல்வதாகி, அங்கிருந்து மெஸபடோமியா வழியாக அன்டியோக் (Antioch) நகருக்கும் சென்றது. இதன் முக்கிய விளைவு, பட்டு, முதன்முதலாக, மேற்கு நாடுகளைச் சென்றடைந்தது. "கிரேக்கர்கள், பட்டை அலெக்ஸாண்டரின் படையெடுப்பு மூலம் அறிந்து கொண்டனர், எனக்கருதப்பட்டது. ஆனால், அது அதற்குமுன்பே, பர்ஷியா மூலம், அது அவர்களை அடைந்திருக்கக் கூடும்." [Schoff's Periplws. P. 264.] இந்நிலவழி வாணிகம், தாரியஸுக்குப் பிறகு, படிப்படியாகக் குறைந்துவிட்டது. எகிப்தை வெற்றி கொண்ட பின்னர், அலெக்ஸாண்டர், இந்தியாவுக்கும் ஐரோப்பியாவுக்கும் இடையில், பெரிய வாணிக நிலையமாக விரைவாக வளர்ந்துவிட்ட அலெக்ஸாண்டிரியாப் பெருநகரை உருவாக்கினான். பின்னர், அம் மாவீரன் டயர் நகரைச் சூறையாடி அழித்து, அதன் பண்டை வாணிகத்தையும் பாழ்படுத்தி விட்டான். இது மேற்கு நோக்கிப் பெருகிக்கொண்டிருந்த இந்திய வணிகப்பெருக்கை, ஓரளவு அணை போட்டுத் தடுத்துவிட்டது. அலெக்ஸாண்டர் இறப்பிற்குப்பிறகு, அஸிரியாவைச், சட்டதிட்டங்கள் அற்றுப்போன குழப்பநிலை, ஆட்சிபுரியத் தொடங்கிவிட்டது. பார்த்தியாவில், ஒரு புதிய பேரரசு எழுந்தது. சித்தியப் பழங்குடியினர், பாக்ட்ரியா (Bactria) மீதான, தம் திடீர்த்தாக்குதல்களைத் தொடங்கிவிட்டனர். இந்நிகழ்ச்சிகள், நிலவழிவாணிகத்தில் அழிவுக்கு வழிவகுத்துவிட்டன. இந்த விளைவுகளைப் பயன்படுத்திக்கொண்டு, எகிப்தின் நலனுக்காகச் செங்கடல் வாணிக வளர்ச்சிக்கு, அருமுயற்சி எடுத்துக்கொள்ளுமாறு பிலடெல்பிஸுக்கு (Philadelphws) கி. பி. 285 - 246ல், அழைப்பு விடுத்தார்;

முதல் தாலமி. சூயஸ்கால்வாய், ஓரளவு திறக்கப்பட்டு, வாணிகப்போக்கு வரவிற்கு வழிசெய்யப்பட்டது. வணிகச் சாத்து செல்லும், தங்கும் இடங்களுக்கும், குடிநீர்க் கிணறு களுக்கும் வசதி செய்துதரப்பட்ட, பல்வேறு வழித்தடங்கள், கடலுக்கும், நைல் நதிக்கும் இடையே திறக்கப்பட்டன; அவ்வழித்தடங்கள் முடியும் இடங்களிலெல்லாம், துறை முகங்கள் நிறுவப்பட்டு, சுங்கவரி விதிக்கும் அரசு அலுவலர் களால் கண்காணிக்கப்பட்டன. தன் முந்தைய செல்வ வளத்தையும் புகழையும், எகிப்து, ஓரளவு திரும்பப் பெற்று விட்டது. தாலமியின் நகர்வலத்தில் பிலெடெல்பஸ் நகரில் இந்திய மகளிர், இந்திய வேட்டை நாய்கள், இந்தியக் காக்கைகள், ஒட்டகங்கள் மீது ஏற்றப்பட்ட, இந்திய மணப்பொருள்கள் காணப்பட்டன.

**கிரேக்க இடைத்தர்களும், நடுவர் இருவர் குழு ஆட்சிக்கு உட்பட்ட ரோமும் :**

கிறித்துவ ஆண்டு பிறப்பதற்கு முந்திய 500 ஆண்டுகளில், ஐரோப்பாவுடனான, இந்த இந்திய வணிகத்தில், கிரேக்கர்கள், பெரும்இடைத்தர்களாக இருந்தனர். உலகப் பெருநாடுகளுக்கு இடையிலான, இந்த விரிவான வாணிகப் போக்குவரத்தின் ஒருவிளைவு, தென்னாட்டு வணிகப் பண்டங்களின் தமிழ்ப்பெயர்கள், கிரேக்கப்பழங்குடியினரின் தூய கிரேக்க எல்லெனெஸ் மொழியால் (Hellenes) கடன் வாங்கப்பட்டன. திருவாளர்கள் ஸோப்ஹோக்கில்ஸ், (Sophocles) அரிஸ்டோபன்ஸ் (Aristophanes) ஆகியோர் எழுத்துக்களில், அவை இடம் பெறத்தொடங்கின. அவையாவன : தமிழ் அரிசியிலிருந்து "ஒரைஸ்" (Oryza) இலவங்கப் பட்டையாம் கருவாவிலிருந்து, "கர்பியொன்" (Karpion) தமிழ் இஞ்சி வேர், சமஸ்கிருத ஸ்ரிங்கிவொரா விலிருந்து (Sringivera) "ஜிக்கிபெரொஸ்" (Ziggiberos), வால் மிளகைக் குறிக்கும் தமிழ் பிப்பிலியிலிருந்து "பெப்பெரி," (peperi). இது இப்போது, ஐரோப்பிய மொழிகளில், கருப்பு மிளகைக் குறிக்கவும் ஆகிவிட்டது. பண்டைக் காலத்தில்

கோவை மாவட்டத்தில் தோண்டி எடுக்கப்பட்ட தமிழ் வைடூரியத்திலிருந்து 'பெரில்லோஸ்' (Beryllos) இந்த நூற்றாண்டின் தொடக்க காலத்து உரோமானியர், அவர்களுடைய, பண்டைய எளிய வாழ்க்கை முறையையே கடைப்பிடித்தனர். பகட்டு வாழ்க்கையில் அவா கொண்டிலர்; ஆகவே, நடுவர் இருவர் குழு (Conswlar) ஆட்சியின் தொடக்ககாலத்தில், இந்தியப் பண்டங்கள், உரோமாபுரியை அடையவில்லை. அந்நாட்களில், இந்தியா இறக்குமதி செய்தனவற்றில் உரோம நாணயம் இடம் பெறவில்லையாகவே, அக்காலை நடைபெற்ற சிறுவாணிகத்திலும், வாங்கிய பண்டங்கள், உரோம நாட்டுப் பணம் கொடுத்து வாங்கப்படவில்லை. பல நூறு ஆண்டு காலமாக இருந்துவந்த பழைய தடத்திலேயே வாணிகம் நடைபெற்றிருக்கக் கூடும். நடைபெற்றிருந்தது. ஆனால், நடுவர்இருவர்குழு ஆட்சியின் பிற்பகுதிவரை, உரோமஅரசு, கிழக்கு நோக்கி விரிவடையவில்லை. துணிவுமிக்க உரோம வணிகர்களுக்குப் பல்மைரா (Palmyra) தன்னுடைய கதவுகளைத் திறக்கவில்லை. ஜூலியஸ் சீசரால், அலெக்ஸாண்டிரியா, கி. மு. 47இல், கைக்கொள்ளப்பட்டது என்றாலும், கடல் வாணிகம் அராபியப் படகுகளில், கடற்கொள்ளைக்காரர்களின் பிடியில் சிக்குண்டிருந்த கடற்கரையை ஒட்டிநடைபெற்று வந்தமையால், அக்காலை வாணிகம், சிறிய அளவில், நிலையற்ற தன்மையிலேயே நடைபெற்றுவந்தது. அக்காலத்தில், ஐரோப்பாவுக்கு, இந்தியாவிலிருந்து, என்னென்ன ஏற்றுமதி செய்யப்பட்டாலும், அவை. பெரும்பாலும் உரோமுக்குச் செல்வதில்லை. கிரேக்கத்திற்கே சென்றன. [J. R. A. S. 1904. page : 593 - 94. Sewell] திருவாளர் ஸ்வெல் அவர்களின், இந்த முடிவுகள், உரோம் நாட்டு நடுவர்இருவர்குழு ஆட்சிக்காலத்து நாணயங்களில், இதுவரை ஒருசில நாணயங்களே இந்தியாவில் கண்டெடுக்கப்பட்டன என்ற உண்மை நிலையை அடிப்படையாகக் கொண்டு எழுந்தனவாம்.

இக்கால கட்டத்தின் இறுதியில், மத்திய தரைக்கடல் மக்கள் மீது, அடுத்தடுத்துக் கொண்ட வெற்றியும், நடத்திய கொள்ளையும், உரோமப்பேரரசின் கருவூலத்திற்கு ஒப்புக் காட்ட இயலாப் பெருஞ்செல்வத்தைக் கொண்டுவந்து சேர்த்தன. கீழ்நாடுகளைச் சேர்ந்த, மதிப்புமிக்க வணிகப் பண்டங்கள் மீதான சுவை, ஒரே இரவில் வளர்ந்துவிட்டது. சிற்றாசியா, சிரியா நாடுகளை வென்றுகொண்டாரைச், சிறப்பித்து மக்கள் எடுத்த விழாக்கள், மக்கள் ஆர்ப்பரிப் புக்குக் காரணமாகிவிட்ட பெருஞ்செல்வத்தால் சுடரொளி வீசிச் சிறப்புற்ற''. [Scoffs periplws. page : 5] பழைய சிக்கன, எளிய வாழ்க்கைமுறை, பகட்டு வாழ்வின் கவர்ச்சி முன் நிற்கமாட்டாது, நெடுங்காலத்திற்கு முன்பே விடை பெற்றுக் கொண்டது. கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில், தூரக்கிழக்கு வணிகப் பண்டங்கள், கணிசமான அளவு, உரோமை வந்தடையலாயின''. [Warminston J. R. A. S.,1904. page. 4 sweli.]

**உரோமப் பேரரசின் தொடக்கத்தில் :**

அகஸ்டஸ் (Augustus) எகிப்தை, கி. மு. 30இல் வெற்றி கொண்டு, இந்தியாவுக்கும், உரோமப்பேரரசுக்கும் இடையில், ஒரு நேரிடைக் கடல் வாணிக வளர்ச்சிக்கு முயன்றான்: கி. மு. 25இல், ஏறத்தாழ 120 கப்பல்கள், ஹோர்மஸ்ஸி லிருந்து (Hormws), இந்தியாவுக்குப் பயணம் செய்ததைத், தாம் பார்த்ததாகத், திரு. ஸ்டிராபோ (Strabo) கூறுகிறார்; [Mcrindle Ancient India, page . 6] ''இந்தியாவின் பல்வேறு நாடுகளிலிருந்து அரசியல் தூதுவர்கள் அகஸ்டஸ்பால் சென்றனர். இந்தியத் தூதுவர்கள், அடிக்கடி வந்ததாக அவனே கூறுகிறான்'' [Warmington Commerce between the Roman Empire and India. page : 35] அக்காலச் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள், தனித்தனித் தூதுவர்களை அனுப்பிய தாக, திருவாளர் வார்மிங்டன் கூறுகிறார். [Warmington Commerce between the Roman Empire and India; p. 37] இது, அகஸ்டஸ் காலத்தில், இந்தியா, உரோமுடன் நடத்திய

வாணிக அளவு மிகப்பெரிய அளவினதாய்ப் பெருக வழி செய்தது. இவ்வாணிகம் குறித்துத் திருவாளர் வார்மிங்டன் அவர்கள், "உரோமுக்கும் இந்தியாவுக்குமிடையிலான வாணிக அளவை மதிப்பிட்டுப் பார்த்தால், அகஸ்டஸின் உண்மையான தொடக்கநிலை ஆட்சிக்காலத்தின்போதே, அது, இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையிலான வாணிகம் எப்போதும் இயல்பாக இருக்கும், அந்த அளவு அடைந்துவிட்ட, குறிப்பிடத்தக்க அப்பெரு நிலையை நாம் கண்ணெதிராகக் காணக்கூடும். தொடக்க நாளிலிருந்தே, இந்தியப் பண்டங்களின் வருகைப் பெருக்கத்திற்குப் பேரரசின் பண்டங்களைக் கொடுத்துச் சரிஈடு செய்ய முடியாது போயிற்று. அதன் விளைவு பண்டங்களுக்குப் பதிலாக, உரோமானியர், சென்றால் திரும்பிவராத, அடித்த நாணயப் பணங்களை வெளியேற்றினர். [Warmington. page : 38] நாணயப் பணங்களை ஏற்றுமதி செய்வதில், தொடக்கத்தில் ஒரு மோசடி வெளிப்படையாகவே செய்ய முயலப் பட்டது. "அகஸ்டஸ் நாணயத்திற்குப் பதிலாக, அவனுடைய தத்துப் பிள்ளைகளாம், கையஸ் (Gaiws) லூசியஸ் (Lwciws) என்பார் உருவங்கள் பொறிக்கப்பட்ட பொன்னுக்குப் பதில் முற்றிலும் பொன் மூலாம் பூசப்பட்ட நாணயங்கள் பெரும் எண்ணிக்கையில் இந்தியாவில் கைம்மாறின. உள்நாட்டு மக்கள், போலி நாணயங்களிலிருந்து, உண்மையான உரோம நாணயங்களை, இன்னமும் வேறுபிரித்து உணரமாட்டா, தென் இந்தியாவோடு நடத்தும் வாணிகத்திற்காகவே அத்தகைய நாணயங்கள் தனியாக அடிக்கப்பட்டனவாக எர்னஸ்ட் (Ernst) எண்ணுகிறார்" எனக் கூறுகிறார் திருவாளர் வார்மிங்டன் [Warmington. p. 139] ஆனால், தமிழர்கள் கூர்மதிவாய்ந்தவர் என்பதை உறுதி செய்துவிட்டனர்; காரணம், அற்பத்தனமான அச்சோதனை மீண்டும் முயலப் படவில்லை. இந்நூற்றாண்டு கால அளவில், மேலை நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட வணிகப் பொருள்கள் யாவை?

**உயிர் விலங்குகளின் ஏற்றுமதி :**

பண்டைக்காலத்து இந்தியர்கள், உயிர் விலங்குகளைக் கடல் வழியாகப், பர்ஷிய வளைகுடாவிற்கும், ஆப்பிரிக்காவிற்கும், சீனாவுக்கும் அனுப்பி வைத்தனர். இரண்டாம் தாலமியின் மயில்களையும், கிளிகளையும், அனுப்பி வைத்தமைக்கும் அவர்களே, பெரும்பாலும் பொறுப்பாவர். ஏதன்ஸுக்குச் செல்யூகஸ் (Selewcus) நன்கொடையாக வழங்கிய புலி, சுல்லாவும் (Sulla) பாம்பெயும் (Pampey) காட்சிப் பொருளாகக் காட்டிய சிங்கங்கள், பாம்பெய், காட்சிப் பொருளாகக் காட்டிய, ஒற்றைக் கொம்புக் காண்டாமிருகம், மெர்ஸலஸ் (Mercllws) நகரின் ஆடரங்கு அர்ப்பணிக்கப்பட்டபோது, கூண்டிலோ, குகையிலோ அடைத்துக் காட்டப்பட்ட புலி, ஆகிய விலங்குகள், சில வட இந்தியாவையும் சில தென்னிந்தியாவையும், சேர்ந்தவை, நிலவழியாக அனுப்பப்பட்டனவாம். ஆனால், கிரேக்க எழுத்தாளர்கள் பலரும், தங்கள் நூல்களில் குறிப்பிட்டிருக்கும் குரங்குகள், கடல்வழியாகவே சென்றிருக்க வேண்டும். (Warmington 147, 148, 151) அலெக்ஸாண்டர் வெற்றிக்குப் பின்னர், சண்டைகளில் பெருமளவில் பயன்படுத்தப்பட்ட இந்திய யானை, பயரஸ் (Pyrrhus) என்பான், சில யானைகளைக் கி.மு. 28ல், ஐரோப்பாவிலிருந்து இத்தாலிக்கு, இடமாற்றி அனுப்பப்பட்டபோதே உரோமானியர்களுக்கு முதன்முதலாக அறிமுகமாக்கப்பட்டது. கார்த்தகினியர்கள் (Carthaginiars) அவற்றை, ஆப்பிரிக்க யானைகளோடு பயன் கொண்டு, அவ்விரு இனங்களையும் பழக்க, இந்திய யானைப்பாகர்களை நியமித்தனரா என்பதை, என்னால் உறுதியாகச் சொல்ல இயலாது. ஆனால், கி.மு. 25ல் பனோர்மோஸ் (Panormos) எனும் இடத்தில் ஹாஸ்ட்ருபால் (Hasdrubal) இந்தியர்களால் செலுத்தப்பட்ட யானைகளைப் பயன்படுத்தினான் என்பது குறிப்பிடத்தக்கது. உரோமப் பேரரசோடு நடத்திய இரண்டாம் புனிக் (Punic) போரில், ஹனிபால், ஹாஸ்ட்ருபால் (Hannibal, Hasdrubal) இருவரும் அதுவே செய்தனர். ரபியா (Rapia) எனும் இடத்தில் நடைபெற்ற போரில், தாலமியின்

லியா நாட்டு விலங்குகள், ஆண்டியோ சொஸ் (Antiochos) என்பானின் இந்தியப் படைகள் முன் நிற்க முடியவில்லை. (Warmington, Page : 151)

இந்திய வேட்டை நாய்கள், வெளிநாட்டவரால், மிகுவிலைக்குரியவாக மதிக்கப்பட்டன. "ஹெராரோடோடஸ் கூற்றுப்படி, தம் காலத்தைச் சேர்ந்த பர்ஷியர், பாபிலோனியாவைச் சுற்றியிருந்த நான்கு பெரிய சிற்றூர்களின் வருவாய்களை, இந்திய வேட்டை நாய்களின் உணவிற்கு என்றே நிதிஒதுக்கம் செய்துவைத்தனர். பர்ஷியாவைச்சேர்ந்த இந்திய வேட்டை நாய்களும், அவைபோலும் வேறு நாய்களும், தாலமி, பிலடெல்பாஸ் வெற்றி ஊர்வலத்தில் காணப்பட்டதாக, திரு. ஸ்டெசியாஸ் (ctesias) குறிப்பிடுகிறார். கொடிய கரடியோடு நடத்திய போராட்டத்தில், தன் தலைவனைக் காப்பதற்காகத் தன் உயிரைக் கொடுத்த 'டவ்ரான்' (Tawron) என்ற வேட்டைநாய் குறித்துப் பாடிய இரண்டு கையறு நிலைச் செய்யுள்கள் எழுதப்பட்ட கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த, நாணற்புல்தாளினாலான கையெழுத்துப்படி ஒன்றும் கிடைத்துள்ளது". Warmington. Page : 149) தென் இந்திய வேட்டை நாய்கள், அவற்றின் முரட்டுத்தனத்திற்காகவே நன்கு தெரிந்திருந்தன. பொதுவாக அவை, "கதநாய்" (கடுஞ்சின நாய், விரைந்தோடும் நாய்) என்றே அழைக்கப்படும். ("கத நாய்வடுகர்" அகம் : 107:11) அவை, சங்கிலியால் கட்டப்பட்டிருக்கும். அவ்வாறு நாய் கட்டப்பட்டிருக்கும் வீட்டினுள் எவரும் எளிதில் புகஇயலாது. காவலில் அத்துணைக் கடுமையானது நாய். ("தொடர் படுஞமலி" புறம் : 743) "தொடர் நாயாத்த துன்னரும் கடி நகர்" (பெரும்பாணாற்றுப்படை. 125) தாம் குறித்துச் சென்ற பகைவர்களைத் தப்பாது வெற்றி கொள்ளவல்ல வீரர்களுக்குத், தான் குறித்த விலங்குகளைத் தப்பாது கொள்ளும் வேட்டை நாயை உவமை கூறுமளவு தென்னாட்டு வேட்டை நாய்கள் சிறந்தனவாக மதிக்கப்பட்டன. "செல் நா அன்ன கடுவிறல் சுற்றமொடு கேளாமன்னர் கடிபுலம் புக்கு"; (பெரும்பாண் : 139-140) கரடி வேட்டையில்

வேட்டை நாய்கள் பயன்படுக்கப்படுதலை, "உயர்ந்த நாகமரங்கள் அடர்ந்து. கடந்து செல்வதற்கு அரிதாகி விட்ட கவர்த்த காட்டு வழியில், சிறிய கண்ணும் பெரிய சினமும் உடைய ஆண் பன்றி, சேற்றில் வீழ்ந்து புரண்டதனால் சேறு பூசப்பெற்ற முதுகில் புழுதியும் படிந்திருக்க அக்கோலத்தோடு விரைந்து ஓடி, சுருக்குவலை விரித்த பிளப்பில் வீழ்ந்து பட்டதாக, அதுகண்ட அளவே, வேட்டை நாய்கள், கூட்டமாக விரைந்து, வலையை அழித்து, பன்றி மீது பாய்ந்து கொன்று கொண்ட இறைச்சிபோக, எஞ்சிய இறைச்சியைக் கானவர் கொண்டு செல்வர்" என்ற நற்றிணை, விளக்கமாகக் கூறியுளது :

"போகிய நாகப் போக்கரும் கவலைச்,
சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒறுத்தல்
சேறாடு இரும்புறம் நீறொடு சிவண,
வெள்பசிப் படூஇயர், மொய்த்த வன்பு அழீஇக்
கோணாய் கொண்ட கொள்ளைக்
கானவர் பெயர்க்கும் சிறுகுடி."

—நற்றிணை : 82 : 6-11)

வேட்டுவர், காட்டில் வாழ்பவராகவும், விரைந்தோடும் மான் கூட்டத்தையும். துரத்தித் தொலைக்க வல்ல விரைவினை யுடைய கடுஞ்சின நாய்களை உடையவராகவும் கூறப்பட்டு உள்ளனர். "கானுறை வாழ்க்கைக் கத நாய் வேட்டுவன்" (புறநானூறு : 33 : 1) "மான்கணம் தொலைச்சிய கடுவிசைக் கத நாய்....வேட்டுவன்". (புறம் : 205 : 8-9) வேட்டைக்குச் சென்ற தலைவன், வேட்டை முடிவுற்றதும், வேட்டை மேற்கொண்டு மூங்கிற்காட்டினுள் நுழைந்து பரவிக் கிடக்கும் தன் வேட்டுவத் துணைவர்களையும், வேட்டை நாய் களையும், வேட்டை முடிவுற்றது, வாருங்கள் என அழைக்கும் குறிப்போடு, கொம்பு எனும் ஊது கருவியை ஊதி ஒலி எழுப்புவன் :

"ஊதல் வேண்டுமால் சிறிதே, வேட்டொடு
வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்
நாய் பயிர் குறிநிலை கொண்ட கோடே"
—(அகம் : 318 : 13-15

முந்தைய நூற்றாண்டுகளில் தொடங்கப்பட்டுவிட்ட கிளிகள், மயில்களின் ஏற்றுமதி இந்த நூற்றாண்டிலும் தொடர்ந்தது; அதில் ஐயமில்லை. கிரேக்கர்களால் 'அஸ்பிஸ்' (Aspis) என அழைக்கப்படும் நாகப்பாம்புகள், மலைப் பாம்புகள், உள்ளிட்ட பாம்புகள், ஏற்றுமதி செய்யப்பட்ட பிற உயிரினங்களாம், இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட ஒன்பது அடி நீளம் பாம்பு ஒன்றை ஸ்ட்ராபோ எகிப்தில் பார்த்துள்ளார். (Warmington. Page : 157)

விலங்குதரு பொருள்கள் :

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட மிகமிக முக்கியமான பொருள்களுள் ஒன்று தந்தம். கிரேக்கர்கள், தங்கள் நாகரீகத்தின் முதிர்ந்த நிலையில், உருவச்சிலைகளில், ஆடையால் மறைக்கப்படாத புறத்தோற்றப் பகுதிகளுக்கு, அதைப் பயன்படுத்தினர். "முத்துக்கள், முதன்முதலில், ஜுகுர்தைன் (Jugurthine) போரின்போது, உரோமுக்கு அறிமுகம் செய்யப்பட்டு, பாம்பே (Pompey) என்பவரால், இத்தாலியிலிருந்து கொண்டுவரப்பட்ட பெருங்குவியலால், மக்கள் நன்கு அறிந்த ஒரு பொருளாக ஆக்கப்பட்டது. "தாலமிகளின் கருவூலங்கள், அகஸ்டஸால், திரும்பக் கொண்டுவரப்பட்டபோது, அப்பேரரசின் வீழ்ச்சியில், அவை, எல்லோர்க்கும் கிடைக்கும் எளிய பொருளாயின. "முத்துக்கள் கிடைப்பது அரிதாகிவிட்ட சிசிரோவின் (Cicero) காலத்தில், இன்றைய நாணயம் எட்டாயிரம் பவுன் மதிப்புள்ள ஒரு முத்து, 'ஹேஸோப்னன் (Aesopws) மகனால், மெதெல்லா (Metella) காதிலிருந்து கழற்றப்பட்டு, வறட்சிக் காலத்தில் ஒரு பெரும்பணத்தொகையை விழுங்கினோம் என்ற மன நிறைவு கொள்வான் வேண்டி, வேண்டுமென்றே திட்டமிட்டு

விழுங்கப்பட்டது. (Warmington. Page: 163;168-169) கிளியோபாட்ரா, தன் மதுவில், பருகுவதற்கு முன்னர், முத்துக்களைக் கரைப்பாள் என்பது நன்கு தெரிந்த ஒன்று. அரக்குவண்ணம் ஊட்டப்பெற்ற பருத்திகள் பர்ஷியாவுக்கு அனுப்பப்பட்டன. தன்னுடைய காலத்தில் பாரசீக அரசனுக்கு, இந்தியர்களால் செவ்வண்டிலிருந்து பெற்ற ஒரு வண்ணக் கலவையால் வண்ணம் ஊட்டப்பட்ட பருத்தி நூல் அனுப்பப்பட்டதாக, ஸ்தேசியாஸ் (Ctesias) குறித்து வைத்துள்ளார் (Warmington Page : 178).

எகிப்திய ஆவணங்கள், பட்டைக் குறிப்பிடவில்லை. ஆகவே, பட்டு, தாரியஸ் (Dariws), ஜொர்ஸெஸ் (Xerxes) களின் பேரரசின் மூலமாகவே, மத்திய தரைக்கடல் பகுதியை அடைந்தது. அதன் உற்பத்தி பற்றிய சரியான விளக்கத்தை அரிஸ்டாட்டில் கொடுத்துள்ளார். பட்டு, தார்களில் சுற்றப் பட்டு, அரிஸ்டாட்டில் காலத்திற்கு முன்பே இறக்குமதி செய்யப்பட்டது. டயரிலும் (Tyre) மற்ற இடங்களிலும், உடைகளாகத் தைக்கப்பட்ட நிலையில் பிளைனியின் கூற்றுப் படி, "ஒரு பெண்ணின் உடலை மூடும் அதே நிலையில், அவளுடைய இயற்கை அழகை வெளிப்படுத்தவல்லதான, உள்ளிருப்பதை வெளிக்காட்டும் மெல்லிய வலைநிகர் ஆடைகள் நெய்யப்பட்டன. (Schoffi Periplws, Page: 264-265) கிரேக்க உரோமானிய எழுத்தாளர்களிடையே, பருத்திக்கும் பட்டுக்குமிடையே சிறிது கருத்துக்குழப்பம் இருந்தது. அவர்கள், அவ்விரண்டையுமே, "மரம்தரு விலங்குமயிர்", (Treewool) என அழைத்துள்ளனர்.

மரவினம் தரு பொருள்கள் :

இந்திய ஆடைகள், பாலஸ்தீனியரால், பெருமளவில் இறக்குமதி செய்யப்பட்டதற்கிடையில், இந்தியப் பஞ்சு, அரசு நூற்பு ஆலைகளையும், சாயத்தொழிற்சாலைகளையும், பேரரசுகள், நிறுவியிருந்த, ஒருசில, மதகுருக்களாலும் செயல் பட்டுவந்த, எகிப்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. எகிப்தியர், பருத்தியையும், நார் இழைகளையும் ஒன்றுகலந்து பருத்தி

ஊடிழையாகவும், நார், பாவு இழையாகவும், கொண்ட ஆடைகளை நெய்தனர். இந்தியப்பஞ்சு, எகிப்தில், பல்வேறு புனிதப் பணிகளுக்கும் பயன்படுத்தப்பட்டது. பல்வண்ணம் ஊட்டப்பட்ட பருத்தி நூல்கள் பனோபிலிஸில் உள்ள (Panoplis) மெம்பிஸ் (Memphis) அருகே காணப்பட்டன. அந்நூல்களில் ஒருசில, அவற்றின் வடிவமைப்பில், இந்தியக் கூறுகளைக் கொண்டுள்ளன. (Warmington Page 212)

இலவங்கம், எகிப்திற்காக என்றே, சிறப்பாக ஒதுக்கப் பட்டது போலவே, மிளகு, பாபிலோனியா, பாரசீக வளைகுடா, வாணிகங்களில், வழக்கத்திற்கு மேலான தேவைப் படுபொருளாக இருந்தது. அதனுடைய விறுவிறுப்பான பெருந்தேவை, ''தாரியஸ்'' (Dariws) ஆட்சியின்கீழ், பாரசீகப் பேரரசு விரிவடைந்த போது ஏற்பட்டது எனக் கருதுவதற்குக் காரணம் உளது. இந்த வாணிகம், தென் இந்தியக் கப்பல் களில், கடல் வழியாக நடைபெற்றது. நில வழியாக அன்று, எதோப்பியரின் (Aethopians) மேனி நிறத்தைப் பெரிதும் ஒத்த நிறம் வாய்ந்தவர்; தெற்கில், பாரசீகத்திலிருந்து வெகுதொலைவுக்கு அப்பால் குடிவாழ்பவர்; தாரியஸுக்கு என்றும் பணியாதவர் என்ற அளவிலேயே ஹெறோடட்டஸ், (Herodotas) திராவிடர்களைப் பற்றி அறிந்துள்ளார். (Scoff's Periplus. Page 213) பார்த்தியா (Parthia) வின் குறுக்காக நடைபெற்ற நில வாணிகமும், தாலமிகளால் ஊக்கம் ஊட்டப்பட்ட கடல் வாணிகமும், அறுதியிட்டுக் கூறமாட்டா. ஆண்டாண்டு காலமாக, ஏற்கெனவே, நடைபெற்றுவந்த இலவங்கம், மற்றும் மணப் பொருள்களின் வாணிகத்தின், பெருமளவிலான பெருக்கிற்கு வழிசெய்து விட்டன. உரோமுக்குத் தேவைப்படும் மிளகை, இக்கால் கட்டத்தில், பொயினீஷியர்களும், கார்த்திகினியர்களும் வழங்கிவந்தனர். கி.மு. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவரும், இந்திய மருத்தியல் முறைகளைக் கையாண்டவருமான 'இப்பொ கிராட்ஸ்' (Hippocrates) என்பார், மிளகை, ''இந்திய நிவாரணி'' (Indian remedy) என அழைக்கிறார். (Warmington. Page 182) அது, குளிர் காய்ச்சலுக்கும், வெப்பக்

காய்ச்சலுக்கும், பயன்படுத்தப்பட்டது. மக்கள், மரபுவழிப் பழக்க வழக்கம் குறித்த ஆராய்ச்சியில், 'ஹெரோடோடஸ்' (Herodotus) அவர்களுக்கு, இது பற்றிக் குறிப்பிடுவதற்கு எதுவும் இல்லை. என்றாலும், கி.மு. நான்காம் நூற்றாண்டில், 'தியோப்ரஸ்டஸ்' (Theophrastus) அதை ஒரு மருந்தாக அறிந்துள்ளார். டியோஸ்கோரிடஸ் (Dioscorides) கருப்பு, வெள்ளை, வால்மிளகுகளுக்கிடையிலான வேறுபாட்டை உணர்ந்துள்ளார். (Scoff's Periplus, Page 213) இஞ்சியும் மேலைநாடுகளை அடைந்து மருந்தாகப் பயன்படுத்தப் பட்டது. ஆனால், அது ஓர் இந்திய உற்பத்திப் பொருள் என்பதை, மேலைநாட்டவர் உணர்ந்து கொள்ளாவகையில், வெற்றிகரமாக மறைத்துவிட்ட அராபிய இடைத்தர் களால் கொண்டு செல்லப்பட்டது. (Warmington. Page: 184) கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில், ஏன், அதற்கு முன்பேயும் எள்ளெண்ணெய், கிரேக்கர்களுக்கு நன்கு தெரிந்திருந்தது. அது இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டது. தாலமிகள் காலத்தில், அது மதிக்கத்தக்க முக்கியத்துவம் உடையதாகி விட்டது. (Warmington Page : 206) கிரேக்கக் கோயில்களில் தேங்காய்கள், அதிசயக் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டிருந்தன வாதலின், கிரேக்கத்திற்குத் தேங்காய் களும் அனுப்பப்பட்டதாகத் தெரிகிறது. (Warmington Page : 217) ஸோபோக்கெல்ஸ் (Sophocells), அரிசி அடைகள் பற்றிப் பேசுகிறார். ஆகவே, கிரேக்கர், அரிசியையும், அதன் பெயரையும் தமிழ்நாட்டிலிருந்து பெற்றனர். பல்வேறு பயன் கருதி மரங்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன. மித்ரிடேட்ஸ் மீது (Mithridates) கொண்ட வெற்றி குறித்து எடுத்த விழாவில் இந்தியக் கருங்காலி மரத்தைக் காட்சிப் பொருளாகக் காட்டினான் பாம்பே (Pompey). இந்தியக் கருங்காலி மர வாணிகம் நெடிது நிலைபெற்றிருந்த ஒன்று. இதுவும், மற்ற மரங்களும் பாரசீக வளைகுடாப் பகுதிக்கு, இந்திய வணிகர்களால், கொண்டு செல்லப்பட்டன. கருங்காலி, நாற்காலி, மேசை போலும் தட்டுமுட்டுப் பொருள்களுக்காகவும் உருவச்சிலைகளுக்காகவும் பயன்

படுத்தப்பட்டது. இந்தியாவிலிருந்து, குறிப்பாக மலபார், கர்னாடகம், திருவாங்கூர் மற்றும் வேறு சில இடங்களிலிருந்து வந்த, தேக்கு மரங்களைக் கொண்டு, பாரசீக வளைகுடாவில் ஆட்கள் கப்பல்கள் கட்டுவதை தியோப்ரஸ்டஸ் காட்டுகிறார். (Warmington Page : 213-214) "மடரடா" (Madarata) என அறியப்பட்ட, தைத்த படகுகள் என அழைக்கப்பட்ட, அராபியரின் படகுகள், தென்னை நாரினால், அதாவது தேங்காய் மட்டைகளிலிருந்து எடுத்த நாரினால் கட்டப் பட்டன. (Scoff's Periplws Page: 154) இக்கால கட்டத்தில் பல்வேறு வகையனவான இந்தியக் கற்கள், மேலைநாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன என்றாலும் இந்த வாணிகம், அடுத்த கால கட்டத்திலேயே பெரிய அளவைப் பெற்றது.

## அர்மினியாவில் ஓர் இந்திய வழிபாட்டு முறை :

மேற்கு ஆசியாவுடனான இந்த வாணிகத்தின் ஒரு வியத்தகு விளைவு இங்கே விளக்கப்படும். அது, அர்மீனியாவில், ஓர் இந்திய வழிபாட்டு முறையின் நுழைவாகும். அர்மீனியாவைச் சேர்ந்த "அரஸசிடே" (Arsacide) மரபின் முதல் மன்னனாகிய, முதலாம் வளர்ஷக் (Valarshak) (கி.மு. 149 - 127) காலத்தில், இரு இந்தியத் தலைவர்கள், இயூப்ரட்ஸ் ஆற்றின் மேற்குக் கரையில், வான் (Van) என்ற ஏரிக்குத் தெற்கில், ஒரு புதிய குடியிருப்பை நிறுவி, கிருஷ்ணன் பலதேவன் (அர்மீனிய மொழியில் முறையே கிசனி (Gisani), தெமெதெர் (Demeter) வழிபாட்டிற்காகக் கோயில்களைக் கட்டினர். இது, வடஇந்தியாவிலிருந்து வந்த, ஆரிய வழிபாட்டு முறையின் பெருக்காகுமா? மிக உறுதியாக இல்லை. கிருஷ்ண பலதேவர்கள், திருமாலின் அவதாரங் களாம் எனப்புராணங்கள் கூறினாலும், இவ்விரு கடவுள் களையும் ஒருசேர வழிபடும் தனிவழிபாட்டுமுறை, வட இந்தியாவில், எக்காலத்திலும் இருந்ததில்லை. ஆனால், பழந்தமிழ் இலக்கியங்கள், இதற்கான எண்ணற்ற அகச்சான்றுகளை அளிக்கின்றன. இவர்களில், முன்னவன்*

மாயோன் என்ற பெயரால், முல்லைநிலக்கடவுளாவன் கலப்பையைப் படைக்கலனாகவும், பனையைக்கொடியாகவும், கொண்ட, வெண்ணிறக்கடவுள் எனும் பொருளில் வாலியோன் அல்லது வெள்ளையோன் எனப்படும் பின்னவன் தொடக்கத்தில் உழவுத்தொழில் முதலில் தொடங்கப்பட்ட முல்லைக்கும், மருதத்துக்கும் இடைப்பட்ட நிலத்தின் கடவுளாவன். முன்னவன் கருப்பு வண்ணமும், பின்னவன், வெள்ளை வண்ணமும், தமிழ்ப் புலவர்களின் விருப்பத் திற்குரிய அணி நலங்களாம். "கடலில் வளரும் வலம்புரிச் சங்கை ஒக்கும் நிறம் வாய்ந்த, கொலை விரும்பும் கலப்பையையும் பனைக்கொடியையும் உடையவன்" என்றும், "மாசு போகக் கழுவப்பட்ட அழகிய நீலமணி போலும் நிறம் வாய்ந்த, வானுற உயர்ந்த கருடக்கொடி உடைய, என்றும் வெற்றியே விரும்புவோன்" என்றும், அவர்கள், முறையே பாராட்டப் பெற்றுள்ளனர்.

"கடல்வளர் புரிவளை புரையும் மேனி,
அடல்வெம் நாஞ்சில் பனைக்கொடி யோனும்,
மண்ணுறு திருமணி புரையும் மேனி,
விண்உயர் புட்கொடி விறல்வெய் யோனும்."

—புறநானூறு : 56 : 3 - 6

"பால்போலும் வெண்ணிறம் வாய்ந்தவன்; பனைக்கொடி யுடையான்" என்றும், "நீலமணியின் நிறம் வாய்ந்த திருமேனி யுடையான்; ஆழிப்படையுடையான்" என்றும், அவர்கள் மேலும் பாராட்டப் பெற்றுள்ளனர்.

"பால் நிற உருவின் பனைக்கொடி யோனும்,
நீல்நிற உருவின் நேமி யோனும்"

—புறநானூறு : 58 : 14 - 15

இவ்விருவர்களின் மேனி நிறங்களுக்கிடையிலான மாறு பாடு, உவமை அணிகளாகப் பரவலாக ஆளப்பட்டுளது; எடுத்துக்காட்டுக்கு : "மாயோன் அன்ன 'மால்வரைக்

கவாஅன்; வாலியோன் அன்ன வயங்குவெள் ளருவி,'' (நற்றிணை : 32 : 1 - 2) இராமாவதாரம் தவிர்த்து, திருமாலின் அவதாரங்களில், வேறு எதுவும் பழந்தமிழ் இலக்கியங்களால் குறிப்பிடப்படவில்லையாதலின், இவ்விருவரும், தென் இந்தியாவில், திருமாலின் அவதாரங்களாக அறிமுகம் ஆனவரல்லர்). பலதேவன், எப்போதும் பனஞ்சாறு பருகி வெறிகொண்டு கிடப்பன். பனைமலிந்த பகுதியில், அவன் வளர்ச்சிக்கு அது பொருந்தும், பனை, கங்கை வெளியில் வளர்வதில்லையாகவே, பலதேவ வழிபாடு கங்கைக் கரையில் உருவாகியிருத்தல் இயலாது. கடலுக்கு வெகு தொலையில் அல்லாத, தென்னாட்டு ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியிலேயே அவ்வழிபாட்டுமுறை தோன்றியிருக்க வேண்டும்.

பலதேவனுக்கு எனக் கட்டப்பட்ட கோயில்கள் வடநாட்டில் இருப்பதாக நாம் கேள்விப்பட்டது இல்லை. ஆனால், காவிரிப்பூம்பட்டினத்திலும், மதுரையிலும் அவனுக்கான கோயில்கள், கிருஷ்ணன் கோயிலை அடுத்தடுத்துக்கட்டப்பட்டுள்ளன.

''வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்''.

—சிலப்பதிகாரம் : 5 : 71 - 72

''புகர் வெள்ளை நாகர்தம் கோட்டம்''

—சிலப்பதிகாரம் : 9 : 10.

பலதேவன் திருமாலின் படுக்கையாம் அரவின், மறுஅவதாரம் என்ப. அவ்வரவு நாகர்களைத் தம்மோடு இரண்டறக்கொண்டு நாகராகி விடவே, அதுவும் திருமால் வழிபாட்டு நெறியில் இடம் பெற்றுவிட்டது. இவை புகார் நகரத்துக் கோயில்கள், மதுரையில், ''மேழி வலன் உயர்த்த வெள்ளை நகரமும்.'' (சிலப்பதிகாரம் : 14 : 9) இவ்வெடுத்துக்காட்டுக்கள் எல்லாம், பிற்கால இலக்கியங்களிலிருந்தது என்றாலும், அக்கால கட்டத்திலும், வடநாட்டில்,

பலதேவனுக்குக் கோயில் இல்லை: இவ்வெள்ளைக் கடவுள், தெற்கில்தான் முதன்முதலில் எழுந்தான் என்ற முடிவிற்கு வலியூட்டுகிறது. தமிழ்நாட்டில், சில சாதியரிடையே "வெள்ளையன்", "வெள்ளான்" என்ற பெயர்கள், இன்றும் பரவலாக இடம் பெற்றுள்ளன. வெள்ளைக்கடவுள் வழிபடப்பெற்று, அவன் பெயர், அவனை வழிபடுவார் மக்களுக்கு இடப்பட்ட காலம் தொட்டு வழக்கில் வந்திருக்க வேண்டும்.) இக்கோயில்களே அல்லாமல் கிருஷ்ணன், பலதேவன் ஆகிய இருவரின் தெய்வத் திருமேனிகள் அடுத்தடுத்து இடம் பெற்றிருக்கும் கோயில்களும் உள. அத்தகைய கோயில்களுள் ஒன்றாகிய, மதுரைக்கு வெகு தொலைவில் இல்லாத திருமாலிருஞ் சோலைக்கோயில், பரிபாடலில், பதினைந்தாவது பாட்டில் மிக விரிவாக விளக்கப்பட்டுளது. அது, எடுத்துக்காட்டுவதற்கு இயலா, நெடும்பாட்டு, மேலும் நாம் ஆராய்ந்துகொண்டிருக்கும் காலத்திற்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தது. அப்பாட்டில் விளக்கப்பட்டிருக்கும் பலதேவன் தெய்வத்திருமேனி, இப்போது காணாமல் போய்விட்டது. திருமால் வழிபாட்டாளரின் மதிப்பீட்டில், பலதேவன், குறைந்த நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்ட காலத்தில், அக்கோயில் இடித்துப் புதிதாகக் கட்டப்பபட்டிருக்கக் கூடும். இன்றும் அழியாமல் இருக்கும் ஒருசில கோயில்களில், பலதேவன் திருமேனி, இன்றும் நிற்கிறது. அவை, பிற்காலச் சமய வெறியர்களின் அழிவிலிருந்து தப்பிவிட்டன போலும்.

அந்த இணைந்த வழிபாட்டு முறை, அர்மீனியாவுக்கு வடநாட்டிலிருந்து சென்றதா, தென்னாட்டிலிருந்து சென்றதா என்பது விடையிறுக்க முடியாத நிலை இருக்கும் போது, அது, கொடிய வன்முறைச் செயல் ஒன்றுமூலம் அழிவுற்றுப் போய்விட்டது. கிறித்துவச் சமயப்பிரசாரகர், முனிவர் கிரிகோரி என்பவர், (St. Gregory) கி. பி. நான்காவது நூற்றாண்டில், புறச்சமயத்திற்கு எதிரான தம்முடைய கொடிய வெறுப்பு காரணமாக, விஷப் (Vishap) எனும் இடத்திலிருந்த இந்தியர் குடியிருப்பிற்கு எதிராகக்

கிறித்துவப் பெருங்கூட்டம் ஒன்றிற்குத் தலைமை தாங்கிச் சென்றார். அதன் விளைவாக நிகழ்ந்த சண்டையில், தலைமை அர்ச்சகர்கள் வெட்டித் தள்ளப்பட்டனர். தெய்வத் திருமேனிகள் உடைத்து நொறுக்கப்பட்டன. கோயில்கள் இடித்துத் தரைமட்டமாக்கப்பட்டன. அவை நின்ற இடங்களில் மாதாகோயில்கள் கட்டப்பட்டு, சிலுவைகள் நிறுவப்பட்டன. ஆங்குக் குடிவாழ்ந்தவர்களில், ஐயாயிரத்துக்கும் மேற்பட்டவர் கிறிஸ்தவராக மதம் மாறிவிட்டனர். தம் சமயக் கோட்பாட்டைக் கைவிடாமல் விடாப்பிடியாக இருந்த, அர்ச்சகர்களின் மக்கள் நானூற்று முப்பத்தெட்டுப் பேரும், கோயில் பணியாளர்களும், மொட்டை அடிக்கப்பட்டு, தொலை நாடுகளுக்குத் துரத்தப்பட்டு விட்டனர். [J. R. A. S. 1904 : page : 309 - 314. Kennedy]

தூரக்கிழக்கு நாடுகள் உடனான தென்னிந்தியக் கடல் வாணிகம், இன்றும் தொடர்ந்து நடைபெற்றுவரும் மக்கள் குடிபெயர்ச்சியின் தொடக்கத்திற்கு வழிவகுத்தது. படைத் துணைத்தலைவர், திருவாளர் கெரினி (Gerine) அவர்கள், "கிறித்துவ ஆண்டு தொடக்கத்திற்குப் பல, நூற்றாண்டுகளுக்கு முன்பே, வடஇந்தியாவிலிருந்தும், தென்இந்தியாவிலிருந்தும், வணிகர்களும், புதிது காணும் உள்ளஆர்வம் மிக்கவர்களுமான இருபெரும் வெள்ளம், இந்தோ சீனாவுள் பாயத்தொடங்கி, நிலவழியாக, பர்மா மூலம், அத்தீவ கற்பத்தின் வடபகுதியையும், கடல்வழியாக, அதன் தென் கடற்பகுதியையும் அடைந்து, ஆங்கே, தங்கள் குடியிருப்புகளையும், வணிகநிலையங்களையும், நிறுவினர்" என்று கூறியுள்ளார். [J. R. A. S. 1904. p. 234 - 37 பழைய இந்தியர்களின் இந்நடமாட்டம் குறித்த விரிவான விளக்கத்திற்கு, மேலே கூறியதைக் காண்க.] பிராமணர்களும் பௌத்தர்களுமாகிய ஆரியர், பண்டைய இந்திய நாகரீகத்தையும், தமிழர், வாணிகத்தையும் இங்குக் கொண்டு சென்றனர். சுவர்ண பூமியின் எல்லைக்கு அப்பால், பண்டைக்காலத்தில் பெரிய வணிக மையமாக விளங்கிய மார்தபன் (Martaban) எனும் இடத்திற்கு அணித்தாகத்,

"தக்கோலம்" என்ற இடத்தை, மிலிந்தா பன்ஹ (Milinda-panha) குறிப்பிடுகிறது. அவ்விடத்தின் பெயர், சென்னைக்கு அணித்தாக, கி. பி. பத்தாம் நூற்றாண்டில் ஒரு பெரிய போர் நடைபெற்ற தக்கோலம் என்ற ஊரின் பெயரை நினை வூட்டுவதாக உளது.

சீனாவின் ஆன் மரபுப் பேரரசர் (Han Emperor) ஹூ-தி (Wo-ti) என்பான், இன்றைய துருக்கர்களின் முன்னோர்களாகிய ஹியுங்-நு (Hiung-Nu) என்பாரைக், கோபி (Gobi) பாலைவனத்திற்கு அப்பால் துரத்திவிட்டான்; அதன்பின்னர், ஐரோப்பாவுடனான சீனப் பட்டுவாணிகம், பெரிய அளவினை எட்டிவிட்டது. இவ்வாணிகம் மேற் கொண்ட வழிகளில் ஒன்று, சூயஸ் வளைகுடாவலிருந்து வந்த யவனவணிகர்கள், சீனப்பட்டைத் தமிழ் இடைத்தரகர் களிடமிருந்து பெற்றுக்கொள்ளும், தமிழ்நாட்டுக் கடற் கரையை ஒட்டிய வழியாம். பர்மா, மலேயா, சீனக் கடற்கரை நாடுகளுடனான கடல் வாணிகம், இக்கால கட்டத்தில் வளர்ந்து பெருகிற்று. "கிழக்கிற்கு அனுப்பப் பட்ட மிக முக்கியமான பண்டம், மிளகு. மிளகு குறித்த தொடர்ந்த தேவை, உரோமில் எழுவதற்கு முன்பே, சீனாவில் இடங்கொண்டிருந்தது என்பது ஊகிக்கக் கூடியதே. மலபார் கடற்கரைக்குக், கி.மு. இரண்டாம் நூற்றாண்டில், ஏன், அதற்கும் முன்பாக, 'ஜங்' (Jwnk) எனப்படும் தட்டை யான அடிப்பாகம் உடைய சீனக் கப்பல்கள் சென்றுவந்ததற்கு இதுவும் ஒரு காரணம். (Scoff's Periplus. Page 213-14) தூரக்கிழக்கிற்கு, மிளகு மட்டுமல்லால் நறுமணப் புகைதரு பொருள்களும் அனுப்பப்பட்டு, பட்டிற்கும், சர்க்கரைக்கு மாக, கைமாறப்பட்டன.

———

அதிகாரம்: XV

# தமிழ் இலக்கியத்துள் சமஸ்கிருத நாகரீகத்தின் முதல் நுழைவு

**சமஸ்கிருத முதல் நுழைவு:**

அகத்தியனார், தம்முடைய தமிழிலக்கணத்தை இயற்றிய போது, சமஸ்கிருத நாகரிகம், தமிழிலக்கியத்தை, முதன் முதலில் பாதிக்கத் தலைப்பட்டது. தம்முடைய மலையிடைத் தவப்பள்ளியில், உணர்ச்சிக்கு ஆட்படாத, அறிவு நிலைகடந்த, தவநெறி மேற்கொள்வதைக் காட்டிலும், பாண்டி நாட்டுத் தமிழிலக்கியங்களைக் கற்பதால் உளவாம் உணர்ச்சிபூர்வ அனுபவ வாழ்க்கையால் பெரிதும் ஈர்க்கப்பட்ட, பொதிய மலையில், இடங்கொண்டிருந்த இந்த அகத்தியர், அகத்தியர் களின் தபோவனத்தைச்சேர்ந்தவர்களில், மிகமிகப்பிற்பட்டவ ராவர். பிற்காலப் புராணக் கதைகளில், இவர், இவருக்கு முற் பட்ட அகத்தியர் அனைவருடைய மொத்த உருவமாக்கப் பட்டு, அவ்வகத்தியர்களின் செயல் புகழ் அனைத்தும், இந்த அகத்தியரிடத்திலேயே கொண்டு குவிக்கப்பட்டன. அவர் பெயரைச் சூழக் கட்டிவிடப்பட்டிருக்கும் கதைகளை நாம் நம்புவதானால், தமிழிலக்கியம் கூறும் அந்த அகத்தியனார், நல்லுணர்வுக்கு அப்பாற்பட்ட பொறாமை, கட்டுப்படுத் தலாகாக் கடுங்கோபங்களுக்கு ஆட்படக் கூடிய சாதாரண மனிதராவர். கதைகள், ஒருபுறம் இருக்க, தமிழின் மொழி நடை இயல்புகளில் நுணுக்கமான ஆராய்ச்சியை மேற்கொண்டு அகத்தியனார், அம்மொழிபற்றிய இலக்கணத்தை இயற்றினார் என்பது, உண்மை நிகழ்ச்சியாம். அவ்வாறு இயற்றும்போது, சமஸ்கிருத இலக்கணக் கூறுகளெல்லாம், உதாரணத்திற்குப் பெயர்ச் சொற்களோடு இணையும் ஏழு அல்லது எட்டு வேற்றுமை உருபுகள் போல்வன, எல்லா

மொழிகளுக்கும் உள்ள பொது நிலையாம் என அவர் கருதுகிறார்: உலக மொழிகள், ஒன்றோடொன்று உறவு கொள்ளாத, பல்வேறு மொழிக் குடும்பங்களைச் சேர்ந்தவை; அடிப்படை அமைப்பிலேயே அவை, ஒன்றோடொன்று மாறுபடுகின்றன; அதனால், ஒரு மொழியின் சொல்லிலக்கண அமைப்புக்குள், வேறுஒரு மொழியின் சொல்லிலக்கண அமைப்பைத் திணிப்பது இயலாது என்பன போலும் உண்மைகள் அகத்தியனார்க்குத் தெரியா. சமஸ்கிருதம் விரிவான, சொல்லிலக்கண வகைகளைக் கொண்ட, தனக்கே உரிய, சொல்லுரு மாற்று மொழி. ஆனால், தமிழ், தனி இருசொற்கள் இணைந்தே தொகைச் சொற்களை உருவாக்க வல்ல, எளிய தெளிவான சொல்லிலக்கணத்தையுடைய, ஒரு மொழியாகும். சமஸ்கிருத முற்றுத் தொடர்வாக்கியங்களில், சொல்லுக்குச் சொல் உள்ள சொற்றொடர் உறவு, அச்சொற்களின் இலக்கண உறவு உணர்த்த, அச்சொற்களின் ஈற்றில் இணைக்கப்படும் விகுதிகளினால் மட்டுமே உணரலாகும். ஆதலின், சொற்கள், வாக்கியத்தில் எங்கு வேண்டுமானாலும் இடம் கொள்ளலாம் என்பது, அம்மொழி நிலையாகத், தமிழ், சொற்களை வேண்டியவாறெல்லாம், இடம் மாற்றச் செய்ய இயலா, உறுதியான சொற்றொடர் நிலையினைக் கொண்டுளது. சமஸ்கிருத மொழியின் இவ் விகுதிகள், தம் நிலையில் பொருள் உணர்த்தும் சொல்லாக இடம் பெற மாட்டாச் சொல்லீறுகளினால் ஆக்கப் பட்டனவாம் ஆதலின், தங்களுக்கெனப் பொருள் இல்லாதன. ஆனால், பொருள் உணர் சொற்களில் உறவினை உணரத் துணைபுரிவன ஆகும். இவைபோலும் சொல்லீற்று விகுதிகளை ஏற்றுக்கொள்வதனால், வேர்ச்சொல், வெறும் மூலமாக மாறி, அம்மூலமும் தனக்குத்தானே, தடம் காண மாட்டா மிகப்பெரிய மாறுதலுக்கு ஆளாக்கிவிடுகிறது; இவ்வகையில் ''தத்'' என்ற மூலம், ''அம்'' என்ற ஈறு ஏற்று ''தேஸாம்'' என ஆகிறது. ''ஹன்'' என்ற வினைவேர்ச்சொல் பெறும் பல உருமாற்றங்களில் ஒன்று, "ஜக்ஹான" என்பது; அதுபோலு ''டஹ்'' என்பதன் உருமாற்றம், ''அட்டொக்''

என்பதாம்: இவை, விகுதிகள் இணைவால், சொற்களின் இயலும் உருவமும் வேறுபடும் மொழிகளின் அடையாளங்களாம். தமிழ், இதற்கு மாறாகத், தனி இருசொற்கள் இணைந்தே தொகைச் சொற்களை உருவாக்கவல்ல ஒரு சொல்லியல் முறையினைக்கொண்ட ஒரு மொழியாம். தமிழில், பொருள்வேறுபடுத்தும் சொல்லுறுப்புகளாக வருவன 1. அம்மொழியில், தமக்கெனத் தனிப்பொருளும், தனி ஆட்சியும் உடையவாய, ஏழாம் வேற்றுமை உருபுகள் என வழங்கப்படும், ஒடு, பொருட்டு, அது, உடைய, இடை, தலை, திசை எனும் இவையும், இவை போல்வனவும். தமிழிலக்கண ஆசிரியர்கள் இவற்றைச் சொல்லீறுகள் - சொல்லுருபுகள் எனப் பொருத்தமுறஅழைப்பர். 2. சிறிதே உருபு திரிந்த, ஒடு, இல், அது, ஆறாம் வேற்றுமைப் பன்மை உருபாம், அவை என்ற பன்மைச் சுட்டின் திரிபு வடிவாம் அ என்பன. எந்தச் சொற்களின் திரிபு வடிவம் என்பதை உணரலாகா வகையில் திரிந்திருக்கும், வேற்றுமை உருபுகள், ஐ, கு, என்ற இரண்டும் பெயர்ச்சொல், எழுவாய், விளி அல்லாத வேற்றுமைகளில் பன்மை வடிவு பெறும் சமஸ்கிருத முறைக்கு முற்றிலும் மாறாகத் தமிழில், பெயர்ச் சொல்லுக்கும், இவ்வேற்றுமை உருபுகளுக்கும் இடையில், பன்மை குறிக்கும் குறியீடுகள், "அவர்களுக்கு" என்பதுபோல் நுழைக்கப்படும் உண்மை நிகழ்ச்சியால் தம் மூலச்சொல் அறியாவாறு திரிந்துவிட்ட ஐ, கு என்ற இவ்வுருபுகளும் ஓரளவு தனித்தன்மை வாய்ந்தனவே என்பது உணரப்படும்.

தமிழும், சமஸ்கிருதமும், இவ்வாறு அமைப்பு நிலையில், முழுக்க முழுக்க முரண்பட்டிருப்பதால், சமஸ்கிருத இலக்கண முடிபுகள், தமிழிலக்கணத்திற்குச் சரியாகப் பொருந்திவாரா; ஆனால், அகத்தியனார், சமஸ்கிருத மொழிக் கூற்றுண்மைகள், தமிழிலும் இடம் பெற்றுள்ள எனக் கருதுகிறார். அதனால், சமஸ்கிருதத்தில் உள்ளதுபோல், தமிழிலும் ஏழு வேற்றுமைகள் இருக்க வேண்டும் எனக் கருதுகிறார். வேற்றுமை உருபேற்ற சமஸ்கிருதப் பெயர்ச் சொற்களைத் தமிழ்ச் சொற்றொடர்களாக மொழிபெயர்க்கிறார். அச்

சொற்றொடர்களை, எழுவாய்ப் பொருளில் வரும் பெயர்ச் சொற்கள், அவற்றைத் தொடர்ந்து வருவன என இரண்டாகப் பிரித்து, அவ்விரண்டாம் பிரிவுகளைத் தமிழ் வேற்றுமை உருபுகளாகக் கொள்கிறார். பாணினியைப் பின்பற்றித் தமிழில், அவர், ஏழு வேற்றுமைகளைக் காண்கிறார்: சரியாகச் சொல்வதானால், உருவாக்குகிறார். அவர் மாணவர் தொல்காப்பியனார், ஐந்திரம் வழிச் சமஸ்கிருத இலக்கண ஆசிரியர்களைப் பின்பற்றி, அவற்றை எட்டு ஆக்குகிறார். ''காதலிபின்'' என்பது ''காதலி'' என்பதன் வேற்றுமை உருபேற்ற பெயராயின், ''காதலி எதிர்'' என்பதும் வேற்மை உருபேற்ற பெயராகாதோ? இம்முறையில் கணக்கிட்டால், தமிழ் மொழியில் உள்ள பெயர்ச் சொற்களிலிருந்து, பெறலாகும் வினையெச்சப் பெயரெச்சத் தொடர்கள் எத்தனை உளவோ, அத்தனை வேற்றுமைகளைத் தமிழ்ப் பெயர்கள் கொண்டிருக்க வேண்டும்.

தமிழில், சமஸ்கிருத ஏழு வேற்றுமைகளை இறக்குமதி செய்தது போலவே, சமஸ்கிருத செயப்பாட்டு வினையையும் அவர், இறக்குமதி செய்துள்ளார். செயப்படுபொருள் குன்றாவினை செயப்படுபொருள் குன்றியவினை ஆகிய எல்லா வினைச் சொற்களும், சமஸ்கிருதத்தில் அடையும், உறுதியான சொல் திரிபே. அம்மொழி, செயப்பாட்டு நிலை, செயப்படு பொருள் குன்றாவினைகள், செயப்பாட்டு வினையாக மாறும்பொழுது, அவ்வினைகள், ''சிங்கம் கொல்லப்பட்டது'' என்பதில் உள்ளதுபோல், செயப்படுபொருளைச், செய்வினை முதலாம் எழுவாயாக மாற்றும், அப்பணியினைச் செய்கிறது; வினை முதலாம் எழுவாய் தெரியாதபோது, அல்லது, அவ்வினை முதல் குறிப்பிடத் தேவையில்லாதபோது, அல்லது செயப்படுபொருள் வற்புறுத்தி உணர்த்தத் தேவைப்படும் போது இவ்வாறு வழங்குவது, பயனுடையதாகிறது.* செயப் படுபொருள் குன்றிய வினைகளுக்குச் செயப்பாட்டுத்திரிந்த வடிவங்கள் தரப்படும்போது, இதுபோலும் அடிப்படைப் பயன் எதுவும் காணப்படுவதில்லை; என்றாலும், செயப் பாட்டுவினை ஆட்சியால், எவ்விதச் சிறப்புப்பொருளும்

பெறப்படுவதில்லையாகவும், சமஸ்கிருதத்தில், செயப்படு பொருள் குன்றிய செயப்பாட்டு வினையாட்சி, செய்வினை ஆட்சியினும், மொழிநடை உடையதாம். அதன்படி, "ஸஹ்ப்ஹவதி" என்பதும், "தெனப்ஹூயதே" என்பதும் ஒன்றே. பின்னது, வேறு எம்மொழியில் மொழிபெயர்ப்பது இயலாது என்பதொன்றே, வேறுபாடு, ஆங்கிலம், சமஸ்கிருதத்தோடு உறவுடைய மொழியாயினும், "he is been" என்பது போலும் ஆட்சி, ஆங்கிலக்கிலும் பொருளற்றது; நகைப்பிற்குரியது: தமிழ்ச் செயப்பாட்டு வினை அமைப்புகளை, அகத்தியனார் புகுத்தியுள்ளார். இருந்தும், "தாட்யதெ" என்பதைப், "படு" என்ற வினைச் சொல்லை, "அடி" என்பதன், இறந்தகால வினை யெச்சத்தோடு இணைத்து, "அடிக்கப் பட்டான்" என அவரால், மொழிபெயர்க்க முடிந்தாலும், செயப்படுபொருள் குன்றிய செயப்பாட்டுவினையினைத், தமிழுக்குக் கொண்டுவர, அவரால் முடியவில்லை. இரண்டு வினைச்சொற்களை ஒரு சொல்லாகத் தொகைப்படுத்தி, அத்தொகைச் சொல்லின் இருமூலங்களுக்கும், எழுவாய் அல்லது வினைமுதலாக, வேறுவேறுபட்ட, இருவர்களைக் கொள்வது, காரணகாரிய முறையினையும், தமிழைப் பொறுத்தமட்டில், காரணகாரிய முறையினை அடிப்படை யாகக் கொண்ட இலக்கண விதிகளையும் மீறியதாகும்; ஆதலின், "அடிக்கப்படு" என்பதை, "அடிக்க" (மற்றொருவன்) அடிக்கும் பொழுது என்றும், "படு" துன்பம் அனுபவி என்றும் பிரித்துக் காண்பது, தமிழின் சிறப்பியல்புக்கு முரணாம். "அடிக்கப்படு" என்பதன் மொழிநடைவடிவம், அத்தொகைச் சொல்லின் முற்பகுதி, உருபேலாப் பெயர்ச் சொல்லாக வரும், "அடிபடு" அல்லது "அடியுண்" என்பதாம்; சமஸ்கிருதச் செயல்பாட்டு வினைகளைத், தமிழில் மொழி பெயர்க்கத் தேவைப்பட்டதாலும், அகத்தியனார் மாணவர், தொல்காப்பியனார், தம்முடைய இலக்கணத்தை, "எழுத்து எனப்படுவ" (தொல்: எழுத்து: 1) எனப் போலிச் செயப் பாட்டு வினையோடு தொடங்குவது போலச் சமஸ்கிருத மொழியில் சிந்தித்துத், தமிழில் எழுதுவார்க்குப் பெரிதும்

பயனுடையதாக அமைந்ததாலும், அகத்தியனார், இச்செயப்பாட்டு வினையினைக் கண்டுபிடித்துள்ளார்; இயல்பான தமிழ்ப்பேச்சு நடையில், எந்தத் தமிழனும், எந்நிலையிலும் மேற்கொள்ளாததும், சமஸ்கிருதத்திலிருந்து தமிழில் எளிதில் மொழிபெயர்க்க, சமஸ்கிருதப் பண்டிதர்களுக்குத் துணை நிற்கக் கண்டுபிடிக்கப்பட்டதாலும், இப்போலி செயப்பாட்டுவினை, நம் காலத்தில் பொருள்களைச் செயப்பாட்டு வடிவங்களில் விளக்கும் ஆங்கிலத்தில் சிந்தித்துத், தமிழில் எழுதக் கற்றுக் கொண்ட காரணத்தால், எழுத்து நடைத்தமிழில், அது ஒரு நடைமுறையாகிவிட்டது "படு" என்ற, மொழி மரபிற்கு ஏலா ஒரு சொல்லுருபு, பைபிளின் தமிழ் மொழிபெயர்ப்பு நூலின் ஒவ்வொரு பக்கத்தையும், துரதிருஷ்டவசமாகத், தமிழ்ப் பண்டிதர்களின் இலக்கியப்படைப்புகளையும் பாழ்படுத்துகிறது.

தமிழில், சமஸ்கிருத நாகரீக முதல் தலையீடுகளின், இவை ஒருசிலவே, அடுத்த தலையீடுகள், சொற்கள், கொள்கைகள், செய்யுட்கற்பனைகள், புராண, மற்றும் பிற கட்டுக்கதைகள், நம்பிக்கைகள், மூட நம்பிக்கைகள், விஞ்ஞான, ஒழுக்க, சமயப் பாடங்கள், உரைநடை, பாவகைகள், மற்றும் பிற பிற, காலம் செல்லச்செல்ல, சமஸ்கிருத நாகரீகத்தின் படையெடுப்பு, பிற்காலத் தமிழிலக்கியங்களை மட்டுமே தெரிந்த ஒருவனுக்குச், சமஸ்கிருத சொல்லாட்சி அற்ற, பிற்காலக் கற்பனைச் சிந்தனைகள் போல் அல்லாமல் இயற்கைச் சிந்தனைகளைக் கொண்ட தன்னுடைய மொழிநடை, அவன் தாய்மொழியல்லாத வேற்றுமொழிபோலும் பழக்கமிலா மொழியாகத் தோன்றுமளவு, தமிழிலக்கியம், முழுக்க, முழுக்க வடவர்களின் ஆதிக்கத்தின் கீழ் அகப்பட்டுக் கொள்ளுமளவு மிகப்பெரிதாகி விட்டது;

அகத்தியனாருடைய, அவர் பெயரால், அகத்தியம் என அழைக்கப்படும் இலக்கணம் இப்போது இல்லை; ஆனால், ஜமதக்கினியார் மகன் திரணதூமாக்கினியார் இயற்றிய,

தொல்காப்பியனார் எனப் பயில அழைக்கப்படும் அவர் மாணவர் இயற்றிய, இலக்கணம் இன்றும் உளது. அது, தெளிவாக, அகத்தியத்தையே மூலமாகக் கொண்டுளது; இத்தமிழ் இலக்கணங்கள், எழுத்து, சொல், யாப்பு, ஆகியன பற்றி மட்டுமல்லாமல், பாட்டின் கருப்பொருள் குறித்தும் இலக்கணம் வகுப்பது, இவற்றின் தனிச்சிறப்பாம். பாட்டின் கருப்பொருள், இலக்கிய மரபுகள் ஆகியவற்றால், தமிழ்ச் செய்யுள், சமஸ்கிருதச் செய்யுளிலிருந்து அறவே வேறுபடுவது கண்ட இப்பிராமண ஆசிரியர்கள், தம் இலக்கண நூல்களில், இப்பொருள்கள் பற்றிய ஆய்வினையும் மேற்கொள்வது தேவை என உணர்ந்தனர். திரணதூமாக்கினியாரின் நூலாம், அவர் தமிழ்ப் பெயரால் வழங்கும் தொல்காப்பியத்தின் பிற்பகுதிகள், பண்டைத் தமிழ்ப் புலவர்கள், தமக்கே உரிய தனி இயல்பிற் பாடிய பாடற்பொருள்களாம் அகம், புறம் ஆகியவற்றின் ஒவ்வொரு நிகழ்ச்சிகள் குறித்தும் ஆய்வு செய்கின்றன. பொருளதிகாரம் என்ற தொல்காப்பியத்தின் ஈற்றுப் பகுதியிலிருந்து, ஆரியர்களோடு நெருக்கமான தொடர்பு கொள்வதற்கு முன்னர், தமிழர் நடத்திய வாழ்க்கை முறை, தமிழ் உள்ளம், ஆரிய இலக்கியங்களுக்கு ஆட்படாததற்கு முற்பட்ட தமிழ் இலக்கியம் ஆகியவற்றின் முழுப்படத்தை வரைந்து கொள்ளலாம்.

அதுபோலும் ஒரு படக்காட்சி, தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் காட்டியிருப்பதுபோல, ''ஆரியத்துக்கு முந்திய தமிழர் நாகரிகம்'' (Pre Aryan Tamil Culture) என்ற என் நூலிலும், இனி வர இருக்கும், பண்டைத் தமிழர்'' (Ancient Tamils) என்ற என் நூலிலும் காட்டியிருக்கும் படக் காட்சிகளை, முழுமையாக்கும்.

### பொருளதிகாரத்தில் ஆரிய நுழைவு :

தமிழ்ப் பாக்கள் குறித்த தம்முடைய இலக்கணத்தில், ஆரியக் கருத்துக்களை இறக்குமதி செய்யும் கவர்ச்சியிலிருந்து, தொல்காப்பியனார் விடுபடவில்லை. பண்டைத் தமிழ்ப்

பாக்களின் மரபுகளை அல்லது விதி முறைகளை விளக்கிக் கூறும்போது, அவர் காலத்தில் வழக்கில் இருந்த, மறைந்தன போக எஞ்சியிருந்த அனைத்துத் தமிழ்ப் பாக்களையும் உறுதியாகப் பின்பற்றியுள்ளார். ஆனாலும், தாம் பெற்றிருந்த, சமஸ்கிருத இலக்கிய அறிவாலும், அரசியல் நெறிமுறைகளும், சமுதாய அமைப்புகளும், தெய்வத் தன்மையால் வகுக்கப்பெற்றவை என்ற தம் நம்பிக்கையாலும், அவர் அடிக்கடி ஆழ்த்தப்பட்டுள்ளார். சமுதாய உரிமையோடு, பாட்டுடைத் தலைவர்களாம் கல்வி உரிமையும் அனுபவிக்கும் முதல் மூன்று வருணவத்தவர் அடங்கிய நான்கு வருணத்தவர்களாக மக்களைப் பிரிப்பதே சமுதாய அமைப்பின் விதிமுறையாகும் என்பது தொல்காப்பியர்க்கு உரிய கருத்து. ஆனால், அவர் கற்ற தமிழ்ப்பாடல்களில், ஆரியக் கொள்கைப்படி, மிகவும் இழிந்தவர்களான, வேட்டையாடும் இனத்தின் தலைவனும், மீன் பிடிக்கும் இனத்தின் தலைவனும், காதற்பாக்களின் தலைவராவர். இம்முரண்பாட்டை விளக்க, அவர் எடுத்துக்கொள்ளும் முயற்சி, மிகவும் குறைபாடுடையது வேண்டாவிருப்பானது. மேலும், ஆரியச் சமுதாய விதிமுறைகளில் ஏற்றுக்கொள்ளப் பட்ட திருமணமுறைகள் எட்டு உள்ளன. ஆனால், தமிழ்ப் பாக்களில் இரண்டே உள்ளன. இவ்விரு முறைகளையும் ஒன்று எனக்காட்ட, அவர் வீணே முயன்றுள்ளார். தமிழ் அகத்திணை ஒழுக்கம், சமஸ்கிருதக் காம ஒருக்கத்தைவிட மென்மையானதாம்; தர்ம அர்த்த மோக்ஷங்களைத், தமிழ்ப் புறத்திணை ஒழுக்கங்களில் திணித்துவிட முடியாதாம் என்றாலும், உரையாசிரியர் பலரும் வீணே முயல்வது போலவே, தொல்காப்பியரும், காதலும், போருமே வாழ்க்கையின் குறிக்கோளாம் எனக் கருதும் தமிழர் வாழ்க்கை முறையைத் தர்ம, அர்த்த, காம, மோக்ஷமே வாழ்க்கையின் குறிக்கோளாம் எனக்கருதும் ஆரியர் வாழ்க்கை முறையோடு பொருத்திக்காண முயன்றுள்ளார். பொருளதிகாரம், கடைசி அதிகாரத்தில், தம் காலத்தில் தமிழில் இடம்பெறாத, ஆனால், தமக்குத் தெரிந்த

சமஸ்கிருத எடுத்துக்காட்டுக்கள் உள்ள, பல இலக்கிய வடிவங்களை விவரித்துக்கூறியுள்ளார். இவையும், இவை போலும் பல இடங்களில், தமிழுக்கு உரியன அல்லாதன வற்றைத், தமிழ்ப்பாக்கள் குறித்த தம்முடைய இலக்கணத்தில் புகுத்தியுள்ளார். அதனால், தொல்காப்பியர் இவ்வாறு செய்யுமிடங்களில், அவருடைய உரையாசிரியர்களால், அவர் கூற்றிற்குத் தேவையான எடுத்துக் காட்டுகளைத் தமிழிலிருந்து காட்ட முடியாமல் போவது வியப்பினைத் தருவதில்லை. தொல்காப்பியர், தமிழில் புகுத்தும், மற்றும் இரு ஆரியக் கொள்கைகள் பற்றி அவருடைய காலம் குறித்த ஆய்வின் போது தெளிவாகக் கூறப்படும்.

## தமிழில் சமஸ்கிருதச் சொற்கள் நுழைவு:

அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், தமிழ் நெடுங் கணக்கு ஒலி முறையில் வழங்கப்பட்டுவிட்ட சமஸ்கிருதச் சொற்களாம் தத்பவச் சொற்கள் சிலவற்றைத் தமிழில் புகுத்திவிட்டனர். அவ்வகைச் சொற்கள் இடைக்கால உரையாசிரியர்களின் உரையில் எடுத்தாளப்பட்டிருக்கும் அகத்தியச் சூத்திரங்களிலும் தொல்காப்பிய இலக்கணத்திலும் காணப்படுகின்றன. ஆனால், இலக்கண விதிகளைக் குறிக்க வல்ல மரபுச்சொற்களில் பெரும்பாலனவற்றிற்குத் தமிழ்ச் சொற்களைக் காணுமளவு, தமிழின் சிறப்பினை அகத்தியனார், மதித்திருந்தார். கிடைத்திருக்கும் பழைய தமிழ் இலக்கியங் களில், சமஸ்கிருதத்திலிருந்து கடன்பெற்று வழங்கப் பட்டிருக்கும் சொற்கள் மிகமிகக்குறைவு அல்லது அறவே இல்லை. ஆனால், காலம் செல்லச்செல்ல ஒரு பாடலில் இடம் பெற்றிருக்கும் சமஸ்கிருதச் சொற்களின் சதவிகிதம், அப்பாடலின் காலத்தை உணர்த்தும் அறிகுறியாம் எனக் கொள்ளுமளவு, அச்சொற்களின் நுழைவு, படிப்படியாகப், பெருகிக்கொண்டே வந்துளது. இவ்வாறு, சமஸ்கிருதச் சொற்கள், தமிழில், மேலும் மேலும் இடம் பெற்று வந்தன என்றாலும், தொல்காப்பியப் பொருளதிகாரத்துப் பெரும் பகுதிக்கருப்பொருளாக இருக்கும் தமிழிலக்கிய மரபுகள்,

ஆறாவது நூற்றாண்டுவரை விடாமல் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளன.

**அகத்தியர் காலம் :**

அகத்தியனார், அவர் மாணவர் தொல்காப்பியனார் ஆகியோரின் காலம் எது? அகத்தியனார் இலக்கணம், இப்போது இல்லை. ஆனால், தொல்காப்பியனார், அவரை அடிக்கடி எடுத்து ஆளுகிறார். அவர் சூத்திரங்களில் எங்கெல்லாம், என்று கூறுவர் எனப் பொருள்படும் ''என்ப'' என்ற சொல் இடம்பெறுகிறதோ, அங்கெல்லாம் உரையாசிரியர்கள் ''என்று கூறுவர் ஆசிரியர்'' என்றே பொருள் கூறுகின்றனர். தொல்காப்பியர், தம்முடைய இலக்கணத்தை ''எழுத்து என்று சொல்லப்படுபவை யாவை என்றால், அவை, அ என்ற எழுத்தில் தொடங்கி, ன் என்ற எழுத்தில் முடியும் முப்பது என்று ஆசிரியர் கூறுவர்'' என்ற கூற்றோடு தொடங்குகிறார்.

''எழுத்து எனப்படுப,
அகரம் முதல்,
னகர இறுவாய் முப்பஃது என்ப''.

(தொல்: எழுத்து : 1.)

ஆகவே, அகத்தியனார் தம்முடைய இலக்கணத்தைத் தமிழ் எழுத்துக்கள் முப்பது என்ற எண்ணிலேயேதொடங்கினார்என, நாம் கொள்ளலாம். எழுத்து என்ற சொல், தமிழ் இலக்கண ஆசிரியர்களால், குறிப்பிடத்தக்க ஒரு சிறப்பான நிலையில் ஆளப்பட்டுளது. ஒலியையும், உருவத்தையும் ஒருசேரக் குறிக்கும் வகையில், அது பெயரிடப்பட்டுளது. முன்னது ஒலிவடிவில் உள்ள எழுத்து எனப் பொருள்படும். ''ஒலிவடிவு எழுத்து'' என்றும், பின்னது நேர்க்கோடுகளாகவும் வளைந்த கோடுகளாகவும் வரையப்பட்ட எழுத்து எனப் பொருள்படும், ''வரிவடிவு எழுத்து'' என்றும் அழைக்கப்படும். ஆங்கிலத்தில், ஒலிவடிவெழுத்து, வரிவடிவெழுத்து என்ற இரண்டையும், ஒருசேரக் குறிக்கும், இயல்புடைய சொல் எதுவும்

இல்லாமையால், எழுத்து என்ற அச்சொல்லை அப்பொருள் குறிக்கும் வகையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பது இயலாது. அக்ஷரா என்ற சொல் சமஸ்கிருத ஆசிரியர் களால், இவ்விருபொருள் குறிக்கும் வகையில், ஆளப்படுகிறது. ஆனால், அக்ஷரா என்ற அச்சொல், கேட்கக் கூடிய ஒலியை உருவாக்கும், காற்றின் அலை அதிர்வின், வானவெளி அடித் தளத்தின் மூலமாம், நிலைபேறுடைய ஒலி எனக்கருதும், மீமாம்சகர், மற்றும் வியாக்கர்ணிகாக் கருத்துக்களோடு தொடர்புடையது ஆகலின், எழுத்து என்ற தமிழ்ச்சொல், அக்ஷரா என்பதன் மொழிபெயர்ப்பு ஆகாது.

எழுத்துக்கள் குறித்து அகத்தியனார் கூறும் இலக்கணப் படியே, தமிழ் வரிவடிவெழுத்துக்கள், உருது மொழிக்காகப் பயன்படுத்தப்படும் அராபிய எழுத்துக்கள் தவிர்த்து, இந்தியாவில் வழக்கத்தில் உள்ள எல்லா எழுத்துக்களையும் போலவே, "பிராமி" எனப் பெயர் சூட்டப்பட்ட, அசோகன் கல்வெட்டெழுத்துக்களிலிருந்தே, உருப்பெற்றன என்பதை நாம் அறிவோம். எழுத்தில் வடிக்கப்பெற்ற தமிழ்ச் சொற் களின், இதுவரை கண்டுபிடிக்கப்படாத மிகப்பழைய மாதிரி வடிவங்களின் உதாரணங்கள், பாண்டி நாட்டு மலைக் குகை களில் உள்ள கல்வெட்டுக்களில் நமக்குக் கிடைக்கின்றன. இக்கல்வெட்டுக்கள், பித்துப் பிடித்து அலையும் மக்கள் கூட்டத்திலிருந்து, வெகு தொலைவில் உள்ள, இயற்கையான மலைக்குகைகளில் தங்களை அழியாப் பேரின்ப நிலையாம் நிர்வாண நிலைக்குக் கொண்டு செல்லும், அமைதியான தவநிலையில் வாழ்ந்து வந்த பௌத்த, ஜைன முனிவர்களின் தூண்டுதலால் எழுதப்பட்டன. இக்கல்வெட்டுக்கள் நமக்குக் கிடைத்துள்ள தமிழ் எழுத்து முறை, மிகப்பழைய மாதிரி வடிவங்கள் மட்டுமன்று; பிராமி வடிவெழுத்துக்களை, மிகப் பொருத்தமுறச் சொல்வதானால், தென்னிந்திய மௌரிய வடிவெழுத்துக்களைத், தமிழ் எழுத்து நடைக்கு மேற் கொண்ட தற்காலிக முதல் முயற்சியுமாம். அவை, தனி மெய் எழுத்திற்கும், அகரமொடு இணைந்து வரும் உயிர்மெய் எழுத்திற்கும் இடையில், எளிதில் ஒலிப்பதற்கு வாய்ப்பாக,

"மெய் எழுத்துக்கள், அகரமொடு இணைந்தே ஒலிக்கப்படும் (மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" (தொல்: எழுத்து : 13) எனத் தொல்காப்பியர் கூறுவது போல) எவ்வித வேறுபாடும் காட்டவில்லை; அதாவது மெய் எழுத்தை உணர்த்த, மேலே புள்ளிவைக்கும் முறை இன்னமும் கொண்டு வரப்படவில்லை. ஆனால், அவை, தமிழுக்கே உரிய சிறப்பு மெய்யாம் "ழ" இரட்டித்தவழி, வலிந்தும் மூக்கொலி எழுத்தாம் "ன"கரம் முன்வரும் போது மெலிந்தும் ஒலிக்கப் படுவதும், நாக்கை உள்மடித்து ஒலித்து எழுவதுமான "ற", றகரத்திற்கு முன்வரும் மூக்கொலி எழுத்தைக் குறிக்கத் தன்னால் மட்டுமே இயல்வதும், இன்றை ஒலிப்பு முறையில், பல்லொலி எழுத்தாம் "ந" கரத்திலிருந்து வேறுபாடு காண இயலாததுமாகிய இரு சுழி "ன" ஆகியவற்றைக் குறிக்கும் வரிவடிவங்களைக் கொண்டுள்ளன. ஆகக் கிடைக்கக் கூடிய அகச்சான்றுகளின்படி: கி. மு. மூன்றாவது நூற்றாண்டின் இறுதியில், அல்லது, இரண்டாவது நூற்றாண்டின் தொடக்கத்தில், கல்வெட்டு வடிப்பதில், நீடித்துப் பயின்று, அழியாப்பயிற்சி பெற்றுவிட்ட, வெளிநாட்டிலிருந்து வந்தவர் களால், தமிழ், முதன்முதலில், வரிவடிவில் எழுதப்பட்டது எனத் தெரிகிறது. தமிழிலக்கியங்களை எழுதி வைப்பதற்குத் தனியான நெடுங்கணக்கு இல்லாமையே கிறித்துவ ஆண்டுத் தொடக்கத்திற்கு மிகவும் முற்பட்ட காலத்திலேயே, பெருமளவில் இயற்றப்பட்டிருக்க வேண்டியவாய, தமிழ்ப் பாக்கள், மீளவும் பெறமாட்டாவகையில், அழிந்து விட்டதற்குக் காரணமாம். ஆகவே, தமிழ் எழுத்து முறை, எல்லோராலும், பெருமளவில் மேற்கொள்ளப்பட்டிருக்க வேண்டிய கி. மு. முதலாம் நூற்றாண்டிற்கு முன்னர், அகத்தியனார் வாழ்ந்திருக்க முடியாது என முடிவு செய் கின்றேன். தொல்காப்பிய ஆராய்ச்சி ஆசிரியரும் அவர் மாணவரும், அதற்கு, ஒரு நூற்றாண்டு அல்லது, சற்று அதிகப் படியான பிற்பட்ட காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் எனக் கொள்ளுமாறு நம்மை வற்புறுத்துகிறது. திருமணம், மற்றும் இனிய நிகழ்ச்சிகளுக்கு ஏற்புடைய நாழிகை எனும்

பொருளில், "ஓரை" என்ற சொல்லைத், தொல்காப்பியர் ஆண்டுள்ளார்:

"மறைந்த ஒழுக்கத்து, ஓரையும் நாளும்,
துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை"
[—தொல்: பொருள்: களவு: 44]

"தீய ஓரையிலும், தீய நாளிலும், புணர்ச்சியைக் கைவிட வேண்டும் என்ற கொள்கை, மறைந்த ஒழுக்கமாம், களவுக் காலத்தில் தலைவனுக்கு இல்லை"

"ஓரை" என்ற அத்தமிழ்ச் சொல், "அவர்" (Hour) என்ற ஆங்கிலச்சொல்லைப் போலவே, முடிந்த முடிவாக, ஹொரா (Hora) என்ற கிரேக்க மொழிச் சொல்லிலிருந்தே பெறப்பட்டதாம். "ஹொரா" என்ற அச்சொல், கிரேக்க மொழியில், கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில், "பருவம்" என்ற பொதுப் பொருளில்தான் வழங்கப்பட்டது: நாளின் இருபத்து நான்கு கூறுகளில், ஒவ்வொரு கூறும், ஏழு கோள்களில், ஒவ்வொரு கோளின் ஆட்சிக் கீழ், வருவதாகக் கொள்ளப் பட்ட, கி. மு. இரண்டாவது நூற்றாண்டில்தான். "ஹொரா" என்ற அச்சொல்லுக்கு, நாளின் இருபத்து நான்கு கூற்றில், ஒரு கூற்றை உணர்த்தும் பொருள் தரப்பட்டுள்ளது. ஹொரா என்ற அச்சொல், தான் உணர்த்தும் சோதிடப் பொருட்குறிப்போடு, கி. மு. முதல் இரண்டு நூற்றாண்டு களில், கிரேக்க மன்னர்களால், ஆட்சி செய்யப்பட்டு வந்த காந்தாரத்திற்குப் பயணம் செய்தது, சமஸ்கிருத நூலாசிரியர்கள், கிரேக்கர்களின் ஜோதிடக் கலையைக் கற்றுக் கொண்டபோது, அது, சமஸ்கிருதத்தில் இடம் கொண்டது. பின்னர், அது, தெற்கில் பயணம் செய்து, தமிழில் நுழைந்து விட்டது. "ஓரை" என்ற சொல், தொல்காப்பியர் காலத்தின் மேல்வரம்பாகும்: கி. பி. முதலாண்டிற்கு முன்னர்த், தமிழில் இடம்பெற்றிருக்க முடியாது என்று கொண்டால், அது, ஒரு நடுநிலை மதிப்பீடாம். தொல்காப்பியனார், தம்முடைய இலக்கண நூலில், "ஓரை" என்ற சொல்லை ஆண்டிருந்

தாலும், தமிழர்களின் பெரும்பகுதியினர், அதாவது, பார்ப்பனரல்லாதார், ஆரிய நாகரீகத்தால் அடிமை கொள்ளப் பட்டு, அதனால் கோள்கள் குறித்த வானநூல் அறிவைத், தொல்காப்பியர் காலத்துக்கு, மிக, மிக முற்பட்ட காலத்திலேயே, பெற்றிருந்தனர்; அல்லது அதில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இவ் வானநூல் கலையோடு தொடர்புடையன, ஏழு நாட்களைக் கொண்ட வாரமும், ஒவ்வொரு நாளும் அந்நாளின் முதல் இரண்டரை நாழிகையை ஆட்சி செலுத்தும் கோளால் பெயரிடப்படுவதுமாம். ஆகவே, வாரத்தின் நாட்களின், கோள் சார்புடைய பெயர்கள் தமிழிலக்கியங் களில், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுவரை காணப்படவில்லை.

தொல்காப்பியப் பொருளதிகாரத்திலிருந்து பெறப்படும், தொல்காப்பியனார் காலத்தை உறுதி செய்யத் துணை புரியும், பிறிதொரு செய்தியும் உளது. அகத்திணைத் தலைவனின் தோழர்களாகவும், அவன் காதல் ஒழுக்கங் களுக்குத் துணைவர்களாகவும் வருவோருள், பார்ப்பார் களையும் குறிப்பிடுகிறார்:

''பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி
சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியொடு
அளவியன் மரபின், அறுவகை யோரும்
களவினில் கிளவிக்கு உரியர் என்ப''

''பாணன், கூத்தன், விறலி, பரத்தை,
யாணம் சான்ற அறிவர், கண்டோர்,
பேணுதகு சிறப்பின் பார்ப்பான், முதலா,
முன்னுறக் கிளந்த கிளவியொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பிற்கு உரியர்''

''பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி,
யார்க்கும் வரையார், யாப்பொடு புணர்ந்தே'':

—தொல் : பொருள் : செய்யுள் : 181, 182, 189

அவ்வகையில், காதல் நிகழ்ச்சிகளில் பெருந்துணை புரிபவர்களாகப் பிராமணர்கள் ஆளப்படுவதை, ஆழ்ந்து முடிவு செய்துள்ளார். இது, சமஸ்கிருத நாடகத்தின் ஒரு மரபு ஆகும்; அகநானூற்றிலோ, அல்லது புறநானூற்றிலோ, அத்தகைய குறிப்பு எதையும் காண முடியவில்லையாதலின் தொல்காப்பியனார், அதை ஒரு கொள்கையளவில் கூறியுள்ளாரேயல்லது, ஓர் உண்மை நிகழ்ச்சியாகக் கூறவில்லை என்றே, நான் எடுத்துக் கொள்கிறேன்; புறநானூற்றில், பார்ப்பார் என்ற சொல், நான்கு முறை இடம்பெறுகிறது ; அந்தணர் மற்றும் அவர்தம் புலமை பற்றி, மேலும் எட்டுக் குறிப்புகள் உள்ளன.

> ''ஆவும் ஆன் இயல் பார்ப்பன மாக்களும்''
>
> —புறம் : 9 : 1.

> ''பார்ப்பார்த் தப்பிய கொடுமை'' —புறம் : 34 ; 3.

> ''ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்
> பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து''
>
> —புறம் : 367 : 4 - 5.

> ''அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
> முத்தீவிளக்கு'' —புறம் : 2 : 23 - 24.

> ''புலன் அழுக்கற்ற அந்தணாளன்''
>
> —புறம் : 126 : 11.

> ''யானே பரிசிலன் மன்னும் அந்தணன்''
>
> —புறம் :200 : 13.

> ''அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே''.
>
> —புறம் : 201 : 7.

> ''கேள்வி முற்றிய வேள்வி அந்தணன்''
>
> —புறம் : 361 : 4

> '' ஆக்குரல் காண்பின் அந்தணாளர்''
>
> —புறம் : 362 : 8.

"இறைஞ்சுக பெரும! நின் சென்னி, சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே,"

—புறம் : 6 : 19 - 20.

"ஆன்ற கேள்வி, அடங்கிய கொள்கை,
நான்மறை முதல்வர்,".

—புறம் : 26 : 12 - 13.

"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்",

—புறம் : 93 : 7.

"வேத வேள்வித் தொழில்",

—புறம் : 228 : 9.

இவையெல்லாம், அவர்களின், வேதப்புலமை, வேள்வித் தீ, ஏற்றுக்கொண்ட கொடைவளம் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனவேயல்லது, காதலர்களிடையே, அவர்கள் மேற்கொண்ட தூது பற்றிக் குறிப்பிடவில்லை. அகநானூற்றில் அக வேள்வி செய்தறியாத ஒரு பார்ப்பானும், "வேளாப் பார்ப்பான்" (அகம் : 24 : 1) அரசர்களிடையே தூதுவத் தொழில் மேற்கொண்டு செல்லுங்கால், மழவர் என்ற ஆறலைகள்வரால் கொல்லப்பட்ட ஒரு பார்ப்பானும், "தூது ஒய் பார்ப்பான் மடி வெள்ளோலை... தடிந்து உடன் வீழ்த்த கடுங்கண் மழவர்" (அகம் : 337 : 7-11), குறுந்தொகையில், மணம் ஆகா இளையபார்ப்பான் ஒருவனின் உடைமைகளும், "தண்டொடு பிடித்த, தாழ்கமண்டலத்துப் படிவ உண்டிப் பார்ப்பன மகனே! எழுதாக்கற்பின் நின் சொல்" (குறுந்தொகை : 156 : 3-5) கூறப்பட்டுள்ளனர். ஆனால், காதலரிடையே தூது செல்லும் செயல் எதுவும், அவற்றில் குறிப்பிடப்படவில்லை. காதலரிடையே, பார்ப்பனர் தூது செல்லும் மரபினைத், தொல்காப்பியனார், சமஸ்கிருத நாடகத்திலிருந்தே, தமிழ்ப் பாக்களுக்குக் கொண்டுவந்திருப்பதால், அவர், முறையான நாடகங்கள், சமஸ்கிருதத்தில் வளர்ந்துவிட்ட பிற்காலத்தில், வாழ்ந்திருக்கவேண்டும்.

பாஸா (Bhasa) என்பவர்தாம், சமஸ்கிருதப் புலவர்களில் பழமையானவர். அவர், கி. மு. மூன்றாவது நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்தவராவது இயலாது; அந்நாடக மரபைத், தொல்காப்பியனார், தம்முடைய இலக்கணத்தில் இணைத்துக்கொள்வதற்குத் துணை செய்வதற்கேற்பத், தென்னிந்தியாவை அடைய, சமஸ்கிருத நாடகங்களின், அவ்விலக்கிய மரபு, சில ஆண்டு காலத்தை எடுத்துக்கொண் டிருக்கவேண்டும்.

சொல், யாப்பு உள்ளிட்ட அதன் இலக்கணங்களுக்கு ஆற்றிய முழு நிறைவான அடிப்படைப்பணியுட்பட, தமிழ் நாகரீக வளர்ச்சிக்கு, அகத்தியர் பங்கு, கூறிப் பாராட்டத்தக்க பெருஞ்செயலாகும். ஆனால், பண்டைய கட்டுக் கதை யாளர்களும், இன்றைய வரலாற்று ஆராய்ச்சியாளர்களும், அற்புதத் திருவிளையாடல்களைக் கற்பித்து, அத்தூயவரை மாசுபடுத்த முயன்றுள்ளனர். அவ்வகையில், பழைய தமிழ்ப்புராணங்கள், அவர், சிவன் அல்லது சுப்பிரமணியரிடம் தமிழ் கற்றார்; தமிழர்களுக்குத் தமிழைக் கற்பித்தார் என்று கூறுகின்றன; அகத்தியர், தம்மிடையே வந்து, காட்சிதரும் வரை தமிழர், எழுத்தறிவில்லா ஊமையராய் இருந்தனர்? என நான் கருதுகின்றேன். திருவாளர் டி. ஆர். பண்டர்கார் அவர்கள், "அதுவரைக் கண்டறியப்படாதிருந்த தென் னாட்டினுள், திராவிடர்களை நாகரீக மக்களாக மாற்றிய வாறே, மேலும் மேலும் ஊடுருவிச்சென்றார்." எனக் கூறுகிறார். (Carmichal Lecturas. 1918 Page 18) திருவாளர், டி. ஆர். இராமகிருஷ்ண சாஸ்திரி அவர்கள், தமிழர்களின் சமுதாய இலக்கிய வாழ்க்கை முறையில், அகத்தியர் புகுத்திய புதுமை, வகுத்த மறுசீரமைப்புகள் பற்றிப் பேசுகிறார். (Proceedings and Transactions of Thrid Oriental Conference 1924 Page. 205) இவையனைத்தும் வடிகட்டிய சமயச் சார்பான கட்டுக்கதைகள். மக்கள் வாழ்ந்து வளர்ந்த சுற்றுச் சூழலை அடிப்படையாகக் கொண்டே எழுந்தமையால், மாற்றவோ, அழிக்கவோ முடியாததான, தமக்கே உரிய

இலக்கிய மரபுகளோடு இணைந்து, முழுமையாக வளர்ச்சி பெற்ற, ஓர் இலக்கியத்தையே அகத்தியர் கண்டார்; முழுமையாக வளர்ச்சி பெற்ற இலக்கிய நடையோடு கூடிய ஒரு மொழியையும் அவர் கண்டார். அம்மொழி இலக்கியம் குறித்த இலக்கணத்தை இயற்றினார். அவ்வளவே; அதுவல்லது வேறு இல்லை.

அகத்தியர் காலத்திற்கு முன்பே, எண்ணற்ற தமிழ்ப் புலவர்கள் இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால், யாப்பு குறித்த இலக்கணத்தை, அவரால் இயற்றியிருக்க இயலாது; திருந்திய இலக்கிய நடையாம் செந்தமிழ் குறித்துக் கூறத் தேவையில்லை. தமிழ்ச் செய்யுள் நடையெழுந்த காலத்திற்கும், அகத்தியனார் காலத்திற்கும் இடைப்பட்ட கால கட்டத்தில், புறத்திணை, அகத்திணைப் பாடல்களால் உருவாகிய எழுச்சி, அவ்வகை இலக்கியங்களை, அவர் காலத்திற்குப் பின்னர் ஐந்நூறு ஆண்டுவரையும், பண்டைய இலக்கியங்கள் நிலைகுலைந்து, சுமஸ்திருதக் கவிதைகளால் ஈர்ப்புண்டு, அகத்தூண்டுதல் பெற்றுப், புதிய தமிழிலக்கியங்கள் தோன்றிப் பழைய கவிதை முறைகளைப் பெரிதும் மறைத்துவிட்ட அக்காலம் வரை, கொண்டு சென்றது; பிறகாலப் புராணக்கதைகள், அகத்தியனார், தமிழைத் தோற்றுவித்தார் எனக் கூறுகின்றன. ஆம்; தமிழ் மொழியுள், இந்த மொழியிலக்கண முதல்ஆசிரியரின், நல்வருகையின் கீழ் நடைபெற்ற ஆரிய நுழைவின் பெரும்பயனே, பிற்காலத் தமிழிலக்கியங்கள் என்ற உண்மைக்கரு, இக்கதையுள் அடங்கியுளது எனலாம்; ஆகவே, அகத்தியக் கட்டுக்கதைக் களஞ்சியத்துக்குத் தமிழிலக்கியம் பெரும்பங்கு அளிக்க முடியும் என, எவரும் எதிர்பார்க்கலாம். ஆனால், அகத்தியக் கட்டுக் கதைகளுக்குத் தமிழ் ஆற்றியிருக்கும் பங்கு மிகக் குறைவாம் என்பது அறிய, ஏமாற்றம் தருவதாய் உளது. குறுந்தொகையிலும், நற்றிணையிலும், அவர் பற்றிய குறிப்பு எதையும் என்னால் காண முடியவில்லை. புறநானூற்றில், வேதவேள்வி செய்வோரின் வாழிடமாகப் பொதிய மலையைக்கூறும் குறிப்பு ஒன்று உளது. "முத்தீ

விளக்கில் துஞ்சும், பொற்கோட்டு இமயமும், பொதியமும் போன்றே.'' (புறம்: 2 : 23-24) அகம், புறம் என்ற இரு தொகை நூல்களில் பொதியமலை, பாண்டியர்க்கு உரியதாக, ஏழு பாக்களில் விளக்கப்பட்டிருக்க, அதை, அகத்தியர்க்கு உரியதாக்கும் குறிப்பு எதுவும் அவற்றில் இல்லை. அகத்தியனார் காலம், தொகை நூல்களில் மிகப் பழையனவாய, அந்நான்கு தொகை நூல் பாக்களுக்கு, நனிமிக அண்மையானது. ஆகவே, அவை, அவரை, மக்களுள் ஒருவராக, ஓர் இலக்கண ஆசிரியராகப் பார்த்ததே அல்லது, ஒரு ரிஷியாக மதிக்கவில்லை என்ற உண்மையே, இதற்குக் காரணமாதல் கூடும்.

பாண்டியன் நெடுஞ்செழியனின் அன்புக்குரிய புலவர் மாங்குடி மருதனார் (கி. பி. 450) அவனைப் பாராட்டிப் பாடிய மதுரைக் காஞ்சியில், ஒரு பகுதி உரையாசிரியர் நச்சினார்க்கினியரால், அது, அகத்தியரைக் குறிப்பதாகக் காட்டுமளவு சிதைக்கப்பட்டுள்ளது. அது, நெடுஞ்செழியனைப் பார்த்து, ''பக்க மலைகளில் வீழ்ந்து ஓடும் அருவிகளைக் கொண்ட மலைக்கு உரியவனே! தென்னவர்களை ஓட்டியவனும், அணுகுவதற்கு அரிய ஆற்றல் வாய்ந்தவனுமாகிய பழம் பெரும் கடவுளுக்கு, அடுத்து இருக்க விரும்புவோனே!'' எனப் பாராட்டுகிறது.

> ''தென்னவன் பெயரிய துன்னரும் துப்பின்
> தொன்முது கடவுள் பின்னர் மேய
> வரைத்தாழ் அருவிப் பொருப்பின் பொருந!''
>
> —மதுரைக்காஞ்சி : 40-42

இப்பகுதி, பொருள், தெளிவு காணமாட்டாது உளது; ''தென்னவன்'' என்பது இராவணனைக் குறிக்கும் என்றால், இராமனுக்கு அடுத்தவனாக இருக்க விரும்பினான் நெடுஞ்செழியன் என்பது பொருளாதல் வேண்டும். ஆனால், இராவணனைத், தென்னவன் எனக் குறிப்பிடும் ஒரே ஒரு குறிப்பு, அதுவும் மிகவும் பிற்பட்ட பாட்டு ஒன்றில் உளது;

"தென்னவன் மலை எடுக்கச், சேயிழை ஒடுங்கக் கண்டு,
மன்னவன் விரலால் ஊன்ற".
—திருநாவுக்கரசர் தேவாரம் திருக்கச்சி மேற்றளி;

"தென்னவன்" என்பது, பாண்டிய மன்னர்களுக்குப் பொதுவாக இட்டு வழங்கும் ஒரு பட்டப்பெயர். அப்பாட்டு, ஆரியப் புராணக் கதைகள் தமிழ்நாட்டில் பரவ இடம் கொண்டுவிட்ட கி. பி. ஆறாம் நூற்றாண்டில் பாடப்பட்டதாயின், அத்தொடரைத், தென் திசைக் கடவுள் எனக் கூறப்படும் யமனை வென்ற சிவனுக்கு அடுத்த நிலையில் இருக்க விரும்பினான் நெடுஞ்செழியன் என்ற பொருள்தரும் வகையில் கொள்ளலாம். ஆனால், சிவனின், இவ்வெற்றிச் செயல், நெடுஞ்செழியன் காலத்து மதுரையில், பலராலும் அறியப்பட்டிருந்தது என, உறுதியாகக் கொள்ளமுடியாது. மேலே கூறப்பட்ட இரு பொருள்களுமே, கட்டுப்பாடற்ற கற்பனைகள்தாம். ஆனால், உரையாசிரியர் நச்சினார்க்கினியரின் விளக்கம் படுமோசம். அவர். மூலச் சொற்களையும், சொற்றொடர்களையும் தாம் கூற விரும்பும் பொருளுக்கு ஏற்றவாறு இடம் மாற்றிப் போட்டுத், தென்னவன் என்ற சொல் இராவணனைக் குறிப்பதாகக் கொண்டு, அகத்தியர், தமிழ்நாட்டின் தலைமைப் பொறுப்பிலிருந்து, இராவணனை அகற்றினார் எனக் கூறுகிறார். தம் கூற்றுக்கு ஆதரவாக, தொல்காப்பிய உரையாசியர் இளம்பூரணர், அகத்தியர், இராவணனை இசையில் வென்றார் எனக்கூறுவதை எடுத்துக் காட்டுகிறார். (இராவணனைத் தமிழ் நாட்டையாளாதபடி போக்கின, கிட்டுதற்கரிய வலியினையுடைய, பழமை முதிர்ந்த, அகத்தியன் இராவணன் தென்திசையாண்டமை பற்றித் தென்னவன் என்றார்; அகத்தியனைத், தென்திசையுயர்ந்த நொய்ம்மைபோக, இறைவனுக்குச் சீரொப்ப இருந்தான், என்பது பற்றிக் கடவுள் என்றார். இராவணன் ஆளுதல், பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க." (மதுரைக்காஞ்சி 40-42, உரை) என்ற அவர் உரையினைக் காண்க. நச்சினார்க்கினியார் தரும் இப்பொருள்

விளக்கம் முழுக்க முழுக்கப் பிழைபட்டது. மதுரைக்காஞ்சி, அகத்தியனாரைக் குறிப்பிடவேயில்லை.

சிலப்பதிகாரம், பழைய தமிழ்ப் புராணக் கதைகளும், ஆரியப் புராணக்கதைகளும், பழைய தமிழ்ப் பழக்க வழக்கங்களும், ஆரியப் பழக்கவழக்கங்களும், வேறு பிரித்துக் காணாவாறு, ஒரே இனத்தைச் சேர்ந்த பிழம்பு வடிவமாக வடிக்கப்பட வில்லையாயினும், ஒன்றோடொன்று கலக்கத் தொடங்கிவிட்ட, கி.பி. ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு பாட்டு, இந்தப் பாட்டும், தமிழை முதன்முதலில் தோற்று வித்து, மக்களுக்குக் கற்பித்ததாகக் கூறும் அகத்தியப் புராணத்தின் மூலத்தைக் காணப் பெரிய அளவில் துணை புரியவில்லை. இது, இந்திரன் மகன் சயந்த குமரன், வானுலக ஆடல் மகள் உருப்பசி, ஆகியோரை, அகத்தியர் சபித்ததைக் கூறுவதோடு, அகத்தியர் குறித்த வேறு ஒரு குறிப்பையும் தருகிறது. அது, மாடலன் என்ற பார்ப்பன யாத்திரிகன் குமரியில் நீராடச் செல்வதன் முன், அகத்தியர் இருந்த மலையை வலங் கொண்டதைக் கூறுகிறது.

> "தெய்வ மால்வரைத் திருமுனி அருள
> எய்திய சாபத்து இந்திர சிறுவனொடு
> தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய
> மலைப்பரும் சிறப்பின் வானவர் மகளிர்".
>
> —சிலம்பு: அரங்கேற்று காதை: 1-4

> "மாமறை முதல்வன் மாடலன் என்போன்
> மாதவ முனிவன் மலைவலம் கொண்டு
> குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து".
>
> — சிலம்பு: அடைக்கலக்காதை: 13-15

அடுத்த பெருங்காப்பியமாகிய மணிமேகலை, மேலே கூறிய காப்பியமாம் சிலப்பதிகாரக் காலத்தைச் சேர்ந்ததாகக் கொள்ளப்படினும், அது, பழைய தமிழிலக்கிய மரபுகள்

எல்லாம், சமஸ்கிருத இலக்கிய மரபுகளால், தமிழிலக்கியத்திலிருந்து முழுமையாக வெளியேற்றப்பட்டுவிட்ட, மக்களின் வாழ்க்கை முறை, ஆரிய ஆதிக்கத்தின் கீழ் முழுமையாகக் கொண்டுவரப்பட்டுவிட்ட, மக்களுக்கு இட்டுவழங்கிய தமிழ்ப் பெயர்களெல்லாம், சமஸ்கிருதப் பெயர்களால் இடம் கொள்ளப்பட்டுவிட்ட காலத்து நிகழ்ச்சிகளைப் பற்றியே கூறுகிறது. ஆனால், இந்தக் காப்பியமும், அகத்தியர் பற்றிய கதைகளில் ஒருசிலவற்றையே கொண்டுளது. அவற்றுள் ஒன்று, நீர்வேட்கையுற்ற காந்தமன் என்ற சோழ மன்னன் வேண்ட, அமர முனிவனாம் அகத்தியனுடைய நீர்க்குடம் கவிழத் தோன்றிய காவிரிப் பெண்ணைக் குறிப்பிடுகிறது.

> ''கஞ்ச வேட்கையின் காந்தமன் வேண்ட,
> அமர முனிவன் அகத்தியன் தனாது
> கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை''.
>
> — மணிமேகலை : பதிகம். 10-12

ஸ்காந்த புராணம், இந்த வேண்டுகோள் விடுத்ததை, இந்திரனுக்கு ஏற்றுகிறது. சமஸ்கிருதத்தில், காவிரி, காவேரி என அழைக்கப்படுகிறது. காவேரி, கவேரன் என்ற முனிவன் மகளாகக் கூறப்பட்டுளது. இக்கதை, மணிமேகலையில், ''தவாநீர்க் காவிரிப் பாவைதன் தாதை கவேரன்'' (மலர் வனம் புக்க காதை : 55-56) ''கவேர கன்னி'' (பீடிகை கண்டு பிறப்பு உணர்ந்த காதை : 62) எனக் குறிப்பிடப்பட்டுளது. இக்கதை, ஆக்நேயபுராணத்தில் கூறப்பட்டிருப்பதாக, திருவாளர். டாக்டர் உ. வே. சுவாமிநாத அய்யர் அவர்கள் கூறுகிறார். (மணி: 9; 52. அடிக்குறிப்பு காண்க) மற்றொன்று, அகத்தியர் ஆணையிட, வானிடைத் தொங்கிக்கொண்டிருந்த, அசுரர்க்குரிய கோட்டையை அழித்து, அவ்வெற்றி குறித்துத் தோளில் தொடி அணிந்து, தொடித்தோள் செம்பியன் எனும் பெயர் கொண்ட சோழ மன்னன் ஒருவன், தன் தலைநகரில் காவிரிப்பூம்பட்டினத்தில் இருபத்தெட்டு நாட்கள் நடைபெறும் இந்திரவிழாவின்போது வந்திருக்குமாறு, இந்திரனை

வேண்டிக்கொள்ள, அவனும் அதற்கு இசைந்து வந்திருந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது.

> ''ஓங்குஉயர் மலயத்து அருந்தவன் உரைப்பத்
> தூங்குஎயில் எறிந்த தொடித்தோள் செம்பியன்,
> விண்ணவர் தலைவனை வணங்கி முன்நின்று
> மண்ணகத்து என்தன் வான்பதி தன்னுள்
> மேலோர் விழைய விழாக்கோள் எடுத்த
> நாலேழ் நாளினும் நன்குஇனிது உறைகு என,
> அமரர் தலைவன் ஆங்கது நேர்ந்தது.''
>
> —மணிமேகலை: விழாவறை காதை: 3-9

இதன் பொருள்: ஓங்கி உயர்ந்த மலைக்கு உரிய, அரிய தவம் புரிந்த முனிவன் ஆணையிட, வானில் தொங்கிக் கொண்டிருந்த கோட்டையை அழித்த, தொடி அணிந்த தோளினை உடைய சோழன், வானவர் தலைவனாம் இந்திரனை வணங்கி, அவன்முன் நின்று ''மண்ணுலகில், எனக்கு உரிய சிறந்த தலைநகரில் பெரியவர்கள் விரும்ப விழாக் கொண்டாடும், இருபத்தெட்டு நாட்களிலும் வந்து நன்கு இருப்பாயாக'' என வேண்டிக்கொள்ள, தேவர் தலைவனும் அது நேர்ந்தான் என்பதாம்.

கொண்டாட மறந்துவிட்டதால், தலைநகரைக் கடல் கோளாம் பேரழிவுக்கு உள்ளாக்கிவிட்ட இந்திரவிழா வந்த வரலாறு இது. அப்பாட்டின் பிற்பகுதியில், அகத்தியர் குறித்த மற்றொரு குறிப்பும் இடம் பெற்றுளது. அது, பரசுராமன், க்ஷத்திரிய அரசர்களையெல்லாம் அழித்துவரும் போது, காவிரிப் பூம்பட்டினத்துக் காவல் தெய்வம், மறைந்து கொள்ளுமாறு ஆணையிட, காந்தமன் என்ற அரசனும் துயர் தீர்ந்துவிட்டது என அகத்தியன் அறிவிக்கும் வரை, தலைநகரைக் காக்குமாறு பின்னோனுக்கு ஆணையிட்டு, அம்முனிவர் தவப்பள்ளியில் மறைந்து வாழ்ந்த நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது.

''மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
தன்முன் தோன்றல் தகாதுஒளி நீ எனக்,
கன்னி ஏவலின் காந்த மன்னவன்......

..........................................

அமர முனிவன் அகத்தியன் தனாது
துயர்நீங்கு கிளவியின் யான்தோன் றளவும்,
ககந்தன் காத்தல்''

—மணிமேகலை : சிறைசெய்காதை : 25 - 27 மற்றும் : 35-36.

இதன்பொருள் : அரசர் குலத்தை அழித்த, மழு என்ற வாள் ஏந்திய நெடிய திருமாலாம் பரசுராமன் முன் தோன்றுவது தகாது, நீ மறைந்துகொள் எனக் கன்னித் தெய்வம் ஆணையிட, காந்த மன்னவன் தேவமுனிவனாம் அகத்தியன் கூறும், துயர் தீர்ந்துவிட்டது என்ற சொல் கேட்டு, நான் வரும் வரை ககந்தா! காப்பாயாக என்பதாம்.

கி. பி. முதலாம் ஆயிரத்தாண்டினைச் சேர்ந்த இந்தக் கதைகள் எதிலும், அகத்தியர், தெய்வ ஆசிரியனிடமிருந்த தமிழைப் பெற்றது அல்லது கற்றதைக் குறிப்பிடவில்லை. ஆகவே, பிற்காலத்தே வாழ்ந்த அகத்தியனார், முதல் தமிழிலக்கணத்தை எழுதிய உண்மை நிகழ்ச்சி, முதல் அகத்தியர், தமிழைச் சிவன் அல்லது சுப்பிரமணியரிடமிருந்து கற்றுத், தென்னிந்திய மக்களுக்குக் கற்றுத் தந்தார் என்ற புராணக் கதையாக மாறியது. உரையாசிரியர்கள் பெருகிப், பழங்காலம் குறித்த புராணக்கதைகளைக் கட்டிவிட்ட கி. பி. இரண்டாம் ஆயிரத்தாண்டில் நிகழ்ந்திருக்க வேண்டும். பாயிரம் எனப்படும் தொல்காப்பிய முன்னுரையில் நச்சினார்க்கினியர் கூறுவதே, புராணக்கதைகளில் படுமோசமானது. அகத்தியனார், தம்முடைய மாணவர், திரணதூமாக்கினியாரைத் தம் மனைவி லோபா முத்திரையை, விதர்ப்பத்திலிருந்து பொதிய மலைக்கு அழைத்துவருமாறு பணித்தார். அதே சமயம் தம் மனைவியை நான்கு கோல் அளவிற்குக் குறைவாக அணுகக்கூடாது என்றும் எச்சரித்தார்.

லோபா முத்திரையும், திரண தூமாக்கினியும், வெள்ளம் பெருக்கெடுத்தோடும் வைகையைக் கடக்க நேரிட்டபோது, அவள் வெள்ளத்தால் அடித்துச் செல்லாதிருக்கத் தம் கைக்கோலை நீட்டி, அதைப் பற்றிக்கொள்ளுமாறு லோபா முத்திரையிடம் கூறினார். அவ்வாறே ஆற்றைக் கடக்கும் போது, வெள்ளப்பெருக்கு மிகுதியால் கோலில், ஒரு கோல் அளவே இடைவெளி இருக்க நேரிட்டது. அவ்வகையில் திரணதூமாக்கினி ஆசிரியரின் தடையுத்தரவை மீறிவிட்டார். கடுஞ்சினம் உடைய ஆசிரியர், இதைக் கேள்வியுற்றதும், "நீங்கள் இருவரும் சுவர்க்கம் புகக் கடவீர் அல்லராக" எனச் சாபம் இட்டார். அதுகேட்ட மாணவரும் "நாங்கள் செய்யாத பிழைக்கு எங்களைச் சபித்த நீயும் சுவர்க்கம் புகக் கடவீர் அல்லராக" என எதிர்ச்சாபம் இட்டார். தொல்காப்பியம் இருக்க அகத்தியம் அழிந்துவிட்டதை விளக்க, இக்கதை கூறப்பட்டது போலும்.

---

## அதிகாரம் : XVI

# மூன்று தமிழ்ச் சங்கங்கள்

### ''சங்கச் செய்யுள்'' என்ற சொற்றொடர் :

பாண்டி நாடு, மூன்று ஊழிக் காலங்களில், வெவ்வேறு பட்ட மூன்று தலைநகர்களைக் கொண்டிருந்தது என்றும், புலவர்களின் பேரவை நடைபெற்று வந்தது என்றும், பாடப் பெறும் ஒவ்வொரு புதுச் செய்யுளையும், ஆய்வு செய்யும் இலக்கிய ஆய்வகங்களாக இருந்[illegible]றை, முறையாயின என ஏற்று, ஏனையவற்றைத் தகுதியிலாதன என மறுக்கும், ஒழுங்குற அவைகளாம், இச்சங்கங்கள் எனவும் பரவலாக நம்பப்பட்டது. சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த புலவர்கள், இந்த நம்பிக்கையின் கீழ்ச்செயல்பட்டு, சங்கத்தின் முறையான ஒப்புதல்பெற்ற பாடல் என்னும் பொருள் உடையதான ''சங்கச்செய்யுள்'' ''சங்கப்பாடல்'' என்ற தொடரை, வழக்கில் நுழைத்தனர். தொல்காப்பியம், திருக்குறள் ஆகிய இவ்விரு நூல்களைத் தவிர்த்துச், சங்கச் செய்யுள்கள் எனக் கூறப்படும், இரண்டாயிரத்திற்கும், அதற்கு மேற்பட்டும் உள்ள செய்யுள்களில் எந்தச் செய்யுளும், அச்சங்கத்தின் அல்லது ஆன்றோர் நிறைந்த அவைக்கு, ஆய்வுக்காக அனுப்பப்பட்டது அல்லது அனுப்புவதற்காக எழுதப்பட்டது, அல்லது ஏதேனும் ஓர் அவையைச் சேர்ந்தவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது அல்லது மறுக்கப்பட்டது என்று கூறும் ஒரு பழங்கதை கூட, எழுத்து வடிவிலோ, அல்லது எழுதப்படா வாய்மொழி வழக்கிலோ இடம்பெற வில்லை. ஆகவே, சங்கச் செய்யுள் என்ற அத்தொடர் ஒரு பொருளற்ற தொடர் ஆகும். தாம் கூறும் பொருள்நிலையாலும், தம் காவியத் தலைவர்களுக்குச் சூட்டியிருக்கும் பெயர்களாலும், தாம் விளக்கும் நாகரீகத்தின் தரத்தாலும், எட்டுத் தொகையாம் அப்பழம் பாடல்களிலும், தாம் மிகவும்

பிற்பட்ட காலத்தவை என்பதை உறுதி செய்வனவும், முச்சங்கங்கள் குறித்த அப்பழங்கதைப்படி, அச்சங்கங்கள் இருப்பதே மறைந்துவிட்ட காலத்திற்கும் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்டனவுமாகிய சிலப்பதிகாரம், மணிமேகலை என்ற அவ்விரு காப்பியங்களுக்கும், சங்கஇலக்கியம் என்ற தொடரை நீட்டிப்பதன் மூலம், இன்றைய எழுத்தாளர், அத்தொடரை மேலும் பொருளற்றதாக ஆக்கிவிட்டனர். பழைய பாடல்களுக்கு வழங்கப்பட்ட மரபு வழிப்பெயர், அறிவார்ந்த பெரியார்களின் பாக்கள் எனும் பொருளுடையதான ''சான்றோர் செய்யுள்'' என்பதாம். அவ்வாறே, பிற்காலப் பாக்களுக்கான மரபு வழிப்பெயர், பிற்காலப் பெரியோர்களின் பாக்கள் எனும் பொருள் உடையதான, ''பிற சான்றோர் செய்யுள்'' என்பதாம். இப்பெயர்கள், பொருத்தமுடைய பெயர்களாம்.

[''சங்கமலிதமிழ்'', ''சங்கமுகத்தமிழ்'' எனும் தொடர்கள், முற்றிலும் வேறுபட்டனவாம். அவை பின்னர் ஆராயப்படும்.]

**முச்சங்கங்கள் பற்றிய பழங்கதை, முதலில் கூறப்பட்டிருப்பது எங்கே?**

இக்கதை, முதன் முதலில், இறையனார் என்ற ஒருவர், அறுபது சூத்திரங்களில் கூறிய காதற்பாட்டு இலக்கணமாம் அகப்பொருள், உரையில் கூறப்பட்டுளது.

[இன்றைய எழுத்தாளர் பலராலும் இந்நூல், ''களவியல்'' என அழைக்கப்படுகிறது. ஆனால், இந்நூல், களவுக்காதலை விளக்கும், ''களவியல்'', மண வாழ்க்கை முறையை விளக்கும், ''கற்பியல்'' ஆகிய இரு அதிகாரங்களைக் கொண்டிருப்பதால், அதை, அவற்றுள் ஒரு பெயரால் அழைப்பது பொருந்தாது: ''அகப்பொருள்'' என்பதே பொருந்தும் பெயராம்.]

இறையனார் என்ற சொல், கடவுள் என்றும் பொருள் படுமாதலின், உரையாசிரியரால், இந்நூலின் ஆசிரியராம் உரிமை, சிவனுக்குக் கற்பிக்கப்பட்டு, இந்நூலை எப்பொழுது, எந்த முறையில், சிவபெருமான் ஆக்கி அளித்தார் என்பதை விளக்க விரிவான ஒரு கதையும் கற்பிக்கப்பட்டது: கடைச் சங்கம் முடிவுறும் நிலையில், பாண்டி நாட்டில் கடுமையான வறட்சி இடங்கொண்டது: பாண்டியன், தன் அவைப் புலவர்களைப் பேணிக்காப்பது இயலாது என அறிந்து அவர்களை வெளிநாடு போக்கினான். வறட்சி நீங்கிய பின்னர், அரசன், புலவர்களைத் தேடிக் கொணர்ந்து தன் அவைக்கண்சேர்த்தான். ஆனால், வந்த புலவர்களில் எவரும், பொருளதிகாரம் பற்றி எதுவும் அறியாதிருப்பது கண்டு வியந்து நின்றான். கடைச்சங்க காலத்துப் புலவர்களைப் போலவே, அதற்கு முந்திய சங்கத்துப் புலவர்களையும், இந்த ஆசிரியர் கூற்றுப்படியே, வழி நடத்திச்சென்ற ஏற்புடைய இலக்கண நூலாம், தொல்காப்பியத்தை எல்லாப் புலவர் களும் கற்றிருக்க வேண்டுமாதலின், அவர்களில் எவரும் அது அறியாதுபோனது எவ்வாறு இயலும் என்பதை அந்த உரையாசிரியர் கூறவில்லை. உரையாசிரியர்கள் கூற்றில் உள்ள குறைபாடு இது ஒன்று மட்டுமன்று. உரையாசிரியர், மேலும் பல சொல்லிச் செல்கிறார். எழுத்தும், சொல்லும், யாப்பும் கற்பது, பொருளதிகாரத்தின் பொருட்டு அல்லவோ! அப்பொருளதிகாரம் கிடைக்காத போது, இவை பெற்றுப் பயனில்லையே என அரசன் பெரிதும் கவலை கொண்டான், உடனே ஆலவாய் அண்ணல் அரசன் மனக் கவலையைத் தீர்ப்பான் வேண்டி, இந்நூலைச் செய்து, அதை மூன்று செப்பேடுகளில் எழுதித் தன் பீடத்தின்கீழ் இட்டு வைத்தான். [அகப்பொருள் ஆசிரியர், இறையனார் என்ற ஒருவராவர் என்ற உண்மையை விளக்கவே, மேலே கூறிய வகையில், கடவுளோடு தொடர்பு படுத்தும், இயற்கையொடு பொருந்தா இந்நிகழ்ச்சி கற்பனை செய்யப் பட்டது. இறையனார் என்ற இவர், ஒரு பழம்பெரும் புலவர். இவர் பாடல் ஒன்று, குறுந்தொகையில் இரண்டா

வதாக இடம் பெற்றுளது, ஆனால், கடவுள் எனும் பொருள் படும், இறையனார் என்ற சொல், சிவனைக் குறிக்கவும் வழங்கப்படுமாதலின், இந்நூலின் சிறப்பைப் பெரிதுபடுத்த, இந்நூல் இறைவனுடையதாகக் கூறப்பட்டுளது. ஆலவாய் என்றும் அழைக்கப்படும் மதுரை மாநகரின் பெரிய கடவுள் எனும்பொருளில், மதுரைப்பேராலவாயர் என்றும்.இறையனார் அழைக்கப்படுவர். இப்பேராலவாயர், புறநானூறு 247, 262, அகநானூறு : 87, 297, நற்றிணை : 5, 361 பாக்களின் ஆசிரியராவர், இப்பாக்கள் அனைத்தும் ஒரே புலவரால் பாடப்பட்டிருப்பதாலும், அப்புலவரின் பெயரும், மதுராபுரித் தெய்வத்தின் பெயரும் ஒன்றாக இருப்பதாலும், அப்பாக்களில் சில, மதுராபுரித் தெய்வத்தின் பாக்களாகக் கொள்ளப்பட்டன.] மறுநாள், கோயில் குருக்கள், பீடம், நெடுநாட்களாகத் தூய்மை செய்யப்படாமல் இருப்பது நினைவுக்கு வரவே, அது செய்வான் வேண்டி, பீடத்தைத் தூக்கியதும் இச்செப்புத் தகடுகள் இருப்பது கண்டு, அவற்றைக் கொண்டு சென்று அரசன்பால் ஒப்படைத்தார், [இது போலும் கட்டுக்கதை, பத்தாம் நூற்றாண்டில், எங்கும் பரவலாகக் கூறப்பட்டது. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வசுகுப்தா என்பவரால் இயற்றப்பட்ட "சிவ சூத்திரம்" என்ற காஷ்மீர சைவநூல், பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த கெஸமராஜா என்ற உரையாசிரியரால், சிவன்படைப்பு எனக் கூறப்பட்டுளது. சிவன், அச் சூத்திரங்களை இயற்றி. இமயமலையில் உள்ள பாறை மீது செதுக்கி வைத்து, வசுகுப்தன் கனவில் தோன்றி, அந்நூலைத் தேடிக்கண்டுபிடித்து, அவற்றை உலகிற்கு உணர்த்துமாறு பணித்தார் என்ற கட்டுக்கதையையும், அந்த உரையாசிரியர் கட்டிவிட்டார். நான் மொழிபெயர்த்து, "இந்தியச் சிந்தனைகள்" என்ற வெளியீட்டில் வெளியிட்டிருக்கும், "சிவ சூத்ர விமர்ஸனி" என்ற நூலுக்குச் கெஸமராஜா அளித்திருக்கும் முன்னுரை காண்க.] அரசன் புலவர்களை அழைத்துத், தெய்வ அருளால் கிடைத்த அச்சூத்திரங்களின் பொருளை விரித்துரைக்குமாறு கேட்டான். தாம் நாற்பத்

தொன்பதின்மரும் அமர்வதால் நேரும் பாரத்தைப் பொருட்படுத்தாமல், மதுரைத் திருக்கோயில் குளத்தில் மிதந்து கொண்டிருக்கும், இறைவன் அருளிய சங்கப் பலகை மீது அமர்ந்துகொண்டனர்.

அப்பலகை மீதமர்ந்தவாறே, புலவர்கள் ஒவ்வொருவரும், ஒவ்வொரு விதமான உரைவிளக்கம் அளித்துத், தாம் அளித்த உரைதான் நேரிய உரை, பொருந்தும் உரை என வாதிடலாயினர். உண்மையான உரை இதுதான் என அறுதியிட்டுக் கூறுவதற்கு, அறிவால் முதிர்ந்தவர் ஒருவரும் அப்புலவரிடையே இல்லை. உடனே, இறைவன், உருத்திரசன்மன் எனும் ஐந்து வயது நிரம்பிய ஊமைச் சிறுவனைத் தேடிக்கொணர்ந்து, நடுவராக்குமாறு பணித்தார். ஊமைச்சிறுவன் கேட்க, புலவர்கள் தங்கள் தங்கள் உரைகளைப் படிக்கலாயினர். நக்கீரர், தம்முடைய உரையைப் படிக்கும்பொழுது, ஊமைச்சிறுவன், அவ்வுரையின் ஒவ்வொரு சொல்லுக்கும் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தான். அதனால் நக்கீரர் உரைதான் பொருந்தும் உரை என முடிவு செய்யப்பட்டது. [அகப்பொருள் நூலின் மொழிநடை, அக்காலத்திய ஏனைய நூல்களின் நடையை விடத் தெளிவு இல்லாததோ, எளிதில் பொருள் உணரலாகாக் கடினமானதோ அன்று; ஆகவே அரசன், அத்துணை முயற்சிகளை எடுத்திருக்கத் தேவையில்லை. அவ்வுரை, மூலத்தின் பொருளை விரிந்துரைப்பது மட்டுமல்லாமல், மூலம் எழுந்த காலத்திற்கும் பிற்பட்ட காலத்தில் விரிவாக எடுத்துக் கூறப்பெற்ற பல பொருள்களையும் கொண்டுளது என்பதும் ஈண்டுக் கூறல் தகும்.] அகப்பொருளுக்கு உரை கண்டவரே உருத்திரசன்மர்தாம் எனச் சிலர் கூறுகின்றனர் என்றும் உரையாசிரியர் கூறுகிறார்; ஆனால் புலவர்களின் கருத்து, உரைகண்டவர் நக்கீரர் எனபதே. நக்கீரர் அருளிய அவ்வுரை, பத்தாவது தலைமுறையில் வந்த முசிறி நீலகண்டனாரை வந்து அடையும் வரை, மாணவர்களிடையே வாய்மொழியாக வழிவழி வந்தது என்றெல்லாம் கூறிச்சென்று, இறுதியாக "இங்ஙனம் வருகிறது இவ்வுரை" என முடித்துள்ளார் உரையாசிரியர்.

மேலே கூறியதிலிருந்து, நமக்குக் கிடைத்திருக்கும் அகப்பொருள் உரை, நக்கீரருக்குப் பிற்பட்டவராய ஒருவர் கையால் எழுதப்பட்டது என்பது உறுதியாகிறது. நக்கீரரிடமிருந்து, அது ஏதேனும் கொண்டிருக்கிறதா என்பது பெரிய ஐயப்பாட்டிற்கு உரித்து. இதுகுறித்து, திரு. மு. ராகவ அய்யங்கார் அவர்கள், தொல்பொருள், மரபியல் 94 ஆம் சூத்திரத்திற்கான சேனாவரையர் உரையில் (சேனாவரையர் உரை அன்று. பேராசிரியர் உரை) பிற்காலத்தினராய அவ்வுரை ஆசிரியர், அகப்பொருளுக்கு நக்கீரர் உரை கண்டார் என்றும், முற்றத்துறந்த முனிவராகிய பிறிதொருவர், அது படிக்கும், அடுத்துவரும் தலைமுறையினர் நலனுக்காக உரைவிளக்கம் எழுதினார் என்றும் கூறியுள்ளதைக் குறிப்பிட்டுள்ளார். ("கடைச் சங்கத்தாருள் களவியல் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர், இடைச்சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம் என்றாராகலானும், பிற்காலத்தார்க்கு உரை எழுதினோரும் அது கூறிக் கரிபோக்கினாராதலும், அவர் புலவுத்துறந்த நோன்புடையராகலாற் பொய் கூறாராகலானும் என்பது] "தொ.பொ. மரபு : 94) ஆக, நமக்கு இப்போது கிடைத்திருக்கும் உரை, பிற்கால உரையேயாகும். இப்பிற்கால உரை, தொல்காப்பியத்திற்கு உரைகண்டவர்களுள் முதல்வரும், அதனால், உரையாசிரியர் எனச் சிறப்பாக அழைக்கப்படுபவரும் ஆகிய இளம்பூரண அடிகளால் எழுதப்பட்டது என்ற நம்பிக்கைக்குத் துணை நிற்கிறார். அதற்கான சான்றுகளையும் திருவாளர் இராகவ அய்யங்கார் கொடுத்துள்ளார். அவை ஓரளவு ஏற்புடைய என்றாலும், அவை போதுமானவை அல்ல. [செந்தமிழ் : 4 : 7 : பக்கம் 303-311]

அகப்பொருள் குறித்து எழுதப்படும் அனைத்து நூல்களும், மேற்கோளாகத் தவறாது காட்டப்படவேண்டியவாய, பழந்தமிழ்ப் புலவர்களின் பாக்களிலிருந்து மட்டுமல்லாமல் நான்கு வரிகளால் ஆன 329 பாக்களையும் மேற்கோள் காட்டுகிறது என்பதாலும், நமக்குக் கிடைத்திருக்கும் இறையனார் அகப்பொருள் உரை, நக்கீரர் உரையன்று;

பிற்காலத்தவர் ஒருவரால் எழுதப்பட்டது என்பது உறுதி செய்யப்படும். இந்த 329 பாக்களும், இறையனார் அகப் பொருள் சூத்திரங்கள் விளக்கும் முறையிலான காதல் நிகழ்ச்சிகளை உணர்த்துவதற்காக அல்லாமல், பிற்கால இலக்கண நூல்கள் விளக்கும் முறைகளை விளக்கவே எடுத் தாளப்பட்டுள்ளன. அப்பாக்கள் கூறும் பாட்டுடைத் தலைவன், கி. பி. 750இல் அரியணை ஏறிய, வேள்விக்குடி செப்பேடு வழங்கியவனின், தந்தையின் பாட்டனாகிய அரிகேசரி பராங்குசன் ஆவன்; அரிகேசரி ஏழாம்நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவனாவன். ஆகவே, இப்பாண்டியன் புகழ்பாடும் பாக்களை மேற்கோள் காட்டும் உரையின், காலமேல்வரம்பு, ஏழாம் நூற்றாண்டின் முடிவோ, அல்லது எட்டாம் நூற்றாண்டின் தொடக்கமோ ஆதல் வேண்டும். அதன் காலக்கடை வரம்பு, அகப்பொருள் உரைகளிலிருந்து எடுத்துக்காட்டுக்களை, முதன் முதலில் சான்று காட்டும் பேராசிரியரின் காலமாக இருக்கத்தகும் 13 ஆம் நூற்றாண்டு ஆகும். [தொல், பொருள். மரபியல். 94. பேராசிரியர் உரை காண்க.]

## முச்சங்கப் பழங்கதை :

இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், ஒருவர் தாம் முச்சங்கங்கள் பற்றிக் கூறியுள்ளார். அது வருமாறு : "தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என மூன்று சங்கம் இரீஇயினார் பாண்டியர்; அவருள், தலைச்சங்கம் இருந்தார், அகத்தியனாரும், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் என இத்தொடக் கத்தார் ஐந்நூற்று நாற்பத்து ஒன்பதின்மர் என்ப; அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன் பதின்மர் பாடினார் என்ப. அவர்களால் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும் களரியாவிரையும் என இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கம் இருந்தார் என்பது.

அவர்களைச் சங்கம் இரீயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியர் என்ப. அவர் சங்க மிருந்து தமிழாராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை என்ப. அவர்க்கு நூல் அகத்தியம் என்ப.

இனி இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், தொல் காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக் கோமானும், கீரந்தையும் என இத் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதிமர் என்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்து எழுநூற்றுவர் பாடினார் என்ப. அவர்களால் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழ மாலை அகவலும் என இத்தொடக்கத்தன என்ப. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், இசை நுணுக்கமும், பூதபுராணமும் என இவை. அவர் மூவாயிரத்து எழுநூற்றியாண்டு சங்கமிருந்தார் என்ப. அவரைச் சங்கம் இரீஇயினார், வெண்தேர்ச்செழியன் முதலாக, முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் கவியரங்கேறினார், ஐவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்து என்ப. அக் காலத்துப் போலும் பாண்டிநாட்டைக் கடல்கொண்டது.

இனிக், கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறு மேதாவியாரும், சேந்தம்பூதனாரும் அறிவுடையரனாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாறனும், மதுரை ஆசிரியர் நல்லந்துவனாரும், மதுரை மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கிரனாரும் என இத்தொடக் கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்ப; அவர்களால் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும்,

பேரிசையும் என்று இத்தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும் என்ப. அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது, ஆயிரத்து எண்ணூற்று ஐம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்கமிரீஇயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈறாக, நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருட் கவியரங் கேறினார் மூவர் என்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தர மதுரை என்ப''.

## முச்சங்கப் பழங்கதை பற்றிய திறனாய்வு :

இத்தொடர்களில் அடுத்தடுத்து வரும் ''என்ப'' என்பது ''என்று ஒருவர் கூறுவர்'' எனும் பொருளுடையதாகும். [அந்த ஒருவர், ஆசிரியரால் நன்கு மதிக்கத்தக்காரும் பொதுவாக அவர் ஆசிரியருமாவர்.] என்ப என்ற அது தொடர்ந்து வரும் மரபுவழி நிகழ்ச்சியை உணர்த்துவதாகாது. இதில் கூறப்பட்டிருக்கும் சில செய்திகள் மேலெழுந்தவாரியாக நோக்கினும் நம்புதற்கு இயலாதன: சில நகைப்பிற்கு உரியன. மூன்று சங்கங்களுக்கும் ஒதுக்கப்பட்ட ஆண்டுகள், அச்சங்கங்களுக்குக் கூறிய கால நீட்சியால் மட்டுமல்லாமல், அவ்வெண்களுக் கிடையே காணப்படும் ஒரே மாதிரித் தன்மையாலும் நம்பக்கூடியனவாக இல்லை. ஒவ்வொரு சங்கத்திற்கும் கூறிய ஆயுட்காலம் 37-ன் பெருக்குத் தொகையாக அமைகிறது. அவற்றின் மொத்த ஆயுட் காலம் முறையே, $37 \times 120 = 4440$; $37 \times 100 = 3700$; $37 \times 50 = 1850$. இது, அவ்வெண்கள் எத்துணைச் செயற்கையானவை என்பதைக் காட்டுகிறது. மற்றுமொரு காரணத்தாலும், இவ்வெண்கள் நம்பத்தக்கனவாக இல்லை. அப்பழங்காலத்தில் உண்மையில் கூறப்போனால், எட்டாம் நூற்றாண்டு வரை, கிறித்துவ ஆண்டு போலும், ஆண்டுக் கணிப்பு முறை, தமிழ் நாட்டில் கண்டுபிடிக்கப்படவில்லை. அல்லது பின்பற்றப் படவில்லை. ஆகவே, ஆண்டுகளைப் பெருமெண் அளவில் எண்ணிக் காணும் வழிமுறை இடம்பெறவில்லை.

இதில் கூறப்பட்டிருக்கும் பிற எண்களும், மேற்கூறிய எண்களைப் போலவே செயற்கையானவையாகவும், மிகவும் நம்பக் கூடாதனவாகவும் உள்ளன. மேலும், முன்னோர்கள் 549 பேர், 4440 ஆண்டுகளே ஆட்சிபுரிந்திருக்க, 59 அரசர்கள், 3700 ஆண்டுகள் ஆட்சிபுரிந்தனராகக் கூறுவது பொருளற்ற தாகும். முதல் இரண்டு சங்கங்களின் ஆயுட்காலமாகிய 8140 ஆண்டுகள், அகத்தியனார் வாழ்ந்ததாகக் கூறப் பட்டுளது. கடைச்சங்க காலத்தைச் சேர்ந்த 49 அரசர்களும் இறந்துபோயிருக்க, அக்காலத்தைச் சேர்ந்த 49 புலவர்கள் மட்டும் 1850 ஆண்டுகள் வாழ்ந்திருந்தனர் என்பதை நம்புவது நம்மால் இயலாது. ஆகவே, இதில் கூறப்பட்டிருக்கும் எண்களில் எதுவும் நம்பக் கூடியதாக இல்லை.

இச்சங்கங்கள் குறித்த கதையில், வெறும் எண்கள் மட்டுமல்லாமல், அதில் கூறப்பட்டிருக்கும் செய்திகள் பலவும் நம்பக்கூடியன அல்ல. புறநானூற்றிலும், மற்றும் பிற தொகை நூல்களிலும் உள்ள பாடல்கள் அனைத்தும், கடைச் சங்க உறுப்பினர்களால், அல்லது அவர்கள் ஆய்வின் கீழ்ப் பணிபுரியும் புலவர்களால் பாடப்பெற்றன எனக் கூறப் படுகிறது. ஆனால், அத்தொகை நூல்களில், பாண்டிய அரசர்களை வெற்றி கொண்டு, இழிவு படுத்திய சில சோழ அரசர்களின் செயலைப் பாராட்டும் பாடல்கள் இடம்பெற்றி ருப்பதைக் காண்கிறோம். (அத்தகு பாடல்கள் பலவற்றில் புறம் : 31, 33 காண்க) இத்தகு பாடல்களின் ஆசிரியர்கள், பாண்டிய அரசர்களால் புரக்கப்படும் சங்கத்தில் உறுப்பினராக ஆகியிருக்க முடியும், சங்கத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பர், அல்லது, அத்தகு பாடல்கள், மதுரைப் பாண்டிய அரசர் களால் தொகுக்கப்பெற்ற தொகை நூல்களில் சேர்க்கப் பட்டிருக்கும் என நம்புவது இயலாத ஒன்று. கிடைக்கக் கூடிய பழம்பாடல்களை அழிவினின்றும் காத்தற் பொருட்டுத் அத்தொகை நூல்கள் பிற்காலத்தே தொகுக்கப்பட்டன.

மேற்குக் கடற்கரையைச் சார்ந்த முசிறி முதல், கிழக்குக் கடற்கரையைச் சார்ந்த மயிலாப்பூர் வரையிலான, தமிழ்

நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்தவர்களும், தங்களுக்குள்ளாக, ஒருவரோடொருவர் அடிக்கடி போர் செய்து கொண்டிருக்கும் அரசர்களின் அரவணைப்பில் வாழ்பவர்களுமாகிய புலவர்கள், மதுரை அரசன் ஆணையால் அழைக்கப்பட்டனர் என்பதை நம்புதல் நம்மால் இயலாது. புலவர்களின் ஒருசில வரிகளே உடைய சிறிய பாக்களைத் திறனாய்வு செய்து முடிவு வழங்க, ஓர் ஆண்டில் எத்தனை முறை அமர்ந்தனர் என்பது அறிவிக்கப்படவில்லை. முறையாக நிறுவப்படும் சங்கம் புதுமையானது. ஆகவே, அச்சங்கத்தைப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர்க் கொண்டுபோவது, மிகப்பெரும் காலக் கணிப்பு வழுவாகும்.

அகத்தியனார் காலத்துக்கு முன்பு எண்ணற்ற புலவர்கள் வாழ்ந்திருக்க வேண்டும். காரணம்; எண்ணற்ற பாக்களை முன்னதாகப் படித்து உணராமல் தமிழ் இலக்கியத்திற்கான இலக்கணத்தை அவர் எழுதியிருக்க முடியாது. ஆனால், இறையனார் அகப்பொருள் உரையாசிரியரால், அப்புலவர்கள் இருந்தது பற்றிய செய்தி கூடக் குறிப்பிடப்படவில்லை.

முச்சங்கங்கள் குறித்த இச்செய்தியில் தெற்றெனத் தெரியக்கூடிய அறிவொடு பொருந்தாமை பலவற்றைக் குறிப்பிடலாம். மேலே கூறிய எட்டுத் தொகை நூல்கள் கடைச்சங்கத்தில் பணிபுரிந்த புலவர்களால் பாடப்பெற்றன என, அது கூறுகிறது. ஆனால் புறநானூறு என்ற தொகை நூலின் முதற்செய்யுள், இவ்வுரையால் முதற்சங்கப் புலவராகக் கூறப்பட்ட முடிநாகராயரால் பாடப்பட்டுளது. அது போலவே இறையனார் அகப்பொருள் உரையாசிரியரால், இடைச் சங்கத்துக்கு உரியராகக் கூறப்பட்ட புலவர்களால் பாடப்பெற்ற பல பாக்கள், இத்தொகை நூல்களில் காணப்படுகின்றன. நற்றிணை 105, 228 ஆம் செய்யுள்கள் இரண்டும், இரண்டாம் சங்கத்தின் கடைசிப் புரவலனாகிய முடத்திருமாறனால் பாடப்பட்டனவாம். [இந்தக் காவல பாவலன், பெரும்பாணாற்றுப் படை ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் ஆண்டிருப்பது போலவே (சாபம்-

சார்த்திய கணை துஞ்சு வியன் நகர்'' 121) சிறிதும் தயக்மில்லாமல், தமிழ் "வில்" என்ற சொல் இடம் பெற வேண்டிய இடத்தில், சமஸ்கிருதச் சொல்லாம் "சாபம்" என்பதை வேண்டுமென்றே ஆண்டுள்ளார். ("வெறிகொள் சாபத்து எறிகணை'' நற்றிணை : 228 : 7)] இவன், கடைச்சங்கத்தின் முதற் புரவலனுமாதலின், மேற்கூறிய முடிவிற்கு, முறையான ஒரு தடை எழுப்பவும் கூடும். ஆனால், தொல்காப்பியனாரின் ஒருதலை மாணவராகிய காரணத்தால், உறுதியாக இடைச் சங்கத்திற்கு உரியவரான பனம்பாரனார், குறுந்தொகை 52 ஆம் செய்யுளின் ஆசிரியராவர் என்பதற்கு, அத்தகைய தடை பொருந்தாது.

அவர் கூறியவாறு, முதல் இரு சங்கங்களைச் சார்ந் புலவர்கள் பாடிய பாக்களையும் இத்தொகை நூல்கள் கொண்டிருக்கும்போது, அத்தொகை நூல்களைக் கண்முன் வைத்துக்கொண்டே, இவையெல்லாம் கடைச்சங்கப் புலவர் களால் பாடப்பட்டன எனக் கூறுவாரேயானால், அவ்வகப் பொருள் உரையாசிரியர், அறவே நம்பிக்கைக்கு உரியரல்லா தவர் என்ற முடிவிற்கு நாம் வரவேண்டியவராகிறோம். [தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியரால், தலைச்சங்கப் புலவர்களாக மதிக்கப்பட்ட வான்மீகியார், மார்க்கண்டேயனார், கௌதமனார் ஆகிய மூவர் பாடிய பாடல்களாக, 358, 365, 366 எண் பாடல்கள் புற நானூற்றில் இடம் பெற்றுள்ளன. (இப்பொருள் பற்றிய, திரு. மு. ராகவ அய்யங்கார் அவர்களின் ஆராய்ச்சிக் கட்டுரையினை, செந்தமிழ் : 3 : 9 : பக்கம் : 303-312ல் காண்க) இவர்கள் பழங்காலப் புலவர்கள் அல்லர் என்ற கருத்துடையவன் நான். ஸ்ரீராமர் காலத்தவராய வால்மீகியும், இவரும் ஒருவர் என நம்பப்பட்டமையால், வால்மீகியார் பழம் புலவராகக் கருதப்பட்டார். அதுபோலவே, மார்க் கண்டேயனாரும், என்றும் சிரஞ்சீவியாகிய மார்க்கண்டனும் ஒருவராகக் கருதப்பட்டனர். கௌதமனார் செய்யுளில், பாண்டவருள் மூத்தனவாகிய தர்மபுத்திரன் என்பவன் பெயரின் தமிழ் மொழி பெயர்ப்புச் சொல் வடிவமாம்

"அறவோன் மகன்": எனும் பெயருடையான் ஒருவன் பாடப் பெற்றுள்ளான். ஆகவே, அப்பாடலாசிரியரும் பழம் புலவராக ஆக்கப்பட்டார்.]

அகப்பொருள் உரையாசிரியர் கூறும் மற்றுமொரு பொருந்தாக் கூற்று, கடைச்சங்கம் நிறுவிய பாண்டிய அரசர்களில் மூவர் புலவர்களாவர் என்பது. ஆனால், குறுந்தொகை, நெடுந்தொகை, புறநானூறு, நற்றிணை ஆகிய தொகை நூல்களில், புலவர்களாகச், சோழ அரசர் இடம் பெற்றிருப்பதைக் கணக்கில் கொள்ளாமலே, அவற்றில் புலவர்களாக இடம் பெற்றிருக்கும் பாண்டிய மரபினர், மூவர் அல்லர்; ஒன்பதின்மராவர். அவர்கள் வருமாறு :

1. ஒல்லையூர்த் தந்த பூதப் பாண்டியன்.
   பாடிய பாடல்கள் : புறம் : 71. அகம் : 25.

2. கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி.
   பாடிய பாடல்கள் : புறம் : 102. நற்றிணை : 121.

3. பாண்டியன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன்,
   பாடிய பாடல்கள் : புறம் : 183.

4. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியின் : பாடிய பாடல் : புறம் : 72

5. உக்கிரப் பெருவழுதி : பாடிய பாடல்கள் :
   நற்றிணை : 68. அகம் 26

6. பாண்டியன் மாறன் வழுதி : பாடிய பாடல்கள் :
   நற்றிணை : 67 : 301.

7. பாண்டியன் அறிவுடை நம்பி : பாடிய பாடல்கள் :
   குறுந் : 230 : நற் : 15 அகம் 373

8. பாண்டியன் பன்னாடு தந்தான் : பாடிய பாடல்
   குறுந் : 270

மாலை மாறன்; பாடிய பாடல்: குறுந்: 24*.

இந்த ஒன்பதின்மர் மட்டுமல்லாமல், பூதப் பாண்டியன் மனைவி, பெருங்கோப்பெண்டு என்பாள் தன் கணவனோடு எரிபுக்க போது புறம் 246 ஐப் பாடியுள்ளாள். அண்டர் என்ற பாண்டிய சிற்றரசன் மகன் குறுவழுதி என்பான், குறுந்தொகை 345, அகம் 150, 228 பாக்களைப் பாடியுள்ளான்.

காலத்தால், தன்னோடு நெருங்கிய தொடர்புடைய, தன் கண்ணெதிரே வைக்கப்பட்டிருக்கும் சங்கப் பாடல்கள் குறித்த, அகப்பொருள் உரையாசிரியர் கூற்றுக்களே, இத்துணைப் பிழையுடையவாயின், முதல் இரு சங்கங்கள் குறித்த அவர் கூற்றும் பிழையுடையவாம் என்பதைப் பெரும் பாலோர் ஏற்றுக்கொள்வர் என நான் எண்ணுகிறேன்.

**கட்டுக் கதையில் காணலாம் வரலாற்றுச் செய்திகள்:**

இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், பாண்டிய அரசர்களின் முன்னோர்கள் பற்றிய மரபுவழிக் கதைகளைக் கேட்டிருக்கக்கூடும். அவை முழுவடிவம் பெற, அவற்றோடு, தம் காலத்து நிலவி வந்த சில கட்டுக் கதைகளையும், தாமே கற்பித்துக்கொண்ட சில கட்டுக் கதைகளையும் இணைத்திருக்கக் கூடும். அவரால் மிகமிக நுணுக்கமாகக் கூறப்பட்ட அக்கட்டுக்கதைகளில் பொருத்தமற்ற புனைவுகளைக்களைந்து விட்டு, நிகழ்ந்திருக்கக் கூடிய உண்மைகளை வெளிப் படுத்துவதுஇயலாத ஒன்றன்று.

இந்து ராஜாக்கள், தொடக்க நாளிலிருந்தே தங்கள் அரசப்பரிவாரங்களில் புலவர்களையும் கொண்டிருந்தனர் என்பது தெரிந்த ஒன்று. அரசர்கள், எப்பொழுதும் பாராட்டின்பால் பெருவேட்கையுடையவராவர். அது போலவே கவிஞர்களும், எப்போதும் இறைச்சி உணவின்பால் பெருவேட்கையும், மதுவின்பால் நாவேட்கையும் உடைய வராவர். தங்கள் புகழ்பாட, வேதகால அரசர்கள் "சூதர் களையும்" தமிழரசர்கள் "பாணர்" களையும் கொண்டிருந் தனர். தமிழரசர்கள், பாணர், பொருநர், கூத்தர் போலும்

இரவலர்களுக்கும், அவர்தம் பெருஞ்சுற்றத்திற்கும், உணவும், மதுவும் வழங்குவதில் வரையறை வைப்பாரல்லர் என்பதைப் பழந்தமிழ்ப் பாடல்களிலிருந்து அறிகிறோம். எடுத்துக் காட்டுக்கு: "புன்செய் நிலத்தில் விளைந்த, புறா முட்டை போலும் வரகரிசியைப் பால் உலையில் இட்டு ஆக்கித், தேன் கலந்த சோற்றையும், பொரித்த முயற்கறியையும், காலை, மாலை இருபோதும், தம் சுற்றத்தோடு உண்ட நிகழ்ச்சியை, ஒரு புலவர் கூறுகிறார்.

"காலை அந்தியும், மாலை அந்தியும்
புறவுக்கரு வன்ன புன்புல வரகின்
பால்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்
குறுமுயல் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு".

—புறம் : 34 : 8 - 11

மற்றொரு புலவர், பாணர் பெருங்கூட்டம் தம்மைச் சூழ்ந்திருக்க, மதுவை முழுவதுமாக உண்டு தீர்க்குமாறு அப்பாணர் சுற்றத்தைப் போற்றிக் காத்த ஓர் அரசன் செயலைப் பாராட்டுகிறார்.

"துணைபுணர் ஆயமொடு தசும்புடன் தொலைச்சி
இரும்பாண் ஒக்கல் கடும்பு புரந்ததூ உம்"

—புறம் : 224 : 2-3

இவ்வாறு, பாணர் முதலாம் இரவலர்கள், தங்கள் உள்ளம் கிளர்ந்தெழும்போதெல்லாம், அரசர்களைப் பாராட்ட, பாக்கள் புனைந்தனர். பழைய தொகைநூல்களில் காணப்படும் பாக்களெல்லாம் அவ்வாறு பாடப்பட்டனவே. இப்பாடல்களில் எந்த ஒரு பாட்டும், எந்தக் கலைக்கழகத் தாலும் ஆராயப்படவில்லை. கடுமையான திறனாய்வுக்கு உட்படுத்தப்படவில்லை.

அமைச்சர் முதலாம் ஐம்பெருங் குழுவினரோடும், பாணர்களோடும், அரசன், அரியணையில் கொலுவீற்றிருந்து

போது, எந்த ஒரு பாட்டேனும், எந்தக் காலத்திலாயினும், புலவர் குழாம் முன், திறனாய்வுக்காகப் பாடப்பட்டதா? ஆம். அப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சிக்கான, நம்பத்தகுந்த அகச்சான்று ஒன்று உளது. தொல்காப்பியனார், தம்முடைய புகழ்மிக்க இலக்கண நூல் இயற்றியபோது, அவர், அதை, நிலந்தரு திருவின் பாண்டியன் அவையில் படித்துக் காட்டினார். அப்போது, அறம் போதிக்கும் நான்கு வேதங்களில் வல்லவரான, அதங்கோடு என்ற ஊரினரான, ஒரு பார்ப்பன ஆசிரியர், அந்நூலைத் திறனாய்வு செய்தார். இது, தொல்காப்பியத்திற்கு முன்னுரையாம் பாயிரத்தைப் பாடிய, தொல்காப்பியனாரின் நண்பரும், ஒருசாலை மாணவருமாகிய பனம்பாரனாரால் உறுதி செய்யப் பட்டுளது.

''நிலந்தரு திருவின் பாண்டியன் அவையத்து
அறம்கரை நாவின், நான்மறை முற்றிய
அதங்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து''

—தொல்காப்பியம்: பாயிரம்: 1-9-11

[இந்த அரசன், நெடுஞ்செழியன் புகழ்பாடும் மதுரைக் காஞ்சியில் (60-61) ''நிலம் தந்த பேருதவிப்பொலந்தார் மார்பின் நெடியோன்'' எனக் கூறப்பட்டுள்ளான். சிலப்பதிகார உரையாசிரியர், அடியார்க்கு நல்லார், ''அவருள் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியருள், ஒருவன் சயமாகீர்த்தியனாகிய நிலம்தருதிருவின் பாண்டியன், தொல்காப்பியம் புலப்படுத்து இரீஇயினான்'' (சிலம்பு: வேனில்காதை: 1-2) எனக் கூறி இருக்கவும், மதுரைக்காஞ்சி ஆசிரியர் நச்சினார்க்கினியர், அத்தொடருக்கு ''நாட்டில் இருக்கின்ற அரசர் நிலங்களை எல்லாம் கொண்ட பெரிய உதவியையும், பொன்னால் செய்த தாரை அணிந்த மார்பினையும் உடைய வடிம்பலம்ப நின்ற பாண்டியன்'' என வேறு பொருள் விரித்துள்ளார்.]

முழுக்க முழுக்க நம்புதற்குரிய இச்செய்தியோடு, தொல்காப்பிய அரங்கேற்றம் நிகழும்போது, அரசவைக்கு வருமாறு அதங்கோட்டாசானைத், தொல்காப்பியனார் பலமுறை அடுத்தடுத்து வேண்டிக்கொண்டார். ஆனால், அகத்தியனார் அவ்வாறு செய்ய வேண்டாம் என்று தடுத்து விட்டார். சமரச ஏற்பாடாக, அதங்கோட்டாசான் அந்நிகழ்ச்சியில் ஒருவகைக் கொடுமையின் வழக்கறிஞராகப் பங்கு கொண்டு, தொல்காப்பியத்தின் மீது குற்றம்காண் திறனாய்வினைச் செய்தார். ஆனால், தொல்காப்பியனார், தம் நிலையில் உறுதியாக நின்று, கூறிய குற்றச்சாட்டுக்கள் அனைத்தையும் தகர்த்து எறிந்தால் என்ற கட்டுக் கதையையும் இணைத்துவிட்டார். இக்கதை, அப்பாயிரத்தில் காணலாம். ''அரில்தப'' அதாவது ''குற்றம் தீர'' என்ற தொடரை விளக்குவதற்காகவே, புனையப் பட்டது. அரசவை இருந்த அரசன் மாகீர்த்தி என்றும், அவன் 24000 ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என்பதையும் நச்சினார்க்கு இனியர் இணைத்துள்ளார். ஆனால், ஐந்தாம் நூற்றாண்டில், உக்கிரப் பெருவழுதியின் காலம்வரை, பாண்டிய, சோழ, சேர அரசர்களில், எவரேனும் வடமொழிப் பெயரோ, அல்லது பட்டமோ பெற்றிருந்தனர் என அறிவிக்கும் நிகழ்ச்சி எதுவும் பழந்தமிழ் இலக்கியங்களில் இல்லை. ஆகவே மாகீர்த்தி என்ற அப்பெயர் அல்லது பட்டம், பிற்காலக் கண்டுபிடிப்பாகும். இது ஒரு நிகழ்ச்சி தவிர்த்து, ஒரு பழந்தமிழ் இலக்கியம் அல்லது ஓர் இலக்கணம், ஓர் அரசவையில் முறையாக அரங்கேற்றம் பெற்றுத் திறனாய்வு செய்யப்பட்டதான நிகழ்ச்சி எதுவும் இல்லை. பல்வகைப்பட்ட அனைத்துப் பொருள்களையும் குறித்துக் காலத்திற்கேற்பப் பாடப்பெற்ற சிறுசிறு பாடல்கள், இவ்வாறு அரங்கேற்றம் செய்யப்பட்டன என்பது எள்ளி நகையாடற்குரித்து.

எட்டுத் தொகை நூல்களை உருவாக்கிய, இரண்டாயிரத் திற்குச் சற்றுக் கூடுதலான செய்யுள்களில், கவிஞர்கள் அல்லது புலவர்கள் இடம் பெற்றிருந்த சங்கங்கள், தொடர்ந்து இருந்து

வந்தன என்பதை உணர்த்தும், ஒரு சொல்லோ, அல்லது ஒரு தொடரோ இடம்பெறவில்லை. அப்படி ஏதேனும் ஒன்று இருந்திருக்குமாயின், அது, தன் பேராண்மையைத் தானே புகழ்ந்துகொண்டு, ஒருக்கால், தன் பகைவரை வெற்றி கொள்ளத் தவறுவனாயின், தன் நாட்டு எல்லையை, உயர்ந்த புகழும், சிறந்த புலமையும் வாய்ந்த மாங்குடி மருதன் தலைவனாக, உலகம் இருக்குமளவும் இருக்கும் பெரும்புகழ் வாய்ந்த புலவர்கள், பாட மறுத்து விடுவார்களாக என்பன போலும் இழப்புக்களை விரும்பி வரவேற்றுத், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாடிய பாட்டில் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி,
மாங்குடி மருநன் தலைவன் ஆக,
உலகமொடு நிலைஇய, பலர்புகழ் சிறப்பின்
புலவர், பாடாது வரைகஎன் நிலவரை"

—புறம் : 72 : 13 - 16

அப்பாட்டு, சங்கம் என்ற ஒன்றைக் குறிப்பிடவில்லையாகவே, அத்தகையது ஒன்று, இருக்கவில்லை—அல்லது நெடுஞ்செழியன் காலத்தில், சங்கம் என்ற சொல், அரசவைப் புலவர் குழுவின் பெயராக வழங்கப்படவில்லை என்று நாம் கொள்ளலாம். இதற்கிடையில், மூன்றாவது சங்கம் என ஒன்றிருந்திருந்தால், அதன் தலைவர் நக்கீரராவர் என்ற, பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட நம்பிக்கையின் பொய்ம்மையைக் காட்ட, மேலே கூறிய நெடுஞ்செழியன் கூற்று, துணை புரிகிறது என்றும் கூறிவிடலாம்.

### மூன்று தலை நகர்கள் :

முச்சங்கங்கள் பற்றிய அக்கதையில், அடங்கியிருக்கும், பாண்டிய மன்னர்கள், தங்கள் தலைநகரை இருமுறை இடமாற்றிக் கொண்டனர் என்ற செய்தியை நம்ப மறுப்ப

தற்கான காரணம் எதுவும் இல்லை. அம்மரபின் இலாஞ்சனை மீன் என்பதன் பொருள்; அவர்கள், தொடக்கத்தில் மீனவக் கடலோடி இனத்தைச் சேர்ந்தவர் என்பதே, மேலும், வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்தே, தென் இந்தியக் கடல் வாணிகத்தில் கருத்துக் கொண்டிருந்த நாடு, பாண்டி நாடு, ஆகவே, அவர்தம் முதல் தலைநகர், கடலில் இடம் கொண்ட மதுரை ஆதலும், அம்மதுரை, "கடல் கொண்ட மதுரை" ஆதலும் ஏற்புடையதே, "கடல் கொண்ட" என்ற அச்சிறப்புத் தொடரிலிருந்து அது, ஒரு துறைமுக நகர்; பெரும்பாலும், தென் இந்தியாவின் மேற்குக் கடற்கரையின் தென்கோடியில் இடம் பெற்றிருந்தது. அக்கடற்கரை, ஆங்கு அடிக்கடி நிகழும் கடல் கோள்களுக்கு ஆட்பட்டிருந்தமையால், அந்நகர் கடலால் அழிக்கப்பட்டிருக்கும் என்ற உண்மைகளை ஊகித்து உணரலாம். உரையாசிரியர் "அக்காலை போலும், பாண்டி நாடு கடல் கோளால் அழிவுற்றுப் போனது" எனப் பொதுவாகத் தெளிவின்றிக் கூறியுள்ளார். இந்நிகழ்ச்சி பற்றிய, தெளிவில்லாத, ஒரு செவிவழிச்செய்தியை அவர் கேட்டிருக்கக் கூடும்; அதுவே, அது எப்போது நடைபெற்றது என்பதில் தெளிவற்றிருக்கவும் வேண்டும். பழந்தமிழ் இலக்கியத்தில், இயற்கை விளைவித்த இப்பேரழிவு பற்றிய ஒரு குறிப்பு உளது. கலித்தொகையில் நான்காவதாகிய முல்லைக் கலியில், "அலை ஓயாப்பெருங்கடல், தன் நாட்டைக் கவர்ந்துகொள்ளவும், தளர்ந்துவிடாமல் பகைவர் நாடுகளைக் கைக்கொண்டு ஆங்கிருந்த புலி, வில் இலாஞ்சனைகளைத் தன் ஆற்றலால் அகற்றிவிட்டுத், தன் மீன் இலாஞ்சனையைப் பொறித்து அழியாப் புகழ்கொண்ட தென்னவன்" என்று கூறப்பட்டுளது.

"மலிதிரை ஊர்ந்து, தன்மண் கடல்வெளவலின்,
மெலிவின்றி, மேற்சென்று மேவார் நாடு இடம்படப்,
புலியொடு வில் நீக்கிப் புகழ்பொறித்த கிளர் கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"
—கலித்தொகை : 104 : 1 - 4

சிலப்பதிகாரமும் அந்நிகழ்ச்சியைக் கூறுகிறது. அது, இது "தன் நாட்டு எல்லை இதுதான் என்பதைப் பகையரசர்க்கு உணர்த்த, தன் மீது வேல் எறிந்த அப்பழம் பகைக்குப் பழிவாங்குவான் வேண்டி, கொடிய கடல், (உரையாசிரியர், கொடுங்கடல் என்பதற்கு வளைந்த கடல் எனப் பொருள் கொண்டுள்ளார்). பஃறுளி ஆற்றையும், பலமலை அடுக்குகளையும் கொண்ட குமரி மலையை அழித்து விடவே, வடநாட்டுக் கங்கையையும், இமயத்தையும் வெற்றி கொண்டு தென்னகத்தை ஆண்டு வந்த தென்னவன் வாழ்வானாக !

"அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி,
வடிவேல் எறிந்த வான்பகை பொறாஅது,
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள,
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி''.

சிலப்பதிகாரம் : 11 : 17 - 22.

பாண்டியன், சோழ, சேர அரசர்களை வென்ற தன் நாட்டின் இழப்பிற்கு ஈடு செய்துகொண்டான் எனக் கலித்தொகை கூறியிருக்க, சிலப்பதிகாரம், கங்கை பாயும் நாட்டையும் இமயத்தையும் கொண்டானாகக் கூறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார், வேறு ஒரு பகுதிக்கு உரை விளக்கம் அளிக்கும்போது, "நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றி யாண்டு இரீயினார், காய்சின வழுதி முதல், கடுங்கோன் ஈறாயுள்ளார் எண்பத்தொன்பதின்மர். அவருள் கவியரங் கேறினார் எழுவர் பாண்டியருள், ஒருவன் சயமாகீர்த்தி யனாகிய நிலந்தருதிருவின் பாண்டியன்; தொல்காப்பியப் புலப்படுத்துஇரீயினான். அக்காலத்து, அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி என்னும் ஆற்றிற்கும், குமரி என்னும் ஆற்றிற்கும் இடையே, ["குமாரி

நதி'' ஒன்றை மகா பாரதம் குறிப்பிடுகிறது; மகாபாரதம் : 9:36]''எழுநூற்றுக் காவதவாறும், இவற்றின் நீர்மலி வானென மலிந்த, ஏழ்தெங்க நாடும், ஏழ்மதுரை நாடும், ஏழ்முன்பாலை நாடும், ஏழ்பின்பாலை நாடும், ஏழ்குன்ற நாடும், ஏழ்குணகரை நாடும், ஏழ்குறும்பனை நாடும், என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி கொல்லம் முதலிய பன்மலை நாடும், காடும் நதியும் பதியும் தட நீர்க்குமரி வட பெருங் கோட்டின் காறும் கடல் கொண்டொழிதலால்'' என்ற மரபு வழிச் செய்தியை அளித்துள்ளார். (சிலப்பதிகாரம்'' காதை 8 : 1-2) [ஏழு என்ற சொல், பெரும்பாலும், ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள சிற்றூர்களைக் குறிக்கும். நாடு என்ற சொல் குறிக்கும் பலபொருள்களில், சிற்றூர் என்பதும் ஒன்று. இழந்த நாட்டின் நீளம், எழுநூறு காவதம், அதாவது ஆயிரம் மைல் என்கிறார் அடியார்க்கு நல்லார். அது, பொறுக்கலாகா மிகைப்படக் கூறலாம். மாறாக, அது உண்மையாயின், இழப்பீடாக, அப்புலவர் கூறுவதுபோல், வடநாடு முழுமையும் இணைத்துக்கொள்ள, பாண்டியன், உறுதியாக உரிமையுடையவனே!] குமரி பஃறுளி இரண்டும் கடல் நோக்கி ஓடும் இரு சிறு மலை அருவிகளாதல் கூடும். அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட சிறிய கடற்கரை நிலப்பகுதி கடல்கோளால் மறைந்துபோயிருக்கக் கூடும். தொல்காப்பிய உரையாசிரியர்களில் ஒருவராகிய பேராசிரியர், இம்மாவட்டம் பனைநாடு-பனைமரங்கள் மலிந்த நாடு-என அழைக்கப்பெறும் என்கிறார். (தொ. பொருள் : 94 உரை) ஆகக் கடலால் கொள்ளப்பட்டது பண்டைக் காலத்தில் பாண்டியர்க்குரித்தாயிருந்த பகுதியைத் தெற்கில் கொண்டிருந்ததான இன்றைய திருவாங்கூர் நாட்டின் சிறுநிலப்பகுதியே ஆகும். நூலாசிரியர், கங்கை இமய வெற்றிகளைப் பாண்டியனுக்கு உரிமையாக்கும், மேலே எடுத்துக்காட்டிய, அம் மூலவரிகளுக்கான தம் உரையில் அடியார்க்கு நல்லார், ''அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் சோழ நாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும், சேரமானாட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னும் இவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்ட தென்னவன்''

எனச் சிறிதும் மறைப்பின்றிக் கூறியுள்ளார். தென்னிந்தியாவில் இரு சிறு மாவட்டங்களைக் கைக்கொண்ட நிகழ்ச்சியைச், சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளார், வட நாடு முழுமையும் கைக்கொண்ட பெருவெற்றியாகத் திரித்துக் கூறியுள்ளார். எதையும் அஞ்சத்தக்க வகையில் மிகைப்படுத்திக் கூறுவது, இப்புலவர் இயல்பாக மேற்கொள்ளும் ஒன்று. இருந்தும், இன்றைய திறனாய்வாளர் சிலர், இதுபோலும் மிகைப்படுத்திக் கூறல், நிறைந்திருக்கும் அந்நூலை, அதில் கூறியிருக்கும் ஒவ்வொரு சொல்லும், அப்பழுக்கற்ற - உயர்வு நவிற்சி அற்ற - உண்மையாம் என ஏற்றுக்கொள்ளத்தக்க, தகுதிவாய்ந்த வரலாற்று நூலாக மதித்து, அதில் வரும் ஒரு சிறு தொடரை அடிப்படையாகக் கொண்டு, மிகப் பெரிய முடிவுகளைக் கொண்டுவிடுகின்றனர்.

கடல்கோளால் மறைந்து போன மாவட்டங்களில் ஒன்று, மதுரை நாடு: இது, பாண்டியரின் முதல் தலைநகராம் மதுரையும், அதன் பக்கங்களுமாம். இம்மாவட்டம் கடலுள் மூழ்கிவிட்ட பின்னர், தலைநகர், கபாடபுரத்திற்கு மாறியது. இயல்பாக நிகழக் கூடியதே: இச்சொல், "பாண்டி நாட்டின் வாயில்" எனும் பொருளுடையதான "பாண்டிய கவாடம்" என்ற சமஸ்கிருதச் சொல்லின் தழுவல் வடிவமே ஆகும். அவ்விடத்தின் தமிழ்ப் பெயர், கொற்கை. இந்த இடம் கைவிடப்பட்டபோது, இன்றைய மதுரை தலைநகர் ஆயிற்று. தலைநகர், கொற்கையிலிருந்து மதுரைக்கு மாறியது, பிளினி அவர்களாலும் குறிப்பிடப்பட்டுளது: [Warmington Commerce between the Roman Empire and India Page: 167] அரசன் தன் வாழிடத்தை மாற்றிக்கொள்ளும்போது, அவன் அவைப்புலவர்களும் புதிய தலைநகர்க்குக் குடிபெயர்ந்து விடுவர் என நாம் நம்பலாம். மூன்று தலைநகர்கள் இருந்தன என்ற உண்மை, முச்சங்கங்கள் குறித்த கட்டுக்கதையினைத் தோற்றுவித்தது.

**சங்கம் பற்றிய மற்றுமொரு கட்டுக்கதை :**

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில், சைவ, வைஷ்ணவ, சைன, பௌத்தங்களாகிய வடநாட்டு ஆகம வழிபாட்டு நெறிகள், வடநாட்டு வழிபாட்டு நெறிகளைப் பின்பற்றுவோர் வாழ்க்கை முறையிலிருந்து, தமிழர்களின் எளிய வாழ்க்கை நெறிகளை வேறு பிரித்துக்காட்டியிருந்த தடையை உடைத்துக்கொண்டு, சோழ, சேர, பாண்டிய நாடுகளுள் நுழைந்துவிட்டன. இதற்கான காரணம் பின்னர் விவாதிக்கப்படும். சிவ, விஷ்ணு வழிபாட்டாளர்களும், சைன, பௌத்த. சமயங்களின் பிக்குகளும் மோக்ஷத்திற்கு வழி காணுங்கள் எனத் தமிழர்களுக்கு அழைப்பு விடுத்தவாறே, தமிழ்நாட்டில் வந்து குழுமி விட்டனர். சிவனை வழிபடுவோர், சிவனடியார் அல்லது நாயன்மார் என்றும், விஷ்ணுவை வழிபடுவார் ''ஆழ்வார்'' என்றும் அழைக்கப்பட்டனர். தமிழ்நாட்டின் பல்வேறு ஊர்களிலும், அடியார்களும், ஆழ்வார்களும் வழிபட்ட இடங்களிலெல்லாம் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் எண்ணற்ற கோயில்கள் எழுந்தன. வழிபாட்டாளரின் பக்தியின் அளவிற்கேற்ப பல அற்புதங்கள் செய்து காட்டப்பட்டன. ஒவ்வொரு திருக்கோயிலும், தத்தம் தெய்வீகத்தன்மையின் சிறப்பை நிலை நாட்ட எண்ணற்ற கட்டுக்கதைகளைக் கட்டிவிட்டன. இவ்வாறு கட்டுக்கதைகளைக் கட்டிவிடுவது, இன்றும் தொடர்ந்து நடைபெறும் வழக்காகிவிட்டது. ஒரு கட்டுக்கதைக்குரிய கோயிலில் குடிகொண்டிருக்கும் இறைவனுடைய பக்தனாக ஒரு புலவர் ஆகிவிட்டால், அக்கட்டுக் கதை, இலக்கிய வடிவமும் பெற்றுவிடும். இக்கதைகளைக் கூறும் பாக்கள், பொதுவாக, சமஸ்கிருதத்தில் புனையப்பட்டு ஸ்தல புராணங்கள் என அழைக்கப்பட்டுப், பிற்காலத்தில் தமிழில் எழுதப்பட்டுவிடும். இந்த ஸ்தலபுராணங்களின் உணர்ச்சி பூர்வமான நோக்கமெல்லாம். உள்நாட்டுப் பற்றும், குறிப்பிட்ட கடவுளின் அற்புதச் செயலைப் பெரிதுபடுத்தத் துடிக்கும் கட்டுக்கடங்கா, ஆர்வமுமேயாதலின், அத்தல

புராணங்கள், வியாச புராணம் போல, வரலாற்றுச் செய்திகளைக் கொண்டிருக்கவில்லை.

மதுரைப் பெருங்கோயிலில் இடம் கொண்டிருக்கும் சிவன் செய்த அற்புதச்செயல்கள், திருவிளையாடல்கள் என அழைக்கப்பட்டன. அப்பொருள் பற்றிய சமஸ்கிருத நூல்கள் இரண்டும், தமிழ் நூல்கள் இரண்டும் உள்ளன. இந்நூல்கள் மிகமிகப் பிற்பட்ட காலத்தே எழுதப்பட்டன என்றாலும், அவை, ஆறாம் நூற்றாண்டில் எழுந்த கட்டுக் கதைகளையெல்லாம் தம்முள்ளே கொண்டு, பனிமூட்டம் போலப் பருத்துக்கொண்டே செல்கின்றன. மதுரை மன்னர்கள் சிலரை அக்கதைகளில் கூறுவதன் மூலம், அக்கதைகளுக்கு ஒரு போலி வரலாற்று வடிவம் கொடுக்கப்பட்டுளது. பாண்டிய அரசர்களில், கடைசி அரசனாகிய உக்கிர பாண்டியனைத்தவிர்த்து, பழைய பாண்டிய அரசர் எவர்க்கும் தமிழ்ப் பெயர் தவிர்த்து வேறு மொழிப்பெயர் இல்லை, ஆகவே, அப்புராணங்களில் வரும் அரசர்களுக்குச் சமஸ்கிருதப் பெயரே கொடுக்கப்பட்டிருப்பது, அப்பெயர்களெல்லாம் கற்பனைப் பெயர்களே என்பதை உணர்த்துகிறது: அக்கதைகளுள் ஒன்று பின்வருமாறு கூறுகிறது: வங்கிய சேகரன் (சமஸ்கிருத வம்ச சேகரர்) ஆட்சிக் காலத்தில், காசி நகரத்தில், பிரம்மதேவன், தன் மனைவி சரஸ்வதியோடு சினம் கொண்டு, அவள் உடலை உருவாக்கிய ஐம்பத்தோரு சமஸ்கிருத எழுத்துக்களில், 'ஆ' முதல் ஹ ஈறாக உள்ள நாற்பத்தெட்டு எழுத்துக்கள், மனித உருவம் கொண்டு புலவர்கள் ஆக, ஏனைய எழுத்துக்களின் உயிர்ப்பொருளும், மதுரைக்கடவுளுமான முதல் எழுத்தாம் அ, மனித உருவம் கொண்டு புலவனும் ஆகி, ஏனைய நாற்பத்தெண்மரோடு கூடி, தமக்குள்ளே நாற்பத்தொன்பது பேர் கொண்ட சங்கத்தை உருவாக்குமாறு ஆணையிட்டார். நாற்பத்தெட்டு எழுத்துக்களும் மண்ணுலகில் மக்களாகப் பிறந்து, பல்வேறு இடங்களில், அறிவார்ந்த வாதங்களைச் செய்து, இறுதியில் மதுரை சென்றடைந்தனர். அவர்முன், சிவன், தன் உண்மை வடிவில் தோன்றி, மதுரைக் கடவுளை வழிபடுமாறு

அறிவுரை வழங்கினான்: அவர்களும் அவ்வாறே செய்தனர்: அவன் புகழ்கூறும் பாக்களை இயற்றினர். பின்னர் பாண்டியன் அவை சென்று அமர்ந்தனர். அரசன், அவர்களுக்குக் கோயில் வடமேற்குப் பகுதியில் குடிவாழ ஒரு பெரிய அரங்கை அமைத்து, எண்ணற்ற பரிசுகளையும் வழங்கினான்; இது, அரசவையில் ஏற்கெனவே இருந்து, அரசு ஆதரவு பெற்று வந்த புலவர்களுக்குப் பொறாமையை மூட்டிவிட்டது. புதிதாக வந்தவர்கள், வாதத்தில் முன்பிருந்த புலவர்களை வெற்றி கொண்டு, புலமைப் புகழ்விரும்புவோரின் புலமையைப் பரிசோதித்து அறிய, தாம் இருக்கத்தக்க பலகை ஒன்றைத் தருமாறு சிவனை இரந்து வேண்டினர். இரண்டு சாண் அளவுள்ள சதுரப்பலகையோடு, சிவன், புலவர் வடிவில் அவர் முன் தோன்றினான். பலகைக்கு நறுமணப் புகை காட்டி வழிபட்டு, நக்கீரர், முதற்கண் ஏறி அமர்ந்தார். பின்னர் கபிலர், பரணர் முதலானோர் ஒருவர் பின் ஒருவராக ஏறி அமர்ந்தனர். உண்மையான புலவர் ஒருவர்க்கு இடம் கிடைக்குமாறு, அப்பலகை, அளவில் வளர்ந்துகொண்டே இருந்தது. பின்னர், யார் பாட்டு, ஏனையோர் பாக்களிலும் உயர்வுடையது என்ற கருத்துவேறுபாடு புலவர்களிடையே எழுந்தது. சிவன் மீண்டும் அவர்கள் முன் தோன்றி, அவர் தம் கருத்துவேறுபாட்டைத் தீர்த்து வைத்தான். இக்கதை, வரலாற்றுக்குத் துணைபுரியாது. இந்தக் கதைக்கும், இறையனார் அகப்பொருள் உரையில் காணலாம் கதைக்கும் இடையில் பொதுவாக இருக்கும் செய்தி, புலவர் நக்கீரனார் பெயர் ஒன்றே. இந்தக் கதை, ஒரே ஒரு சங்கம் இருப்பதையே கருத்தில் கொள்கிறது. மூன்று சங்கங்களை அன்று; இக்கதை, கற்பனை மலிந்த பழங்கதைகளால் முழுவதும் திணிக்கப்பட்டிருந்தாலும், இன்றைய எழுத்தாளர்கள், குழப்பம் இல்லாதனவாய பிற நூல் செய்திகளுக்குத் தருவதினும், அதிகமான நம்பிக்கையினை, இதற்கு அளித்துச் சங்கம் ஒன்று மட்டுமே இருந்தது போலக் கருத்துக்களை வெளியிடுகின்றனர். சிவன் இந்த ஒரு சங்கத்தில்தான் பங்கு கொண்டான் ஆதலின், தங்கள் தெய்வ வழிபாட்டுணர்வின்

விளைவாகச், சிவனடியார்கள், இந்த ஒரு சங்கம் பற்றியே பேசுகிறார்கள் என்றால், அது, நம்மை வியப்பில் ஆழ்த்தாது. தேவாரத்திருமுறைகளில், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் அப்பர் பாடிய ஒரு பாட்டில், தருமி என்ற ஏழைப் புலவன், சங்கத்தாரிடம் பொற்கிழி பெறச், சிவன் துணை புரிந்த திருவிளையாடல் குறிப்பிடப்பட்டுளது.

[''நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன் காண்''
— திருப்புத்தூர்த் திருத்தாண்டகம் ; 2 : 2]

இத்திருவிளையாடல்பற்றியகதை, கி. பி. ஏழாம் நூற்றாண்டில், பெரிதும் பேசப்பட்டு வந்துளது [இப்பாட்டில் விளக்கப்பட்டிருக்கும் மற்றொரு திருவிளையாடல், அகத்தியனார்க்குச், சிவன் தமிழறிவித்ததாகும். இக்கதை எப்போது கொண்டுவரப்பட்டது என்பதை நம்மால் உறுதியாக அறிய இயலாது; ஆனால், மக்களில் ஒருவரான, அகத்தியத்தின் ஆசிரியர், முதன் முதலாக, இறைத்தன்மை வாய்ந்தவராக மாறியுள்ளார்.] ஆனால், இன்றைய திறனாய்வாளர்கள் எனக் கூறிக்கொள்வார், ஒரே சங்கம் குறித்துப்பேசுவது உண்மையில் வியப்பிற்குரியதாம். அகப்பொருள் உரையாசிரியர் கூற்று ஏற்றுக் கொள்ளத்தக்கது அல்லது ஏற்றுக்கொள்ளத்தகாதது என்பது குறித்து அவரவர் கொள்ளும் முடிவிற்கு ஏற்ப, அவர்கள், ஒன்று முச்சங்கங்கள் பற்றிப் பேச வேண்டும் அல்லது அத்தகைய சங்கம் எதுவுமே இல்லை எனப் பேச வேண்டும். திறனாய்வு முறை, உண்மையும் கற்பனையும் கலந்த உரையாசிரியர் கூற்றை விடுத்து, ஸ்தல புராணங்களின், கலப்படமற்ற வெற்றுப் புனைந்துரைகளை ஏற்குமாறு கொண்டுசெல்வது, உண்மையில், வியத்தகு புதுமையாக உளது.

**சங்கம் என்ற சொல்லும், அதன் சொல்லுருபுகளும் :**

சங்கம் என்ற சொல், ஜைனர்களாலும், பௌத்தர்களாலும், மக்களிடையே பழக்கப்படுத்தப்பட்ட, 'சங்க்ஹ'

என்ற சமஸ்கிருதச் சொல்லின் தமிழ் வடிவமாம். ஜைனர்கள், இச்சொல்லை, மகாவீரரைப் பின்பற்றுவோராம், பிக்குகள், பிக்குனிகள் ஸ்ராவகர், ஸ்ராவீகர்களைக் கொண்ட ஓர் அமைப்பைக் குறிக்க வழங்கினர். பிக்கு, பிக்குனி என்பவர்கள், முறையே, உடலை வருத்திக்கொள்ளும் கடும் நோன்பு உள்ளிட்ட கடுமையான ஒழுக்க நெறிகளைப் பின்பற்றிப், பொதுவாக, இறுதியில் தம்மைத்தாமே வருத்தி உயிர் இழக்கும் நிலைக்குக் கொண்டுபோய்விடும், பின்பற்றற்கரிய யோக நெறி பேணும ஆண் துறவியும் பெண் துறவியுமாவர்; ஸ்ராவகர், ஸ்ராவிகர் இருவரும் ஆண் பெண் இருபாலினரு மான துறவு நிலையை எதிர் நோக்கும், தீக்கை பெறாத மாணவர்களாவர். மொத்தத்தில் அவை அனைத்துமே, ஜைனப்பெருநிலை அடைய விரும்புவோர்களைக் கொண்ட, முறையாக அமைக்கப்பட்ட குழுக்களாம். பௌத்த சங்கம் என்பது, ஜைன சந்நியாசிகளும், பிராமணத் துறவிகளும் பின் பற்றும் துறவுநிலைபோல், அத்துணைக் கொடுமை இல்லாத துறவுநிலை மேற்கொண்டு, தங்களுக்கென வகுத்துக்கொண்ட ஒரு யோக நிலை பயின்று, மடங்களில் வாழும் இருபால் துறவிகளின் மன்றமாம். பௌத்த சந்நியாசிகள், மக்களுக்குத் தர்மோபதேசம் செய்வர். ஆனால் சமய உணர்வற்ற சாதாரண மக்களைத் தங்கள் சாதுக்கள் கூட்டத்தில் இணைத்துக்கொள்ளார். இந்த ஜைன, பௌத்த துறவிகள், தமிழ் நாட்டிற்குக், கி. மு. நான்காம் நூற்றாண்டு தொடங்கி வரத்தலைப்பட்டனர்; ஆனால், தொடக்கத்தில் மலைகளில் இயல்பாய் அமைந்து கிடந்த குகைகளிலும், பின்னர், தலைநகர்களின் புறநகர்ப் பகுதியில் உள்ள பூஞ்சோலை களிலும் வாழ்ந்து வந்தனர். என்றாலும், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுவரை, சாதாரண தமிழ்ப் பொதுமக்களின் வாழ்க்கையினைத் தம் செல்வாக்கின்கீழ்க் கொண்டுவரவில்லை; ஆகவேதான், அவர்களைப் பற்றிப், பழந்தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடவில்லை அவர்கள் முதன் முதலில், பட்டினப் பாலையிலும், மதுரைக்காஞ்சியிலும்தான் குறிப்பிடப் பட்டனர்.

"தவப் பள்ளித் தாழ்காவின்" —பட்டினப்பாலை : 53.

"பூவும் புகையும் சாவகர் பழிச்சச்,
சென்ற காலமும் வரூஉம் சமயமும்
இன்று இவன் தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்து
வானும் நிலனும் தாம்முழு துணரும்
சான்ற கொள்கைச் சாயா யாக்கை
ஆன்றடங் கறிஞர் செறிந்தனர் நோன்மார்,
கல்பொளிந் தன்ன இட்டுவாய்க் கரண்டைப்
பல்புரிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண் டன்ன வயங்குடை நகரத்துச்
செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந்து ஓங்கி
இறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையும்"
—மதுரைக் காஞ்சி : 476 - 488

ஒரு ஜைன சங்கம், தமிழ் நாட்டில், மதுரையில், கி.பி. 470இல் முதன் முதலாக நிறுவப்பட்டது. அனில்வாட் பாதன் என்பவரிடமிருந்து (Annilwad Pathan) பெறப்பட்ட "திகம்பர தர்ஸன சாரம்" என்ற நூலில், தம்முடைய காலம் 909 (அந்நூற்றாண்டுத் தொகுப்பை அவர் பரவலாக ஆள்வதிலிருந்து சம்வத் 909, கி.பி. 853க்கு நிகராகக்கூடும்) என்று கூறிக்கொள்ளும் தேவசேனன் என்பார், ஸ்ரீ பூஜ்யபாதர் மாணவராகிய வஜ்ஜிர நந்தி, தக்கண மதுரையில் 525இல் திராவிட சங்கத்தைத் தொடங்கினார் என நமக்கு அறிவிக்கிறார்.

["ஸ்ரீ பும்ஜ பாதசீசோ தாவிட சங்கஸ காரகோ
வுஸ்ட்ஹோ
நாமென வஜ்ஜிரநந்தி பாஹுன வெதீ மகாசத் தொ ||
பம்கச கவீணா விக்ரமராயச மரண பட்டஸ |
தரிசன மகுராஜாடொ தாவிட சம்கொ மஹாமஹெ ||
—Journal of the Bombay Branch of Royal Society; Vol. : 17 : Part : 1; No. : XLVI; Page : 74.]

நாம் உணர்ந்த தமிழ்ச்சங்கம் இதுவன்று என்பதும், தமிழ்நாட்டு ஜைனர்களால் சாதாரணமானவர்களுக்கு ஜைன தர்மத்தை உபதேசிக்கத் தொடங்கப்பட்ட ஜைன சங்கமாம் என்பதும் ஈண்டுக் குறிப்பிடப்படவேண்டும். தமிழ்நாட்டில் இடம் பெற்ற முதல் பௌத்த சங்கம், காவிரிப் பூம்பட்டினத்தில் இருந்ததாக, மணிமேகலைக் காவியத்தில் குறிப்பிடப்பட்டுளது. அந்நகரில், விடியற்காலையில் கேட்கும் பல்வேறு ஒலிகளில், வலம்புரிச் சங்குகளின் பொருள் இன்றி வறிதே ஒலிக்கும் ஒலியும், அறிவு ஆர்ந்த சங்கங்கள், பொருள் உணர எழுப்பும் ஒலியும் கூறப்பட்டுள்ளன.

''வலம்புரிச் சங்கம் வறிது எழுந்து ஆர்ப்பப்,
புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க''

—மணிமேகலை : 7 : 113 - 114

[வலம்புரியின் பெயராம் சங்கம் என்பதும், மன்றம் எனும் பொருள்படும், வடமொழியினின்றும் பெற்ற சங்கம் என்ற சொல்லும், ஒரே ஒலிப்பு முறையினைக் கொண்டிருப்பதால் இச்செம்மொழிச் சிலேடை அணி இயல்வதாயிற்று.]

பௌத்தம், தர்மம், சங்கம் ஆகிய மும்மணிகளும் அதே மணிமேகலையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

''புத்த தன்ம சங்க மென்னும்
முத்திற மணியை மும்மையின் வணங்கி''

—மணிமேகலை : 30 : 34).

கி. பி. ஆறாம் நூற்றாண்டில், ஜைன பௌத்த சமயங்களோடு, மதுரையில் சைவ சமயம் போட்டியிடத் தொடங்கியபோது, அப் புறச்சமயவாதிகளின் சங்கங்களுக்குப் போட்டியாக, தங்களுக்கும் ஒரு சங்கம் உளது எனப் பெருமை கொள்ளச் சைவர்கள் இயல்பாகவே விரும்பினர். பழைய தொகைநூற்புலவர்களில், தங்கள் தொகை நூற்பாடல்களில் சிவனைக் குறிப்பிட்ட, அல்லது, சிவனோடு ஏதோ ஒரு

வகையில், தொடர்புடைய, இறையனார், உருத்திரர், கபிலர், நக்கீரர், பரணர், மதுரைப் பேராலவாயர் போலும் ஒரு சில புலவர்களை மட்டுமே உறுப்பினர்களாகக் கொண்டதாகத் திருவிளையாடல் புராணத்தில் விளக்கிக் கூறப்படும் சங்கம் போன்ற, தன்னைப் பற்றிய வழிபாட்டுப் பாடல்களைப் பாடும் அறிஞர்களும் புலவர்களும் கொண்ட சிவன், தானே தலைமை தாங்கும் ஒரு சங்கம் பற்றிய கட்டுக்கதை ஒன்றும் எழுந்தது. இவ்வாறு சங்கம் என்ற சொல், தமிழில் முதன் முதலில், சமயச் சார்புடைய அவைக்கு வழங்கப் பட்டது. அதன் செயல், தர்மோபதேசம் செய்தல் அல்லது சிவனைப் பாடுதல் ஆகும். முச்சங்கம் பற்றிய, தம்முடைய கட்டுக்கதையில், இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், சங்கம் என்ற இச்சொல்லை, முதன் முறையாக வெறும் இலக்கிய மன்றமாகக் குறிப்பிட்டுள்ளார்.

சங்கம் என்ற சொல்லை, ஓர் உறுப்பாகக் கொண்ட முதற் சொற்றொடர்கள், "சங்க மலி தமிழ்" "சங்கமுகத் தமிழ்," "சங்கத் தமிழ்" என்பனவாம். இச்சொற்றொடர்களில் வரும் தமிழ் எனும் சொல், உணர்த்தும் பொருள், தமிழ்ச் செய்யுள் என்பதாம்: தமிழ்மொழி என்பதன்று: சங்கம் எனும் சொல், சிவனை அல்லது விஷ்ணுவைப் பாக்கள் பாடிப் பரவுவோனின் குழு, அல்லது தெய்வப் பாடல்களோடு கலந்துவிட்டவர் குழு எனும் பருப்பொருள் உடையதாம்.

பெருமைமிகு, பிராமணச் சைவத் தேவாரப் பாடலாசிரியராகிய திருஞானசம்பந்தர், திருத்தேவூர் இறைவனைப் பாடிய தம்முடைய பாடல்கள் பத்தையும் ஞானசம்பந்தனால் பாடப்பெற்ற சங்கத்தோடு உறவுடைய பத்துப் பாடல்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். "ஞானசம்பந்தன் உரை செய் சங்கம் மலி செந்தமிழ்கள் பத்து" (திருத்தேவூர் தேவாரம் : 10 : 11 : 3 : 4);

அதே கடவுள் மீதான மற்றொரு தேவாரத்தில், நல்ல செந்தமிழ்ப் பாக்கள் பாடவல்லவன், எனத் தம்மை

அழைத்துக்கொள்கிறார். "நல்ல செந்தமிழ் வல்லவன்" திருத்தேவூர் தேவராம் : 10 : 1-2)

திருஞான சம்பந்தரோடு சமகாலத்தவராய, வைஷ்ணவப் பாடலாசிரியர் திருமங்கை ஆழ்வார், தம்முடைய பதிகம் ஒவ்வொன்றையும், செந்தமிழில் பாடப்பெற்ற பாடல்கள் என்ற புகழுரையோடு முடிக்கிறார். சில பதிகங்களில் சங்கத் தலைமைக்குச் சூட்டும் பத்துப் பாக்களால் ஆன மாலை என அழைக்கிறார். "சங்கமுகத் தமிழ் மாலை பத்து." (பெரிய திருமொழி : 3 : 4 : 10).

மற்றொன்றில் சங்கத்திற்குரிய, தமிழில் ஆன பாக்கள் பத்து என அழைக்கிறார். "சங்கமலி தமிழ்மாலை பத்து" (பெரிய திருமொழி : 3 : 9 - 10) பெருமைமிகு வைஷ்ணவப் பெண்பாற்புலவர், பெரியாழ்வார் மகள், ஆண்டாள், தம்முடைய இனிய திருப்பாவைப் பாடல்களைப் "பட்டர் மகள் கோதை பாடிய முப்பது சங்கத் தமிழ்ப் பாக்களால் ஆன மாலை" என அழைக்கிறார். "பட்டர் பிரான் கோதை சொன்ன சங்கத் தமிழ் மாலை முப்பது". (திருப்பாவை : 30, 1, 5)

தமிழ் வரலாறு எழுதும் இன்றைய எழுத்தாளர்களிடையே பெருவழக்காக வழங்கப்படும் சொற்றொடர், "சங்க காலம்" என்பது. எந்த ஒரு தனிப் புலவர் மன்றமும், "சங்கம்" என அழைக்கப்படவில்லை என்பதைக் காண, சங்க காலம் என்ற அத்தொடர் பொருளற்றதாகிறது. இறையனார் அகப்பொருள் உரையாசிரியரின் கருத்துப்படி சங்க காலம் என்பது, 9900 ஆண்டுகளைக் கொண்டது; இன்றைய எழுத்தாளர் சிலர், இந்த எண்ணைத் தூக்கி எறிந்துவிட்டு, முதல் இரண்டு சங்கங்களைச் சேர்ந்தனவாகக் கூறப்படும், பல்வேறு இலக்கண இலக்கியங்களின் ஆசிரியர்களைச் சிறிதும் நியாயம் இல்லாமல் இல்லாதவர்களாக்கித் துரத்திவிட்டுச். சங்கம் என்ற சொல்லை, மூன்றாம் சங்கத்தை மட்டுமே குறிக்கும் நிலையில் வரையறுத்து, அச்சங்க காலம் எது என அவர்கள் கற்பனை செய்துகொண்டார்களோ

அந்தக் காலத்தைக் குறிக்க, சங்க காலம் என்ற தொடரை மேற்கொள்வராயினர். அகப்பொருள் உரையாசிரியர், எட்டுத் தொகையும், இன்று அழியாதிருக்கும் வேறு சில நூல்களும், மூன்றாவது சங்க உறுப்பினர்கள் நாற்பத்தொன்பதின்மர் மேற்பார்வையின்கீழ், நானூற்று நாற்பத்தொன்பது புலவர்களால் பாடப்பட்டன எனத் தெளிவின்றிக் கூறியுள்ளார். எட்டுத்தொகை பாடிய புலவர்களை எண்ணிப் பார்க்கும்போது, அவ்விரு எண்களையும் நம்மால் காண முடியவில்லை. அவ்வுரையாசிரியர் கூற்றுப்படி, முதல் இரண்டு சங்கங்களைச் சேர்ந்த புலவர்களும், இத்தொகை நூலில் இடம் பெற்றுள்ளனர் என்பதை, நான் முன்பே குறிப்பிட்டுள்ளேன். ஆனால், இன்றைய எழுத்தாளர் சிலர், இத்தொகை நூல்களில் தொகுக்கப்பட்டிருக்கும் பாக்களைப் பாடிய எல்லாப் புலவர்களும், ஒன்று அல்லது இரண்டு தலைமுறைக் காலத்தில் வாழ்ந்தவராவர் எனத் தங்களுக்குத் தாங்களே முடிவுசெய்துகொண்டுள்ளனர். அப்படியென்றால், பழந்தமிழ் இலக்கியங்கள், தென் இந்திய அடிவானத்தில், எல்லை காணமாட்டாப் பேரிருள் முன் நிற்க, உலகப் பிரளயம் பின்தொடரப், பேரொளிப் பிழம்பாக விழும் விண்வீழ் கொள்ளிபோல், திடுமெனத் தோன்றியதாதல் வேண்டும். ஆகவே, அக்கூற்று, பொருளில் கூற்றே ஆகும். இக்கூற்று, இந்நில உலகில், உயிர்களின் உருவெளிப்பாடு, தொடக்கம் அற்ற பெருங்குழப்பம் ஓய்ந்த நிலையில் திடுமெனத் தோன்றி, தோன்றிய அதே வேகத்தில் அழிந்துவிடும்; எல்லை காண மாட்டா இரவு, இடையே வந்துறும் என்ற, விஞ்ஞான அறிவு வாய்க்காத மக்களின் தெளிவிலா முடிவினையே நமக்கு நினைவூட்டுகிறது. அதற்கு மாறாகத், தமிழ்ப் பாக்கள், இவ்வுலகப் பெருவெளியில் உள்ள ஏனைய எல்லாப் பொருள்களையும் போலவே, பலநூறு ஆண்டுகால அளவில், மெல்ல மெல்லப் பெற்ற வளர்ச்சியின் பயனே ஆகும். அதனுடைய பிறப்பு முதல் இன்றுவரை, இடையறவுபடா வளர்ச்சி நிலையினையே அது கொண்டுள்ளது;

முடிவுரை :

நீண்ட இவ் விவாதத்தின் முடிவுகளைத் தொகுத்துத் தருகின்றேன்.

1. தமிழ்ச் செய்யுள், அதற்கும் முந்தி இல்லை என்றாலும், கி. மு. 1000 அளவில் எழுந்தது. முதல் ஆயிரத் தாண்டைச் சேர்ந்தனவும் அகத்தியனார், தொல்காப்பியனார் மற்றும் பிற பழைய இலக்கண ஆசிரியர்கள், தங்கள் இலக்கண நூல்களுக்கு அடிப்படையாகக் கொண்டனவுமாய இலக்கியங்கள் உள்ளிட்ட அனைத்து இலக்கியங்களும் அழிந்து விட்டன. என்றாலும் அப்பாடல்கள் எல்லாம் தொல்காப்பியப் பொருளதிகாரம் கூறும், காதல், போர் நிகழ்ச்சிகள் பற்றி, அவ்வப்போது, பாடப்பெற்ற சிறப்புப் பாடல்கள்களாம் என்பதில் நாம் உறுதியாக இருக்கலாம்.

2. புலவர்கள், பாண்டிய அரசவையில் மட்டுமல்லாமல், சோழ, சேர அரசவைகளிலும், அரசர்களின் அருட்பேரொளி யின் கீழ்ச் சிறப்புற வாழ்ந்திருந்தனர். தம் புகழ்பாடும் பாணர் முதலாம் இரவலர்க்கும், அவர்தம் சுற்றத்தினர்க்கும், இறைச்சியொடு கலந்த உணவும், இனிய மதுவும் வழங்குவதில், அரசர்கள், தாராளமாக இருந்தனர்.

3. பாண்டிய மன்னர்கள், ஒன்றையடுத்து ஒன்றாக மூன்று தலைநகர்களைக் கொண்டிருந்தனர். அதனால்தான் முச்சங்கங்கள் பற்றிய கட்டுக்கதை எழுந்தது.

4. சங்கங்களின் கால நீட்சிக்குக் கூறும் புலவர்களின் எண்ணிக்கையும் பொருத்தமற்ற கண்டுபிடிப்புகளாம்.

5. தமிழ்ச்சங்கம், கி.பி. 470இல் வஜ்ஜிர நந்தி என்பவரால் நிறுவப்பட்ட திராவிட சங்கத்தின் மாதிரியில், ஒரு சமயப் பேரவையாக, முதன் முதலில் எண்ணி உருவாக்கப்பட்டது. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த புலவர்களில், சிவன் புகழ் கூறும் பாடல்களைப் பாடிய ஒருசிலர், கட்டுக்கதை கூறுமாறு, சிவபெருமானின் அடிக்கடி வருகைதரவால் சிறப்புப் பெற்ற

தமிழ்ச்சங்கத்தின், முன்னணி உறுப்பினர்களாகக் கூறப்பட்டனர்.

6. சங்கம் என்ற பெயர், எட்டாவது நூற்றாண்டில் அல்லது அதற்குப் பின்னர், மூன்று தமிழ்ச் சங்கங்கள் எனக் கூறப்பட்ட, பண்டைக் காலத்து அரச நாளோலக்கங்களுக்குச் சூட்டப்பட்டது.

7. சோழ, சேர அரசர்களும், பண்டைக் காலத்திலிருந்தே, இது போலும் அரச நாளோலக்கங்களைக் கொண்டிருக்க வேண்டும். ஆனால், இவ்விரு இனங்களும், ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து, ஒன்பதாம் நூற்றாண்டுவரை, இருட்டடிப்புக்கு உள்ளாகிவிட்டமையாலும் அல்லது, மதுரையில் உள்ளதுபோலும் புகழ்பெற்ற கோயில்கள் இன்மையாலோ, அல்லது கண்டறியப்படமாட்டா வேறு காரணங்களாலோ, அவ்விடங்களில் உள்ள சிவன்கள், ஆங்குள்ள சங்கங்களுக்குத் துணை புரிந்ததாகப் பாராட்டப்படவில்லை. ஆகவேதான் சங்கங்களைக் கொண்டிருந்த பெருமையைப் பாண்டியர் மட்டுமே பெற்று விட்டனர்.

8. முச்சங்கங்கள் பற்றிய அக்கதை, ஒரு தலைமுறைப் புலவர்களிடமிருந்து அடுத்துவந்த தலைமுறையினர்க்குக் கூறப்பட்ட, உண்மையான மரபுவழிச் செய்தி அன்று; மாறாகப், பாக்களில் காணலம், சில குறிப்புகளிலிருந்தும், சிவன் திருவிளையாடல் கூறும் புராணக்கதைகளிலிருந்தும், ஊகித்துக்கொண்ட அரசவை உள்ளாரின், தெளிவற்ற நினைவுகளின் தாறுமாறான கருத்துக் குழப்பம் அது.

# 16ஆம் அதிகாரத்தின் பின் இணைப்பு

**"தலை, இடை, கடைத் தமிழ்ச்சங்கங்கள் என்பன வெறும் கற்பனை அல்லது உண்மை நிகழ்ச்சிகள் ஆகா" எனல் பொருந்துமா ?**

*ஆரியர்கள், விந்தியத்தைக் கடந்து தெற்கே குடி பெயர்ந்ததற்கான குறிப்பு, இருக்கு வேதத்தில் இல்லை; முறையே சூரிய, சந்திர அரச வம்சங்களைத் தோற்றுவித்த, இக்குவாகு புரூரவர் காலத்துக்கு நூறு அரச தலைமுறைகளுக்குப் பிற்பட்ட காலத்தில் எழுதப்பட்ட ஐத்திரேய பிராமணாவில்தான் ஆரியர் விந்தியத்தைக் கடந்தது முதன் முதலில் குறிப்பிடப்பட்டுளது; என்றாலும், ஐத்திரேய பிராமணம், இந்த நூறு அரச ஆண்டு காலத்துக்கு முன்பிருந்தே, காலவெள்ளத்தில் மிதந்து வந்த செய்திகளையே குறிப்பிடுகிறது ஆதலின், அது குறிப்பிடும், ஆரியர் விந்தியத்தைக் கடந்தது, அது எழுதப்பட்ட காலத்தில்தான் நடைபெற்றது எனக் கொள்வது பொருந்தாது; மாறாக, நூறு அரச தலைமுறைகளுக்கு முற்பட்ட காலத்திலேயே அது நடந்துவிட்டதாகவே கொள்ள வேண்டும்." (தமிழர் வரலாறு : பக்கம் : 33)*

*புத்த ஜாதகக் கதைகள், கி.பி. நான்காம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்றாலும், அக்கதைகள் கூறும் நிகழ்ச்சிகள், கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிலும், அதற்கும் முற்பட்ட காலத்திலும், நாடோடிப் பாடல்களில் கூறப்பட்டு வந்த நிகழ்ச்சிகளின் தொகுப்பாகும். ஆகவே, அக்கதைகள் கூறும் நிகழ்ச்சிகளை, அக்கதை எழுதப்பட்ட கி. பி. நான்காம் நூற்றாண்டு நிகழ்ச்சிகளாகக் கொள்வது கூடாது; மாறாக, கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு நிகழ்ச்சிகளாகவே கொள்ளுதல் வேண்டும்." (தமிழர் வரலாறு பக்கம் 125)*

இவ்வாறெல்லாம் கூறியிருக்கும் திருவாளர் பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள், தமிழ்ச் சங்கங்களின் வரலாறு கூறும், இறையனார் அகப்பொருள் உரை, கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பதற்காக, அத்தமிழ்ச் சங்கங்கள் இருந்தமையினை ஏற்க மறுத்து அடுக்கடுக்கான எதிர்வாதங்களை வைத்துள்ளார்.

அவ்வாதங்களின் வன்மை மென்மைகளை, இனி, நிரலே ஆராய்ந்து நோக்குவோம்:

"பழங்காலத்தில், உண்மையில் கூறப்போனால் கி.பி. எட்டாம் நூற்றாண்டு வரை, கிறித்துவ ஆண்டு, வள்ளுவர் ஆண்டு போலும் ஆண்டுக் கணிப்பு முறை, தமிழகத்தில் கண்டுபிடிக்கப்படவில்லை. அல்லது பின்பற்றப்படவில்லை; ஆகவே, ஆண்டுகளைப் பேரெண் அளவில் எண்ணிக் காணும் வழிமுறை இடம் பெறவில்லை. உண்மைநிலை இதுவாகவும், முச்சங்கங்களின் ஆயுட்காலம், முறையே 4400, 3700, 1850 ஆண்டுகள் எனப்பெரெண் அளவில் ஆயுள் வகுத்திருப்பது ஒன்றே, முச்சங்க அமைப்பு என்பது, வெறும் கற்பனையே அல்லது, உண்மையில் இருந்த ஒன்று அன்று". (பக்கம் : 232) என்பதை உறுதி செய்யும்,

முச்சங்கங்கள் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர் பி.டி. சீனிவாச அய்யங்கார் காட்டும் காரணங்களுள் முதலாவது காரணம் இது

முச்சங்கங்களின் ஆயுட்காலம் முறையே 4400, 3700, 1850 என, அவற்றின் ஆயுட்காலந்தான் கூறப்பட்டுள்ளதே யல்லாது கிறித்து பிறப்பதற்கு முன்னர் (கி.மு.) அதற்குப் பின்னர் (கி.பி.) என்பதுபோல் இன்னார் பிறப்பதற்கு முன் இத்தனை ஆண்டுகள் என்றோ, அதற்குப்பின் இத்தனை ஆண்டுகள் என்றோ ஆண்டுக் கணிப்பு நிலையில் கூறப்பட வில்லை; ஆகவே, அப்பழங்காலத்தில், தமிழகத்தில் ஆண்டுக்கணிப்பு முறை இருந்ததா இல்லையா என்பது பற்றிய ஆய்வுக்கு இங்கு இடம் இல்லை.

ஆண்டுக் கணிப்பு முறை, பண்டைத் தமிழர் காணாத ஒன்று எழுத்தில் உண்மை இருக்கலாம். ஆனால், தமிழர்கள் எண்ணுமுறையினையே அறியாதவர்கள் என்பது, தமிழகத்துப் பண்டைய வரலாற்று நிலையை உணரத் துணை நிற்கும் எண்ணற்ற நூல்களில் ஒரு நூலைத்தானும் அறியாதார் கூற்றே ஆகும்.

எண்களை, எண்ணத்தெரிந்தவர்கள் தமிழர்கள்; பொருள் ஈட்டும் முயற்சி மேற்கொண்டு, கணவன் வெளிநாடு சென்றுவிட்டானாக, கைவிரலால் கோடு போட்டுப் போட்டு, அவர் சென்று ஒருநாள் ஆயிற்று; இரண்டுநாள் ஆயிற்று எனக் கணக்கிட்டு வந்தமையால், காரிகை ஒருத்தியின் தேய்ந்து போன விரலைக் காட்டுவதன் மூலம் (அவர் சென்ற நாள் ஒற்றித் தேய்ந்த விரல்" (குறள் ; 1261) பழங்காலப் பெண்டிர்க்கும் எண்ணுமுறை தெரியும் என்பதையும், போர்க் களம் புகுந்து பகைவர் வாளும் வேலும் வழங்கும் விழுப்புண் பெற வாய்ப்பில்லாமல், மனையகத்தே வீணே உண்டுகழித்த நாட்களைத், தன் வாழ் நாளில் வீணே கழிந்த நாளில் வைத்து எண்ணும் வீரன் ஒருவனைக் காட்டுவதன் மூலம், ("விழுப்புண் படாத நாள் எல்லாம், வழுக்கினுள் வைக்கும் தன் நாளை எடுத்து" குறள் : 776) அக்காலப் போர் வீரனுக்கும் எண்ணுமுறை புரிந்திருந்தது என்பதைத் தெளிவாக்கியுள்ளார் வள்ளுவர்.

"வேலின் நட்ட களிறு பெயர்த்து எண்ணின்" (புறம் : 302) "எல்லாம் எண்ணின் இடுகழங்கு தபுந", "எண்ணற்கு அருமையின் எண்ணின்றோ இலனே", "எண்ணுவரம்பு அறியாப் பன்மா" (பதிற்றுப்பத்து : 32, 77, 84) என்பன போலும், தொடர்கள், பழந்தமிழர் எண்ணத் தெரிந்தவர் என்பதற்கான அகச்சான்றுகளாம்.

எழுத்தைப் போலவே எண்ணையும் கண்ணாக மதித்தவர் வள்ளுவர் காலத்துக்கு முந்திய தமிழர். "எண் என்ப, ஏனை எழுத்து என்ப; இவ்விரண்டும் கண் என்ப

வாழும் உயிர்க்கு'' (குறள் : 392) என்ற அவர் குறளைக் காண்க. ஒன்று முதல் கோடிவரை எண்ணத் தெரிந்தவர் பழந்தமிழர். ''ஒன்று இரண்டு அல பல'' (பதிற்றுப்பத்து: 41) ''ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்'' (குறள் : 932), ''நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறு பல்வேள்வி'' (முருகாற்றுப்படை : 155-156) இவை, ஒன்று முதல் நூறு வரை எண்ணத் தெரிந்தவர் என்பதற்கான அகச்சான்றுகளுள் சில. ''அவிசொரிந்து ஆயிரம் வேட்டல்'' (குறள் : 259), ''ஆயிரம் வெள்ளம் வாழிய'', ''ஆயிரம் வெள்ள ஊழி வாழி யாத'' (பதிற்றுப்பத்து : 21, 63), ''வேலி ஆயிரம் விளையுட் டாக'' (பொருநராற்றுப்படை : 246), ''வேலி ஆயிரம் விளைக'' (புறம் 391), ''ஆயிரம் வித்தியது விளைய'' (மதுரைக் காஞ்சி : 11) இவை ஆயிரத்தையும் அறிந்தவர் அன்றைய தமிழர் என்பதற்கான எடுத்துக்காட்டுக்கள். ஒரு கோடி, பத்து கோடி, எழுபது கோடி, கோடிகோடிகளையும் எட்டிப் பிடித்தவர் பழந்தமிழர் என்பதற்கான அகச்சான்று களில் ஒரு சில இதோ. ''பேதை பெருங்கெழீஇ நட்பின், அறிவுடையார் ஏதின்மை கோடி உறும்'. (குறள் : 816) ''கோடி தொகுத்தார்'' (குறள் : 377) ''இரவாமை கோடி உறும்'' (குறள்: 1061)'' ''கோடியாத்து நாடு பெரிது, நந்தும்'' (புறம் : 184) : ''நகைவகையராகிய நட்பின் பகைவரால் பத்தடுத்த கோடி உறும்'' (குறள் : 817), ''பழுது எண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர் எழுபது கோடி உறும்'' (குறள் : 639) ''ஒரு பொழுதும் வாழ்வது அறியார் கருதுப, கோடியும் அல்ல பல'' (குறள் : 337) ''கோடி பல அடுக்கிய பொருள்'' (புறம் ; 202) ''கோடிபல அடுக்கிய கொழுநிதி'' (சிலம்பு : கடலாடு காதை ; 121) ''அடுக்கிய கோடி பெறினும்'' ''அடுக்கிய கோடி உண்டாயினும்'' (குறள் : 954, 1005).

ஒன்று இரண்டு எனத் தொடங்கிச் செவ்வெண் வரிசையில் பல கோடி வரை எண்ணத் தெரிந்திருந்தனர் என்பது மட்டும் அன்று. ஒன்றின் பல மடங்கை உணர்த்தும் பெருக்கல் எண்ணையும் அறிந்தவர்கள் அன்றைய தமிழ்க்

கணக்காயர். இந்த உண்மையை ஐயமற உணர்த்தும் அகச் சான்றுகள் இதோ : "இருமூன்று" (முருகாற்றுப்படை , 176) "ஈரைம் பதின்மர் (புறம் : 2 : பெரும்பாணாற்றுப்படை: 415) "மூவேழ்துறை" (புறம்: 166) "ஐயைந்து இரட்டி" (முருகாற்றுப்படை : 179) "எண்ணான்கு"; "எண்ணான்கு இரட்டி", "எண்ணெண்கலை" (சிலம்பு : நீர்ப்படை: 149, அழல்படு: 138, ஊர்காண்: 167) "ஒன்பதிற்றிரட்டி" (முருகாற்றுப்படை : 168).

இவ்வாறு, எண்ணும் கலையில் விரிவான அறிவு பெற்றிருந்த பண்டைத் தமிழர், வாழ்நாளை, ஒரு பொழுது வாழ்வு, ஒரு நாள் வாழ்வு, ஒரு கிழமை வாழ்வு, ஒரு திங்கள் வாழ்வு, ஒரு ஆண்டு வாழ்வு எனக் கணக்கிடும் வாழ்நாள் கணிப்பு முறையினையும் அறிந்திருந்தனர்.

ஒரு நாளைப், பல மணித் துளிகளின் தொகுப்பாகப் பிரித்தறிந்து, அம்மணித்துளிக்கு "ஓரை" என்றும், "நாழிகை" என்றும் "பொழுது" என்றும் பெயர் சூட்டியிருந் தனர். "மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்" (தொல் பொருள்: களவு : 44). "நாழிகைக் கணக்கர்" (சிலம்பு, இந்திர விழா : 49) "பொழுது என வரைதி" (புறம் : 8), "ஒருபொழுதும் வாழ்வது அறியார்" (குறள் : 337) என்ற அகச் சான்றுகளைக் காண்க.

ஓரை, நாழிகை, பொழுது இவற்றைத் துல்லியமாகக் கணித்துக் கூறவல்ல கருவியாம் குறுநீர்க் கன்னலையும், அதை இயக்கி, நாழிகை அறிந்து கூறவல்லாரையும் பண்டைத் தமிழகம் பெற்றிருந்தது. "பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள், தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி, எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய் நின் குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப" (முல்லைப் பாட்டு : 55-58), "யாமம் கொள்பவர் நெடுநா ஒண்மணி" (நற்றி : 132) ; "யாமம் காவலர்" (குறுந் : 378); "யாமம் கொள்பவர் சுடர் நிழல்" (புறம் : 37).

ஓரை, நாழிகை, பொழுது இவற்றின் பெருக்கமாம் "நாள்" என்பதையும் அறிந்திருந்தனர். "ஒருநாள் எழுநாள் போல் செல்லும்சேட் சென்றார் வருநாள் வைத்து ஏங்கு பவர்க்கு" (குறள் : 1269) "நாள் என ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும் வாள்", "விழுப்புண் படாத நாள்" (குறள் : 334, 376) என்ற சொற்றொடர்களைக் காண்க.

நாட்களை, நேற்று, இன்று, நாளை என எண்ணவும் தெரிந்திருந்தனர். "நெருநல், உளன் ஒருவன் இன்று இல்லை." (குறள் ' 336) என்ற குறட்பாவினைக் காண்க. காலை, பகல், மாலை, யாமம், விடியல் என ஒரு நாளை ஐந்து கூறுகளாகப் பிரித்துக் காணும் அறிவும் பெற்றிருந்தனர். "காலையும் பகலும், கையறு மாலையும், ஊர்துஞ்சு யாமமும் விடியலும் என்னும்இப் பொழுதிடைத் தெரியின்" (32) என்ற குறுந்தொகைச் செய்யுளைக் காண்க.

நாளின் பெருக்கமாம் "திங்களையும்", அத்திங்கள் சிலவற்றின் பெயர்களையும் அறிந்திருந்தனர். "வைகல், எண்தேர் செய்யும் தச்சன், திங்கள் வலித்த கால்" (புறம்:87), "ஆடித்திங்கள் பேரிருட் பக்கம்" (சிலம்பு : கட்டுரைகாதை; 133) "தைஇத் திங்கள்" (நற்றி : 80 ; குறுந் : 196; புறம் 70) "நோன்பியர் தை ஊன் இருக்கை" (நற்றி : 22) என்ற தொடர்களைக் காண்க ["தண்பொழில் பங்குனி முயக்கம்" (அகம் : 137)]

திங்கள் பலவற்றின் தொகுப்பாம் ஆண்டையும் அறிந்திருந்தனர்; அதை, "யாண்டு" என்றும் அழைத்தனர். "வேந்துறு தொழிலே யாண்டினது அகமே" (தொல்; கற்பு : 48) "யாண்டு பலவாக நரையில ஆகுதல்" (புறம் : 191) "பூ இடைப் படினும் யாண்டு கழிந்தன்ன" (குறுந்: 57) "யாண்டு பல கழிய" (பதிற்றுப்பத்து : 55; மதுரைக் காஞ்சி : 150) "யாண்டு" எனும் சொல் இடம் பெற்ற எண்ணற்ற தொடர்களில் ஒருசில இவை:

நாட்களின் பெருக்கம் திங்கள்; திங்களின் பெருக்கம் யாண்டு; யாண்டுகளின் பெருக்கம் ஊழி என உணர்ந்து, அவ்வாறே பெயரிட்டும் வைத்தனர். "நின் நாள், திங்கள் அனையவாக, திங்கள் யாண்டோ ரனைய வாக; யாண்டே ஊழி அனையவாக" (பதிற்றுப்பத்து : 90) குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையைப், பெருங்குன்றூர் கிழார் வாழ்த்திப் பாடிய பாடலைக் காண்க.

நாழிகை, நாள், திங்கள், யாண்டு இவற்றை அறிந்திருந்ததோடு, ஒருவன் வாழ்நாளில் கழிந்த நாழிகை எத்தனை, கழிந்த நாட்கள் எத்தனை; கழிந்த ஆண்டுகள் எத்தனை என்பதைக் கணக்கிட்டுக் குறித்துவைக்கவும் தெரிந்திருந்தனர்.

கனகவிசயரை வென்று, கண்ணகி சிலைக்காம் கல்கொண்டு கங்கைப் பேராற்றங்கரையில் பாடி கொண்டிருந்த போது, வஞ்சி நீங்கி வந்து 32 திங்கள் கழிந்து விட்டதைச் செங்குட்டுவனுக்குக், காலம் அறிந்து கூறும் கணி நினைவூட்டியதும், "எண்ணான்கு மதியம் வஞ்சி நீங்கியது," (சிலம் : நீர்ப்படை : 149) வட பேரரசுகளை வென்று கண்ணகிக்குச் சிலை கொணர்ந்த தன் கொற்றத்தில் குறை கண்டனர், சோழனும், பாண்டியனும் எனக் கேட்டுச் சினந்து, அவர் மீது சமர் தொடுக்க எழுந்த போது, "ஆட்சிக்காலம் 50 ஆண்டைக் கழிந்த பின்னரும் அறச்செயல்மீது ஆர்வம் கொள்ளாது, மறச்செயல்மீதே மனங்கொள்வது மாண்புடையதாமோ?" என்ற மாடலன் அறிவுரையில், செங்குட்டுவன் ஆட்சிக்கால ஆண்டு, "வையம் காவல் பூண்ட நின்நல்யாண்டு, ஐயைந்து இரட்டி சென்றது" (சிலம்பு : நடுகல் : 129 - 130) என நினைவூட்டியிருப்பதும் காண்க.

வாழ்நாளில் கடந்த காலத்தைக் கணக்கிட்டுத் தெரிந்து கொள்ளும் அவர்கள், இனி வாழ வேண்டிய நாட்களை வகைப்படுத்திக் கொள்ளவும் மறந்திலர். "சென்ற காலமும், வரூஉம் அமையமும்" என்ற மதுரைக் காஞ்சி (417) அடியினைக் காண்க.

ஆக, பழந்தமிழ்ப் பெருமக்கள், செவ்வெண்களை, ஒன்று முதல், கோடிவரை எண்ணத் தெரிந்தவர், ஓரைமுதல், ஊழிவரையாக, வாழ்நாளைப், பகுத்துக் கணக்கிடவும் தெரிந்தவர் என்பதற்கு இத்துணை அகச்சான்றுகள் கிடக்கவும், அவற்றுள் ஒன்றையேனும் கருத்தில் கொள்ளாது, பழந்தமிழர், ஆண்டுக் கணிப்பு முறையினையோ, ஆண்டு களைப் பேரெண் அளவில் எண்ணிக் காணும் அறிவினையோ பெற்றவர் அல்லர் என்ற தவறான முடிவிற்குச் சென்று, அத்தவறான முடிவையே காரணம் காட்டித், தமிழ்ச் சங்க அமைப்பில் ஐயம் கொள்ளும், திரு. பி. டி. எஸ். அவர்களின் போக்கு பொருளில் போக்காதல் அறிக.

"முதல் சங்க காலத்தில் 549 அரசர்கள், 4440 ஆண்டுகளே ஆட்சி புரிந்திருக்க, அவர்களின் வழிவந்தவர்கள், இடைச்சங்ககாலத்தில், 59 அரசர்கள் 3700 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் எனக் கூறுவது எள்ளி நகையாடற்கு உரிய ஒன்று. முதல் இரு சங்கங்களின் ஆயுட்காலமாம் 8140 ஆண்டுகாலம் வாழ்ந்தவராக அகத்தியர் ஆக்கப்பட்டுள்ளார்; 1850 ஆண்டுக்கால அளவில் 49 அரசர்கள் இறந்துபோயிருக்க, அத்துணைப் பெருங்காலம் கடைச்சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர் வாழ்ந்திருந்தனர் என்பதை நம்புவது இயலாது. ஆக, களவியல் உரையில் இடம் பெற்றிருக்கும் எண்களில் ஒன்று கூட நம்புதற்கு உரியதாக இல்லை. (பக்கம் : 232)

முச்சங்கம் என்பன இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர் பி. டி. எஸ் அவர்கள் காட்டும் காரணங்களுள் இரண்டாவது காரணம் இது.

களவியல் உரையாசிரியர், தலைச்சங்கம் நிறுவிய அரசர்கள், எண்பத்தி ஒன்பதின்மர் என்றுதான் கூறியுள்ளாரே அன்றி, இவர் கூறியிருப்பது போல், ஐந்நூற்றி நான்பத்தொன்பதின்மர் எனக் கூறவில்லை. அவர்களைச்

சங்கம் இரீஇயினார், காய்சின வழுதி முதலாகக், கடுங்கோன் ஈறாக, எண்பத்தொன்பதின்மர் என்ப'' என்றுதான் களவியல் உரை கூறுகிறது. ''முச்சங்கப் பழங்கதை'' என்ற குறுந் தலைப்பில், இறையனார் களவியல் உரையினை மொழி பெயர்த்துத் தந்திருக்கும் இடத்தில், (பக்கம்: 230) தலைச் சங்கத்தை நிறுவிய அரசர்கள், எண்பத்தொன்பதின்மர் என்றுதான், திருவாளர். பி. டி. எஸ். அவர்களும் கூறியுள்ளார்கள்.

தலைச் சங்கத்து 89 அரசர்கள், 4400 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் எனக் கூறும்போது, ஓர் அரசனின் ஆட்சி ஆண்டு, 49 ஆண்டு 5 திங்கள் ஆகிறது. இடைச் சங்கத்து 59 அரசர்கள் 3700 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் எனக் கூறும் போது, ஓர் அரசனின் ஆட்சிக் காலம், 62 ஆண்டு 9 திங்கள் ஆகிறது. கடைச்சங்கத்து 49 அரசர்கள், 1850 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர் எனக் கூறும்போது, ஓர் அரசனின் ஆட்சிக் காலம், 38 ஆண்டுகள் ஆகிறது. செங்குட்டுவன், கண்ணகி சிலைக்காகக் கல் கொண்ட போது, ஆட்சி ஆண்டு ஐம்பதைக் கடந்துவிட்டான் என்கிறான் மாடல மறையோன், (சிலம்பு: நடுகல்: 129) அவன் அதற்கு மேலும் வாழ்ந்து, கண்ணகிக்குக் கோயில் கட்டிச், சிலை நிறுவி, விழா எடுத்துள்ளான். இந்த உண்மையோடு இணைத்துப் பார்க்கும்போது, இடைச்சங்க காலத்து அரசர்களின் சராசரி ஆட்சி ஆண்டு, 62 ஆண்டு 9 திங்கள் என்பது நம்ப இயலாத ஒன்றாகத் தோன்றவில்லை; இயல்பானதே'

''இராமர் சந்தித்த அகத்தியர், முதல் அகத்தியர் காலத்துக்கு நான்கு நூற்றாண்டுகள் கழித்து வாழ்ந்த இரண்டாம் அகத்தியராவர் (பக்கம்; 55) என, இரு வேறு காலங்களில் வாழ்ந்த இரண்டு அகத்தியர்களைத், திருவாளர். பி.டி.எஸ். அவர்களே அறிமுகம் செய்து வைத்துள்ளார். அது செய்த அவர், தலைச்சங்க காலத்து அகத்தியர் வேறு, இடைச்சங்க காலத்து அகத்தியர் வேறு எனக் கொள்வது விடுத்து, இருவரையும், ஒருவராகவே கொண்டு குழம்புவது

ஏனோ? அவ்வாறு குழம்பிய காரணத்தால், களவியல் உரை கூறாதிருக்கவும், அகத்தியர், 8140 ஆண்டுகள் வாழ்ந்ததாகக் களவியல் உரை கூறுவதாகத் தாமே கற்பனை செய்து கொண்டதேயல்லாது, வேறு இல்லை.

"கடைச் சங்க காலமாகிய 1850 ஆண்டுகால அளவில், அச்சங்கம் புரந்த 49 அரசர்கள் இறந்து போயிருக்க, 49 புலவர்கள், 1850 ஆண்டுகள் வாழ்ந்திருந்தனர் என்பது நம்ப இயலாத ஒன்று" என்பது, பி. டி. எஸ். அவர்களின் பிறிதொரு குற்றச்சாட்டு. கடைச் சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர் ஒவ்வொருவரும் 1850 ஆண்டுகள், ஒரு சேர வாழ்ந்திருந்தனர் எனக் களவியல் உரை கூறவில்லை. அதுகூறியிருப்பதெல்லாம், "இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார், சிறு மேதாவியரும், சேந்தம் பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர் கிழாரும், இளந்திருமாறனும், மதுரை ஆசிரியர் நல்லந்துவனாரும், மருதன் இளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவருள் விட்டு, நானூற்று நாற்பத்தொன்பதின்பர் பாடினார் என்ப", இவ்வளவே. இதில், தமிழாராய்ந்த அந்த நாற்பத்தொன்பதின்மரும், 1850 ஆண்டுகள் ஒரு சேர இருந்து அப்பணி புரிந்தனர் எனக் கூறப்படவில்லை. அந்த 1850 ஆண்டு கால அளவில் 49 அரசர்கள் ஆட்சி புரிந்திருந்தது போலவே, அந்த ஆண்டு கால அளவில் அந்த 49 புலவர்கள், தமிழாய்வுக்குத் தலைமை வகித்தனர் என்பதே அத்தொடர் அளிக்கும் தெளிவான கருத்தாகும். ஆக, களவியல்உரைகூறாத ஒன்றைக் கூறியதாகப், பிழைபடக் கொண்டுவிட்ட மயக்கமே, திருவாளர் பி. டி. எஸ். அவர்களின் இக்குற்றச் சாட்டிற்குக் காரணம்; அவர் குற்றச்சாட்டில் உண்மை இல்லை.

"சங்க இலக்கியத் தொகை நூல்களில். பாண்டியரை வெற்றி கொண்ட, சோழ அரசர் சிலரைப் புகழ்ந்துபாராட்டும், புறநானூற்று 81, 33 பாடல்கள் போலும் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. அத்தகு பாக்களைப் பாடிய புலவர்கள்,

பாண்டிய அரசர்களால் புரக்கப்பட்டு வந்த தமிழ்ச்சங்கத்தில் இடம் பெற்றிருக்க இயலும் என்பதும், அத்தமிழ்ச் சங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பர் என்பதும், பாண்டிய அரசர்கள் ஆணையால் தொகுக்கப்பெற்ற தொகை நூல்களில், அப்பாக்கள் இடம் பெற்றிருக்க இயலும் என்பதும், அறவே நம்புதற்கு இயலாதனவாம்''. (தமிழர் வரலாறு, பக்கம்: 233)

முச்சங்கம் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் காட்டும் காரணங்களுள் மூன்றாவது காரணம் இது.

நாடு, அரசர் அனைவர்க்கும் பொது எனும் சொல்லைத், தாங்கிக்கொள்ளமாட்டாது (''போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது'' புறம்: 8) ''இருகடல் நீரும் ஒரு பகல் ஆடும்'' ஆசைப் பெருக்கால், பிற அரசுகளை அழித்துத் தனி அரசு செலுத்தும் நிலை, தமிழகத்தில் ஒரு சில காலங்களில் இருந்தது என்றாலும், அதுவே, அக்கால அரசியல் பொது நிலையாக அமைந்துவிடவில்லை. மூவேந்தர்கள், தம்முள் பகையொழிந்து ஒன்றுபட்டிருந்த நிலையும் இல்லாமல் போய்விடவில்லை. மாரி வெண்கோ என்ற சேரவேந்தனும், கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி என்ற பாண்டியனும், இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற சோழ வேந்தனும் ஒன்றுபட்டு வாழ்ந்திருக்க, அக்காட்சி நலம் கண்டு களிப்புற்ற ஔவையார், ''முத்தீப் புரையக் காண்தகு இருந்த கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்.'' (புறம்: 367) என அவர்களைப் பாராட்டியிருப்பதும் நிகழ்ந்துளது.

குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன் என்ற சோழனும், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்ற பாண்டியனும் பகை மறந்து நட்புப் பூண்டிருந்த நலத்தகு காட்சியைக் கண்ணுற்ற காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், ''பால் நிற உருவின் பனைக் கொடியோனும், (பலராமன்), நீல் நிற உருவின் நேமியோனும், (கிருஷ்ணன்) என்று இரு பெருந் தெய்வம் உடன் நின்றாஅங்கு. உருகெழு

தோற்றமொடு உட்குவர விளங்கி, இன்னீர் ஆகலின் இனியவும் உளவோ?'' (புறம் : 58) எனப் பாராட்டியிருப்பதும் நிகழ்ந்துளது.

அது மட்டும் அன்று, சேரனையும், சோழனையும், வாழ்த்திப் பாடிய புலவரைப் பாண்டியன் வெறுப்பதோ, சோழனையும், பாண்டியனையும் பாடிப் பாராட்டிய புலவரைச், சேரன் சினப்பதோ, பாண்டியனையும், சேரனையும் சிறப்பித்த புலவரைச், சோழன் புறக்கணிப்பதோ நடைபெறவில்லை. மாறாக, அத்தகு புலவர்களையும், வரவேற்றுப் பரிசு அளித்துப் பெருமை செய்துள்ளனர்.

சோழர் குலத்துவந்த உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியையும், (புறம் : 4) அவன் மகன் கரிகால் பெருவளத்தானையும் (அகம் : 125, 246) அக்குலத்து வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியையும் (புறம் : 63) பாடிய பரணர், அவ் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியோடு போரிட்டு இறந்த, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனையும் (புறம் : 63) அவன் மகன் செங்குட்டுவனையும் (பதிற்றுப்பத்து : ஐந்தாம் பத்து) பாடியுள்ளார். தன் தந்தையின் இறப்பிற்குக் காரணமாய் இருந்த, வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியையும், அவன் குல முன்னோர்களையும் பாடிய பரணர், தன்னையும் பாடுவதா எனச், செங்குட்டுவன் வெறுக்கவில்லை; மாறாக, அவர் பாக்களை ஏற்று, அவற்றிற்குப் பரிசாகத், தன் ஆட்சிக்கு உட்பட்ட உம்பற்காட்டின் வருவாயினை வழங்கியதோடு, தன் மகனை, மகனாக வளர்க்கும் பெரும் பொறுப்பையும் அவர்க்கே அளித்தான். (பதிற்றுப்பத்து : ஐந்தாம் பத்தின் பதிகம்)

தன்குல முன்னோர்கள் நிறுவிய தமிழ்ச் சங்கத்திற்குத் தன் காலத்தே தலைமை ஏற்றிருந்த நக்கீரர், நெடுநல்வாடை என்ற நெடிய பாட்டிலும், அக நானூற்றுப் பாடல் ஒன்றிலும் (அகம் : 36) தம் புகழ் பாடினார் என்றாலும், ''அரண்பல கடந்த முரண்கொள் தானை வாடா வேம்பின் வழுதி கூடல்''

எனத், தம் குலப்பாண்டியர் தலைநகரைப் பாராட்டிய ஒரு பாட்டில் (அகம் : 94), ''ஆரம்கண்ணி அடுபோர்ச் சோழர் அறங்கெழுநல்லவை உறந்தை'' எனவும், ''கடும் பகட்டுயானை நெடுந்தேர்க்கோதை, திருமாவியன்நகர்க் கருவூர்'' எனவும், தம்குலப் பகைவர்களாம் சோழனையும், சேரனையும் பாராட்டியுள்ளார். அது மட்டுமன்று, சோழ நாட்டுப் பேரரசனை மட்டுமே அல்லாமல், அந்நாட்டுக் குடிமக்களுள் ஒருவனாம், பிடவூர்க் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பானையும் பாடியுள்ளார். (புறம் : 395) பாடியது மட்டுமல்லாமல், அவனைப் பாராட்டிய பின்னர், ''அவனை மறக்க மாட்டேன், பிறரை நினைக்க மாட்டேன்'' — ''அவன் மறவலேனே; பிறர் உள்ளேனே'' எனக் கூறுவதன்மூலம், தன்னை மறப்பதும் செய்துள்ளார் என்பது அறிந்தும், நக்கீரரைப், பாண்டியன் புறக்கணித்துவிட்டதாக வரலாறு இல்லை.

நக்கீரரே அல்லாமல், அவர் தந்தையார் மதுரைக் கணக்காயனாரும், தம்முடைய பாட்டு ஒன்றில், (அகம் ; 338) ''மலைகளால் நிறைந்த இவ்வுலகம் புகழ்ந்து கூறும் நாட்டினையும், வீரம் மிக்க நாற்படைகளையும் உடைய பேரரசர்கள் பலருள்ளும், அறநெறிவழுவாச் செங்கோலும், பகையரசர் தம் ஆண்மையை அழித்த உரம் வாய்ந்த தோளும், அதனால் பலரும் பாராட்டும் புகழ்ச் செல்வமும் வாய்க்கப் பெற்ற பசும்பூண் பாண்டியன்''— (குன்றோங்கு வைப்பின் நாடு மீக்கூறும், மறங்கெழு தானை அரசருள்ளும், அறங்கடைப் பிடித்த செங்கோல், உடனமர் மறஞ்சாய்த்து எழுந்த வலன் உயர் திணிதோள், பலர் புகழ் திருவின் பசும் பூண் பாண்டியன்) எனத் தன்னைப் பாராட்டினார் என்றாலும், அதே பாட்டில், தன் குலப் பகைவர்களாம் சேரனையும், சோழனையும், முறையே, ''ஒன்னார் தேஎம் பாழ்பட நூறும், துன்னரும் துப்பின் வெள்வேல் பொறையன்'' என்றும், ''புனிற்று ஆன்தரவின் இளையர் பெரும்கன் தொகு போர்ச் சோழன்'' என்றும் பாராட்டியிருப்பது கொண்டு, அவர்பால் சினம் கொண்டு, அப்

பாட்டை அகநானூற்றுத் தொகுப்பிலிருந்து அகற்றிவிட வில்லை.

தம் அவைக்களப் புலவர்களாய் இருந்து, தம்மைப் பாடிய புலவர்கள், தம் குலப் பகைவர்களையும் பாடி யிருப்பது கொண்டு, அப்புலவர்களை வெறுத்து வெளி யேற்றாது, ஏற்றுப் போற்றியது மட்டுமல்லாமல், அம் மூவேந்தர்கள், தம் குலப் பகைவர்களைத், தம் வாயால் தாமே பாராட்டுவதும் செய்துள்ளனர்.

பருவூர் எனும் இடத்தில் நடந்த பெரும் போரில் தன் குலமாம் சேரர் குலத்து வந்த வேந்தன் ஒருவனும், பாண்டியன் ஒருவனும் தோற்று அழிய, அவர்களின் யானைப் படையைக் கைக்கொண்ட சோழ வேந்தன் ஒருவனையும், அவன் மகன் அஃதை என்பானையும் பாராட்டியுள்ளார், மருதம் பாடிய இளங்கடுங்கோ என்ற சேரர் குலச் செம்மல்;

"அஃதை தந்தை,
அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்,
வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை,
இருபெரு வேந்தரும் பொருதுகளத்து ஒழிய
ஒளிறுவாள் நல்லமர்க் கடந்த ஞான்றை"

—அகம்: 96

தன் நாட்டைக் கடல் கொள்ள, அதை ஈடு செய்வான் வேண்டிச், சோழனையுத், சேரரையும் வென்று, சோழர்தம் புலிக் கொடியையும், சேரர்தம் விற்கொடியையும் அகற்றி விட்டு, ஆங்கே தம் மீன் கொடியை உயர்த்திய சோழர் குலப் பகைவர்களுள் ஒருவராகக் கருதப்படும், பாண்டியர் குலத்து வந்தான் ஒருவனைப் பாராட்டியுள்ளார், நல்லுருத்திரன் என்ற சோழர் குலத்து நல்லார் ஒருவர்.

"மலிதிரை ஊர்ந்து தன்மண் கடல்வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடு இடம்பட

புலியொடு வில் நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்''
—முல்லைக்கலி : 4

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பாண்டியர்களுள் ஒருவனாம் என்ற பாராட்டிற்கு உரியனாகிய, முடத் திருமாறனே, பாண்டியர் குலப் பகைக் குலங்களுள் ஒன்றாம், சேரர் குடிவந்த குட்டுவன் என்பானுக்கு உரிய மேற்கு மலையையும், அதன்கண் சுனையையும், அதில் மலர்ந்து மணக்கும் குவளையையும் பாராட்டியுள்ளான்:

''குட்டுவன்
குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை
வண்டுபடு வான்போது கமழும்''.
—நற்றிணை : 105.

இவ்வகையால், தம்மைப் பாடிய புலவர்கள் தம் பகைக்குல வேந்தர்களைப் பாராட்டுவதைப் பொறுத்துக் கொள்வதோடு நில்லாது, அப் பகைக்குல வேந்தர்களைத் தம் வாயால் தாமே பாடிப் பாராட்டியது மட்டுமன்று, அதற்கும் மேலாக, புலவர்கள், தம் அரசவைக்கே வந்து, தம்முன் நின்றே, தம்மைப் பழித்தும், தம் பகைவரைப் பாராட்டியும் பாடிய பாடல்களையும் பொறுமையோடு கேட்கும் பேருள்ளமும் வாய்க்கப் பெற்றிருந்தனர்.

கரிகால் பெருவளத்தான் கண்ட போர்க்களங்களில், வெண்ணிப் போர்க்களமே, அவன் வெற்றிக்கு அடிகோலிய சிறப்பு வாய்ந்தது. இருபெரு வேந்தரும், பதினொரு வேளிரும் ஒருங்கே அழிந்தனர் அப்போர்க்களத்தில், அதனால் பரணர் முதலாம் புலவர் பல்லோரின் பாராட்டுக்கு உரியதாய் அமைந்துவிட்டது அப்போர்.

அப்போரில், கரிகாலன் பகைவர் அனைவரும் வீழ்ந்து விட்டனர் என்றாலும், எல்லோரும் அவன் வாள்பட்டே வீழ்ந்துவிட்டனர் அல்லர்: அவர்களுள் சேரலாதனுக்கு

முதுகில் அம்பு தைத்துவிட்டது என்றாலும் உயிரிழந்து போய்விடவில்லை. எண்ணியிருந்தால், ஓடி உயிர் பிழைத்திருக்க முடியும் அவனால். ஆனால், அவன் வீர உள்ளம், அது செய்ய மறுத்துவிட்டது. புறப்புண் பெற்றமைக்கு நாணி, உண்ணா நோன்பு மேற்கொண்டு வடக்கிருந்து உயிர் விட்டான். அச் செயல் வெண்ணிப்போரில், தோல்வியால் அவனுக்கு உற்ற இழிவைத் துடைத்துவிட்டு, அவனுக்கு இறவாப் புகழை அளித்துவிட்டது.

வெண்ணிப் போர்க்கள நிகழ்ச்சிகளையும், சேரலாதன் வடக்கிருந்து உயிர் விட்ட பெருஞ்சிறப்பையும் கண்ணெதிர் காணும் வாய்ப்பு பெற்ற, அவ்வூர்க் குயவர் குலத்துவந்த பெண்பாற் புலவர் ஒருவர், நேரே கரிகாலன் அவைக்குச் சென்று, வெண்ணிப்போர் வெற்றிக் களிப்பில், தன்னை மறந்து மகிழ்ந்திருக்குங் கரிகாலன் முன் நின்று, "வேந்தே! வெண்ணிப் போரில் வெற்றி கண்டவன்தான் நீ; ஆனால், அவ்வெற்றி, அழியுநர் புறக் கொடை அயில்வேல் ஓச்சாக் கழி தறுகண்மையைக் கைவிட்டு, புறமுதுகு இட்டார் மீதும் வேல் எறிந்து பெற்ற வெற்றி; அதனால் அத்தகு வெற்றி பெற்ற நீ, நல்லவன் இல்லை. உன்னால் பெற்ற புறப் புண்ணுக்கு நாணி, வெட்கி, வடக்கிருந்து உயிர் விட்டானே சேரலாதன், அவனே உன்னிலும் நல்லவன்" எனத் துணிந்து கூறிவிட்டார்-

"கரிகால் வளவ!
சென்று அமர்க் கடந்த, நின் ஆற்றல் தோன்ற
வென்றோய்! நின்னினும், நல்லன் அன்றே,
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப் புகழ் உலகம் எய்திப்,
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே?".

—புறம்: 66

வெண்ணிக் குயத்தியார் கூற்றில், உண்மை இருப்பதை உணர்ந்தமையால் கரிகாலன், தன் பகைவனைத் தன்முன்

பாராட்டியும், தன்னைப் பழித்தும் பாடிய அப் பாடலையும் தாங்கிக்கொள்ளும் தகையோனாய் விளங்கினான்.

மேலே எடுத்து வைத்த அகச்சான்றுகளால், "பாண்டியர் தமிழ்ச் சங்கம் நிறுவினர் என்பதோ, அதில், இத் தொகை நூல்கள் அரங்கேற்றம் பெற்றன என்பதோ நம்ப இயலாதன" என்ற தம் முடிவிற்குத், திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் காட்டிய, "தம் பகையரசர்களையும் பாராட்டும் பாடல்களைக் கொண்ட தொகை நூல்களையோ, அத்தொகை நூல் பாடிய புலவர்களையோ, தாம் நிறுவித் தாம் தலைமையேற்று நடத்திய தமிழ்ச் சங்கம் ஏற்றுக் கொள்வதைப் பாண்டியர் பார்த்துக்கொண்டிருந்திருக்க மாட்டார்" என்ற காரணமும் பொருளற்றுப் போவது காண்க.

"மேற்குக் கடற்கரையைச் சார்ந்த முசிறி முதல், கிழக்குக் கடற்கரையைச் சார்ந்த மயிலாப்பூர் வரையிலான தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்தவர்களும், தங்களுக் குள்ளாகவே, ஒருவரோடொருவர் அடிக்கடி போர் செய்து கொண்டிருக்கும் அரசர்களின் அரவணைப்பில் வாழ்பவர்களு மாகிய புலவர்கள், மதுரை அரசன் ஆணையேற்று ஓரிடத்தே கூடியிருந்தனர் என்பதை நம்புவது இயலாது" (பக்கம்: 233).

முச்சங்கம் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர், பி. டி. எஸ். அவர்கள் காட்டும் காரணங்களுள் நான்காவது காரணம் இது.

வேள்பாரியின் பறம்பு, வையாவிக்கோ பெரும்பேகனின் பொதினி, கண்டீரக்கோ பெரு நள்ளியின் தோட்டி, வல்வில் ஓரியின் கொல்லி, மலையமான் திருமுடிக் காரியின் முள்ளூர், செல்வக்கடுங்கோ வாழியாதனின் நேரி, மலைகளையும், அயிரை ஆற்றையும் அறிந்துள்ளார். அஃதை கூடலுக்கு அவர் சென்றுள்ளார். இருங்கோ வேள், விச்சிக்கோன் இவர்களின் அரசவை சென்று முறையீடுகள் வைத்துள்ளார்.

ஆகவே, கபிலர், தமிழகத்தின் பெரும்பகுதியில் பயணம் மேற்கொண்டுள்ளார் என்பது உறுதி.

குடக்கோ நெடுஞ்சேரல் இரும்பொறை, செங்குட்டுவன் ஆகிய சேரவேந்தர்களையும், உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி, வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி ஆகிய சோழ அரசர்களையும், பேகன், மலையமான் திருமுடிக் காரி, ஆஅய் அண்டிரன், அதியமான் நெடுமான் அஞ்சி, கண்டீரக்கோ பெருநள்ளி, வல்வில் ஓரி, ஆட்டனத்தி, ஆதிமந்தி, நன்னன், ஆய் எயினன், அகுதை, அன்னிமிஞிலி, அழுந்தூர்த் திதியன், தித்தன் வெளியன், பாணன், கட்டி, பொருநன், கணையன், மத்தி, கழுவுள், அழிசி, சேந்தன், மாந்தரம் பொறையன், ஊணூர்த்தழும்பன், விரான், விச்சியர் பெருமகன், பழையன், வல்லங்கிழவன், பொதியில் திதியன் ஆகிய எண்ணற்ற சிற்றரசர்கள், வீரர்கள், வள்ளல்களை அறிந்துள்ளார். வாகைப் பறந்தலை, வெண்ணிப் பறந்தலை, கூடற் பறந்தலை, பாழிப்பறந்தலைப் போர்களைக் கண்டுள்ளார். கழார்ப்பெருந்துறை நீர் விழாவில், ஆட்டனத்தி மறைந்தது, கரிகால் வெண்ணியில் பெற்ற கன்னிப்போர் வெற்றி குறித்து அழுந்தூரில் விழா நிகழ்ந்தது; நறுமா தின்ற பெண் ஒருத்தியை நன்னன் கொன்றது; பாழியில் வேளிர் பெருநிதி சேர்த்து வைத்திருப்பது, தந்தையின் கண்ணைப் போக்கிய கோசரை, அன்னிமிஞிலி பழி வாங்கியது, மனைவியைப் பிரிந்து, பேகன் பரத்தையொடு வாழ்ந்திருந்தது ஆகிய நிகழ்ச்சிகளை அறிந்து வைத்துள்ளார். ஆகவே, பரணர் பாரெல்லாம், சுற்றிய பெரு நடையாளர் என்பது பெறப்படுகிறது.

சேரன் மாரிவெண்கோ, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பாண்டியன் கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி, தகடூர் அதியமான் நெடுமான் அஞ்சி, நாஞ்சில் நாட்டுப் பொருநன் ஆகியோரைப் பாடிய ஔவையும், தமிழகம் எங்கும் சென்று வந்தவரே.

பெருஞ்சோற்றுதியன் சேரலாதனையும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனையும் பாடியிருப்பதன் மூலம் சேர நாட்டையும், சோழன் பணித்த களிறுபிடி முயற்சியில் கலந்துகொள்ளாத எழினியை வென்று, அவன் பல்லைக் கொணர்ந்து பதிக்கப்பெற்ற கதவுகளைக் கொண்ட வெண்மணி வாயிலைச் சிறப்பித்தன் மூலம் சோழ நாட்டையும், பாண்டியர்க்கு வெற்றி சேர்க்கும் களிற்றுப்படை, பொருளும் புகழும் சேர்க்கும் கொற்கை முத்தையும் பாராட்டியிருப்பதன்மூலம் பாண்டி நாட்டையும், அதியன், அதியமான், ஆவி, எருமை, நன்னன் ஆகியோரைப் பாராட்டியிருப்பதன் மூலம் தமிழகத்துப் பிற பகுதிகளையும் அறிந்து கொண்டதோடு, வேங்கடத்துக்கு அப்பாலதான மொழி பெயர் தேயத்துக் கட்டி, பாணன், புல்லி ஆகியோரை அறிந்திருந்தமையால், தமிழகத்து வடவெல்லைப் பகுதிகளையும், கங்கைக்கரைக்கண்ணதான பாடலியில் பெரும் பொருளை ஒளித்து வைத்த நந்தர் செயலையும், மலையிடைப் பாறைகளைப் பிளந்து வழி வகுத்துக்கொண்டு நெடிய தேர்ப் படையோடு தென்னாட்டின் மீது போர் தொடுத்து வந்த மோரியர் செயலையும் கூறியிருப்பதால், கங்கைக் கரை நாடுகளையும் அறிந்து வைத்திருக்கும் மாமூலனார், கன்னி முதல், கங்கை வரை சென்று வந்தவரே:

தமிழகம் முழுவதும் சென்று பார்த்தவர், இந்நால்வர் மட்டுமே அல்லர் ; இவர்களைப் போல் தமிழ்நாடு முழுவதும் சென்று பார்க்கவில்லை எனினும், தமிழகத்தின் ஒரு பகுதியிலிருந்து பிறிதொரு பகுதிக்குச் சென்றுவந்த புலவர் பலராவர். அவர்களுள் ஒரு சிலரை ஈண்டு நினைவு கூர்தல் பொருந்தும்:

மதுரை மாவட்டத்தைச் சார்ந்த இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கவுசிகனார், வடார்க்காடு மாவட்டம் செங்கம் வட்டத்து நன்னன் சேய் நன்னனைப் பாராட்டி மலைபடுகடாம் பாடியுள்ளார்-

சோழ நாட்டு உறையூர் ஏணிச்சேரியைச் சேர்ந்த முடமோசியார், பாண்டி நாட்டுப் பொதியமலைச் சாரலில் உள்ள ஆய்குடியை அரசிருக்கையாகக் கொண்ட அண்டிரனைப் பாடியுள்ளார்.

சோழ நாட்டு நன்னிலத்துக்கு அணித்தாக உள்ள எருக்காட்டூரைச் சேர்ந்த தாயங்கண்ணனார், சேர நாட்டுப் பேரியாற்றையும், முசிறித் துறையையும், தங்கள் நாட்டுப் பொற்காசுகளைக் கொண்டுவந்து கொட்டிவிட்டு, நம் நாட்டு மிளகுப் பொதிகளை ஏற்றிக்கொண்டு போகும் யவனர் கடல் வாணிகத்தையும் கண்டுள்ளார்; அந்நாட்டு உம்பற்காட்டுக் காட்சி நலனையும் கண்டு களித்துள்ளார்.

சேரர்க்குரிய கருவூரினராகிய கந்தப்பிள்ளை, பாண்டி நாட்டுத்தென்கோடி நாடாம் நாஞ்சில் நாட்டு வள்ளுவனைப் பாடியுள்ளார்.

தமிழகத்தின் வட எல்லையாம் தொண்டை நாட்டினராகிய கல்லாடனார், பாண்டி நாட்டுத் தலையாலங்கானத்து நெடுஞ்செழியனையும், சேர நாட்டுக் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலையும் பாராட்டியுள்ளார்.

பாண்டி நாட்டைச் சேர்ந்த பிசிராந்தையார் சேர நாட்டிற்கு வந்து வடக்கிருந்து உயிர் துறந்துள்ளார்.

தம் புலமை மதித்துப் பரிசு வழங்கிப் புரக்கத் தக்க பேராளர்களின் வாழிடம் நனிமிகச் சேய்மைக் கண்ணதாயினும், கடந்து செல்ல வேண்டிய வழி கடத்தற்கு அரியது என்று பாராதே, தமிழ்நாடு முழுவதையும் வலம் வந்த புலவர் பெருமக்கள், அவ்வாறு சென்றுவந்த தம் செயலைத், தம்வாயால் தாமே கூறியும் உள்ளனர். "நெடிய என்னாது சுரம்பல கடந்து......வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை" (புறம் : 47) எனக் கோவூர் கிழாரும், "அத்தம் ஒன்றிரண்டல பல கழிந்து......காண்டு வந்திசின்" (பதிற்றுப்பத்து : 4) எனப் பரணரும் ; "குன்றுபல நீந்தி வந்து

அவண் இறுத்த இரும்பேரொக்கல்"; "பகைவர் நாடும் கண்டு வந்திசின்...நீ புறந்தருதலின் நோய் இகந்து ஒரீஇய யாணர் நன்னாடும் கண்டுமதி மருண்டனென்" (பதிற்று : 12, 15) எனக் குமட்டூர்க்கண்ணனாரும், "ஆனினம் கலித்த அதர் பல கடந்து மானினம் கலித்த மலைபின் ஒழிய, மீனினம் கலித்த துறை பல நீந்தி உள்ளி வந்த" என மருதன் இளநாகனாரும் (புறம் : 138) கூறுவதும் காண்க.

தாம் கடம்பல கடந்து சென்று மீளும் புலவர்கள், பிற புலவர்களுக்கும் இரவலர்களுக்கும், கடந்து செல்ல வேண்டிய வழித்தடங்களை விளங்க உரைப்பதும் உண்டு. "செங்கண் மாத்து நன்னன் சேய் நன்னனைப்பாடிய இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார், "ஆற்றின் அளவும், அசையும் நற்புலமும், வீற்றுவளம் சுரக்கும் அவன் நாடுபடு வல்சியும் கேளினி" (மலைபடுகடாம் ; 67-94) என வழி காட்டுவது காண்க.

இவ்வாறு வேங்கடம் முதல், குமரி வரையான தமிழகத்தை அறிந்ததோடு, கங்கைக் கரை அரசியல் நிகழ்ச்சிகளையும் அறிந்தவர், புலவர் மட்டும் அல்லர். தமிழகத்துக் குடிமக்களில் சிலரும் அது செய்துள்ளனர் ; அங்கெல்லாம் சென்றும் வந்துள்ளனர்.

குடமலை நாட்டு மறையோன் ஒருவன், வேங்கடம் சென்று, திருமாலின் நின்ற கோலத்தையும், திருவரங்கம் சென்று திருமாலின் கிடந்த கோலத்தையும் கண்டு, பாண்டி நாட்டு மண்ணிலும் அடியிட்டுள்ளான். (சிலம்பு : காடுகாண் : 15-55).

தலைச்செங்கானத்து மாடல மறையோன், மாதவ முனிவர் மலைவளம் கொண்டு, குமரியம்பெருந்துறையில் நீராடித் தென்னவன் தலைநகர் மதுரைக்குச் செல்லவும், (சிலம்பு : அடைக்கலம் : 13-16) பின்னர், ஆங்கிருந்து புகார் நகர் சென்று, ஆங்குள்ளார்க்கு மதுரையில் நடந்தன கூறினமையால், நிகழ்ந்த கேடுகளுக்குக் கழுவாய் தேட,

கங்கை ஆடச்சென்று, கங்கைக் கரையில் செங்குட்டுவனைக் கண்டுள்ளான் (சிலம்பு ; நீர்ப்படை ; 69-110)

வஞ்சியில் நடப்பன அனைத்தையும், இமயம் முதல் குமரிவரையான நாவலந்தீவில் அரசோச்சும் அரசுகள் அனைத்தும் உடனுக்குடன் அறிந்துகொள்ளும் வகையில், அச்செய்திகளை அறிந்து அறிவிக்கும், அப் பல்வேறு நாட்டு ஒற்றர்களும், வஞ்சி மாநகரில் வந்து குழுமி ஒற்றறிந்து வந்துள்ளனர். (சிலம்பு : காட்சி : - 73-74)

பழந்தமிழ்ப் புலவர்களும், மக்களும் தமிழகம் முழுவதுமே மட்டுமல்லாமல், கங்கைக் கரைவரையும் சென்று வந்தமைக்கான இத்தகைய அகச்சான்றுகள் எண்ணற்றன இருக்கவும், அவற்றை நம்ப மறுக்கும் திருவாளர் பி. டி. எஸ் அவர்கள், தம்முடைய தமிழர் வரலாற்று நூலில், "கி. மு. ஏழாம் நூற்றாண்டில், காந்தார நாட்டில் வாழ்ந்த பாணினி (பக்கம் ; 113, 118) எழுதிய இலக்கணத்திற்கு விளக்கமும், விரிவுரையும் எழுதிய காத்தியாயனர் ஒரு தென்னாட்டவர் ஆவர் (பக்கம் : 135) என்றும், அதுபோலவே, கி. மு. நான்காம் நூற்றாண்டில், மௌரியப் பேரரசு கண்டு, சந்திரகுப்தனை அதன் அரியணையில் அமர்த்திய சாணக்கியன் தமிழகத்துக் காஞ்சியைச் சேர்ந்தவன் (பக்கம் ; 142, 143, 325) என்றும், அச் சாணக்கியனின் சமகாலத்தவனும், (பக்கம், 327) கங்கைக் கரை நாளந்தாப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரிந்தவனும் (பக்கம் : 615) ஆகிய நாகார்ஜுனன், சாணக்கியனைப் போலவே காஞ்சியைச் சேர்ந்தவன் (பக்கம் : 325) என்றும் கூறியுள்ளார்.

கி. மு. ஏழாம் நூற்றாண்டில், ஒரு தென்னாட்டவர், காந்தாரம் சென்று ஆசிரியப் பணிபுரிந்தது நம்பக்கூடிய உண்மையாகிறது. அதுபோலவே, கி. மு. நான்காம் நூற்றாண்டில் தொண்டை நாட்டுப் பாலாற்றங்கரையைச் சேர்ந்த இருவரில் ஒருவர், கங்கைக் கரையில் ஒருபேரரசை நிறுவி, அதன் முதல் அமைச்சர் ஆகவும், பிறிதொருவர், அக்கங்கைக்கரையில் அமைந்த ஒரு பல்கலைக்கழகத்துப்

பேராசிரியராகப் பொறுப்பேற்றுக் கொண்டது, நம்பக்கூடிய உண்மை ஆகிறது. ஆனால், அவர் முடிவுப்படி, கி. பி. நான்கு அல்லது ஐந்தாம் நூற்றாண்டில், அதாவது, அவர் கூறிய மேற்படி நிகழ்ச்சிகள் நிகழ்ந்த காலத்துக்கு 1200 ஆண்டுகளுக்குப் பிற்பட்ட காலத்தில், தமிழகத்துப் புலவர்கள், மேலைக்கடல் முசிறிக்கும், கீழ்க்கடல் மதுரைக்கும் இடையிலான தமிழகத்துக்கு உள்ளேயே உலாவந்தனர் என்பது மட்டும் நம்ப இயலாத ஒன்றாகத் தெரிகிறது அவருக்கு!

ஆக, அவர் கூற்றைக் கருத்துக் குருடானவர் கூற்றாகக் கொள்வதல்லது, முத்தமிழ்ச் சங்கங்கள் இருந்ததை மறுக்கும் உண்மைக் கூற்றாகக் கொள்வது பொருந்தாமை அறிக.

''அகத்தியனார் காலத்துக்கு முன்னர், எண்ணற்ற புலவர்கள் வாழ்ந்திருக்க வேண்டும். காரணம், அவர்கள் பாடிய எண்ணற்ற பாக்களை முன்னதாகப் படித்து உணராமல், தமிழ் இலக்கியத்திற்கான இலக்கணத்தை அவர் எழுதியிருக்க முடியாது. ஆனால், இறையனார் அகப் பொருள் உரையாசிரியரால், அப்புலவர்கள் இருந்தது பற்றிய செய்தி கூடக் குறிப்பிடப்படவில்லை''. (பக்கம் : 233)

முச்சங்கங்கள் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர், பி.டி.எஸ். அவர்கள் காட்டும் காரணங்களுள் ஐந்தாவது காரணம் இது.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் என்பதுதான் மரபு. ஓர் இலக்கணம் எழுதப்படுகிறது என்றால், அதற்கு இலக்கியமாக அமையவல்ல எண்ணற்ற பாக்கள், அது எழுதப்படுவதற்கு முன்னர்ப் பாடப்பட்டே இருக்கவேண்டும். அவ்வகையில், அகத்தியம் எழுதப்படுதற்கு முன்னர் எண்ணற்ற தமிழ்ப் பாடல்கள் பாடப்பெற்றிருந்தன என்பதும் உண்மை.

தமிழ்ப் பாக்கள் தோற்றத்தின் பிற்பட்ட கால எல்லை, கி. மு. 1000 ஆகும் என்பதையும், தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர் 500 ஆண்டுகள் அளவில், எண்ணில் அடங்காப் பாடல்கள் பாடப்பெற்றிருக்க வேண்டும் என்பது, ஒரு நடுநிலை மதிப்பீடு என்பதையும், திருவாளர் பி.டி.எஸ். அவர்கள் ஏற்றுக்கொண்டுள்ளார். (பக்கம் 70, 71) அது கூறும் அவரே, தொல்காப்பிய இலக்கணத்துக்கு இலக்கியமாகத் திகழ்ந்த, அப்பாடல்கள் அனைத்தும், அத் தொல்காப்பியத்துக்கு விளக்கம் அளித்த உரையாசிரியர்கள் காலத்துக்கு முன்பே, ஒன்றுகூடக் கிடைக்காத அளவு அழிந்துபோய்விட்டன. இதையும் திருவாளர், பி.டி.எஸ் அவர்கள் உணர்ந்துள்ளார்கள் (பக்கம் : 70)

தொல்காப்பிய இலக்கண விதிகளுக்கு ஏற்புடைய எடுத்துக்காட்டினைக் காட்டமாட்டாது இடர்ப்படும் உரையாசிரியர்கள், தொல்காப்பியர் காலத்துக்கு முன்பு இருந்த புலவர்கள் பற்றியோ, அவர் பாடல்கள் பற்றியோ குறிப்பிட்டுள்ளனரா என்றால் இல்லை. தொல்காப்பிய உரையாசிரியர்கள், தொல்காப்பியத்துக்கு முன்பு பாடப் பெற்ற பாக்கள், பாடிய புலவர்கள் பற்றிக் குறிப்பிடாமையைக் காரணம் காட்டித், தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர்ப் புலவர்களே இல்லை என்ற முடிவுக்கு வந்து விட்டாரா திரு. பி.டி.எஸ். அவர்கள் என்றால், இல்லை. தொல்காப்பிய உரையாசிரியர்களே அது செய்யாதிருக்கும் போது, அவர்களுக்கு நனிமிகப் பிற்பட்ட காலத்தவராய களவியல் உரைகாரர், தமிழ்ச்சங்கம் பற்றி எதுவும் கூற வில்லை என்பதைக் காரணம் காட்டி, தமிழ்ச் சங்க அமைப்பு குறித்து ஐயம் கொள்வது, "வேதத்தில் ஆலமரம் குறிப்பிடப் படவில்லை. ஆகவே வேதகாலத்தில் ஆலமரமே இல்லை" என்பது போலும் அறிவொடு பொருந்தா வாதமாம்.

எட்டுத் தொகைப் பாடல்கள், கடைச்சங்க காலத்துப் புலவர்களால் பாடப்பெற்றவை என்கிறது களவியல் உரை. ஆனால் புறநானூற்றின் முதல் பாடலே, அக்களவியல்

உரையால் முதல் சங்கத்தவராகக் கூறப்பட்ட முடிநாகராயர் பாடியதாம். அதுபோலவே, களவியல் உரையால், இடைச் சங்கத்தைச் சேர்ந்தவர்களாகக் கூறப்பட்டவர்கள் பாடிய பாடல்கள் சிலவும் இவ்வெட்டுத் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன. நற்றிணை 105, 228 பாடல்கள், இடைச் சங்கத்தைப் புரந்தவர்களில் ஒருவனான முடத்திருமாறன் பாடியனவாம். மேலும், முடத்திருமாறன், தன்னுடைய பாட்டு ஒன்றில், "வில்" என்ற தமிழ்ச் சொல் இருக்க "சாபம்" என்ற சமஸ்கிருதச் சொல்லைத் தேவை இன்றி ஆண்டுள்ளான். "வெறிகொள் சாபத்து எறிகணை" (நற்றிணை : 228) (தமிழர் வரலாறு : பக்கம் : 234)

முச்சங்கங்கள் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத் திருவாளர், பி.டி.எஸ். அவர்கள் காட்டும் காரணங்களுள் ஆறாவது காரணம் இது.

ஒரு கால அளவில் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாகும் இத்தொகை நூல் எனக் கூறப்படும் ஒரு தொகை நூலில், எத்தொகை நூல் தொகுக்கப்பெற்ற காலத்துக்குப், பலநூறு ஆண்டுகள் கழித்து வாழ்ந்த புலவர்கள் பாடிய பாக்கள் இடம் பெறுவதும் இயலாது; அவ்வாறு இடம் பெற்றிருக்கும் ஒரு தொகை நூலுக்கு, அத்தகு பாடல்களைப் பாடிய புலவர்களின் காலத்துக்கு முற்பட்ட காலத்தை வகுப்பதும் முறையாகாது;

ஒரு கால அளவில் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாகும், இத்தொகை நூல் எனக் கூறப்படும் ஒரு தொகை நூலில், அது தொகுக்கப்பட்ட காலத்துக்கு முற்பட்ட காலத்தே வாழ்ந்த புலவர்கள் பாடியனவாகக் கூறப்படும் சில பாடல்கள் இடம் பெறுவது தவறாகாது; அது இயலக்கூடிய ஒன்றும் ஆம். அத்தொகை நூலுக்கு, அந்த ஒரு சில பாடல்களைப் பாடிய புலவர்களின் காலத்துக்குப் பிற்பட்ட காலத்தை வகுப்பதிலும் முரண்பாடு எதுவும் இல்லை.

கடைச்சங்க காலத்துப் புலவர்கள் பாடிய பாக்களையே பெருமளவில் கொண்டு, முதல் சங்க, இடைச்சங்க காலத்தவர் பாடிய பாக்களில் ஓரிரண்டைக் கொண்டிருக்கும் எட்டுத் தொகை நூல்களைத், தலைச்சங்க காலத்துக்கும், இடைச் சங்க காலத்துக்கும் கொண்டு செல்வதுதான் நம்ப முடியாத ஒன்று; மாறாக, அவற்றைக், கடைச்சங்க காலத்து நூலாகக் கொள்வதில் நம்ப இயலாதது எதுவும் இல்லை,

ஆகவே, இக்காரணம் காட்டி, தமிழ்ச்சங்கங்களின் அமைப்பு குறித்து ஐயம் கொள்வது முறையாகாது.

சமஸ்கிருதச் சொற்கள், அகத்தியர் காலத்திலேயே, ஓரளவு தமிழில் இடம் பெறத் தொடங்கிவிட்டன: அகத்திய, தொல்காப்பியச் சூத்திரங்களிலும் ஒருசில சமஸ்கிருதச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. இதைத், திருவாளர். பி. டி. எஸ். அவர்களும் உணர்ந்துள்ளார் (பக்கம் : 213). சமஸ்கிருதச் சொற்கள், தமிழில் இடம்பெறத் தொடங்கிவிட்டமையினாலேயே, ""வடசொல்கிளவி, வட எழுத்து ஓரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"" எனத், தொல்காப்பியர் விதி வகுக்கவும் செய்துள்ளார், ஆகவே, முடத்திருமாறன் பாடலில், ஒரு வட சொல் இடம் பெற்றிருப்பது, முச்சங்க அமைப்பு குறித்து ஐயப்படுவதற்கு ஆதாரமாகாது.

கடைச்சங்கம் நிறுவிய பாண்டிய அரசர்களில், மூவர் மட்டுமே புலவர்களாவர் எனக் கூறுகிறது, இறையனார் களவியல் உரை. ஆனால், தொகை நூல்களை ஆராய்ந்து நோக்கியபோது, பாண்டியர் வழிவந்தவர்களில், கீழே குறிப்பிடப்பட்டிருக்கும் பதினொருவர், புலவர்களாக விளங்கியது தெரிகிறது. 1) ஒல்லையூர்த் தந்த பூதப் பாண்டியன் (புறம் : 71; அகம் : 25) 2) கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி (புறம் : 102 ; நற்றிணை : 121) ; 3) ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன், (புறம் : 183) ; 4) தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம் : 72) 5) உக்கிரப் பெருவழுதி (அகம் : 26 ; நற்றிணை : 63)

6) பாண்டியன் மாறன் வழுதி (நற்றிணை : 67, 301) 7) அறிவுடை நம்பி (நற் : 15, குறுந் : 230; அகம் : 373) 8) பாண்டியன் பன்னாடுதந்தான் (குறுந் : 270) 9) மாவை மாறன் (குறுந் : 270) 10) பூதப்பாண்டியன் பெருங்கோப் பெண்டு (புறம் : 246) 11) அண்டர் மகன் குறுவழுதி (குறுந் : 345 : அகம் : 150, 228) (பக்கம் : 235)

முச்சங்கங்கள் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் காட்டும் காரணங்களுள் ஏழாவது காரணம் இது.

பாண்டியர் குலப்புலவர்கள், இப்பதினொருவர் மட்டும் அல்லர்; பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் (குறுந் : 156; அகம் : 373) நல்வழுதியார் (பரிபாடல் : 12) என்ற மேலும் இருவர் கூட உள்ளனர்.

கடைச்சங்கம் நிறுவிய பாண்டியர் நாற்பத்தொன் பதின்மரில், கவியரங்கேறினார் மூவர் எனக் கூறும் அதே களவியல் உரை, கடைச்சங்கம் இருந்து தமிழாராய்ந்த புலவர்கள் நாற்பத்தொன்பதிமர் என்றும், அவர்கள் உள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார் என்றும் கூறுகிறது. அந்த 449 புலவர்கள் பாடியவற்றுள், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் அடங்கியுள்ளன (பக்கம் : 231) ஆனால், இந்தக் கூத்து, வரி, சிற்றிசை, பேரிசைகளைப் பாடிய புலவர்களைக் கணக்கில் கொள்ளாது, ஏனைய கடைச்சங்க நூல்களைப் பாடிய புலவர்களை மட்டும் கணக்கிட்டால், அவர்கள் நானூற்று எழுபதின்மர் உள்ளனர். கூத்து, வரி, சிற்றிசை, பேரிசைகளையும் பாடிய புலவர் களையும் சேர்த்துக் களவியல் உரை கூறும் புலவர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும், இருபத்தொரு புலவர் அதிகமாக உள்ளனர்.

ஆக, இதுபோலும் எண்ணிக்கையில், சிறுசிறு தவறுகள் இடம் பெற்றுவிடுவது இயல்பே. அது கொண்டே முச்சங்க அமைப்பில் ஐயம் கொள்வது வலுவான வாதமாகாது.

எட்டுத் தொகை நூல்களாகத் தொகுக்கப்பெற்ற இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட செய்யுட்களில், புலவர்களின் பேரவை ஒன்று தொடர்ந்து இருந்து வந்தது என்பதை உணர்த்தும், ஒரு சொற்றொடரோ அல்லது ஒரு சொல்லோ இடம் பெறவில்லை. அதுபோலும் பேரவை ஒன்று இருந்திருந்தால், "எதிர்த்து வந்து நிற்கும் பகைவர்களை வெற்றி கொள்ளத் தவறுவேனாயின், சிறந்த புகழும் உயர்ந்த புலமையும் வாய்ந்த மாங்குடி மருதரைத் தலைவராகக் கொண்ட, உலகுள்ளளவும் நிலைத்து நிற்கும் பெரும்புகழ் வாய்ந்த புலவர்களால், என்நாடு, பாடப் பெறுவது இல்லாது போவதாக" என்ற தன் வஞ்சின உரையில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், அதைக் குறிப்பிட்டிருப்பன். அவன் குறிப்பிடவில்லை. ஆகவே, அவன் காலத்தில், தமிழ்ச்சங்கம் என்ற ஓர் அமைப்பு இடம் பெறவில்லை; அல்லது, புலவர்கள் கூடிய அவை, சங்கம் என்ற பெயரால் அப்போது அழைக்கப்படவில்லை என்று கொள்ளலாம். மேலும், அவன் வஞ்சின உரையில் இடம் பெற்றிருக்கும், "மாங்குடி மருதன் தலைவனாக" என்ற தொடர், கடைச்சங்கத்தின் தலைவர் நக்கீரர் என்ற பொது நம்பிக்கையையும் பொய்யாக்கிப் போட்டு விடுகிறது. (தமிழர் வரலாறு: பக்கம்: 238-39)

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக என் நிலவரை".

—புறம் : 72

முச்சங்கங்கள் இருந்தன என்பது நம்ப இயலாத ஒன்று என்ற தம் கருத்துக்குத், திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் காட்டும் காரணங்களுள் எட்டாவது காரணம் இது.

கற்க வேண்டியவற்றைக் கற்று, அவை அளித்த அறிவால் நிரம்பப்பெற்றவர்தம் கல்விச் செல்வம், சொற்களையும்,

அச்சொற்கள் உணர்த்தும் பொருள்களையும், ஐயம் திரிபு அற: ஆராய்ந்து முடிவு காணவல்ல பேரறிவாளர் கூட்டத்தால், மேலும் விரிவும் விளக்கமும் பெறும்.

''கற்றறிந்தார் கல்வி விளங்கும்: கசடறச்
சொல்தெரிதல் வல்லார் அகத்து'', —குறள்: 717.

கற்றவர்கள் கூடியிருக்கும் அவையில், ஒருவர், தாம் கற்ற கல்விச் செல்வத்தை, அக்கற்றவர்கள் அனைவரும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளும் வகையில் எடுத்துக் சொல்ல வல்லராயின், அவர், கற்றவர் எல்லாரினும், மிகக் கற்றவர் என உலகத்தவரால் போற்றப்படுவர்.

''கற்றாருள் கற்றார் எனப்படுவர்; கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்'' —குறள்: 722

கற்றவர்கள் கூடிய அவையில், தாம் கற்ற கல்வி நலத்தை, அக்கற்றவர்கள் ஏற்குமாறு விளங்கச் சொல்லித் தம்மினும் மிகந் கற்ற அக்கற்றவர்களிடம் காணலாம் மிக்க அறிவு நலத்தைப் பெற்றுக் கொள்வாராக.

''கற்றார்முன் கற்ற செலச்சொல்லித், தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்'' —குறள்: 724

மேலே எடுத்து வைத்த மூன்று குறட்பாக்களின் பொருளை உணர்ந்தார் ஒவ்வொருவரும், திருவள்ளுவர் காலத்துக்கு முன்னரே, கசடறக் கற்றுத் தேர்ந்த முதியோர் பலரும் ஒன்று கூடியிருக்கும் ஓர் அமைப்பு இருந்தது என்பதையும், புதிதாகக் கற்றுத் தேரும் ஒவ்வொருவரும், இம்முதிய கல்வியாளர் முன்னர்த் தாம் கற்ற கல்வி நலத்தை எடுத்துரைப்பதன் மூலமும், அம்முதிய கல்வியாளர் பால் காணலாம் மிக்க கல்வி நலத்தைத் தாம் பெறுவதன் மூலமும், அவர் கல்விச் செல்வமும் மேலும் செழுமை பெற; கற்றவர் எல்லாரினும் மிகக்கற்றவர் என்ற பெருமையினை அவரும் ஏற்கத்தக்க வழக்காறு நடைமுறையில் இருந்து வந்துளது

என்பதையும், எவ்வித ஐயத்திற்கும் இடம் கொடாமல் ஏற்றுக்கொள்வர்.

அத்தகைய முதிய கல்வியாளர்கள் கூடி இருக்கும் இடத்திற்கு, வள்ளுவர், "சான்றோர் குழாம்" (840) என ஓரிடத்தில் பெயர் சூட்டியிருப்பினும், ஏனைய இடங்களில் எல்லாம் "அவை" என்ற பெயரையே சூட்டியுள்ளார். "அவை" (711) "நல்லவை" (719, 278) "நல்லார் அவை" (729) என்ற தொடர்களைக் காண்க.

தாம் கற்ற கல்வியின் அளவை, தம் நாவளத்தால் வெளிப்படுத்த, நல்லோர் கூடியிருக்கும் அவைக்குச் சென்ற ஒருவர், யாது காரணத்தாலோ, அது செய்ய மாட்டாது தளர்ந்து போகும் நிலையில், அவரின் இயலாமை வெளித் தெரியாவாறு மறைத்துவிடுவதோடு, அவர் சொல்ல நினைத்ததைச் சொல்லி முடிப்பதற்கும் துணை புரிந்து, அவரைச் சொல்ல வைத்து, நல்வழியில் நடைபெறச் செய்யும் நல்லோர் பலர் ஒன்று கூடி இருக்கும் ஓர் அமைப்பு, பழந் தமிழ்க் காலத்தே இருந்ததை, மலைபடுகடாமும் உறுதி செய்கிறது. அத்தகு அமைப்புக்கு, அது சூட்டியிருக்கும் பெயரும் "அவை" என்பதே,

"நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து
வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச்,
சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி,
நல்லிதின் இயக்கும் அவன் சுற்றம்".

—மலைபடுகடாம் : 77 - 80

பண்டைத் தமிழகத்தில், கற்றுவல்ல நல்லோர் குழுக்களைப் போலவே, வேறுசில குழுக்களும் இருந்தன; வலியரால் நலிவுற்றும், வறுமையால் மெலிவுற்றும் வந்து அணுகுவார் முறையீடு கேட்டு அறம் வழங்கும் அறவோர்கள் குழுவும் பண்டு இருந்தது; அரசனைப் பிரியாதிருக்கும், ஐம்பெருங்குழு, எண் பேராயம் உள்ளிட்ட அரசியல் குழுவும்

பண்டு இருந்தது; கூத்தாடுபவரையும், அது கண்டு களிப்பாரையும் கொண்ட குழுவும் இருந்தது. அவ்வாறு பலர்கூடிக், குழுவாக இருக்கும் நிலை அத்தனைக்கும், அக்காலத்தில் வழங்கிய பெயர் "அவை" என்பதே. "உறந்தை அவையத்து அறம்நின்று நிலையிற்று" (புறம் : 39) "அறங்கெழு நல்லவை உறந்தை" (அகம் : 93) "உறந்தை நாளவை" (அகம் : 226) "முரசு குழங்கு தானை மூவரும் கூடி அரசவை இருந்த தோற்றம்" (பொருநராற்றுப்படை : 54 - 55) "கூத்தாட்டவைக் குழாம்" (குறள் : 332) என்ற தொடர்களைக் காண்க.

கடைச்சங்கத்துக்குத் தலைமை வகித்த புலவர்களாக, இறையனார் களவியல் உரை கூறுவோரில், பெருங்குன்றூர் கிழார், நக்கீரர் பாடல்களிலும், "அவை" என்ற சொல் இடம் பெற்றுளது. சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பாடிய பெருங்குன்றூர் கிழார் பாட்டில் "சான்றோர் இருந்த அவை" (புறம்: 266) என்ற தொடரிலும் நக்கீரரின் அகநானூற்றுப் பாட்டில், "அறங்கெழு நல்லவை உறந்தை" என்ற தொடரிலும், அது இடம் பெற்றிருப்பது காண்க.

ஆக, அரசவை, அறங்கூறவை, கூத்தாட்டவைகளைப் போலவே, கற்றுவல்லார் கூடிக், கல்வி ஆய்வு செய்யும் அவையும் பண்டைத் தமிழகத்தில் இருந்தது என்பது உறுதி ஆகிறது. ஆகவே, "முறையாக அமையும் கலைக்கழகம் என்ற எண்ணமே நவீன காலத்தைச் சேர்ந்தது. ஆகவே, அத்தகு அமைப்பைப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னர்க் கொண்டுபோவது, மிகப் பெரும் காலக்கணிப்பு வழுவாகும்" (பக்கம் ; 233) என்ற, திரு. பி. டி. எஸ். அவர்களின் கூற்று பண்டைய வரலாற்று உண்மைகளைப் பழுதற உணராமையால் கொண்ட தவறான முடிவாகும்.

மேலும், பலர் கூடியிருக்கும் ஓர் அமைப்பை, வழி நடத்திச் செல்ல, அவர்களுக்குள்ளாகவே ஒருவர் இருக்க வேண்டியது இன்றியமையாதது. அவ்வாறு வழிநடத்திச்

செல்வோர்க்கு இட்டு வழங்கும் பட்டமே "தலைவர்" என்பது. "நிலைமக்கள் சால உடைத்தெனினும், தானை, தலைமக்கள் இல்வழி இல்" (குறள் : 770) "கோடியர் தலைவ!" (பொருநராற்றுப்படை : 57) "கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ" (மலைபடுகடாம் : 50) என்ற தொடர்களைக் காண்க.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன்னுடைய பாட்டில் "மாங்குடி மருதன் தலைவனாக... புலவர் பாடாது வரைக" என்ற தொடரை ஆண்டுள்ளான் என்றால், அவன் காலத்தில் புலவர் பலர் கூடிய ஓர் அமைப்பு இருந்தமையும், அதற்கு மாங்குடி மருதன் தலைமையேற்று இருந்தமையும் ஐயத்திற்கு இடமின்றி உறுதி ஆகின்றன. உண்மை நிலை இதுவாகவும், அவன் பாட்டில் "சங்கம்" என்ற சொல் இடம் பெறாமை ஒன்றை மட்டுமே கொண்டு, அவன் காலத்தில் தமிழ்ச்சங்கமே இல்லை எனத், திரு. பி.டி.எஸ். அவர்கள் கூற்று ஏற்புடையதாகாது.

கடைச்சங்கத்தின் ஆயுட்காலமாகக் கூறப்பட்ட 1850 ஆண்டு வரையும் நக்கீரர் ஒருவரே தலைவர் எனக் களவியல் உரை கூறவில்லை. அது கூறியிருப்பதெல்லாம், கடைச் சங்கம் இருந்து தமிழாராய்ந்தார், சிறு மேதாவியரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையரனாரும், பெருங்குன்றூர் கிழாரும், இளந்திருமாறனும், மதுரை ஆசிரியர் நல்லநீதுவனாரும், மதுரை மருதன் இளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப" என்பதே. இத்தொடர் மூலம், நாம் உணரக்கூடியதெல்லாம், கடைச் சங்கத்தின் தலைவராக, நாற்பத்தொன்பது புலவர்களும் இருந்தனர். அவர்களுள் பெயர் அறியப்பட்ட எண்மரில் நக்கீரரும் ஒருவர் என்பது மட்டுமே. இவ்வுண்மை நிலைகளை உணராத காரணத்தால், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்திலும், கடைச்சங்கத் தலைமை ஏற்றிருந்தவர் நக்கீரரே என்ற தவறான முடிவு கொண்டுவிட்டார்,

திருவாளர். பி.டி.எஸ். அவர்கள். அதனால், "தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாட்டில் வரும், 'மாங்குடி மருதன் தலைவனாக' என்ற தொடர், மூன்றாம் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் நக்கீரர் என்ற நம்பிக்கையின் பொய்ம்மையைக் காட்ட துணைபோவதாகிறது" (பக்கம் : 239) எனக் கூறவேண்டிய அவல நிலைக்கு ஆளாகிவிட்டார் திருவாளர், சீனிவாச அய்யங்கார் அவர்கள்.

ஆக, மேலே எடுத்துவைத்திருக்கும் விளக்கங்களால், பத்துப்பாட்டு எட்டுத்தொகைப் புலவர்கள் காலத்தில், புலவாகள் கூடிய பேரவை ஒன்று இருந்தது என்பதும், அப்பேரவைக்கு அவ்வப்போது தலைமை தாங்கிய, சிறு மேதாவியார், சேந்தம்பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்கிழார், இளந்திருமாறன், நல்லந்துவனார், நக்கீரர் முதலாம் நாற்பத்தொன்பது புலவர்களில் ஒருவராகத், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தில், மாங்குடி மருதனார் தலைமை தாங்கியிருந்தார் என்பதும், தெளிவாக்கப்பட்டன.

அதுமட்டுமன்று; மூவேந்தர் தலைநகர்களாக, முறையே வஞ்சியும், உறந்தையும், மதுரையும் இருப்பினும், தமிழால் பெருமை பெற்றது என்ற சிறப்பினைப், புலவர்கள், மதுரைக்கு மட்டுமே வழங்கியுள்ளனர். காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் என்ற புலவர், குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் என்ற சோழனையும், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்ற பாண்டியனையும் ஒரே பாட்டில் ஒருசேர வைத்துப் பாராட்டும் நிலையில், தாம் பிறந்த மண்ணுக்குரிய சோழன் தலைநகரை "அறந்துஞ்சு உறந்தை" என்று மட்டுமே பாராட்டிவிட்டு, பாண்டியர் தலைநகரைத் "தமிழ் கெழுகூடல்" என, மதுரையின் தமிழ் மணக்கப் பாராட்டி யிருப்பது காண்க (புறம் ; 58)

அதுபோலவே, முடியுடை வேந்தர் மூவரையும், வள்ளல்கள் எழுவரையும் சிறுபாணாற்றுப்படையாம்

தம்முடைய ஒரே பாட்டில், நிரலே வைத்துப் பாராட்டும் நிலையில், சேரர் தலைநகரை, ''வருபுனல் வாயில் வஞ்சி'' (50) என்றும், சோழர் தலைநகரை, ''ஓடாப்பூட்கை உறந்தை'' (83) என்றும் கூறிப் பாராட்டிய, இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார், பாண்டியர் தலைநகரைப் பாராட்டுமிடத்து மட்டும், ''தமிழ் நிலைபெற்ற தாங்கரும் ''மரபின் மகிழ்நனை மறுகின் மதுரை'' (67) என, மதுரையின் தமிழ் மணம் பரப்பும் பெருமையினைப் பாராட்டியிருப்பதும் காண்க. இதனால், தம் காலப் புலவர்களுக்குப் பரிசு அளித்துப் புரப்பதில், மூவேந்தர்களும் ஒன்றுபட்டே இருந்தனர்; அதேபோல், மூவேந்தர்களைப் பாராட்டுவதில் புலவர்களும் ஒன்றுபட்டே இருந்தனர் என்றாலும், அப்புலவர்களை ஒன்றுகூட்டித் தமிழ் வளர்த்தது மதுரை மட்டுமே; புலவர்கள் ஒன்றுகூடியிருந்து தமிழ் ஆராய மதுரையை மட்டுமே தேர்ந்தெடுத்தனர் என்பது தெளிவாகிறது.

மதுரையில், தமிழ்ப்புலவர் பேரவை இருந்து, தமிழாராய்ந்து வந்துளது என்பதற்கு இவைபோலும் சிறு சிறு தொடர்களாம் அகச்சான்றுகளே அல்லாமல், அப்பேரவை இருந்தமையினை நிலைநாட்டும் வலுவான, தெளிவான அகச்சான்றுகளும் இல்லாமல் போய்விடவில்லை;

மதுரையின் ஒரு பகுதியாகவே கருதப்படும் முருகன் கோயில் கொண்டிருக்கும் திருப்பரங்குன்றத்தைத் தம்முடைய அகப்பாட்டு ஒன்றில் (59) ''சினமிகு முருகன் தண்பரங்குன்றம்'' எனக் குறிப்பிட்டுள்ளமையாலும், தம் பெயருக்கு முன்னர்த், தம் தந்தையின் பெயரையும், அப்பெயருக்கு முன்னர், மதுரையின் பெயரையும் இணைத்துக்கொண்டு, மதுரை மருதன் இளநாகனார் எனப் பெயர் சூட்டிக் கொண்டிருப்பதாலும், மதுரையில் நிலைத்த குடியினராவர் என்பதை உறுதி செய்துவிட்ட மதுரை மருதன் இளநாகனார் அவர்களே, கலித்தொகையில் ஓரிடத்தில் (மருதக்கலி : 2 : 2-5), வையை ஆற்றின் பெருவெள்ளத்தால் மோதப்

படுவதல்லது, பகையரசர் தம் படை வெள்ளத்தால் மோதப் படுவதை அறியாத மதுரை, என மதுரையின் பெருமை பாராட்ட வந்த நிலையில் வையையைக் குறிப்பிடும்போது, புலவர்களின் பாக்களாம் புகழினைப் பெற்ற வையை, "புலவர் வாய்ச் சிறப்பெய்தி இருநிலம் தார் முற்றியது போலத் தகைபூத்த வையை" எனக் குறிப்பிட்டுள்ளார். பிறிதோரிடத்தில் (மருதக்கலி : 3 : 3-5) மதுரையைக் குறிப்பிடுங்கால், நல்லன அல்லாத சொற்களை என்றும் கேட்டறியாத காதுகளாகிய விளை நிலத்தில், பழம்பெரும் புலவர்கள் பாயவிட்ட பழம்பெரும் பாடல்களாம் நீர்பாய, நாவளம்மிக்க நாவாகிய ஏர் கொண்டு உழும் உழவராம் புலவர் பெருமக்கள் புத்தம் புதிய பாக்களை விளைவித்து உண்டுவாழும், வையையின், வெள்ளத்தால் சூழப்பட்ட மதுரை எனக் குறிப்பிட்டுள்ளார்.

"வல்லவர், செதுமொழி சீத்த செவி செறுவாக,
முதுமொழி நீராப், புலன் நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனலூர்."

மதுரை மாநகரில் இடங்கொண்ட புலவர் தம் பேரவையை, இளநாகனார் பாராட்டியுள்ளார் என்றால், அவர் மதுரை மண்ணின் மகன்; ஆகவே, அதில் தற்புகழ்ச்சியாக, இல்லாத ஒன்றைக் கூறியிருக்கவும் கூடும் என வாதிட்டு, அந்த அகச்சான்றுகளில் குறை காணவும் கூடும்.

பாண்டியரின் குலப்பகைவர்களில் ஒருவர் சேரர்; அச்சேரர் குலத்து வந்த பெருங்கடுங்கோ என்ற பேரரசனே மதுரை மாநகரையும், அம்மாநகர் வாழ் பெருமக்கள், புலமை நலம் சான்ற தம் நாவில் பிறக்கும் புதுப்புதுப் பாடல்களில் பொதிந்து கிடக்கும் சொல்லின்பம், பொருள் இன்பங்களை உளங்கொண்டு மகிழும் காட்சி நலத்தையும் கனிகூர்ந்து பாராட்டியுள்ளார், தம்பாட்டு ஒன்றில்,

(பாலைக்கலி : 34 : 17-18) "நீண்மாடக் கூடலார், புலன் நாவில் பிறந்தசொல் புதிது உண்ணும்பொழுது";

ஆக, புலவர்கள் ஒன்றுகூடித் தமிழ் ஆராய்ந்த ஒரு பேரவை, மதுரையில் பண்டு இருந்தது என்பது ஐயமற உறுதி செய்யப்பட்ட ஒன்றாகிறது.

புலவர் பலர், தம்முள் ஒருவரைத் தேர்ந்து கொண்டு ஓர் அவையாக இருந்து, மதுரையில் தமிழ் ஆராய்ந்து வந்தது, இத்துணைத் தெளிவாக உறுதிப்பட்ட உண்மை நிகழ்ச்சியாக இருக்கவும், அதன் இயக்கம் குறித்துத், திருவாளர் பி.டி.எஸ். அவர்கள் ஐயங்கொண்டதற்கு, இறையனார் களவியலுக்கு இன்றுள்ள உரை, நக்கீரரால் எழுதப்பட்டதே எனத் தவறுதலாகக் கொண்டுவிட்டதே அடிப்படைக் காரணமாய் அமைந்துவிட்டது.

இறையனார் களவியலுக்கு, நக்கீரர் எழுதிய உரை ஒன்றும் இருந்திருக்க வேண்டும். ஆனால் இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் உரை, அவர் உரை அன்று; பழந்தமிழ்ப் பாடல்கள் எண்ணற்றன அழிந்து போனமை போலவே, அவர் உரையும் அழிந்து போயிருக்க வேண்டும். இப்போது கிடைத் திருக்கும் உரை, அவரினும் பிற்பட்ட காலத்தில், பிறிதோர் ஆசிரியரால் எழுதப்பட்ட உரையாகும்.

தொல்காப்பியம், பொருளதிகாரம் மரபியல், "வினையின் நீங்கி, விளங்கிய அறிவின் முதல்வன் கண்டது முதல் நூலாகும்" (94) என்ற சூத்திரத்திற்கான விளக்க உரையில், பேராசிரியர், அவர்கள் "கடைச்சங்கத்தாருள், களவியல் பொருள் கண்ட கணக்காயனார் மகனார், நக்கீரர், இடைச்சங்கத்தார்க்கும்கடைச்சங்கத்தார்க்கும்நூலாயிற்றுத், தொல்காப்பியம் என்றார். பிற்காலத்தார்க்கு உரை எழுதினோரும் அது கூறி கரிபோக்கினார்" எனக் கூறியுள்ளார். இதிலிருந்து, கடைச்சங்க காலத்தில், நக்கீரர் எழுதிய உரையின் வேறாகப், பிற்காலத்தே வேறு ஓர் உரையும் எழுதப்பட்டுளது என்பது தெளிவாகிறது. ஆக

இப்போதுள்ள உரை, நக்கீரரால் எழுதப்பட்டது அன்று என்ற முடிவிற்கு, அவ்வுரையே சான்று பகர்கிறது: களவியல் ஏழாம் சூத்திரத்தின் விளக்க உரையில், அச் சூத்திரத்தில் இடம் பெற்றிருக்கும், "இருவரும் உள்வழி அவன் வரவு" என்ற தொடரில் வந்திருக்கும் "வரவு" என்ற சொல் பற்றிய ஆய்வு மேற்கொண்டு, சொல்லிலக்கண விதிப்படி, "செலவு" என்ற சொல் அல்லவோ வந்திருக்க வேண்டும்? அதற்கு மாறாக, "வரவு" என்ற சொல் வந்திருக்கிறதே என்ற வினாவினை எழுப்பி, அதற்கான இலக்கண அமைதி கூறி விட்டு, அதற்குச் சான்றாக, நக்கீரர் பாடிய அகநானூற்றுப் பாடல் ஒன்றில் (36) "தூண்டில் வெட்டுவன் வாங்க வாராது" எனவரும் தொடர் எடுத்தாளப்பட்டு, "என்று சான்றோர் சொல்லியது" எனக் கூறப்பட்டுள்ளது. அவ்வுரை நக்கீரர் எழுதிய உரையாயின், தம்முடைய பாட்டையே எடுத்தாண்டு, "என்று சான்றோர் சொல்லியது" எனத் தம்மைத், தம்மின் வேறுபட்ட ஒருவராகக் கூறியிருக்க மாட்டார். ஆகவே, அத்தொடர் விளக்கம் ஒன்றே, அது நக்கீரரால் எழுதப் பட்டது அன்று; மாறாக, அப் பாட்டைப் பாடிய நக்கீரரை, எடுத்துக் காட்டவல்ல சான்றோராக மதித்த பிற்காலத்தவர் ஒருவரால் எழுதப்பட்டது என்பதை உறுதி செய்கிறது.

இந்த விளக்கத்தைத், திருவாளர் அய்யங்கார் அவர்கள் அறியாதிருக்கவில்லை. செந்தமிழ் தொகுதி : 4; பகுதி: 7ல் 1906 ஆம் ஆண்டு இதழில், திருவாளர், மு. இராகவையங்கார் அவர்கள், "இளம்பூரணர்" என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில், இதுபற்றிய விளக்கம் அளித்திருக்கும் பகுதியைத், தம்முடைய நூலில், திருவாளர், பி. டி. எஸ். அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார் (பக்கம் : 229), என்றாலும் இந்த விளக்கமும் அவருக்கு அமைதி தந்ததாகத் தெரிய

வில்லை. "திருவாளர், இராகவையங்கார் கொடுத்திருக்கும் சான்றுகள் ஓரளவு ஏற்புடைய என்றாலும், அவை போது மானவை அல்ல" என்றே முடித்திருப்பது காண்க (229)

இன்று கிடைத்திருக்கும் அகப்பொருள் உரை, காலத்தால் மிகமிகப் பிற்பட்டது; கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டது என்பதற்கான அகச்சான்றுகளும், அவ்வகப் பொருள் உரையிலேயே உள்ளன.

அகப்பொருள் கூறும் துறைகளுக்கு விளக்கம் அளிக்கும் உதாரணப் பாக்கள், தொல்காப்பியம் ஏற்றுக்கொள்ளப்பட்ட பாவினத்தைச் சேராத, அவர் காலத்துக்கு நனிமிகப் பிற்பட்ட காலத்தில் இடம் பெற்றுவிட்ட பாவினமாக இருப்பது ஒன்றே, அவ்வுரை, தொல்காப்பியத்தை இலக்கண மாக ஏற்றுக்கொண்ட கடைச்சங்க காலத்துக்குப் பிற்பட்டது என்பதை உறுதி செய்யப் போதுமானது.

மேலும், மேற்கோள்களாகக் காட்டப்பட்ட, அப்பாக் களின் பாட்டுடைத் தலைவன், நெல்வேலி வென்ற நெடு மாறன் என்றும், சிவநேயச் செல்வன் என்றும் கூறுகின்றன அப்பாக்கள். "நெறி செழு செங்கோல் நடா, நெடுமாறன்; நெல்வேலி வென்றான்" (109); "நெடுமாறன் வியன்முடி மேல் நின்றான் மணிகண்டம்போல் இருள் கூர்ந்து" (262) என்ற பாக்களைக் காண்க. நெடுமாறன் என்ற பெயர் உடைமையும், அவன் நெல்வேலிப் போர் வென்றமையும், சிவனிடத்தே அன்புடைமையும் கொண்டு, அவனைக், கி. பி. ஏழாம் நூற்றாண்டினரான திருஞான சம்பந்தரால் சைவனாக ஆக்கப்பட்ட, நின்றசீர் நெடுமாறனாக, ஆராய்ச்சியாளர் பலரும் கருதுவர். இவ்வகையால், கி. பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒருவனைப் பாட்டுடைத் தலை வனாகக் கொண்ட பாடல்களைத், துறைவிளக்கத்திற்கான எடுத்துக் காட்டுக்களாகக் காட்டும் இப்போதைய அகப் பொருள் உரை, அந்த ஏழாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட காலத்திலேயே எழுதப்பட்டிருக்க வேண்டும்.

திருவாளர். பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் இதை உணர்ந்துள்ளார்கள். "இறையனார் அகப்பொருள் அளிக்கும் துறைகளில் விளக்கங்களுக்காக, மேற்கோள்களாகக் காட்டப்படும் பாக்களின் பாட்டுடைத் தலைவனாகிய அரிகேசரி பாரங்குசன் என்பான், கி. பி. 750இல் ஆட்சி புரிந்திருந்த, வேள்விக் குடிச்செப்பேட்டிற்கு உரியோனின் தந்தைக்குப் பாட்டன் ஆவன். ஆதலின், அந்த அரிகேசரி, கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு உரியவன் ஆகிறான். அவன் ஏழாம் நூற்றாண்டிற்கு உரியன் ஆகவே, அவனைப் பாட்டுடைத்தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற பாக்களைத், தம் உரை விளக்க மேற்கோள்களாகக் காட்டும் இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டவராதலே வேண்டும் (பக்கம்: 229-30) என அவர் உரைத்தல் காண்க.

இன்றுள்ள அகப்பொருள் உரை, கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்ட காலத்திலேயே எழுதப்பட்டிருக்கும் என்பதை ஏற்றுக்கொண்டிருந்தும், பத்துப் பாட்டு, எட்டுத் தொகைப்பாடல்களில் இடம்பெறாத, "சங்கம்" என்ற சமஸ்கிருதச் சொல்லால், தமிழ்ச் சங்கங்கள் பெயர் சூட்டப்பட்டிருப்பது கொண்டு, அச்சங்கங்களின் உண்மை குறித்த, தம் ஐயப்பாட்டிலிருந்து, திருவாளர் பி. டி. எஸ். அவர்கள் விடுபட்டிலர். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாட்டில், (புறம்: 72) அவன் கூறும் புலவர் பேரவைக்குச், "சங்கம்" என்ற சொல்லால் கூடப் பெயர் சூட்டப்படவில்லை" (பக்கம்: 239) என அவர் கூறுவது காண்க.

"தமிழ்ச் சங்கம்" என்ற தொடர், அகப்பொருள் உரையில் மட்டுமே அல்லாமல், "ஞானசம்பந்தன் உரைசெய் சங்கம்மலி செந்தமிழ்கள் பத்து" என, தேவாரப் பாடல்களிலும் இடம் பெற்றுளது.

"சங்கம்" போலும் சமஸ்கிருதச் சொற்கள் தமிழில் இடம்பெறத் தொடங்கியது எப்போது; ஒரு குறிக்கோள்

குறித்துப் பலர் கூடும் ஓர் அவை, "சங்கம்" என்ற சொல்லால் அழைக்கப்பட்டது எப்போது? இந்த வினாவிற்கும் திருவாளர் பி. டி. எஸ். அவர்களே விளக்கம் அளித்துள்ளார்கள்.

"சமணர்களும், பௌத்தர்களும், கி. மு. நான்காம் நூற்றாண்டு தொடங்கி, தமிழகத்துள் நுழையலாயினர்: ஆயினும், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு அவர்கள் புறநகர்ச் சோலைகளிலேயே வாழ்ந்து வந்தனர். ஆகவே, தமிழர் உள்ளங்களை அவர்கள் ஆட்கொள்ள இயலவில்லை (பக்கம் : 246) என்று கூறிய அவர், "இயற்கையறிவு வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டு அமைக்கப்பட்ட ஒரு குழுவின், பம்பாய்ப் பிரிவின் வெளியீடுகளின் (Jouranl of the Bombay Branch Royal Society) 17வது தொகுதியை ஆதாரம் காட்டி மதுரையில், கி.பி. 470இல் "திராவிடர் சங்கம்" என்ற பெயரில் ஒரு சமண சங்கம் நிறுவப்பட்டதாகக் கூறியுள்ளார். (பக்கம் : 247)

சமண பௌத்தர்கள் மூலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில், தமிழகத்தில் நுழைந்துவிட்ட "சங்கம்" என்ற சொல், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட அகப்பொருள் உரையில் இடம் பெற்று விட்டதில் வியப்பே இல்லை. கி. பி. 620-ல் ஆட்சி புரிந்திருந்த மகேந்திரவர்மன் காலத்தவரும், வழிவழியாகச் சைவ சமயமே சார்ந்து வந்த குடும்பத்தில் வந்தவருமான, அப்பர் என அழைக்கப்படும் நாவுக்கரசர் அவர்களே, "நல்லாறு தெரிந்துணர, நம்பர் அருளாமையினால், கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினார்" என்றால், அக்காலத் தமிழர், வழிவழியாக ஆட்சியிலிருந்து வந்த, "அவை" என்ற தனித்தமிழ்ச் சொல்லைக் கைவிட்டு, "சங்கம்" என்ற சமஸ்கிருதச் சொல்லைத் தழுவிக் கொண்டதில் வியப்பு இல்லை.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதே, இன்றைய அகப்பொருள் உரை என்பது உறுதி செய்யப்பட்ட ஒன்றாகி

விட்ட நிலையில், அதில் கூறப்பட்டிருக்கும் தமிழ்ப் பேரவைகள், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலேயே தமிழ் மொழியில் இடம் பெற்றுவிட்ட, "சங்கம்" என்ற சமஸ்கிருதச் சொல்லால் அழைக்கப்படுவதைக் காரணம் காட்டி, நக்கீரர் காலத்தில் அமைக்கப்பட்ட புலவர் பேரவை அமைப்பில், ஐயம் கொள்வது அறிவொடு பட்டதாகாது.

---

## அதிகாரம் : XVII

# மக்கள் வாழ்க்கை
# கி. பி. முதல் ஐந்நூறு ஆண்டுகள் :

### பழந்தமிழர் முறை இன்னமும் வலுவாக நடைபெற்றது :

தங்களிடையே பிராமணர்கள் வாழத்தொடங்கிவிட்ட நிலையிலும், அகத்தியனாரும், தொல்காப்பியனாரும் ஆரிய நாகரீகத்தைத் தமிழ் நாட்டில் புகுத்த முயற்சி மேற்கொண்டு விட்ட நிலையிலும், மக்களில் பெரும்பகுதியினர், ஆரிய நாகரீகம், தங்களிடையே இடம் பெறாதது போலவே வாழலாயினர். பழங்காலத்தில், தங்கள் மூதாதையர் வாழ்ந்த அதே முறையில் வாழ்ந்தனர் ; காதல் கொண்டனர். அவர்களின் தொழில்கள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகியவற்றில், முன்னோர்களைக் கண்மூடிப் பின்பற்றினர். அதாவது, அவை சிறிதும் மாறுபடவேயில்லை. கீழே கொடுத்திருக்கும் எடுத்துக் காட்டுக்கள், கிறித்துவ ஆண்டு பிறப்பதற்கு முந்திய, எளிய சிற்றூர் வாழ்க்கை அழிவுறாமல், அப்படியே உளது என்பதை உணர்ந்துகொள்ளப் படிப்பவர்க்குத் துணை நிற்கும். சில நூற்றாண்டுகள் கழித்துச், சமஸ்கிருதக் கற்பனைப் பாடல்கள், தமிழர் அறிவை அடிமை கொண்டு, அவர்களின், அழகிய, இயற்கையோடியைந்த இனிய பாடல்களை அழிக்கத் தலைப் பட்டபோது கைவிட்டுவிட்ட, தங்களைச் சூழ உள்ள எளிய இயற்கைக் காட்சிகளிலிருந்தே தம் அகத்தூண்டுதலைத், தாம் பெற்றிருந்த அந்நிலையைச், சமஸ்கிருத நாகரீகத்தோடு தொடர்பு கொண்டுவிட்ட அந்நிலையிலும், தமிழ்ப்பாடல்கள் பெற்று வந்தன என்பதையும் அவை உணர்த்தும்.

### மலை நாட்டில் உணவு உற்பத்தி :

மக்களின் முக்கியத் தொழில், உணவு உற்பத்தி; அது பல இடங்களில் விளக்கப்பட்டுளது. "வேங்கை மரங்கள்

நிறைந்த, வெப்பம் மிக்க சிவந்த மேட்டு நிலத்தில், கார் காலத்துப் பெருமழையால் ஈரப்பக்குவப்பட்ட நிலத்தைக், கீழ்மண் மேல்மண்ணாகி நன்கு புழுதிபடுமாறு பலசால் உழுது, விதைத்து முளைத்து இளம்பயிராக இருக்கும்போது, காற்று உள் நுழைய வழிசெய்யவும், வருத்தமின்றிக் களை அகற்றவும், பயிர் நன்கு தழைப்பதற்கு இடம்தருமாறு, நிலத்து இறுக்கத்தை நெகிழ்விக்கவும் தாளி அடித்து, அது செய்ததன் பயனாய், பயிர் நன்கு செழித்து வளர்ந்திருக்கும் போது களை அகற்றிவிடவே, இலைகள் தழைத்துப் பெருகி, அண்மையில் முட்டை இட்ட பெண்மயிலின் அழகிய தோகை போலும் தோற்றம் வாய்ந்த கரிய தண்டுகள் நீண்டு, ஒரு சேரக் கதிர்விட்டு, கதிர்களின் அடியிலும், நுனியிலும், உள்ள மணிகள் ஒருசேர முற்றிக் காய்த்த வரகை அறுக்கவும், தினையைக் கொய்யவும், எள்கறுத்து எள்ளினங்காய் முற்றவும், வளமான கொடிகளில் வெள்ளவரைக் கொத்து, கொய்யும் நிலை எய்த, நிலத்தில் புதைத்துப் புளிப்பேறப் பண்ணிய மதுவைப் புல்வேய்ந்த சிறிய குடிசைகளில் அனைவர்க்கும் வழங்க, கொதிக்கும் நறுநெய்யில் வறுகடலை துள்ள, சோறு ஆக்கி முடிக்கும் அரிய காட்சி ஒரு பாட்டில் விளக்கப்பட்டுளது.

''வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ்சுவல்
கார்ப்பெயல் கலித்த பெரும்பாட்டு ஈரத்துப்,
பூழி மயங்கப், பல உழுது, வித்திப்,
பல்லி ஆடிய, பல்கிளைச் செவ்விக்
களைகால் கழாலின், தோள்தொலிபு நந்தி,
பெண்மயில் புனிற்றுப் பெடை கடுப்ப நீடிக்,
கருந்தாள் போகி, ஒருங்கு பீள் விரிந்து,
கீழும் மேலும் எஞ்சாமைப் பலகாய்த்து,
வாலிதின் விளைந்த புதுவரகு அரியத்,
தினைகொய்யக், கவ்வை கறுப்ப, அவரைக்
கொழுங்கொடி விளர்க்காய் கோட்பத மாக,
நிலம்புதைப், பழுனிய மட்டின் தேறல்,

புல்வேய் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து,
நறுநெய்க் கடலை இசைப்பச் சோறுஅட்டு''
—புறம் : 120 : 1-14

மலைநாட்டில், உழுது, உணவுப் பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டிய, இன்றியமையாத ஒன்று அன்று. உழுவது வேண்டாதே, உணவுப் பொருள் கிடைக்கும் நிலை கீழ்வரும் பாக்களில் விளக்கப்பட்டுளது. ''உழுவர் உழுது விளைவிக்க வேண்டாமல், தாமே விளையும் உணவுப் பொருட்கள் நான்கு உள. முதலாவது, சின்னஞ்சிறு இலைகளைக் கொண்ட மூங்கில் நெல்; இரண்டாவது, பலா, இனிய சுவையுடைக் கனிகளைக் காய்த்துத் தொங்கவிடும்; மூன்றாவது, கொழு கொழு என வளர்ந்திருக்கும், வள்ளிக் கொடி, கிழங்குகளை மண்ணுள் விட்டிருக்கும்; நான்காவது, அழகிய நிறம் வாய்ந்த, குரங்குகள் பாய, மலைகள், தன்னிடை கட்டப்பட்டிருக்கும் அடைகளிலிருந்து தேனைச் சொரியும்''.

''உழவர் உழாதன நான்குபயன் உடைத்தே ;
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே ;
இரண்டே, தீஞ்சுவைப் பலவின் பழம்ஊழ்க் கும்மே ;
மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே;
நான்கே, அணிநிற ஓரி பாய்தலின் மீதழி ந்து
திணிநெடும் குன்றம் தேன்சொரி யும்மே''.
புறம் : 109 : 3 - 8

''கிளைகள்தோறும், மலை முகடுகள் தோறும் தேனடைகள் கட்டப்பட்டுத் தொங்க, பலா முதலாம் மரங்களில் பழங்கள் குலைகுலையாகத் தொங்க, மலைகளிலிருந்து அருவிகள் மாலைபோல் உருண்டோடிவர, கொல்லைகள் தோறும் வரகு, சாமை, தினைபோலும் பதினாறுவகைக் கூலங்கள் பெருகிவிளைய, இம்மலைநாடு, எக்காலத்தும் பெருவளம் உடையது என, அதன்கண் பல்லாண்டு வாழ்ந்து, அதைப் பிரிந்து போக நேர்ந்தபோது வியந்து பாராட்டும் பெருமையுடையது''.

> "பிரசம் தூங்கப், பெரும்பழம் துணர
> வரைவெள் ளருவி, மாலையின் இழுதரக்,
> கூலம் எல்லாம் புலம்புக, நாளும்
> மல்லற்று அம்ம இம்மலைகெழு வெற்புஎனப்
> பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாடு"
>
> —நற்றிணை : 93 : 1 - 5.

**வேடன் வாழ்க்கை :**

மலைநாட்டுவழியில், இருளில் வருவதால் நேரும் இடையூறுகளுக்கு ஆளாகும் வகையில் இரவில் வாரற்க என்று, ஓரிளம்பெண், தன் காதலனுக்கு எடுத்துக் கூறும் அறிவுரையினை நினைவூட்டும் வகையில், வேடன் ஒருவன் வாழ்க்கையில் இடம் பெறும் பல்வேறு நிகழ்ச்சிகளை, ஒரு புலவர், விளக்கியுள்ளார். "சிலிர்த்து நிற்கும் மயிர்கள் அடங்கிய கழுத்தினை உடைய ஆண்பன்றி, உணவின்மையால் தோவாய்வற்றி இளைத்து விட்ட பெண் பன்றியுடன் சென்று, முற்ற வளர்ந்து தினைக் கதிர்களை அளவின்றித் தின்று அழித்துவிட்டது கண்ட கானவன், மலைவழியில், செல்லுதற்கு அரிய புழை அருகே பதுங்கியிருந்து, அம்பு எய்து கொன்ற, வெள்ளிய கொம்புகளைக் கொண்ட அந்த ஆண் பன்றியை, அணி செய்து கொண்ட கரிய கூந்தலை உடைய அவன் மனைவி, அறுத்துத், தன் சுற்றத்தார் வீடுகளுக்கெல்லாம் சென்று பகுத்துக் கொடுக்கும் உயர்ந்த மலை நாட்டுக்கு உரிய தலைவனே கடுஞ்சினம் கொண்ட களிற்றியானை, புலியின் வருகையை எதிர் நோக்கிக் காத்து நிற்கும் இரவில், நீ இங்கு வருதலை, நீ அஞ்சுகின்றாயல்லை; ஆனால், நான் பெரிதும் அஞ்சுகின்றேன்; ஆகவே, பாம்பு அடங்கியிருக்கும், ஈரம் பட்ட புற்றைக், கரடிக் கூட்டம் கார்மேகம் போலச் சூழ்ந்துகொண்டு, பறித்து எடுக்கும், மலையகத்துச் சிறுவழியில் இனி வாராதே"

> "பிணர்ச்சுவல் பன்றி, தோல்முலைப் பிணவொடு
> கணைக்கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்,

கல்லதர் அருப்புழை அல்கிக், கானவன்
வில்லில் தந்த வெண்கோட்டு ஏற்றைப்
புனையிரும் கதுப்பின் மனையோள், தொண்டிக்
குடிமுறை பகுக்கும் நெடுமலை நாட!
உரவுச்சின வேழம், உறுபுலி பார்க்கும்
இரவின் அஞ்சாய்; அஞ்சுவல்; அரவின்
ஈரளைப் புற்றம் காரென முற்றி,
இரைதேர் எண்குஇனம் அகழும்
வரைசேர் சிறுநெறி, வாரா தீமே;''

—நற்றிணை: 336

ஆற்றுப்பள்ளத்தாக்கில்:

ஆற்றுப்பள்ளத்தாக்கு நிலத்தில் எழுந்த ஒரு பாடல்: ''பொய்கையில் மீன் தேர்ந்துண்ட நாரைகள், நெற்கதிர்ப் போரில் சென்று உறங்கும்; நெய்தல் வளருமளவு வளத்தால் அழகு பெற்ற வயலில், நெல் அறுவடை செய்யும் உழவர், முகை அவிழ்ந்து மலர்ந்த இதழ்களையுடைய ஆம்பலின் அகன்ற இலையாலான தொன்னையில், மதுவுண்டு, தெளிந்த கடலலை எழுப்பும் சீரான ஒலிகளின் தாளத்திற்கு ஏற்ப ஆடி மகிழும், நன்செய் வளமிக்க நாட்டிற்கு உரிய வேந்தே! பழம் உண்ணுவான் விரும்பி, ஆகாயத்தில் உயரப் பறந்து, மலைக் குகைகள் எதிரொலிக்கப் பேரொலி எழுப்பியவாறே சென்று, ஆங்குள்ள பழமரங்கள், பருவம் கழிந்து போகக், காய்ப்பு மாறிவிட்டது கண்டு ஏமாந்து, வருந்தி, வறிதே மீளும் பறவைகளைப் போல, வருவார்க்கு வரையாது வழங்குவன் என்ற உன் புகழ்துரத்த வந்து, உன் புகழ்பாடும் நான், வறிதே மீளக் கடவனோ?''

''பொய்கை நாரை, போர்வில் சேக்கும்
நெய்தலம் கழனி நெல்லரி தொழுவர்,
கூம்புவிடு மென்பிணி அவிழ்ந்த ஆம்பல்
அகலடை அரியல் மாந்தித், தெண்கடல்

படுதிரை இன்சீர்ப் பாணி தூங்கும்
மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந!
பல்கனி நசைஇ, அல்கு விசும்பு உகந்து,
பெருமலை விடரகம் சிலம்ப முன்னிப்,
பழனுடைப் பெருமரம் தீர்ந்தெனக், கையற்றுப்
பெறாது பெயரும் புள்ளினம் போல, நின்
நசைதர வந்து, நின் இசைநுவல் பரிசிலேன்
வறுவியேன் பெயர்கோ ?''

—(புறம் : 209 : 1-12)

ஒரு தொழில் நடைபெறும் நிலத்தின் பொதுவான குறிக்கோள்களும், மிகமிக எளிய நிகழ்ச்சிகளும், தமிழ்நாட்டுப் புலவர்களிடமிருந்து, அப்புலவர்கள், பிற்காலச் சமஸ்கிருத இலக்கியக் கற்பனைப் பாடல்களின் செல்வாக்கின் அழுத்தமான பிடியுள் சிக்கிக்கொள்வதற்கு முன்னர், நனிமிக இனிய பாடல்களைப் பெற்றிருந்தன. இவ்வாறு பாடுகிறது ஒரு பாட்டு :

'' மடை அடைத்திருந்த, பல்லாற்றானும் மாண்புற்ற குளத்துநீர், மடைதிறந்துவிட்ட வழி, அக்குளத்தினின்றும், அந்நீரோடு புறம் போந்து, கால்வாயை அடைந்து, சென்று திரும்பிய, பெரிய கொம்பினையுடைய வாளைமீன், அக்கால் வாயிலிருந்து, சேறுபட்டுக் கிடக்கும் வயலுள் புகுந்து ஓடி, ஆங்கு உழுதுகொண்டிருக்கும் எருமைக் கடாக்களின் காற்சேறுபட்ட புள்ளிகளையுடைய மேற்புறத்தோடு, நிலத்தைச் சேறுபட மாறிமாறி உழும் உழவர்களின் கைக் கோலுக்கும் அஞ்சாது செருக்குற்று, சேற்றின்மேல் வரப்பு ஓரமாகவே ஓடி, மேற்கொண்டு போகமாட்டாது தடையுற்றுப் போய், அவ்வரப்படியிலேயே புரளத் தொடங்கும்''.

''மாண் பெருங்குளம் மடைநீர் விட்டெனக்,
கால் அணைந்து எதிரிய கணைக்கோட்டு வாளை,

அள்ளல் அம்கழனி உள்வாய் ஓடிப்
பகடுசேறு உதைத்த புள்ளிவெண் புறத்துச்
செஞ்சால் உழவர் கோல்புடை மதரிப்
பைங்கால் செறுவின் அணைமுதல் புரளும்''

—நற்றிணை : 340 8-8

ஆற்றுப் பள்ளத்தாக்கு வாழ்க்கைமுறைபற்றிய இன்னொரு செய்யுள் இதோ : ''செந்நெருப்பு கொழுந்து விட்டு எரிவது போன்ற செந்தாமரை மலர்களின் இடையிடையே, கதிர் முற்றிய செந்நெல்லின் தாளை அரிந்து அரி அரியாகப் போட்டுப் பணி முடிந்த உழவர், தங்களுக்குக் கள்குடங்களைக் கொண்டுவரும் வண்டி, சேற்றில் ஆழ்ந்து விடின், அதுபோக்கச் சிறந்த கரும்புத்தடிகளை அடுக்கி இடைமடுக்கும், பாயும் புனலால் வளம் மிக்க ஊரின் தலைவனே! நெற்பொரிகள் போலும், புன்கம்பூ மலர்கள் உதிர்ந்து கிடக்கும் அகன்ற நீர்த்துறைகள் அழகு பெற, ஒளிவீசும் நெற்றியும், நல்லமணம் மிக்க மலர்கள் சூடிய, காண்பதற்கு இனிமை தரும் திரண்ட கூந்தலும், மாவடுக்கள் போலும் கண்களும், மார்பில் அசையும் முத்துச் சரமும், இவற்றால் ஆம் நுண்ணிய அழகும் உடையாளோர் இளம் பரத்தையொடு, இடையறாது ஓடிக்கொண்டே இருக்கும் புனலில், நேற்று விளையாடி மகிழ்ந்தனை என்று ஊரார் பலரும் கூறுவர்; ஆகவே, உறுதியாக, நீ, நாணம் இழந்தவனே''.

''எரிஅகைந் தன்ன தாமரை இடையிடை
அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்,
கள்கொண்டு மறுகும் சாகாடு அளற்றுறின்,
ஆய்கரும்பு அடுக்கும் பாய்புனல் ஊர :
பெரிய, நாணிலை ; மன்ற ; பொரி எனப்
புன்குஅவிழ் அகன்றுறைப் பொலிய, ஒள்நுதல்,
நறுமலர்க் காண்வரும் குறும்பல் கூந்தல்,
மாழை நோக்கின், காழ் இயல் வனமுலை

எஃகுடை எழில்நலத்து ஒருத்தி யொடு, நெருநை
வைகுபுனல் அயர்ந்தனை''.

அகம் : 116 : 1-10.

கடற்கரை நிலப்பரப்பில் :

கடற்கரை நிலப்பரப்பாம் நெய்தல் நிலத்தின் முக்கியத் தொழில், மீன் பிடித்தல். அத்தொழில், பாடல்புனையும் தம் புலமைக்கு ஏலா இழிவுடைப் பொருளாம் என்று புலவர் கருதவில்லை. ''கதிரிட்டு முறுக்கித் திருத்தமாகச் செய்யப் பட்ட வலிய கயிற்றால் பின்னப்பட்ட பெரிய பெரிய மீன்பிடி வலைகளை, இடிபோல் முழங்கும் அலைகள் ஓயாக் கடலில் இடும்பொருட்டு, அவ்வலைகள் நிறைய ஏற்றப்பட்ட தோணியைப், பாகர்களால் பிணித்துக்கொண்டு செல்லப்படும். அடக்குதற்கு அரிய களிற்றைப் போலப், பரதவர் செலுத் துவர்...மலர்கள் உதிர்ந்து கிடக்கும் புதுமணல் பரந்த கானற்சோலையில், புன்னை, தன் நுண்ணிய மகரந்தப் பொடிகளை, ஓயாது வீசிக் கொண்டேயிருக்கும், கீழ்க் காற்று வந்து மோதுந் தோறும், நாரைகளின் வெண்ணிற முதுகில் தூவித் தூர்க்கும் தெளிந்த கடற்கரைக்கண் நிற்கும் கண்டல் மரங்களை வேலியாகக் கொண்ட ஊர்''.

''வடிக்கதிர் திரித்த வன்ஞாண் பெருவலை,
இடிக்குரல் புணரிப் பெளவத்து இடுமார்,
நிறையப் பெய்த அம்பி, காழோர்
சிறையரும் களிற்றின், பரதவர் ஒய்யும்:
போதவிழ், புதுமணல் கானல் புன்னைநுண் தாது
கொண்டல் அசைவளி தூக்குதொறும், குருகின்
வெண்புறம் ஓசிய வார்க்கும், தெண்கடல்
கண்டல் வேலிய ஊர்'':

—நற்றிணை : 74 : 1-4 : 6-10

பின்வரும் அழகிய செய்யுளில், ஒரு மீனவப் பெண், தன் உறவினர், விரைந்து வீடு திரும்பமாட்டார் என்பதைக் கூறித்,

தன் காதலனைத் தன் மனையில் இரவு தங்கிச் செல்லுமாறு அழைக்கிறாள். "கீழ்க்கடலிலிருந்து எழுந்து, நல்ல செந்நிறக் கதிர்களைப் பரப்பிப் பகற்பொழுதை ஒளிமயமாக்கிவிட்ட ஞாயிறு மேற்கு மலையில் மறைந்துவிடும், துன்பத்தைத் தூது போல் முன்போக்கிப் பின்னர் வந்து தங்கிவிட்ட துயர்தரு மாலைப்பொழுதை, ஒளிவீசும் வளை அணிந்த மகளிர் தத்தம் மாளிகைகளில், எதிர்கொண்டு வரவேற்க, மீன் கொழுப்பை உருக்கி எடுத்த நெய்வார்த்து ஏற்றிய ஒளிவிளக்குகளின் பேரொளி வீசும், நீல நிறக்கடலில் எழும் அலைகள் மோதும் கரையிடத்தே உள்ள, ஆரவாரப் பேரொலி எப்போதும் ஒலித்துக்கொண்டே இருக்கும் எம் பாக்கத்தில் இன்று இருந்து, எம்மனையில் எம்மோடு தங்கியிருப்பின், உனக்கு ஏதேனும் குறைபாடு உளதாமோ? சிவந்த நூலால், வளைத்து வளைத்து முடியிட்டுச் செய்த அழகிய வலை கேடுற்றுப் போமாறு அறுத்துக்கொண்டு ஓடிவிட்ட, எதிர்ப்படும் எதையும் கொல்லவல்ல சுறா மீனைத் தம் வல்லமையெல்லாம் காட்டி, அகப்படுத்திக் கொள்ளாது எம் சுற்றத்தார் வறிதே வருவார் அல்லர்; ஆகவே தங்கிச் சென்மோ".

"குணகடல் இவர்ந்து குரூஉக்கதிர் பரப்பிப்
பகல்செழு செல்வன் குடமலை மறையப்
புலம்புவந்து இறுத்த புன்கண் மாலை
இலங்குவளை மகளிர் வியன்நகர் அயர,
மீன்நிணம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்,
நீல்நிறப் பரப்பில் தயங்குதிரை உதைப்பக்
கரைசேர்பு இருந்த கல்என் பாக்கத்து
இன்றுநீ இவணை ஆகி, எம்மொடு
தங்கின் எவனோ? தெய்ய; செங்கால்
கொடுமுடி அவ்வலை பரியப் போகிய
கோட்சுறாக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயாது எமர் வாரலரே"

—நற்றிணை: 215

நெய்தல் நிலத்து மக்களின் வாழ்க்கை வாய்ப்புகள், ஒரு பாட்டில் விளக்கப்பட்டுள்ளன: "நெல்லை அறுவடை செய்யும் பெரிய உழவர், செங்கதிர் பரப்பிக் காயும் ஞாயிற்றின் வெயில் வெப்பம் தாங்கமாட்டாத போது, தெளிந்த கடல் நீரில் பாய்ந்து களை தீர்வர். திண்ணிய மீன்பிடி படகாம் திமிலை உடைய வலிய பரதவர், உண்டார்க்கு உரம் ஊட்டும் மதுவுண்டு, இனிய குரவைக் கூத்தின் தாளத்திற்கு ஏற்ப ஆடித் திளைப்பர்: கடல் அலைகள் தூவும் தூவலால் தழைத்து வளர்ந்து புன்னையின் தேன்நிறைந்த மலர்களால் ஆன மாலை அணிந்த ஆடவர், ஒளிவீசும் வளை அணிந்த மகளிர்க்கு நீராடலில் வலக்கை கொடுத்து உதவுவர்; வண்டுகள் வந்து மொய்க்க மலர்ந்த, குளிர்ந்த நறுமணமே நாறிக்கொண்டிருக்கும் கானலில் தழைத்திருக்கும் கடல் முள்ளி மாலை அணிந்த வளை அணிந்த மகளிர், வானளாவ வளர்ந்திருக்கும் பனையின் நுங்கின் இனிய நீரும், பொதிவுற வளர்ந்திருக்கும் கரும்பின் சாறும், மணல் மேட்டில் நிற்கும் தென்னையின் இனிய இளநீரும் ஆகிய மூன்று நீரையும் கலந்து குடித்துவிட்டு, மழைநீர், ஆற்றுநீர், ஊற்றுநீர் என்ற முந்நீராம் கடல் நீரில் பாய்ந்து ஆடுவர்".

"நெல் அரியும் இருந்தொழுவர்,
செஞ்ஞாயிற்று வெயில் முனையின்,
தெண்கடல் திரைமிசைப் பாயுந்து;
திண்திமில் வன் பரதவர்
வெப்புடைய மட்டு உண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து;
தூவல் கலித்த தேம்பாய் புன்னை
மெல்இணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்,
எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து,
வண்டுபட மலர்ந்த தண்நறும் கானல்
முண்டகக் கோதை ஒண்தொடி மகளிர்

இரும்பனையின் குரும்பை நீரும்,
பூங்கரும்பின் தீஞ்சாறும்,
ஓங்குமணல் குவவுத்தாழைத்
தீநீரோடு உடன் விராஅய்
முந்நீர் உண்டு முந்நீர் பாயும்''

—புறம் ; 24 : 1-16

(''முந்நீர் உண்டு - (பனை நுங்கின் நீர், கரும்பின் சாறு, வெங்கின் இளநீர் - ) முந்நீர் (ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர்) பாயும்'' என்ற வரியில் அழகிய சொல்லோவியம் அமைந்திருப்பது காண்க)

தலைவனை, ஓர் இரவு தங்கித் தலைவிக்கு ஆறுதல் அளிக்குமாறு தோழி வற்புறுத்தும் ஒரு செய்யுள், நெய்தல் நிலத்து வாழ்க்கை நிலை, வாழ்க்கை முறைகள் பற்றிய மற்றொரு காட்சியைத் தருகிறது. மீன் உண்ணும் பசிய கால்களை உடைய வெண்ணிறக் கொக்குக்கூட்டம் செவ்வேள்முருகன் மார்பில் கிடந்து ஒளிவிடும் வெண் முத்தாரம்போல, செவ்வானத்தில் எழுந்து வரிசையாக பறந்து போமாறு, பகற்பொழுதை மெல்ல மெல்லக் கழித்து விட்ட ஞாயிறு, மேற்கு மலையில் சென்று மறைந்துவிட்டான். மிக்க நாணத்தையும் மெல்லிய சாயலையும் உடைய சிறியவ ளாகிய இவளோ, தன் சிறந்த அழகு கெடுமாறு, உன் பிரிவுக்கு ஏங்கி, அழகிய குளிர்ந்த கண் கலங்க ஓயாது அழத் தொடங்கிவிட்டாள். தலைவ! அதனாலும், உப்பங்கழியில் உள்ள சுறா மீன் குத்தியதால் புண்ணுற்ற கால்களையுடைய உன் கோவேறுகழுதை, நீர்நிறைந்து கறுத்துத் தோன்றும் நீண்ட கழியைக் கடக்கமாட்டாது மெலிந்துவிட்டது ஆதலாலும், வலிய வில்லேந்தி உன் உடன் வரும் வீரர் களோடு, இவ்விரவில் செல்லாது, இளைப்பாறி, பனைமரங்கள் ஓங்கி வளர்ந்திருக்கும் வெண்மணல் பரந்து கிடக்கும் தோட்டங்களில், தன் துணையை அழைப்பான்வேண்டி, அன்றில் அகவும் அவ்விடத்தில், சின்னம்சிறு பூங்கொத்துக்

களையுடைய நெய்தல் வளர்ந்துகிடக்கும், உப்பங்கழி சூழ்ந்த எங்கள் நாட்டின்கண், நீ தங்கிச் செல்வாயாக ; அவ்வாறு தங்கிச் செல்வதால் வருவதொரு கேடு ஏதேனும் உண்டோ ?''

''நெடுவேள் மார்பின் ஆரம் போலச்,
செவ்வாய் வானம் தீண்டி மீன்அருந்தும்
பைங்கால் கொக்கின் நிறைபறை உகப்ப
எல்லை பைபயக் கழிப்பிக், குடவயின்
கல்சேர்ந் தன்றே, பல்கதிர் ஞாயிறு ;
மதரெழில் மழைக்கண் கலுழ, இவளே
பெருநாண் அணித்த சிறுமென் சாயல்
மாண்நலம் சிதைய, ஏங்கி ஆனாது
அழல்தொடங் கினளே ; பெரும ; அதனால்
கழிச்சுறா எறிந்த புண்தாள் அத்திரி
நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந்து அசைஇ,
வல்வில் இளையரொடு எல்லிச் செல்லாது
சேர்ந்தனை செலினே, சிதைகுவது உண்டோ?
பெண்ணை ஓங்கிய வெண்மணல் படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்,
சிறுகுரல் நெய்தல் எம் பெருங்கழி நாடே''

—அகம் : 120

**மணல் பரந்த பாலையில் :**

வறண்ட பாலையில், வாழ்க்கைநிலை மிகவும் கடினமாம். ''தூய வெள்ளை ஆடையை விரித்து விட்டாற் போல் தோன்றுமாறு வெயில் விரிந்து காயும், கோடைப் பருவம் நீண்ட மலைச்சாரலில், கொடிய பசியுடைய செந்நாய், வாடிய மரையாவைக் கொன்று வேண்டுமட்டும் தின்று, விட்டொழித்த எஞ்சிய இறைச்சி, நெடுந்தொலைவில் உள்ள வேற்று நாட்டிலிருந்து, கடத்தற்கு அரிய

அப்பாலையைக் கடந்து செல்லும் வழிப்போவார்க்கு உண்ணும் உணவாகும் கொடுமை மிக்க, வெப்பம் மிகுந்த அரிய வழி''

''முகில் விரித்தன வெயில்அவிர் உருப்பின்
என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்,
ஒய்பசிச் செந்நாய், உயங்குமரை தொலைச்சி
ஆர்ந்தன ஒழிந்த மிச்சில், சேய்நாட்டு
அரும்சுரம் செல்வோர்க்கு வல்சி ஆகும்
வெம்மை ஆரிடை'' —நற்றிணை : 43 : 1-6

பாலை, தனக்கே உரிய இனிய அழகிய காட்சிகளைப் பெறாமலில்லை. ''வளைந்த சிறகினை உடைய பறவைகளின் உள்ளங்கால் சுவடுகள் வரிசை வரிசையாகப் பொருந்திய, நீர் வற்றிய இடங்கள்தோறும் மெல்லிய நுண்மணல் படிந்து கிடக்க, மெல்லென வீசும் வாடைக்காற்று வறண்டு மோதியதால், கரும்பின் வெண்ணிறப்பூ, புதல் தோறும் ஒருசேர விரிந்து, அரசனுக்கு வீசப்படும் கவரிபோல் ஆடி அழகு செய்ய, கொண்டல் கொண்டலான மேகங்கள் நீங்கிச் செல்வதால், மாறி மாறிக் கண் விழித்துக் காட்டுவதுபோல், ஞாயிறு தோன்றித் தோன்றி மறைய, பகற் காலம் கழிய, மாலைப் பொழுதொடு இராக்காலம் வந்து சேர்தலும், பனி விழுந்து கால் கொள்ளும்''.

''கொடும் சிறை
உள்ளடி பொறித்த வரியுடைத் தலைய
நீர்அழி மருங்கின் ஈரயிர் தோன்ற
வளரா வாடை உளர்புநனி தீண்டலின்,
வேழ வெண்பூ விரிவன பலவுடன்
வேந்துவீசு கவரியின் பூம்புதல் அணிய,
மழைகழி விசும்பின் மாறி ஞாயிறு
விழித்து இமைப்பதுபோல் விளங்குபு மறைய

> எல்லை போகிய பொழுதின் எல்உறப்
> பனிக்கால் கொண்ட பையுள் யாமம்'';
>
> —நற்றிணை : 241 : 1-10;

என்றாலும், மக்கள் பெருவாரியாக, அதைக் கடந்து செல்ல வேண்டியிருந்தும், பாலை, பெரிதும், பாழுற்றே இருந்தது: ''பாலை வழியைக் கடந்து செல்லும் மக்கள், அறுத்துப் போட்ட பிரண்டைக் கொடி, இடியால் தாக்குண்டு சிதறுண்ட பசிய பாம்பின் துண்டுகள் போல வழியருகே வறிதே வீழ்ந்து கிடக்கும் அப்பாலைக் காட்டில், உப்பு வணிகர் கூட்டம் விட்டுப்போன கல் அடுப்பில், வலிய வில்லை யுடைய ஆறலை கள்வர், ஊனை, மணம் உண்டாகப் புழுக்கி உண்பர்'':

> ''ஆறுசெல் மாக்கள் அறுத்த பிரண்டை
> ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப
> நெறிஅயல் திரங்கும் அத்தம், வெறிகொள
> உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பின்
> நோன்சிலை மழவர் ஊன்புழுக்கு அயரும்'':
>
> —அகம்: 119 : 5-9;

ஆடுமாடுகளின் மேய்புலமாம் முல்லை நிலம் :

வாழ்வதற்கு நனிமிக இனிய இடம் முல்லை: ''மழை கால் இறங்கிப் பெய்யும் மழைப் பருவத்துப், பெருமழை பெய்து ஓய்ந்த கடைசி நாளன்று, பனை நார் கொண்டு பல காலிட்டுப் பின்னிய மெல்லிய உறி, பால்பானையோடு ஒரு கையில் தொங்க, தீக்கடைகோல் முதலாம் கருவிகளை ஒரு சேர இட்டுச் சுருக்கிய தோல் பையையும், மழைக்கு மறைப் பாகும் பனை ஓலையாலான குடையையும் முதுகில் கட்டிக் கொண்டு, பால்விலை கூறி விற்றுச் செல்லும் இடையன், மேய் புலத்தில், சிறுசிறு துளிகளாக ஓயாது விழுந்துகொண்டே இருக்கும் மழைச்சாரல், தன் உடலின் ஒரு புறத்தை நனைத்துக்கொண்டிருப்பதும், பொருட்படுத்தாமல், கைக்

கோலை நிலத்தில் ஊன்றி, ஒரு காலை அதன்மேல் வைத்து, ஓய்வான நிலையில் நின்றவாறே, இதழ்களைக் குவித்து அவன் எழுப்பும் வீளை ஒலியைக் கேட்கும் ஆடுகள், பிறர்க்குரிய புலம் சென்று மேய்ந்துவிடாமல், அவ்வொலிக்கு மயங்கி, அவனைச்சூழ அடங்கி நிற்கும் அம்முல்லை நிலத்தில், இரவு நெடும் பொழுது ஆயினும் விருந்தினர் வந்துவிட்டால் மகிழ்ந்து வரவேற்பவளும், கணவன் கூறிய சொற்பிழையாது இல் இருந்து நல்லறம் ஆற்றும் கற்புடையாளும், மெல்லிய சாயலும் இளமை நலம் மாறா அழகுடையாளும் ஆகிய இல்லத்தரசி வாழ்கின்ற வீடு உளது''.

''வான் இடுபு சொரிந்த வயங்குபெயல் கடைநாள்
பாணி கொண்ட பல்கால் மெல் உறி,
ஞெலிகோல் கலப்பை அதளொடு சுருக்கிப்
பறிப்புறத்து இட்ட பால்நொடை இடையன்,
நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்பத்
தண்டுகால் வைத்த ஒடுங்குநிலை, மடிவிளி
சிறுதலைத் தொழுதி ஏமார்த்துஅல்கும்
புறவினதுவே, பொய்யா யாணர்
அல்லில் ஆயினும், விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே.''

— நற்றிணை : 142

முல்லையில், மிகவும் இன்பம் தரும் பருவம் இளவேனில், ''பருவவரவால் இலைகளெல்லாம் பழுத்து உதிர்ந்து போன பிடவமரத்துக் கிளைகளெல்லாம் அரும்பலர்ந்து நிறைந்து விட்டன; புதல்கள் தோறும் படர்ந்து கிடக்கும் முல்லைக் கொடிகள் பூத்துக்குலுங்கின; கொன்றை மரங்கள், பொன் போலும் மலர்களை ஈன்றன. காயாவின் சிறுசிறு கிளைகளில் நீலமணி போலும் பன்மலர்கள் நிறைந்துவிட்டன. இவற்றிற் கெல்லாம் காரணமான கார்காலம் தொடங்கிவிட்டது.

பெண்மான், மருண்டு மருண்டு விழிக்கும் அழகிய கண்களை உடையவாய தன் குட்டிகளோடு களர் நிலம் நோக்கி ஓடி விடவே, அவற்றின்பால் கொண்ட ஆராக்காதல் நெஞ்சோடு, அவற்றைத் தேடி அலையும் ஆண்மான் அதோ விரைகிறது! காண்பாயாக''.

''இலையில் பிடவம் ஈர்மலர் அரும்பப்,
புதல் இவர் தளவம் பூங்கொடி அவிழப்
பொன்எனக் கொன்றை மலர, மணிஎனப்
பன்மலர்க் காயா குறுஞ்சினை கஞலக்,
கார்தொடங் கின்றே காலை.........
.......................................
கழிப்பெயர் களரில் போகிய மடமான்
விழிக்கண் பேதையொடு இனன் இரிந்து ஓடக்
காமர் நெஞ்சமொடு அகலாத்
தேடூஉ நின்ற இரலை ஏறே''

—நற்றிணை : 242 : 1 - 5; 6 - 10

கேட்க இனிப்பன, முல்லைக்காட்டு ஒலிகள், ''தேனடைகள் கட்டப்பெற்றிருக்கும் நெடிய முடிகளையுடைய மலைச்சாரலில், குவிந்த இலைகளை நெருங்கக் கொண்ட முசுண்டையில், வானத்தில் விளங்கும் மீன் கூட்டம் போலக் காட்சி தருமாறு, வெண்ணிறப் பூக்கள் பூத்துக் குலுங்கும் நள்ளிரவின் நடுயாமத்தில், ஆட்டுக்குட்டிகளை, மழை மறைக்கும் ஓலைப் பாயை முதுகில் கொண்டவாறே, ஒரு சேரக் கொண்டு காத்துக்கிடக்கும் இடையன், இனிய மணம் கமழும் முல்லை மலர்களைத் தோன்றிப் பூக்களோடு, வண்டுகள் வந்து மொய்க்குமாறு தொடுத்த மாலையை, அதினின்றும் நீர்த் துளிகள் ஒழுக, தலையில் அணிந்து கொண்டு, குளிர் போக்க எழுப்பிய சிறுதீயில் தன் உள்ளங் கைகளைக் காய வைத்துக்கொண்டே, ஆட்டு மறிகளை விரட்டுவான் வேண்டி எழுப்பும் நீண்டஒலி, தினைப்புனத்தை

அழிக்கவரும் சிறிய கண்களை உடைய பன்றியின் பெருங் கூட்டத்தை விரட்டுவான் வேண்டி, அத்தினைப் புனத்தைக் காத்துகிடப்பார், அவை வருவது அறிந்து ஊதும், பெரிய கொம்பின் ஓசையொடு கலந்து வந்து ஒலிக்கும் முல்லைக் காட்டின் இடையே உள்ள நாடு''.

''தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய
குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய
வானெனப் பூத்த பானாள் கங்குல்,
மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்
தண்கமழ் முல்லை, தோன்றியொடு விரைஇ
வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன்,
ஐதுபடு கொள்ளி அங்கை காயக்
குறுநரி உளம்பும் கூர்இருள் நெடுவிளி,
சிறுதனி பன்றிப் பெருநிரை கடிய
முதைப்புனம் காவலர் நினைத்திருந்து ஊதும்
கருங்கோட்டு ஓசையொடு ஒருங்குவந்து இசைக்கும்'':

—அகம் : 94 : 1 - 11

''வட்டவட்டக் கண்களையும் கூரிய வாயலகையும் உடைய பெண் காக்கை, இளமையால் நடுங்கும் இறகுகளை யுடைய தன்குஞ்சுகளை அனைத்தவாறே தன் இனக்காக்கை களையும் கூவி அழைத்து, குறுகிய கால்களை நட்டுக் கட்டப் பெற்று, உணவுப் பொருட்களை நிறையச் சேர்த்து வைத்திருக் கும் மனைகளின் முன்புறத்தில் இட்டுவைத்திருக்கும், கருணைக் கிழங்கின் பொரிக்கறியொடு கலந்த, செந்நெல் அரிசியாலான வெண்சோற்றுத்திரளைத் தெய்வங்களுக்கு இடும் பலியொடு கவர்ந்து உண்ணக் கூடியிருக்கும்''.

'கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை,
ஒருங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளை பயிர்ந்து
கருங்கண் கருணைச் செந்நெல் வெண்சோறு

குருடைப் பலியொடு கவரிய, குறுங்கால்
கூறுடை நன்மனை குழுவின இருக்கும்''.
—நற்றிணை : 367 : 1 - 5

பொதுமக்களின் இவ்வாழ்க்கை விளக்கம் வறுமையில் வாடும் ஒரு வீட்டின் படப்பிடிப்போடு முடியும். ''சோறு ஆக்குதல், அறவே மறந்து போனமையால், தேய்வுறாது கட்டியது கட்டியபடியே கோடு உயர்ந்து நிற்கும் அடுப்பில், காளான்கள் பூத்துக் கிடக்க, உடலை வாட்டும் பசியால் வருந்திப், பால் வறண்டு போகவே, தோல் மெலிந்து, பால் வரும் துளையும் தூர்ந்து பயனற்றுப் போன முலையில் வாய் வைத்துச் சுவைக்குந்தோறும், பால் வாராமை கண்டு அழத் தொடங்கிவிடும் தன் மகவின் முகத்தைக் காணும்தோறும் நீரால் நிறைந்துவிடும் கண்களாகிவிடும் மனையோள்''.

''ஆடுநனி மறந்த கோடுஉயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉம் தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண்என்
மனையோள்''.
—புறம் : 164 : 1 - 7

## சிறு தொழில்கள் :

இக்கால அளவில், சிற்றூர்களில் இன்று காணப்படும் அத்தனைத் தொழில்களும் செயல்படவேண்டிய அளவுக்கு, வாழ்க்கைத்தரம் வெகுவாக முன்னேறிவிட்டது. இத்தொழில்கள், புலவர்களுக்கு நல்ல உவமைகளாக உதவலாயின, ''இரும்பைப் பயன்படுத்திப் பல கருவிகளை வடித்துக் கொடுக்கும் கொல்லன் உலைக்களத்தில், காய்ச்சிய இரும்பை விசைத்து அடிக்கும் சம்மட்டியின் அடிகளைத், தாங்கி உருக்குலைந்து போகாது நிற்கும் பட்டடைக்கல்லைப்,

பகைவரால் அழிவுற்றுப் போகா ஒரு பெருவீரனுக்கு உவமை கூறியுள்ளார் ஒரு புலவர்''.

''இரும்புபயன் படுக்கும் கருங்கைக் கொல்லன்
விசைத்துஎறி கூடமொடு பொருஉம்
உலைக்கல் அன்ன வல்லா ளன்னே'';

—புறம் : 170 : 15 - 17

மருத நிலத்தில் குளத்தின் அடைகரையில் வளர்ந்திருக்கும், அரம் போலும் முட்களை உடைய பிரம்புக் கொடி போலும் கொடியை உடைய ஆம்பலின், நீர் குறைய நீர் மட்டத்துக்குமேல் உயர்ந்து சுருண்டிருக்கும் இலை, அசைந்து அசைந்து வரும் வாடைக்காற்று வீசுந்தொறும், விரிந்து அடங்கும் காட்சிக்குக், கொல்லன் உலைக்களத்தில் காற்று அடிக்க விசைத்து இழுத்துவிடும் துருத்தியை உவமை காட்டியுள்ளார் ஒரு புலவர்''.

''பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்
அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி
அருவி ஆம்பல் அகலடை துடக்கி,
அசைவரல் வாடை தூக்கலின், ஊதுலை
விசைவாங்கு தோலின் வீங்குபு ஞெகிழும்'';

—அகம் : 96 : 3 - 7

தீ ஓங்கி எரிந்து அடங்கிய நிலையில், நெய்யில் பக்குவப் பட்டு மிதக்கும் இறைச்சித் துண்டுகளுக்குப் பருத்தி நூற்கும் பெண், கொட்டை நீக்கி அடித்துக்குவித்து வைத்திருக்கும் பருத்திக் குவியல்களை உவமையாக்கியுள்ளார் ஒரு புலவர்.

''பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன
நெருப்புச்சினம் தணிந்த நிணம்தயங்கு கொழுங்குறை''.

—புறம் : 125 : 1 - 2

இரட்டை இரட்டையாகக் கவைத்த கதிர்களைக் குற்றிப் புடைத்து எடுத்த வரகரிச்சோற்றையும், கால்நடைச்

சாணங்களால் ஆன எரு குவிந்து கிடக்கும் தெருவில், காலத்தே விளைந்திருக்கும் வேளையின் வெண் பூக்களை, வெள்ளிய தயிரில் மிதக்க விட்டு ஆய்ச்சியர் ஆக்கிய புளிக் குழம்பையும் வயிறார உண்டு அவரைக் காய்களைக் கொய்யும் தொழிலாளியைப் படம்பிடித்துள்ளார் ஒரு புலவர்.

''கவைக்கதிர் வரகின் அவைப்புறு ஆக்கல்,
தாதெரு மறுகில் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண்தயிர்க் கொளீஇ
ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை
அவரை கொய்யுநர் ஆர மாந்தும்''.

—புறம்: 215: 1-5

காண்பவர் கருத்தை ஈர்க்கும் தகுதியற்றதான இழி தொழிலும், புலவர்களின் கவியார்வத்தைத் தணித்துவிடவில்லை. ''ஊரில் விழாத் தொடங்கிவிட்டது. அப்போது பறை கொட்டுதல் போலும் பணி ஆற்ற வேண்டுவது அவன் கடமை: ஆகவே ஆங்கும் செல்ல வேண்டும். பிள்ளைப் பேற்றிற்கு உரிய காலம் மனைவிக்கு வந்து விட்டது. அப்போது உடனிருந்து அவளுக்கு உதவ வேண்டுவதும் இன்றியமையாதது; ஆகவே, வீட்டிற்கும் செல்ல வேண்டும், இதற்கிடையில் ஞாயிறும் மறையத் தொடங்கிவிட்டான். மழை பெய்யவும் தொடங்கிவிட்டது. இந்நிலையில் கட்டிலுக்குக் கயிறு பின்னும் தொழிற் கடமை மேற்கொண்டுவிட்ட அத்தொழிலாளி, அப்பணியை விரைந்து முடித்துவிட்டு மேற்கூறிய இருபணிகள் குறித்து விரையத் துடிக்கும் நிலையில், பின்னும் வார்கோத்த அவன் கைஊசி விரையும் விரைவினைச் சொல்ல இயலாது. அவ்விரைவினைத், தன்னை வெல்வார் யாரேனும் உளரேல் வருக என வஞ்சினம் கூறி வந்திருக்கும் வேற்றூர் வீரனோடு போரிட்டு வெல்லத் துடிக்கும், ஆத்திமாலை அணிந்த, அவ்வூர் வீரனின் உள்ள விரைவிற்கு உவமை காட்டியுள்ளார் ஒரு புலவர்''

"சாறுதலைக் கொண்டெனப், பெண்ஈற்று உற்றெனப்,
பட்ட மாரி, ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ!
ஊர்கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே":

—புறம் : 82

ஊரில் நிகழ இருக்கும் விழாக்களை ஊர் மக்களுக்கு அறிவிக்கும் அறிவிப்பாளர்களாகப் பழங்காலத்தில் குயவர்களும் பணிபுரிந்துள்ளனர். "அரும்பு கட்டிய கதிர் போல் தோன்றும், ஒளி வீசும் மலர்களைக் கொத்துக் கொத்தாக ஈனும் நொச்சி மாலை அணிந்து, ஆறுபோல் அகன்று நீண்ட தெருவில், ஊரில் உள்ளார் யாவரும் கேட்க, 'இவ்வூரில், இன்ன நாளில் இன்ன விழா நடைபெறும்; விழாவிற் பங்கு கொள்ள வருக' என அறிவித்துச் செல்லும் அறிவால் முதிர்ந்த குயவனே. ஆம்பல் நெருங்க வளருமளவு வளம்மிக்க வயல்களையும், பொய்கையையும் உடைய ஊருக்கு, விழா அறிவிக்கச் செல்லுவையாயின், அவ்வூர் மகளிரை, 'கூரிய பற்களும் அகன்ற அல்குலும் உடையீர்" என அவர் நலம் பாராட்டி அழைத்து, 'தெறித்து இசை எழுப்புவதற்கு ஏற்புடைய நரம்பு கட்டிய யாழில் பாடத்தகும் பாடல்களை இனிதாக இசைக்க வல்ல உங்களூர்ப் பாணன் செய்யும் துன்பங்களுக்குக் கணக்கில; அவன் உரைப்பன எல்லாம் மெய்யேபோல் தோன்றினும், அனைத்தும் பொய்யே! பொய்யை மூடி மறைத்து மெய்யேபோல் கூறுவதில் வல்லவன் அப்பாணன். ஆகவே, அவன் கூறுவதில் பெரிதும் விழிப்பாய் இருப்பீர்களாக' என இதையும் அறிவித்துவர இயலுமோ? அறிவித்துவர வேண்டுகிறேன் எனப், பெண் ஒருத்தி, குயவனைப் பார்த்துக் கூறியதாக ஒரு செய்யுள்:

"கண்ணி கட்டிய கதிர அன்ன
ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி,

ஆறுகிடந் தன்ன அகல்நெடும் தெருவில்,
சாறுஎன நுவலும் முதுவாய் குயவ!
இதுவும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ!
ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்துப்
பொய்கை ஊர்க்குப் போவோ யாகிக்,
கைகவர் நரம்பின் பனுவல் பாணன்
செய்த அல்லல் பல்குவ; வைஎயிற்று
ஐதுஅகல் அல்குல் மகளிர்! இவன்
பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே.

—நற்றிணை : 200

குயவன், ஒருவகையில் கோயில் பூசாரியாகவும் இருந்து பலி கொடுப்பதும் செய்வன். "பழமையும் வெற்றிச் சிறப்பும் வாய்ந்த மூதூரில், பரந்து அகன்ற ஊர் மன்றத்தில், விழாத் தொடங்குவதற்கு முன்னர், நீல மணி போலும் மலர்க் கொத்துக்களை உடைய நொச்சிமாலை அணிந்த, உருவாலும், உள் அறிவாலும் மூத்த குயவன், தான் இடும்பலியை உண்ணுமாறு, பலி உண்ணும் கடவுளையும், காக்கைகளையும் அழைப்பதைக் கூறுகிறது பிறிதொரு செய்யுள்.

"மணிக்குரல் நொச்சித் தெரியல் சூடிப்,
பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்தலை மன்றத்து
விழவுத்தலைக் கொண்ட பழவிறல் மூதூர்".

—நற்றிணை : 293 : 1-4

குயவனின் மந்திரக் கைத்திறன் இன்னமும் அழித்துவிடவில்லை. குழந்தைகளை, 'அக்கி' எனப்படும் தோல் நோய் பற்றிக்கொண்டதும், அவற்றின் தாய்மார், குழந்தைகளைக் குயவனிடம் கொண்டுசெல்ல, அவன் ஒரு குச்சியை, ஒருவகைச் செம்மண் குழம்பில் நனைத்து, அக்கொப்புளங்கள் உள்ள பகுதியைச் சுற்றி, யாளி எனப்படும்

ஒரு கற்பனைப் பேயின் உருவத்தை வரையச், சில நாட்களுக் கெல்லாம் அந்நோய் மறைந்து போய் விடும்.

உடைகளை வெளுத்துக் கஞ்சியூட்டல், பாடற்பொருளாக அமைவதற்குத் தகுதியற்ற சிறு செயல்களாகப் புலவர்கள் நினைக்கவில்லை. ''கூத்து முதலாம் களியாட்டங்கள் ஒருபால் நிகழ, ஓயாது விழாக் கொண்டாடிக்கொண்டிருக்கும் மூதூர்களில், ஆடைகளைப், பருத்தி ஆடை, பட்டாடை என இனம் பிரித்து அழுக்குப் போகத் துவைத்தளிக்கும்தொழிலைக் கையோய்வதில்லாமல் செய்வதால் வறுமை அறியாது வாழும் சலவைத் தொழில் மகள் ஒருத்தி, சின்னம்சிறு பூத் தொழில்கள் கொண்ட சிறந்த ஆடைக்கு, இரவில் சோற்றுக் கஞ்சி ஊட்டும் சிறப்பு ஒரு பாட்டில் கூறப்பட்டுளது''.

''ஆடியல் விழவின் அழுங்கல் மூதூர்
உடை ஓர் பான்மையில் பெருங்கை தூவா
வறன்இல் புலத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கம்''.

—நற்றிணை : 90 : 1-4

பாறையில் தினை உலர்த்திக் காத்திருக்கும் ஒரு பெண்ணைப் பாடியுள்ளார் ஒரு புலவர். முன்கை நிறைய வளையல்களையும், பிற உடல் உறுப்புகளில் அவற்றிற்கு உரிய அணிகளையும் அணிந்திருக்கும் உயர்குடி மகளிர், கரிய பெரிய மலை மீது அகன்ற பாறையில் செந்தினை பரப்பிக் காத்து நிற்கின்றனர்.

''நிறைவளை முன்கை, நேரிழை மகளிர்
இருங்கல் வியல்அறைச் செந்தினை பரப்பி''.

—குறுந்தொகை : 335 : 1-2.

காய்ச்சிய பாலில் மோர் இட்டுத் தயிர் ஆக்குவதும் ஓர் உவமையாகக் கூறப்பட்டுளது: ''பெண்மைக்குரிய மடப்பம் உடையளாய ஆய்மகள், தன்கை விரல் முனையால் தொட்டுத் தெறித்த சிறிதளவே ஆன மோர், குடம் நிறைய இருந்த

பாலனைத்தையும் தயிராக்கும் நிகழ்ச்சி, களம் புகுந்த ஒரு பெருவீரன், அக்களத்தில் நிறைந்து நிற்கும் நாற்படை அனைத்துக்கும் உயிர் போக்கும் நோயாகி நிற்கும் தன்மைக்கு உவமையாகக் கூறப்பட்டுளது.

"மடப்பால் ஆய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
குடப்பால் சில்லுறை போலப்
படைக்குநோய் எல்லாம் தான்ஆ யினனே".

—புறம் : 276 : 3-5

கடுகு மிளகு முதலாம் தாளிப்புப் பொருட்களைக் கலந்து உணவிற்கு மணம் ஊட்டுவதும் கூறப்பட்டுளது. "குய்க்கொள் கொழுந்துவை" (புறம் : 160 : 1) "குய்யுடை அடிசில்" (புறம் : 127 ; 7)

சிறுவர் சிறுமியரின் ஆடல் பாடல் போலும் இனிய பொழுதுபோக்குகள் பற்பல இடங்களில் குறிப்பிடப் பட்டுள்ளன. தச்சன் செய்து கொடுத்த சிறிய குதிரை பூட்டப் பட்ட சிறிய தேரில் அமர்ந்து சென்று இன்புறல் இயலாது எனினும், அதைக் கயிறு கொண்டு ஈர்த்துச் சென்று இன்பம் அடையும் சிறுவர் சிறுமியரின் இன்ப விளையாட்டில் இன்பம் கண்டுள்ளார் ஒரு புலவர்.

தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும், கையின்
ஈர்த்து இன்புறூஉம் இளையோர்".

— குறுந்தொகை : 61 : 1 - 3

தாம் தொடுத்த மலர்மாலையை அணிந்துகொண்டு, மூங்கில் போலும் பருத்த தோள் உடையேம் என்ற துணிவால் கடல் நீரில் புகுந்து ஆடிய மகளிர், கடற்கரைக் கானல் சோலையில் பரந்து கிடக்கும் மணலால் சிற்றில் கட்டி விளையாடும் இன்பக் காட்சியைக் காட்டியுள்ளார் ஒரு புலவர்.

"துனைத்த கோதைப் பணைப்பெருந் தோளினர்,
கடலாடு மகளிர் கானல் இழைத்த
சிறுமனை".

—குறுந்தொகை : 326 : 1 – 3

ஒளிவீசும் வளைகளை அணிந்த மகளிர், வறுபடாத பச்சை நெல்லை, அவலாக இடித்து முடித்து, அது செய்யத் துணை புரிந்த, கரிய வயிரம் பாய்ந்த மரத்தால் ஆன உலக்கையை, முற்றித் தலை சாய்ந்து அழகுறக் காட்சி அளிக்கும் நெற்பயிர் நிற்கும் வயல் வரப்பில் படுக்க வைத்து விட்டு விளையாடச் சென்றுவிடும் சிறப்பைக் கூறுகிறது ஒரு செய்யுள்.

"பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்".

—குறுந்தொகை : 238 : 1 - 3

தன்பால் அன்பு காட்டுவதில் ஒப்புக் காணமாட்டாத தன் தோழியர் கூட்டத்தொடு அருவியில் பாய்ந்து ஆடி, அவ்வாறு ஆடுங்கால், நீரலைகள் தாக்கியதால், தன்னுடைய பெரிய, அழகிய, அன்பொழுகும் கண்கள் சிவந்து போகக் காட்சி அளிக்கும் செல்வத்திருமகளைக் காட்டுகிறது ஒரு செய்யுள்;

"பொருவில் ஆயமொடு அருவி ஆடி
நீர்அலைச் சிவந்த பேரமர் மழைக்கண்".

—நற்றிணை : 44 : 1 : 2

ஊஞ்சல் ஆட்டம் எல்லோருக்கும் தெரிந்த மற்றொரு விளையாட்டு. அழகிய கண்களை உடைய தோழியர் கூட்டம் ஆட்டிவிடுமாறு, கரிய பனை நாரைத் திரித்து முறுக்கிய கயிற்றை நீளமாகத் தொங்கவிட்டுக் கட்டிய ஊஞ்சல் ஒன்றை ஆட்டிக் காட்டுகிறது ஓர் அழகிய செய்யுள்.

"பெருங்கயிறு நாலும் இரும்பனம் பிணையல்
பூங்கண் ஆயம் ஊக்க"

—நற்றிணை : 90 : 6 - 7

பள்ளிசென்று கல்வி கல்லாத இளஞ்சிறுவர்கள், வேப்ப மரத்து அடியில், நெருங்கத் தழைத்த, அதன் இலைகள் தரும்,

புள்ளிப் புள்ளியாகத் தோன்றும் நிழலில், பொற்கொல்லன்பால் உள்ள பொன்னுரைகல்போலும் வடிவில் வட்டமான அரங்கை வரைந்துகொண்டு, நெல்லிக் காய்களை வட்டுக் களாகக் கொண்டு, பாண்டில் ஆடும் அழகும் ஓரிடத்தில் கூறப்பட்டுளது :

''வேம்பின் புள்ளி நீழல்
கட்டளை அன்ன வட்டரங்கு இழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்''
—நற்றிணை : 3 : 2 - 4

கூரை வேய்ந்த நல்ல மனைக்கு உரியவராகிய குறுந் தொடிகளை அணிந்த மகளிர், தங்கள் மனையின் முன்புறத்தில் பரப்பியிருக்கும் புது மணலில் அமர்ந்து, கழற்சிக் காய்களைக் கொண்டு கழங்காடிக் களித்திருப்பர்.

''கூரை நன்மனைக் குறுந்தொடி மகளிர்,
மணலாடு கழங்கு''. —நற்றிணை : 79 : 2 - 3

மகளிர் விளையாட்டாகப் பல இடங்களிலும் கூறப் பட்டிருப்பது ஓரை. பூஞ்சாய்க் கோரை எனும் ஒருவகைக் கோரைப் புல்லால் செய்து மகரந்தப் பொடிகள் பூசிச்செய்த பாவை வைத்து விளையாடும் ஒருவகை விளையாட்டு. ''விளையாடு ஆயமொடு, ஓரை ஆடாது.'' ''ஒள்ளிழை மகளிரொடு ஓரையும் ஆடாய்''. (நற்றிணை : 68 : 1-3; 155: 1) ''ஓரை ஆயத்து ஒண்டொடி மகளிர்'' (புறம் : 176 : 1)

மகளிரின் மற்றொரு விளையாட்டு ''அல்லியம்''. ஆண்கோலமும் பெண் கோலமும் உடையவாக இரண்டு பாவைகளைச் செய்துகொண்டு ஆடும் ஒருவகை விளையாட்டு.

''வல்லோன் தைஇய வரிவனப்பு உற்ற
அல்லிப் பாவை ஆடுவனப்பு ஏய்ப்பக்
காம இருவர்''. —புறம் : 33 : 16 - 18

## குருட்டு நம்பிக்கைகள் :

இனி, மக்களிடையே நிலவியிருந்த குருட்டு நம்பிக்கைகள் சில ; காக்கை கரைந்தால், விருந்துவரும் என்ற நம்பிக்கை, இன்றேபோல் அன்றும் இருந்தது. "கணவன் பிரிவாற்றாத் துன்பக்கவலையால் மெலிந்துவிட்ட என் தோழியின் தோள்கள், அம்மெலிவு நீங்கிப் பண்டேபோல் ஆகிச் சிறப்புறு வதற்குத் துணை செய்யும் வகையில், கணவன் வருகையைக், கரைந்து முன் அறிவித்தது காக்கை ; அந்நல்லது செய்த காக்கைக்கு இடும் பலியாகத், தொண்டி நகரத்து வயல்களில் முற்ற விளைந்த வெண்ணெல் அரிசி கொண்டு சுடுசோற்றைத், திண்ணிய தேருக்கு உரிய நள்ளி என்னும் கொடைவள்ளலின் காட்டில் வாழும் ஆயர்களின் பல பசுக்களிடம் கொண்ட நெய்யைக் கலந்து, ஏழு கலத்தில் இட்டு வைத்தாலும், அது செய்த நன்றியை நோக்க, இப்பலி சிறிதாம்" எனக் கூறுகிறாள் தலைவியின்தோழி ஒருத்தி.

> "திண்தேர் நள்ளி கானத்து அண்டர்
> பல்லா பயந்த நெய்யில், தொண்டி
> முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு
> எழுகலத்து ஏந்தினும் சிறிது ; என் தோழி
> பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
> விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே".
>
> —குறுந்தொகை : 210

சகுனங்களிலான நம்பிக்கை அளவுமீறி இருந்தது: பறவைகளின் போக்கு, அவற்றின் குரல், வர இருக்கும் ஆக்கம், இழப்புக்களை அறிவித்துவிடவல்லன என உறுதியாக நம்பினர். "புள்ளும், பொழுதும் பழித்தல்" (புறம் : 204 : 10) என்ற வரியினைக் காண்க. தாம் எதிர்பார்த்துச் சென்ற பரிசில் கிடைக்காதபோது, அது தராதுவிடுத்த ரவலனைப் பழிக்காது, தாம் புறப்பட்டு வந்தபோது நிகழ்ந்த புள் நிமித்தம் காலக்கேடுகளையே பழிப்பர்.

பேய்கள், மரங்களிலும், இடுகாடுகளிலும் வாழும் என்று நம்பினார்கள். பேய், தன் கூட்டத்தோடு ஆடிக்களிக்கும் இடுகாட்டை ஒரு புலவர் குறிப்பிட்டுள்ளார். (புறம் : 288 : 4 - 5) போர்க்களத்தில் வீரப்புண் பெற்று இறந்து வீழ்ந்து கிடக்கும் வீரர்களின் வீரப் புண்களைத் தோண்டி, அதிலிருந்து பெருகிய செங்குருதியால் சிவந்து போன தன் கைகளால் தனது தலைமயிரைக் கோதி முடித்து, அதனால் கறுத்த தன் மேனியும் செந்நிறங் காட்டும் ஒரு பேய்மகளைக் காட்டுகிறார் ஒரு புலவர்.

"பொருதுஆண்டு ஒழிந்த மைந்தர் புண்தொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்தல் தீட்டி
நிறம்கிளர் உருவின் பேஎய்ப் பெண்டிர்."

— புறம் : 62 : 2-4

பேய்மகள் பிணத்தைத் தழுவி, அதன் வெள்ளிய நிணத்தைத் தின்னும் ; "பேஎய் மகளிர் பிணம் தழூஉப்பற்றி, விளர் ஊன் தின்ற வெம்புலால்" (புறம் : 359 ; 4-5) பேய், மகளிரைப் பற்றிக் கொள்ளும்; அவ்வாறு பேயால் பற்றப்பட்ட மகளிர், குறித்து ஆடுவர். "முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத் தாவுபு தெறிக்கும்." (புறம் : 259 : 5-6) வெண் கடுகைப் புகைத்தால் பேய் ஓடி மறைந்துவிடும். "ஐயவி புகைப்பவும்" (புறம் : 98 : 15) என்றெல்லாம் மக்கள் நம்பி இருந்தனர்.

ஓடுகின்ற ஆற்றின் இடையே உள்ள, துருத்தி என்றும் அழைக்கப்படும் மேட்டில், பல்வேறு இசைக்கருவிகள் இசை எழுப்ப, ஆட்டின் கருத்தை அறுத்துத், தினையைப் பிரப்பங் கூடையில் பரப்பி வைத்து தாம் வெளிப்படவந்து உலாவல் அல்லது, நோய்களைத் தீர்க்கலாகாத் தெய்வங்கள் ஒருசேர வழிபட்டு இவள் பேயால் பற்றப்பட்டாள் என்ற முடிவிற்கு வந்து நிற்கும் மகளிரைக் காட்டுகிறார் ஒரு புலவர்.

"மறிக்குரல் அறுத்துத் தினைப்பிரப்பு இரீஇச்,
செல்லாற்றுக் கவலைப் பல் இயம் கறங்கத்
தோற்றம் அல்லது நோய்க்குமருந் தாகா
வேற்றுப்பெரும் தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
பேஎய்க் கொளீஇயள் இவள் என".

—குறுந்தொகை : 263 : 1-5

மனித இறைச்சி, குருதிகளை விரும்புவது பேய். அதனால், களத்தில் இறவாது வீழ்ந்து கிடக்கும் வீரர்களின் புண்ணைத் தோண்டத் தலைப்பட்டுவிடும். பேய் தொட்ட புண், ஆறுவதும் இல்லை. அவ்வீரன் உயிர் பிழைப்பதும் இலன். இதில் நம்பிக்கை உடைமையால் அவன் மனைவி, பேய், தன் கணவன் இருக்கும் இடத்தையும் அண்டக் கூடாது என்பதால், வீட்டு வாயிலில் இரந்தை, வேப்பந்தழைகளைச் செருகி, யாழ் முதலாம் இசைகளை எழுப்பி, மெல்ல எழுந்து வீட்டை மையிட்டு மெழுகி, வெண் சிறுகடுகை எங்கும் தூவி, ஆம்பல் குழல் ஊதி, மணிஅடித்து, காஞ்சிப்பண் பாடி மாளிகை முற்றிலும் நறுமணப் புகை எழுப்பிக் காப்பன்.

"தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப்பு யாழொடு பல்லியம் கறங்கக்,
கை பயப்பெயர்த்து, மைஇழுது இழுகி,
ஐயவி சிதறி, ஆம்பல் ஊதி,
இசைமணி எறிந்து, காஞ்சி பாடி,
நெடுநகர் வரைப்பில் கடிநறை புகைஇக்
காக்கம் வம்மோ ?"

—புறம் : 281 1-7

## சமய வழிபாடுகள்

தொன்மையான வழிபாட்டு முறைகள், ஐந்தாவது அதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன ; ஆரியத்துக்கு முந்திய தமிழர் நாகரீகம் (Pre Aryan Tamil Culture) என்ற

என்னுடைய நூலிலும், விளக்கப்பட்டுள்ளன. ஆங்கே எடுத்துக் காட்டிய கடவுள்களை அல்லாமல், வேறு கடவுள்களையும் தமிழர் வழிபட்டனர். திங்கள், அவற்றின் ஒன்று. கடல் நடுவே, மீன் பிடிபடகுகளாம் திமில்களில் ஏற்றப்பட்டுக் காட்சி அளிக்கும் விளக்குகள் போல, செம்மீன்கள் ஒளிவிடும் விசும்பின் உச்சிக்கண், முழுமதி நாளன்று, அம் முழுமதியைக் கண்டு, காட்டுவாழ் மயில் போன்ற, சில வளையல்கள் அணிந்தவளாய என் விறலியும் நானும், அம்முழுமதி, வளவன் வெண்கொற்றக் குடை போன்றுளது என எண்ணியவாறே தொழுதோம் அல்லவோ?" என்ற புலவர் வினாவில், மதி வழிபாடு குறிப்பிடப்பட்டுளது.

"முந்நீர் நாப்பண் திமில்சுடர் போலச்
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்சி நின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும் யானும் வல்விரைந்து
தொழுதனம் அல்லமோ? .....................
வளவன் ..................................................
மாலை வெண்குடை ஒக்குமால் எனவே".

—புறம் : 60

("மாக விசும்பு" எனும் இத்தொடர், புறம் : 35, 60, 270, 400, அகம் : 253, மதுரைக்காஞ்சி : 454; பரிபாடல் 47 ஆகிய பல இடங்களில் வந்திருந்தாலும், உரையாசிரியர்கள் அதற்கான தெளிவான பொருளை உணர்த்தினாரல்லர்).

காக்கைக்கு உணவு அளித்தல், ஒவ்வொரு வீட்டிலும், நாள்தோறும் தவறாமல் நடைபெறும் ஒரு சமயச் சடங்கு. "கதிர்கள் எறித்தலால், நடப்பார் கால்களை வெப்பம் பண்ணுமாறு ஞாயிறு காயும் பகற்பொழுதில், நகரில் உள்ள பெரிய மாளிகைகளுக்கு வரும் விருந்தினர்களை வரவேற்று உணவளித்து ஓம்புவான் வேண்டி, பொற்றொடி அணிந்த

அம்மாளிகை வாழ்மகளிர், விருந்தினர்க்கு உணவு படைப்பதன் முன்னர், மாளிகையின் முற்றத்தில் பலியாகப் போட்ட, கொக்கு உகிர் போலும் சோற்றைத் தின்ற காக்கைக் கூட்டம், பொழுது மறைய, மீன் அங்காடி புகுந்து, ஆங்கு நிழலில் குவித்து வைத்திருக்கும் பச்சை மீன்களைக் கவர்ந்துகொண்டு கடற்கரையில் வினைஒழிந்து ஆடிக்கொண்டிருக்கும் கப்பலின் பாய்மரத்தில் சென்று தங்கும். இதைப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஒரு புலவர்.

> ''கதிர்கால் வெம்பக், கல்காய் ஞாயிற்றுத்
> திருவுடை வியன்நகர் வருவிருந்து அயர்மார்
> பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
> கொக்குஉகிர் நிமிரல் மாந்தி, எற்பட
> அகல்அங் காடி அசைநிழல் குவித்த
> பச்சிறாக் கவர்ந்த பசுங்கண் காக்கை
> தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்''.

— நற்றிணை : 258 : 3-9

பழங்காலத்தில், பெரிய தெய்வ வழிபாடுகள், பலிகொடுத்தல், தெய்வத்தன்மை வாய்ந்த ஆடல், பாடல்களை ஒருங்கே கொண்டிருக்கும் அத்தகு ஒரு வழிபாடு கீழ்வருமாறு கூறப்பட்டுளது. "ஓ எனும் பேரொலி எழ, வெள்ளை வெளேரென ஒளி விளங்க ஓடிவரும் அருவிகளால் விளக்கம் பெற்ற மலைச்சாரலில், வேங்கையின், தேன் கமழும் மலர்களைச் சூடிக்கொண்டு, தொண்டகப் பறை எழுப்பும் ஒலியின் தாளத்திற்கு ஏற்ப, ஆடவரும் பெண்டிரும் தெருக்களில் கலந்து ஆடிமகிழும் சிறுசிறு குடிகளைக் கொண்ட பாக்கத்தில் முருகன் உலாவருதலைக் கூறுகிறது ஒரு செய்யுள்".

> ''கறங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅன்,
> தேம்கமழ் இணர வேங்கை சூடித்
> தொண்டகப் பறைச்சீர் பெண்டிரொடு விரைஇ

மறுகில் தூங்கும் சிறுகுடிப் பாக்கத்து
இயல் முருகு''.

—அகம் : 118 : 1-5

''குன்றுகள் வேலிபோல் நாற்புறமும் நிற்க, இடையே உள்ள சிற்றூரில், மன்றத்தில் நிற்கும் வேங்கை மரங்கள், மணநாளாகிய நல்ல நாளில் பூக்கத் தொடங்க, அவற்றின் மணிமணியான அரும்புகள் மலர்ந்த, பொன் போன்ற மலர்கள் உதிர்ந்து, அகன்ற பாறைகளை அழகு செய்யும் முற்றங்களில், குறவர்கள், தங்கள் மனைகளில், குரவை ஆட்டத்தில் கைதேர்ந்த முதிய மகளிரொடு கைகோத்து, ஆரவாரம் எழக், குரவை ஆடி விழா எடுப்பதை விளக்குகிறது ஒரு செய்யுள் :

''குன்ற வேலிச் சிறுகுடி ஆங்கண்
மன்ற வேங்கை மணநாள் பூத்த
மணியேர் அரும்பின் பொன்வீ தாஅய்
வியலறை விரிக்கும் முன்றில், குறவர்
மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்
ஆர்கலி விழவு''

—அகம் : 232 : 6-11.

''கீழ் நீரில் மீன் ஓடும், மேல் நீரில் கண்போலும் கருங் குவளை மலரும்; உப்பங்கழி நீரால் சூழப்பெற்ற பயிர் விளைந்து நிற்கும் கழனிகளில், அவற்றைக் காப்பவர் பறை அடித்து எழுப்பும் அரித்து எழும் ஓசை கேட்டுப், பறவைகள் ஓடிவிடும். அரும்புகள் மிதக்கவிட்ட கள்ளையும், இனிய தேறலையும் நறவையும் குடித்து மகிழ்ந்த கோசர் குரவை ஆடி மகிழ்வதைக் கூறுகிறது, ஒரு செய்யுள்.

''கீழ்நீரான் மீன்வழங் குந்து;
மீநீரான் கண்ணன்ன மலர் பூக்குந்து;
கழி சுற்றிய விளைகழனி
அரிப்பறையால் புள் ஓப்புந்து;

நெருடுநீர் கூஉம் மணல் தண்கால்
மென் பறையால் புள் இரியுந்து;
நனைக்கள்ளின் மனைக்கோசர்,
தீந்தேறல் நறவு மகிழ்ந்து
தீங்குரவைக் கொளை தாங்குந்து''

—புறம் 396 : 1-9

கோசர் சிறந்த வீரர்; ஆகவே அவர்கள் ஆடிய இக்குரவைக் கூத்து ஒருவகைப் போர்க்கூத்து ஆகும்.

இதனினும் கொடுமை வாய்ந்த ஒரு போர்க்கூத்து பின்வருமாறு விளக்கப்பட்டுளது. ''செங்கரும்புக் கழிகள் மீது காற்றில் அசைந்தாடும் செந்நெற் கதிர்களை வேய்ந்து கட்டிய பந்தல், விழா எடுக்கும் இடம் போலப் பற்பல அழகுடையதாகத் தோன்ற, ஓயாது நெல் குற்றும் உலக்கை ஒலியோடு, பல்வேறு ஒலிகள் ஒலிக்கும் ஆங்கு, பொன்னால் செய்த தும்பைப் பூவாம் போர்ப்பூவுடன் பசிய பனம் தோட்டையும் அணிந்துகொண்டு, கடுஞ்சினம் மிக்க வீரர்கள் கடல் ஒலிபோல், ஆரவாரப் பேரொலி எழுப்பியவாறே, குரவைக் கூத்தை, வெறி கொண்டு ஆடுவர்'',

''அலங்கு செந்நெல் கதிர் வேய்ந்த
ஆய்கரும்பின் கொடிக் கூரை
சாறு கொண்ட களம் போல
வேறுவேறு பொலிவு தோன்றக்,
குற்றுஆனா உலக்கையால்
கலிச்சும்மை வியல் ஆங்கண்
பொலந்தோட்டுப் பைந்தும்பை
மிசை, அலங்குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர் வெறிக்குரவை
ஓதநீரிற் பெயர்பு பொங்க''

—புறம் : 22 : 14-23

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஆரிய நாகரீகம், தமிழர் உள்ளத்துள், வெள்ளம்போற் பெருக்கெடுத்துப் பாய்ந்து அவர்தம் வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையையும் மாற்றி விட்டது. மற்ற செயல்பாடுகளோடு, ஆடல் பாடல்களும் பாதிப்புக்கு உள்ளாகிவிட்டன, பழந்தமிழரின் இயற்கையோ டியைந்த எளிய பண்ணிசை, ஆரியரின் கற்பனைத்திறம் வாய்ந்த பல்வேறு படிகளை உடையவாய மெல்லிசைகளுக்கு இடம் கொடுத்துவிட்டது, அவர்களின் பழைய ஆடல்களின் இடத்தை, ஆரியரின், எளிதில் விளங்கலாகாப் பல்வேறு வகையாகப் பிரிவுண்ட ஆடல்கள் பற்றிக்கொண்டன. பழைய ஆடல், ஒன்று, சொற்களின் துணை வேண்டாமல், மெய்ப்பாட்டின் மூலமாகவே, காதல், வீர உணர்வுகளை வெளிப்படுத்தும்; அல்லது, முழுக்க முழுக்க வழிபாடு குறித்த ஆடலாகும். ஆரிய நாகரீகத்தின் இடை நுழைவால், அக்கலையில், பல்வேறு நிலைகள் வளர்ந்துவிட்டன. ஆடல் பாடல் குறித்த இலக்கண நூல்களும் எழுதப்படலாயின; ஆனால், அந்நூல்கள், இப்போது அழிந்துவிட்டன. ஆனால், அக்கலைகளைக் குலத் தொழிலாகக் கொண்ட கலைஞர் களால், அவை பயிலப்பெறுவது குறித்த குறிப்புகள் பலவற்றைச் சிலப்பதிகாரம், தருகிறது. அதன் உரையாசிரி யர்கள், அவை குறித்த விரிவான விளக்கங்களை அளித் துள்ளனர். பண்டு ஆடல் நிகழ்ந்த இடம் ஊர்மன்றம், ஆனால், அது, சிலப்பதிகாரம் மூன்றாம் அதிகாரத்தில் கூறப்பட்டிருப்பது போலும் பல்நிலை ஆடரங்காக உருமாறி விட்டது. ஆனால், இம் மாற்றமெல்லாம், பெருநகரங்களில் இடம்பெற்றுள்ளனவே அல்லது சிற்றூர்களில் அன்று.

நகரங்கள்

உரோமானிய நாட்டுடன் நடத்திய வாணிகம் பெருமளவில் வளர்ந்துவிட்ட பின்னர், தமிழகத்தில் நகரங்கள் வளமுடையவாகவும், செல்வச் செழிப்புடைய வாகவும் உயர்ந்துவிட்டன. அகநானூற்றுப் பாடல் ஒன்றில்,

சேர, சோழ, பாண்டியர்களின் தலைநகரங்கள் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன.

"உறவினர்க்கு உளவாம் கேட்டினைக் களைந்து, அவரைத் தாங்கிக்கொள்ளவும், உறவினராய் உள்ளார், குறைவின்றி உண்ணவும், அயலார், அந்த அயலாராம் நிலை கெட்டுக் கெழுதகை உறவினராக மாறி ஒழுகவும் விரும்பி, அதற்குத் துணை செய்யும் பொருள் ஈட்டும் முயற்சியில் ஊக்கம் மிகக் கொண்டு, அதில் விருப்பமும் மிகுந்து, ஆத்திமாலை அணிபவரும், எதிர்த்தாரை அழிக்கவல்ல போர் முறைகளை அறிந்தவரும் ஆகிய சோழர்க்கு உரியதான், அறங்கூர் அவை இருக்கும் சிறப்பினைக் கொண்ட உறையூரை ஒத்த, பெறுதற்கரிய பேரணிகலன்களை அடைந்து நல்லோர் யாவராலும் விரும்பத்தக்கதான செயற்கரிய செயலாம் பொருள் ஈட்டும் பணியை இனிதே முடித்து விட்டோம். ஆகவே, பகைவர் அரண்கள் பலவற்றை வெற்றி கொண்ட, பகைப் படைகளோடு எப்போதும் மாறுபாடு கொள்ளும் நாற்படையினை உடைய, என்றும் புகழ் வாடாத வேப்பமாலை தரித்த பாண்டியனுக்கு உரிய கூடல்மா நகரின், காலைக்கடைவீதியின் பல்வேறு மணங்களும் ஒருசேர மணக்கும் நல்ல நெற்றியினையும், நீண்ட கரிய கூந்தலினையும், மாமை நிறத்து மேனியினையும் உடைய நம் காதலியுடன், மலையைக் குடைந்து இயற்றியது போலும், வானை அளாவிய நீண்ட மாளிகையில், கடல் நுரையை அடைத்து வைத்தது போன்ற மெல்லிய மலர்களால் ஆன படுக்கை விரித்த, ஓங்கிய கட்டிலில், உயர்ந்த விளக்கின் நெடுஞ்சுடர் ஒளியில் ஆடவர்க்கு உரிய நலமெலாம் உடைய நம் மார்பில், நம் காதலியின் மார்பகத்து அணிகள் வடுக்களைச் செய்யுமாறு, வரிவரியான கோடுகள் நிறைந்த நெற்றியினையும், வலிமிகுதலினால் முழங்கும், வாய்வரை வந்து ஒழுகும் மத நீரினையும், கூற்றுவனுக்கு நிகரான ஆற்றலும் நிலத்தை அறைந்து, பகைவரை அணுகச்சென்று கொல்வதில் தப்பாத, நினைத்தாலே நடுங்கப்பண்ணும், தொங்கும் கையினையும் உடைய கொடிய பெரிய யானைப் படையினையும், நெடிய

தேர்ப்படையினையும் உடைய சேரனுக்கு உரிய, செல்வத்தால் சிறந்த மிகப்பெரிய நகரமாகிய கருவூரின் துறையில், தெளிந்த நீர் ஓடும் குளிர்ந்த ஆன்பொருநை ஆறு, உயர்ந்த கரையில் குவித்துள்ள மணலின் எண்ணிக்கையிலும் பலவாக, நாம் தழுவி இன்புறுவோம் ; நெஞ்சே ! வருவாயாக !

""கேள்கேடு ஊன்றவும், கிளைஞர் ஆரவும்,
கேளல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்,
ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு, புகல்சிறந்து,
ஆரம் கண்ணி, அடுபோர்ச் சோழர்,
அறம்கெழு நல்லவை உறந்தை அன்ன,
பெறலரும் நன்கலன் எய்தி, நாடும்
செயலரும் செய்வினை முற்றினம், ஆயின்;
அரண்பல படர்ந்த முரண்கொள் தானை
வாடா வேம்பின் வழுதி கூடல்
நாளங் காடி நாறும் நறுநுதல்,
நீள்இரும் கூந்தல், மாஅ யோளொடு,
வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்,
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை,
நிவந்த பள்ளி, நெடும்சுடர் விளக்கத்து
நிலம்கேழ் ஆகம், பூண்வடுப் பொறிப்ப,
முயங்குவம் ; சென்மோ ; நெஞ்சே ; வரிநுதல்
வயம்திகழ்பு இமிழ்தரும் வாய்புகு கடாத்து
மீளி மொய்ம்பொடு நிலன்எறியாக் குறுகி
ஆள்கோள் பிழையா அஞ்சுவரு தடக்கைக்
கடும்பகட்டு யானை, நெடுந்தேர்க் கோதை
திருமா வியன்நகர்க் கருவூர் முன்துறைத்
தெண்ணீர் உயர்கரைக் கவைஇய
தண்ஆன் பொருநை மணலினும் பலவே''. —அகம்: 93

அரசர்கள் வாழ்ந்ததால் நகரங்கள், முக்கியத்துவம் பெற்றுவிட்டன. நகரங்கள் பெருகவே, செல்வமும் அரசர்களின் முக்கியத்துவமும் உயர்ந்துவிட்டன. தமிழகத்து மூவேந்தர்களும், பண்டைக் காலத்தில், வேலையற்றுக் கிடக்கும் நாட்களில் பொழுது போக்கிற்காகவும், தங்கள் ஆண்மையை நிலைநாட்டிக் கொள்வதற்காகவும், போரிட்டது போலல்லாமல், இப்போது, தங்கள் ஆட்சி எல்லையை விரிவாக்கிக்கொள்வதற்காகவும், ஏனைய அரசுகளை அடிமை கொண்ட பேரரசாக உயர்வதற்காகவும் ஒருவரோடொருவர் போர் தொடுத்துவந்தனர். ஆகவே, இக்காலப் பாடல்களில், அரசர்களின் கொடைவளப்பாராட்டு இன்னமும் இடம் பெற்றுளது என்றாலும், அவை, அரசர்களின், போர்க்கள வெற்றிகளைப் பாராட்டலாயின.

"பகைவரை வென்று, அவர்தம் பட்டத்து யானையின் பொன்னாலான நெற்றிப் பட்டத்தைக் கைக்கொண்டு, அது அழித்துப் பண்ணிய பொற்றாமரை மலரைப், பாடிப் புகழும் பாணன் தலையில் அழகு பெறச் சூட்டிய சிறந்த தலைமையினையும், போரில் புறம் காட்டாக் கோட்பாட்டினையும் உடைய பெரியோன் வழியில் வந்தவனே! இராப்பொழுது இங்கேயே உறங்கிவிட்டதோ என ஐயுறுதற்கு ஏற்பப் பேரிருள் சூழ்ந்த அடர்ந்த சிறுகாட்டையும், பறை ஒலி போல் ஒலிக்கும் மலையருவிகளையும் உடைய முள்ளூர் மலைக்கு உரிய வேந்தே! முள்போலும் கூரிய பற்களையுடைய பாம்பையும் நடுங்கப்பண்ணும் இடியேறுபோல் போர் முரசு முழங்க, தலைமை தாங்கிவந்த யானையும், அதன் மீது அமர்ந்து போரிட்ட அரசும் களத்தில் ஒருங்கே இறந்துபட, அழித்தற்கரிய அவர் நாற்படைகளைச் சிதற அழித்து, சிறிதும் பொருந்தாத பகை, தன் நாட்டை அணுகவும் விடாது, தடுத்து நிறுத்தும் எல்லையாகத் திகழும் பெண்ணையாறு பாயும் நாட்டிற்கு உரியவனே: உன் புகழைப் பாடவல்லமாயினும், வல்லேமல்லேமாயினும், உன்பால் வந்து உன்புகழ் பாடுவேமாயின், அழிக்கலாகாத் தன்மையராகிய உன் கிளையொடு நீயும் பெருவாழ்வு வாழ, இந்நிலமிசை உள்ளார்

எல்லாரினும் அறிவு ஒழுக்கங்களில் மாசற்ற அந்தணனாகிய கபிலன், பொருள் வேண்டி இரந்து செல்லும் புலவர்களுக்கு இனிப் புகழ்வதற்கு இடமில்லை எனக் கூறுமளவு உன் புகழும், அவன் புகழும் பெருகி நிற்கப் பாடிவிட்டான். அதனால், சினம் மிக்க சேனைக்கு உரியவனாகிய சேரனுக்குரிய மேலைக் கடலில், பிற நாட்டுப் பொற்காசுகளைச் சுமந்துவரும் கடலோடவல்ல பெரிய நாவாய்கள் ஓடிய இடத்தில், வேறு சின்னஞ் சிறு மரக்கலங்கள் ஓடமாட்டாதது போலும் நிலையினராகிவிட்டோமாயினும், எம்முடைய வறுமை துரத்த, உன்பெரும்புகழ் ஈர்த்துக் கொண்டுவர வந்து, உன் வளமைக் குணங்களில், சிலவற்றை நாங்களும் பாடிப் பாராட்டினம்''.

''ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு,
பாணர் சென்னி பொலியத் தைஇ,
வாடாத் தாமரை சூட்டிய, விழுச்சீர்,
ஓடாப் பூட்கை உரவோன் மருக!
வல்லேம் அல்லேம் ஆயினும், வல்லே,
நின்வயின் கிளக்குவ மாயின், கங்குல்
துயில்மடிந் தன்ன தூங்குஇருள் இறும்பின்,
பறை இசை அருவி, முள்ளூர்ப் பொருந!
தெறலரும் மரபின்நின் கிளையொடும் பொலிய,
நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலன்அழுக் கற்ற அந்த ணாளன்,
இரந்துசெல் மாக்கட்கு இனி இடனின்றிப்,
பரந்திசை நிற்கப் பாடினன்; அதற்கொண்டு,
சினமிகு தானை வானவன் குடகடல்
பொலந்தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
பிறகலம் செல்கலாது; அனையேம்; அத்தை;
இன்மை துரப்ப, இசைதர வந்து, நின்
வண்மையில் தொடுத்தனம் யாமே, முள்எயிற்று
அரவுஎறி உருமின் முரசுஎழுந்து இயம்ப,

அண்ணல் யானையொடு வேந்துகளத்து ஒழிய
அருஞ்சமம் ததையத் தாக்கி, நன்றும்
ஒன்னாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணையம் படப்பை நாடு கிழவோயே''.

—புறம் : 126

போர் முரசுக்கு, அல்லது, கூறுவதாயின், அப்போர் முரசின் உறையும் தெய்வத்தின் ஆவிக்குக், குருதிப்பலி கொடுப்பதே போராகக் கருதப்பட்டது. போர் முரசு, அதற்கென அமைக்கப்படும் தனி இருக்கையில் வைக்கப்படும். ஒரு செய்யுள் இவ்வாறு கூறுகிறது. ''முரசுக்குக் குற்றமாம் எனக் கூறப்படும் குற்றம் எதுவும் இல்லாதவாறு வலித்துப் பிணித்த வாரை உடைய. கருமரத்தால் செய்யப்பட்டமை யால், கருமை நிறம் காட்டும் பக்கம் அழகுபெற, மயிலின் தழைத்து நீண்ட தோகை, ஒள்ளிய புள்ளிகள் நிறைந்த நீலமணிபோலும் நிறம் வாய்ந்த மாலை, ஆகியவற்றைப் பொன்போலும் தளிர்களையுடைய உழிஞையொடு அழகுற அணியப்பெற்ற, குருதிப்பலி கொள்ளும் வேட்கையுடையதான பகைவர் உளம் நடுங்க முழங்க வல்லதான போர் முரசம், நீராடி வருவதன் முன்னர் எண்ணெய் நுரையை முகந்து வைத்தாற்போல், மெல்லிய மலர்கள் குவித்து வைக்கப்பட்ட கட்டில் ஒழுங்குசெய்யப்படும்''.

''மாசற விசித்த வார்புறு வள்பின்,
மைபடு மருங்குல் பொலிய, மஞ்ஞை
ஒலிநெடும் பீலி, ஒண்பொறி மணித்தார்,
பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டிக்,
குருதி வேட்கை, உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை; எண்ணெய்
நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை''.

—புறம் : 50 1-7

ஒப்பிட்டு நோக்க, கொடுமைமிகா, வேத வழி வேள்வி முறைகள் இடம் பெறத் தொடங்கிவிட்ட இந்நூற்றாண்டின் இறுதியிலும், பாண்டியப் பெருவீரன் ஒருவன் குறித்துப் பின்வரும் போர்ப்பரணிப் பாடலைப் பாட, ஒரு புலவரைத் தூண்டுமளவு, பழைய வெற்றிப்பலிகள் பால், களவேள்விகள் பால்-கொண்ட பெரு வேட்கை, தமிழ் அரசர் உள்ளத்தில், இன்னமும், அத்துணை ஆழமாக வேரூன்றி இருந்தது. "மிக்க ஆழம் உடைய பெரிய கடலில், காற்றால் தாக்கப்பட்ட மரக்கலம் கடல் நீரைக் கிழித்துக்கொண்டு ஓடுவதுபோலப், போர்க்களிறு களம்புகுந்து பகைவர் படையைத் தாக்கிப் பாழடித்துக் களத்தில் இடம் பண்ணிவிட, அவ்வாறு இடம் கண்ட களத்தில் நன்கு தீட்டப்பெற்று ஒளிவீசும் இலை போலும் முனையையுடைய வேலொடு புகுந்து, அரசையும் அழித்துப், பகைவர்படையையும் பாழ்செய்து, அவ்வெற்றிப் புகழ் நாடெங்கும் பரவ, பகைவர் போர் முரசைக் கைக்கொண்டு, அவர்களுடைய தலைகளை அடுப்பாக அடுக்கி, குருதிப்புனலை உலை நீராகக் கொண்டு, உலையில், தசை, மூளை முதலாயின பெய்து, வீரவளை அணிந்த தோளாகிய துடுப்புக் கொண்டு, துழாவி ஆக்கிய உணவைப் பேய்களுக்குப் படைத்து, அக்களத்தில் களவேள்வி செய்த, கொல்லும் போர்வல்ல செழிய".

"நளிகடல் இரும் குட்டத்து
வளி புடைத்த கலம் போலக்
களிறு சென்று களன் அகற்றவும்,
களன் அகற்றிய வியலாங்கண்,
ஒளிறு இலைய எஃகு ஏந்தி
அரைசுபட அமர் உழக்கி,
உரைசெல, முரசு வெளவி,
முடித்தலை அடுப்பாகப்
புனல் குருதி உலைக் கொளீஇத்,

தொடித் தோள் துடுப்பின் துழந்த வல்சியின்,
அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய!''

—புறம் : 26 : 1-11

நகரங்களில் பரத்தைமை :

நேரிடை நிலை, உருவக நிலை ஆகிய எந்நிலையில் பொருள் கொண்டாலும், நகர வாழ்க்கை என்றால், நாகரீக வளர்ச்சி என்றே பொருள்: நாகரீகத்தின் தெளிவான முத்திரை, விரும்பத் தகாதது எனக் கருதப்படாதாயின், பரத்தைமை ஒழுக்கம் இடம்பெறுவதேயாம். பரத்தையர் ஆடல் பாடல்களில் நன்கு பயிற்சி பெற்றிருப்பர், கண்கவர் வகையில் உடையணிந்திருப்பர். அழகுற ஒப்பனை செய்து கொள்வர். ''விறல்பட ஆடவல்லளாகிய விறலி, மாணிக்க மணிக்கோவை எட்டால் ஆன மேகலைஅணியால் அழகு பெற்ற அல்குலும், மடப்பம் பொருந்திய மைஉண்ட கண்களும், ஒளிவீசும் நெற்றியும் கொண்டு,'' திகழ்தலைக் கூறுகிறது ஒரு புறநானூற்றுச் செய்யுள்:

''இழைஅணிப் பொலிந்த ஏந்துகோட்டு அல்குல்,
மடவரல் உண்கண், வாள் நுதல் விறலி''

—புறம் : 89 : 1-2

எளிதில் வயப்படக் கூடிய ஆடவரைத், தங்களோடு, ஆற்றுத்துறையிலும், குளப்படித்துறையிலும் நீராடி மகிழுமாறு தூண்ட வல்லவர் பரத்தையர். ஆடவன் ஒருவனைத் தன் அழகால் மயக்கவல்ல உள்உரம் படைத்த ஒரு பரத்தை, அவன் மனைவிக்குக் கீழ்க்காணும் இறுமாந்த சொற்களைக் கூறி அனுப்பினாள். ',என் கூந்தலில் ஆம்பலின் முழுப்பூவை அணிந்து அழகுசெய்துகொண்டு, புதுவெள்ளம் புரண்டோடும் பெரிய நீர்த்துறையில் புனல் விளையாட்டை விரும்பிச் செல்கின்றேன். அவள் கணவனும், அங்குத் தவறாது வந்து, புனல் விளையாட்டில் என்னோடு பங்கு கொண்டு விடுவனோ என அவள் அஞ்சுவளாயின், கொடிய போர் நிகழும்போதும், போர் அறம் பிறழாது போரிட்டுப்

பகைவரை அழிக்கவல்ல எழினி என்பானது பெரிய வேற்படை போர்க்களத்திடத்தே உள்ள அவனுடைய பெரிய ஆனிரையைப், பகைவர் கொள்ளாவாறு சூழ நின்று காப்பதுபோல, தன் கணவன் மார்பு, என்னை அணுகவிடாவாறு, தன் தோழியர் கூட்டத்தோடு, அவனைக் காத்துக்கொள்வாளாக";

''கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்,
பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி,
யாம்அஃது அயர்கம் சேறும்; தான் அஃது
அஞ்சுவ துடைய ளாயின், வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனைஆன் பெருநிரை போலக்
கிளையொடும் காக்க, தன் கொழுநன் மார்பே''

— குறுந்தொகை : 80

விழா நிகழும் இடங்களில் ஆடவர்க்குக் காமவேட்கை ஊட்டிக் கவர்ந்து கொள்வான் வேண்டிப், பரத்தையர் பெருங்கூட்டமாக வந்திருப்பர்: ''வாளை மீன்கள், நீரில், பிறழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டும், அவற்றைக் கவர்ந்து கொள்ளக் கருதாது, அக்குளத்தில் வாழும் நீர்நாய், நாள் தோறும் துயில் மேற்கொண்டுவிடும் இடமாகிய, வாரி வழங்கும் கைவண்மையுடைய கிள்ளிவளவனுக்கு உரிய, கோயில் வெண்ணியைச் சூழ உள்ள வயல்கள் விளைந்து கிடக்கும், நல்ல நிறம் வாய்ந்த, முற்றிய தழைகளால் ஆன ஆடையை, மெத்தென்ற அகன்ற அல்குல் மேல், அழகு உற உடுத்துக்கொண்டு, நானும், இங்கு நடைபெறும் விழாவிற்குச் செல்லவேண்டும். புதுப்புது வருவாய்களை உடைய ஊரன், என்னை அங்கு, அக்கோலத்தில் காண்பனாயின், என்னை வரைந்து கொள்ளாது விடுத்துப்போவது அரிதினும் அரிதாகும்''.

''வாளை, வாளிற் பிறழ, நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்,

கைவண் கிள்ளி, வெண்ணி சூழ்ந்த
வயல்வெள் ளாம்பல் உருவ நெறித்தழை
ஐதுஅகல் அல்குல் அணிபெறத் தைஇ,
விழவிற் செலீஇயல் வேண்டும், மன்னோ!
யாணர் ஊரன் காணுநன் ஆயின்
வரையா மையோ அரிதே''.

— நற்றிணை 390 : 1-8

பரத்தை, ஆடவர் தேடும் வெறியோடு தெருக்களில் வரும்போது, மனைவியர், தத்தம் கணவரை விழிப்போடு காத்துக்கொள்ள வேண்டும். தலைவியை, அவள் தோழி இவ்வாறு எச்சரிக்கிறாள். ''கள்ளமிலா நோக்கமைந்த அழகிய கண்கள், மயிர்ச்சாந்தணிந்து மணம் ஊட்டப்பெற்ற கூந்தல், பருத்த தோள்கள், ஒழுங்குற வளர்ந்த வெண்பற்கள், திரண்டு நெருங்கிய துடைகள் ஆகிய இத்தகு சிறப்புகளால் ஒப்புயர்வற்ற பேரழகியாகிய பரத்தை, அழகிய தழையாடை உடுத்து, விழாநிகழ் களம் பொலிவுபெற வந்து நின்று விட்டாள். அவள் பார்வையினின்றும் நம் கணவரைக் காக்க, தோழிமீர்; எழுமினோ எழுமின்!''

''மடக்கண், தகரக் கூந்தல், பணைத்தோள்,
வார்ந்த வால் எயிற்றுச், சேர்ந்துசெறி குறங்கின்
பிணையல் அந்தழைத் தைஇத், துணை இலள்,
விழவுக்களம் பொலிய வந்துநின் றனளே;
எழுமினோ எழும்ன்எம் கொழுநர்க் காக்கம்''

— நற்றிணை : 170 : 1-5

ஆடவரை அடிமைகொள்ளும் பரத்தையரின் முயற்சி பற்றிய மற்றொரு காட்சி இதோ; ''ஊரில் விழாவும் முடிந்து விட்டது, முழவின் முழக்கமும் அடங்கி விட்டது; இந்நிலையில் இவள் யாது கருதினளோ என்று கேட்பாயேயாயின், கூறுகிறேன் கேள். ஒரு நாள் தழை ஆடை உடுத்து, அத்தழை

ஆடை அசையும் அல்குலை உடையவளாய்த் தெருவின்கண் இப்பரத்தை சென்றாள். அவ்வளவே; பழைய வெற்றிகள் பல கொண்ட மலையமான் திருமடிக்காரி, அவ்வோரிக்கு உரிய நகரின் ஒப்பற்ற பெரியதெருவில் வெற்றிக்களிப்போடு புகுந்தானாக, அதுகண்ட ஓரியின் மக்கள் ஒன்றுதிரண்டு ஆரவாரப் பேரொலி எழுப்பினாற்போல, இவ்வூரிலும் ஆரவாரப்பேரொலி எழுந்துவிட்டது. அது கேட்டதும், ஆராய்ந்து கொண்ட, சிறந்த வளையல்களை அணிந்த அழகிய மேனியை உடைய இவ்வூர் மகளிரெல்லாம், தங்கள் கணவன் மார்களை, அவள் கண்ணில் படாவாறு காத்துக்கொண்டனர்; அதனால் இவர்களும் நன்மை அடைந்தார்கள். நடந்தது இதுதான்.''

''விழவும் உழந்தன்று; முழவும் தூங்கின்று;
எவன்குறித் தனள்கொல் என்றி யாயின்,
தழைஅணிந்து அலமரும் அல்குல் தெருவின்
இளையோள் இறந்த அனைத்திற்குப், பழவிறல்
ஓரிக் கொன்ற ஒருபெரும் தெருவில்
காரி புக்க நேரார் புலம்போல்
கல்லென் றன்றால் ஊரே, அதற்கொண்டு
காவல் செறிய மாட்டி, ஆய்தொடி
எழில்மா மேனி மகளிர்
விழு மாந்தனர், தம் கொழுநரைக் காத்தே''.

— நற்றிணை: 320

அளவுக்கு மீறிய பரத்தையர் ஒழுக்கம், இல்லற வாழ்க்கையில் பெரிய பூசலுக்கு வழிவகுத்துவிட்டது. ஊடல் எனப்படும், கணவன் மனைவியர்களுக்கிடையேயான சிறு பூசல், மருதத்திணை சார்ந்த பாடல்களின் கருப்பொருளாகி விட்டது. கீழ் வரும் பாட்டு அது குறித்தது. ''வெள்ளிய நெற்கதிரை அறுவடை செய்யும் உழவர் முழக்கும் தண்ணுமை ஒலிக்கு அஞ்சி, அவ்வயலில் அடங்கியிருந்த பறவைகள்

எல்லாம் எழுந்தோடி நெருங்க அமர்தலால், வயல்மீது தாழ வளைந்திருக்கும் கிளைகளையுடைய மருதமரத்தின், பூங்கொத்துக்கள் உதிரா நிற்கும், இரவலர்க்குக் கொடைப் பொருளாகத் தேர்களையே வழங்கும் வள்ளலாகிய விரான் என்பானுக்குரிய சிறந்த இருப்பையூர் போன்ற என் அழகெல்லாம் கெடுவதாயினும் கெடுக; என்னை நெருங்கு உன்னை விடுவேனல்லேன். நெருங்கவிட்டால், என்வாய் உன்னை விலக்கினும், என் கைகள் உன்னை அணைத்துக் கொள்ளும். ஆனால், நீயோ பரத்தையின் மார்பால் மாசுபட்ட சந்தனம் பூசப்பட்ட மார்பினை உடையாய்; அப்பரத்தை தழுவியதால் வாடிய மாலையினை உடையாய்; அத்தகைய உன்னைத் தொடுவது, தொட்டத்தகாதன எனக் கழித்துவிட்ட தாழி முதலாம் கலங்களை எடுத்து ஆள்வதற்கு ஒப்பாகும். ஆகவே என் மனைக்கு வாரற்க; உன்னை அணைத்த அப்பரத்தை நெடிது வாழ்க".

"வெண்நெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக், கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுணர் உதிரும்
தேர்வண் விராஅன் இருப்பை அன்னஎன்
தொல்கவின் தொலையினும் தொலைக; சார
விடேஎன்; விடுக்குவ னாயின், கடைஇக்
கவவுக்கை தாங்கும்; மதுகையம் குவவுமுலை
சாடிய சாந்தினை; வாடிய கோதையை;
ஆசில் கலம் கழீஇ யற்றும்;
வாரல்; வாழிய! கவைஇநின் றோளே".

—நற்றிணை: 350

கணவன் பிழையை, மனைவி, ஒரோவழி மன்னித்து, அவனை ஏற்றுக் கொள்வதும் உண்டு. "பாணனே! அருகே வருக! நல்ல அணிகலன்களை அணிந்த என் மனைவி, சுற்றத்தார் அனைவரும் கூடியிருந்து ஓம்ப, முதல் சூல் உடையாளாகி

மகவு ஈன்று, நம் குடிவளர வழிசெய்து, நெய்யோடு கலந்து வெண்சிறுகடுகாம் விதைகளை நம் மாளிகையெங்கும் விளங்கப் பூச, பாயலில் படுத்திருந்தவளை நெருங்கி அழகிய கூந்தலை உடையாய் என அழைத்து, மகனை ஈன்றதனால், தாய் எனும் புதுப்பெயரும் பெற்று, வரிகளும் தித்திகளும் உடைய அல்குலும் உடைய முதுபெண்டுமாகித் துயிலா நின்றனையே! என்னே நின் சிறப்பு! எனப் பலப்பல கூறிப் பாராட்டி, மகவு ஈன்று மாண்புற்ற அவள் அழகிய வயிற்றை, என் கைக்குவளை மலரால் தடவிக் கொடுத்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தேன் போல் சிறிது பொழுது அங்கு நின்றிருந்த என்னை, மெல்ல நோக்கி, முல்லையின் அரும்புகள் போலும் பற்கள் தோன்ற சிறிதே நகைத்துப் பின்னர், வெட்கம் வந்துறவே, நிலமலர் போலும் கண்களைத் தன் கைகளால் மூடிக்கொண்டு மகிழ்ந்த காட்சி, எனக்கு நகை தருவதாய் இருந்தது. அது குறித்து நகைத்து மகிழ பாணனே! வருக''.

''வாராய் பாண! நகுகம், நேரிழை
கரும்புடைக் கடுஞ்சூல் நம் குடிக்கு உதவி,
நெய்யோ டிமைக்கும் ஐயவித் திரள்காழ்
விளங்குநகர் விளங்கக் கிடந்தோள் குறுகிப்,
புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து, அவ்வரித்
திதலை அல்குல் முதுபெண் டாகித்,
துஞ்சுதியோ? மெல் அஞ்சில் ஓதி; எனப்
பன்மாண் அகட்டில் குவளை ஒற்றி
உள்ளினென் உறையும் எற்கண்டு, மெல்ல
முகை நாண் முறுவல் தோற்றித்
தகைமலர் உண்கண் புதைத்துஉவந் ததுவே''

—நற்றிணை: 370

தலைவியின் சினம் பெரும்பாலும் தணிவது இல்லை; அவன் வாயில் வேண்டிப் பாணர் நன்பனைத் தூதாக்கினும், அது பயன் அளிப்பதில்லை. சினம் மாறா ஒரு

மனையோள் கூறுவது இது: "பாணனே! மகப்பெற்றதனால் உற்ற வாலாமை நீங்க எழுப்பிய புகையும் படிந்து, புதல்வனுக்குத் தீட்டும் மையும் இழுகி, ஆடையும் அழுக்குப் படிந்துளது. சுணங்கால் அழகு பெற்ற இளைய கொங்கையின் இனியபால் பெருக, அது கரப்பப் புதல்வனை அணைத்துக் கொண்டமையால் தோளும் முடை நாற்றம் வீசுகிறது; ஆகவே, இவை போல்வனவற்றால் தூய்மை கெட்டுப் போகாமல் புதுப்பொலிவோடு இருப்பவரும், நல்ல பல அணிகளை அணிந்தவரும் ஆகிய பரத்தையர் சேரிக்கண் தேரில் திரிந்து கொண்டிருக்கும் உன் தலைவனுக்கு, நான் தகுதியுடையவள் அல்லள். அதனால், பொன்கம்பி போன்ற நரம்புகளைக் கொண்ட யாழில் எழும் இசைக்கு ஏற்ப, இன்குரல் எடுத்துப் பாடுதலில் நீ வல்லவனே ஆயினும், கருதி வந்ததைப் பெறுவான் வேண்டி, என்னைத்தொழுது பாடுவது செய்யற்க. குளிர்ந்த நீர்த்துறைகளால் நிறைந்த நல்ல ஊருக்கு உரியோனாகிய உன் தலைவனை இங்கிருந்து கொண்டு சென்று விடுவாயாக. பலராலும் பாராட்டப்பெறும் தகுதியுடையதாகிய என் மனையில் இருந்து நீ பாடாதவாறு, தெருவில் நெடும்பொழுது நிற்குமாறு தேரில் பூட்டப் பட்டிருக்கும் குதிரைகளும் அந்நிலையை வெறுத்துக் குரல் எழுப்புகின்றன. ஆகவே, நான் விரும்பாதநிலையில், பயனில் சொற்களை மேலும் கூறிக்கொண்டு நிற்கவேண்டாம்."

"நெய்யும் குய்யும் ஆடி, மையொடு
மாசுபட் டன்றே கலிங்கமும்; தோளும்
திதலை மென்முலைத் தீம்பால் பிலிற்றப்
புதல்வற் புல்லப் புனிறுநா றும்மே;
வாலிழை மகளிர் சேரித் தோன்றும்
தேரோற்கு ஒத்தனெம் அல்லேன்; அதனால்
பொன்புனை நரம்பின் இன்குரல் சீறியாழ்
எழாஅல், வல்லை ஆயினும்; தொழாஅல்;

கொண்டுசெல், பாண! நின் தண்துறை ஊரனை;
பாடுமனைப் பாடல் கூடாது, நீடுநிலைப்
புரவியும் பூண்நிலை முனிகுவ;
விரகில மொழியல்; யாம் வேட்டது இல்வழியே":

—நற்றிணை : 380

போற்றா ஒழுக்கம் உடையராகிய பரத்தையரின் பிடிக்குள் அகப்பட்டுக்கொள்ளும் ஆடவர் செய்யும் தவறுகளுக்கு அளவே இராது என்பது நோக்கி, கணவரை ஏற்க மறுக்கும் மனைவியரின் பிடிவாதத்தின் நியாயத்தன்மை உணரப்படும் பரத்தையர் ஒழுக்கம் கொண்ட கணவனால் புறக்கணிக்கப்பட்டாள் ஒருத்திக்கு அவள் தோழி கூறுவது, இது; "அன்னை போலும் அன்புடையாய்! நறிய நெற்றியையுடைய அரிவையே! காதில் குழை அணிந்து மார்பில் மாலை சூடி, கையில் தொடி அணிந்து விழாக் களத்தில் துணங்கை ஆடிக்கொண்டிருக்கும் தலைவனைக் கைப்பற்றிக் கொண்டுவந்து விடலாம் என்று, என் அறியாமையால் ஆசைப்பட்டு, விழாக்களம் நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் போது, நம்மிடம் அயலான் போல் நடந்துகொள்ளும் அவன், நெடிய பெரிய தெருக்கோடியில், ஒரு வளைவான இடத்தில் வேறு ஒரு வழியாகத் திடுமென வந்து எதிர்ப்பட, அவனை, "மனையாளைப் பிரிந்து பரத்தையர் பின் திரியும் உன்னைக் கண்டித்துக் கேட்பார் யாரேனும் உளரோ? அல்லது ஒருவருமே இலரோ" என்று நான் கேட்க, அவன் அது பற்றி ஏதும் கருதாதான் போல், என்னைப் பார்த்து, "உன் நெற்றிப் பசலை நனிமிகு அழகு" என்று கூறினான். அவ்வாறு கூறவே சினத்தால் அறிவிழந்து போகவே, அவன், பகைவராலும் பாராட்டத்தக்க பெரும் சிறப்புடையான் என்பதை மறந்துவிட்டு, "நண்ப! நீ ஒரு நாணிலி" எனக் கடிந்து கூறிவிட்டேன்."

"அறியா மையின் அன்னை! அஞ்சிக்,
குழையன், கோதையன், குறும்பைந் தொடியன்;

விழவயர் துணங்கை தழூஉகம் செல்ல,
நெடுநிமிர் தெருவில் கைபுகு கொடுமிடை,
நொதுமலாளன் கதும்எனத் தாக்கலின்,
"கேட்போர் உளர்கொல்? இல்லை கொல்? போற்று" என
'யாஅது பசலை', என்றனன்; அதன் எதிர்'
''நாணிலை எலுவ!'' என்று வந்திசினே;
செறுநரும் விழையும் செம்மலோன், என,
நறுநுதல் அரிவை! போற்றேன்;
சிறுமை பெருமையின் காணாது, துணிந்தே'':

— நற்றிணை : 50

துணங்கையாவது, ஆடவரும் பெண்டிரும் பங்கு கொள்ளும் ஒருவகை ஆடல்; ஆடுங்கால், கைகளை வளைத்து ஒருவரையொருவர் தழுவிக்கொள்வர், அது, மக்களைப் போலவே, பேய்களுக்கும் பொதுவானது. ''கண்டாரை உளம் நடுங்கப்பண்ணும் நடையும், கண்டார்க்கு அச்சம் ஊட்டும் உருவமும் உடைய பேய்மகள், செங்குறுதி துழாவிய கூரிய நகங்களைக் கொண்ட விரல்களால் கண்களைத் தோண்டி உண்ணப்பட்டுவிட்ட முடை நாற்றம் உடைய கரிய பிணத்தின் தலையைத், தொடியணிந்த கையில் ஏந்திக் கொண்டு, பகைவர்க்கு அச்சம் வருமாறு, எதிர் சென்று அழிக்கும் போர்க் களத்தைப் பாடித், தோள் குலுங்க அப்பிணத்தைத் தின்னும் வாயுடையவளாய்த் துணங்கைக் கூத்து ஆடாநிற்கும்''.

''உருகெழு செலவின், அஞ்சுவரு பேய்மகள்,
குருதி ஆடிய கூருகிர்க் கொடுவிரல்,
கண் தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி, வெருவர
வென்றுஅடு விறற்களம் பாடித், தோள்பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க''.

— திருமுருகாற்றுப்படை : 51-56

யாழ் இசைக்கும் பாணரும், கூத்து ஆடும் கூத்தரும் கூத்தியரும், நடனமாடும் விறலியரும் ஒன்றுகலந்தே வாழ்வர்; ஒருவருக்கு ஒருவர் துணைபுரிந்து கொள்வர்; அவர்கள், பெரும்பாலும் பேரரசர்களாலும், குறுநிலத் தலைவர்களாலும் பேணப்படுவர். அவர்களில் ஒரு குழுவினர், ஒருமுறை, பெரிய வில்லாளனாகிய ஒரு குறுநிலத் தலைவனைச் சென்று கண்டனர். அவர்களுள் தலைவன், பாணன். ஆகவே, அவன் ஏனையோரை நோக்கி, "நான் பாடுகிறேன், விறலி; நீங்களெல்லாம் முழவினை முழக்குங்கள், யாழ்களில் பண்ணிசை எழுப்புங்கள்; களிற்றின் தொங்கும் கைபோலும் தூம்பு எனப்படும் பெருவங்கியத்தை இசையுங்கள்; எல்லரி எனப்படும் சல்லியை வாசியுங்கள். ஆகுளி எனப்படும் சிறுபறையை அறையுங்கள்; பதலை எனப்படும் ஒருகண் மாக்கிணையின் ஒரு பக்கத்தை மெல்லக் கொட்டுங்கள்; நமது தொழில் உணர்த்தும் அடையாளக் கோலாம் மதலை மாக்கோலை என்னைத் தாருங்கள்";

"பாடுவல்; விறலி! ஓர் வண்ணம், நீரும்
மண்முழா அமைமின்; பண்யாழ் நிறுமின்;
கண்விடு தூம்பின் களிற்றுயிர் தொடுமின்;
எல்லரி தொடுமின்; ஆகுளி தொடுமின்;
பதலை ஒருகண் பையென இயக்குமின்;
மதலை மாக்கோல் கைவலம் தமின்".

—புறம் : 152 : 13-18

பாட்டுடைத் தலைவன், அவர்களுக்கு இறைச்சி கலந்த உணவும், இனிய மதுவும், பொன்னும் நிறையத் தருவன் என்பது கூறத் தேவை இல்லை. பாணன் கூற்றில் கூறுவதானால், "வேட்டையில் தான் எய்து கொன்ற மானின் நிணத்தோடு கூடிய இறைச்சியாம் பக்குவமாகப் பண்ணப் பட்ட உணவோடு, உருக்கிய ஆன் நெய்போலும் மதுவையும் தந்து, தன் மலையில் கிடைத்த கலப்பில்லாத பொன்னோடு, பல்வகை மணிக்குவியல்களையும், வாங்கிக் கொள்ளுங்கள்,

வாங்கிக் கொள்ளுங்கள் என, வழிநடையில் வாரி வழங்கினான்'':

''வேட்டத்தில்
தான் உயிர் செகுத்த மான்நிணப் புழுக்கோடு
ஆன்உருக் கன்ன வேரியை நல்கித்,
தன்மலைப் பிறந்த தாவில் நன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மெனச்,
சுரத்திடை நல்கி யோனே'': (புறம்: 152 : 25-30)

கடற்கரைத் துறைமுகங்கள்:

கிறித்துவ ஆண்டின் தொடக்கத்தில், உரோமாபுரியோடு நடைபெற்ற வாணிகத்தில் மிகப்பெரிய வளர்ச்சியோடு, கடற்கரை நகரங்களும் மிகவும், முக்கியத்துவம் உடையவாக உயர்ந்துவிட்டன. அவ்வாறே இலக்கியங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. கிழக்குக் கடற்கரையில் வடகோடியில் குறிப்பிடக் கூடியது, பிற்காலத்தில் மல்லை என்றும், மேலும் பிற்பட்ட காலத்தில் மகாபலிபுரம் என்றும் அழைக்கப் பட்டதான மாவிலங்கைத் துறைமுகமாம். ''விளையாடும் கூட்டமாகிய சிறந்த தொடி அணிந்த மகளிர், பன்றிகள் உழுது சேறாக்கிய மண்ணைக் கிளறினால், அதன்கண் புலால் நாறும் ஆமை முட்டைகளையும், தேன் நாறும் ஆம்பல் கிழங்குகளையும் பெறும் மண்வளமும், இழும் எனும் ஒலி ஓயாது ஒலிக்குமாறு நீரை வெளிப்படுத்திக்கொண்டே இருக்கும் மதகுகளைக் கொண்ட நீர்வளமும் உடைய பெருமைமிக்க மாவிலங்கை''.

''ஓரை ஆயத்து ஒண்தொடி மகளிர்,
கேழல் உழுத இருஞ்சேறு கிளைப்பின்,
யாமை ஈன்ற புலவுநாறு முட்டையைத்
தேன்நாறு ஆம்பல் கிழங்கொடு பெறூஉம்
இழும்என ஒலிக்கும் புனலம் புதவின்
பெருமா விலங்கை''. —புறம்: 176: 1-6

இத்துறைமுகம் மற்றுமோர் இடத்தில், "மணம் நாறும் மலர்களையுடைய சுரபுன்னை, அகில், சந்தனம் ஆகிய மரங்களை நீராடும் துறையில் நீராடும் மகளிர்களின் தோள்களுக்குத் தெப்பம் ஆகித் துணைபுரியுமாறு, கரைகளைக் குத்தி அழிக்கும் பெருவெள்ளம் அடித்துக் கொண்டுவந்து தரும் ஆற்றுவளம் மிக்கதும், அழிக்கலாகா ஆற்றல் வாய்ந்த தொல்பெரும் நகராம் இலங்கையின் பெயரைத், தான் தோன்றிய போதே பெற்றதுமாகிய மாவிலங்கை" எனக் கூறப்பட்டுளது.

"நறுவீ நாகமும், அகிலும், ஆரமும்
துறையொடு மகளிர்க்குத் தோள் புணை ஆகிய
பொருபுனல் தரூஉம் போக்கரும் மரபின்
தொன்மா இலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா விலங்கை" —சிறுபாணாற்றுப்படை : 116-120

காவிரி கடலொடு கலக்குமிடத்தில், தொல்லூழிக் காலத்திலிருந்தே புகழ் பெற்றிருந்த புகார் அல்லது காவிரிப் பூம்பட்டினம் இடம் பெற்றுளது. ஆகவே, அது பல பாடல்களில் கூறப்பட்டுளது. அப்புகார்த் துறைமுகம் "மேலே விரித்த பாயைச் சுருட்ட வேண்டாமலும், ஏற்றிய பாரங்களை இறக்கி விடவேண்டாமலும், ஆற்றுமுகத்துத் துறைமுகத்துள் புகுந்த பெரிய கலத்திலிருந்து பணியாட்கள், பண்டங்களை, இடைநிலை நகருக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும்" சிறப்புடையதாகக் கூறப்பட்டுளது.

"மீப்பாய் களையாது, மிசைப்பரம் தோண்டாது,
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம், தகாஅர்,
இடைப்புலப் பெருவழிச் சொரியும்"
—புறம் : 30 : 11-13

பூக்கள் உதிர்ந்து பரந்து கிடக்கும் அகன்ற துறைகளையுடைய காவிரியாகிய பெரிய ஆற்றின் பெருக்கெடுத்து வரும் வெள்ளநீர், நுண்மணல் திரளுமாறு மேடாக்கிய வெண்மணற்

குவியல்களையும், புது வருவாய்களையும் உடைய ஊர்களை உடைய செல்வவளம் மிக்க சோழவேந்தர்களால் புரக்கப் படும் உலகமெல்லாம் பாராட்டும் நன்மை மிக்க நல்ல புகழ் உடையதான நான்மறைகளாம் பழம் நூல்களை அளித்த முக்கண் செல்வன் கோயில் கொண்டிருக்கும் ஆலமுற்றம் என்னும் இடத்தில் அழகுற எடுக்கப்பட்ட பொய்கைகளைச் சூழ்ந்திருக்கும் பூஞ்சோலைகளில், மனையுறை மகளிர், அழகுறச் செய்யப்பட்ட மணற் பாவைகளை வைத்து விளையாடும் துறையினை உடையதும், மகரக் கொடிகளை உச்சியில் கொண்ட வானளாவ உயர்ந்த மதிலையும், முடி அறியப்படாவாறு மிக உயர்ந்த மாளிகைகளையும் உடைய புகார்'' என்றும், ''பூக்கள் மலர்ந்து மணக்கும் நீண்ட உப்பங்கழிகளின், நடுவண், பெரும்புகழ் வாய்ந்த காவிரியின் கரைக்கண் உள்ள நகரம்'' என்றும் கூறப்பட்டுளது.

''பூவிரி அகல்துறைக் கணைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேரியாற்று அயிர்கொண்டு ஈண்டி
எக்கர் இட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்,
ஞாலம் நாறும் நலங்கெழு நல்இசை
நான்மறை முதுநூல் முக்கண் செல்வன்
ஆல முற்றம் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்
கைசெய் பாவை துறை.......
மகர நெற்றி வான்தோய் புரிசைச்,
சிகரம் தோன்றாச் சேண்உயர் நல்இல்
புகாஅர்'' —அகம் : 181 : 11-22

''பூவிரி நெடுங்கழி நாப்பண்; பெரும்பெயர்க்
காவிரிப் படப்பைப் பட்டினம். —அகம் : 205 : 11-12

இரண்டு பாடல்களில் கூறப்பட்டிருக்கும், புறந்தை எனப்படும் புறையாறு, கிழக்குக் கடற்கரையில் உள்ள மற்றொரு துறைமுகப்பட்டினம், "பெரிய அலைகள், ஒலியோடு, இயக்கமும் அடங்கியிருந்த, மேகம் சூழ்ந்த இரவில், கொழுத்த மீன்களைப் பிடிக்கும் பரதவர், பரந்த கடலில், தங்கள் மீன்பிடி திமில்களில், கடலின் இருளும் நீங்குமாறு ஏற்றியிருக்கும் விளக்குகள், போரில் புறம் காட்டாக் கோட்பாட்டினை உடைய வேந்தன் பாசறைக்கண் உள்ள, ஓயாது ஆடிக்கொண்டேயிருக்கும் இயல்புடையவாய, போர்யானைகளின் அழகிய முகத்தில் பூட்டியிருக்கும் முகப்படாங்களின் ஒள்ளிய சுடர்போலத் தோன்றும் இடமாகிய, பாடிவரும் இரவலர்களைப் பிறரிடம் செல்லாவாறு வளைத்துக் கொள்ளவல்ல கைவண்மை வாய்ந்த கோமகனாகிய, குதிரைகள் பூண்ட சிறந்த தேர்ப் படையுடைய பெரியன் என்பானுக்கு உரிய, மலர் விரிந்த கொத்துக்களைக் கொண்ட புன்னை மரங்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட புறந்தை" என்றும், "கள் உண்டு மகிழ்ந்திருப்பவனும், நல்ல தேர் உடையவனும் ஆகிய பெரியன் என்பானுக்கு உரிய, கள் மணக்கும் பொறையாறு" என்றும் கூறப்பட்டுளது.

"பெருந்திரை, முழக்கமொடு இயக்குஅவிந் திருந்த
கொண்டல் இரவின் இருங்கடல் மடுத்த
கொழுமீன் கொள்பவர் இருள்நீங்கு ஒண்சுடர்
ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை
ஆடியல் யானை அணிமுகத்து அசைத்த
ஓடை ஒண்சுடர் ஒப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நற்றேர்ப் பெரியன், விரியினர்
புன்னையம் கானல் புறந்தை முன்துறை"

—அகம் ; 100 : 5 - 13

''நறவுமகிழ் இருக்கை, நற்றேர்ப் பெரியன்
கள்கமழ் பொறையாறு'' —நற்றிணை : 131 : 7 - 8

பாண்டியரின் முக்கியத் துறைமுகம், கொற்கை; அது முத்துக்கள் விளைகின்ற பரந்த கடலையுடைய கொற்கை நகரத்து முன்புள்ள துறைமுகம்; ''முத்துப்படு பரப்பின் கொற்கை முன்துறை'' (நற்றிணை : 23 : 6) என்றும், வீரம் செறிந்த போரில் வல்ல பாண்டியர்கள், அறநெறி கெடாது காக்கும் அழகிய கொற்கைப் பெருந்துறையில் கொள்ளும் முத்து; ''மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும் கொற்கைஅம் ''பெருந்துறை முத்து'' (அகம் : 27 : 9 - 10) என்றும், ''வீசும் அலைகள் கொண்டுவந்து குவிக்கும், குளிர்ந்த இனிய ஒளியினையுடைய முத்துக்கள், ஊர்பவர் விரும்புமாறு நடக்கும் குதிரைகளின் கால் வடுக்களை மறைக்கும் நல்ல தேரையுடைய பாண்டியரது கொற்கை''. ''இவர்திரை தந்த ஈர்ங்கதிர் முத்தம், கவர்நடைப் புரவிக் கால்வடு தபுக்கும் நற்றேர் வழுதி கொற்கை'' (அகம் : 130 ; 9 - 11) என்றும், வெற்றியே காணும் போரில் வல்லவர்களாய பாண்டியரது, புகழ் மிக்க சிறப்பினையுடைய கொற்கை முன்துறையில் கிடைக்கும் ஒளி வீசும் முத்துக்கள் : ''விறல் போர்ப் பாண்டியன், புகழ்மலி சிறப்பின் கொற்கை முன்துறை அவிர் கதிர் முத்தம்'' (அகம் : 201 : 3 - 5) என்றும், கடல்நீர்ப் பரப்பில் சென்று, பல மீன்களையும் பிடிப்பவர், அவற்றுடன் சேரக்கொண்ட முத்துச் சிப்பிகளை, நாரால் வடித்து எடுக்கப் பட்ட கள்ளின், மகிழ்ச்சி மிக்க விலையாகக் கொடுக்கும், மிக்க புகழ் வாய்ந்த கொற்கை''. ''பரப்பில் பன் மீன் கொள்வர் முகந்த சிப்பி, நாரரி நறவின் மகிழ்நொடைக் கூட்டும் பேரிசைக் கொற்கை'' (அகம் : 296 ; 8 - 10) என்றும், விளங்கும் பெரியகடலில், எதிர்த்தாரைக் கொல்லும் சுறாமீன்களை நீக்கிவிட்டு வலம்புரிச்சங்குகளை மூழ்கிக் கொணர்ந்த பெரிய மீன்பிடி படகுகளை உடைய பரதவர், பிடித்த அச்சங்குகளின் கல்லெனும் ஒலியினை முழக்க ஆரவாரம் மிக்க கொற்கை நகரத்தார் வரவேற்கக் கரை சேர்வர்'' என்றும் பாராட்டப்பட்டுளது;

"இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி,
வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்
ஒலித்தலைப் பணிலம் ஆர்ப்பக் கல்எனக்
கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்";

— அகம் : 350 : 10 - 13

சேரர்களின் முக்கியத் துறைமுகம் முசிறி. "சேரர்க்கு உரிய சுள்ளியாகிய பேரியாற்றின் வெள்ளிய நுரைகள் சிதறி விலகுமாறு, யவனர்கள் கொண்டுவந்த அழகிய வேலைப் பாட்டால் சிறப்புற்ற மரக்கலம், பொற்காசுகளோடு வந்து மிளகுப் பொதிகளோடு மீளும், வளம் மிக்க முசிறி".

"சேரலர்,
சுள்ளியம் பேரியாற்று வெண்நுரை கலங்க,
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளம்கெழு முசிறி". — அகம் : 149 : 7 - 11

மீன் விற்று விலையாகப் பெற்ற நெல்லைக் குவித்து, அந்நெல்லைத் தோணிகளில் ஏற்றிவந்து மனைகளில் நிறைத்து மனைகளில் குவிந்து கிடக்கும் மிளகுப் பொதிகளைப் பேரொலி மிக்க கடற்கரையில் தாறுமாறாகப் போட்டு வைப்பர். கலங் களில் வந்த பொற்காசுளை உப்பங்கழிகளில் நிற்கும் தோணி களில் கரை சேர்ப்பர். மலைபடு பொருள்களையும் கடல்படு பொருள்களையும் ஒன்று கலந்து, வந்து புகழ் பாடுவார்க்கு வழங்குவர். கள்வளம் மிக்கதும், பொன்மாலை அணிந்த சேரர்க்கு உரியதுமான, முழங்கும் கடல்போல் முரசு முழங்கும் முசிறி,

"மீன் நொடுத்து நெல் குவைஇ,
மிசை அம்பியின் மனை மறுக்குந்து;
மனைக் குவை இய கறிமூடையால்
கலிச் சும்மைய கரைகலக் குந்து;

கலம் தந்த பொற்பரிசம்
கழித்தோணியால் கரை சேர்க்குந்து ;
மலைத்தாரமும் கடல்தாரமும்
அலைப்பெய்து வருநர்க்கு ஈயும்
புனலம் கள்ளின், பொலந்தார்க் குட்டுவன்,
முழங்கு கடல் முழவின் முசிறி'';

—புறம் : 343 : 1 - 10

கடற்கரை வாழ் மக்கள், கடலில் கலங்கள் கவிழ்ந்து போவதை அறிந்திருந்தனர். அதனால்தான் அடுத்துவரும் பாட்டில், அழகிய உவமை இடம் பெற்றுளது: "பாணன் கையில் உள்ள, யாழுக்கு உரிய இலக்கணப் பண்புகளோடு கூடிய நல்ல யாழ், அழகிய வண்டுகள் போல இம் எனும் இசை எழும், நீ வழக்கமாக வரும் தெருவில், நீ வருவதை எதிர் பார்த்து உன்மார்பை, முன்பு தமக்கு உரியதாகப் பெற்றிருந்த, சிறந்த அணிகளை அணிந்திருந்த பரத்தையர் பலரும், நீ கைவிட்டு விட்ட கவலையால், கண்களிலிருந்து வெப்பம்மிகுந்த கண்ணீர் சொரிந்தவாறே, கொடிய புயல்காற்று கடுமையாக வீசுவதால் துன்புற்றிருந்தபோது, கடலில் தாம் ஏறியிருந்த மரக்கலம் கவிழ்ந்துவிட, மேலும் கலக்கமுற்றுத், தாமும் ஒரு சேரக் கடலில் வீழ்ந்து, ஆண்டு மிதந்துவந்த ஒரு பலகையை, வீழ்ந்த அனைவரும் ஒருசேரப் பற்றிக்கொண்டு, தாம் தாம் தனித்தனி இழுப்பது போல, உன் கைகளைப் பற்றி, அவரவர் தத்தம் பக்கம் இழுக்க, அவரிடை அகப்பட்டு நீ வருந்திய வருத்தத்தை நான் கண்கூடாகக் கண்டேன் ; கண்ட என்னால் யாது செய்ய இயலும்?''

''கண்டனென் ; மகிழ்ந ! கண்டு எவன்செய்கோ ?
பாணன் கையது பண்புடைச் சீறியாழ்
யாணர் வண்டின் இம்மென் இமிரும்
ஏர்தரு தெருவின் எதிர்ச்சி நோக்கி, நின்
மார்புதலைக் கொண்ட மாண் இழை மகளிர்,
கவலே முற்ற வெய்து வீழ் அரிப்பனி,

கால் ஏழுற்ற பைதடு காலைக்
கடல்மரம் கவிழ்ந்தெனக், கலங்கி, உடன்வீழ்பு
பலர் கொள் பலகை போல
வாங்க வாங்க நின் தூங்கு அனுர் நிலையே''

—நற்றிணை : 30

இந்த அதிகாரத்தில் எடுத்துக் காட்டப்பட்ட பல செய்யுள்களிலும், இயல்பான அல்லது கற்பனைத் திறமான இந்தியக் கலையின் முழு முதல் மூலமாம் சிறப்பியல்புகளைத் தனியே காணலாம். இந்தியக் கலையின் நோக்கம், தொடக்க நிலையில் அழகு படுத்துவதே; ஒன்றைப் பார்த்து, அதைப் பின்பற்றுவதன்று. கலைஞன், இலக்கியப் பொருளாகிவிட்ட இயற்கைப் பொருட்களை, 'இற்று' என்னல் போல், உள்ளது உள்ளவாறே கூறிவிடுவதை விரும்பவில்லை; மாறாகத், தன் கையில் கிடைத்த அப்பொருளை அழகுபடுத்தவே விரும்பினான். அவ்வாறு அழகு செய்வதற்கான அளவிற்கு எல்லையே இல்லை. எடுத்துக் கையாண்ட பொருளின் ஒவ்வொரு சிறு கூறும், இயற்கையோடு கூடியதாகத் தெளிவாகப் புலப்படவல்ல, அணிகளின் சிறுகூறுகளால் அழகு செய்யப்பட்டிருக்கும். ஆகவே, செய்யுள் நடையில், ஒவ்வொரு பெயர்ச்சொல்லுக்கு முன்பும், ஒரு பெயரடைச் சொல் கொடுக்கப்படும். அவ்வாறு கொடுக்கப்படும் அடை, ஒரு தொடராக அமைந்துவிடின், அத்தொடரில் இடம் பெற்றிருக்கும் ஒவ்வொரு பெயர்ச்சொல்லின் முன்னும் ஒரு பெயரடை கொடுக்கப்படும். இம்முறை, கிரேக்கக் கலைக் கொள்கைகளில் பயிற்சி பெற்றிருக்கும் ஓர் உள்ளத்தைக் குழப்பத்திற்கு உள்ளாக்கி, ஆங்கிலத்திற்கு மொழி பெயர்ப்பதை மிகக் கடினமாக்கும் வகையில், முழுச் செய்யுளையும் நோக்கும்போது, ஓவியங்களால் ஒப்பனை

செய்யப்பட்ட வாயில் கோபுரம் போல் தோன்றும்வரை தொடர்ந்து நடைபெறும். தென்னிந்தியக் கலைஞர்களின் உள்ளம், வெப்ப மண்டலக் காடுகளில், இலைகள் மலர்கள் ஆகியவற்றின் தங்குதடையற்ற வளமைக்கு அடிமைப்பட்டுப் போனதன் விளைவான, அவைபற்றிய ஆழ்ந்த சிந்தனை, அக்காலத்திய இந்தியக் கலை வளர்ச்சிக்குத் தூண்டுகோலாய் நின்றது.

— — —

## அதிகாரம் : XVIII

# கி. பி. முதல் ஐந்நூறு ஆண்டுகளில் வெளிநாட்டு வாணிகம்

### அகஸ்டஸ் காலம்

பேரரசர் அகஸ்டஸ் காலத்தில், ரோம் உடனான இந்திய வாணிகத்தில் மிகப்பெரு வளர்ச்சி இருந்தது. பல்மைரா (Palmyra) வில், உரோமானியரின் செல்வாக்கு உயர்வும், கிழக்கு மேற்கு நாடுகளுக்கிடையிலான வாணிகத்தின் முக்கிய வாணிக மையமாம் அலெக்ஸாண்டிரியாவில், உரோமானிய ஆட்சியின் உறுதிப்பாடும், இவ்வாணிகத்தின் விளைவான வளர்ச்சிக்குக் காரணங்களாயின. பேரரசுகள் நிலைகுலைந்து போவதற்கு, முடிந்த முடிவாக வழிகாட்டும், தங்களுக்குள்ளே எழும் உட்பூசல், இன்னமும் தோன்றவில்லை. ஆகவே, உரோமானிய ஆடவர், மகளிர்களில், புதுநடைப்பாணித் தலைவர்களிடையே, கீழ்நாட்டு நாகரிக அரும்பெறல் இன்பப் பொருட்கள்பால், கட்டுப்பாடற்ற இன்ப வேட்கை, தலை விரித்து ஆடலாயிற்று.

### உயிர்வாழ் விலங்குகளில் வாணிகம் :

இந்தியாவிலிருந்து, உரோமப் பேரரசுக்குள் இறக்குமதி செய்யப்பட்ட வாணிகப் பண்டங்கள் பற்றி, ஏராளமான செய்திகள், அக்காலத்திய, கிரேக்க இலத்தீன் நூல்களில் உள்ளன. பாலூட்டி உயிர் வளர்க்கும் விலங்குகள், பறவைகளிலான வாணிகம், நேரிடையாக, நில வழித்தடங்கள் மூலமாக நடைபெற்றது. நவநாகரீக நங்கையர், மதராஸ் மலபார், மற்றும் நீலகிரி வாழ், இந்திய நீண்ட வால்குரங்குகளாம் அனுமான்களை, அன்பு காட்டி வளர்க்கும் ஆசைப் பொருள்களாகக் கொண்டிருந்தனர். லாம்ப்ஸாகோஸ்

(Lampsacos) எனும் இடத்தில் கண்டெடுக்கப்பட்ட ஒரு வட்டத் தட்டில், ஒரு கிளி, வெள்ளைப் புள்ளிகளைக் கொண்ட சாம்பல்நிற ஒரு காட்டுக் கோழி, ஒரு புலி, ஒரு சிறுத்தை, அனுமான் குரங்குகள் புடைசூழ நிற்கும் ஒரு பெண்ணாக, இந்தியா உருவகம் செய்யப்பட்டுளது. இவற்றில், காட்டுக்கோழி, உண்மையில் ஆப்பிரிக்காவைச் சேர்ந்ததுதான் (Warmington page: 147). பிற அனைத்தும் இந்திய இனங்களே: கிளாடியஸ், காட்சிப் பொருளாகக் காட்டிய இந்தியப் புலிகளின் நான்கு வகை மாதிரிவடிவங்கள், பெரிய கருத்துருவைத் தோற்றுவித்துவிட்டன. கேலினஸ் (Gallienws) நினைவாக எழுப்பிய வளைவுக்கு அருகில் காணப்பட்ட, பல் வண்ணப் பட்டையொட்டு வழுவழுப்பான பகுதியில், தங்கள் விலங்கிரையைத் தின்னும் நான்கு புலிகளின் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது. பெட்ரோனியஸ் (Petroniws) அவர்கள் நூலின் ஒரு பகுதி, நீரோவின் ஆட்சியின்போது, பொன்கம்பிகள் கொண்டு காப்புச் செய்யப்பட்ட கூண்டில் இட்டுத் தூக்கிச் செல்லப்பட்டு, அகப்பட்டுக் கொண்ட மனிதர்களின் குருதியால் தெவிட்டுமளவு ஊட்டப்பட்ட ஒரு புலியைக் குறிப்பிடுகிறது (Warmington Page : 148). டொமிடியன் (Domitian) அவர்களால் மேலும் பல காட்டப்பட்டுள்ளன: உரோமப் பேரரசுக்குள் இறக்குமதி செய்யப்பட்ட பிற இந்திய விலங்குகள், எருமையும், யானையும், ஆம். கொல்லப்பட்ட யானைகள் பல கொண்டோனாகிய அகஸ்டஸ் காலத்தில் உரோமில், வெள்ளை யானை தனிக் கவர்ச்சி உடையதாய் இருந்தது. அப்பேரரசின் ஆட்சியில், பேரரசர்களின் தேர்களை ஈர்த்துச் செல்ல யானைகள் பயன் படுத்தப்பட்டன (Warmington Page: 152).

கிளிகளின் பல்வேறு வகைகள், உரோமானிய மகளிரின், அன்பிற்குரிய கூண்டுப் பறவைகளாயின. விலை உயர்ந்த மாணிக்கக் கற்கள் மீது பெருமளவில் செதுக்கப்பட்டன. அகஸ்டஸ் காலத்தில், அவை பிரம்புக் கூண்டுகளில் வைக்கப்பட்டன. ஆனால் மார்த்தியால் (Martial) ஸ்டேடியஸ் (Statius) ஆகியோர் காலத்தில், தந்தத்தாலான கூண்டுகளில்,

அல்லது தூரக்கிழக்கு நாட்டவரால் அளிக்கப்பட்ட உரோமானிய நாகரீகத்தின் உண்மையான படப்பிடிப்பை உணர்த்தவல்லதான, தந்தத்தால் அணி செய்யப்பட்ட, வெள்ளிக் கம்பிகள் துணை கொண்டு ஆமை ஓட்டினாலான கூண்டுகளில் வைக்கப்பட்டன. இரண்டாம் நூற்றாண்டில் இவற்றின் வருகை பெருகி விட்டது. பௌஸனியாஸ் (Pawsanias) என்பவர், இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட கிளிகள் பற்றியும், இயல்பில் திரிந்த வியத்தகு விந்தை உயிரினங்கள் பற்றியும் கூறியுள்ளார். எல்கபாலுஸ் (Elgabalws) என்பார், கிளிகளின் தலைகளைக் கொண்டே, ஆடம்பர விருந்து மேசையை உருவாக்கக் கூடுமளவும், தம்முடைய சிங்கம் மற்றும் பிற விலங்குகளுக்கு உணவு அளிக்கக் கூடுமளவும், கிளிகளைப் பெரும் எண்ணிக்கையில், பெற்றிருக்கும்போது, அரையன் (Arriyan) என்பார் அப்பறவைகள் பற்றி விவரித்துக் கூற மறுத்துள்ளார்'' (Warmington. Page : 154) இந்தியாவிலிருந்து சென்ற பிற பறவைகளாவன; கிரேக்க புராணத்தில் கூறப்படும், பல நூறாண்டுக் காலம் வாழ்ந்து, தன்னைத்தானே எரித்துக் கொண்ட சாம்பலிலிருந்து மீண்டும் புத்துயிர் பெற்று வாழும் பெறற்கரிய பறவை போன்றதாக கி. பி. 47இல், கிலாடியஸ் என்பவரால் மதிக்கத்தக்க, பகட்டுவண்ண நெடுவால் பறவையாம் மயிலும், குறுங்கோழியுமாம். ஹட்ரியன்களாலும் (Hadrian) மற்றவர்களாலும், இந்தியாவிலிருந்து பாம்பு களும், பெறப்பட்டன (Warmington Page : 155-157).

## விலங்கு தரும் பொருள்களில் வாணிகம்

விலங்கு தரு பொருட்கள், கடல்வழியாகக் கொண்டு செல்லப்பட்டன. தோல்களும், மெல்லிய மயிர் அடர்ந்த தோலாடைகளும் அவற்றுள் தலையாயவை. "பிளினி அவர்கள், சீனப் பொருட்களாகக் குறிப்பிடும் இரும்பு, நுண்ணிய மெல்லாடை, தோல்கள் ஆகியவை, சீனாவிலிருந்து பெறப்பட்ட பொருட்களாகக் கொள்ளப்படல் கூடாது; மாறாக, கிளாடியஸ் ஆட்சிக் காலத்திலிருந்து கிரேக்க

வணிகர்களால் பரவலாக, வருகை தரப்பெற்ற, தென்னிந்தியாவில் உள்ள சேரநாட்டிலிருந்து பெறப்பட்டவையாகவே கொள்ளப்படல் வேண்டும்'' (Warmington. Page : 157, 158). இப்பண்டங்களின் வழி மூலம் சீனாவுக்கு உரியதாக எந்த அளவு கூறப்பட்டதோ, அந்த அளவு சேரர்க்கும் உரியதாகக் கூறப்பட்டது. ஆகவே, இப்பண்டங்கள் ''சேர்ஸ்'' எனப் பெயரிடப்பட்டன. இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட மற்றொரு பண்டம், எருமைப் பாலிலிருந்து எடுக்கப்படும் நெய், ''கி. பி. 1672-81 காலத்தவராய 'ப்ரையர்' (Fryer) என்பார், தெக்கணத்தில் இருந்த, 400 ஆண்டுப் பழமையும், மருந்தாகிப் பயன்படும் நன்கு மதிக்கற்பாடும், மிக உயர்ந்த விலையும் வாய்ந்த நெய்நிறைந்த தொட்டிகள் குறித்துக் கூறுகிறார் (''Scoff's Periplws, 41, 177).

இந்தியாவிலிருந்து, உரோமுக்கு அனுப்பப்பட்ட விலங்கு தரு பொருட்களுள் மிக முக்கியமான பொருள், தந்தம், ''உரோமப் பேரரசு உருப்பெற்ற அந்நாள் தொட்டு, இந்தியத் தந்தம், பரவலாகப் பேசப்பட்டது. உரோமானியர் நடத்திய தந்த வாணிகம் மிகப் பெரிய அளவிலானது என்பது, அது கொண்டு பண்ணப்பட்ட, பேரெண்ணிக்கையிலான பொருள்களாலும், பழைய எழுத்தாளர்களின் நூல்களில், அது பற்றிய குறிப்புகள், பெரு வழக்காகிவிட்ட நிலையாலும், தந்தத்திலான, இன்றும் அழியாமலிருக்கும் பொருள்களின், எண்ணிக்கையை முடிவு காண மாட்டாமையாலும் தெளிவாகும். இலக்கியத்தில் மட்டும், அது, உருவச் சிலைகள், நாற்காலிகள், படுக்கைகள், மன்னர்கைச் செங்கோல்கள், வாளின் கைப்பிடிகள், வாளுறைகள், தேர்கள், வண்டிகள், பட்டயத்தகடுகள், புத்தக மேலட்டைகள், மேசைக்கால்கள், கதவுகள், புல்லாங்குழல்கள், யாழ்கள், சீப்புகள், அணி ஊக்குகள், ஊசிகள், துடைப்பான்கள், பெட்டிகள், பறவைக் கூண்டுகள், வீட்டின் அடித்தளங்கள் ஆகியவற்றிற்குப் பயன்பட்டதாகக் காண்கிறோம். வழக்கிறந்துபோன, ஆனால், ஆவணங்களில், பெயரளவில் இடம் பெற்றிருப்பனவற்றின், ஒன்று பலவான மாதிரிப்படிவங்களும்,

ஏற்கெனவே உள்ள, குறிப்பிடத்தக்க பட்டியலோடு சேர்த்து எண்ணப்படவேண்டும். (Warmington, Page : 163) தென் இந்தியா அனுப்பிய இப்பண்டங்கள், முசிறி, நெல்கியந்தா (Nelcynda) ஆகிய இடங்களிலிருந்து அனுப்பப்பட்டன (Periplws ; Page : 56). உரோமப் பேரரசின் தொடக்கத்தி லிருந்தே, இந்திய ஆமை ஓடுகள் அடிக்கடி பேசப்படும் விலை உயர்ந்த தட்டுமுட்டுப் பொருட்களின், மேலாடைப் பகட்டு மெல்லொட்டுகளாகிப் பயன்படுத்தப்பட்டது. இதில் ஒரு பகுதி, இந்தியக் கடற்கரைகளைச் சேர்ந்த கடலாமை களிலிருந்து பெறப்பட்டது. மலேயா தீபகற்பத்தைச் சூழ உள்ள கடலிலிருந்தும் பெறப்பட்டுளது (Warmington Page : 166, 167.).

உரோமப் பேரரசால், இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட விலையுயர்ந்த விலங்குதருபொருள்கள், மன்னார் வளைகுடாவில் கிடைக்கும் முத்து. உரோம வணிகர், அதை வாங்கும் மதுரையும், உறையூரும் முக்கிய முத்து அங்காடிகளாம். அலெக்ஸாண்டிரியாவைச் சேர்ந்த யூத தத்துவஞானி, பிலோன் (Philon) முனிவர் பால் (St. Paul) ஆகியோர் உள்ளிட்ட, மக்களுக்கு நல்லற வாழ்வு போதிக்கும் அறவோர்கள் பலரும், பெண்டிரும், மகளிரும் முத்து அணிவது குறித்து, வெறுத்துப் புலம்புமளவு, முத்து அணிவது, மகளிரிடையே நவநாகரீகமாக ஆகிவிட்டது.

**உரோமப் பொன் அழிவு :**

''ஒரு சீர்திருத்தம் உண்மையில் தேவை என்றால், அது எங்கிருந்து தொடங்கப்படவேண்டும் ? பெண்களின் டம்பப் பொருளாகிவிட்ட, அவ்வியத்தகு பொருளைக், குறிப்பாக நம் பேரரசின் செல்வவளம் அனைத்தையும் அறவே வற்றச் செய்யும் பயனிலாப் பகட்டுப் பொருள்களுக்கு விலையாக, வெளி நாடுகளுக்கு, நம் குடியரசின் வாரி வழங்கப் பண்ணும்- பேரணிகள், மற்றும் விலைமதிக்க ஒண்ணாச் சிற்றணிகள் பால், நம்மகளிர் கொண்டிருக்கும் மட்டுமீறிய வேட்கையை நாம் எவ்வாறு சந்திக்கப் போகிறோம் ?'' எனப் பேரரசர்

திபெரியஸ் (Tiberiws) அவர்கள் (கி. பி. 14 - 37), உரோமானியக் குடியரசின் ஆட்சிப் பேரவைக்குப் பொதுநலன் கருதி எழுதவேண்டுவது தேவை எனக், கி. பி. 22இல் உணர்ந்தார், (Tacitws Annals III 53). செங்கடல்மீதான அராபியர்ஆதிக்கம், பேரரசர் கிளாடியஸ் காலத்தில் (கி. பி. 41 - 54) முழுமையாகக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரப்பட்டுவிட்டது. அவன் ஆட்சிமுடிவுப் பருவத்தில், நவரத்தினங்களுள், முத்துக்களிலான நேரிடைக்கடல் வாணிகம் பெரிதும் வளர்ந்துவிட்டது. ''இந்தியா, தன்னுடைய பண்டங்களைத் தொடக்கநிலை விலையைப் போல, முழுமையாக நூறு மடங்கு விலைக்கு, நம்மிடையே விற்றுவிட்டு, ஆண்டுதோறும், பத்து நூறு ஆயிரம் மதிப்புள்ள பொன்னை, நம் நாட்டிலிருந்து வற்றச் செய்துவிடுகின்றனர் என கி. பி. 70இல், பிளைனி குறைபட்டுக் கொள்வதற்கேற்ப, கிளாடியஸ், நீரோ அவர்கள் காலத்தில், இந்த வாணிகம் மிகப்பெரிய அளவிற்கு வளர்ந்துவிட்டது. (Pliny Natural History VI Page : 26). தமிழ்நாட்டின் அன்றைய முக்கிய இறக்குமதிப் பொருள்களாக இருந்தவை, பொன், வெள்ளி, உரோம நாணயங்கள், (அக்காலத்தில். நாணயம் அடிக்கும் கலையைத், தென்னிந்தியா வளர்த்துக் கொண்டதாகத் தெரியவில்லை). மற்றும் மது ஆகிய இவைகளாகவே இருந்தன ஆதலின், தன் நாட்டுப் பொன் அழிவு குறித்துப் பிளைனி, குறைபட்டுக் கொள்வதற்கு நல்ல காரணங்கள் இருந்தன; மலபார் கடற்கரை முதல், கிழக்குக் கடற்கரை வரையான, தமிழ் நாட்டின், அகன்று நீண்ட நிலப்பரப்பில், பல்வேறு இடங்களில், ரோம நாணங்கள், மண்ணுள் புதைக்கப் பட்டிருந்தன.

**மரவினம் தரு பொருள்களில் வாணிகம் :**

தென்னிந்தியாவிலிருந்து உரோமுக்கு ஏற்றுமதி செய்யப் பட்ட மரவினம்தரு பண்டங்களில் தலையாயவை, மருந்துப் பொருள்களும், மணப்பொருள்களுமாம். பேரரசு ஆட்சிக் காலத் தொடக்க நிலையில், இந்தியாவோடு நடைபெற்ற

ரோமின் கடல் வாணிகத்தில் மிளகு, வணிகப் பண்டமாக அமைந்தது. முக்கியமாக, மலபாரிலிருந்தும், திருவாங்கூரி லிருந்தும் மிளகு சென்றது. ரோமர்கள் விரும்புவது எனும் பொருளிலான "யவனப் பிரியா" என்றபெயர், மிளகிற்கு இடப் படுமளவிற்கு, இந்த நூற்றாண்டில், மிளகு, உரோமர்களால் ஆர்வத்தோடு தேடப்பட்டது. (யவனர் என்ற சொல், இக்காலை, தமிழ், சமஸ்கிருதம் இரண்டிலும், ரோமரையும் குறிக்கும் வகையில் விரிவடைந்துவிட்டது) கருப்பு மிளகை விட, காரம் குறைவாகவும், சுவை மிகுதியாகவும் தருவது கருதி, வெள்ளைமிளகுக்குத் தனிவிலை தரப்பட்டது; அக்காலைய சமயற்கலை நூல்களில், உப்பு, சர்க்கரைகளை விட, மிளகே முக்கியப் பொருளாகக் கூறப்பட்டது. ஆகவே, மேற்கே நோக்கிச் செல்லும் பல கப்பல்களில், பாதிப்பண்டம் மிளகாய் அமைந்தது எனக் கூறப்பட்டது (Warmington: Page: 182). இந்தியாவிலிருந்து இஞ்சியும் இறக்குமதி செய்யப் பட்டது. ஆனால், அது உணவுக்காகப் பயன்பட்டதைக் காட்டிலும் மருந்தாகப் பயன்பட்டதே அதிகம்.

ஏலம், மருந்து, மணப்பொருள் ஆகிய இரண்டிலும் பயன்படுத்தப்பட்டது. லவங்கமும் அவ்வாறே. "மலபத்திரம்" என அழைக்கப்படும் லவங்க இலையை, இந்தியப்பண்டம் என அறிந்திருந்த ரோமானியர், அதன் வேரும், அதன் பட்டையும், அந்த மரமும் ஆப்பிரிக்காவில் விளைவனவாக எண்ணியது விந்தைக் குரியது. அதன் பிறப்பின் உண்மையை, அராபிய வணிகர்கள், ரோமானியரிடம், அத்துணைத் திறமை யாக மறைத்து வைத்திருந்தனர். இலாமிச்சை எண்ணெய், உயர்ந்த விலை தரப்பட்ட மற்றொரு பண்டம் இஞ்சிவேர், எலுமிச்சை வேர் ஆகியன கொண்டு இறக்கிய எண்ணெய் களும், இலாமிச்சை எண்ணெய் என்ற பட்டியலில் சேர்க்கப் பட்டு விட்டன. ரோமப் பேரரசின் வீட்சிப் பருவத்தில், சாதிக்காய், கிராம்புகளும் இறக்குமதி செய்யப்பட்டன; எள்ளெண்ணெய், ஸ்ட்ராபோ (Strabo) அவர்களால், 'தேனீக் களின் துணை இல்லாமலே, இந்திய மரங்களிலிருந்து பெற்ற

தேனடை' என அழைக்கப்பட்ட வெல்லம் ஆகியவை சிறு வணிகப் பொருள்களாம் (Warmington : Page : 209).

தென்னிந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்களில், பருத்தி உடைகள் பெரிய இனமாம்; பெரிபுளூஸ் அவர்களால் "அர்கரு" (Argarw) என அழைக்கப் படும் உறையூரிலிருந்து, இன்றைய திருச்சிராப்பள்ளியிலிருந்து அனுப்பப்பட்ட "அர்கரிடிக்" (Argaritic) மென்துணி, அவற்றுள் சிறப்பானது (Warmington : Page : 59). தென்னிந் தியாவிலிருந்து பருத்தியும் ஏற்றுமதி செய்யப்பட்டது. "டையோக்லெடியன்" (Diocletion) அவர்களின் ஆணை, திணிக்கப்பட்ட மெத்தை, தலையணைகள், இந்தியப் பருத்தி யிலிருந்து செய்யப்பட்டனவாகக் காட்டுகிறது. இந்திய உடைகள் பலவற்றைப் பாலஸ்தீனமும் வரவழைத்தது" (Warmington Page : 212).

இந்தியாவிலிருந்து உரோமர்கள் இறக்குமதி செய்த மரங்களில் சில, அழகு பொருட்களாவன; சில கட்டிடங்களுக் காவன; மற்றவை, நறுமணத்தைலம், மருந்துகள் செய்யப் பயன்படும் மணம்தரு மரங்கள். முன்னதில் சிறப்பானவை, கருங்காலி, செம்மரம், தேக்குகள் (Periplws : Page : 36); பின்னவற்றில் சிறந்தன, சந்தனமரம், செஞ்சந்தன மரம், அகில், தெல்லச்சேரி மரப்பட்டை, முதலியன (Warmington Page : 215-216). தேங்காய் எண்ணெய் ஏற்றுமதிக்குப் பெரிபுளூஸ் அவர்களும், வாழை, அரிசி, தினை, சாதிக்காய் போலும் மருந்தாகப் பயன்படும் மரம் தரு பொருள்கள், புளி ஆகியவற்றின் ஏற்றுமதிக்குப் பிளைனி அவர்களும் சான்று பகர்கின்றனர். வெற்றிலையும் பாக்கும் கூட, பல்வேறு எழுத்தாளர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கனிப்பொருள்களிலான வாணிகம் :**

முசிறி, நெல்கியந்தா (Nelcynda) ஆகிய இடங்களி லிருந்து, ரோமுக்கு அனுப்பப்பட்ட, கனிப்பொருள் வகை உற்பத்திப் பொருட்களில், வைரம்தான், மிக மிக விலை

வாய்ந்த பண்டம், பெரிய வைரங்கள் ஏற்றுமதி செய்யப் படுவதைப், பண்டைத் தமிழர் தடுத்து நிறுத்தினர் என்றாலும், ரோமானியர் இந்திய மாதிரி தாயத்துக்கள் என்ற வடிவில், பெரிய பெரிய புகழ் வாய்ந்த வைரங்களைக் கொண்டு சென்றனர் (Warmington : page : 236). வைரம் அல்லாமல், வைடூரியம், மாணிக்கம், படிகக்கல், கோமேதகம், செந் தடங்கல் உடைய மணிக்கல் ஆகிய இவ்வினங்களும், இந்தியா விலிருந்து பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டன. இவை போலும் சிறந்த கற்களிலிருந்து, அகழ்ந்து செய்யப்பட்ட கிண்ணங்களுக்கு மிக்க விலை கொடுக்கப்பட்டன. ரோமானிய எழுத்தாளர்களால் இந்திய வைடூரியம் என அழைக்கப்படும் மரகதக் கல்லிலான ஒரு கின்னத்திற்கு நீரோ, பத்து லட்சம் 'செஸ்டெர்செஸ்' (Sesterces) அதாவது வெள்ளி நாணயம் கொடுத்தான் என்பதைப் பிளைனி அவர்களிடமிருந்து அறிகிறோம் (Natural History vi page : 26). விலை மிகுந்த ரத்தினக் கற்கள் போல் தோற்றமளிக்கும், வண்ணம் ஊட்டப் பெற்ற படிகப் பாறைக் கண்ணாடிகளும், கிரேக்கர்களாலும், உரோமானியர்களாலும், இந்தியாவிலிருந்து பெறப்பட்டன. (Warmington : Page : 246). செம்பு, மாணிக்கம், நீலங்களும் தென்னிந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டன. அவ்வாறே, கோமேதகமும் அனுப்பப்பட்டது. (Periplws : Page : 56).

"இந்திய இரும்பு எஃகுகளில், உரோமானியர் நடத்திய வாணிகம், மிகவும் முக்கியமானது. நேர்த்தியான பண்டைய மேற்கு ஆசிய நாடாம் பார்த்தியாவில் பயன்படுத்தப்பட்ட உலோகம் (Parthian Metal), உண்மையில், இந்திய உலோகமே. திரு. சௌமையஸ் (Sawmaise) என்பார், இந்திய எஃகைப் பக்குவம் படுத்துவது குறித்த, கிரேக்கரின் தனி ஒப்பந்தம் ஒன்றைக் குறிப்பிடுகிறார். ஆகவே, எஃகு செய்யும் தொழில் ரகசியத்தைக் கிரேக்கர் அறிந்திருக்க வேண்டும். உரோமானியர் இறக்குமதி செய்த மொத்த இரும்பு, இரும்பாலும், எஃகாலும் ஆன செய்பொருட்களே ; செப்பம் செய்யப்படா உலோகக் கரு அன்று. திரு. கிளிமென்ஸ் (Clemens) அவர்கள் உணர்த்துவதுபோல், உரோமானியர்,

இரும்பை, அழகிய மாதிரிக் காட்சிப் பொருளாக இருக்கத் தக்க சிறப்பு வாய்ந்த பல்வகைக் கருவிகளாகப் பண்ணினர். இந்திய உலோகம் அனுப்பப்பட்ட டமாஸ்கஸ் நகரில், அது, போர்க் கவசமாகவும் பண்ணப்பட்டது. (Warmington: page: 257, 58).

உரோமிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் :

இப்பண்டங்களுக்கு மாற்றுப் பண்டங்களாக, உரோமானியர், முக்கியமாக நாணயங்களை அனுப்பினர். பவழம், மது, ஈயம், தகரம் ஆகியவற்றையும் அனுப்பினர், Periplus: page: 56). ஆனால், அனுப்பியது போக, உரோம் கொடுக்க வேண்டி நின்ற பாக்கி, இந்திய வாணிகம், உரோமன் நாணயச் செலாவணியை மிகக் கடுமையாகப் பாதிக்கக்கூடிய அளவு அத்துணைப் பெரிதாகிவிட்டது. பேரரசுத் தலை நகரின் எதிர்கால வாழ்வின் மீது இவ்வாணிகம் செலுத்திய செல்வாக்கு, திரு. பெரிபுளூஸ் அவர்களால் பின்வருமாறு விளக்கப்பட்டுளது." மாற்றுப் பண்டமாகத் தருவதற்குத் தேவைப்படும் போதிய பண்டங்களை உற்பத்தி செய்யாமலே, கீழ் நாடுகளிலிருந்து செய்த, ஆடம்பரப் பொருள்களின், இந்த வரம்புக்கு மீறிய, ஊதாரித்தனமான இறக்குமதிதான், உரோம நாணயச் செலாவணியின் அடுத்தடுத்து ஏற்பட்ட மதிப்பிறக்கத்திற்கும், நிலை இறக்கத்திற்கும், இறுதியாக அதனுடைய முழு அழிவுக்கே கொண்டு சென்றதற்கும் தலையாய காரணமாம். நாட்டு உற்பத்திப் பொருள்களை விற்றுப் பெற்ற பொன், வெள்ளி போலும் விலை மதிக்கத்தக்க உலோகங்களின் சேமிப்பு மூலமே, உரோமின் நாணயச் செலாவணியின் தரம் நிலை நாட்டப் பட்டது. கி. பி. 272ல் செல்வப் பெருநகராம் 'தாரென்டம்' (Tarentum) நகரைச் சூறையாடிக் கொள்ளை அடித்தது. தன்னுடைய நாணயத்தைச் செம்பிலிருந்து வெள்ளிக்கு மாற்றிக் கொள்ள வழி செய்தது. கி. பி. 146இல் கார்த்தேஜ், (Carthage) கோரின்த் (Corinth) நகரங்களின் அழிவுக்குப் பிறகு, பொன் நாணயம் பரவலான வழக்கத்திற்கு வந்தது,

சீஸர் மேற்கொண்ட போர்கள் மூலம் கி. பி. 47இல் வெள்ளிக்கும் பொன்னுக்கும் உள்ள விகிதாசாரம், இதற்கு முன் எப்போதும் இல்லாத, 1க்கு 8.9 என்ற அளவு உயர்வதற்கு ஏற்ப, பொன்வளம் பெருத்துவிட்டது. அகஸ்டஸ் காலத்தில், அந்த விகிதாசாரம் 1க்கு 9.3 ஆயிற்று. ஒருபொன் நாணயம், (Awrews) 25 வெள்ளி நாணய (Denari) மதிப்புடையதாயிற்று. கிளாடியஸ் காலத்தில் இந்தியாவுக்கான கடல்வழி திறக்கப்பட்டது. ஊதாரித்தனம், பாழடித்தல்களின் ஒவ்வொரு நிலையாலும் புகழ்பெற்ற, வெள்ளி நாணயத்தில், நூற்றுக்கு 20 பங்கு செப்பு சேர்க்கப்பட்டு, அதன் மதிப்பு, ஒரு பொன் நாணயத்துக்கு 84 வெள்ளி நாணயம் என்ற நிலையிலிருந்து, 1க்கு 94 என்ற நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்ட, நீரோவின் ஆட்சிக் காலம் அதன் பின் வந்தது. செப்புக் கலவை, 'ட்ராஜன்' (Trajaun) ஆட்சிக் காலத்தில் நூற்றுக்கு 30 பங்கும், செப்டிமஸ் (Septimus) 'செவெரஸ்' (Severus) ஆட்சிக் காலத்தில், 100க்கு 50 பங்காக உயர்ந்துவிட்டது. இறுதியாக, கி. பி. 218இல் 'எல்கபாலுஸ்' (Elagabalus) ஆட்சியில், அது முழுவதும் செப்பாகவே ஆக்கப்பட்டு அதன் பயனாய் ஏற்க மறுக்கும் நிலையினை அடைந்து அழிவு நிலைக்கு ஆளாகிவிட்டது. பொன் நாணயங்களும் கலப்படத்திற்கு உள்ளாயின. வாங்கிய பொருள்களுக்கு மாற்றுப் பொருள்களாக, இந்தியாவுக்குக் கொடுக்க வேண்டிப் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டு விடவே, உள் நாட்டில், அது வழக்கற்றுப் போகலாயிற்று. அகஸ்டஸ் ஆட்சியில், உரோமப் பொன் நாணயம், ஒரு பவுண்டு பொன்னின் 40இல் ஒரு பங்கு எடையுடையதாக இருந்தது. "டையோக்லெதியன்" (Diocletian) காலத்தில் 60இல் ஒரு பங்கு எடைக்குக் குறைந்துவிட்டது. நாணயம், அதன் நிறையளவிலேயே மதிக்கப்பட்ட, 'கான்ஸ்டன்டைன்' (Constantine) காலத்தில் அது, 72இல் ஒரு பங்கு என மேலும் குறைந்துவிட்டது. இழப்பை ஈடு செய்வதற்குப் புதிய பொருட்கள் உற்பத்தி செய்யப்படாத, நாட்டு முதலீட்டின் இச்சீரான வீழ்ச்சிதான், மூன்றாவது நூற்றாண்டில், ரோம்

நகரை விடுத்து, தலைநகரை, நிகோமீடியா (Nicomedia) வுக்கும், சிறிது நாளைக்கெல்லாம் பைஸான்டிம்'' (Byzan-tium) நகருக்கும் மாற்றுவதற்கு வழிவகுத்துவிட்டது. (Scoff's Periplws : page : 219 - 220).

தென்னிந்திய துறைமுகங்கள் பற்றிப் பெரிப்ளுஸ் :

''இந்தியப் பெருங்கடலுக்கு வழிகாட்டு நூல்'' (Periplws of the Eythrean sea) என்ற நூலின் ஆசிரியர், அதை எழுதிய கி. பி. 60ல், வட இந்தியத் துறைமுகங்களே அல்லாமல், தமிழ் நாட்டுத் துறைமுகங்களையும் விளக்கியுள்ளார். மற்ற துறைமுகங்களோடு, தொண்டி, முசிறித் துறைமுகங்களையும் ஒரு காலத்தில் ஒரு பெண் தெய்வம், ஆங்கு வாழ்ந்து நீராடியதாகக் கூறப்படுதலின், தங்களுடைய எஞ்சிய வாழ் நாட்களில், அறப்பணிக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொள்ள விரும்பி, நீராடித் துறவு வாழ்க்கை வாழ்வதற்காக ஆடவர்களும், அது செய்ய விரும்பிய மகளிர்களும் வந்து வாழும் கொமரித் (ஆங்கிலத்தில் கேப்காமொரின் (Cape comorin) தமிழில் குமரித் துறையையும் குறிப்பிட்டுள்ளார் (Periplus: Page : 58). பல்வேறு ஆகம வழிபாட்டு நெறிகளும், துறவு வாழ்க்கை முறைகளும் தோன்றியதிலிருந்து பிக்ஷுக்களும், பிக்ஷுணிக்களும், உலகத் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவான் வேண்டித், தென்னிந்தியக் காடுகளில், எளிதில் புகமாட்டா ஒரு கோடியில் தவம் மேற்கொண்டனர் என்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டது. இன்று நிகழ்வது போலவே, கி. பி. முதல் நூற்றாண்டிலும், சாதுக்களும், சந்நியாசிகளும், குமரி முனைக்குக் கடலில் நீராடச் சென்றனர். ஒரு கன்னிப்பெண், தன்னைச் சிவன் மணந்து கொள்வதை எதிர்பார்த்து, அவளுடைய தெய்வத்திருமேனி, இன்றும் அமைதியாக நிற்கும், குமரி முனையில் காத்திருந்தாள் என்ற பழங்கதை, அத்துணைப் பழங்காலத்தில் கூறப்பட்டு வந்துளது என்பதைப் பெரிபுளுஸிலிருந்து அறிகிறோம். இப் பழங்கதை, மகாபாரதக் காலத்திலிருந்தே இருந்துவருகிறது என்றாலும், தமிழர்களில் பெரும்பகுதியினர், கி. பி. முதல்

நூற்றாண்டிலும், சிவவழிபாடு மூலம் உடலறு துன்பத்தி லிருந்து விடுபடத் துடிக்கும், ஆரியர்களின் மூர்க்கத்தனமான பேராசை நெறிக்கு அடிமையாகாமல் வாழ்ந்திருந்தன ராதலின், வடநாட்டுச் சிவ வழிபாட்டாளர், ஆரிய முறையிலான சிவ வழிபாட்டு நெறியைத் தமிழ்நாட்டில் பரப்ப, இன்னமும் தீவிரமாக முயற்சிக்கவில்லை எனத் தெரிகிறது.

கொமரிக்குப் பிறகு, பெரிபுளூஸ் ''முத்து மீன்கள் வாழும், தண்டிக்கப்பட்ட குற்றவாளிகளைக் கொண்டு முத்து எடுக்கப்படும், பாண்டிய அரசுக்குச் சொந்தமான கொல்ச்சி (Colchi) நகரைக் (கொற்கை நகரைக்) குறிப்பிடுகிறார். (Periplus Page : 59). கொற்கைக்கு அப்பால் உளது கடற்கரை நாடு (Coast country) என்கிறார். அவ்வாறு கூறுவதன் மூலம், பெரிபுளூஸ், சோழ நாட்டுக் கடற்கரையைக் குறிப்பிடு கிறார். ''ஆங்குள்ள கடற்கரைகளில் திரட்டப்பட்ட முத்துக்களை, வேறெங்குமில்லாமல் தன்னிடத்தில் குவித்து வைத்திருக்கும் அர்கரிடிக் (Argaritic) என அழைக்கப்படும் மென்துணியை ஏற்றுமதி செய்யும், சமஸ்கிருத'' உரகபுரா'' என்பதன் திரிபான 'அர்கரு' (Argaru) (உறையூர்) அழைக்கப் படும் உள்நாடு ஒன்றும் உளது'' (Periplus Page ; 59); உறையூருக்கு வடக்கில், இன்று போலவே, அன்றும் பருத்தி ஆடை உற்பத்திக்குப் புகழ்வாய்ந்த, சேலம், கடப்பை மாவட்டங்கள் உள்ளன''.

பெரிபுளூஸ் ஆசிரியர், கொற்கைக்கு அப்பால் பயணம் செய்யவில்லை. கிழக்குக் கடற்கரைபற்றி, அவர் கூறுவன எல்லாம், காதுவழிச் செய்திகளே; தாலமி கூற்றுப்போல, அத்துணை ஆய்வுக்கு உட்படாத அவை, ஏற்புடையன அல்ல; கமரா, (Comera) பொதுகா (Podwka), சோபட்மா (Sopatma) இவை, அவர் குறிப்பிடும் சோணாட்டுத் துறைமுகங்கள்; கோடிக்கரை, நெகபடாம், மற்றும் காவிரி கடலொடு கலக்கு மிடம் ஆகியன, அக்காலத்தில் சோணாட்டின் சிறந்த துறைமுகங்களாக இருந்தன; கிழக்குக் கடற்கரையின் தென்

பகுதித் துறைமுகங்களிலிருந்து 'சொலந்தியா' (Colandia) எனப்படும் பெரிய கப்பல்கள், கங்கை, மற்றும் 'செர்செ' (Cherse) அக்காலை, சுவண்ண பூமி என அழைக்கப்படும் பர்மா ஆகிய இடங்களுக்குச் சென்றதாகப் பெரிபுளுஸ் கூறுகிறார். "தமிரிக்காவில் உற்பத்தி செய்யப்பட்ட ஒவ்வொரு பொருளும், எகிப்திலிருந்து கொண்டுவரப்பட்ட பொருள்களின் பெரும்பகுதியும் தமிரிக்காவிலிருந்து கொண்டு வரப்பட்ட பொருள் அனைத்திலுமான எல்லா இனங்களும், இன்றைய திருவாங்கூடரான, பரலியா (Paralia) வழியாகக் கொண்டுவரப்பட்டனவும், அந்நாடுகளில் இறக்குமதி செய்யப் பட்டன. (Periplus Page : 30)

**மதுரையில் ஒரு ரோமானியர் குடியிருப்பு :**

இந்தக் கால கட்டத்தில் மதுரையில், உரோமானியக் குடியிருப்பு ஒன்று இருந்தது. தென்னிந்தியாவின் பல இடங் களில், பொன், வெள்ளிகள் மட்டுமல்லாமல், உரோம நாணயங்களும் காணப்பட்டதால் "மதுரையில் நகருக்கு அணித்தாக உள்ள வெற்றிடங்களிலும், வெள்ளம் வற்றிப் போகும் காலத்தில், ஆற்றுமணல் மேடுகளிலும், எண்ணற்ற செப்பு நாணயங்களும் காணப்பட்டன, அந்நகரின் பல்வேறு இடங்களில், மண் மீதும், ஆற்று மணல் மேடுகளிலும் உரோமச் செப்பு நாணயங்கள் சிதறிக்கிடப்பது, இந் நாணயங்கள், ஆங்கு, அன்றாடப் பழக்கத்தில் இருந்து வந்தன, ஆங்குக் குடிவாழ்ந்திருந்த மக்களால், கவனக் குறைவால், போடப்பட்டன அல்லது தொலைக்கப்பட்டு விட்டன என்பதை அறிவுறுத்துவதாகத் தெரிகிறது. (Journal of the Royal Asiatic Society 1906 Page : 610).

இச்செப்பு நாணயங்கள், இவ்விடங்களுக்கு, உரோமானி யர்களால், தங்களுடைய சொந்த உபயோகத்திற்காகவே கொண்டுவரப் பெற்றிருக்க வேண்டும், அவை, பொன், வெள்ளி நாணயங்களைப் போல, இந்தியக் கடைவீதிகளில், பொருளுக்கு விலையாகக் கொடுக்கும் நாணயமாகப் பயன்

படுவதற்குக் கொண்டு வரப்பட்டிருக்காது. காரணம், அந்நாணயக்குவியலுக்குக் கப்பல்களில் இடம் காண்பது இயலாதாகிவிடும்; மேலும், அக்காலத்தில், இந்தியா, தனக்கு வேண்டிய செப்பு முழுவதையும், தன் நாட்டுச் சுரங்கங்களிலிருந்தே பெற்றுக்கொண்டது; ஆகவே, இச்செப்பு நாணயங்கள், பாண்டங்களும், பிற பயனுள்ள பொருள்களும் செய்வதற்கு உருக்குவதற்காக, இறக்குமதி செய்யப்பட்டிருக்கும் என்பதும், முன்னதைப் போலவே பொருளில் கூற்றாம்; தாலமி காலத்துக்கு ஏறத்தாழச், சிறிது முந்திய காலத்தில், ரோம் நகரில் இருந்த சுவர் வண்ண ஓவியங்களிலிருந்து படி எடுத்த நிலப்படங்களாகிய 'பெயுதிங்கேரியன்' (Pewthingorian) கல்வெட்டுக்கள், மேற்குக் கடற்கரையில், முசிறிக்கு அருகில், அகஸ்டஸ் கோயில் ஒன்றை இடஞ் சுட்டுகிறது. தம்முடைய நில இயல் நூலை கி. பி, 150இல் தொகுத்த தாலமி, தாம் அறிந்த செய்திகளில் ஒரு பகுதியை, இந்தியாவில் நெடுநாட்கள் வாழ்ந்திருந்தவரிடமிருந்து பெற்றதாகக் கூறியுள்ளார், இவைபோலும் உண்மைகள், உரோம வணிகர்களின் குடியிருப்புகள், தமிழ்நாட்டின் பல்வேறு வணிக மையங்களில் இருந்தன என்பதை உறுதி செய்கின்றன.

## தென்னிந்தியாவில் உரோமர்கள் :

உரோம வணிகர்கள், உரோம வீரர்கள், உரோமக் கைவினைஞர்கள், தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்திருந்தனர் என்பதை உறுதி செய்யவல்ல ஏராளமான அகச்சான்றுகள், அக்காலத்திய தமிழ் இலக்கியங்களில் உள்ளன. உரோம வணிகர்கள், மது, பொற்காசு ஆகியவற்றைத் தென்னிந்தியாவுக்குக் கொண்டு வந்தனர். கிரேக்கர், அந்நாட்களில், உலக நாடுகளுக்கிடையில் கொண்டிருந்த உறவு நிலையில், புறக்கணிக்குமளவு தாழ்ந்துவிட்டனராதலின், தொடக்கத்தில், கிரேக்கரைக் குறிக்க வழங்கிய, யவனர் என்ற சொல், இக்காலத்தில் ரோமரையும் குறிக்கும் வகையில் விரிவு பெற்றுவிட்டது. ஒரு பாட்டு,

"யவனர், நல்ல குப்பிகளில் கொண்டுவந்த குளிர்ந்த, இனிய மணம் உடைய மதுவை, ஒள்ளிய வளை அணிந்த மகளிர், பொன்னால் செய்த அழகிய கலங்களில் ஏந்தி வந்து நாள்தோறும் ஊட்டிய நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது:

"யவனர், நன்கலம் தந்த தண் கமழ் தேறல்,
பொன்செய் புனைகலத்து ஏந்தி, நாளும்
ஒண்தொடி மகளிர் மடுப்ப" புறநானூறு : 56 ; 18-20

இன்னொரு பாட்டு, பொன் நாணயங்கள் இறக்குமதியைக் குறிப்பிடுகிறது. அது, "சேர அரசர்க்குரிய, சுள்ளி ஆகிய, அழகிய பேரியாற்றின் வெண்ணுரைகள் சிதறி அகலுமாறு, யவனர்கள் கொண்டுவந்த, தொழிலால் மாட்சிமைப்பட்ட நல்ல கப்பல்கள், பொற்காசுகளோடு வந்து, மிளகுப்பொதிகளோடு மீண்டு செல்லும், வாணிகவளம் மிக்க முசிறித்துறை ஆரவாரத்தை"க் குறிப்பிடுகிறது:

"சேரலர்,
சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க,
யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி ஆர்ப்பு" அகநானூறு 149 : 7-11

ஒரு புறநானூற்றுப்பாட்டு, "மனையில் குவிந்துகிடக்கும் மிளகுப் பொதிகளால், ஆரவாரம் மிக்க கடற்கரை கலக்கம் உறும் ; கப்பல்கள் கொண்டுவந்த பொற்காசுகள், உப்பங் கழிகளில் உள்ள தோணிகளால் கரைசேரும், முழவொலிபோல் கடல் முழங்கும் முசிறி" என, இவ்வாணிக வளத்தை, யவனர் பெயர் குறிக்காமல், குறிப்பிடுகிறது:

"மனைக்குவைஇய கறி மூடையால்
கலிச் சுமைய கரை கலக்குறுந்து ;
கலம் தந்த பொற்பரிசம்
கழித் தோணியால் கரைசேர்க்குந்து ;

..................................
முழங்குகடல் முகறி'' —புறநானூறு 343 : 3-10

உரோம வீரர்கள், தமிழ்நாட்டில் நிலைபெற்ற குடியினராய், தமிழரசர்களின் மெய்க் காவலர்களாய்ப் பணி புரிந்து வந்தனர். அவர்கள் பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளனர். ''இயல்பாகவே வலிகூடி, முறுக்கேறிய உடலும், அதற்கேற்பப் படைக்கஞ்சாப் பேராண்மையும் வாய்ந்த யவனர், குதிரைகளை விரைந்தோட்டவல்ல, சவுக்கை, இடையில் சுற்றிக் கொண்டு, அது புடைத்துக் காணுமாறு அதன்மேல், மகளிராடையாம் சேலை போலும் நீண்ட உடையை இடைச்சுற்றளவே இருக்குமாறு, மடித்து மடித்துப் பாவாடைபோல் சுருக்கித் தைத்து உடுத்துக்கொண்டு, அதன் மேல், மெய்ம்மறைய சட்டையும் அணிந்து, கண்ட அளவே அச்சம் ஊட்டும் தோற்றம் உடைய யவனர்'' என்கிறது அப்பாட்டு.

''மத்திகை வளைஇய மறிந்து வீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்''

—முல்லைப்பாட்டு : 59-61

ஆகவே அவர்கள் அரண்மனைகளின் வாயில் காப்போராகவும் பணிபுரிந்தனர். ''இயல்பாகவே அகன்று உயர்ந்து காவல் உடையதான மதில் வாயிலைக் காத்து நிற்கும் காவல் தொழிலில் சிறந்த, பகைவரைத் தப்பாது கொல்லும் வாளை ஏந்திய யவனர்'' என்கிறது சிலப்பதிகாரம்.

''கடிமதில் வாயில் காவலிற் சிறந்த
அடல்வாள் யவனர்'' — சிலப்பதிகாரம் : 14 : 66-67

### தென்னிந்தியாவில் ரோமர் இராணுவப் பொறிகள்

வணிகர்கள், வீரர்கள் மட்டுமல்லாமல், எண்ணற்ற உரோமப் பொறியாளர்களும், கைவினைஞர்களும் தமிழ்

நாட்டில் நிலைத்த குடியினராய் வாழ்ந்திருந்தனர். உரோமப் பொறியாளர்கள், தமிழ் அரசர்களுக்காகக், கோட்டை மதில்களைத் தகர்த்து அழிக்கவல்ல, உலோகப் பூணிட்ட பெருந்தூலங்களையும், மதில் வாயிற்கண் பொறித்து வைக்கப்படும், பல்வேறு தற்காப்புப் பொறிப்படைகளையும் செய்து தந்தனர். தொல்காப்பியர், போரின் ஒரு நிலையாம் உழிஞைப் போரை விளக்குங்கால், கோட்டையை முற்றுகை செய்வதும், முடிவாகக் கைப்பற்றிக் கொள்வதும் எனக் கூறியுள்ளார்:

> "முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
> அனைநெறி மரபிற்று ஆகும் என்ப".
>
> —தொல்: பொருள் : புறம் : 10

உரையாசிரியர் நச்சினார்க்கினியர், "யவனர் இயற்றிய பலபொறிகளும், ஏனைய பொறிகளும்" என, யவனர், அக்கால அரசர்களுக்குப் படைக்கலப் பொறிகள் பண்ணித் தந்ததைக் குறிப்பிட்டுள்ளார். கோட்டை மதில்கள் பல்வேறு பொறிப்படைகள் பொருத்தப்பெற்றுப் பகைவர் எளிதில் நுழையாவாறு காக்கப்பட்டிருக்கும் என்பதைத், "திங்களும் நுழையா எந்திரப் படுபுழை" என்ற புறநானூற்றுப் பாடல் வரியும், (177 : 5) தெளிவாக்குகிறது. மதுரையில் அரசன் பெருங்கோயிலைச் சூழ இருந்த மதில் வாயிற்கண் பொருத்தப் பெற்றிருந்த பொறிப்படைகளின் பட்டியலைச் சிலப்பதிகாரம் வெளியிட்டுளது: "1) வளைந்து தானே எய்யும் எந்திரவில், 2) கரிய விரல்களை உடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறி, 3) கற்களை உமிழும் கவண் பொறி, 4) கொதிக்கும் எண்ணெயை வாரி இறைக்கும் பொறி 5) உருக்கிய செம்பை உமிழும் பொறி, 6) உருக்கிய எஃகை உமிழும் பொறி, 7) கல்லுமிழ் கவணுக்கு வேண்டும் கற்களைக் கொடுத்து உதவும் பொறிக் கூடை, 8) தூண்டில் வடிவில் பண்ணப்பட்டு, மதிலைப் பற்றுவாரைக் கோத்து வலிக்கும் தூண்டிற் பொறி 9) கழுத்தில் பூட்டி முறுக்கும் சங்கிலி, 10) ஆடவர் தலை

போலும் தலையுடையதான ஆண்டலைப் புள் வடிவில் இருந்து வருவார் தலையைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பொறி, 11) கிடங்கில் ஏறின் மறித்துத் தள்ளும் இருப்புக் கவை, 12) கழுக்கோல் 13) அம்புக்கட்டு 14) அம்புகளை எய்யும் ஏவறைகள், 15) ஐயவித்துலாம், 16) மதிலைப் பற்றுவார் கைகளைக் குத்திப் பொதுக்கும் ஊசிகள், 17) கிச்சிலிப் பறவைபோல், பாய்ந்து சென்று பகைவர் கண்களைக் கொத்தி மீளும் பொறி, 18) மதில் மீது ஏறினார் உடலைக் கொம்பால் குத்திக் கிழிக்கும் பன்றி வடிவில் நிற்கும் பொறி, 19) மூங்கில் வடிவில் நின்று அடித்து நொறுக்கும் பொறி 20) கதவுக்கு அரணாக, உள்வாயிற் படியில் நிலத்தில் நால விடப்படும் மரங்களாம் எழு, சீப்பு, 21) கதவுக்குக் குறுக்கே பாய்ச்சப்படும் கணைய மரம், 22) ஏவுகணைகள், 23) குந்தம், 24) வேல்,

"வளைவிற் பொறியும்,
கருவிரல் ஊகமும், கல் உமிழ் கவணும்,
பரிவுறு வெந்நெயும், பாகடு குழிசியும்,
காய்பொன் உலையும், கல் இடு கூடையும்,
தூண்டிலும், தொடக்கும், ஆண்தலைப் புள்ளும்,
கவையும், கழுவும், புதையும் புழையும்,
ஐயவித் துலாமும், கைபெயர் ஊசியும்,
சென்றெறி சிரலும், பன்றியும், பணையும்,
எழுவும் சீப்பும், முழுவிறல் கணையமும்,
கோலும், குந்தமும், வேலும், பிறவும்",

— சிலப்பதிகாரம் : 5 : 207-217

சீவக சிந்தாமணி, சில நூறு ஆண்டுகள் கழித்து எழுதப் பட்ட நூலாயினும், அவற்றின் சில பாக்கள் ஈங்கு எடுத்துக் காட்டும் தகுதியுடையவாம். அதில் கூறப்பட்டிருக்கும் படைப் பொறிகளாவன ; நூற்றுவரைக் கொல்லி ; பகை வீரர்களைத் தூக்கி எறியும் பொறி, காணத் தெரியும் பேய்ப்

பொறி, யானைப்பொறி, பாம்புப்பொறி, கூற்றுநிகர் கழுகுப் பொறி, சங்கிலிப் பொறி, குந்தம், புலிப்பொறி, விற்பொறிகள், கொடிய குதிரைப்பொறி, பகைவரைத் தொடர்ந்து சென்று வெட்டும் வாள், கல் உமிழ் கவண்கள், பாவை உருவிலான பொறிகள், செந்தீப்பொறிகள், செந்தழல் கொப்புளிக்க, கொல்லன் காய்ச்சிய இருப்புக் குண்டுகள், கொக்குப் பொறி, கூகைப் பொறி, தலை நெருக்குத் தூலம், உருக்கிய செப்பு, உருக்கிய இரும்பு, கொதிக்கும் எண்ணெய் இவைகளை வாரி இறைக்கும் பொறிகள், அம்பு, வேல், கற்களைத் தாமே ஏவும் பொறிகள், பன்றிப் பொறி, பாம்புப் பொறி, தானே இயங்கும் தேர்ப் படை, குரங்குப் பொறி, ஆட்டுப்பொறி, கழுத்தறுக்கும் கயறு ஆகிய இவை, யவனர்களின் பொறியியல் அறிவு துணை கொண்டு பண்ணப்பட்டன என்கின்றன அப்பாக்கள்:

"மற்றவர் மறப்படை மலைந்து மதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு, தூக்கு எறி பொறியும்,
தோற்றமுறு பேய், களிறு, துற்று பெரும் பாம்பும்
கூற்றமன கழுகு, தொடர் குந்தமொடு கோண்மா",

"விற்பொறிகள், செய்ய விடுகுதிரை, தொடர் அயில்வாள்,
கற்பொறிகள், பாவையன, மாடம் அடு செந்தீக்
கொற்புனை செய் கொள்ளி பெரும் கொக்கு எழில் செய்கூகை
நற்றலைகள் திருக்கும் வலிநெருக்கு மரநிலயே".

"செம்புருகு வெங்களிகள் உமிழ்வ, திரிந்த எங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய் முகந்து உமிழ்வ,
வம்புமிழ்வ, வேல் உமிழ்வ, கல் உமிழ்வ வாகித்
தம்புலங்களால் யவனர் தாள் படுத்த பொறியே";

"கரும்பொன் இயல் பன்றி, கதநாகம், விடுசகடம்,
குரங்கு, பொருதகரினொடு, கூர்ந்து அரிவ நுண்நூல்,

பரந்த பசும்பொற்கொடி, பதாகையொடு கொதிக்கும்,
திருந்து மதில் தெவ்வர் தலை பனிப்பத் திருந்தின்றே'';
—சீவக சிந்தாமணி : 101 - 104

யவனப் போர்ப் பொறியாளர்கள் மட்டுமல்லாமல், யவனக் கைவினைஞர் பலரும் தமிழ் நாட்டில் குடி வாழ்ந்திருந்தனர். யவனத் தச்சரின் உரோமக் கைவினைஞர் வேலைப்பாடு பழந்தமிழ் லெக்கியங்களில் பரவலாகப் பாராட்டப்பட்டுளது. யவனர் இயற்றிய பாவை விளக்கின் நலம் ஓரிடத்தில் பாராட்டப்பட்டுளது.

''யவனர் இயற்றிய வினைமாண் பாவை
கையேந்து ஐயகல்''

மகதவினைஞர், மராட்டக் கம்பர், அவந்திக் கொல்லர், தண்டமிழ் வினைஞர்களோடு கூடிப் பணிபுரியும் யவனத் தச்சரை மணிமேகலை பாராட்டுகிறது.

''மகத வினைஞரும், மராட்டக் கம்மரும்
அவந்திக் கொல்லரும், யவனத் தச்சரும்
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடி'';
—மணிமேகலை : 19 : 107 - 109

கி. பி. 500க்கும் 1000க்கும் இடையில் எழுதப்பட்ட உதயணன் பெருங்கதை என்ற நூல் யவனர்களைப் பல இடங்களில் குறிப்பிடுகிறது. அது, யவனர் இயற்றிய அணிமணி, ''யவன மஞ்சிகை'', (காதை : 32 : 76) பாவை விளக்கு, ''யவனப் பாவை அணிவிளக்கு (17 : 175) யவனர்களின் கைவேலைப்பாடு சிறக்கப் பண்ணப்பட்டமகர வீணை ''யவனக் கைவினை மாணப் புணர்ந்தோர் மகரவீணை'' (16 : 22 - 23) பெட்டி, ''யவனப் பேழை'' (22 : 213) பொன்னால் ஆன தாமரைபோலும் வடிவும் வனப்பும் உடைய்தான யவன ஆரியர் பண்ணிய வண்டி.'' யவனக் கைவினை ஆரியர் புனைந்தது, தமனியத்து இயன்ற தாமரை போலு

வையம்'': (38: 233 - 234, 239) யவனச்சேரி ஒன்று குறிப்பிடப்படுவதால், யவனர்கள் பெருந்திரளாக வந்து வாழ்ந்திருக்க வேண்டும். ''ஐம்பதினிரட்டி யவனச்சேரி'' (4 : 1, 8) ''பயனறவு அறியா யவனர் இருக்கையும், கலந்தருதிருவின் புலம் பெயர் மாக்கள் கலந்திருந்து உலையும் இலங்குநீர் வரைப்பு : (சிலம்பு : 5 : 10 - 12)

## தாலமியின் நில நூலும் தென்னிந்தியாவும் :

தாலமி, கி. பி. 150இல் எழுதிய நில நூல் பற்றிய தம்முடைய ஆய்வுக் கட்டுரையில், தமிழ்நாடு பற்றிய விளக்கமான செய்திகளைப், பெரிபுளூஸ் கொடுத்திருப்பதைவிட, அதிகமாக அளித்துள்ளார். தென்னாடு பற்றிய தம்முடைய அறிவினை, அவர், தென்னாடு சென்று வாழ்ந்திருந்தவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டார். தென்னிந்தியா, வழி வழி சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவேந்தரிடையே மட்டுமல்லாமல், வேறு, எண்ணற்ற குறுநிலத்தலைவர்களுக்கிடையேயும், பங்கிடப்பட்டுக்கிடந்தது; அம்மூவேந்தர்களும், ஏறத்தாழ, ஒத்த நிலையினராகவே இருந்தனர். கரிகாலனைப் போலும் சோழ அரசர்கள், தென்னிந்தியா முழுமைக்கும் தாமே ஒப்பற்ற பேரரசர் எனக் கூறிக்கொள்ளும் நிலைமை அதுவரை தொடங்கப்படவில்லை என்பன, அவருடைய மதிப்பீட்டிலிருந்து நம் மனதில் இடம்பெறும் பொதுவான கருத்துக்களாம். தாலமியின் கருத்துப்படி, சோழர்கள், ஓரளவு நாடோடிகளாவர். அவர்களுடைய தலைநகர், ஆர்க்காடாக இருக்குமோ என எண்ணத்தகும் நிலையினராகிய அவர்களுடைய பெயர், ''சொரைடே'' (Sorietae) ''சொரிங்கோய்'' (soringoi) ''சொரே'' (Sorae) என்பதிலும், உரையூரின் மற்றொரு பெயராம் உறந்தை என்பதின் திரிபாம் ''ஓரத்தொரா'' (Orthora)வைத் தலைநகராக்க கொண்ட, இனப்பெயராம் என மதிக்கத்தக்க ''சொர்நாஸ்'' (Sornas) என்பதிலும் மறைந்துளது. தாலமி காலத்தில், பாண்டியர்களும், குறிப்பிட்ட ஒரு சிறு எல்லைக்குள்ளாகவே இருந்தனர். (Warmington page : 114 - 115). இது ஒன்றே, மூன்று

அரச இனங்களில், எந்த ஓர் அரச இனமும், ஏனைய அரச இனங்கள் மீது பேரரசு உரிமை கொள்ளும் காலம் இன்னமும் உருவாகவில்லை என்பதைத், தன்னளவிலேயே உணர்த்துவதாகும். மேலும் வடஇந்தியா பற்றி ஆராயும்போது பரவலாக, "இந்தோ - சித்தியா" (Indo - scythia) "அபிரியா" (Ahiria) "அர்சா" (Arsa) என்பன போலும் அரசுகள் பற்றியே பேசும் தாலமி, தென்னிந்தியா பற்றிய செய்திகளில், "ஐஓயி" (Aioi) "கரெஓயி" (Kareoi) "பண்டியோனொயி" (Pandionoi) "சொரெடொயி" (Soretoi); "பட்டோயி" (Batoi) "அருவர்னொயி" (Arwvarnoi) "தொரிங்கோயி" (Thoringci) என்பன போலும் பழங்குடியினர் பற்றியே பேசுகிறார். இது, கரிகாலன் மற்றும் நெடுஞ்செழியன் காலங்களைப் போல, அரசர்களின் ஆட்சித் திறன் உறுதி செய்யப்படவில்லை என்பதையே உணர்த்துகிறது. வடக்கிலிருந்து வரிசைப்படுத்துங்கால் இடம்பெறும் முதல் தமிழ்நாட்டின் பெயரை, "லிமிரிக்கே" (Limyrice) அல்லது 'டிமிரிக்கே' (Dymirike) என, அவர் அழைக்கிறார். இப்பெயர், தமிழகம் முழுமையும் குறிப்பதாகத் தவறாக எடுத்துக் கொள்ளப்பட்டது. ஆனால், பெரிபுளூஸ், தாலமி, ஆகிய இரு ஆசிரியர்களுமே, சேர நாட்டை மட்டும் குறிக்கும் பெயராகவே, அதைக் கொண்டுள்ளனர். அதற்கு வடக்கே உள்ள நாடு, அவர்கள் கருத்துப்படி, பழந்தமிழ் இலக்கியங்களின் பல்வேறு இடங்களிலும், மராத்தியர் என்ற வரையறுக்கப்பட்ட பொருள் நிலையில் வரும் ஆரியர்க்கு உரித்தான "அரியகே" (Ariake) என்ற நாடு ஆகும். தமிழர்களுக்கு உரியதான "டிமிரிகே" (Dymirike) என்ற பெயர், ஆரிய நாட்டை அடுத்திருக்கும் தமிழ் மாநிலத்தை, அதாவது சேர நாட்டைக் குறிப்பதாக, வெளி நாட்டு வணிகர்களால், மேலெழுந்தவாரியாக, எடுத்துக் கொள்ளப்பட்டது. தாலமி குறிப்பிடும் இனங்களில் பெரும்பாலானவை அடையாளம் கண்டு கொள்ளக் கூடியனவே, "ஐயோயி" (Aioi) எனப்படுவார், ஆயர் ஆவர்; "காரஒஇ" (Kareoi) எனப்படுவார், கரையர் ஆவர்; "பண்டியோநோயி" (Pandinoui) எனப்

படுவார், பாண்டியர் ஆவர்; "சொரெடோயி" (Soretoi) யும், அதைத் தொடர்ந்து வருவனவும் சோழர் ஆவர்; "படோயி" (Batoi) எனப்படுவார், தென்கிழக்குக் கடற்கரையைச் சேர்ந்த பரதவர் ஆவர். "அருவர்னோயி" (Arwarnoi) எனப்படுவார், கிழக்குக்கரை மாவட்டங்களாம், தென்னார்க்காடு, செங்கற்பட்டு, வடார்க்காடு மற்றும் நெல்லூர் மாவட்டங்களைக் கொண்டு அருவா நாட்டினரான அருவாளர் ஆவர். "சொரெடோயி" (Soretoi) என்பதன் மற்றொரு பெயராகத் தாமி அவர்கள் குறிப்பிடும் "தொரிங்கோயி" (Thoringoi) என்பது சோழர் அல்லது சோழியர் என்பதன் திரிபுச்சொல்லாம். "டிமிரிக்கே" (Dymirike) "பாண்டியோநோயி" (Pandionoi) "சொரெடோயி" (Soretoi) "அருவர்னோயி" (Arwvarnoi) என்ற நாடுகளை முறையே ஆளும், "கெரபோத்ரோஸ்" (Kerabothros) (அசோகன்கல்வெட்டில் வரும் கேரள புத்ரர்), பாண்டியன் (Pandion) "சொர்னகோஸ்" (Sornagos) "பஸர்னகோஸ்" (Basarnagos) என்ற நான்கு அரச இனங்களைத், தாலமி குறிப்பிடுகிறார். கடைசி இரு பெயர்களின் ஈற்றில் வரும் "னகோஸ்" (Naguos) என்பதை "ராஜா" என்பதன் பிழைவடிவாகக் கொண்டாலல்லது அதன் பொருளை உணர்ந்து கொள்வது அறவே இயலாது. கடைசியில் வரும் அரச இனத்தைக் குறிக்கும், "பஸர்னகோஸ்" என்ற பெயர், ஒரு தமிழ் அரச இனத்தின் பெயராவது அறவே பொருந்தாது. தாலமியின் காலத்தில், "அருவார்நோயி" நாட்டைப், பல்லவர் ஆளத் தொடங்கியிருக்கக் கூடும். அங்ஙனமாயின், "பஸர்னகோஸ்" என்பது, "பல்லவராஜா" என்ற சொல்லின் திரிபு வடிவாதல் கூடும். இவ்வரச இனங்களின் தலைநகர்கள், தாலமியால், கூடுமானவரை சரியாகவே கொடுக்கப்பட்டுள்ளன. உள்நாட்டு நகரங்களான அவை வருமாறு: கரூரைக் குறிக்கும் "கரௌரா" (Karoura), மதுரையைக் குறிக்கும் "மொதௌரா" (Modowra) உறையூர், அல்லது உறந்தை அல்லது சமஸ்கிருதத்தில் உறகபுராவைக் குறிக்கும் "ஓர்தொரா" (Orthowra), காஞ்சீபுரம், அல்லது காஞ்சீ

புரத்திற்கு அருகில் உள்ள மாநிலங்கையைக் குறிக்கும் "மலங்கா" (Malanga), கடலைச் சார்ந்தனவும் உள்நாடுகளில் இருப்பனவுமாகிய எண்ணற்ற ஊர்ப் பெயர்களையும் தாலமி குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் சில வருமாறு: "திண்டிஸ்" (Tyndis) தொண்டி ஆகும். "மௌஸிரிஸ்" (Mowziris) முசிறி ஆகும். மரகதமும், வைடூரியமும் கிடைக்கும் "பௌனட" (Iownta) புன்னாடாகும். சேர நாடாம் "டிமிரிக்கே"வில் இருக்கும் கரௌரா" (Karoura), கரூர் ஆகும். ஐயோயி நாட்டில் இருக்கும் கொட்டியரா, கொமரியா (Kotiara; komaria) என்பன முறையே, கோட்டாரும், குமரியும் ஆம், "கோரி" (Kory) தனுஷ்கோடி, இராமேஸ்வரம் இரண்டையும் குறிக்கும். மதுரை மட்டு மல்லாமல், பாண்டி நாட்டில் இருக்கும் "பெரிங்கரை" (Beringkarai) பெருங்கரையைக் குறிக்கும். "நிகம" (Nikama) நாகைப்பட்டினம் அல்லது நியமத்தைக் குறிக்கும். "படொயி" (Batoi) நாட்டில் உள்ள "கல்லிகிகொன்" (Kalligikon) "கலிமிர் முனை" அல்லது தலைமன்னார் முனையைக் குறிக்கும் "கபெரிஸ்" (Khaweris) காவிரிப்பூம்பட்டினத்தையும் "மகௌர்" (Magour) மோகூரையும் குறிக்கும். "தொரிங்கோயி" அல்லது "சொரெடோயி" நாட்டில் உள்ள ",ஓர்தௌரா" குறிப்பது மட்டுமல்லாமல் "அருவர்னோயி" நாட்டில் உள்ள, காஞ்சீபுர நாட்டின் கடல் துறையாம், மல்லை, இன்றைய மகாபலிபுரம், அல்லது காஞ்சியைக் குறிக்கும் மாவிலங்கையாம், "மலங்கா" (Malanga)வையும் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்நாட்டில் உள்ள பல ஆறுகளின் பெயர்களையும் தாலமி, குறிப்பிட்டுள்ளார். அவரால் "திமிரிகெ" என அழைக்கப்படும் சேர நாட்டில், இன்று போலவே அன்றும் தலையாய ஆறாக இருந்த, முதல் ஆற்றின் பெயர், "பொய்வாய்" எனும் பொருள்படுவதாய "ஸெவுதோஸ்தோமோஸ்" (Psewdostomos) என்பதாம். பேரியாறு, கடலொடு நேரே கலப்பதில்லை; அது, கிராங்கனூருக்கு அருகில், கழிநீரோடு கலந்து, தன் போக்கை இழந்துவிடுகிறது என்ற

உண்மையை இப்பெயர் சுட்டுகிறது. அடுத்து கூறப் பட்டிருப்பது, திமிரிக்கேவுக்குத் தெற்கில் உள்ள "பரீஸ்" (Baris) என்பதாம். இது, உறுதியாகப் பருவூர் ஆறே; அடுத்தது, "கொல்கோஹி"க்கு வெகு தொலைவில் இல்லாத "சோலென்" (Solen) என்பதாம். இது, கொற்கைக்கு அருகில் ஓடும், தாம்பிரபரணி ஆற்றின் தமிழ்ப் பெயராம் பொருநை என்பதன் பிழை வடிவேயாம். தாலமி குறிப்பிடும் அடுத்த ஆறு, காவேரியைக் குறிக்கும் "கபெரோஸ்" என்ப தாம். அந்த ஆற்றின் தமிழ்ப் பெயராம் காவிரி என்பதில் இருப்பது போலல்லாமல், அதன் சமஸ்கிருதப் பெயராம் காவேரி என்பதில் இருப்பது போலவே, இச்சொல்லில் நெடில் ஏகாரத்தைக் கொடுத்திருப்பது குறிப்பிடத்தக்கதாம்: காரணம்: டியோன் செரிஸோஸ்டம் (Dion - Chrysostum) அவர்கள் கூற்றுப்படி, கி. பி. 100இல் அலெக்ஸாண்டிரியாவில் இருந்த பிராமணக் குடியிருப்பைச் சேர்ந்த பிராமணர்களிட மிருந்து, அல்லது, அப்பிராமணர்கள் அறிவுரைப்படி வந்த வணிகர்களிடமிருந்து, காவிரி பற்றிய செய்தியைத், தாலமி அறிந்திருக்க வேண்டும். தென்னிந்தியாவில் அவர் குறிப்பிடும் ஆறு "டைரே" (Tyre) என்பதாம். கிரேக்க மொழியில் பகரத்திற்குப் பதில் மகரம் இடம் பெற்றுவிடுவது எளிதில் நிகழ்ந்துவிடும் பிழையாகும் ஆதலின் இது, பெண்ணையாறு என்பதன் வழக்காம் "பென்னெர்" என்பதன் திரிபே ஆகும்; கடற்கரையிலும், உள்நாட்டிலும் இருந்த, பல நகரங்கள் பல வணிக நிலையங்களின் பெயர்கள், தாலமியால் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றின் இடங்களை அடையாளம் காண்பதில், ஏராளமான, தவறான கற்பனைக் கருத்துக்களெல்லாம் செலவழிக்கப்பட்டன என்றாலும், அம்முயற்சி அனைத்தும் பயனில என்பது உறுதியாகிவிட்டது:

**நீரோவின் இறப்பிற்குப் பின்னர் உரோம வாணிகம்:**

அரியணை உரிமை குறித்து ஏற்பட்டுவிட்ட பகைமை, அது தொடர்ந்து ஏற்பட்டுவிட்ட உள்நாட்டுப் போர்கள் காரணத்தால், நீரோவின் இறப்பிற்குப் பிறகு,

நவரத்தினங்கள், நனிமிகு நேர்த்தியான மென்துணிகளிலான வாணிகம் குறையத் தொடங்கிவிட்டது. வெஸ்பாஸியன் (Uespasion) பேரரசன் ஆனதும், தேவைக்கு மேலிருந்த உயர் நாணயங்களைக் கட்டுப்படுத்தும் சட்டங்களை வெளியிட்டான். ஆடம்பர வாழ்வின் இடத்தைத் தன்னல மறுப்பு நிலை கைப்பற்றிக் கொண்டது. என்றாலும், இந்திய வாணிகம் அடியோடு அழிந்துவிடவில்லை. உரோமப் பேரரசின் புகழ் குன்றத் தொடங்கிய காலத்தைச் சேர்ந்த உரோம நாணயங்கள், தென்னிந்தியாவில் காணப்படாமையால், தமிழர், உரோமானியரோடு நடத்திய வாணிகம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டில், அடியோடு அழிந்துவிட்டதாகச், சில ஆசிரியர்கள் கற்பனை செய்துள்ளனர். மிளகு, பருத்திநூல் இவைகளிலான வாணிகம் தொடர்ந்து நடைபெற்றுவந்தது. ஆகவே, நிலைமை அவ்வாறு ஆகிவிடவில்லை. கி. பி. 408இல் "அலரிக்" (Alaric), உரோம் நகரை அழிக்காமல் விட்டபோது, 3000 பவுண்டு மிளகையும், 4000 பட்டு மேலங்கிகளையும் பிணையப் பொருள்களாகக் கேட்டுப் பெற்றான் என்பதால், இது உறுதிப்படுகிறது. (J. R. A. S. 1904. Page. 648) மேலும், உரோமநாணயங்கள் "கான்ஸ்டன்டைன் (Constantine)" காலத்திலிருந்து வட நாட்டில் காணப்படுவது போலவே, தென்னிந்தியாவிலும் காணப்பட்டன. நான்கு, ஐந்தாம் நூற்றாண்டுகளில் அதன் வருகை அதிகரிக்கவும் ஆயிற்று. "ட்ராஜன்" (Trajan) போலும் கீழ்ப்பகுதியை வலிந்து கைக்கொண்ட "ஜூலியன்" (Jwlian) இந்திய அரச இனங்கள் உட்பட, பல்வேறு கீழ்நாட்டு மக்களிடமிருந்து தூதுவர்களை வரவேற்றிருக்கும்போது, கான்ஸ்டைன்டைன், தன்னுடைய வாழ்நாளின் இறுதி ஆண்டில், இந்தியத் தூதுவர் ஒருவரை வரவேற்றான் (Warmington; page: 140)

கி. பி. 376 முதல் "பைசன்டைன்" (Byzantine) பேரரசர்களின் ஆட்சியின் கீழ், பைசன்டைன் மக்களுக்குப், போதிய செல்வத்தைப் போலவே போதிய ஓய்வும் இருந்தது. கீழ் நாடுகளுக்கு அணித்தாக வைக்கப்பட்டமையால், இந்திய

ஆடம்பரப் பொருள்களின் தேவை பெருகிவிட்டது. அதன் பயனாய்ப், பேரரசர்களின் நாணயங்கள், இந்தியாவில் காணப்படலாயின. ஏழாம் நூற்றாண்டில், அராபியர், சிரியா, எகிப்து, பர்ஷியா ஆகிய நாடுகளை வெற்றிகொண்டு, மீண்டும், இந்திய வாணிகத்தின் இடைத்தரகராயினர். ஆகவே, யவனர் என்ற பெயர், மெல்ல மெல்ல, அராபியரை குறிக்கவும் வழங்கப்பட்டு, பின்னர், பொதுவாக, முகம் மதியரைக் குறிக்கவும் வழங்கப்பட்டுவிட்டது.

———

# அதிகாரம் XIX

# காஞ்சீபுர மாவட்டம்

காஞ்சீபுர நகரம்

கி. மு. 200 அளவில் வாழ்ந்திருந்த பதஞ்சலி, தமிழ் நாட்டில் உள்ள "காஞ்சீபுர" என்ற ஒரு நகரின் பெயரை மட்டும் எடுத்துக் கொண்டு, அந்நகரைக் குறிக்கும் சொல்லி லிருந்து, அந்நகரைச் சேர்ந்த ஒருவனைக் குறிக்கும் "காஞ்சீபுரக" என்ற பெயர்ச்சொல் தோன்றுவதற்கான இலக்கண விதிமுறைகளை விளக்கியுள்ளார். வார்த்த பாஷ்யம்: 16 : on 1 ஆண் : 4 : 11 : 104) ஒரு வட இந்திய ராகிய பதஞ்சலி, "உரகபுரக" (உறையூரைச் சேர்ந்தவர்) "மதுராபுரக" (மதுரையைச் சேர்ந்தவர்) என்ற சொற்களுக்கு அல்லாமல், "காஞ்சீபுரக" என்ற சொல்லின் தோற்றத்தை விளக்குவது தேவை என ஏன் எண்ணினார்? பிற்கூறிய இரு சொற்களும் சமஸ்கிருத இலக்கியங்களில், தங்களை நிலை பெறச் செய்து கொள்ளவில்லை; ஆனால், காஞ்சீபுரத்தி லிருந்து வருபவர்கள், வட இந்தியக் கல்வியாளர்களுக்கு நன்கு தெரிந்திருந்தனர் என்பதை, அவர் மிகத் தெளிவாகக் கருத்தில் கொண்டார்; வட இந்தியக் கல்வியாளர்களுக்கு நன்கு தெரிந்திருந்தனர் என்பதை, அவர், மிகத் தெளிவாகக் கருத்தில் கொண்டார். வட இந்தியாவுக்கும், சோழ பாண்டிய நாடுகளுக்கும் இடையில், வாணிகத் தொடர்பு இருந்தது என்பது உண்மை; ஆனால், காஞ்சீபுரத்திற்கும், பாடலிபுத்தி ரத்திற்கும் இடையில் இருந்த, அறிவாளர்களுக்கிடையிலான தொடர்பு போலும் தொடர்பு எதுவும், தெரிந்தவரையில் இல்லை. அந்நாட்களில், சமஸ்கிருத நாகரீகத்தின் தென் கோடி எல்லை, காஞ்சீபுரம். "காஞ்சீபுர" என்பது, ஒரு சமஸ்கிருதச் சொல்; அந்நகர் தமிழ்நாட்டில் இடம் பெற்றிருந்தாலும், அதற்குத் தமிழ்ப்பெயர் இல்லை.

"கச்சி" என்ற பெயர், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த, இளந்திரையன் புகழ்பாடும் பெரும்பாணாற்றுப் படையில் இடம் பெற்றுளது. ("கச்சியோனே" : வரி : 420) கச்சி என்ற அச்சொல், ஒட்டியாணம் எனப்படும் இடையணியால் பெயர் பெற்ற நகரம் எனும் உண்மையான பொருளுடையதான "காஞ்சீபுர" என்பதன் குறுகிய வடிவமாம், "காஞ்சி" என்பதைத், தமிழ்ப்படுத்தியதன் விளைவால் வந்ததாம். "காஞ்சீயூர்" என்ற சொல், பழந் தமிழ்ப் பாக்களில் இடம் பெற்றுளது; ஆனால், "காஞ்சியூர்" என்பதில் வரும் "காஞ்சி" என்பது, ஒரு மரத்தின் பெயரைத் தெளிவாக உணர்த்துகிறது. அது, காஞ்சீபுரத்தைக் குறிப்பது என்பது அறவே இல்லை.

["காஞ்சியூர!" (காஞ்சி மரங்கள் சூழ்ந்த ஊரைச் சேர்ந்தவனே ; (அகம் 96 : 8) இச்சிற்றூர், சோழநாட்டில் உளது. காஞ்சி, மருதத்திணை சார்ந்த செய்யுட்களில் இடம் பெற்றுளது. "காஞ்சி நீழல் குரவை அயரும்" அகம்:336:9. "காஞ்சியூரன்" என்ற தொடர் குறுந்தொகையிலும் இடம் பெற்றுளது.

> "பயறுபோல் இணர பைந்தாது படீஇயர்
> உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
> காஞ்சியூரன்" —குறுந்தொகை : 10 : 2-4.

(பயற்றங்காய்க் கொத்து போன்ற பூங்கொத்திலிருந்து, பசிய பூந்தாதுக்கள், தங்கள் மேல் படியுமாறு, உழவர்கள் வளைத்த, மணம் வீசும் மலர்களைக் கொண்ட மெல்லிய கிளைகளைக் கொண்ட காஞ்சி மரங்களையுடைய ஊரன்) மலர். "நீர்த்தாழ்ந்த குறும் காஞ்சி" (18 : 7) என்ற புறநானூற்றிலும், மரம், "காமருகாஞ்சி" (351 : 11) என்ற புறநானூற்றிலும் வந்துள்ளன).

தமிழரசர்களின் பழைய தலைநகர்கள், உறையூர், வஞ்சி, மதுரை. தமிழ் மரபு, காஞ்சீபுரத்தைத் தமிழரசர் அவனோடு இணைக்கவில்லை. அது, தமிழ்நாட்டின் எல்லை

களுக்கு அப்பாலுக்கு அப்பாலும் இடம்பெற்று, அந்நாட்டின் மையப்பகுதியிலிருந்து நெடுந்தொலைவில் அமைந்துளது; பண்டை நாட்களில் பதினொரு தமிழ் மாவட்டங்களும் தனித்தனிப் பெயர்களைப் பெற்றிருந்ததுபோல், காஞ்சி மாவட்டம், தனக்கென ஒரு தனிப் பெயரைப் பெற்றிருக்க வில்லை; மாறாக, இன்று, தென்னார்க்காடு மாவட்டம் என அழைக்கப்படும் "அருவா" நாட்டிற்கு வடக்கே உள்ள நாடு எனும் பொருளில், "அருவா வடதலை" என்று மட்டுமே அழைக்கப்பட்டது. பிற்காலத்தில், அதாவது, பல்லவ அரச இனம், ஆங்கு, இறுதியாகத், தங்களை நிலைபெறச் செய்து கொண்டு, அம்மாவட்டம், தமிழ் நாகரிகத்தின் நடுநாயகமாகி விட்டதற்கு நெடுங்காலத்திற்குப் பின்னரே, அது, "தொண்டி" என்ற கொடியால் பெயர் பெற்ற அரசர்கள், அல்லது இனத்தவர்களால் ஆளப்பட்ட மாவட்டம் எனும் பொருளில் தொண்டைமண்டலம் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டது. அதன் பின்னர், தென்னார்க்காடு மாவட்டம் "நடுநாடு" ஆகிவிட்டது. ஆக, பண்டை நாட்களில், காஞ்சிபுர மாவட்டம், உண்மையான தமிழ் நாட்டிற்கு வெளியில், அருவா என்ற தமிழ் மாவட்டத்தின் வடக்கில் இருந்ததாகவே தமிழர்களால் கருதப்பட்டது என்பதை, நாம் அறிகிறோம்.

**ஆந்திரர் :**

இந்நிலப் பகுதிக்கு அப்பால் அமைந்திருந்தது, ஆரிய நாகரீகம், விந்தியத்தை ஊடுருவித் தக்ஷிணபாதத்தில் பரவிய போது, அதை முதன்முதலில் ஏற்றுக்கொண்டவர்களாகிய, விந்தியத்திற்கு அப்பாலான தஸ்யூக்களாம் ஆந்திரர் ஆட்சி புரிந்து வந்த மேட்டு நிலம். ஆந்திரரிடையே, பௌதாயனர், ஆபஸ்தம்பர் என்ற இரண்டு பிற்கால முனிவர்கள் தோன்றினர். ஆகவே, அவ்வாந்திரர், கி. மு. முதலாம் ஆயிரத்தாண்டின் தொடக்கத்தில், ஆரிய மயமாக்கப்பட்டனர். விந்தியத் திற்குத் தெற்கில், மிகப்பரந்த, ஆரிய மயமாக்கப்பட்ட ஒரு பேரரசை, ஆந்திரர்கள், நனிமிகப் பழங்காலத்தில் நிறுவி

யிருக்க வேண்டும். அப்படியில்லையென்றால், அவர்களிடையே, அறங்கூறும் ஆன்றோர்களின் பிறப்பை விளக்குவது மிகவும் அரிதாம்; காரணம், அறம்கூறும் ஆன்றோர்கள், அரசர்களின் அரவணைப்பு இன்றித், தோன்றுதல் இயலாது. அசோகன், ஆந்திரர் மீது, தெளிவில்லாத ஒரு வகை மேலாதிக்கத்தைக் குறிப்பாக உணர்த்துகிறான். இது, கி. மு. நான்கு மற்றும் மூன்றாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஆந்திர அரசர்கள், மகாபத்ம நந்தனிலிருந்து வரும், மகதப் பேரரசர்கள், வல்லமையில் தங்களிலும் சிறந்தவர்; மரியாதைக்காகத் தங்களிடமிருந்து நன்கொடை பெற உரிமையுடையவர் என்பதை ஏற்றுக் கொண்டார்கள் என்றுதான் பொருள் படுமேயல்லாது, ஆந்திரப் பகுதி, மகதப் பேரரசின் ஒரு பகுதியாகவே ஆகிவிட்டது என்பது பொருளாகாது. மேலும், பெரும்பாலும் மெகஸ்தனிஸின் கூற்றுக்களிலிருந்து மேற்கோள் காட்டி, ஆந்திர நாடு, எண்ணற்ற சிற்றூர்கள் அல்லாமல், மதில் சூழ்ந்த நகரங்கள் முப்பதையும் 1,00,000 வீரர்கள், 2000 குதிரைகள், 1000 யானைகள் கொண்ட ஒரு பெரிய படையையும் கொண்டிருந்ததாகத், திரு. பிளைனி அவர்கள் நமக்கு அறிவிப்பதை, வி. ஏ. சிமித் அவர்கள் சுட்டிக் காட்டியுள்ளார். இச்செய்திகள், உண்மையில், மெகஸ்தனிஸிடமிருந்தே வந்தனவாயின், அது, மௌரியர் காலத்தில், ஆந்திர அரசர்கள், பரந்த, ஆற்றல் மிக்க தன்னாட்சிப் பகுதியைப் பெற்றிருந்தனர் என்பதைக் காட்டுவதாகும்: அசோகன் காலத்தில், ஆந்திரர்கள், தங்கள் அரசர்களின் ஆட்சியின் கீழ்ப், பெரிதும் மதிக்கத் தக்க தன்னாட்சி உரிமையை அனுபவித்திருந்தனர் என்றும் திரு. சிமித் அவர்கள் கருதுகிறார். [V. A. Smith. Early History of India. Page 217-18 and Foot note].

புராணங்கள், தங்கள் ஆந்திர அரசர்களின் பட்டியலை, சிமுகனைக் கொண்டு தொடங்குகின்றன. இன்றைய வரலாற்று அறிஞர்கள், அவன், கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் ஆட்சி புரிந்திருந்ததாக என்னு

இன்றனர். அப்படியென்றால், கிமுகளுக்கு முன்னர், ஆந்திர அரசர்கள் இல்லை என்பது பொருளா? இல்லை; காரணம், மெகஸ்தனிஸ் கூறும் ஆந்திர நாடு, அதன் சொந்த அரசர்களாலேயே ஆளப்பட்டது. புராணங்களில் வரிசைப் படுத்திக் கூறப்பெறும் கலியுக அரச இனங்கள், ஆரிய வர்த்தத்தால் உணரப்பட்ட செல்வாக்கினையுடைய அரசர்களை மட்டுமே குறிப்பிடுகின்றன. ஆந்திரர் செல்வாக்கு, ஆங்கு உணரத்தலைப்பட்ட பின்னர், புராணங்கள், கி. மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த கிமுகள் தொடங்கி, ஆந்திர அரச இனத்து அரசர்களின் பெயர்களைக் குறிப்பிடத் தொடங்கின. கிமுகளுக்கு நெடுங்காலத்திற்கு முன்பே, அதாவது, ஆந்திர நாடு, ஆரிய மயமாக்கப்பட்டு, ஆரிய வாழ்க்கைச் சட்டங்களும், பழக்க வழக்கங்களும், கி.மு. முதல் ஆயிரத்தாண்டின் தொடக்கத்தில் பரவத் தொடங்கிய அந்நாள் தொட்டே, ஆந்திரப் பேரரசுகள் நிலைபேறு கொள்ளத் தொடங்கி விட்டன.

## காஞ்சீபுரத்தில் ஆரியச் செல்வாக்கு

காஞ்சீபுர மாவட்டம், ஆந்திரப் பேரரசின் கடைகோடி எல்லை விளிம்பில், உண்மையான தமிழ் மாநிலங்களுக்குச் சற்றே வெளியில் உள்ள ஒரு நிலப்பரப்பாக இருந்தமையால், பெரும்பாலும் அந்நாள் (கி. மு. முதல் ஆயிரத்தாண்டு) தொட்டே, ஆரியச் செல்வாக்கு, அம்மாவட்டத்தின் நுழைந்து இடம் பெற்றிருக்க வேண்டும்.

நனிமிகப் பழங்காலந்தொட்டே, காஞ்சீபுரம் ஆரிய நாகரீகத்தின் கருவிடமாம் என்பது, சந்திரகுப்தனின் சிறந்த அமைச்சராம் சாணக்கியன், திராவிடத்தின் அதாவது, காஞ்சியின் குடிமகனாம் என்ற காதுவழிச் செய்தியால், உறுதி செய்யப்படுகிறது. [Turnour, Mahawamso, Page, 21. J. A. S. B. V 2; Fowlkes J.R.A.S. p. 1985 p. 209] சாணக்கியனுக்கு, வாத்ஸ்யாயனன், மல்ல நாகன், குடிலன், த்ரமிளன், பக்ஷிலஸ்வாமி, விஷ்ணுகுப்தன், அங்குலன் எனப்

பல பெயர்கள், உண்டு. (Hemachandra quoted by law Anc. Hindu Polity Page. X. XVI. Vide also K. V. Rangasamy Iyengar's Anc. Ind. Polity. Page: 87, 88) மிகப் பெரிய அந்த அமைச்சன், சந்திர குப்தனைப் பேரரசின் அரியணையில் அமர்த்த மட்டும் துணை புரியவில்லை; அர்த்த சாஸ்திரம் மற்றும், காம சாஸ்திரம், தர்ம சாஸ்திரம் மோக்ஷ சாஸ்திரம் என்ற தத்துவங்களின் முழு வட்டத்தையும் எழுதினான் என்ற இக் காதுவழிச் செய்தியை மதிக்க மறுப்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லை. மேலே கூறிய பல்வேறு தலைப்புகளில் ஆன் நூல்கள் அனைத்தும், தனி ஒரு மனிதனால் இயற்றப் பட்டன என்பதில் பொருத்தம் இன்மை எதுவும் இல்லை; காரணம்; விஜய நகரப் பேரரசைத் தோற்றுவித்து ஒழுங்கு படுத்தியவரும், சாணக்கியனின் அமைச்சுப் பணிகளைக் காட்டிலும், மிகப்பெரும் வகையில் மாறுபட்டதான அமைச்சுப் பணிகளைப் புரிந்தவருமாகிய மத்வாச்சாரியர், அந்நிலையிலும் நான்கு புருஷார்த்தங்கள் பற்றிமட்டு மல்லாமல், வேறு பிற பொருள்கள் குறித்தும், விரிவான ஆராய்ச்சி விளக்கங்களை எழுத, காலத்தைக் கண்டு கொள்ள வில்லையா? இந்தியாவில் குறிப்பாகப் பண்டைக் காலத்தில் நூல்கள், இன்றுபோல் வெளியிடப்படுவது எப்போதும் இல்லை; பல தலைமுறைகள், நூலாசிரியரின் மாணவர் களின் உடைமையாக, வழிவழியாக இருந்துவந்தன; மூல நூல்களின் பழைய கையெழுத்துப் படிகளில் அவ்வக்கால நிகழ்ச்சிகளிலிருந்து, விளக்கக் குறிப்புக்களை இடையிடையே நுழைக்கப்பட்டதற்குப் பிந்திய தலைமுறைகளைச் சார்ந்த ஆசிரியர்கள்பால் குற்றமாகக் கொள்ளவில்லை; ஆகவே, காம சாஸ்திரத்திற்கு ஒரு பிற்பட்ட காலத்தை வகுக்கும் வகையில், அதில் காணப்படும் "சாதகர்ணி" போலும், அங்கொன்றும் இங்கொன்றுமான குறிப்புகள், இந்நூல்களின், சாணக்கியனுடைய ஆசிரிய உரிமையை மறுப்பதற்குப் போதிய சான்றுகள் ஆகா. ஆகவே, பிற்காலத்தே நுழைந்து விடப்பட்ட, அங்கொன்றும் இங்கொன்றுமான சில இடைச் செருகல்களின் வலுவைக் கொண்டு, பண்டைய சமஸ்கிருத

நூல்களின் காலப் பழமையைக் கணிப்பது கூடாது; சாணக்கியன், அர்த்த நியாய, காம சாத்திரங்களை எழுதினார். இராமானுஜரால், அவருடைய ஸ்ரீபாஷ்யத்தில், குறிப்பிடப்படும் ''த்ரமிலாசாரியரும்'' கூட இவர்தாம் என்ற கூற்றுக்களின் வன்மை மென்மை எவ்வாறாயினும், அவருடைய காலத்தில், முதுபெரும் அறிஞர்களில் அவரும் ஒருவர்; கிறித்துவுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே, இந்தியா முழுமைக்கும் நாகரீகத்தின் ஒளிகாட்டிகளும், இந்தியச் சிந்தனையாளர்களின் தலைவர்களுமாகிய, ''நாகார்ஜுனன்'' ''தின்னாகர்'', ''புத்ததத்தர்'', ''தர்மபாலர்'', ''ஸங்கரர்'', ''ராமானுஜர்'', ''ஆனந்ததீர்த்தர்'', ''மாதவர்'', ''ஸாயனர்'' மற்றும் தென்னிந்திய அறிஞர் பெருமக்களில் தலையாய நிலை பெற்றவர் என்பதும், மறுக்கப்படக் கூடியதன்று. மற்று எல்லாவற்றிற்கும் மேலாக, இந்த உண்மை, இந்நாடு, பொது நிகழ்ச்சிகளின் நிர்வாகம் குறித்து, எப்பொழுதும் ஐம்பத்தாறு நாடுகளாகப் பிரிவுண்டிருந்தாலும், இந்தியாவின் ஒருமைப்பாடு, அதன் நாகரீகத்தின் இடைவிடாத் தொடர்பு ஆகியவைகளை உறுதி செய்கிறது.

காஞ்சீபுரத்தின் பல பெயர்களுள் ஒன்று, ''சத்ய வரத க்ஷேத்ரம்'' என்பது. பாகவத புராணம், சத்யவரதன் (திராவிட அதாவது காஞ்சியின் காவலன்) விவஸ்வானின் மகன், மனு ஆயினன் எனக் கூறுகிறது. (பாகவதம்; 9 : 2, 3 பர்கிதர் பதிப்பு) இந்நில வரலாற்றுத் தொடரில், ஆரியராக் கப்பட்ட அரசர்களின் குலமரபைப், புராணக் கடவுள்கள் அல்லது வீரர்களின் குலமரபில் காணும், குடிவழிப்பட்டியலை விடாது உருவாக்கி வரும் பிராமணர்க்களால் சூரிய குலத்தில் இணைக்கப்பட்டான் சத்யவரதன் என்பதே இதன் பொருள் ஆகும். பல்லவர் காலத்துக்கு முன்பு, காஞ்சியை ஆண்ட அரசர்கள், பெரும்பாலும், சத்யவரதன் வழிவந்தவராய சத்யபுத்திரர் எனப் பேசப்பட்டனர் என்பதைப், போகிற போக்கில் குறிப்பிடல் கூடும். அசோகனின், ''சத்தியபுத்தெர'' என்பார், பெரும்பாலும், அவன் காலத்தில் காஞ்சி அரசர்கள்

ஆவர். (As suggested by S. V. Venkatesvara in the Indian Antiquary for 1919)

சத்யவரதர்களின் வழிவந்தவர்கள், ஆந்திரர்களின் ஆட்சிக்கு அடங்கிய குறுநிலத் தலைவர்களா, அல்லவா என்பதை உறுதிசெய்வல்ல வழிமுறை எதுவும் இல்லை. ஆனால், ஆந்திர நாடு, ஆரியமயமாக்கப்பட்ட பின்னர், காஞ்சீபுரம், ஆரிய நாரீகத்தின் தென்கோடிக் காவல் நிலையமாக ஆகிவிட்டது. பண்டைக் காலத்தில், தமிழ் நாகரீகத்தின் இடமாக அது இருக்கவில்லை என்பது உண்மை.

தமிழ் என்ற சொல்லை, வடவர்கள், "த்ரவிட" என மாற்றிவிட்டாலும் நடைமுறை வழக்கில், "திரவிடர்" என்ற அச்சொல்லைச், சோழர், சேரர், பாண்டியர்களை நீக்கும் வகையில், காஞ்சீபுர மாவட்டத்து மக்களுக்கு மட்டுமேயாக வரையறுத்துக் கொண்டனர். சேர, சோழ, பாண்டியர் என்ற ஏனையோர்களிலிருந்து வேறுபட்டவராகவே திராவிடர் குறிப்பிடப்படுகின்றனர். யுதிஷ்டிரரின் ராஜசூயத்திற்கு வருகை தந்து, பாரதப் பெரும் போரில் பங்கு கொண்ட திராவிடர், சோழ, சேர, பாண்டியர்களின் வேறுபட்டவராகவே குறிப்பிடப்பட்டுள்ளனர். (மகாபாரதம் ; 2 : 34, 1271 ; 3 : 1988 ; 5 : 22, 656 ; 8 : 11, 434) திராவிடர் என்ற இப்பெயர், காஞ்சீபுர மாவட்டத்தைச் சேர்ந்த, ஆரிய மயமாக்கப்பட்ட தமிழர்களைக், குறிப்பாக உணர்த்துவதற்காகவே, ஆளப்படும் நிலைமை, கி. பி. ஏழாம் நூற்றாண்டிலும் இருந்து வந்துளது. யுவான் சுவாங், அம் மாவட்டத்தைத், திராவிட என்ற அச்சொல்லைச் சீனமொழி ஒலியியல் முறைக்கு ஏற்பத் திருத்தப்பட்ட வடிவாம் "த-லொ-பி-ல" எனப் பெயரிட்டு அழைக்கிறார்.

### காஞ்சியில் ஆகம வழிபாட்டு நெறி

கிறித்துவ ஆண்டுத் தொடக்கத்திற்கு, மிகவும் அணித்தாக முந்தியிருந்த நூற்றாண்டுகளில், ஆகம, மற்றும் ஆன்மிக வழிபாட்டு நெறிகள், இந்தியாவில், ஓரளவு

பரவலாக இடம் பெற்றிருந்தன. மிகப் பெரிய ஆன்மீக வழிபாட்டு மையங்கள் ஏழு (திருக்கோயில் நகரங்கள் ஏழு; சிவ பக்தி, அல்லது விஷ்ணு பக்திச் சுடர்களைக் கூறும், ஆன்மிகப் பேராற்றல் மைய இடங்களாக மதிக்கத் தக்க இடங்கள் ஏழு என அழைத்தால், பொருள் தெளிவுக்கு உதவுவதாய் இருக்கும்) - பண்டைக் காலத்தில் முக்கிய இடங்களாக இருந்தன; அவற்றுள் காஞ்சியும் ஒன்று.

''அயொத்யா, மதுரா, மாயா, காசி, காஞ்சீ, அவந்திகா, பூரீ, த்வாரவதீ சைவ சப்தைனா மொக்ஷதாயிகா''.

சப்தகல்பத்ருயா என்பதில் எடுத்துக்காட்டப்பட்ட பூத சுத்தி தந்திரம். இத்தந்திரம், அண்மையில் எழுதப்பட்ட நூலாதல் கூடும். ஆனால், அச்சுலோகம், கால வெள்ளத்தில், தொல்லூழிக் காலமாக மிதந்து வந்த ஒன்று போலவே தோன்றுகிறது.] வட இந்திய நாகரீகத்தோடான, காஞ்சீ புரத்தின் தொடர்புண்மையை இது உறுதி செய்கிறது. இக்கால அளவில் உண்மையான வைதீக நெறி அறவே இறந்துவிட்டது; ஆகவே, காஞ்சீபுரமோ அல்லது ஏனைய ஆறு நகரங்களோ, வைதீக யஜ்ஞந்தோடு சிறப்பாகத் தொடர்புற்றிருக்கவில்லை; ஆனால், சிவ, விஷ்ணு, காளிகளை வழிபடும் மையங்களாக இருந்தன. காஞ்சி, தொடக்கத்தி லிருந்தே. ஆரிய நாகரீகத்தின் மையமாம் என்பதற்கு இது மேலும் ஒரு சான்றாம்.

ஆந்திர அரசு அழிவுநிலை நோக்கிச் சென்றுகொண்டி ருக்கும்போது, எண்ணற்ற பௌத்தப் பள்ளிகள் கட்டப் பட்டன. சாக பல்லவரின் நெருக்குதலால், ஆந்திர அரசு கீழ்க்கரைக்குத் தள்ளப்பட்டு, ''தனகடகம்'', ஆந்திர அரசின் தலைநகராக ஆனபோது, ஆங்கு அழகிய, மிகச்சிறந்த, யவனக் கலையின் அடிச்சுவடுண்மையை உணர்த்தவல்ல, அமராவதி தவப்பள்ளி கட்டப்பட்டது. சைவ, வைஷ்ணவ சமயங்கள் அல்லாமல், பௌத்த சமயமும், அதனோடு சமண சமயமும் காஞ்சியில் நன்கு நிலைகொண்டுவிட்டன என்பதை முழுமையாக நம்பலாம். யவனக் கலையை மங்கலாக

நினைவுக்குக் கொணரவல்லதான புத்த படிமங்களும், சமண நாகரீகத்தின் பழங்கால, கல்லாலான நினைவுச் சின்னங்களும், அந்நகரில், காணப்படுவதன் உண்மையை, இது விளக்குவதாகும்:

**பல்லவர்கள் :**

சாக பல்லவர்கள், கி. பி. முதலாம், இரண்டாம் மூன்றாம் நூற்றாண்டு காலங்களில், ஆந்திரப் பேரரசுக்குள் படிப்படியாக முன்னேறிவிட்டனர். சௌராஷ்டிரம், மாளவம், தனகடகம், மற்றும் காஞ்சீபுர மாவட்டங்கள், ஒன்றன்பின் ஒன்றாகச், சாக பல்லவ அரச இனத்துப் பிரிவினரின் ஆட்சிக் கீழ் வீழ்ந்துவிட்டன. "தர்யவுஷ் விஷ்தஸ்பன்" (தாரியஸ் ஹிஸ்தஸ்பெஸ்-(Darius Hystaspes) காலம் முதலாக, கடல் வழியாகவும், நிலவழியாகவும், இந்தியாவுக்குள் பெருவாரியாகப் பாய்ந்துவந்து, நாட்டின் பல்வேறு மாவட்டங்களில் ஆட்சியுரிமையை நிலை நாட்டிக் கொண்ட இச் சாக பல்லவர், தொடக்க நிலையில், வெற்றிதேடி அலைந்தவராவர். இப் பழங்குடியினர், சைவ, வைஷ்ணவ, பௌத்த, சமண சமயங்களை ஏற்றுக்கொண்டவராதலைக் காண்கிறோமாகவே, சமயம், இவர்கள் மீது மென்மையாகவே ஆட்சி செய்துளதாகத் தெரிகிறது இந்தியாவின் சமய சமுதாய அமைப்புகள், இன்று வெறிபிடித்து அலையும் நிலையில், பத்தில் ஒரு பங்கு அளவைக்கூட அப்போது பெற்றிருக்கவில்லையாகவே, இந்தியச் சமுதாய ஆட்சி அமைப்பில் ஓரிடத்தை அவர்கள் பிடித்துக்கொண்டனர். அவர்கள், பிராகிருத மொழியில் ஏதேனும் ஒரு கிளை மொழியைத், தங்களுடைய அரசவை மொழியாகவும், சமஸ்கிருதத்தைத், தங்களுடைய கலை, கலாச்சார மொழியாகவும் ஏற்றுக் கொண்டனர். அவர்கள், அயல் நாட்டுத் தொடர்புடைய தங்கள் இயற்பெயர்களைப் படிப்படியாகக் கைவிட்டு, அவற்றிற்குப் பதிலாக, சமஸ்கிருதம் அல்லது பிராகிருத மொழிப் பெயர்களை மேற்கொண்டுவிட்டனர். ஆந்திர அரசுக்கு அடி கொடுத்த தனகடகத்தின் ஆட்சியாளராகிவிட்ட

சாக பல்லவர்களின் ஒரு பிரிவினர், பாரத்வாஜ கோத்திரத்து க்ஷத்திரியர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டுத், தங்களைப் பல்லவர் என அழைத்துக்கொண்டனர்.

(பகலவ என்ற சொல், காந்தாரம் முதல் காஞ்சீபுரம் வரை வழக்கில் இருந்த, பிராகிருத மொழி வடிவமாம் பல்லவ, என்ற சொல்லின் சமஸ்கிருத வடிவமாகும்; அது, அருகியே வழங்கப்படும் என்ற உண்மையை அறியாத நிலையில், காஞ்சிப் பல்லவர்களை, ஏனைய இந்திய மாநிலங்கள் அனைத்திலும் உள்ள பல்லவரின் வேறுபட்டவ ராகக் கொண்டு, அவர்களுக்கு, ஒரு தமிழர் மூலத்தைக் காணும் பயனில் முயற்சியொன்று மேற்கொள்ளப்பட்டது. ஐரோப்பிய மொழிகளில், "பார்த்தியன்" என ஆகும், ஒரு பழங்குடி இனத்தவர் பெயராம், "பார்த்தவ" என்பதன், இந்தியத் தன்மையதா ஆக்கப்பட்ட பகலவ, பல்லவ இரண்டும் ஒரே சொல் ஆகும்.)

**காஞ்சியின் பழைய பல்லவ அரச இனம்:**

காஞ்சியில், தன்னை நிலைபெறச் செய்துகொண்ட முதல் பல்லவன், பெரும்பாலும், பப்பா. அவன், ஆத்ரேய, ஹாரித, பாரத்வாஜ, கௌஸிக, காஸ்யப, மற்றும் வத்ஸகோத்திரப் பார்ப்பனர்களுக்கு, நூறாயிரம் காளைக் கலப்பைகளை, ஆயிரமாயிரம் பொற்காசுகளை நன்கொடையாக அளித்தான் எனக் கூறப்படுகிறான். அவனுக்குப் பின் ஆட்சிக்கு வந்தவருள் ஒருவனும், தன் முன்னோன் பப்பாவின் அறப்பணிகளைக் குறிப்பிடுபவனுமாகிய சிவகந்தவம்மன், "அக்னிஷ்டோமம், வாஜபெய, அஸ்வமேத யாகங்களைச் செய்தான், இவ்வுண்மைகள், பண்டை நாட்களில், காஞ்சீமாநகரத்தில், பார்ப்பனர்களுக்குப் (தென்னிந்திய ஆரியர்) பஞ்சம் இல்லை. ஆகவே, அந்நகரம், பல்லவ ஆட்சி தொடங்குவதற்கு நெடுங்காலத்திற்கு முன்பே, ஆரிய மயமாக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதைக் காட்டுகின்றன, சிவகந்தவம்மனுடைய செப்பேடுகள், அவனுடைய மாநிலத்தின் ஆட்சி நிர்வாகம், அர்த்த சாஸ்திரத்தில் விளக்கியுள்ளவாறும், சாணக்கியனை

அடுத்து வந்த அறம்கூறுவோரால் வளர்க்கப்பட்டவாறும் ஆரிய நெறியில் நடத்தப்பட்டது, என்பதைக் காட்டுகின்றன. பேரரசின் உட்பிரிவுகள், அவற்றை ஆட்சிபுரிந்து வந்த அரசு அலுவலர்கள், வரிகள், நன்கொடையாகக் கொடுக்கப்பட்ட நிலமாயின், அதற்கான வரிவிலக்கு ஆகிய அனைத்தும், சமஸ்கிருதச் சொல்லமைப்பு முறையில் குறிப்பிடப் பட்டுள்ளன. அந்த மானியப்பட்டயம், அரசவை ஆலோசனைக் குழுவினர் ஒருவரால், அவர் கைப்பட எழுதப் பட்டது. பின்னர்ச், செப்புத் தகட்டில், செதுக்கப்பட்டது. இறுதியாக, அரசனால் பார்வையிடப்பட்டு, தன்னுடைய ஆணையாக அறிவிக்கப்பட்டு, தாரைவார்த்தல் தொடர வழங்கப்பட்டது. இப்பழைய பல்லவர்களின் காலத்தில், பிராமணர்கள், காஞ்சீபுரம் மாவட்டத்து அக்ராஹாரங்களில் குடி வாழ்திருந்தனர். அப்பட்டயங்கள் உறுதி செய்வது போல், சமயச் சார்பற்ற அலுவலகங்களில் வேலைக்கு அமர்த்தப்பட்டனர். முழுக்க முழுக்க ஆரியப் பழக்க வழக்கங்களான இவை அனைத்தும், தமிழ் நாட்டின் மையப் பகுதிக்கு, அது கி. பி. ஆறாம் நூற்றாண்டில், ஆரிய மயமாக் கப்படும்வரை, தெரியவே தெரியா.

சிவகந்தவம்மனுடைய பட்டயங்கள், ஆந்திர அரசர் களின் நாஸிக் கல்வெட்டுக்களைப் போலவே, இலக்கியப் பாலிமொழியிலிருந்து பல்லாற்றினும், வேறுபட்டு, பிராகிருத மொழியில் அமைந்துள்ளன. இம்மொழி, காஞ்சியில், மதிக்கத் தக்க அளவான நீண்ட காலம் மக்களிடையே வழக்கத்தில் இருந்திருக்கவும், அம்மாவட்டத்து மக்களின் தாய் மொழியாம் தமிழால் ஓரளவு பாதிக்கப்பட்டிருக்கவும் வேண்டும் என்பதற்கான அறிகுறிகள் உள்ளன. ஹீரஹடக ஹள்ளி ஸாஸனத்தைப் பதிப்பிக்கும்போது, திருவாளர் பூலர் (Bwhler) அவர்கள் குறிப்பிட்டவாறு, "முன்னதாகக் கொடுக் கப்பட்ட" எனும் பொருள் தருவதான "புவ்வதத்தம்" என்ற பால்உணர்த்தா அஃறிணைச் சொற்றொடர், "கொடுக்கப்பட்டுவிட்ட" எனும் பொருள் உடையதான, "சம்பத்தொ" என்ற உயர்திணை ஆண்பால் உணர்த்தும்

சொற்றொடரோடு இணைத்தே பொருள் கொள்ள வேண்டியுளது. ஆகவே, அச்சாஸனத்தை ஆக்கியோன் பால், பால்வேறுபாடு குறித்த உணர்வு அறவே இல்லாமை காணப் படுகிறது. பால்வேறுபாடு குறித்த உணர்வு இல்லாமையாம் இந்நிலையை, அதை ஆக்கியோன் வழங்கும் பிராகிருத மொழி, தமிழ் மொழியின் தனிச்சிறப்பு வாய்ந்ததான பால் இலக்கணம் இல்லாக் குறைபாடு, காஞ்சீபுர மாவட்டத்தில் பெருவழக்கில் இருந்த பிராகிருதக் கிளைமொழி மீது ஆதிக்கம் செலுத்துவதற்குத் தேவைப்படும் நிலையில், மதிக்கத்தக்க அளவு நீண்டகாலம், தமிழ்நாட்டில் பேசப்பட்டு வந்துளது என்பதைக் காட்டுகிறது. சிவகந்த வம்மனின் சிலாஸாஸன மொழிமீது, ஆதிக்கம் செலுத்தும் தமிழ்ச் செல்வாக்குகள் வேறு சிலவும் உளவேனும், அவை ஈண்டு ஆராயப்பட மாட்டா.

இந்தியாவில் பதிப்பித்து வெளியிடப்பட்ட முதல், சமஸ்கிருத மொழி கல் எழுத்துப் பொறிப்பு, கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் மையப்பகுதியைச் சேர்ந்த மால்வ நாட்டு ருத்திரதாமுடையதாகும். இக்காலம் தொடங்கி, பிராகிருத மொழி கல்எழுத்துப் பொறிப்புகள், சமஸ்கிருத மொழி எழுத்துப் பொறிப்புக்களால், விரைவாக இடமாற்றிக் கொள்ளப்பட்டன. இவ்வுண்மை சிவகந்தவம்மன், பெரும்பாலும், கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்து முன்னே, இல்லையெனில், இன்னமும் சற்று முன்னே ஆண்டிருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது. திருவாளர் பவுல்கெஸ் (Foulkes) அவர்கள், பல்லவர்களின் இப்பழைய சாஸனங்களெல்லாம், ஆண்டின் முப்பருவங்களில் ஒரு பருவத்து, ஞாயிறு முதலாம் இருவாரகாலத்துப் பதின்மைக் கூறுகளால் நாட்களைக் கணக்கிடுவதன் மூலம், தெக்கணத்தில் கண்டெடுக்கப்பட்ட, கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆந்திர எழுத்துப் பொறிப்புக்களில் பரவலாக இடம் பெற்றிருக்கும் முறையில் நாட்கள் கணக்கிடப்பட்டுள்ளன" எனக் குறிப்பிட்டுள்ளார். இது. பல்லவ அரசு, காஞ்சீபுர மாவட்டத்தில் இரண்டாம் நூற்றாண்டில் அல்லது அதற்கு

முன்பு நிலவியிருந்தது என்ற கருத்திற்குக் கொண்டு செல்கிறது. இந்தத் தற்காலிகப் புனைவுக் கற்பனை, மகாவம்ஸத்தில் (அதிகாரம்: 29) காணப்படும் வட்டகாமணி, (வழிவழியான மரபுவழிக் கணக்கீட்டின்படி) கி. மு. 157இல் அனுராதபுரத்தில் ஒரு கம்பத்தை நாட்டினான்; அது குறித்து எடுத்த புனித விழாவின்போது, பேரறிஞர் மகாதேவர், "பல்லவ பொக்கப்" புத்தப் பள்ளியிலிருந்து நானூற்று அறுபது ஆயிரம் பிக்குகளோடு வருகை தந்தார்" என்ற அறிவிப்பால் உறுதி செய்யப்படுகிறது. திருவாளர் பவுல்கெஸ் அவர்கள் பல்லவ பொக்காவைக், காஞ்சீபுர மாவட்டமாக அடையாளம் கண்டு, ஆகவே பல்லவப் பேராசு, கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியிருக்க வேண்டும் என முடிவு செய்கிறார். (J. R. A. S. 1885 art IX and 1889 art XIII.)

காஞ்சி மாநகரில், புத்தப் பள்ளிகளே மட்டுமல்லாமல் பிராமணாக்கள் ஒருசிலவும் இருந்திருக்க வேண்டும். இந்நகரைச் சேர்ந்த மிகச் சிறந்த பிராமணப் பேரறிஞர்கள், வடவர்களுக்குத் தெரிந்திருந்தனர் என்பது முன்பே குறிப்பிடப்பட்டுளது. பாணாவாசியில், கடம்ப அரச இனத்தைப் பிற்காலத்தே தோற்றுவித்த மயூரசர்மன் கல்வி கற்ற, வேதங்கள் மற்றும் சமஸ்கிருத அறிவு நூல்களைக் கற்றுத் தருவதற்கான கல்லூரி ஒன்று, கி. பி. நான்காம் நூற்றாண்டளவில் காஞ்சியில் நிலைபெற்றிருந்தது. இம் மயூரசர்மனின் கொள்ளுப் பெயரன், அதாவது பெயரனின் பிள்ளையாம் காகுஸ்தவர்மனின் தளகுண்டா எழுத்துப் பொறிப்பு, மயூரசர்மன், தன் ஆசிரியன் வீரசர்மனோடு, பல்லவ அரசர்களின் நகருக்குச் சென்று சமய அறிவுகளையெல்லாம் அறிந்து கொள்ளும் ஆர்வ மிகுதியால், ஆங்குள்ள கல்லூரியாம் கடிகத்துள் மாணவனாக இடம் கொண்டு விட்டான் எனக் கூறுகிறது. ("யஹ் ப்ரயாய பல்லவவெந்த்ர புரீம் குருனா சமம் வீர சர்மணா, அத்ஹீஜிக்ஹாம்சுஹ் ப்ரவசனம் நிக்ஹிலம் விவேஸாய" தர்க்குகஹ் Ep. and VIII p. 32 V. 10) இக்கடிகம், காஞ்சி, முதற்பல்லவ அரச இனம்

வீழ்ச்சியடைந்துகொண்டிருக்கும்போது, துவக்கப்பட்ட புதிய வொன்றன்று; மாறாக, காஞ்சி, ஆரியக்கல்வியின் ஒரு மையஇடமாக, ஆகிக், கற்றுவல்ல பெரியவர்களை, வட இந்தியாவுக்கு, ஆங்கு சமஸ்கிருதப் புலமை வளர்ச்சியில் பங்கு கொள்ளுமாறு அனுப்பிய அந்நாள் தொட்டே இருந்துவரும் நிறுவனமாம் என்றே நான் கருதுகின்றேன். (இதுவரை கிடைத்துள்ள செய்திகளின்படி காஞ்சிப் பழைய பல்லவ அரச இனத்து வரலாறு குறித்த முழு விளக்கங்களையும், பல்லவர் என்ற என் தமிழ் நூலில் (பகுதி ; 1) கொடுத்துள்ளேன், பிற்பட்ட காலத்துப் பல்லவர்கள், தமிழர்களாக ஆகிவிட்டதுபோல, முற்பட்ட காலத்துப் பல்லவர், தமிழரல்லர் ஆகவே, அதுபோலும் விளக்கம் இங்கு தேவையில்லை.

காஞ்சி நகரமோ, அந்நகரைச் சேர்ந்த பழைய பல்லவ ஆட்சியாளரோ, இப்போது கிடைக்கும் பழைய தமிழ்ப் பாக்களில் குறிப்பிடப்படவே இல்லை. இதற்குக் காரணம், அந்நகரம், தமிழ் நாட்டின் எல்லைக்குள் இருந்தாலும், பண்டைக் காலத்தில் அது, சமஸ்கிருத நாகரீகத்தின் தாயகமாகவே இருந்தது ; தமிழ் நாகரீகத்தின் தாயகமாக இருக்கவில்லை ; தமிழ் அரசர்களால் ஆளப்படவில்லை ; ஆரிய அல்லது ஆரியராக ஆக்கப்பட்ட ராஜாக்களால் ஆளப்பட்டது. கி. பி. நான்காம் நூற்றாண்டளவில், (அடுத்த அதிகாரத்தில் காண இருப்பது போல்) அது, தற்காலிகமாகத் தமிழர் கைக்குச் சென்றது. இது, தமிழர் தனி நாகரீகம், ஆரிய நாகரீகத்திற்குக், கீழ்ப்படிந்து போனது, காஞ்சீபுர மாவட்டத்தில் தமிழிலக்கிய நாகரீகம் பரவியது ஆகிய இரு விளைவுகளை உடையதாகிவிட்டது.

— — —

## அதிகாரம்-19 ன் பின் இணைப்பு :

காஞ்சீ மாநகர், தமிழ்நாட்டின் எல்லைக்குள் இடம் பெற்றிருந்தாலும், பண்டைக் காலத்தில், அது, தமிழர் நாகரீகத்தைக் கொண்டிருக்கவில்லை; மாறாகச் சமஸ்கிருத நாகரீகத்தின் நடுநாயகமாகவே இருந்தது; அது, தமிழ் அரசர்களாலும் ஆளப்படவில்லை; மாறாக ஆரிய ராஜாக்களாலேயே ஆளப்பட்டது? இக்கூற்று உண்மையா ?

*திருவாளர், பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள், தம்முடைய "தமிழர் வரலாறு" நூலில், இவ்வாறு கூறியுள்ளார். (பக்கம் : 333-34) தம்முடைய இம்முடிவிற்கு அவர் காட்டும் தலையாய காரணம், பழந்தமிழ்ப் பாக்களில், காஞ்சி என்ற அதன் பெயரோ, அது ஆண்ட பழைய பல்லவ அரசர்களோ குறிப்பிடப்படவில்லை என்பது ஒன்றே. (பக்கம் : 333)*

*தமிழ்நாட்டின் எல்லைகளாகத், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடிய மாங்குடி மருதனாரும், அச்செழியனால் சிறை பிடிக்கப்பட்டுப் பின்னர்ச் சிறைவீடு பெற்று அரியணை அமர்ந்த யானைக் கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாடிய குறுங்கோழியூர் கிழாரும், "தென்குமரிவடபெருங்கல், குண, குட கடலா எல்லை" (மதுரைக்காஞ்சி : 70-71; புறம் : 17) எனத் தமிழகத்தின் வடவெல்லை, வடபேரிமயமாக இருந்திருக்கக் கூடுமோ, என ஐயுறத்தக்க வகையில் கூறியுள்ளனர்; என்றாலும், அவர்களுக்கு அது கருத்தன்று. அவர்கள் "வடபெருங்கல்" என்ற தொடரால் குறிப்பிடும் மலை, வேங்கடமலையே.*

*இவர்கள் காலத்துப் புலவர்கள் பலரும், இமயமலையின் பல்வேறு சிறப்புக்களையும், அம்மலைமுடியில், தமிழரசர்கள்*

தங்கள் கொடிகளை நாட்டியதையும், அவ்வரசர்களுள் சிலர், அவ்விமயம் குமரிகட்கு இடைப்பட்ட நாட்டில் அரசோச்சியிருந்த அத்தனை அரசர்களையும் வெற்றி கொண்டதையும் அறிந்திருந்தனர். ஆயினும், அவர்களுள் ஒருவரேனும், தமிழகத்தின் வட எல்லை இமயம் என ஓரிடத்தும் கூறினாரல்லர்.

இமயத்தை இத்துணைத் தெளிவாக உணர்ந்திருந்த புலவர்கள் வாழ்ந்த காலத்தே வாழ்ந்து, அப்புலவர்கள் பாராட்டிய அரசர்களையே பாராட்டிய, இவ்விருவரும்கூட, அப்புலவர்களைப் போலவே, இமயத்தைத் தெளிவாகத் தெரிந்தே வைத்திருப்பர். இந்நிலையில், தமிழகத்தின் வட எல்லை, இமயமாக இருந்திருப்பின், தமிழகத்தின் வடதென் எல்லைகளைக் குறிப்பிடும்போது, ''தென் குமரி வட இமயம்'' என, இமயத்தின் பெயர் சுட்டியே கூறியிருப்பர். தென் எல்லையைத், ''தென்குமரி'' எனப் பெயர் சுட்டிக் கூறிய அவர்கள், வடவெல்லையைக் குறிப்பிடும்போது மட்டும், இமயத்தின் பெயர் கூட்டி, ''வட இமயம்'' எனக் கூறாமல், ''வடபெருங்கல்'' என வறிதே கூறியிருக்க மாட்டார்கள். ஆகவே, வடவெல்லை இமயம் என்பது, அவர் கருத்தன்று; அவர்கள் கூறாத ஒன்றைக் கூறியதாகக் கொள்ள வைத்த குற்றம், ''வடபெருங்கல்'' என்பதற்கு, ''வட இமயம்'' எனப் பொருள் கூறிய உரையாசிரியர்களையே சாரும்.

தொல்காப்பியப் பாயிரம் பாடிய பனம்பாரனார், ''வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்'' எனத், தமிழகத்தின் வடவெல்லையாக வேங்கட மலையையே கொண்டுள்ளார்.

தென் குமரிதொட்டு, வேங்கடம் வரை, தமிழே வழங்கி வந்தது. தமிழ் அல்லாத வேற்றுமொழி, வேங்கடத்திற்கு அப்பால்தான் இடம் பெற்றிருந்தது. இதைப் ''பனிபடு சோலை, வேங்கடத்து உம்பர் மொழி பெயர் தேஎம்''; ''தமிழ்கெழு மூவர்காக்கும் மொழி பெயர் தேஎம்;'' (அகம்: 211, 31) என்ற மாமூலனார் கூற்றுக்கள் உணர்த்துவது

காண்க. அவ்வேங்கடத்துக்கு அப்பால் உள்ள நாட்டில் வாழ்வார் வடுகர் எனப்பட்டனர்; அவ்வடுகநாடு, புல்லி, கட்டி போல்வார் ஆட்சிக்கு உட்பட்ட சிறு சிறு நாடுகளாகப் பிளவுண்டிருந்தது; அன்று தமிழின் வேறுபட்ட ஒரு மொழி பேசப்படுவது, அங்குதான் தொடங்கப்பட்டது. "புல்லி விழவுடை விழுச்சீர் வேங்கடம்" (அகம் : 61) "புல்லி தேன்தூங்கு உயர்வரை நன்னாட்டு உம்பர் வேங்கடம்" (அகம் : 393); "புல்லி காப்புடை நெடுநகர் வேங்கடம்" அகம் ; 209) "புல்லிக்குன்றத்து....மொழிபெயர் தேயம்". (அகம் : 295) "வடுகர் முனையது, பல்வேல் கட்டி, நன்னாட்டு உம்பர் மொழிபெயர் தேயம்" (குறுந் ; 11) என்ற இவ்வரிகள், மேற்கூறிய கூற்றிற்குக் காட்டவல்ல எண்ணிலா அகச்சான்றுகளுள் ஒரு சில.

ஆக, வேங்கடம் வரையான தென்னாடு முழுவதிலும் தமிழே வழக்கில் இருந்து வந்தது என்பது ஐயம் திரிபு அற உறுதி செய்யப்படுவதாயிற்று.

தமிழ் வழங்கிய வடவேங்கடம் தென்குமரிகட்கு இடைப்பட்ட அப்பெருநிலப்பரப்பு முழுவதும், மூவேந்தர் ஆட்சியே நிலவியிருந்தது. இதை, "வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பு" என்ற தொல்காப்பியர் கூற்று (பொருள் : செய்யுள் ; 74) உறுதி செய்வது காண்க.

தமிழகத்தின் தென் பகுதியைப் பாண்டியரும், அப் பாண்டி நாட்டிற்கு வடபால், வேங்கடம் வரையுள்ள எஞ்சிய தமிழகத்தை, இருகூறுகள் ஆக்கி, மேற்குப் பகுதியைச் சேரரும், கிழக்குப் பகுதியைச் சோழரும் உரிமை கொண்டு ஆண்டு வந்தனர். இதைக், "குடபுலம் காவலர் மருமான் குட்டுவன்" (47-49) "தென்புலம் காவலர் பெருமான்... செழியன்" (63-65) "குணபுலம் காவலர் பெருமான்... செம்பியன்" (79-82) என்ற சிறுபாணாற்றுப்படை வரிகள் உறுதி செய்வது காண்க.

மூவேந்தர் ஆட்சிக்கு உட்பட்டது தமிழகம் எனக் கூறப்பட்டாலும், தமிழகத்தில், அம்மூவேந்தர் ஆட்சிக்கு

அடங்கியும் அடங்காமலும், எண்ணிலாக் குறுநில மன்னர்கள், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஆட்சி புரிந்து வந்துள்ளனர். அவர்களுள் சிலர், அம்மூவேந்தர்களும் ஒன்றுபட்டு வந்து எதிர்த்துப் போரிட்டாலும், வெற்றி கொள்ள மாட்டாப் பேரரசர்களாய் விளங்கியுள்ளனர். சிலர், அம்மூவேந்தர்களுக்குத் தேவைப்படும்போதெல்லாம் படைத்துணை அளிக்கவல்ல பேராற்றல் வாய்ந்தவர்களாகவும் வாழ்ந்து வந்துள்ளனர். சிலர், அவ்வேந்தர்களின் பகைவர் களாகவோ, நண்பர்களாகவோ இல்லாமல், அவர்களோடு எவ்விதத் தொடர்பும் இல்லாமல் தனியரசு நடத்தும் தன்னேரில்லாக் குறுநிலத் தலைவர்களாகவும் வாழ்ந் துள்ளனர்.

தமிழக அரசியல் நிலை இதுவாகவே, மூவேந்தர்களைப் பாடிப் பாராட்டிய புலவர்களே, அக்குறுநில மன்னர்களையும் பாடிப் பாராட்டியுள்ளனர்.

அந்துவஞ்சேரல் இரும்பொறை முதல், யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை ஈறாக, இருபத்து நான்கு சேரர்குல வேந்தர்களையும், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலாக, வேல்பஃறடக்கைப் பெரு விறற்கிள்ளி ஈறாக, இருபத்தொரு சோழ அரசர்களையும், அண்டர் மகன் குறுவழுதி முதலாக, வெற்றிவேற்செழியன் ஈறாக, இருபான் ஐந்து பாண்டிய அரசர்களையும் பாடிப் பாராட்டிய புலவர்களே, அதியமான் நெடுமான் அஞ்சி முதலாக, வையாவிக் கோப்பெரும்பேகன் ஈறாக வள்ளல்கள் எழுவரையும், வள்ளல்கள் என்ற பட்டியலில் இடம் பெற்றில ராயினும், அவ்வள்ளல்களிலும் மேலாக வாரி வழங்கிய அக்குரன் முதலாக, வாணன் ஈறாகப் பதின்மூன்று வள்ளியோர்களையும், அகுதை முதலாக வேங்கை மார்பன் ஈறாக ஐம்பத்தைந்து படை மறவர்களையும் பாடிப் பாராட்டியுள்ளனர். எடுத்துக்காட்டுக்கு இரண்டு.

வெண்ணிப் பறந்தலையில், இருபெருவேந்தரும், பதினொரு வேளிரும் ஒருங்கே அவிய வெற்றி கொண்டான்

கரிகால் பெருவளத்தான், இதைப், பரணரும் (அகம் - 246) மாமூலனாரும் (அகம் : 55), முடத்தாமக் கண்ணியாரும் (பொருநராற்றுப்படை : 143 - 48) கழாத்தலையாரும் (புறம் : 65) வெண்ணிக் குயத்தியாரும் (புறம் : 66) தங்கள் தங்கள் பாட்டிடை வைத்து அறிவித்துள்ளார்கள்; வாகைப் பறந்தலையில் நடைபெற்ற பிறிதொரு போரில், ஒன்பது அரசர்களை வெற்றிகொண்டான் கரிகாலன், இதைப் பரணர் அறிந்து கூறியுள்ளார், (அகம் : 125)

இவ்விரு போர்க்கள நிகழ்ச்சிகளையும், தம் பாக்களிடையே குறிப்பிடும் அப்புலவர்கள் ஐவருள், பரணர், செங்குட்டுவன் அரசவைப் புலவராய் இருந்து அவனைப் பாராட்டியுள்ளார். (பதிற்றுப்பத்து : ஐந்தாம் பத்து) மனைவியைப் பிரிந்து பரத்தை ஒருத்தியொடு வாழ்ந்திருந்த பேகனுக்கு அறிவுரை கூறி, அவனை அவன் மனைவிபால் சேர்த்துள்ளார் (புறம் : 144). குடக்கோ நெடுஞ்சேரலாதனும், வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போரிட்டு ஒரு சேர மாண்டுகிடந்த களக்காட்சியைக் கண்டு கலங்கிக் கண்ணீர் விட்டுள்ளார். (புறம் : 63) அது மட்டுமல்லாமல், 1) சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி (புறம் : 4) 2) மலையமான் திருமுடிக்காரி (நற் : 100) 3) ஆய் அண்டிரன் (அகம் : 152, 198) 4) அதியமான் நெடுமான் அஞ்சி (அகம் : 372) 5) கண்டீரக்கோப் பெருநள்ளி (அகம் : 152) 6) வல்வில் ஓரி (குறுந் : 199 ; நற் : 6, 265, அகம் : 208) 7) நன்னன் (அகம் : 142) 8) மிஞிலி, (அகம் : 142) 9) ஆஅய் எயினன் (அகம் : 142 : 148, 181, 208, 396) 10) அகுதை (அகம் : 76, 208) 11, 12, அன்னி மிஞிலியும், அருந்தூர்த் திதியனும் (அகம் : 262) 13) தித்தன் வெளியன் (அகம் : 6, 152, 226) 14, 15, 16, 17) பாணன், கட்டி, பொருநன், கணையன் (அகம் : 386) 18) மத்தி (அகம் : 6, 226) 19) கழுவுள் (அகம் : 135) 20) அழிசிமகன் சேந்தன் (குறுந் : 268) 21) தழும்பன் (புறம் ; 348, குறுந் : 300) 22) விரான் (நற் : 250 ; 350) 23) விச்சிக் கோன் (குறுந் : 328) 24) பழையன் (பதிற்று : 44, 49) 25) வல்லங்

கிழான் (அகம் : 356) என்ற இவர்களையும் பாராட்டியுள்ளார்.

கரிகாலனைப் பாடிய மாமூலனார், அவனுடைய வெண்ணிப்போர் வெற்றியையும், அப்போரில் புறப்புண் பெற்றுத் தோல்வியுற்ற சேரலாதன் அதற்காக வெட்கி வடக்கிருந்து உயிர் இழந்துபோக, அதுபொழுது, அவனே போல் வடக்கிருந்து உயிர் இழந்த சான்றோர் செயலையும் பாராட்டியுள்ளார். (அகம் : 55) கரிகாலன் வெண்ணிப்போர் நிகழ்ச்சியைக் கூறும் அவரே, இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனையும் பாராட்டியுள்ளார். (அகம் : 127, 347) அது மட்டுமல்லாமல், அதியமான் (அகம் : 115), அதியன் (அகம் : 325) ஆவி (அகம் : 1, 16) எருமை (அகம் : 115) எவ்வி (அகம் : 67) எழினி (அகம் ; 211) திதியன் (அகம் : 331) நன்னன் (அகம் : 67) புல்லி (அகம் 61, 295, 311, 353, 393 ; நற் : 14) இவர்களையும் அறிந்து தம் பாட்டிடை வைத்துப் பாராட்டியுள்ளார்.

கரிகாலன் அவைக்களப் புலவராய் இருந்து, பொருநராற்றுப்படை பாடி அவன் புகழ் பரவும் முடத்தாமக் கண்ணியார், பனந்தோடும் வேப்பந்தாரும் அணிந்த இரு பெருவேந்தர்களும் ஒரு களத்தே அழிந்த வெண்ணிப்போர் நிகழ்ச்சியை விளக்கும் அதே பாட்டில் (146) கரிகாலன் பிறந்த சோழர்குலமும், அவனால் வெற்றி கொள்ளப்பட்ட சேர, பாண்டியர் குலமும் பகை ஒழிந்து நட்புப் பூண்டு ஒன்றுபட்டு, ஒருங்கே வீற்றிருக்கும் காட்சி நலத்தை அகக்கண்ணால் கண்டு களிப்புறவும் செய்துள்ளார் (53 - 56).

வெண்ணிப்போர் நிகழ்ச்சியை, அப்போர் நிகழ்ந்த வெண்ணி வாயிலில் வாழ்ந்திருந்தமையால், நேரில் காணும் வாய்ப்பினைப் பெற்ற வெண்ணிக்குயத்தியார், அப்போரில் கரிகாலன் பெற்ற வெற்றியைப் பாராட்டிய அதே வாயால், அவனோடு போரிட்ட பெருஞ்சேரலாதன் புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர் துறக்கக் காரணமாய், அவன் முதுகில்

வேலெறிந்த, அவன் செயலைப் பழிப்பதும் செய்துள்ளார் (புறம் : 66).

வெண்ணிப்போர் நிகழ்ச்சியைப் பாடிய (புறம் : 65) கழாத்தலையார், அக்கரிகாலன் குலத்து வந்த வேல் பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும், குடக்கோ நெடுஞ்சேரலாதனும், போரிட்டு ஒரே களத்தில், ஒருசேர மாண்ட காட்சியைப் பரணர் போலவே, தம் பாக்களிடையே (புறம் : 62, 368) வைத்துக் கலங்குவதும் செய்துள்ளார்.

மூவேந்தருள், தான் பிறந்த சோழன் குலம் தவிர்த்த, சேர, பாண்டியர் குலத்து இரு வேந்தர்களையும், அம்மூவேந்தர் ஆட்சி நிலவும் தமிழகத்திலேயே இடை இடையே சிறுசிறுநாடுகளை ஆண்டுகொண்டிருந்த பதினொரு வேளிர்களையும், ஒருங்கே வெற்றிகொண்டு அழித்துவிட்டான் கரிகாலன் என்றால், அங்கெல்லாம், நடைமுறையில் இருந்த அரசுகளை அகற்றிவிட்டுத், தன் சோழ அரசினை நிலை நாட்டிவிட்டான் எனக்கொண்டுவிடல் கூடாது. அது நடந்திருந்தால், வாகைப் பறந்தலையில் பிறிதொரு போரைச் சந்திக்கவேண்டிய நிலையோ, ஆங்கு ஒன்பது மன்னர்களை வெற்றிகொண்டு அவர்தம் ஒன்பது குடைகளையும் கைப்பற்ற வேண்டிய நிலையோ, கரிகாலனுக்கு வாய்த்திராது.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின், தலையாலங்கானப் போர் வெற்றியைப் பாராட்டிய ஆருலவிய நாட்டு பேரி சாத்தனார், இடைக்குன்றூர் கிழார், கல்லாடனார், குடபுலவியனார், பொதும்பில் கிழார் மகனார், நக்கீரர், மாங்குடிமருதன் ஆகிய புலவர்கள் எழுவரில், இடைக் குன்றூர்கிழார் (புறம் : 76) குடபுலவியனார் (புறம் : 18, 19) பொதும்பில் கிழார் மகனார் (நற் : 387) ஆகிய மூவரும் வேறு வேந்தர்களையோ, குறுநில தலைவர்களையோ பாடினாரல்லர்.

ஆருலவியநாட்டு ஆலம் பேரி சாத்தனார், அவன் தலையாலங்கானப் போர் வெற்றியைப் பாடியதோடு (அகம் :

175) விளங்கில் எனும் ஊரைச் சார்ந்த கடலனையும் (அகம் : 81) சேரர்படைத் தலைவன் பிட்டனையும் (அகம் : 143) பாராட்டியுள்ளார்.

நக்கீரர், அவனைப் பாடிய நெடுநல்வாடையாம் நெடிய பாட்டில், தலையாலங்கானப் போர் பற்றிக் குறிப்பிடவில்லை எனினும், அகநானூற்றுப் பாடல் ஒன்றில் (36) செழியன் வெற்றி கொண்ட, சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என எழுவர் பெயரையும் கூறியே பாராட்டியுள்ளார்.

தலையாலங்கானத்துப் போரில் வெற்றிகொள்ளப் பட்டோருள் சேரனும் ஒருவன். அங்ஙனமாகவும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், அச்சேரன் மீது மீண்டும் போர் தொடுத்துச் சென்று, அச்சேரர்க்கு உரிய முசிறியை முற்றி அழித்துள்ளான். தலையாலங்கானப் போர் வெற்றியைப் பாராட்டிய நக்கீரரே, முசிறி முற்றுகையையும் பாடியுள்ளார் (அகம்: 57).

தலையாலங்கானப் போர் பாடிய அவரே, அப்பாண்டியன் படைத்தலைவனாம் பழையன் மாறன், கூடல்புறந்தலையில், பிறிதோரு போர் மேற்கொண்டு, அதில், வெள்ளம் போல் பரந்த படையொடு வந்தெதிர்த்த கிள்ளிவளவனை வென்று, அவன் படைகளோடு, அவன் நாட்டையும் கைப்பற்றிக் கொள்ள அக்களத்தில், தன் குலப்பகைவனாம் கிள்ளிவளவன் கண்ட தோல்விகேட்டு, கோதைமார்பன் என்ற சேரன் உவகை கொண்டதையும் பாராட்டியுள்ளார். (அகம்: 346).

செழியன் முன்னின்று நடத்திய தலையாலங்கானப் போரையும், அவன் படைத்தலைவன் பழையன் முன்னின்று நடத்திய கூடல் போரையும் பாடிய நக்கீரரே, தலையாலங் கானப்போரில் செழியன்பால் தோல்விகண்ட திதியனையும், (அகம் :126) எருமையூரனையும் (அகம் : 253) பாடியுள்ளார்.

தலையாலங்கானப் போரில், சேரரைப் போலவே, சோழரும் தோல்வியுற்றதைப் பாடிய அவரே, அச்சோழர்

குலத்துக் கரிகால் பெருவளத்தானையும் (அகம் : 141) கிள்ளிவளவனையும் (அகம் : 205) அச்சோழர் குலத்தோடு உறவுடையவனும், காஞ்சியை ஆண்டவனுமாகிய திரையனையும் (அகம் : 340) அறிந்து பாராட்டியுள்ளார்.

சேரர், சோழர்களை, இவ்வாறு தனித்தனிப் பாக்களில் வைத்துப் பாராட்டியதோடு நில்லாமல், பாண்டியர் தலைநகர் கூடலைப் பாராட்டும் ஒரே பாட்டில் - "வழுதி கூடல்", சோழர் தலைநகர் உறந்தையையும்,- "அறங்கெழு நல்லவை உறந்தை", சேரர் தலைநகர் கருவூரையும் "திருமாவியன்நகர் கருவூர்" (அகம் : 93) பாராட்டியுள்ளார்.

மேலே கூறிய இவர்களையே அல்லாமல், ஊணூர்த் தழும்பன் (அகம் : 227) வேள்பாரி (அகம் : 78) வேம்பி முசுண்டை (அகம் : 24) மூதில் அருமன் (நற் : 367) சிறுகுடிவாணன் (நற் : 340) ஆகிய குறுநிலத்தலைவர் களையும் சிறக்கப் பாராட்டியுள்ளார்.

தம்முடைய மதுரைக் காஞ்சியில், தலையாலங்கானப் போர் வெற்றியையும் (127-130) இருபெரு வேந்தர்களோடு, வேளிர்களையும் வெற்றி கொண்டதையும் (55-56) பாராட்டிய மாங்குடி மருதனார், அத் தலையாலங்கானப் போரில் வெற்றி கொள்ளப்படாத மிழலைக்கூற்றத்து எவ்வியை வெற்றி கொள்ள, செழியன் மேற்கொண்ட பிறிதொரு போரையும் குறிப்பிட்டுள்ளார். (புறம் : 24) செழியனால் வெற்றி கொள்ளப்பட்டாரைக் குறிப்பிட்ட அவர், அவனால், வெற்றி கொள்ளப்படாது சிறக்க வாழ்ந்த வாட்டாற்று எழினியாதனையும் பாடியுள்ளார். (புறம் : 396)

அதேபோல் ஆலங்கானத்தில் செழியன் பெற்ற வெற்றிச் சிறப்பைப் பாராட்டவே, அவன் அவை அடைந்து பாராட்டிய கல்லாடனார் (புறம் : 23, 25, அகம் : 209) அப்போரில் தோல்வி கண்டோர் வரிசையில் சேரரும் இடம் பெற்றிருக்க வும், அக்குலத்து வந்த களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், நன்னன் என்பானைக், குடநாட்டில், வாகைப்பெருந்

துறையில் நடைபெற்ற போரில் வெற்றி கொண்டதைப் பாராட்டியுள்ளார். (அகம் : 199) செழியனின் தலையாலங் கானப் போர் வெற்றியைப் பாராட்டிய அதே பாட்டில் (அகம் : 209) தமிழகத்து வடவெல்லை ஆண்ட புல்லி, கொல்லி ஆண்ட வல்வில் ஓரி, மலையமான் திருமுடிக்காரி ஆகியோ ரையும் பாராட்டியுள்ளார்.

பழந்தமிழ்ப் பாக்கள் உணர்த்தும், அன்றைய அரசியல் நிலைகளால் தெளிவாகும் உண்மைகள் இரண்டு: ஒன்று, கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், கரிகால் பெருவளத்தான், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போன்ற பேரரசன் எவனாயினும், ஒரு போர்க்களத்தில், தன்னை ஒழிந்த இருவேந்தர்களையும், எண்ணிலாச் சிற்றரசர்களையும் வெற்றிகொண்டுவிட்டான் என்றால், அங்கெல்லாம், அதுவரை நடைமுறையில் இருந்து வந்த அரசுகளை, அரசியல் முறைகளை அகற்றிவிட்டு, தன்னுடைய ஆட்சியை நிலைநாட்டிவிட்டான் எனக் கொண்டு விடல் கூடாது; அப்போரின் விளைவு, அப்போரில் தோல்வியுற்ற அரசர்களைக் காட்டிலும், தான் ஆற்றலால் மிக்கோன் என்பதை நிலைநாட்டியது மட்டுமே என்பதுதான்.

இதைத், திருவாளர், பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களும் உணர்ந்துள்ளார்! "பேராற்றல் வாய்ந்த பேரரசன் ஒருவன், "ஒருமொழி வைத்து உலகாள்வான்", "ஒருதனி ஆழி உருட்டுவோன்", "உலகெல்லாம் ஒரு குடைக்கீழ் வைத்து ஆள்வோன்"; "உலகெலாம் ஆள்வோன்" எனக் கூறப்படும் நிலையிலும், அவன் ஆட்சிக்கீழ் அடங்கிய நாடுகளில், ஆட்சிநிர்வாக முறைகளில், அமைச்சர், புரோகிதர் உள்ளிட்ட ஐம்பெருங்குழுக்களில் எவ்வித மாற்றமும் நிகழ்ந்துவிடுவதில்லை, போர்க்காவலணிகள் எதுவும் ஆங்கு ஏற்படுத்தப்படுவது இல்லை. வெற்றி கொண்ட பேரரசர்களின் சிறுபடைப் பிரிவுதானும் ஆங்கு நிறுத்தப் படுவதில்லை. பெருவீரன் ஒருவன் எண்ணற்ற நாடுகளுக்குத், தன்னைத் தலைவனாகக் கூறிக்கொள்வதும், ஆண்டுதோறும்,

அல்லது, அவ்வப்போது, திறைசெலுத்துவதன் மூலம், அச்சிற்றரசுகள், அப்பேரரசனின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்வதும் ஆகிய இவைதாம். அச்சொற்றொடர்களுக்குப் பொருளாம்'' என அவர் கூறுவது காண்க. (பக்கம்: 147)

பழந்தமிழ்ப் பாடல்கள் உணர்த்தும் இரண்டாவது உண்மை, தமிழகத்தின் தென் எல்லையாம் குமரியை உள்ளடக்கிய நாஞ்சில் நாடு, தமிழகத்தின் வடஎல்லையாம், வேங்கடத்தை உள்ளடக்கிய தொண்டை நாடு, தமிழகத்தின் வடமேற்கு எல்லைக்கு அணித்தான கொண்கானம், ஏழில் குன்றம், எருமைநாடு, குடகடலைச் சார்ந்த, சேரநாட்டு எல்லைக்குட்பட்டனவாய, குதிரை, கொல்லி, கோடை மலைகள், பாழிப்பெருநகர், வாகைப்பறந்தலை, முசிறி, தொண்டிக் கடல்துறைகள், குணகடல் நாடாம் சோழ நாட்டைச் சேர்ந்த, இடைக்கழிநாடு, கடல்மல்லை, கழார், அழிசி, ஆர்க்காடு, புகார், பாண்டி நாட்டு எல்லைக்குட்பட்ட, தோட்டி, பறம்பு, பொதினி, பொதியம், முதிரம், சிறுமலை ஆகிய மலைகள், கொற்கைத்துறை, ஆகிய இடங்களில் எல்லாம், சுருங்கச் சொல்லின், வடவேங்கடம், தென்குமரி, குணகுட கடல்களை எல்லையாகக் கொண்ட, தமிழகம் முழுவதும், தமிழ்மொழி வழங்கியது போலவே, தமிழரசர்களே, நீக்கமற இடங்கொண்டு ஆட்சிபுரிந்து வந்தனர் என்பது.

குமரிமுதல் வேங்கடம் வரையான தமிழகம் முழுவதும், தமிழே வழங்கி வந்தது, தமிழரசர்களாலேயே ஆளப்பட்டு வந்தது என்பதை மெய்ப்பிக்கும் இத்தனை அகச்சான்றுகள் இருக்கவும், காஞ்சியும், அதைச் சூழ உள்ள நாடும் தமிழரசர்களால் ஆளப்படவில்லை; மாறாகச் சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டு வந்தது எனத், திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் கூறுவதற்கு அவர் காட்டும் முதற் காரணம், காஞ்சி ஆண்ட பழைய அரசர்கள் பெயர்கள், பழந்தமிழ்ப் பாக்களில் குறிப்பிடப்படவில்லை என்பது;

இம்முடிவு உண்மைக்கு மாறானது; பகையரசர்களை வென்று அப்பகை நாட்டு மண் அளிக்கும் பயன் உண்டு வாழும் வீரவாழ்வும், போர்த்தொழில் வல்லமையால் தலையாய சிறப்புற்ற யானைப்படையும், வளமான தேர்ப் படையும் உடைய தொண்டையரை அறிந்துள்ளார், வேங்கட நாட்டவராய கல்லாடனார். ''பொருவார் மண் எடுத்து உண்ணும், அண்ணல் யானை, வண்தேர்த் தொண்டையர்'' (குறுந் : 260) யானைப் படையால் பெருமையுற்ற அத்தொண்டையர் வேங்கடமலை நாடாண்டவர் என்கிறார் தாயங்கண்ணனார், ''வினைநவில் யானை விறல்போர்த் தொண்டையர் இனமழை தவழும் ஏற்றரும், நெடுங்கோட்டு ஓங்குவெள் ளருவி வேங்கடம்.'' (அகம் : 213) அவ்வேங்கட நாட்டு வெண்கோட்டுக்களிறுகள், பாண்டியர் படைக்குப் பெருமை சேர்க்கும் பேராண்மை வாய்ந்தவை என்கிறார், மதுரைக்கணக்காயர், ''வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை மறப்போர்ப் பாண்டியர்''. (அகம் : 27) கன்று ஈன்ற பிடி, அது ஈன்ற கன்று ஆகியவற்றின் பசியினைப் போக்க மூங்கிலின் முற்றா இளந் தளிர்களைக் கொய்து கொணர்ந்து தரும் களிறுகள் நிறைந்த வேங்கடமலை, வெற்றிதரு வேலேந்திய திரையனுக்கு உரியது எனக்கூறித், தொண்டையர்க்கு உரியதான அவ் வேங்கடத்தைத் திரையனுக்கும் உரிமையாக்குவதன் மூலம் தொண்டையர்க்கும் திரையனுக்கும் உள்ள உறவினை நிலைநாட்டியுள்ளார், காட்டூர் கிழார் மகனார் கண்ணனார், ''ஈன்று நாள் உலந்த மென்னடை மடப்பிடி, கன்றுபசி களைஇய, பைங்கண் யானை, முற்றா மூங்கில் முளை தருபு ஊட்டும் வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை'' (அகம் : 85). திரையனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, பெரும்பாணாற்றுப்படைபாடும் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார், திரையனுக்கு உரிய மலை, முத்தீ மூட்டி வேள்விவேட்க விரும்பிய முனிவர்கள், களிறுகள், தங்கள் வெண்கோடுகளில் சுமந்து கொண்டுவந்து கொட்டும் விறகு கொண்டு வேள்வித் தீ எழுப்பும் விழுப்புகழ் வாய்ந்தது

எனக் கூறுவதன் மூலம், வேழங்கள் மலிந்த வேங்கடமலைக்கு உரியான் திரையன் எனக், காட்டூர்கிழார் கூறியதைத் தாமும் உறுதி செய்துள்ளார். "செந்தீப் பேணிய முனிவர், வெண் கோட்டுக் களிறுதரு விறகின் வேட்கும் ஒளிறு இலங்கு அருவிய மலைகிழ வோனே" (பெரும்பாண்; 498-500) இவ்வகையால், தொண்டையர்க்கு உரிய வேங்கடம் திரையனுக்கும் உரியது எனக் கூறியதன் மூலம், தொண்டையர்க்கும், திரையனுக்கும் உள்ள உறவினை மறைமுகமாக உணர்த்திய பெரும்பாணாற்றுப் படை ஆசிரியர், அப்பாட்டுடைத் தலைவன் பெயர் திரையன் என்டதைப் "பல்வேல் திரையன் படர்குவிராயின்" (37) எனக் கூறியதன் மூலமும், அவன் தொண்டையர் மரபில் வந்தவன் என்பதைப், பகைவர் மண் தரும் வளம் உண்ணும் உரவோர் தொண்டையர் எனத், தொண்டையோர்க்குக், கல்லாடனார் ஏற்றிக் கூறிய சிறப்பைத் தாமும், அத் தொண்டையோர்க்கு ஏற்றி, அம்மரபில் வந்தவன் என்பதைக் "கொண்டி உண்டித் தொண்டையோர் மருக" எனக் கூறியதன் மூலமும் (454) வெளிப்படக் கூறி உறுதி செய்வதும் செய்துள்ளார். இத்திரையனையும், அவனது அழியாப் பெரும்புகழையும் அறிந்து பாராட்டியுள்ளார் நக்கீரர் "செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்" (அகம் : 340) இத்திரையன், கடல்திரை, கொண்டுவந்து கொடுத்த மரபில் வந்தவன் என, அவன் குலவழி மரபையும், "திரைதரு மரபின் உரவோன் உம்பல்" (31) அவன் அரசாள் நாட்டின் தலைநகர் கச்சி ஆகும் "கச்சி யோனே கைவண் தோன்றல்" (420) என அவன் தலைநகரையும் தெளிவாக்கியுள்ளார் பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர்.

வேங்கடம் தொண்டையர்க்கு உரியது எனக் கூறிய புலவர் தாயங்கண்ணனார், அது கூறிய அதே பாட்டில் (அகம் 213) வேங்கடத்துக்கு அப்பால் உள்ள வடுக நாட்டையும், "வேங்கடத்து உம்பர்...வடுகர் தேஎயம்" (3-8) போர்வல்ல சேரர்க்கு உரிய கொல்லிமலை சார்ந்த மேற்கு மலையையும், "வெல்போர் வானவன் கொல்லிக் குடவரை". (15), இரவலர்க்குப் பொன் அணிகளை வாரி

வழங்குவதற்காகவே கவிழும் தொடி அணிந்த கையும், வெற்றிதரு வாட்படையும் உடைய சோழர்க்கு உரிய காவிரி ஆற்றையும், ''கலம் பெயக் கவிழ்ந்த கழல் தொடித் தடக்கை வலம்படு வென்றி வாய்வாள் சோழர், இலங்குநீர்க் காவிரி'' (20-22) கூறியிருப்பதன் மூலம், தொண்டையர் வழிவந்த திரையன் காலத்தே, அவ்வேங்கட நாடு, அதியமான நெடுமான் அஞ்சியின் தகடூர், வேள்பாரியின் பறம்புபோலும் நாடுகளைப் போல, மூவேந்தர் ஆட்சிக்கு உட்படாத் தனியரசு நடத்திய தமிழ்நாடாகத் திகழ்ந்தது என்பதை உணர்த்தியுள்ளார்.

அது மட்டுமன்று, சோழர்க்குரிய காவிரிக்கு வடக்கே, பெண்ணையாற்றங்கரைத் திருக்கோவலுரைத் தலைநகராகக் கொண்டு மலையமான் திருமுடிக்காரி ஆண்டுவந்ததைப் போலவும், பாலாற்றங்கரைக் கச்சியைத் தலைநகராகக் கொண்டு திரையன் ஆண்டுவந்ததைப் போலவும், சேயாற்றங் கரைச் செங்கண்மாவைத் தலைநகராகக் கொண்ட மலை நாட்டை நன்னன் சேய் நன்னன் என்பான் ஒரு தமிழ்க் குறுநில மன்னனும், அப்பழந்தமிழர் காலத்தே ஆண்டு வந்தான். அவன் புகழ்பாடும், பாண்டி நாட்டுப் புலவராம், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார், தம்முடைய மலைபடு கடாம் என்ற பாட்டில், அவன் பெயர் ''நன்னன் சேய் நன்னன்'' என்பதையும் (64), அவன் தலைநகர், கிழக்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாய், இன்று ஐவ்வாது மலை என அழைக்கப்படும் நவிரம் ''பேரிசை நவிரம்'' (82) என்பதையும், அவன் நாட்டில் பெருக்கெடுத் தோடும் ஆறு, திரையன் நாட்டுப் பாலாற்றோடு கலந்து ஓடிக் கடலில் விழும் இக்காலை செய்யாறு என அழைக்கப் பெறும் சேயாறு ''காணுநர் வயாஅம் கட்சின் சேயாறு'' (476); ''கடுவரல் கலுழிக் கட்கின் சேயாறு'' (555) என்பதையும் அறிவித்துள்ளார். நன்னன் சேய் நன்னன் நாட்டுப் பரப்பின் பெருமையும், வளச் செழுமையும், மக்கள் பண்பாடும், புலவர்க்கு 583 வரிகளைக் கொண்ட ஒரு நெடும் பாட்டைப் பாடத் தேவைப்படுமளவு படர்ந்து, நீண்டு, உயர்ந்து, சிறந்து விளங்கின.

ஆக, இதுகாறும் எடுத்து வைத்த விரிவான அகச்சான்று களால், கச்சியைத் தலைநகராகக் கொண்ட வேங்கட நாடு வரையான தமிழ் வழங்கிய நாடு, பழந்தமிழர் காலத்தில் தமிழரசர்களாலேயே ஆளப்பட்டு வந்தது என்பது உறுதி செய்யப்பட்டது. ஆகவே, காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட நாடு, தமிழரசர்களால் ஆளப்படவில்லை, மாறாகச், சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டது என்ற, திருவாளர். பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் கூற்று, உண்மைக்கு மாறானது என்பது தெளிவாக்கப்பட்டது.

காஞ்சியும், அதைத் தலைநகராகக் கொண்ட நாடும் பழந்தமிழர் காலத்தில், தமிழரசர்களால் ஆளப்படவில்லை. சமஸ்திருத ராஜாக்களால் ஆளப்பட்டது என்பதற்குத் திருவாளர் அய்யங்கார் காட்டும் பிறிதொரு காரணம், "காஞ்சீபுரம்" என்ற ஊர்ப்பெயரைக், கி. மு. 200 ஆம் ஆண்டைச் சேர்த்த பதஞ்சலி என்ற வடமொழி இலக்கண ஆசிரியர் உணர்ந்திருக்கவும், "காஞ்சி" என்ற அவ்வூர்ப் பெயர் பழந்தமிழ்ப் பாக்களில் இடம் பெறவில்லை என்பது.

கி. மு. 200ல் வாழ்ந்த பதஞ்சலி, மதுரையின் குடிமகன் எனும் பொருள் உடையதான "மதுராபுரக", உறையூரின் குடிமகன் எனும் பொருளுடையதான "உறகபுரக" என்ற சொற்களின் பிறப்பியல் முறைக்கு இலக்கணம் கூறாமல், காஞ்சீபுரத்தின் குடிமகன் எனும் பொருளுடையதான "காஞ்சீபுரக" என்ற சொல்லுக்கு மட்டுமே பிறப்பியல் இலக்கணம் வகுத்துள்ளார். காரணம், அந்நாட்களில், காஞ்சீபுரமே, சமஸ்கிருத நாகரீகத்தின் தென்கோடி எல்லைத் தளமாக அமைந்துவிட்டதுதான். அம்மாநகர், தமிழ் வழங்கும் நாட்டில் இடம் பெற்றிருப்பினும், அதற்கு என ஒரு தமிழ்ப் பெயர் இல்லை. "கச்சி" என்பது அதன் பெயராகக், கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த பெரும்பாணாற்றுப்படையில் (420) முதன்முதலாக இடம் பெற்றுள்ளது. ஆனால், அதுவும், இடையில் அணியும், அரைஞாண் அல்லது ஒட்டியானம் எனும் பொருள் உடை

யதான "காஞ்சீபுர" என்றதன் சுருங்கிய வடிவமாம் "காஞ்சி" என்ற சமஸ்துருதச் சொல்லின் தமிழ்ப்படுத்தப்பட்ட வடிவமே ஆகும். "காஞ்சீயூர்" என்ற சொல், தமிழ்ப் பாக்களில், இடம் பெற்றுள்ளது என்றாலும், அது, காஞ்சி மரங்கள் நிறைந்த ஊர் என்ற பொதுப் பொருள் உடையதே அன்றி, காஞ்சிபுரத்தின் இயற்பெயரைக் குறிக்க வல்லதன்று" (பக்கம் : 322-23) என அவர் கூறியிருப்பது காண்க.

கி. மு. ஏழாம் நூற்றாண்டினராய பாணினி, நர்மதை ஆற்றிற்குத் தென்பால் உள்ள எந்த நாட்டையும் குறிப்பிடாமைக்குத் திருவாளர் பந்தர்கார் அவர்கள். "பாணினி, பாண்டிய, சோழ, கேரள நாடுகளை அறிந்திருப்பாராயின், அவற்றின் சொல்லமைப்பு இலக்கணத்தைக் கூறமறந்த, பொறுப்பற்ற இலக்கண ஆசிரியராக இருந்திருக்க மாட்டார், அவற்றை அவர் அறிந்திருந்தால், அவற்றிற்கான இலக்கண அமைதி கூறியிருப்பர்; அவற்றை அவர் அறிந்தவர் அல்லர். அவர் மட்டுமன்று; அக்காலத்து ஆரியர் எவருமே அறிந்திருக்கமாட்டார்" எனக் கூறியதை ஏற்றுக்கொள்ளாத திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், "பாணினி, அப்பெயர்களை நன்கு அறிந்தவர்தாம். ஆனால், அப்பெயர்கள், சமஸ்கிருதச் சொற்களாக இல்லாமல், தமிழ்ச் சொற்களாகவே, அவை பற்றிய இலக்கணத்தை வகுக்கவில்லை எனக் கூறவேண்டுமே ஒழிய, அவர் அவற்றிற்கான இலக்கணம் வகுக்கவில்லை; ஆகவே அவர், அந்நாடுகளை அறிந்திருக்கவில்லை என்பது பொருந்தாது. திரு. பந்தர்காரின் இவ்வாதம், இருக்கு வேதத்தில் ஆலமரம் குறிப்பிடப்படவில்லை என்பது கொண்டு இருக்குவேத காலத்தில் ஆலமரமே இருக்கவில்லை என்பது போலும் பொருளற்ற வாதமாம்" (பக்கம் : 123, 124) என மறுத்துள்ளார்.

அங்கு அவ்வாறு வாதிட்ட திருவாளர் அய்யங்கார், கி. மு. 200இல் வாழ்ந்த பதஞ்சலி, "மதுராபுரக", "உறகபுரக" என்ற சொற்களுக்கான இலக்கண அமைதி கூறாது, "காஞ்சிபுரக" என்பதற்குமட்டும் இலக்கண அமைதி

கூறியதற்குப், பதஞ்சலி காலத்தில், வட இந்திய மொழி வல்லுநர்க்குத் தெரிந்திருக்குமளவு சிறப்புற்று விளங்கி இருந்தாலும், அது தனக்கென ஒரு தமிழ்ப் பெயரைக் கொண்டிருக்கவில்லை என வாதிடுவது எவ்வாறு பொருந்துமோ அறியோம்.

கி. மு. ஏழாம் நூற்றாண்டினராய பாணினியின் இலக்கண நூலாம் பாணினீயத்திற்குக், கி. மு. நான்காம் நூற்றாண்டில் விளக்க உரை அளிக்கவல்ல சமஸ்கிருதப் பேராசிரியர் காத்யாயனரையும், கி. மு. நான்காம் நூற்றாண்டில் மௌரியப் பேரரசனாகத் திகழ்ந்த சந்திர குப்தனுக்கு அமைச்சனாக இருந்து அர்த்த சாஸ்திரம் எழுதிய சாணக்கியனையும் பெற்று அளித்த பெருமைக்கு உரியது காஞ்சீமாநகர் என்பது உண்மை. (தமிழர் வரலாறு : 123, 135, 142, 325 பக்கங்கள் காண்க).

காஞ்சீமாநகர், அத்துணைப் பழங்காலத்தில், பல்கலைக் கழகப் பெரு நிலையமாகத் திகழ்ந்தது என்றால், அது, அப்பெருநிலையைத் திடுமென, எடுத்த எடுப்பிலேயே அடைந்திருக்க இயலாது; அப்பெருநிலை, அம்மாநகரத்துக்கு வந்து குடியேறியவர்கள் காலத்திற்குப் பிறகே உருவாகியிருக்கவும் இயலாது; அந்நிலை, அம்மாநகரத்து நிலைத்த குடியினராய, மண்ணுக்குரிய மக்களின் பலதலைமுறை இடைவிடா முயற்சியின் விளைவாகவே உருவாகியிருக்க வேண்டும். மேலும், அறிஞர்பெருமக்கள் பலரின் பிறப்பிடமாக வளர்ந்த ஒரு பெருநகர், தனக்கென ஒரு பெயரை, அது தோன்றிய காலத்திலேயே பெறத்தவறிவிட்டு, ஆங்கு வந்து குடியேறிய வடநாட்டுச் சமஸ்கிருத மொழியாளர், அவர்களின் மொழிப்பெயரால் பெயர் சூட்டும்வரை காத்திருந்தது என்பது, நகரங்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய வரலாற்று நெறியினை உணராதார் கூற்றே ஆம்.

இக்குற்றச்சாட்டு முறையான குற்றச்சாட்டு என்பதைத், திருவாளர் பி. டி. எஸ். அவர்களும் ஏற்றுக்கொள்வர்,

காவிரி வைகைக் கரைத் தமிழர்களாம் அம்மண்ணுக்குரிய மக்களை, இந்தியாவுக்கு வடக்கே இருந்து வந்த வெளி நாட்டினராக மதிக்கும் சில மதியிலா வரலாற்றாசிரியர்களின் கூற்றைத், திருவாளர் பி. டி. எஸ். அவர்கள், "சில வரலாற்று ஆசிரியர்கள் திராவிடர்களின் மூதாதையர்களை, இந்தியாவின் வடமேற்கு அல்லது வடகிழக்குக் கணவாய்கள் வழியாக, நம்பிக்கை மிக்க நல்ல வழிகாட்டிகளின் துணையோடு, கொண்டுவந்து எடுத்த எடுப்பிலேயே முழுமை பெற்ற வெளிநாட்டு நாகரீகத்தோடு, காவிரி வைகைக் கரைகளில் குடியமர்த்துகின்றனர்" (பக்கம் : 2) எனக் கூறி எள்ளி நகையாடுவதும், அதேபோல், வடஆரியர் வருகைக்கு முன்பே முதிர்ந்த நாகரீகம் பெற்று மூத்த குடியினராய தமிழர்களை, நாகரீகம் அற்ற காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்திருந்து, ஆரியர் வருகைக்குப் பின்னரே நாகரீக உலகத்தில் அடியிட்டவராகக் கருதும் வேத மந்திரங்கள், இராமாயண, பாரதக் கதைகள், பழம்புராணங்களின் கூற்றை மறுத்து, "வட ஆரியர்களால் தஸ்யூக்கள் என அழைக்கப்படும் தென்னாட்டுத் திராவிடப் பழங்குடியினர், நாடு கடத்தப்பட்டும், வாழ்விடம் தேடியும் அவ்வப்போது வந்து குடியேறிய, ஆரிய வந்தேறிகளால், நாகரீகம் பெறக் காத்திருந்த, நாகரீகம் கல்லாக் காட்டு மிராண்டிப் பழங்குடியினர் அல்லர்" (பக்கம் : 32) என, அவர் கூறியிருப்பதும் காண்க.

கி. மு. நான்காம் நூற்றாண்டில் வடஇந்தியாவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையிலான வாணிகம் எப்போதும் இருந்திராத அளவு மிகப்பெரிய அளவினை அடைந்திருந்தது என்று கூறிவிட்டு, "தக்ஷண பாரதத்தில் பெரிய கனிவளச் சுரங்கங்களையும், வழிநெடுகிலும் மக்கள் பெருக்கத்தையும் கடந்து செல்லும் பெருவழிகள், பாடலியை அடையும் ஏனைய பெருவழிகளிலும் நனிமிகச் சிறந்ததாம்" எனக் கௌடல்யர் கூறியதை மேற்கோள் காட்டிப், புகைவண்டித் தொடர்களும், உந்துவண்டிகளும் அழிந்துவிடாமல் விட்டு வைத்திருக்கும் இடங்களில், இக்காலத்தும் நாம் காண்பது போல், கிரீச் எனும் ஒலி ஓயாது தொடர்ந்து எழக் குமரிமுதல்

பாடலி வரையான, சீர்மிகு, சீர்கெட்ட நெடுஞ்சாலைகளில் செல்லும் மாடுபூட்டிய கட்டை வண்டிகளாம் வணிகச் சாத்துக்கள் மூலம், பெரிய வணிகப்போக்குவரத்து நடை பெற்று வந்தது என்றும் கூறியுள்ளார் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் (தமிழர் வரலாறு: பக்கம்; 141 - 142 காண்க).

கி. மு. நான்காம் நூற்றாண்டின் நிலை, கடைச்சங்க காலத்தில் பெருகியிருக்குமே அல்லது, குறைந்திருக்காது. பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களை ஒருமுறை படிப்பவர்க்கும். பழந்தமிழகத்தில் பேரூர்களையும், சிற்றூர்களையும் இணைக்கும் பெருஞ்சாலைகள். தமிழ் நாடெங்கும் இடம் பெற்றிருந்தன என்பதும், அப்பெருஞ் சாலைகள் இருமருங்கிலும், நெடுகிலும், சிற்றூர்களும் பேரூர் களும் இடம் பெற்றிருந்தன என்பதும் தெற்றெனப் புலனாம்.

தொண்டைமான் இளந்திரையனைக் காணச் செல்லும் பெரும்பாணனுக்குச் செல்லும் வழியினைக் காட்டுவதாகக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப் படையில், அரசுக்கு வரவேண்டிய வரியினைத் தண்டுவோர், விற்படையோடு வழிநெடுக வீற்றிருக்கும் காவல் நிலையங் களையும் (80 - 82) அதனால், வழிச்செல்லுவார், கொண்டு செல்லும் பொருட்களைக் கொள்ளை கொண்டு ஓடிவிடும் கொடியோர் இல்லா வழிநலத்தையும் (39 - 41) உமணர், உப்புப் பொதி ஏற்றிய வண்டிகளின் பெருஞ்சாத்துத் தொடர்ந்து சென்றுகொண்டே இருப்பதால், பெருவழிகள், இரவிடைச்செல்வார்க்கும் ஏமமாக அமைவதையும் (60 - 66) வழிப்போவார்தம் வயிற்றுப்பசி தீரத், தேக்கிலையில் உணவு படைக்கும், ஈத்திலை வேய்ந்த குடியிருப்புக்களைக்கொண்ட சிற்றூர்களையும் (88-105) செல்லும் வழி நெடுகிலும், செவ்வரிசிச் சோற்றினை வழங்கும் எயினர் காட்டரண் களையும் (121-133) பசுந்தினை அரிசிச் சோற்றைப் பாலுடன் கலந்து பருகப்பண்ணிப் பசி தீர்க்கும் கோவலர் குடியிருப்புக்களையும் (166-168) அவரைப் பருப்பு கலந்து

ஆக்கிய வரகரிசிச் சோற்றை வருவார்க்குப் படைக்கும், வரகுவைக்கோல் போர்த்து வரிசை வரிசையாக் உள்ள குடில்களைக் கொண்ட சிற்றூர்களையும் (191-196) விருந்தினர்க்குக் கோழிப் பொரியலோடு வெண்சோறு படைக்கும் வளமிக்க பேரூர்களையும் (254 - 56) கொழியல் அரிசிக் கூழைச், சுட்ட மீனோடு கொடுக்கும் வலைஞர் குடியிருப்புக்களையும் (274 - 282) நெய்யில் பொரித்த மாதுளங்காயோடு, மாவடு கலந்த இனிய உணவினை அளிக்கும் மறைகாப்பாளர் உறை பதிகளையும், (301-310) பிணவொடு சேரவிடாமலும், அரிசிமா தவிர்த்து வேறு எதையும் உண்ணவிடாமலும் ஓம்பி வளர்த்ததனால் கொழுத்த பன்றிக் கறியொடு களிப்புதரும் கள்ளும் வழங்கும், செல்வம் கொழிக்கும், வான்தோய் மாடங்கள் மலிந்த பட்டினங்களையும் (336-345) வாழை, பலா முதலான பழவகைகளையும், பனநுங்கையும் தெவிட்டுமளவு வழங்கி, நீர் வேட்கை தணிக்க, தெங்கின் நீரையும் வழங்கும் உழவர் குடியிருப்புக்களையும் (355-362) வரிசையாகக் கூறி, நாடுபல கடக்கவேண்டிய பெருவழி நலம் விரிவாக எடுத்துக் கூறப்பட்டிருப்பது, அதை உறுதி செய்வது காண்க.

ஆகப், பழந்தமிழ்க் காலத்தே பெருவழிகள், தமிழகம் எங்கும் அமைந்திருந்தன என்பதும் அப்பெருவழிகள், இருமருங்கும் அழகிய சிற்றூர்களையும், பேரூர்களையும் கொண்டிருந்தன என்பதும் தெளிவாயின; இப்பெருவழி நலத்தை அணிலாடு முன்றிலாரும், குடவாயில் கீரநக்கனாரும், கல்லாடனாரும், "அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்" என்ற அழகிய தொடரால் (குறுந் : 41, 79, அகம் : 9) பாராட்டியிருப்பது அறிக. இவ்வாறு செல்லும் வழி நெடுகிலும், சிறுசிறு குடியிருப்புக்களே எனினும், நனிமிகப் பலவாய் இருத்தலின், வழிச்செல்வார் அச்சம் கொள்ளாது, நிழல் கண்டவழி நெடும்பொழுது இருந்து இளைப்பாறியும் மணல் பரந்த இடங்காணும்தோறும் வண்டல் முதலாம் ஆடல் புரிந்து அகமகிழ்ந்தும் செல்லுமாறு அறிவுறுத்தவும்பட்டனர்;

"நிழல் காண்தோறும் நெடியவைகி, மணல் காண்தோறும் வண்டல் தைஇ வருந்தாது ஏகு...நறுந்தண் பொழில கானம்; குறும்பல் ஊர யாம் செல்லும் ஆறே" (நற் : 9) எனப் பாலை பாடிய பெருங்கடுங்கோ, வழி காட்டுவது காண்க.

பத்துப்பாட்டு எட்டுத் தொகையாகிய பழந்தமிழ்ப் பாடல்களில், நூற்று இருபத்தைந்துக்கும் மேற்பட்ட சிற்றூர், பேரூர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள், அள்ளூர், வேலூர் என்பன போல், ஊர் என முடிவன இருபத்தைந்து மட்டுமே. அவை ஒழிந்த நூற்றுக்கு மேற்பட்ட ஊர்களில், ஆர்க்காடு என்பதுபோல், காடு என முடிவன சில; ஆலங்குடி என்பதுபோல், குடி என முடிவன சில, இடையாறு என்பதுபோல், ஆறு என முடிவன சில. இவை போல்வன ஒருசில தவிர்த்து ஏனைய எல்லாம், அம்பர், உறந்தை, இருப்பை, குமரி, கூடல், கோழி, வஞ்சி, வேம்பி என்பனபோலும், இடுகுறிப் பெயர்களாகவே அழைக்கப் பெற்றுள்ளன. இவ்வகையால் பெயர் பெற்ற ஊர்களில், ஆலங்கானம், ஆலமுற்றம் இருப்பை, காஞ்சி, வஞ்சி, வாகை போல்வன மரத்தால் பெயர் பெற்றவை; கரந்தை, காஞ்சி, தூசி, வஞ்சி, வாகை என்பனவற்றைப் புறத்திணை வகைகளால் பெயர் பெற்றனவாகவும் கொள்ளலாம்.

சமஸ்கிருதம் அல்லது, அது சார்ந்த மொழி வழங்கும் வட நாட்டில், ஊர்ப் பெயர்கள் "புரி" அல்லது "புரம்" என்பதை ஈற்றில் கொண்டனவாய், அயோத்தியாபுரி, துவரகாபுரி, மதுராபுரி, அஸ்தினாபுரம் எனப் பெயர் சூட்டப் பட்டதை ஒட்டி, இச்சமஸ்கிருத மொழியாளர்கள், தமிழகத்தில் வேர் ஊன்றிய காலத்திற்குப் பின்னர், "புரம்" என்பதை ஈற்றில் கொண்டுவிட்ட, இராமனாதபுரம், காஞ்சீபுரம், சோழலிங்காபுரம், திருவத்திபுரம், திருவனந்தபுரம், வாணாபுரம், விரிஞ்சீபுரம், விழுப்புரம் போலும் சில ஊர்ப் பெயர்கள் தமிழகத்திலும் இடம்பெற்று விட்டாலும், பண்டைத் தமிழகத்தில், எந்த ஒரு ஊர்ப் பெயரும் "புரம்" என்ற ஈற்றினைக் கொண்டதாக அமைய

வில்லை. அதுமட்டுமன்று, பழந்தமிழ்ப் புலவர்கள், "புரம்" என்ற ஈற்றுச் சொல் வடிவை அறவே வெறுப்பதும் செய்து வந்துள்ளனர். வடநாட்டுத் துவரகாபுரியைக் குறிப்பிடநேர்ந்த ஓரிடத்திலும், "புரி" என்ற அதன் ஈற்றையும், அதை, முதல் நிலையோடு இணைக்கும், இடைப்பகுதியையும் அறவே விடுத்து, "துவரை" என அழைப்பதிலேயே ஆர்வம் காட்டியுள்ளனர். "துவரை ஆண்டு நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிர்" "(புறம் : 201) என்ற கபிலர் கூற்றினைக் காண்க. அதுபோலவே, கங்கைக்கரைப் பாடலிபுத்திரத்தைக் குறிப்பிட நேர்ந்த இரு இடங்களிலும், "புத்திரம்" என்ற அதன் ஈற்றுப் பகுதியைக் கழித்துவிட்டுப் "பாடலி" என்றே குறிப்பிட்டுள்ளனர். "பொன்மலி பாடலி" (குறுந் : 75) "நந்தர் சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கைநீர் முதல் கரந்த நிதியம்" (அகம் : 262) என்ற தொடர்களைக் காண்க.

இவ்வாறு, வட இந்திய ஊர்ப் பெயர்களைக் குறிப்பிடும் போதும், சமஸ்கிருத மொழியாளர்கள், அப்பெயர்களோடு இணைத்து வழங்கும் "புரம், புத்திரம்" என்பனவற்றை விடுத்தே எடுத்தாள்வதை மரபாகக் கொண்டுவிட்ட பழந்தமிழ்ப் புலவர்கள், தமிழகத்துத் தலையாய நகர்களுள் ஒன்றாகிய காஞ்சிக்கு, அவ்வட நாட்டுப் பெயர் ஈற்றுப் பகுதியாம் "புரம்" என்பதை இணைத்துக் "காஞ்சீபுரம்" என வழங்கினர் என்பது, வாத நெறியில் ஏற்றுக் கொள்ள இயலாத ஒன்று. ஆகவே, அந்நகர்க்குப் பழந்தமிழர் இட்டு வழங்கிய பெயர் "காஞ்சி" என்பதே; அம்மாநகரில் வந்து வாழத் தொடங்கிய சமஸ்கிருத மொழியாளர், தங்கள் வடநாட்டுப் பெயர் மரபை ஒட்டி, புரம் என்பதைக் காஞ்சியோடும் இணைத்துக் காஞ்சீபுரம் என மாற்றி அழைத்தனர் என்பதே, இயல்பாகப் பெறக்கூடிய முடிவாகும்;

காஞ்சி என்பதே அதன் இயல்பான பெயராயின், ஏறத்தாழ இருநூற்றுக்கும் மேற்பட்ட ஊர்ப் பெயர்களைக் குறிப்பிடும் பழந்தமிழ்ப் பாக்களில், "காஞ்சி" என்ற பெயரும் இடம் பெற்றிருக்க வேண்டும்; ஆனால், அது இடம்

பெறவில்லை. "காஞ்சிஊரா" "காஞ்சி ஊரன்" என்ற தொடர்கள் (அகம் : 96: குறுந்:10, 127) இடம்பெற்றுள்ளன என்றாலும், அவை, "காஞ்சி" என்னும் ஊர்ப்பெயர் உணர்த்துவனவல்ல. காஞ்சி மரங்கள் நிறைந்த ஊருக்கு உரியவன் எனும் பொருள்தந்து காஞ்சி என்ற மரத்தின் பெயரை உணர்த்துவனவே. அதுபோலவே, மகளிர்; 'காஞ்சி நீழல் குரவை அயரும்" (அகம் : 336), "நீர்த்தாழ்ந்த குறுங் காஞ்சிப் பூக்கதூஉம் இளவாளை" புறம் ; 18) "நாரை, தேம்கொள் மருதின் பூஞ்சினை முனையின் காமரு காஞ்சித் துஞ்சும்" (புறம் : 351) என வேறுபல இடங்களிலும், "காஞ்சி" எனும்சொல் இடம் பெற்றிருந்தாலும், அங்கெல்லாம், அது, காஞ்சிமரம் எனும் பொருளில் வந்துள்ளதேயல்லது காஞ்சிநகர் எனும் பொருளில் வரவில்லை, என்ற வாதத்தையும் வைத்துள்ளார் திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள். (பக்கம் : 323)

திருவாளர் அய்யங்கார் அவர்கள் மேலே எடுத்துக் காட்டிய தொடர்களில் இடம்பெறும் "காஞ்சி" எனும் சொல், மரத்தின் பெயரையே குறிக்கிறது என்பது உண்மை. ஆனால் "காஞ்சி" எனும் சொல், ஊர்ப் பெயரைக் குறிக்கும் வகையில் ஆளப்படுவதும் பழந்தமிழ்ப் பாடல்களில் இடம் பெற்றுளது. கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனைப் பாடிய பரணர், தம்முடைய பதிற்றுப்பத்துப் பாடல் ஒன்றில், அவனை வாழ்த்துங்கால், "நின் பெயர் வாழியரோ... காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே" (பதிற்று : 48) என வாழ்த்தியுள்ளதும், அக்காஞ்சியாறு, கோவை மாவட்டம் பேரூர்க்கு அருகில் ஓடும் ஆறு எனும் பொருள் கொண்டு அதை உறுதி செய்ய, "மீகொங்கில் அணி காஞ்சி வாய்ப் பேரூர்ப் பெருமானை" என்ற நம்பியாரூரர் தேவாரப் பாடலை எடுத்துக் காட்டாகக் கொள்வதும் காண்க,

கொங்கு நாட்டில் ஓடும் ஓர் ஆறு, காஞ்சி எனும் பெயர் பெற்றுளது. அது ஓடும் இடம், தமிழகத்து மக்கள் ஒரு சிலரால் மட்டுமே அறியத் தக்கதாக, தமிழகத்தின் ஒரு

கோடியாம் கொங்குநாடே எனினும், காஞ்சி எனும் பெயரே, பழந்தமிழ் இலக்கியத்தில் இடம் பெறவில்லை என்ற கூற்றினை மறுக்கவல்ல, நல்ல வலுவான சான்றாக, அது, அமைந்துவிட்டது.

மேலும், காஞ்சி எனும் பெயரைக், கொங்கு நாடு சென்றுதான் தேடி அலையவேண்டும் என்ற தேவையும் இல்லை. காஞ்சியிலேயே, அது, காணக்கிடக்கிறது; நற்றிணை 123ஆம் பாடலைப் பாடிய புலவர் பெயர், காஞ்சிப் புலவர் என்பது. அதுபோலவே, குறுந்தொகை, 173 ஆம் பாடலைப் பாடிய புலவர், மதுரைக் காஞ்சிப்புலவர் என்பது. அதே குறுந்தொகையில் 213, 216 பாடல்களைப் பாடிய புலவர் பெயர், கச்சிப் பேட்டுக்காஞ்சிக் கொற்றனார் என்பது. இவர் பெயரில் காஞ்சியின் பிறிதொரு பெயரும், பெரும்பாணாற்றுப்படையால், திரையன் தலை நகராம் பெருமைப்படுத்தப்பட்டதுமான கச்சியும் இணைந்தே வழங்கப்பெறுவது கவனிக்கத்தக்கது. மேலும், அதே குறுந் தொகையில், 30,172,180,192,197,287 பாடல்களைப் பாடிய ஒரு பெண்பாற்புலவர் பெயர், கச்சிப்பேட்டு நன்னாகையார் என்பது; கூறிய எடுத்துக்காட்டுக்களால், புலவர் பலரை அளித்த பெருமைக்கு உரியது காஞ்சியும், கச்சியும் என்பதும், தத்தம் இயற்பெயர்களோடு, தாம் பிறந்த ஊர்ப்பெயரை இணைத்துக்கொள்வது, தமக்குப் பெருமை சேர்க்கும் என உணர்ந்து சேர்த்துக் கொள்ளப்படுமளவு பெருமை பெற்ற பெருநகராகக், காஞ்சியும், கச்சியும் திகழ்ந்தன என்பதும் தெளிவாயின.

புலவர்களை ஈன்று அளித்த பெருமை, காஞ்சிக்கும் கச்சிக்கும் மட்டுமே தனி உரிமையாய் அமைந்துவிடவில்லை; அப்பேரூர்களைத் தலைநகராகக் கொண்ட காஞ்சிக்கு அணித்தாக, மேற்கே உள்ள தாமலும், காஞ்சிக்குக் கிழக்கே, சற்றே தொலைவில் உள்ள உரோடகமும் கூடப், புலவர் களைப் பெற்றளித்த பெருமையினைப் பங்கிட்டுக் கொண் டுள்ளன: சோழன் நலங்கிள்ளி தம்பி, மாவளத்தானோடு,

ஒரு நிகராக அமர்ந்து வட்டாடும் நெருக்கமும், அவ்வட்டாடலை அவன் பிழை பட ஆடிய போது, அவனைக் கண்டிக்கும் உரிமையும், அவன், தன் பிழை உணர்ந்து வருந்தியபோது, அவனைப் பாராட்டிய பெருநட்பும் உடைய பெருந்தகைப்புலவர் பல்கண்ணனார் பிறந்த ஊர், காஞ்சி நாட்டுத் தாமலே, (புறம்: 447) நற்றிணை 306, குறுந் தொகை 155, நெடுந்தொகை 23, 95, 191 ஆகிய பாடல்களைப் பாடிய கந்தரத்தனார், பிறந்த ஊரும் காஞ்சி நாட்டு உரோடகமே.

ஆக, வேங்கடத்தை அடுத்த காஞ்சிமண்டலம் தமிழ் வழங்கிய மண், தன்மொழிப் பெயராம், காஞ்சி, கச்சி மாநகர்களை, இருபெரும் தலைநகர்களாகக் கொண்டிருந்த பழம்பெருமை வாய்ந்தது என்பது தெற்றெனத் தெளிவாக்கப் பட்டது.

காஞ்சியும், கச்சியும் தொண்டை நாட்டுத் தலைநகர்களாக இல்லையாயினும், பெருநகரங்களாக இருந்தன என்பது உண்மையாயின், அத்தொண்டை நாட்டுப் பல்வேறு பகுதிகளையும், பல்வளங்களையும் பாடிய பெரும் பாணாற்றுப் படை ஆசிரியர், தம்முடைய நெடிய பாட்டில், காஞ்சியைக் குறிப்பிடாமல், கச்சியை மட்டும் குறிப் பிட்டிருப்பது ஏன்? அவர், அது குறிப்பிடாமை, காஞ்சி இன்மையை உறுதி செய்வதாகக் கோடல் கூடாதோ என்ற கேள்வி எழுதல் கூடும். கேள்வி, விடையிறுக்க வேண்டிய முக்கிய கேள்விதான்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டுப் பாக்களால் அறியப் படும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் உள்ளிட்ட பாண்டிய அரசர்களைப் புகழ்ந்துபாடும் புலவர் களுள், மாங்குடி மருதன் தவிர்த்த அனைத்துப் புலவர்களும், அப்பாண்டிய அரசர்களோடு, அப்பாண்டியர் தலைநகரை இணைத்துப் பாடும்போது, மதுரையைக் கூறாமல், கூடலையே கூறியுள்ளனர்; பாண்டியர் தலைநகரைக் குறிப்பிடும்

பாடல்கள், நற்றிணையில் இரண்டு (39, 298) அகத்தில் ஐந்து (93,116,253,296,315) புறத்தில் ஒன்று (88).

நெடுநல்வாடைமூலம், செழியன் புகழ்பாடும் நக்கீரரும், அப்பாட்டில், மதுரை கூடல் என்ற இரண்டில் எந்த ஒரு பெயரையும் குறிப்பிடவில்லை எனினும், அவன் புகழ்பாடும் அகநானூற்றுப்பாடல் ஒன்றில் "நாடுபல தந்த பசும்பூண் பாண்டியன் பொன்மலி நெடுநகர் கூடல்" (213) எனக் கூடலை மட்டுமே குறிப்பிட்டுள்ளார்.

மதுரைக்காஞ்சி மூலம், நெடுஞ்செழியன் புகழ்பாடும் மாங்குடி மருதனார், அப்பாட்டில் 699ஆம் வரியில் மதுரையைக் குறிப்பிட்டுள்ளார் என்றாலும், அது குறிப்பிடுவதன் முன்னர், 429ஆம் வரியில், "மாடம்பிறங்கிய மலிபுகழ் கூடல்" எனக் கூறி, கூடலுக்கே முதல் இடம் தந்துள்ளார்.

பாண்டியர் தலைநகர்க்கு, மதுரை, கூடல் என்ற இருபெயர்கள் இருக்கவும், பாண்டியர் புகழ்பாடும் புலவர் பலரும், கூடலுக்கே முதல் இடம்தந்து குறிப்பிடுவதுபோல் வேங்கடம் அடுத்த தொண்டைநாட்டுத் தலைநகர்க்கு காஞ்சி, கச்சி என்ற இரண்டு பெயர்கள் இருக்கவும், அக்காஞ்சி நாடு பாடிய புலவர், பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர், காஞ்சியைக் குறிப்பிடாமல், கச்சியை மட்டும் குறிப்பிட்டுள்ளார் எனக்கொண்டால், அவ்வாறுதான் கொள்ள வேண்டும், அப்பகுதி, தமிழ் அரசர்களால் ஆளப்படவில்லை என்பதற்கு, அப்பகுதி தலைநகர்க்குத் தமிழ்ப் பெயர் இடப் படவில்லை என்பதைக் காரணமாகக் காட்டும் வாதம், பொருளற்ற வாதமாகப் போய்விடுவது காண்க.

வேதகாலம் கி. மு. 3000க்கும் கி.மு. 1500க்கும் இடைப் பட்டது என்பது, திருவாளர் அய்யங்கார் அவர்கள் முடிவு; தமிழர்வரலாறு ; முன்னுரை; பத்தி 7. காண்க. அவ் வேத காலத்தில், அணி நலம் குறித்து, வடஆரியர்கள், பயன் படுத்தப்பட்ட பொருள்களுள், தென்கோடி விளைபொருளாம்

முத்து (பக்கம்: 22) வேத இலக்கியங்களில் ''முக்தா'', ''விமுக்தா'' என வழங்கப்படுவது கொண்டு, திருவாளர்கள், மெக்டோனால், கெய்த், மோனியர் வில்லியம்ஸ் ஆகிய வரலாற்றுப் பேராசிரியர்கள், சிப்பியிலிருந்து விடுவிக்கப் பட்டது எனப் பொருள் கூறி, அச்சொற்களுக்குச் சமஸ்கிருதப் பிறப்பியல் கூறவும், திருவாளர் அய்யங்கார் அவர்கள், அவர்களின் அம்முடிவை மறுத்துவிட்டு, வேதகால ரிஷிகள், தென்கோடி முத்தோடு, முத்து எனும் பொருள் உடையதான ''முத்தம்'' என்ற அதன் பெயரையும் கடனாகப் பெற்று, ''முக்தா'' என்ற சமஸ்கிருத வடிவமும் கொடுத்துவிட்டனர் என உறுதி தொனிக்கும் குரலில் கூறியுள்ளார் (பக்கம்: 23,24)

தமிழகத்தின் தென்கோடியில் வழங்கிய முத்து என்ற தமிழ்ச்சொல், கி. மு. 1500க்கு முன்னரே, வடஇந்தியாவுக்குச் சென்று, அவ்வடவர்களால், ''முக்த'' என்ற அவ்வடவர்களின் சமஸ்கிருத வடிவம் பெற்று வழங்கலாயிற்று என்றால், கி. மு. நான்காம் நூற்றாண்டில், அதாவது தமிழகத்து ''முத்து'' என்ற தமிழ்சொல், வடநாட்டிற்குச் சென்று, அவ்வடமொழி வடிவினதாக மாறி வழங்கப்பட்ட காலத்துக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்ட காலத்தில், தமிழகத்தின் வடவெல்லை நாட்டு நகரின் பெயராம் காஞ்சி, அவ்வடவரால், அப்பிற்பட்ட காலத்தே கொண்டுவரப்பட்ட ''காஞ்சீபுரம்'' என்ற சமஸ்கிருதச் சொல்லின், சுருங்கிய வடிவமாம் எனல், எங்ஙனம் பொருந்தும். காஞ்சி என்பதே பழந்தமிழ்ப் பெயர்; தங்கள் ஊர்ப் பெயர்களோடு ''புரம்'' என்பதை இணைக்கும் வழக்கத்தை ஒட்டி, காஞ்சி வந்த ஆரியர்கள், அக்காஞ்சி என்பதன் பின்னர்ப், புரம் என்பதை இணைத்துக் காஞ்சீபுரம் என ஆக்கிவிட்டனர் என்பதே மொழி வளர்ச்சியின் இயல்பு நெறியாகும்.

ஆக, இதுகாறும் எடுத்து வைத்த விரிவான, விளக்கச் சான்றுகளால், ''பழந்தமிழ்ப் பாக்களில், காஞ்சி நாடாண்ட பழந்தமிழரசர் பெயர் குறிப்பிடப்படவில்லை; அந்நாட்டுக் காஞ்சி, கச்சி என்ற பெயர்கள் தாமும் தமிழ்ச் சொற்கள்

ஆகா ; வடக்கிலிருந்து வந்து அங்கு வாழத் தொடங்கிய சமஸ்கிருத மொழியாளர்கள், அந்நகருக்கு இட்டு வழங்கிய சமஸ்கிருதப் பெயராக, "காஞ்சீபுர" என்பதன் சுருங்கிய வடிவமும், அதன் தமிழாக்க வடிவமுமே ஆம் என்ற, திருவாளர் அய்யங்கார் அவர்களின் கூற்றிற்கான அகச்சான்று எதுவும் இல்லை ; அது வெறும் கற்பனையே, என்பதும், மாறாக அந்நாடாண்ட பழந்தமிழ் அரசர் பெயர் குறிப்பிடப் பட்டுளது ; காஞ்சி என்பது, பழந்தமிழர் அறிந்த தனித்தமிழ்ப் பெயரே ; கச்சி, அதன் தமிழாக்கம் அன்று. மாறாகக், காஞ்சியின் மற்றொரு பெயர் என்பதற்கான அகச்சான்றுகளே நிறைந்துள்ளன என்பதும் தெளிவாக்கப்படவே, "காஞ்சி மாநகர், தமிழ்நாட்டின் எல்லைக்குள் இடம் பெற்றிருந் தாலும், பண்டைக்காலத்தில், அது தமிழர் நாகரீகத்தைக் கொண்டிருக்கவில்லை ; மாறாகச் சமஸ்கிருத நாகரீகத்தின் ஒரு நாயகமாகவே இருந்தது ; அது. தமிழ் அரசர்களாலும் ஆளப்படவில்லை ; மாறாக, ஆரிய ராஜாக்களால் ஆளப் பட்டது" என்ற அய்யங்கார் கூற்று, உண்மைக்கு அப்பாற் பட்டது என்பது உறுதிபடத் தெளிவாக்கப்பட்டது.

தொண்டை மண்டலத்துத் தலைசிறந்த நகரின்பெயர், கி. மு. இரண்டாவது நூற்றாண்டு தொட்டே, "காஞ்சி" என்ற தனித் தமிழ்ச் சொல்லினாலேயே பெயர் பெற்றிருந்தது என்பதை உறுதி செய்யும் வலுவான வரலாற்றுச் சான்று ஒன்றும் உளது :

திருவாளர், கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் தம்முடைய "தென்னிந்தியா பற்றிய வெளிநாட்டவர் குறிப்புகள்" (Foreign Notices of South India) என்ற ஆங்கில நூலின் நான்காம் பக்கத்தில், "திருவாளர் பால் பெல்லியோட் (Pawl Pelliot) என்பாரின் கண்டுபிடிப்பாம், கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து தொடங்கும் "ஹன்" (Han) இனத்தவர் ஆட்சிக்காலத்தில், சீனாவுக்கும், தென்னிந்தியாவுக்கும் இடையில் மிகப்பெருமளவிலான போக்குவரத்து நிலவியதை உறுதி செய்யும், திருவாளர் "பான் கௌ" (Pan kaw) என்ற,

✲

தனிமிகப் பழம்பெரும் சீன எழுத்தாளரின் படைப்பின் ஒரு பகுதி, அண்மைக்கால வரலாற்று ஆய்வு அளித்த தனிமிகு வியத்தகுமுடிவு'' எனப், பால் பெல்லியோட் என்பாரை அறிமுகம் செய்துள்ளார்.

பின்னர், 44, 45 பக்கங்களில், ''கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் காஞ்சியும் சீனாவும்'' என்ற தலைப்புள்ள இரண்டாம் அதிகாரத்தில், முதல் பத்தியில், ''கி.பி. முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த, ''பான் கௌ'' (pan kow) என்ற சீன எழுத்தாளர், தம்முடைய ''இட்சின் ஹன் சௌ'' (Tsein han chow) என்ற நூலில், ''தொன்கின்'' (Tonkin) வளைகுடாவின் உள் நாடாம், ''மேல் அன்னம்'' (Upper Annam) என இப்போது வழங்கப்படும் ''ஜே-நன்'' (Je-Nan) நுழைவாயிலிலிருந்து புறப்பட்டு, படகுவழியாக, ஐந்து திங்கள் பயணம் செய்து, 'தொன்-யுவான்' (Ton-Ywan) நாட்டை அடைந்தோம். பின்னர்க் கடல் வழி நான்கு திங்கள் பயணத்திற்குப் பின்னர், 'யி-லௌ-மோ' (Yi-Low-Mo) என்ற நாட்டை அடைந்தோம். மேலும் இருபது நாட்களுக்கு மேற்பட்ட கடல் பயணம் மேற்கொண்ட பின்னர், ''சென்-லி'' (Chen-Li) என்ற நாட்டைஅடைந்தோம். அங்கிருந்து, நீங்கள், பத்துநாட்களுக்கு மேற்பட்ட நிலவழிப் பயணம் மேற்கொண்டால், 'பவு-கன்- தௌ-லோ' (Fow-Kan-Tow-Low) என்ற நாட்டை அடைவீர்கள். அந்நாட்டி லிருந்து படகு வழியாக இரு திங்களுக்குமேல் பயணம் செய்தால், 'ஹௌங்-டெக்' (Howang teche) என்ற நாட்டை அடைவீர்கள். அந்நாட்டுப் பழக்கவழக்கங்கள், 'தச்சௌ-யை' (Tchow-yai) நாட்டுமக்கள் பழக்கவழக்கங்கள் போலவே உள்ளன. இந்நாடு பரந்து அகன்று, மக்கள் பெருக்கத்தால் மிகுந்து, அரும்பொருட்கள் பலவற்றை ஆக்குவதாக விளங்கு கிறது. கி.மு. 140-86 காலத்தவரான, பேரரசர் 'வௌ' (Wow) காலம் முதல், அரும்பொருட்களைச் சீனாவிற்கு அனுப்பி வைக்கிறது'' என எழுதிவைத்திருப்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

''பான்-கௌ'' என்ற சீன எழுத்தாளன் கூறியதை, முதல்பத்தியில் எடுத்துக் காட்டிய திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், இரண்டாவது பத்தியில், ''டௌங்-பாவோ' (Towng-pao)என்ற நூலில், திருவாளர் 'பால்பெல்லி யோட்' அவர்கள், 'ஹௌஆங்-டெக்' (Hawang-teche) என்ற தொடருக்குப், பல்வேறு வரலாற்றுப் பேராசிரியர்கள் அளிக்கும் விளக்கங்களையெல்லாம் மறுத்துவிட்டு, 'ஹன்' (Han) காலத்துச் சீனமொழி ஒலியியல் கூற்றுப்படி, ஹௌ ஆங்-டெக்' என்பதற்குக் ''காஞ்சி'' என்பதே ஏற்புடைய இணையாம்'' எனத் திருவாளர் பெர்ரண்ட் (Ferrand) என்பார் கூறும் விளக்கத்தையும் எடுத்தாண்டுள்ளார்.

அதுமட்டுமல்லாமல், கி. பி. 11ஆம் நூற்றாண்டில், சோழப் பேரரசு, சீனப்பேரரசுக்கு அனுப்பிய தூதுவர், சீனா சென்றடைய எட்டுத் திங்களை எடுத்துக் கொண்டுள்ளார் என்பதை எடுத்துக்காட்டுவதன் மூலம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டில். சீன யாத்திரிகன் ஒருவன், காஞ்சி வந்துசேர, 12 திங்களை எடுத்துக்கொள்ள நேர்ந்தது என்பது ஏற்கக் கூடியதே என்பதை வலியுறுத்தும், திருவாளர் பால் பெல்லி யோட், அவர்களின் வாதத்தையும் எடுத்து வைத்துள்ளார், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள் (பக்கம்: 45)

ஆக, மேலே கூறியிருப்பனவற்றையெல்லாம் எடுத்தாண்டிருப்பதன் மூலம், கி. மு. இரண்டாம் நூற்றாண்டு காலத்திலேயே காஞ்சிநாடு, 'காஞ்சி' என்ற பெயரிலேயே இடம் பெற்றிருந்தது. சீன நாட்டிற்கு அரும்பொருட்களை அனுப்பும் வளம்மிக்க நாடாகவும் திகழ்ந்தது என்பதற்கான தம்முடைய ஒப்புதலைத், திருவாளர் நீலகண்ட சாஸ்திரியார் அவர்கள், தந்துள்ளார் என்பது தெளிவாகிறது.

மேலும், சென்னைப் பல்கலைக் கழகத்தில், பண்டை வரலாறு மற்றும் தொல்பொருள் துறைப் பேராசிரியராகப் பணிபுரிந்த திருவாளர். தே. வை. மகாலிங்கம் அவர்கள் 1963ல் ஆற்றிய ஆறு விரிவுரைகளின் தொகுப்பாக, 1968ல்

வெளியிடப்பட்ட, "தென்னிந்திய பண்டைவரலாற்றி காஞ்சீபுரம்" (Kancheepuram in Early South Indian Histor என்ற தம் நூலில், "காஞ்சீபுரம், அதன் தொடக்கம் (Kancheepuram its begining) என்ற முதல் அதிகாரத்தி பக்கம் 9ல் கி. மு. இரண்டாம் நூற்றாண்டில், காஞ்சியி நிலைகுறித்து, திரு. பான்கொான என்ற சீன எழுத்தாள கூறிய இதே நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார்.

1939ஆம் ஆண்டில், அதாவது திருவாளர். பி. டி. சீனிவா அய்யங்கார் அவர்கள், 'தமிழர் வரலாறு' என்ற தம்முடை நூலை வெளியிட்ட பத்து ஆண்டுகள் கழித்து, வெளியிட பட்ட திருாவளர், நீலகண்ட சாஸ்திரியார் அவர்களின் "தென்னிந்தியா பற்றிய வெளிநாட்டவர் குறிப்புக்கள்" என் நூலையோ, திருவாளர். தே. வை. மகாலிங்கம் அவர்களி நூலையோ திருவாளர் அய்யங்கார் அவர்கள் பார்த்திருக் வாய்ப்பு இல்லை. ஆகவேதான், 'காஞ்சி' என்பது, தமிழ் சொல் அன்று, "காஞ்சீபுரக" என்ற சமஸ்கிருதச் சொல்லின் சுருங்கிய வடிவம்: அதன் தமிழாக்கமே கச்சி என்றும் காஞ்சிமண்டலம் தமிழரசர்களால் ஆளப்படவில்லை; மாறாக சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டிருந்தது என்ற தவறான முடிவிற்குத் திருவாளர் அய்யங்கார் அவர்கள் தள்ளப் பட்டுள்ளார்.

